டாஸ்வெல்—லாங்மீட் எழுதிய

# ஆங்கில அரசியலமைப்பின் வரலாறு—I

(Taswell - Langmead's English Constitutional History - I)

(டியூடானியர் வெற்றி முதல் இன்றுவரை)

பதிப்பாசிரியர் (11ஆம் பதிப்பு)
தியோடர் எஃப். டி. பிளக்நெட்

தமிழாக்கம்
வை. விருத்தகிரீசன், எம்.ஏ., எம்.லிட்., எல்.டி.,
முதல்வர்,
அரசினர் பயிற்சிக் கல்லூரி, குமாரபாளையம்.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—172

டாஸ்வெல்—லாங்மீட் எழுதிய

# ஆங்கில அரசியலமைப்பின் வரலாறு—I

(Taswell - Langmead's English Constitutional History-I)

(டியூடானியர் வெற்றி முதல் இன்றுவரை)

பதிப்பாசிரியர் (11ஆம் பதிப்பு)
தியோடர் எஃப். டி. பிளக்நெட்

தமிழாக்கம்
வை. விருத்தகிரீசன், எம்.ஏ., எம்.லிட்., எல்.டி.,
முதல்வர்,
அரசினர் பயிற்சிக் கல்லூரி, குமாரபாளையம்.




தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழக அரசு

First Edition—December, 1968

B.T.P. No. 172



Taswell-Langmead's English Constitutional History-I

THEODORE F. T. PLUCKNETT

*Translation*
V. VRIDHAGIRISAN

Price Rs. 7-50

This translation of the work 'TASWELL-LANGMEAD'S ENGLISH CONSTITUTIONAL HISTORY' 11th edition by T. F. T. PLUCKNETT is published by arrangement with Messrs Sweet & Maxwell Limited, 11, New Fetter Lane, London, E.C.-4.

Printed by
THE UNITED PRINTERS,
MADRAS-1.

# அணிந்துரை

(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வி-தொழில் அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஏழு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்து வருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான டாஸ்வெல் - லாங்மீட் எழுதிய 'ஆங்கில அரசியலமைப்பின் வரலாறு-I' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 172ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 207 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலைமண்டபத்தில் கொலு வீற்றிருக்கிறாள். எனவே, இவ்வன்னையை வாழ்த்துவோமாக! உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்.

# முகவுரை

இந் நூலின் முந்தைய பதிப்பு எர் நியதிகளின் அடிப் படையில் உருவாக்கப்பட்டதென்பது பத்தாம் பதிப்பின் முகவுரையில் சுருக்கமாக விளக்கப்பட்டது. இப் பதி னேராம் பதிப்பில் ஒருசில பக்கங்களைத் தவிர, பெரு மளவில் மாற்றமேதும் செய்யப்படவில்லை.

மற்றுமொரு பகுதியிலுள்ள செய்திகள் இன்னும் சற்றுக் கருத்தூன்றி எழுதப்படவேண்டும் எனத் தோன் றிற்று. முதலாவதாக, அரசியலமைப்பு வரலாற்றைப் பற்றிய நூலொன்றுக்குப் பொருத்தமற்றதாகக் காணப் பட்ட பற்பல விவரங்கள், குறிப்பாக நிதிபற்றிய விவரங் கள் 21ஆம் அத்தியாயத்தினின்றும் ஓரளவு நீக்கப்பட்டு விட்டன. இரண்டாவதாக, 22ஆம் அத்தியாயத்தின் பொருள் பெரும்பாலும் அரசியலமைப்புபற்றியதாகவே இருந்தாலும், முற்றும் ஆங்கில அரசியலமைப்புபற்றிய தாகவே இருப்பதாகக் கூறவியலாமையால் அவ்வத்தி யாயம் முழுமையும் நீக்கப்பட்டுவிட்டது. இப் பகுதிகள், 'சமூக சேவைகள்' அல்லது 'காமன்வெல்த் நாடுகளின் அரசியலமைப்புச் சட்டங்கள்' ஆகிய, தகுந்த சூழலில் தனியாக எழுதப்படும் வழக்கம் பெருகிவரும் இந்நாளில், இப் பகுதிகளை இந் நூலினின்றும் நீக்கிவிட்டமை மிகச் சரியானதேயாகும்.

பிறவற்றைப் பொறுத்தவரை, மிகப் பெருமளவில் அமைந்துள்ள, ஆயிரம் ஆண்டுகட்கும் மேலான காலத் தின் ஆங்கில அரசியலமைப்பு வரலாற்றுச் செய்திகளை முடிந்த அளவு மனத்தை ஈர்க்கும் வகையிலும் விளக்கந் தரும் வகையிலும் அமைத்துத் தருவது, மேலும் தொடர்ந்து படித்துப் பயனடையுமாறு இப் பொருள் களைப்பற்றி அண்மையில் வெளியாகியுள்ள நூல்களின் விவரங்களைத் தருவது ஆகியவை தொகுப்பாசிரியரின் முக்கியக் கடமையாயின.

ஜூன் 14, 1960
லண்டன் பொருளியல்
கல்விக்கூடம்.
(The London School of
Economics.)

டி. எஃப். டி. பி.

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| முகவுரை | ... ... ... ... | v |
| 1. | ஆங்கிலோ-சாக்ஸானியர் காலம் ... ... | 1 |
| | தொடக்க வெற்றிகள் ... ... ... | 1 |
| | ஆங்கிலேய சமுதாயமும் நிறுவனங்களும் ... | 12 |
| | மக்களில் பல்வேறு பிரிவுகள் ... ... | 19 |
| | விடான் சபை ... ... ... ... | 25 |
| | நீதி விசாரணை முறை ... ... ... | 30 |
| | நடப்பு முறை ... ... ... ... | 34 |
| | ஆங்கிலோ-சாக்ஸானிய சட்டங்கள் ... ... | 38 |
| | முடிவுரை ... ... ... ... | 40 |
| 2. | நார்மானியரின் வெற்றி ... ... ... | 60 |
| | நிலமானிய முறை ... ... ... | 64 |
| | முதலாம் வில்லியமும் சட்டமும் ... ... | 81 |
| | நீதிமுறை அமைப்பு ... ... ... | 87 |
| | பின்னோக்குதல் ... ... ... ... | 88 |
| 3. | நார்மானிய, முதல் ஆஞ்சோ மரபைச் சார்ந்த மன்னர்கள் ... ... ... ... | 105 |
| | இரண்டாம் வில்லியம், ரூஃபஸ் (செந்நிறத்தவர்) | 105 |
| | முதலாம் ஹென்றி ... ... ... ... | 108 |
| | தல நீதிமன்றங்கள் .... ... ... ... | 112 |
| | வலிமைமிக்க மத்திய அரசாங்கம் ... ... | 113 |
| | ஸ்டீஃபன் ... ... ... ... | 115 |
| | இரண்டாம் ஹென்றி ... ... ... | 119 |
| | இரண்டாம் ஹென்றியும் பெக்கட்டும் ... | 124 |
| | முதலாம் ரிச்சர்ட் ... ... ... ... | 128 |

பக்கம்

4. மகாசாசனம் ... ... ... ... 145
மகாசாசனத்தை உருவாக்கிய நிகழ்ச்சிகள் ... 148
சாசனத்தின் சுருக்கமும் கூறுபாடுகளும் ... 154
மூன்றும் ஹென்றியின் மகாசாசனம் ... 187
சாசனத்தின் முக்கியத் தன்மை ... ... 191

5. நார்மானிய, பிளான்டாஜெனட் மன்னர்கள் காலத்திய நிறுவனங்கள் ... ... ... 213
மன்னரும் அவருடைய உயர்தர அதிகாரிகளும் 213
கருவூலத்துறையும் நிதியும் ... ... ... 217
நீதி வழங்கல் முறை ... ... ... 221
ஜுரி முறையின் பழைய வரலாறு ... ... 225
ஜுரியும் கொடுங் குற்றமும் ... ... 232
ஆலோசனை மன்றமும் அதிலிருந்து தோன்றியவைகளும் ... ... ... ... 239
இராணுவ, காவல்துறை நிறுவனம் ... 253

6. பாராளுமன்றத்தின் தொடக்கம் ... ... 291
தேசிய சபையின் தொடக்க அமைப்புகள் ... 291
தேர்தலும் பிரதிநிதிக் கொள்கையும் ... 293
முதலாம் எட்வர்டின் பாராளுமன்றம் ... 304
சாசனங்களும் உறுதிகளும், 1297 ... ... 316

7. பாராளுமன்றத்தின் வளர்ச்சி ... ... 341
பிரபுக்களும் பொதுமக்களும் ... ... 341
இரண்டாம் எட்வர்ட் (1307–1327) ... ... 347
மூன்றும் எட்வர்ட் (1327–1377) ... ... 351
இரண்டாம் ரிச்சர்ட் (1377–1399) ... ... 367
குடியானவர்கள் கலகம், 1381 ... ... 382

பொருட்குறிப்பு அகராதி ... ... ... 417

# 1. ஆங்கிலோ - சாக்ஸானியர் காலம்

ஆங்கிலேய மக்களின் நிறுவனங்களைப்பற்றிய வரலாற்றில், ஆங்கிலேய இனத்தின் ஆக்கக் கூறுகளைக் குறிப்பிடுவது முதல் படியாகும். பிரிட்டன்கள், ஆங்கிலோ-சாக்ஸானியர்கள், டேனர்கள், நார்மானியர்கள் முதலிய இனத்தவர்களின் கலப்பிலுண்டான ஒரு கலப்பினமாக ஆங்கிலேய இனத்தைக் கூறுவது மரபாகும். எனினும், கலப்பினம் எனும் சொல், உண்மையைப்பற்றித் தவறுதலான ஒரு கருத்தைத் தோற்றுவிப்பதாகும். இக் காலத்தில் ஐரோப்பிய இனம் எதுவுமே கலப்பற்ற, தனியினமாக இருக்கவில்லை. இருந்தபோதிலும், எல்லா இனங்களிலும் ஏதாவதொரு கூறு தெளிவாயும், உறுதியாயும், மேலோங்கியதாயும் அமைந்து வந்துள்ளது. ஆங்கிலேய இனத்தில் ஜெர்மானிய அல்லது டியூடானிய இனக்கூறு மேலோங்கியதாயுள்ளது.

## தொடக்க வெற்றிகள்

பிரிட்டன் மீது டியூடானியர்கள் வெற்றி கொண்டது, ஒரு நாட்டின்மீது பெற்ற சாதாரண வெற்றியைவிடப் பொருட்செறிவுள்ளதாயிருந்தது. அவர்கள் வெற்றி எல்லா வகைகளிலும் நாட்டில் பரவுவதாயிருந்ததுடன், ஒரு புதிய இனத்தவர் தடைப்படாது நாட்டிற்குள் குடியேறினர். நூற்றைம்பதாண்டுகளாக அவர்களுடைய எண்ணிக்கை, தாய்நாட்டிலிருந்து புதிதாக வருகிறவர்களால் தொடர்ந்து வளரலாயிற்று.

ஆறும் நூற்றுண்டு முடிவதற்குள்ளாகவே, டியூடானியப் படையெடுப்பாளர்கள், பிரிட்டனில் தங்களுடைய ஆட்சியதிகாரத்தை நிறுவினர்; அவ்வாறு ஏற்பட்ட ஆட்சியின் எல்லை ஜெர்மானியக் கடலிலிருந்து செவர்ன்வரையிலும், இங்கிலீஷ் கால்வாயிலிருந்து ஃபோர்த் வளைகுடாவரையிலும் பரவியிருந்தது. பிரிட்டன்கள் விரைவிலேயே தீவின் மேற்குப் பகுதிகளுக்கு விரட்டியடிக்கப்பட்டனர். அங்கு அவர்கள் சிறிது

காலம் பல்வேறு சிறிய ஆட்சிப்பிரிவுகளைக் கொண்டு வாழ்ந்து வந்தனர். முதலில், அவர்கள் வசமிருந்ததும் எஞ்சியிருந்தது மான நிலப்பகுதி பரப்பில் பேரளவில் இருந்தது. அதில் இக் காலத்திய வேல்ஸ் பகுதியுடன், டம்பார்டனிலிருந்து செஸ்டர் வரை பரவியிருந்த ஸ்ட்ராத்க்ளைடு எனும் பெரிய இராச்சிய மும், காரன்வால், டேவன், சாமர்செட்டின் ஒரு பகுதி முதலி யவையும் அடங்கியிருந்தன. ஆனால், இப் பகுதியின் கிழக்கு எல்லை படையெடுத்துவந்தவர்களின் செல்வாக்கிற்கு மேலும் மேலும் உட்படலாயிற்று. எனவே, பிரிட்டன்கள் (பிரித்தானி யர்கள்) குறைந்துகொண்டேவந்த தங்கள் சுதந்திரத்தை வேல்ஸ், கம்பிரியா பகுதிகளிலுள்ள மலைகளில் மாத்திரம் பாது காத்துவந்தனர். நாட்டு மக்களுக்கும் படையெடுத்தவர் களுக்குமிடையே நீண்ட, மிகக் கொடுமை வாய்ந்த ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ச்சியாக நடைபெற்ற போட்டிகளில் பிரிட்டானிய இனத்தின் திறமையானவர்களில் பெரும்பகுதி யினர் அழிவுற்றனர். பிரிட்டானியர்களில் பலர் ஐரோப்பா வில் குடியேறுவதன் வாயிலாகத் தஞ்சம் புகுந்தனர். போர்த் திறமையற்றவர்களில் பெரும்பாலோர் வெற்றி கொண்டவர் களிடம் அடிமைகளாக அமர்ந்தனர். வெற்றி கொண்டவர்கள், தோற்கடிக்கப்பட்டவர்களுடைய பெண்களுடன் கலப்பு மணஞ் செய்துகொண்டதன் வாயிலாகக் கெல்டிக் இனத்தின் ஆக்கக் கூறின் கலப்பைத் தோற்றுவித்திருக்கக்கூடும்.[1] எனி னும், ஆங்கிலேய இனத்தில் ஜெர்மானிய இனத்தின் ஆக்கக் கூறு எப்பொழுதும் முக்கியமானதாய் அமைந்திருந்தது. அத னுடன் அதன் போக்கில் மற்றக்கூறுகளைச் சேர்த்துக்கொண்டு ஒவ்வொன்றையும் தன்னுட் கலந்ததாக்கிக்கொண்டது. ஜெர் மானிய இனக்கூறு, 'நம்முடைய் முறையில் இயற்கை, அரசி யல் முதலியவைகளுக்கு மூலக்கூறாயிருந்தது.'[2] முதன் முத லாகக் குடிபுகுந்ததிலிருந்து, புதிதாகவந்த இரத்தக் கலப்பும், தேசத்தின் டியூடானிய இனக்கூற்றிற்கு வலிமையூட்டுவ தாகவே ஆயிற்று. இவ்வினத்தின் மொழி, நிறுவனங்கள் முத லியவைகளில் மிக்க நெருக்கமுள்ளவர்களாக நாட்டின்மீது படையெடுத்துவந்த டேனர்களிருந்தனர். வேறு மொழியைப் பேசியவர்களும், வேறான அரசியல், சமூக நிறுவனங்களைக் கொண்டிருந்தவர்களுமான நார்மானியர்களும், அதே மனித இனத்தின் மற்றொரு பிரிவிலிருந்து தோன்றியவர்களேயாவர்.

**கெல்டுகள், ரோமானியர்கள் முதலியவர்களின் செல்வாக்கு:** தேசிய மூலக்கூறுகளின் கலப்பு எந்தெந்த விகிதத்தில் கலந் தமைந்திருந்தாலும், ஆங்கிலேய அரசியல் சட்டம், எவ்வகை யிலும் கெல்டுகளிடமிருந்தோ அல்லது ரோமானி

யர்களிடமிருந்தோ வழிமுறையாகப் பெறப்படவில்லை என்பது உறுதியானது. ரோமானிய நாகரிகத்தின் பெரும்பகுதி, அவர்கள் நாட்டைவிட்டகன்றபொழுது கூடவே சென்றுவிட்டது.[3] நாட்டின் நீதி வழங்கும் முறையிலிருந்து ரோமானியர்களின் சட்டங்களும் மறையலாயின. ஆங்கிலேயர்கள் கிறித்தவ சமயத்தைத் தழுவியதன் பின்னர், ரோமானியச் சட்டம், ஆங்கிலோ - சாக்ஸானிய நீதிமுறையில் மறைமுகமாக ஓரளவு செல்வாக்கைப் பெற்றிருக்க வேண்டும்; அதுவும் சட்டங்களியற்றுவதிலும், நீதி வழங்குவதிலும், விடான் சபையிலும், ஷையர் மன்றத்திலும் முக்கியமான பங்கெடுத்துக்கொண்ட, கண்ணியம் வாய்ந்த, சமயஞ் சார்ந்த பேரறிஞர்கள் வாயிலாக ஏற்பட்டிருக்கவேண்டும்.[4] ரோமானியர்கள் சட்ட இயல் பற்றிய அறிவு, பன்னிரண்டாம் நூற்றூண்டில், ஐரோப்பாவிலிருந்து நேரிடையாக இங்கிலாந்திற்குள் தோன்றியது. இது ஏற்படுவதற்கு, அப்பொழுது ஏற்பட்டிருந்த நீதிநெறிபற்றிய கல்வி மறுமலர்ச்சியுற்றிருந்தது காரணமாயிருந்தது. 1118-க்கு முன் எழுதப் பெற்றிருக்கக்கூடியதும், முதலாம் ஹென்றியின் சட்டங்கள் என வழங்கப்படுவதில், தியோடோசியன் சட்டத் தொகுப்பிலிருந்து ஒரே ஒரு மேற்கோளான குறிப்புக் காணப்படுகிறது. அதுவும் மூன்றூமவர் வாயிலாகக் குறிப்பிடப்படுகிறது.[5] 1149-லோ அல்லது அதற்குச் சிறிது முன்னதாகவோ, லம்பார்டியைச் சேர்ந்தவரும் சட்ட நிபுணருமான வக்கேரியஸ் என்பார், அதிமேற்றிராணியாரான தியோபால்டு என்பாரால் இங்கிலாந்துக்கு வருமாறு அழைக்கப்பட்டார். வக்கேரியஸ் போலொஞு நகரில் கல்வி பயின்றவர். அவர் ஆக்ஸ்ஃபோர்டு நகரத்தில் சில மாணவர்களடங்கிய ஒரு சிறு கூட்டத்திற்கு சிவில் சட்டத்தைக் கற்பித்தார். மாணவர்களுக்காக 'ஏழைகளின் நூல்' எனும் நூலை அவர் எழுதினர்.[6] அதில் சட்டத் தொகுப்பு, சட்டங்களின் சுருக்கம் முதலியவைகளிலிருந்து உரையுடன் கூடிய குறிப்புகள்வரை அமைக்கப்பட்டிருந்தன: வக்கேரியஸ் கற்பிப்பதை ஸ்டீபன் மன்னர் தடைசெய்தபோதிலும், ரோமானியச் சட்டங்களைக் கற்பதில் வக்கேரியஸ் அளித்த ஆர்வம் தடைசெய்யப்படாதிருந்தது.[7] கிளென்வில், பிராக்டன் எனும் இருவர், சிறப்பாகப் பின்னர் கூறப்பட்டவர், இயற்றியுள்ள சட்ட ஆராய்ச்சிக் கட்டுரைகளில் சிலவிடங்களில் ரோமானியக் கொள்கைகள் சொல்லமைப்பு முதலியவை மிகுதியாகக் கலந்துள்ளன.[8] ரோமன் சட்டத்தை ஒருமுறை என்றளவில், விரைவிலேயே இங்கிலாந்து புறக்கணித்தது. ஆனுல், அவ்வப்பொழுது, அதன் அமைப்பும் கொள்கைகளும் சேர்த்துக்

கொள்ளப்பட்டு, ஆங்கிலேயர்களுடைய நீதிமன்றங்கள் பழமையான தேசீய வழக்கங்களை அடிப்படையாகக் கொண்டு அவைகளாகவே முறையாக ஏற்பட்ட வளர்ச்சி முறையுடன் ஒன்ருகச் சேர்த்துக்கொள்ளப்பட்டது.[9]

**ஜெர்மானியரின் செல்வாக்கு :** ஆங்கிலேயரின் இன்றைய அரசியல் சட்டம், மற்றச் சட்டங்கள் முதலிவைகளின் மூலங்களை, முதன்முதலில் நாட்டில் குடியேறிய டியூடானிய மக்களின் வரலாற்றிலேயே தொடக்ககாலத்தில் காணப்பெற்ற அவர்களுடைய நிறுவனங்களில் காணவேண்டியிருக்கிறது. அவர்களுடைய மிகப்பழமையான நிறுவனங்களைப்பற்றி நமக்கு ஒன்றும் தெரியாது. பீட் என்பார்[10] முதன்முதலில் குடியேறியவர்களில், ஆங்கில்கள், சாக்ஸன்கள், ஜூட்டுகள்[11] எனப்பட்டதும் ஒரே குடும்பத் தொடர்புடையதுமான மூன்று கூட்டத்தினர் அடங்கியிருந்தனர் எனக் கூறியுள்ளார். இவர்களில், சாக்ஸானியர்களையோ அல்லது ஜூட்டுகளைப்பற்றியோ டாஸிடஸ் கூருது, வட ஜெர்மானியக் கூட்டத்தைச் சேர்ந்தவர்களில் ஒரு குழுவினரான ஆங்கில்களை மாத்திரம் குறிப்பிட்டுள்ளார் ; ஆனுல், அவர்கள் இருப்பிடத்தைக் குறிப்பிடவில்லை. இரண்டாம் நூற்ருண்டில் டாலமி என்பார், சாக்ஸானியர்கள், ஆங்கில்கள் இவர்களுடைய இருப்பிடம், எல்ப், எய்டர், வார்னௌ எனும் நதிகளுக்கிடையிலுள்ள மாவட்டமாகும் எனக் குறிப்பிட்டுள்ளார். இப்பகுதிகள் இக்காலத்தில், ஹால்ஸ்டெயின், லாவன்பர்கு, மெக்லன்பர்கு எனப்படும் கோமக நாட்டுப் பகுதிகளில் அடங்கியுள்ளன. பீட் என்பாரின் காலத்திற்கு முன்னர் சாக்ஸன் எனும் பெயர், நன்கறியப்படாத ஒரு தனிக் கூட்டத்தின் பெயரிலிருந்து வட ஜெர்மானிய மக்கள் கூட்டத்தினரின் பரந்த நாட்டுக் கூட்டத்தைக்குறிப்பதாயிற்று. ரோமானியர்களின் ஆட்சிக்குட்படாமலும், பாஷண்ட முறையில் இறைவழிபாட்டையும் பழைய காலத்திய முரட்டுத்தனத்தையும் விடாப்பிடியாகப் பற்றிக்கொண்டும், ரோமானியர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த செல்வமிக்க நாட்டு மக்களைக் கொள்ளையடிப்பதை வழக்கமாகக்கொண்டிருந்தனர்.

பிரிட்டன்மீது படையெடுத்த டியூடானிய இனத்தினர் ரோமானியச் செல்வாக்கின் தொடர்பால் எவ்விதத்திலும் பாதிக்கப்படவில்லையெனினும், ரைன் நதிக்கரையிலும் டான்யூப் நதிக்கரையிலும் வாழ்ந்தவர்களும், இவர்களுக்கு நெருங்கிய உறவினர்களுமான டியூடானியர் இவர்களைப் போன்று அரசியல் அமைப்பைப் பெற்றிருக்கவில்லை. அங்கு வாழ்ந்த டியூடானியர்களின் நிறுவனங்களைப்பற்றிய செய்தி

கள் ஸீசர், டாஸிடஸ் என்போர் எழுதிய குறிப்புகளிலிருந்து நமக்குக் கிடைக்கின்றன. அரசியலமைப்பின் மாறுபாடு, நிறுவனங்களின் தெளிவற்ற தன்மை, அவைகளை அறிந்துகொள்ள முரண்பாடான வகைகளில் கொடுக்கப்பட்டுள்ள விளக்கங்கள் முதலியவைகளையெல்லாம் அகற்றினுல், இம் மூலங்களிலிருந்து ஆங்கிலேயர்களின் மூதாதையரான டியூடானிக் இனத்தவர்களுடைய மிகப் பழமையான நிறுவனங்களைப்பற்றிய பொதுவான அறிவை நாம் பெறக்கூடும்.

**டியூடானியர் சமூகம் :** டாஸிடஸின்காலத்தில், ஜெர்மனியில் சுதந்திரமான பல இனத்தினர் பிரிந்து தனித்தனியாக வாழ்ந்தனர் எனத் தோன்றுகிறது. இவர்கள் நாடோடி வாழ்க்கையை விட்டு, வரையறுக்கப்பட்ட குழுக்களாகக் குறிப்பிட்ட இடங்களில் குடியேறியிருந்தனர். இக் குடியேற்றங்களிலடங்கியிருந்த நிலங்கள், ஒரு கருத்துப்படி, சமூகத்திற்குச் (கிராமம்) சொந்தமாயிருந்ததென்றும், சுதந்திரமான குடியானவர்களுக்கு பயிரிடக்கூடிய அந் நிலங்கள் ஆண்டுதோறும் பிரித்துக் கொடுக்கப்பட்டதென்றும், மேய்ச்சல் நிலங்களாயிருந்தவை பொதுவாக வைத்துக்கொண்டு பயன்படுத்தப்பட்டதென்றும் தெரிய வருகிறது.[12] ஒரே இனத்தைச் சேர்ந்த பல கிராமங்கள் சேர்ந்து பாகஸ் எனும் பல மாவட்டமாகவும் பல மாவட்டங்கள் சேர்ந்து சிவிதாஸ் எனும் நகரம் அல்லது பொதுமக்கள் எனவும் பெயர்பெற்றன.

அவர்களுடைய அரசியல் வாழ்க்கையில், முடியாட்சி, பிரபுக்களாட்சி, ஜனநாயகம் முதலியவைகளின் கூறுகள் தெளிவாகக் குறிப்பிடப்பட்டன : எனினும், இறைமையின் இறுதியதிகாரம், சுதந்திரமானவர்களும் போர்க்கலம் தாங்கியவர்களுமான மக்களிடமிருந்தது.[13] சில இனத்தவர்கள் ஒரு குறிப்பிட்ட குடும்பங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட மன்னர்களைக் கொண்டிருந்தனர் ; மற்றவர்கள் அரசர்கள் இல்லாமலிருந்தனர். மன்னனுடைய அதிகாரம் வரையறுக்கப்பட்டிருந்தது.[14] அத்துடன், மன்னர் மக்களினத்தின் ஆட்சியாளர் என்பதைவிட, ஓர் இனத்தாரின் ஒற்றுமையைக் காணும் பிரதிநிதியாக இருந்தார். கிராமங்களிலும் மாவட்டங்களிலும், மக்களினத்தின் நாட்டுக்கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பெற்ற பிரின்செப்ஸ் எனும் தலைவர்களால் நீதிமுறை ஆட்சி செய்யப்பட்டது. இவர்களுக்கு உதவியாக ஒவ்வொரு மாவட்டத்திலும் நூறு உதவித்துணையாளர்கள் அல்லது நீதி மதிப்பீடு செய்கிறவர்கள் இருந்தனர்.[15] டூஸெஸ் என அழைக்கப்பட்ட போர்த்தலைவர்களுமிருந்தனர் : இவர்கள் தலைவா

களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கலாம். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவர்களது அதிகாரம், மன்னர்களைப் போல் உயர்குடிப்பிறப்பை அடிப்படையாகக் கொள்ளாது, தனிப்பட்டவருடைய வீரத்தின் அடிப்படையில் அமைந்திருந்தது.[16] ஒவ்வொரு மாவட்டத்திலிருந்தும் நூறு வீரர்கள் உதவிக்குவந்தனர். தலைவர்களுக்கு கொமிடாஸ் எனப்பெற்ற பணியாளர்கள் ஏவல் புரிந்தனர். இவர்கள் போரில் எசமானரான பிரபுவிற்குப் பாதுகாப்பளித்தனர்; அத்துடன் அமைதியான காலங்களில் பிரபுவின் ஆட்சியை மேலோங்கச் செய்தனர்.[17] இப்பணி புரிந்ததற்குப் பதிலாக அவர்கள் தலைவர் அளித்த வெகுமதிகளைப் பெற்றுக்கொண்டனர். மன்னர்கள் (ரெஜிஸ்) அரச குடும்பத் தலைவர்கள் (டுஸென்) அல்லது சாதாரணத் தலைவர்கள் எனப்பட்ட எல்லாத் தலைவர்களின் அதிகாரமும் பெரிதும் வரையறுக்கப்பட்டிருந்தது. நாட்டு மக்கள் மன்றங்களில், ஆட்சிபற்றிய எல்லா விவகாரங்களும் விவாதிக்கப்பட்டு உறுதி செய்யப்பட்டன. குறிப்பிட்ட காலங்களில் இக் கூட்டங்கள் நடைபெற்றன. இவ்வினத்தாரின் கூட்டங்களுக்குச் சுதந்தரமான மக்கள் எல்லோரும் வந்தனர். சாதாரணமான பிரச்சினைகள், பிரின்செப்ஸ்களால் முடிவு செய்யப்பட்டன. இதற்கு அவர்கள் தனிக்குழுவாகக் கூடினர். இக் கூட்டம், பேரவையின் முன் விவகாரங்களை எடுத்துச்செல்லுவதிலும் தன் முனைப்பைப் பெற்றிருந்தது.

சுதந்தரமான மக்களையடுத்து, சுதந்தரமானவர்களுக்கும் அடிமைகளுக்குமிடையே ஒரு மக்கள் பிரிவு இருந்தது. அவர்கள் அடிமைகள் அல்ல என்றாலும் அரசியல் உரிமைகள் இல்லாதவர்கள். சுதந்தரக் குடிகளிடமிருந்து நிலங்களைப் பெற்று அவைகளைப் பயிரிட்டனர். விளைந்ததில் ஒரு பகுதியை நிலச்சுவான்தாரர்களுக்குக் குத்தகையாகக் கொடுத்தனர். இப் பிரிவையடுத்துக் காணப்பட்டவர்கள் அடிமைகளாவர். இவர்களே அமைப்பில் கடைநிலையிலிருந்தனர். சிறப்பாகப், போரில் சிறைபிடிக்கப்பட்டவர்களும் சுதந்தரக் குடிகளில் குற்றத்திற்காகப் பதவியை இழந்தவர்களுமாகச் சேர்ந்து அடிமைகளாகக் காணப்பட்டனர்.

சுதந்தரக் குடிகளிடையே, தகுதி, கௌரவம்போன்ற வித்தியாசங்களிருந்தன: சிலர் உயர்குடி மரபில் வந்தவர்கள்; சிலர் அவ்வாறு இல்லை. எனினும், இவ் வித்தியாசத்தின் அடிப்படையில் அவர்களிடையே அரசியல் உரிமைகளில் எவ்வித வேறுபாடுகளும் காணப்படவில்லை. இராணுவத்தில் வடக்கத்திய நாட்டினங்களுடன் ஜெர்மானியர்கள் வீரக

ளாகத் திகழ்ந்தனர். (பழமையிலிருந்தே அவர்களிடம் மிகச் சிறப்பான நாட்டுப் பண்புகளில் ஒன்ருகக் காணப்பட்டது.) அவர்கள் இனத்தைச்சேர்ந்த பெண்களிடம் அவர்கள் காட்டிய மரியாதை[18] பழமையிலிருந்தே அவர்களிடம் காணப்பட்ட மிகச்சிறப்பான நாட்டுப் பண்புகளில் ஒன்ருயிருந்தது. பெண்கள் கற்புடையவர்கள் எனப் புகழடைந்திருந்தனர். ஓர் இனத்தினர் எனும் கருத்து மிக்க வலிமை பெற்றிருந்ததுடன் எல்லாவற்றிற்கும் மேலானதாயுமிருந்தது. சமூக அமைப்பிற்கு இனம் அடிப்படையாயிற்று. பின்னர், இராணுவம், சட்டம், ஆட்சிக்குட்பட்ட நிலப்பிரிவு முதலியவைகளும் இதே அடிப் படையில் ஏற்படலாயின. இதையொட்டியே, தலைவர், அவரைச் சேர்ந்த கொமிடெஸ் எனும் பணியாளர்க ளிடையே காணப்பட்ட உறவுகளில் மானிய முறையின் தோற்றம் காணப்படலாயிற்று. ஆனுல், நில அடிப்படையில் மானியமுறையுடன் இது அப்பொழுது தொடர்புற்றதாகக் காணவில்லை.[19]

புதிதான தீவைத் தங்களது இருப்பிடமாகக்கொண்ட டியூடானிய இனத்தைச் சேர்ந்தவர்களான ஆங்கிலேயர்க ளுடைய மூதாதையர், அவர்களுடன் கொண்டுவந்த அரசியல், சமூக முறைகளில் மேலே கூறப்பட்டவை பொதுக் கூறுகளா யமைந்திருந்தன. எனினும் குடியேற்றம், வெற்றிகொள்ளுதல் எனும் முறைகளால், மிகப்பழமையான நிறுவனங்களில் சில மாற்றங்களும் முன்னேற்றங்களும் தேவைக்கேற்றவாறு ஏற்பட்டன. இம்மாதிரி ஏற்பட்ட முன்னேற்றங்களில் மிகத் தொன்மையானது முடியாட்சி எனும் நிறுவனமாகும்.

ஆங்கிலோ சாக்ஸானிய காலவழிக் குறிப்பேட்டின்படி, முதன்முதலில் குடியேறியவர்களின் தலைவர்கள் எல்டர்மென் அல்லது ஹெரிடோகா எனும் பட்டப் பெயரைக் கொண் டிருந்தனர். முதல் சொல் அவர்களுடைய சிவில் ஆதிக்கத்தை யும் பின்னர் கூறப்பட்ட சொல் இராணுவ அதிகாரத்தையும் குறிப்பிட்டது. எனினும், இரு அதிகாரங்களும் ஒரே அதிகாரி யைச் சேர்ந்ததாயிருந்தன.[20] ஆனுல், திறமைமிக்க தலைவர் விரைவிலேயே, நாட்டிலிருந்த பழைய தலைவனைக்காட்டிலும் சிறப்பான செல்வாக்கைப்பெற்றவரானுர் என்பதுடன் பெரும் பான்மையினர் அவர்களுடைய பதவியின் மாறிய தன்மையை, அவர்களைப் பின்பற்றியவர்களுக்கு குறிப்பாக உணர்த்துவதற் காக அரசப்பட்டத்தையும் மேற்கொள்ளலாயினர். 'கின்' அல்லது 'கிங்' எனும் ஆங்கிலச் சொல் கின் அல்லது இனம் என்பதுடன் தொடர்புகொண்டதாகும். அப் பதவியை ஏற்

றுக்கொண்டவர், இனத்தின் பிரதிநிதியெனக் கருதப்பட்டார். அவர் அம் மக்களின் தலைவர்,முதல்வர் என்றிருந்தாரேயொழிய நாட்டின் தலைவராயிருக்கவில்லை. மன்னர், ஒடன் எனும் தெய்வத்தின் வழித்தோன்றல் எனப் புகழ்பெற்று விளங்கினர். அவருடைய வீரமும் மக்களின் விருப்பமும் சேர்ந்து அவருக்களித்த அதிகாரப் பதவியுடன் மன்னர் பதவியை ஓரளவு புனிதத்தன்மை வாய்ந்ததாகச் செய்தது. ஆங்கிலேய மன்னர்கள் ஒடன் எனும் தெய்வத்தின் வழித்தோன்றல்களாகத் தங்களைக் கருதிவந்தனர்.

**கிறித்தவ சமயம்:** ஆங்கிலேயர்கள் கிறித்தவ சமயத்தை மேற்கொண்டது, தேசிய வளர்ச்சியில் மிகுந்த செல்வாக்கைப் பெற்றது. திருச்சபை, மேலான நாகரீகத்தைத் தோற்றுவித்ததோடு, பாஷண்ட சமயத்தைச் சேர்ந்தவர்களும் வெற்றிகொண்டவர்களுமான மக்களின் கொடிய தன்மையை மாற்றியது ; அவர்களிடம் காணப்பட்ட பிறப்பு, இனம் இவைகள் பற்றிய மமதையையும் தணித்தது. வல்லந்த சக்தியைவிடுத்து அறிவின் சக்தியை உயரச்செய்தது. எல்லாவற்றிற்கும் மேலாக, பல பிரிவுகளாக இருந்த மக்களை ஒன்றுசேரச்செய்வதில், புதியதான வலிமையை அளித்தது. முதன் முதலாக கிறித்தவ திருச்சபைக்குள் ஆங்கிலேயரும் வந்ததுடன், ஐரோப்பாவின் அரசியல் சமூகத்துடன் தொடர்பு கொள்ளவும் தேவை ஏற்பட்டது. அத்துடன் நன்கமைக்கப்பட்டிருந்த சமயஞ் சார்ந்த திருக்கூட்டங்களின் முறைகளைக் கண்ணுற்றபொழுது, அவர்களுடைய அரசியல் கூட்டங்களின் நடவடிக்கைகளை ஒழுங்குபடுத்துவதற்கான ஒரு மாதிரியையும் கண்டனர். முதலிலிருந்தே திருச்சபை அரசாங்கத்துடன் மிக நெருக்கமான உறவு கொண்டிருந்தது. அத்துடன் ரோமாபுரியின் திருச்சபைக்கு மரியாதை செலுத்துவதோடு சிறப்பான தேசியத்தன்மையுடையதாய் வளர்ந்தது. 668-ல் தார்ஸைச் சேர்ந்த தியோடர் என்பார் கான்டர்பரியின் அதிமேற்றிராணியாராகப் பீடத்திலமர்த்தப்பெற்ருர். அவர் பல சிற்றரசுகளில் காணப்பெற்ற பல்வேறு சமயஞ்சார்ந்த நிறுவனங்களைத் தேசிய திருச்சபையின்கீழ் ஒன்றுபடும்படி செய்தார்.[21] அதுமுதல், சிற்றரசுகளுக்கிடையே அடிக்கடி பகைமை காரணமாகத் தனித்திருந்துவந்த அவைகளைச்சேர்ந்த தனித்தனியான குருமார்களுக்கு இடையே, ஒற்றுமையை வளர்க்கும் ஒரு மத்திய நிறுவனமாயும் தேசிய நிறுவனமாயும் திருச்சபை விளங்கியது. இவ்வாருக நாட்டின் சிவில் ஒற்றுமைக்கு சமயஞ் சார்ந்த ஒற்றுமை முன்நிகழ்ச்சியாயிருந்ததுடன் வழியையும் உண்டுபண்ணியது. முதன் முத

லாகச் சமயப்பிரசாரத்திற்காக வந்த சமயகுருமார்கள் நாட்டை விட்டகன்றதன்பின், சமயத்துறைகளில் மிகப்பெரிய பதவிகள் எல்லாம் ஆங்கிலேயருக்கே அளிக்கப்பட்டன. இவர்களில் பெரும்பான்மையினர் உயர்குடியினராயும் வலிமை வாய்ந்த குடும்பங்களையும் சேர்ந்தவராயிருந்தனர். சமயக்குரவர்களுக்கும் அரசாங்கத்திற்குமிடையே தோற்றுவிக்கப்பட்ட இவ்வுறவு சமயச்சார்பற்றதும் சமயஞ் சார்ந்ததுமான அலுவல்கள் ஒன்றுபடுவதை உறுதிசெய்தது. மேற்றிராணியார்கள் விட்டானகிமூட் எனும் அவையில் முக்கியமான உறுப்பினர்களாயிருந்தனர்; அடிக்கடி மன்னரின் முதல் அமைச்சர்களாயுமிருந்தனர். ஏல்டர்மன்களுடன் நீதி விசாரணையிலும் பங்கு கொண்டனர். இவ்வாறு சிவில் அமைப்பில் திருச்சபை நெருங்கிய தொடர்புகொண்டது. நாளடைவில் மக்களின் பழக்கங்கள், உணர்ச்சிகள் முதலியவைகளுடன் பிணைந்து வளரும்பொழுது திருச்சபை தனிச்சிறப்புவாய்ந்த தேசியத் தன்மையைப்பெற்றது.

**பிரெட்வால்டா:** ஹெப்டார்கி[22] எனப் பொதுவாக அழைக்கப்பட்ட காலம் முழுவதிலும், நாட்டில் சிற்றரசர்கள் அல்லது இளவரசர்கள் நிறைந்து காணப்பட்டனர். அவ்வப்பொழுது அவர்களில் ஒருவர் மற்றவர்மீது வல்லந்தமாக மேலாதிக்கம் பெற்றுவந்தனர். அம்மாதிரி நாட்டில் முழுமையாக மேலாதிக்கம் அல்லது தலைமைப் பதவியைப் பெற்றவர்களான எழுவரை பீட் என்பார் குறிப்பிட்டுள்ளார். சாக்ஸானிய காலவழிச் செய்திக்கோவை, எக்பர்ட் என்பாரை 'பிரெட்வால்டாகவிருந்த எட்டாவது மன்னர்' எனக் குறிப்பிடுகிறது.[23] பிரெட்வால்டாக்களின் ஆட்சிப்பகுதியின் பரப்பு என்ன என்பதுபற்றித் தெளிவாகத் தெரியவில்லை என்றாலும் ஏழு பிரெட்வால்டாக்களில் ஒவ்வொருவரும் அவருக்கு அண்டையிலிருந்த இராச்சியங்களின்மீது ஏதோ ஒருவிதமான மேலாதிக்கம் பெற்றிருந்தனர் என்பதை நாம் மறுக்க முடியாது. ப்ரெட்வால்டாக்கள் இருந்தனரென்பது, ஆங்கிலேய இனத்தவரை ஒன்றுபடுத்துவதற்கு முன்னர் செய்யப்பட்ட முயற்சிகளைக் குறிப்பிடுவனவாகத் தோன்றும். இறுதியாக இந்த ஒற்றுமையை 9ஆவது, 10ஆவது நூற்றூண்டுகளில் மேற்கு சாக்ஸானிய மன்னர்கள் நிலைபெறச்செய்தனர்.[24]

கடைசியாக, வெஸ்ஸக்ஸ், மெர்ஸியா, நார்த்தம்பர்லாந்து எனும் இராச்சியங்கள் வலிமை மிக்கதாய் ஆயின. மேற்கு சாக்ஸானிய மன்னரான எக்பர்ட் (802—839), அவருடைய இராச்சியத்தைச் சார்ந்த கென்ட், எஸ்ஸக்ஸ் எனும் பகுதி

களையும் தம் இராச்சியத்துடன் சேர்த்துக்கொண்டதோடல்லாமல், பெரிய இராச்சியங்களான மெர்ஸியா, நார்த்தம்பிரியாவையும் அவருடைய ஆதிக்கத்தை ஏற்றுக்கொள்ளுமாறு வற்புறுத்தினர். எனினும், மெர்ஸியா, கிழக்கு ஆங்கிலியா, நார்த்தம்பிரியா இராச்சிய மக்கள் அவரவர்களுடைய பழைய மன்னர் மரபுவழிவந்த மன்னர்களைக் கொண்டிருந்தனர். எனவே, எக்பர்டும் அவருக்குப் பின் முடியாட்சி செய்த ஐவரும் மேற்கு சாக்ஸானிய மன்னர் எனும் பட்டத்தையே சூட்டிக்கொண்டனர். ஆல்ஃப்ரட் மன்னர் (871—899) அவரது உயிலில் சூட்டிக்கொண்ட பட்டமும் இதுவேயாகும்.

**டேனர் படையெடுப்பு** (*787—1070*): டேனர்களின் படையெடுப்பு பல்வேறு இராச்சியங்களை ஒன்றுபட்டு உறுதிப்படுத்துவதை விரைவாக்கியது. இந்தப் படையெடுப்பினால், மெர்ஸியா, நார்த்தம்ப்ரியா, கிழக்கு ஆங்கிலியா எனும் மூன்று இராச்சியங்களும் வெல்லப்பட்டதுடன், மேற்கு சாக்ஸானிய இராச்சியமும் அழிவுறும் நிலைமைக்கு உள்ளாக்கப்பட்டது. 'வடநாட்டுக் கொலைகாரர்கள்' எனப்படும் புகழ்பெற்ற கடல் மன்னர்களின் தலைமையின்கீழ் டேனர்கள் 9ஆவது, 10ஆவது நூற்றாண்டுகளில் ஐரோப்பாவின் கடற்கரைப் பகுதிகளையெல்லாம் கொள்ளையிட்டனர். அவர்கள் ஆங்கிலேய இனத்தைப்போன்றவர்கள்; பொதுவான டியூடானிய மொழியின் பிறிதொரு மொழியைப் பேசினர். அவர்களுடைய நிறுவனங்களுக்கும் ஆங்கிலேயர்களுடைய நிறுவனங்களுக்கும் பொருத்தங்கள் குறிப்பிடத்தக்கனவாயிருந்தன. விவரங்களில் மாறுபாடு காணப்படினும், அம்மாறுபாடுகள் ஒரேமாதிரியான கொள்கைகளின் பொதுவான அடிப்படையில் எழுந்தவையாயிருந்தன. இங்கிலாந்தின்மீது டேனர்கள் முதன்முதலாகப் படையெடுத்தது எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. டேனர்கள் மீண்டும் மீண்டும் படையெடுத்துவந்தனர். இறுதியில், கடுங் கொள்ளையடித்துச்செல்வதற்குப் பதிலாக பிரிட்டிஷ் தீவுகளிலேயே நிலையாகக் குடியேற்றங்களை அமைக்கத் தொடங்கினர். அவர்களின் உடனடியான பேரிடரிலிருந்து ஆங்கிலேயர்களை ஆல்பர்ட் மன்னரின் அறிவுக்கூர்மையும், வீரமும் காப்பாற்றியது எனினும், ஆல்ஃப்ரட் மன்னரால் இங்கிலாந்திலிருந்து டேனர்களை விரட்டவோ அல்லது இங்கிலாந்தின் மன்னராக ஆவதற்கோ முடியவில்லை. ஆல்ஃப்ரடுக்கும், குத்ரமிற்கும் (885?) இடையே ஏற்பட்ட சமாதானத்தின்படி டேனர்கள் கைப்பற்றியிருந்த பகுதிகளின் தென் எல்லைகள்

'தேம்ஸ் நதியிலிருந்து லீவரையிலும், லீயின் கரையிலிருந்து அது தோன்றுமிடம்வரையிலும், வடக்கில் பெட்ஃபோர்டு வரையிலும், ஊஸ் நதியிலிருந்து வாட்லிங் தெருவரையிலும்' வரையறுக்கப்பட்டன.[25] வடக்கில் டைன் நதிவரையில் பரவியிருந்தது. மேற்கில் மலைப்பகுதிகளான யார்க்ஷயர், வெஸ்டு மோர்லாந்து, கம்பர்லாந்து மாவட்டங்கள்வரை பரவியிருந்தது. இந்தப் பகுதிமுழுவதிலும் டேன்லா—அல்லது டேனர்களின் சட்டம் ஆணையிலிருந்த பகுதி—சாக்ஸானிய காலவழிச் செய்திக் கோவை குறிப்பிடுகிறபடி டேனர்களின் படைகள்வயம் தொடர்ந்து இருந்தது. நாட்டில் இராணுவப் பிரபுக்கள் ஆட்சி நடைபெற்றது. குடிமக்கள் ஆங்கிலேயர்களாக இருந்தனர். ஆல்ஃப்ரடுக்குப் பின் வந்தவர்களும் திறமை வாய்ந்தவர்களும், ஆற்றல்மிக்கவர்களுமான மூத்த எட்வர்டு (899—925), அதெல்ஸ்டன் (925—939), எட்மன்டு (939—946) என்ற மூவர்களின் வெற்றிகள் டேனர்களை உண்மையில் அடிபணியச் செய்தன; இறுதியில் 959-ல் எட்கார் (957—975), நார்த்தம்பிரியாவின் கடைசி டேனிஸ் மன்னனுக்குப் பிறகு உயிர் வாழ்ந்திருந்ததால், இங்கலாந்தின் மூன்று மாநிலங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவராய் மேற்கு சாக்ஸானியர்கள், மெர்ஸியர்கள், நார்த்தம்பரியர்கள் இவர்களின் இறைமையைக் கைக்கொண்டு ஒன்றாக இணைத்து இங்கிலாந்தின் மன்னன் என முடி சூட்டிக்கொண்டார். ஆங்கிலேயர்களும், ஆங்கிலோ-டேனர்களும் நாளடைவில் ஒன்றுபட்டு இணைந்தனர். ஆங்கில மொழியும் நிறுவனங்களும், அவைகளின் நடுவே இருந்த அந்நியர்களின் தொடர்பால் குறிப்பிடத்தக்க அளவு செல்வாக்கைப் பெற்றிருந்தும், அவைகளின் ஆதிக்கத்தை நிலைநிறுத்தின.

975-ல் சமாதானப்பிரியரான எட்கார் இறந்தபின் ஆயத்தமில்லா எதல்ரெடின் (979—1013) இளம் வயது, வலிமையின்மை ஆகியவை டென்மார்க்கிலிருந்து புதிய படையெடுப்பு ஏற்படக் காரணமாயிருந்தன. இப் படையெடுப்புகள் வெற்றி கொள்ளுவதற்காக ஏற்பட்ட முறையான போராக விளங்கின. இப் போர்கள் இறுதியில் நாகரீகத்தை வளர்க்கும் கிறித்தவ உலகில் சேர்த்துக்கொள்ளப்பட்டவர்களான மன்னர்களால் நிகழ்த்தப்பட்டன. தவிர, அவர்களுடைய மக்களும், முந்திய படையெடுப்புகளில் ஈடுபட்ட முன்னோர்களைப் போன்று கொடுமைவாய்ந்த கடற்கொள்ளைக்காரர்களாயுமிருக்கவில்லை. ஆங்கிலேய அரச குடும்பம் சிறிதுகாலத்திற்கு டேனர்களின் அரச குடும்பத்தினரால் மாற்றஞ் செய்யப்பட்டது; எனினும், அரசாங்கத்தின் கொள்கை மாற்றம் பெறவில்லை. வெற்றி

கொண்டவர்களைக்காட்டிலும் ஆங்கிலேயர் எண்ணிக்கையில் மிகுந்திருந்தனர். ஹார்தாநட் எனும் டேனர் மன்னர் 1042-ல் இறந்தபின், பழைய மேற்கு சாக்ஸானிய மன்னர் வமிசத் தரசர்கள் முடியை மீளப்பெற்று பகத்சீலரான எட்வர்ட் (1042—1066) அரியணையேறினர்.

## ஆங்கிலேய சமுதாயமும் நிறுவனங்களும்

நார்மானியர்களின் படையெடுப்பிற்கு முன்னரே பல்வேறு டியூடானிய இனத்தவர்களும் டென்மார்க்கிலிருந்து வந்து குடியேறியவர்களின் சந்ததியார்களும் ஒன்றுசேர்ந்து கலந்து ஒரே நாட்டினமாக ஆயினர். ஏழாவது நூற்றாண்டிலிருந்து பதினோராம் நூற்றாண்டுவரை ஆங்கிலேய நாட்டு இனத்தின் அரசியல் சட்டம் எவ்வாறிருந்தது என்பதை நாம் அறிந்து கொள்ள வேண்டியதாகும். அந்த அரசியல் சட்டம் நார்மானியர்களின் வெற்றிக்குப் பின்னரும் உயிருடன் இருந்தது. அத்துடன் அதன் முக்கியமான கொள்கைகளுடன்—தொடர்ந்து வந்த தலைமுறையினரின் தேவைகளை நிறைவுறச்செய்வதற்காக அவ்வப்பொழுது வளர்ச்சியுற்றும் மாற்றம் கொண்டுமிருந்தது —இன்றளவும் தொடர்ந்து வந்துள்ளது.

படையெடுத்து வந்தவர்களில் ஒவ்வொரு பிரிவினரும் எவ்வாறு அவர்கள் வெற்றிகொண்ட நிலப்பகுதிகளைக் குடியேற்றத்திற்காக அவர்களுக்குள் பிரிவினை செய்துகொண்டார்கள் என்பதுபற்றி நமக்குத் தெரியவில்லை. எனவே, இதைப்பற்றி நாம் கூறுவது எல்லாம் ஊகத்தின் அடிப்படையில் அமைந்ததாகும். ஆனால், அவர்கள் குடியேறிய ஒவ்வொரு நிலப்பகுதியிலும் பெருமளவு கூட்டத்திலிருந்தவர்களுக்கு ஒதுக்கப்பெற்றது என்பதில் எவ்வித ஐயமும் இருக்கக் காரணமில்லை. படையெடுத்து வந்தவர்களின் மொத்த எண்ணிக்கையைப் பல சிறிய கூட்டங்களாகப் பிரித்து, ஒவ்வொரு சிறிய கூட்டத்தினருக்கும் நிலம் ஒதுக்கப்படுதல் என்பது பொதுவாகப் பின்பற்றப்பட்டதெனலாம். ஒவ்வொரு சிறிய கூட்டத்திலும் நூறு போர் வீரர்கள் நட்புறவால் ஒன்றாக இணைக்கப்பட்டிருந்தனர். இந்த நூறு வீரர்களுக்குக் கொடுக்கப்பட்ட நிலம், ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவர்களைக் கொண்ட சிறிய பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. அவ்வாறு பிரிக்கப்பட்டவை மாக்த்ஸ் எனப்படும். நெருங்கிய குடும்ப உறவால் இணைக்கப்பட்டதும் அதிகமான அல்லது குறைவான குடியேறியவர்களைக் கொண்டதுமாய் மாக்த்ஸ்கள் இருந்தன.[26]

சுதந்தரமானவர்களுக்குக் கொடுக்கப்பட்டதுபோக, நிலத்தின் மற்ருெரு பகுதி கூட்டத்தின் தலைவரால் அவருடைய சொந்த நிலமாக வைத்துக்கொள்ளப்பட்டது. உயர்குடி மக்களும் உதவியாயிருந்த தலைவர்களும் தனித்தனியே தங்களுக்காக நிலங்களை ஒதுக்கிக் கொண்டார்கள் அல்லது பெற்ருர்கள்.[27]

மேலும், நார்மானியராட்சிக்கு முன் இங்கிலாந்தின் நிலங்களை முழுமையாக (1) ஃபோல்க்லாந்து, (2) பாக்லாந்து எனப்படும் இருபெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.[28]

ஃபோல்க்லாந்து எனப்பட்டது, மக்கள் உரிமை அல்லது பொதுமக்களின் வழக்கு[29] எனும் அடிப்படையில் அமைந்ததாகும். இம்முறையில் நிலம் பராதீனம் செய்யத்தக்கதன்று.

மற்ருென்ருன பாக்லாந்து என்பது சாசனம், அல்லது பதிவு செய்யப்பட்டது; அல்லது இக்காலத்திய வழக்கப்படி பட்டா செய்து கொடுக்கப்பட்ட நிலமாகும். ஃபோக்லாந்தைப் போலல்லாது பாக்லாந்து (நிலம்) பராதீனம் செய்யப்படுவதற்கும் உயில்படி பிரிவினை செய்வதற்கும் உரியது. வாரிசு முறையில் பிரிவினை செய்ய முடியாதவாறு கட்டுப்படுத்தப்பட்டிருக்கலாம். அப்படியாயின் நிலத்தின் சொந்தக்காரர் நிலத்தைப் பராதீனப்படுத்தும் அதிகாரத்தை இழந்தவராவார்.[30] இம்முறைப்படி நிலத்தின் சொந்தக்காரர் சிறப்புரிமையைக் கொண்டிருந்தார். வழக்கமாக மற்ற நிலச் சொந்தக்காரர்கள் செலுத்தவேண்டிய கடமைகளை இம்முறைப்படியுள்ள நிலச் சுவான்தாரர்கள் செலுத்தவேண்டியதில்லை. எனினும், இராணுவ சேவைபுரிவது, கோட்டைகள், வாராவதிகளைக் செப்பனிடுவதற்காக நன்கொடை யளிப்பது (ஃபியர்ட் கட்டணம், பர்பாட், பிரிக்பாட்) போன்ற கடமைகளைச் செய்யவேண்டியவர்களாயிருந்தனர். திருச்சபைகளும் மிகப் பெரியவர்களும் மாத்திரம், பாக்லாந்து எனப்படும் நிலங்களை வைத்துக் கொண்டிருந்ததாகத் தோன்றுகிறது.[31]

**அரசாங்கத்தின் அமைப்பு :** டன் எனப்படும் நகரம்[32] அல்லது வில் எனப்படும் நிலப்பிரிவுதான் அரசாங்கத்தின் அமைப்பில் மிகச் சிறிய பகுதியாயிருந்தது. இதில் தலத் தொடர்பால் ஒன்ருக இணைந்த நிலச் சொந்தக்காரர்கள் குடியிருந்தனர். இவர்களுள் முதன் முதலாக மாக்த் எனப்படும் முறையில் நிலம் வழங்கப்பட்டவர்களின் பிரதிநிதியாக இருந்தவர்களும், அல்லது குடியேறிய தலைவனின் எஸ்டேட்டைச் சார்ந்தவர்களும் அடங்கியிருந்தனர். சில சமயங்களில் நகரங்களில் மக்கள்

அவை[33] அல்லது சுதந்தரமானவர்களின் மன்றம் இருந்தது. ரீவ் என்று அழைக்கப்பட்டவர் அதன் தலைவராகவோ அல்லது முக்கிய ஆணையாளராகவோ இருந்தார். பல டவுன் பகுதிகள் சேர்ந்து ஹண்ட்ரடுகளாக அமைக்கப்பட்டன. இவைகள் டேனர்கள் வசித்த மாவட்டங்களில் வாபன்டேகஸ் என அழைக்கப்பட்டன. பல ஹண்ட்ரடுகள் சேர்ந்து ஒரு ஷயராக அமைந்தது; பல ஷயர்களடங்கியது இராச்சியமாகும்.

ஹண்ட்ரட் அல்லது வாபன்டேக் எனும் பகுதியின் தோற்றம் மிகப் பழைய குடியிருப்புகளில் காணப்பட வேண்டியதாயிருந்தது. இது இயற்கையமைப்பில் மாறுபட்டும் படையெடுத்து வந்தவர்களில் நூறு வீரர்களையோ அல்லது நூறு குடும்பங்களையோ அல்லது நூறு குடும்பங்களுக்குப் போதுமான நிலங்களையோ கொண்டதாகவும் இருந்தது.[34] இங்கிலாந்தில் முதன் முதலாக எட்கார் மன்னரின் (959—975) சட்டங்களில் 'ஹண்ட்ரட்' 'வாபன் டேக்' எனும் பெயர்கள் காணப்படுகின்றன. இச் சட்டங்கள் நாட்டின் பாதுகாப்பு நிறுவனத்தைப் பற்றியவையாயிருந்தன.[35] அக்காலத்தில், (கருதப்பட்டது) ஹண்ட்ரட் எனும் சொல் முதலில் ஒரு மாவட்டத்தில் குடியிருந்தவர்களில் உறவால் ஒன்றுபட்டவர்களைக் குறித்ததை விடுத்து, மாவட்டம் அல்லது இராச்சியத்தைச் சேர்ந்த ஒரு நிலப் பகுதியைக் குறிப்பதாக ஆயிற்று. ஹண்ட்ரட் என்பது முதலில் கள்வர்களைக் கண்டுபிடிப்பதற்காக அக்கம்பக்கத்திலிருந்தவர்கள் தாங்களாகவே விரும்பி அமைத்துக்கொண்ட சங்கம் என்றும் பின்னர் (படிப்படியாகக் காணத்தக்க வகையில்) அது குற்றவாளிகளைக் கைது செய்வதற்கும் நீதி விசாரணை செய்வதற்கும் அதிகாரத்தைப் பெற்றதெனவும் அண்மையில் கருத்துரைக்கப்பட்டது.[36] ஹண்ட்ரடில், ஹண்ட்ரட் கிமாட் எனும் அவையிருந்தது; நான்கு வாரத்திற்கு ஒரு முறை இது கூடியது. இக் கூட்டத்திற்கு ஹண்ட்ரடைச் சேர்ந்த தீன்களும், ஒவ்வொரு நகரத்திலிருந்தும் நான்கு பேர்களுடன் பிரதிநிதியான ரீவும் வந்தனர். இக் கூட்டத்தைக் கூட்டுவித்தவர் ஹண்ட்ரட்மான் அல்லது ஹண்ட்ரட் ஏர்ல்டர் எனப்படுவார். இவரே மன்றத்தின் முக்கிய ஆணையாளராயுமிருந்தார். முதலில் இவரது பதவி தேர்ந்தெடுக்கப்படுவதாயிருந்திருக்கலாம். ஆனால், காலப்போக்கில் தல செல்வாக்கு மேலோங்கியதால், ஹண்ட்ரட் ஏர்ல்டர், பல இடங்களில் ஹண்ட்ரட் பிரிவைச் சொந்தமாகக் கொண்டிருந்த பெரிய மனிதர் அல்லது தீனால் நியமிக்கப்பட்டார்.

ஷையர் எனப்படும் நிலப் பிரிவு (பெரியதானதில் ஒரு பங்கு அல்லது பிரிவைச் சுட்டுவதாக இச் சொல் முதலில் இருந்தது)

மிகப் பழமையானது எனினும், அச் சொல் எந்தச் சமயத்தில் தோன்றியது என்பது தெளிவாகத் தெரியவில்லை. ஏழாவது நூற்றூண்டின் இறுதியிலிருந்தே வெஸ்ஸக்ஸ் எனும் மாநிலம் பல ஷையர்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது என்பதற்கு ஆதாரங்கள் உள. இது ஆல்ஃப்ரட் மன்னரின் காலத்திற்கு வெகு நாட்கள் முன்னதாகவே இருந்தது. எனினும், ஷையர் பிரிவுகள் ஆல்ஃப்ரட்டால் ஏற்படுத்தப்பட்டதென்பது எல்லோருடைய கருத்தாகவிருந்தது. மேற்கு சாக்ஸானிய மன்னரான ஐனியன் (சுமார் கி.பி. 690) சட்டங்களில் (ஐனி 36, பிரிவு 8) ஷையர்மன் அல்லது வேறு நீதிபதியிடமிருந்து வழக்கில் வாதி நியாயம் பெறத் தவறினால், அதற்கான வழி செய்யப்பட்டிருந்தது; ஏர்ல்டர்மன் அரசு குற்றத்தில் கலந்திருந்தால், அதற்காக அவர் ஷையர் பறிமுதல் செய்யப்படுமென்றும் பிரதிவாதி அவருடைய பிரபுவை விட்டு மற்றொரு ஷையருக்கு இரகசியமாகச் செல்லுவதையும் தடை செய்தது. நாளடைவில் வெஸ்ஸக்ஸ் மற்ற இராச்சியங்களை வென்றதால், அப்பகுதிகளும் ஷையர்களாகப் பிரிக்கப்பட்டன. இவ்வாறு பிரிக்கப்பட்டது சில சமயங்களில் பழைய அடிப்படையிலும், சில சமயங்களில் பாதுகாப்புடன் கூடிய நகரத்தை மையமாகக் கொண்டதும், டேனர்களால் தோற்றுவிக்கப்பட்டதுமான மாவட்டங்களின் அடிப்படையிலும் அமைக்கப்பட்டன.[37]

இங்கிலாந்தின் பரோக்கள் பலவிதங்களில் தோன்றின. ஒருசில ஏற்கெனவேயிருந்த கிராமங்கள் அல்லது டன்களிலிருந்து வளர்ச்சியுற்றது என்பதில் ஐயமில்லை. இடைக்காலத்திய பழைய நகரங்களில் கிராமத்தின் தன்மை மிகச் சிறப்பாகக் காணப்பட்டது.[38] சில, பர்ஹ் என்பதிலிருந்து வளர்ச்சியடைந்தன. இது அதன் தோற்றத்தில் கடும் பாதுகாப்புடன் அமைந்திருந்த நகரமாயிருந்தது என விவரித்துக் கூறலாம். அந் நகரம், நன்கு பாதுகாக்கப்படக்கூடிய நிலையில் இருந்தது. சுற்றிலும் அகழ் இருந்தது அல்லது விரைவாக வளரும் உயிர் வேலிக்குப் பதிலாக குன்று அமைந்திருந்தது. விரைவாக வளரும் உயிர் வேலியுடையது அல்லது 'டன்' என்பதிலிருந்து டவுன் (நகரம்) எனப் பெயர் பெறலாயிற்று. டன் தொடக்கத்தில் விவசாயம் செய்கிறவனுடைய வீட்டைச் சுற்றிலும் காணப்பட்ட வேலியுடன் கூடிய நிலப்பகுதியைச் சுட்டியது. பர்ஹ் வலிமைமிக்கவரின்—மன்னர், குற்ற விசாரணை செய்யும் அதிகாரி அல்லது பிரபு போன்றவர்கள்—பாதுகாக்கப்பட்ட வீடும் முற்றமும் சேர்ந்ததாகும்.[39]

டேனர்களின் படையெடுப்பின்பொழுது பாதுகாப்பின் தேவைகாரணமாகப் பல முக்கியமான இடங்கள் பாதுகாப்

புள்ளனவாகச் செய்யப்பட்டன. அது முதற்கொண்டு பர்ஹ் எனும் சொல் பரோ எனப்பட்டதோடு, நன்கு பாதுகாக்கப்பட்ட வீடுகளின் தொகுதியையும் குறித்தது. பெரிய மடாலயங்களைச் சுற்றிலும் வேறு நகரங்கள் எழுந்தன. வணிகர்களும் வியாபாரிகளும் கூடுமிடங்களான ஆறுகளைக் கடக்கக்கூடிய பகுதிகளிலும், பெருவழிகள் சந்திக்குமிடங்களிலும் அல்லது துறைமுகங்களை யடுத்தும் நகரங்கள் எழுந்தன. நகரம் தோன்றுவதற்கு, ஆதாரமாக ஏற்கெனவேயிருந்த கிராமம் இராணுவ அடிப் படையில் பாதுகாப்புடன் கூடிய கோட்டை, மடாலயம் அல் லது வியாபாரிகள் கூடுமிடம் போன்று எதுவாயினும் சரி, நாட்டின் கைத்தொழில், வாணிகம் முதலிவைகளின் தேவை கள்தான் நகரங்களின் வளர்ச்சிக்குத் தூண்டுகோலாய்[40] எப் பொழுதும் இருந்தது.

திறந்த வெளிகளிலிருந்ததைக் காட்டிலும் பாதுகாப்புச் சுவர்களுடைய நகரத்தில் வியாபாரிகளுக்கு அதிகமான பாது காப்புக் கிடைத்தது. மன்னர் சிறப்பு அமைதியால் இந்நகரங் கள் பாதுகாக்கப்பட்டன. அமைதியை மீறியவர்களின்மீது கடுமையான அபராதம் விதிக்கப்பட்டது. நகரங்களில் (சில வற்றில்) அவை அல்லது நீதிமன்றங்களிருந்தன. இவை ஹண்ட் ரட்களிலிருந்த மன்றங்களைப் போன்றிருந்தன. சில சமயங் களில் சங்கங்களுமிருந்தன. இச் சங்கங்கள் இக்காலத்திய சங்கங்களைப்போன்று சமயம், அறம், சமூக சேவை முதலியவை களுக்காகப் பிறர் தூண்டுதலின்றி தானகவே அமைந்தவை யாகும்.[41] பிற்காலத்தில் நகராட்சியின் வரலாற்றில் சிறப்பான பங்குகொண்ட வியாபாரிகளின் சங்கங்களைப்பற்றி நார் மானியர் காலத்திற்கு முன் ஒன்றும் அறிவதற்கில்லை.

உறுப்பினர்களுக்கு பரஸ்பரம் பாதுகாப்பளிப்பது, அமை தியை நிலைபெறச்செய்வது என்பவைதான் சில சங்கங்களின் முக்கிய நோக்கங்களாயிருந்தன. ஐனி, ஆல்ஃப்ரட் மன்னர் களின் சட்டப்படி, சங்க உறுப்பினர்களில் ஒருவர் தற்கொலை செய்துகொண்டால், சங்கத்தைச் சேர்ந்த மற்ற உறுப்பினர் கள் வர்கில்ட் தொகையைப் பெறுவதிலும் செலுத்துவதிலும் பங்கு பெற்றனர்.[42]

இராச்சியத்திலிருந்த நகரங்களைவிட லண்டன் நகரம் எப்பொழுதுமே சிறப்பான பதவியைக் கொண்டிருந்தது. நகர மக்கள், வலிமை வாய்ந்த எட்மன்டு, ஹரால்ட் ஹார்ஃபுட், வெற்றிச் சீலரான வில்லியம் முதலியவர்களை மன்னர்களாகத் தேர்ந்தெடுப்பதில் கலந்துகொண்டனர்.[43] மற்ற இடங்களில்

நடந்ததைக்காட்டிலும் லண்டனில் விடானகிமுட் கூட்டங்கள் அடிக்கடி கூட்டப்பெற்றன.[44] தவிர, பொதுமக்கள் சபையுமிருந்தது. மக்கள் திறந்த வெளியில் கூடுவதும், வாரந்தோறும் மேடைமீதமரும் நீதிமன்றமும் இருந்தன. திறந்த வெளியில் மேடைமீதமர்ந்து நீதிவிசாரணை செய்வது டேனர்களின் வழக்கமாயிருந்தது. எனினும், நகராட்சி சம்பந்தமாக நன்கமைந்த அரசியல் சட்டம்பற்றிய விவரம் எதுவும் இது வரை காணக் கிடைக்கவில்லை. நார்மானியர் காலம் முழுவதிலும் ஒரே சீராக லண்டன் நகராட்சி இயங்கிவந்தது. 'சிறு குடும்பங்கள், பண்ணைகள், சமயப் பகுதிகள், திருச்சபை ஊழியர்கள், தொழிற் சங்கங்கள் முதலியவை ஒன்றுசேர்ந்து உள்ளபடி வழக்கமாகப் பராமரிக்கப்பட்டதாயிருந்தது.'[45]

நார்மானியராட்சிக்கு முந்திய ஆட்சியினிறுதியில் லண்டன் நகரத்து இரு முக்கிய அதிகாரிகளாக போர்ட் ரீவும்[46] மேற்றிராணியாருமிருந்தனர். வெற்றி சீலரான வில்லியம், எட்வர்ட் மன்னரின் காலத்தில் லண்டன் நகரம் துய்த்த சட்டங்களை உறுதி செய்து வழங்கிய சாசனம் இவ்விரு அதிகாரிகளிடம் அளிக்கப்பட்டது. 'வில்லியம் மன்னர், மேற்றிராணியாரான வில்லியம், போர்ட்ரீவான காஸ்ஃபிரித், லண்டனிலுள்ள எல்லா பர்கர்களுக்கும், மற்றும் ஆங்கிலேய, பிரெஞ்சு இனத்தவர்களுக்கும் நட்புடன் வாழ்த்துக் கூறுகிறார்; எட்வர்ட் மன்னர் காலத்தில் நீங்கள் அனுபவித்த சட்டங்களையெல்லாம் நீங்கள் தொடர்ந்து அனுபவிப்பீர்கள் என உறுதி கூறுகிறேன். தகப்பன் இறந்தபின் அவனது மகன் வாரிசாகக் கருதப்படுவான். உங்களுக்குத் தீங்கு இழைக்கப்படுவதை நான் அனுமதிக்கமாட்டேன். இறைவன் துணைபுரிவாராக'[47] என்று சாசனம் கூறுகிறது.

இங்கிலாந்து கிறித்தவ சமயத்தைத் தழுவியபொழுது காணப்பட்ட பல்வேறு இராச்சியங்களின் எல்லைகளை ஒத்து மேற்றிராணியார்களின் ஆதிக்கப் பகுதிகளும் முதலிலிருந்தன. ஆனால், அதிமேற்றிராணியாராயிருந்த தியோடர் என்பார், அதற்கும் முன்னதாக நிலப்பிரிவுகளின் அடிப்படையில் சமயவதிகார நிலப்பகுதிகளை மேலும் பிரித்தார். நாடு முழுவதிலும் நாளடைவில் திருக்கோயில்கள் ஏற்பட்டபொழுது, டவுன்ஷிப்போ அல்லது மக்கள் நெருக்கம் குறைவாயிருந்த மாவட்டங்களில் பல சிறு டவுன்களின் ஒன்றுசேர்ந்த கூட்டமோ தானாகவே சமயத்துறையில் ஒரு தனிப்பட்ட மதகுருவின் அதிகாரவெல்லைக்குட்பட்ட பாரிஷாக ஆயிற்று.[48]

**அரசாங்க அதிகாரிகள் :** ஷையரின் ஆட்சி, ஏல்டர்மன் எனும் அதிகாரியால் நடைபெற்றது. இலத்தீன் மொழியில் பிரின்செப்ஸ்(தலைவர்)அல்லது டக்ஸ் எனவும் பின்னர், கோமிஸ் (துணைவர்) எனவும் இவர் அழைக்கப்பட்டார்.[49] சமூக அமைப்பில் ஏல்டர்மென் மிக்குயர் அதிகாரியாயிருந்தார். பர்கிரைஸ் (அதாவது, பாதுகாப்புடன் கூடிய அவருடைய வீட்டில் புகுவது) எனும் குற்றத்திற்கு நஷ்டஈடு மேற்றிராணியாருக்குச் செலுத்தப்படவேண்டிய தொகைக்குச் சமமாயும், சாதாரணப் பிரபுவுக்குச் செலுத்தப்படவேண்டிய தொகையைப் போன்று இருமடங்காயுமிருந்தது;[50] அவர் சிவில் இராணுவ அதிகாரியாயுமிருந்தார் ; ஃபியர்ட் எனப்பட்ட நிலையான படைக்குத் தலைவராயுமிருந்தார் ; நீதி வழங்கினார் ; அவர் அதிகாரியாயிருந்த நிலப்பகுதியின் சட்டங்களை ஆணை செய்வதற்கு அவர் பொறுப்பாளியாயுமிருந்தார்.[51] முற்காலத்தில், ஒவ்வொரு ஷையருக்கும் தனித்தனியான ஏல்டர்மன் இருந்தார் எனத் தோன்றுகிறது. ஆனால், மூத்த எட்கார் மன்னராட்சிமுதல், பல ஷையர்கள் ஒன்றுசேர்க்கப்பட்டு ஒரே ஏல்டர்மனால் ஆட்சி செய்யப்படுவது வழக்கமாயிற்று. பதினோராம் நூற்றாண்டில், டேனிஷ் மன்னர்களாட்சியின்பொழுது, ஏல்டர்மென் எனும் பதவிப் பெயர் நீக்கப்பட்டு ஷையர் அல்லது மாநிலத்தை ஆட்சி புரிகிறவர் ஏர்ல் என அழைக்கப்பட்டார்.[52]

பத்தாம் நூற்றாண்டில், பல ஷையர்களின் ஆட்சிப் பொறுப்பை மேற்கொண்டிருந்த ஏல்டர்மன், ஒவ்வொரு ஷையரின் ஆட்சி அலுவல்களிலும் தனிக் கவனம் செலுத்த முடியாதவராயிருந்தார் ; துணை அதிகாரி ஒருவர் தேவைப்பட்டார். மன்னரின் ரீவான[53] ஜெரீஃபா என்பார் இத் துணையதிகாரியாயிருப்பதற்குத் தக்கவராயிருந்தார். எட்கார் மன்னர் காலத்திலிருந்து மன்னரின் ரீவாயிருந்தவர் ஷையரின் ரீவ் ஆனார். அவர் ஷெரீஃப் எனப்பட்டார். நார்மானியரின் வெற்றிக்குப்பின் ஷெரீஃப் துணைக்கோமிஸ் என அழைக்கப்பட்டார்; மன்னருடைய அல்லது மத்திய அரசாங்கத்தின் சிறப்புப் பிரதிநிதியாக இருந்தார். எனவே, இப்பதவியாளர் மன்னரால் நியமனஞ் செய்யப்படுவது வழக்கமாயிற்று. ஏல்டர்மன் இல்லாத சமயத்தில் ஷையர் மன்றத்தில் தலைமை வகித்தார்; பாதுகாப்பு விதிகளை ஆணை செய்வதற்கும் அமைதியைக் காப்பதற்கும் ஷெரீஃபு பொறுப்புள்ளவராயிருந்தார். இறை வசூலிப்பதில் இவர் மன்னரின் ஏஜண்டாகவிருந்தார். சட்டங்களை நிறைவேற்றுகிறவராகவும், மன்னருக்குச் சொந்தமான நிலங்களை மேற்பார்வையிடுகிற ஸ்டூவர்டாகவுமிருந்தார். நாளடைவில் சிவில் ஆட்சி முழுவதும் ஷெரீஃபிடம் வந்தது.

ஏர்லிடம் ஷையரிலுள்ள படைகளின் தலைமைப் பதவி சென்றது.[54] ஏல்டர்மனின் பதவியைப்போன்று ஷெரீஃப் பதவி ஒருபொழுதும் வாரிசு முறையில் அமையவில்லை. இந்தச் சூழ்நிலை, அரசியல் சட்டஞ் சார்ந்த முக்கியமான விளைவுகள் நார்மானிய வெற்றிக்குப்பின் ஏற்படுவதற்கு வழி செய்தது. இதனால் ஒவ்வொரு ஷையரிலும் மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தை ஆணை செய்வதற்கும், தல மானியதாரர்களின் அதிகார வளர்ச்சியைத் தடை செய்வதற்கும் மன்னர்கள் ஷெரீஃபுகளைப் பயன்படுத்திக்கொள்வது எளிதாயிருந்தது.

## மக்களில் பல்வேறு பிரிவுகள்

அடிமைகள் : மக்களுக்கு நிலம் பங்கீடு செய்யப்பட்ட முறையை விடுத்து மக்களின் அமைப்பை நோக்கினால், சமூக அடிப்படையில், அடிமைகள் (தியோவாஸ், எஸ்னஸ்) எனப் பட்டனர். அடிமை எனும் பெயரில் 25,000 பேர்கள் டூம்ஸ்டே புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ளனர். பதிவு செய்யப்பட் டுள்ள மக்கள்தொகையில் இவர்கள் பதினொன்றில் ஒருபகுதியா யிருந்தனர். அடிமைகள் இருவிதமாயிருந்தனர்: (1) பரம்பரை யாக வந்த அடிமைகள். இவர்களில், தோல்வியுற்ற பழைய பிரிட்டன்களின் வழித்தோன்றல்களும், முதன் முதலில் குடி யேறியவர்களின் அடிமைகளின் வழித்தோன்றல்கள் அல்லது சுதந்திரத்தை இழந்தவர்களின் வழித்தோன்றல்களும், ஜெர் மானிய இனத்தைச் சேர்ந்தவர்களும் இதில் அடங்கியிருந் தனர். (2) குற்ற தண்டனை பெற்ற அடிமைகள் (ஒயிட் தியோ வாஸ்), குற்றம் புரிந்ததற்காகச் சுதந்திரமானவர்கள் சுதந் திரத்தை இழந்து அடிமையானவர்கள் அல்லது வர்கில்டு செலுத்தத் தவறியவர்கள் அல்லது அடிமைகளாக விற்றுக் கொண்டவர்கள் இதில் அடங்கினர். தகப்பனுக்கு ஏழு வயது நிரம்பிய குழந்தையை அடிமையாக விற்கவும், பதின்மூன்று வயது நிரம்பிய ஒரு குழந்தை தன்னைத் தானே அடிமையாக விற்றுக்கொள்ளுவதற்கும் உரிமையிருந்தது.

டாஸிடஸ் குறிப்பிட்டுள்ள ஜெர்மானியர்களில், உயர்குடி, சாதாரண மக்கள் என இரு வேற்றுமையைக் காண்கிறோம். எனவே, ஆங்கிலேயர்களிலும் சுதந்திரமானவர்களில் இரு பெரும் பிரிவுகளைக் காண்கிறோம் ; ஒருவர் இயோல்ஸ், மற்றவர் சியோர்ல்ஸ் எனப்படுவர். இக் காலத்து முறைப்படி கனவான் அல்லது சாமானியன் என்றோ, சீமான் அல்லது பணிபுரிகிற வன் என்றோ ஒரு சொல்லால் அவர்களைக் குறிப்பிடலாம்.

**இயோர்ல்கள், கெஸித்துகள், தீன்கள்:** இயோர்ல் எனும் தகுதி உயர்குடிப் பிறப்பின் அடிப்படையில் எழுந்தது. ஆனால், இங்கிலாந்தில், மற்ற ஜெர்மானிய இனத்தவர்களின் நாடுகளைப் போன்று, ஒரு புதிய மேலினத்தார் தோன்றலாயினர். இம் மேலினம் பணிசெய்யும் முறையில் காணப்பட்டது. இதில் ஒரு பகுதியினர், டாஸிடஸால் கூறப்பட்டுள்ள கொமிடேடஸ் எனும் துணைவர்களின் வளர்ச்சியின் காரணமாக ஏற்பட்டனர். கொமிடேடஸ்கள் எனும் சொல் மன்னரை அல்லது வேறு தலைவரைச் சூழ்ந்திருந்த கூட்டத்தினரைக் குறிப்பதாகும். இக் கூட்டத்தினர் கெஸித்துகள் (நண்பர்கள்) எனப்படுவர். இவர்களுக்கு மிகுதியான நிலங்கள் மானியமாகக் கொடுக்கப்பட்டிருந்தன. இதில் ஒரு பகுதியை அவர்களைச் சார்ந்திருந்தவர்களின் பராமரிப்பிற்காகப் பயன்படுத்தினர்.[55] பின்னர், வேறொரு வழியில், பிரபுவிற்கும் அவரைச் சார்ந்தவர்களுக்குமிடையே காணப்பட்ட உறவுகள் ஒரு புதிய தன்மையை நாளடைவில் பெற்றன. இதன் விளைவாக தீன்கள் (பணியாளர்) என்பார் தோன்றலாயினர்.[56] சமூகத்தில் மதிப்பைப் பெறுவதற்கும், பொருளை வெகுமதியாகப் பெறுவதற்குத் துணை புரிந்த மன்னர் அல்லது பெரிய பிரபுவிற்குச் சேவை புரிவதற்கும் சுதந்திரமான மக்கள் விரும்பினர். மன்னருடைய உண்டிப் பணியாளர்கள் (டிஷ்தீன்), தோட்டப் பணியாளர்கள் (பவர்தீன்), குதிரைப் பணியாளர்கள்[57] என்போர் மிக்க உயர்பதவியினராயும் செல்வாக்குடையோராயுமிருந்தனர். இக்கூறுகள் பழைய நிறுவனங்களில் காணப்பட்டவை. இக்காலத்திலும் மன்னரின் குடும்பப் பாதுகாப்பாளர் எனும் சேம்பர்லின் பிரபு (பவர்தீன்), குதிரைகளின் தலைவர் எனும் பதவிகளில் காணப்படுகின்றனர். பிரமுகர்களுக்கு, மன்னருக்குப் பணிபுரிவது அல்லது பெரிய பிரபுவிற்குப் பணிபுரிவது என்பதுதான் வாழ்க்கையின்வழியாக அமைந்தது. அடிமையின் (தீன்)கௌரமும்,நிலச்சொத்து வைத்துக்கொண்டிருப்பதுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தது. எனவே, ஓரளவு நிலச் சொத்து வைத்துக்கொண்டிருந்தது உயர்குடியாகக் கருதப்படுவதற்கு அடிப்படையாயிருந்தது.[58] ஐந்து ஹைட் பரப்புள்ள நிலங்களைப் பெற்றவனும், மன்னரின் அரண்மனையில் சிறப்புப் பணிசெய்கிறவனுக்குச் சேர்க்கப்பட்டிருந்த சாதாரண மனிதனும் தீன்களின் பதவியைப் பெறலானான்.[59] ஆல்டர்மன் தகுதி பெறுவதற்குக் குறைந்தது நாற்பது ஹைட் பரப்புள்ள நிலம் சொந்தமாயிருக்கவேண்டும். சமுதாயத்தில் கௌரமும், பெருமளவில் நிலங்களைக்கொண்ட எஸ்டேட்டுகளின் சொந்தக்காரர்களும் நெருங்கிய தொடர்புகொண்டிருந்தனர் என்பது

இக் காலத்தும் ஒருசில சிறிய மாற்றங்களுடன் தொடர்ந்து காணப்படுகின்றன. இவை இங்கிலாந்தின் டியூடானிய மூதாதையரின் மிகப்பழைய நிறுவனங்களிலிருந்து தோன்றியவையாகும். இம்மாதிரி உயர்பணிபுரிவதிலமைந்த உயர்குடிப் பிரிவில் மன்னருடைய தீன்கள் அடங்கினர்: கீழ்ப்பிரிவில் ஏல்டர்மன் அல்லது மேற்றிராணியாரின் தீன்கள் அடங்கியிருந்தனர்.[60]

ஸியோர்ல்கள்: தீன்களுக்குக்கீழ்ச் சுதந்திரமான குடியானவர்களிருந்தனர். •டூம்ஸ்டே கணக்கெடுப்பில் ஸியோர்ல்கள் எனப்படும் இவர்கள் சுதந்திர மனிதர்களாயும் சாக்மன், வில்லன், பார்டரி, காட், காடரிசெட்டீடி எனும் பெயர்களுடன் காணப்பெற்றனர். இப் பெயர்கள் ஊழியம் அல்லது சொத்துரிமையின் சிறப்புத் தன்மையைக் குறிப்பிடுவனவாயுள்ளன. தீன்களின் வளர்ச்சியால் ஸியோர்ல்களின் நிலைமை பொதுவாகத் தாழ்வுற்றிருந்தது. ஐந்து ஹைட் பரப்புள்ள நிலத்தைச் சம்பாதித்து முன்னுக்கு வர முடியாத தீன்கள், பிறரைச் சார்ந்து வாழ்கிறவர்களாயிருக்க நேர்ந்தது. இவ்வாறு நிலம்படைத்த செல்வந்தர்களின்வளர்ச்சியால் சமுதாய அமைப்பில் பெரும் மாறுதல்கள் தோன்றலாயின. மன்னரிடமிருந்து பெரிய எஸ்டேட்டுகளையோ அல்லது நாட்டின் நிலத்தில் ஒரு பகுதியில் அரசனுடைய உரிமைகளையோ பெற்றிருந்த திருச்சபைகளும் தீன்களும் மானியப் பிரபுவின் அதிகாரத்தைப் பெற்றதோடு, மானியப் பிரபுக்களின் அதிகார எல்லைகளையும் கைக்கொண்டனர். சுதந்திரமான ஸியோர்ல் தனக்கும் தன்னுடைய நிலத்திற்கும் பாதுகாப்பை விரும்பியவராய், பக்கத்திலிருந்த வலிமைமிக்க ஒருவரிடம் தன்னை ஒப்படைத்துக்கொண்டார்; தன்னை ஒரு பிரபுவிடம் (ஹ்லாஃபோர்டு) அர்ப்பணித்துக்கொண்டார்; பாதுகாப்பை முன்னிட்டுத் தன்னுடைய சுதந்திரத்தை இழந்தார். தொடக்கத்தில் தன்னிச்சைப்படி இம்மாதிரியாக ஒருசிலர் அர்ப்பணித்துக்கொள்ளுதல் விரைவிலேயே எல்லோருக்கும் கட்டாயமாக ஏற்படுவதாயிற்று. விரைவிலேயே, ஒவ்வொரு சுதந்திரமானவரும் பிரபுவாய் (ஹ்லாஃபோர்டு) இல்லாதிருந்தவர் உயர்பதவியிலிருந்த மற்றொருவரை அண்டியவராய் இருக்கவேண்டுமென்பதும், அவருக்குக் கீழ்ப்படிந்துள்ளவராயிருக்கக் கடமைப்பட்டவரென்பதும், அண்டப்பட்டவர் சட்டப்படி அண்டியவருக்குப் பாதுகாப்பாளராயும் அவருடைய நன்னடைத்தைக்கு உத்தரவாதியாயும் இருப்பது என்பதும் ஒரு விதியாகக் கருதப்படலாயிற்று. அண்டியிருக்க விரும்புகிறவருக்கு எந்தப் பிரபுவை அண்டுவது என்பதுபற்றி

முடிவு செய்யச் சுதந்திரமிருந்தது. அப்படிச் செய்ய அவர் தவறியபொழுது, அவருடைய உறவினர்கள் மக்கள் கூட்டத்தில் அவரை அழைத்துச் சென்று அவருக்கு ஒரு பிரபுவைப் பாதுகாப்பாளராகக் குறிப்பிடவேண்டியது கடமையாக்கப் பட்டது.[61] சில சமயங்களில், சியோர்ல் அவரது விருப்பப்படி அவரது பாதுகாப்பாளரான பிரபுவை மாற்றிக்கொள்ளலாம், 'நிலத்துடன் அவர் விரும்பியபடி யாரிடமும் செல்லலாம்' என்றிருந்தது. எனினும், அவ்வாறு செய்வது வழக்கமாக ஏற்படவில்லை—அவர், அவருடைய போஷகருடன் அண்டியிருக்க வேண்டியவராயிருந்தார். 'போஷகராயிருக்கும் தன்மை வேரூன்றவும், சாதாரண மனிதர், அவருடைய நிலம் முதலியவைமீது போஷகருடைய நிலையான ஆதிக்கம் வளருவதும் நோக்கமாயிற்று.'[62]

**குருமார்கள்:** கல்வியையும் மரியாதையையும் ஏகபோக உரிமையாகக் கொண்டிருந்ததன் விளைவாக குருமார்கள் சமுதாயத்திலும் அரசியலிலும் மிக்குயர் பதவியை வகித்தனர். அவர்கள் குருமார்கள் என்பதால், அவர்களிடம் காண்பிக்கப் பட்ட மரியாதை சாமானிய மக்களை மூடநம்பிக்கையுடன் கூடியவர்களாயிருக்கச் செய்தது.[63] குருமார்களில் மிகவும் ஏழையாயிருந்தவர் தீன்களில் சிறந்தவருக்குச் சமமான தகுதி பெற்றவராயிருந்தார். மேற்றிராணியார், ஏல்டர்மனுக்குச் சரிநிகராயிருந்தார்; அவருடன்கூட ஷையர் மன்றத்தில் தலைமை தாங்கினர். அதிமேற்றிராணியார், சட்டப்படி, மன்னர் குடும்பத்தைச் சேர்ந்தவர் அல்லது ஆத்லிங் எனப் படுவதற்குக் குறைந்த தகுதி உடையவரல்லர் என்றிருந்தது. சாமானியர்கள் எல்லோரும் மிக்குயர்வானவராயிருந்த போதிலும், குற்றமற்ற தன்மையை ருசுப்படுத்துவதற்குத் தன்னுடைய உறுதிமொழியுடன்கூட வேறு பல சாட்சிகளின் உறுதிமொழியையும் பெறவேண்டிய கடமையையுடையவர்களாயிருந்தனர். ஆனால், குருமாரின் சாதாரண உறுதிமொழி அவர் குற்றமற்றவர் என ருசுப்படுத்தப் போதுமானதாகக் கருதப்பட்டது. ஒவ்வொரு பேரவையிலும் அதிமேற்றிராணியார் போன்ற சமயத் தலைவர்கள் சிறப்பான பங்கெடுத்துக்கொண்டனர். அரசாங்கமும் திருச்சபையும் மிக நெருக்கமாக இணைந்து பணியாற்றின; எனினும், திருச்சபையைச் சேர்ந்த விஷயங்களை முடிவு செய்ய முதலிலிருந்தே குருமார்கள் அவர்களுடைய திருக்கூட்டங்களைக் கூட்டினர்.

**மன்னர்:** நாட்டின் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரும் பிரதிநிதியாகவுமிருந்தவர் ஸைநிங் அல்லது மன்னர் எனப்படுவார்.

மன்னரின் அதிகாரம், சொல்முறையைவிடச் செயல் முறையில், விடான் அல்லது தேசிய மன்றத்தால் வரையறுக் கப்பட்டிருந்தது ; எனினும், நாட்டின் பரப்பு விரிவடைந்த பொழுதும், தீன்களின் பதவி வளர்ச்சியுற்றபொழுதும், மன்னரின் கௌரவமும் அதிகாரமும் நாளடைவில் கொஞ்சங் கொஞ்சமாக அதிகரிக்கலாயின. மன்னர், பெரும் பிரபுவாகத் தன்னை ஆக்கிக்கொண்டதுடன், மக்களின் தலைவராயும் பிரதிநிதியாயும் ஆனார். அதெல்ஸ்டன் மன்னரின் காலம்முதல் மன்னர்கள் பேரரசுக்குரிய பட்டப் பெயர்களைச் சூடிக்கொண் டனர். மன்னரின் அப் பட்டப்பெயர்கள், பரந்து காணப்பட்ட ஐரோப்பிய நாட்டுத் தொடர்புகளைக் கொண்டிருந்ததால், அவரை உலகறியச்செய்தது என்பதில் ஐயமில்லை.[64] இப் பட்டப் பெயர்கள் கௌரவமான ஒலிகளை எழுப்பியதைத் தவிர வேறொன்றுமில்லை ; எனினும், ஆங்கிலேயர்மீது மன்னர் பெற்றிருந்த பேராதிக்கத்தை அறிவிப்புச் செய்ததோடு, அத் தீவில் வாழ்ந்த மக்களின்மீது மன்னரின் அதிகாரத்தையும் வலியுறுத்தியது. அதனுடன் அந்நியப் பேரதிகாரியினின்று சுதந்திரமாயிருந்ததையும் அறிவித்தது; பேரரசுதன்மையில், மிக்குயர் பிரபு என்ற முறையில், மன்னர் தம்மை, இலத்தீன் மொழியில் மன்னர் (ரெக்ஸ்), பேரரசர் (இம்பரேட்டர்), சீசர், பேஸிலியஸ், பிரிட்டானியாவின் முழுமைக்கும் அல்லது அல்பியோ முழுமைக்கும் தலைவர் எனக் கூறிக்கொண்டார். எனினும், அரசர் எனும் நிலையில் ஆங்கில நாட்டின் தலைவர் என்றில்லாது ஆங்கில் இனத்தவரின் மன்னராகவே கருதப் பட்டார்.[65] மன்னரின் சிறப்புரிமைகளும் பாதுகாப்பு உரிமை களும் மிகவும் விரிவானவையாயிருந்தன. மற்றவர்களைப் போலவே முதலில் அவருக்கு வெர்கில்ட் இருந்தது; அதாவது, அவரது உயிர் மதிப்பிடப்பட்டிருந்தது. ஆல்ஃபிரட், மன்னரின் உயிரைக் கவரச் சதிசெய்த குற்றத்திற்குத் தண்டனையாக 'உயிருக்கு உயிர் வாங்குவதை' விதித்தார். மன்னர், தனக்கும் மன்னரது சுற்றுலாவின்போது அவரைச் சார்ந்த பரிவாரக் கூட்டத்தினரின் பராமரிப்பிற்கும் தொகை பெறு வதற்கு உரிமை பெற்றிருந்தார். கடலில் சிதறுண்டு கடற்கரை யோரமாகக் கொண்டுசேர்க்கப்பட்டவை, சுங்கங்கள், சந்தை கள்,சுரங்கங்கள், உப்பளங்கள் முதலியவைகளிலிருந்து கிடைக் கும் இலாபம், நாடுகடத்தப்பட்டவர்களிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட சொத்து முதலியவைகளிலும் மன்னருக்குப் பங்குண்டு.[66] தவிர, வைட் எனும் தண்டத்தொகையையும் மன்னருக்குச் செலுத்தப்படவேண்டியதாகும். இத் தண்டத் தொகை, சட்டத்தை மீறுவது, தீங்கிழைக்கப்பட்டவருக்குச்

செலுத்தவேண்டிய ஈட்டுத் தொகையுடன் (பாட்) சேர்த்துச் செலுத்தவேண்டியதையும் குறித்தது. மன்னரின் சமாதானத்தைக் (ஃபிரித்) குலைப்பது தனிப்பட்டவருக்கு மன்னரால் அளிக்கப்பட்ட சிறப்புப் பாதுகாப்பை[67] மீறுவது போன்ற குற்றங்கள் கடுந்தண்டனைக்குள்ளாயின. மன்னருக்குத்தான் மேலான பதவியிலிருந்தவர்கள்மீது அதிகார எல்லை (ஸோகன்) மிகுதியாயிருந்தது. கடைசியாக நீதி வழங்கும் கடமையும் அவரிடமிருந்தது. இறுதியில் தேசியப் படையின் (ஃபியர்ட்) தளபதியாயும் மன்னர் இருந்தார்.

**அரசியார்:** மன்னரின் துணைவியான அரசி, ஜெர்மானியர்கள் பெண்களுக்கு அளித்த உயர்மரியாதைக்கு ஒப்ப, சமுதாயத்தில் மிக்குயர் பதவியைப் பெற்றிருந்தாள். அரசியாருக்கு 'மனைவி', 'இராணி', 'சீமாட்டி' என வேறு பெயர்களும் இருந்தன. நெடுநாள்களுக்குப் பின் கொடிய அரசு குற்றச் சட்டம் (1352) ஏற்பட்டபொழுது அரசியார், மன்னரின் 'துணைவி'யாகக் கூறப்பட்டுள்ளார். மன்னர் பியோர்ட்ரிக் (802-ல்) என்பாரை நஞ்சிட்டுக் கொன்ற குற்றத்திற்காக எட்பர்கா எனும் அரசிக்கு மேற்கு சாக்ஸானிய மக்கள் நெடுநாள் வரை அரசியெனும் பெயர், அதிகாரம் முதலியவற்றை அளிக்காமலிருந்தனர். 856-ல் எதல் உல்ஃப் மன்னர் தன்னுடைய இரண்டாம் மனைவியாரான ஜூடித் என்பவருக்கு முடிசூட்டச் செய்ததன் வாயிலாக மக்களுக்கு அவமரியாதை இழைத்தார். ஆனால், 965-ல் எட்கார் மன்னர் எல்ஃப்திரைதா என்பாரை இரண்டாவதாகத் திருமணம் செய்துகொண்டது முதல் அரசியாரின் கௌரவம் மீண்டும் ஏற்படலாயிற்று. இரண்டாம் எதல்ரெட்டின் அரசியான (அவர் மரணத்திற்குப்பின் கான்யூட் மன்னரின் அரசியாயிருந்தவர்) எம்மா, எக்ஸிடர் எனும் நகரை அவரது சிறப்புச் சொத்தாக வைத்துக்கொண்டிருந்ததோடு, அவரது அதிகாரிகளைக்கொண்டு அதை ஆட்சி நடத்தியதாயும் தெரிகிறது. மெர்ஸியா, கிழக்கு ஆங்கிலியாவிலும் மன்னரின் துணைவியான அரசியாருக்குத் தனிப்பட்ட முறையில் பத்திலொரு பங்கு வரியைப் பெறுவதற்கு உரிமையைப் பெற்றிருந்தார். இதற்கு இராணிக்காகத் தங்கம் (ஆரம் ரெஜினு) எனப் பெயர். மன்னருக்குச் செலுத்தப்பட்டதும் பத்து மார்க்குகளுக்கு மிஞ்சியதுமான தண்டத்தொகை அல்லது காணிக்கையில் பத்திலொரு பங்காக இது வசூலிக்கப்பட்டது. இவ்வாறு வசூலிக்கும் பழைய வரி முதலாம் சார்லஸின் அரசியாரான ஹென்றியாட்டா மேரியா நாள்களிலும் வசூலிக்கப்பட்டது.[68]

**அத்லிங்குகள் :** மன்னரின் உடன்பிறந்தாரும் மகாரும் அத்லிங் எனும் பட்டப் பெயரால் சிறப்பித்துக் கூறப் பட்டனர். அத்லிங் எனும் சொல், ஏர்ல் எனும் சொல்லைப் போன்று தொடக்கத்தில் உயர்குடிப் பிறப்பை மாத்திரம் சுட் டியது. ஆனால், வெஸ்ஸக்ஸைச் சேர்ந்த அரச குடும்பம் புக ழுற்றபொழுது, மற்ற அரச குடும்பங்களும் பிரபுக்களும் ஒப் பிடுவதில் குறைந்த தகுதியையடைந்தனர். அத்லிங் எனும் சொல்,நாட்டின் மன்னருடைய நெருங்கிய உறவினரைக்குறிப்ப தாயிற்று. அரச குடும்பத்தைச் சார்ந்த தூர உறவினர் சாதாரணப் பிரபுக்களாகக் கருதப்படுபவராயினர். சிறப்பான வேறு எவ்விதப்பட்டப் பெயர்களும் அவர்களுக்கு அளிக்கப்பட வில்லை. இக் காலத்திலும், ஆங்கிலேயப் பிரபுவின் வழித்தோன் றல், மூதாதையரின் பட்டத்திற்கு நேர்வாரிசாக இல்லாமற் போனால், மூன்றாவது தலைமுறையில், பிரபுவின் குடும்பத்தைச் சேர்ந்தவன் என்பதற்கு அடையாளமாக எவ்விதப் பட்டப் பெயரையும் கொள்ளுவதில்லை எனும் கொள்கையின் அடிப் படையிலேயே தூர உறவினர்களுக்குப் பட்டப் பெயர் வழங் கப்படாதிருந்தது.

## விடான் சபை

(டியூடானியரின் தேசிய மன்றத்தின் அலுவல்களைச் செய் ததும், டாஸிடஸால் விடானஜிமுட் என வருணிக்கப் பட்டதும், நாட்டின் மிக்குயர் ஆலோசனை மன்றமுமாயிருந்த விடானஜிமூட் அறிஞர்களின் கூட்டத்தைக் குறிப்பிடுவ தாகும்)[69] இப் பேரவையின் அரசியலமைப்பைப்பற்றிக் கருத்து மாற்றங்கள் உள. தல மன்றங்களுக்கு ஒவ்வொரு சுதந்திர மானவரும் வருவதற்கு உரிமையிருந்ததெனக் கருதப்பட்டது. எனவே, சுதந்திரமாயிருந்த எவரும், ஏர்லாகவோ அல்லது சியோர்லாகவோ இருந்தாலும், ஷையர் மக்கள் அவையிலும் பிற்காலத்தில் ஷையர் மன்றம், கௌன்டி மன்றத்திலும் பேசு வதற்கு உரிமையுண்டு எனவும் கொள்ளப்பட்டது. இவ் விடத்தில் மாறுபாடு தெளிவாக வெளிப்படுகிறது. ஒரு காலத் தில், சுதந்திரமான எவருக்கும் தேசிய மன்றத்திற்குப் போவ தென்ற உரிமையுண்டு எனவும் (வெகு காலத்திற்கு முன்ன தாகவே இவ்வுரிமை வழக்கொழிந்துபோயிற்று),முற்காலத்திய கருத்துப்படி சொல்லளவில் விடானஜிமூட் ஜனநாயக முறை யில் அமைந்திருந்ததெனவும், ஆனால் சாதாரணமாக நடை முறையில் பிரபுக்களைக் கொண்டிருந்ததெனவும் கருதப்பட் டிருந்தது. கெம்பிள் என்பாரின் மேலான அத்தாட்சி ஓரளவு இக் கருத்திற்கு ஆதரவளிப்பதாயுமிருந்தது.[70]

**விடான் சபையின் தன்மை:** வரலாற்றுக் காலத்தில் மத்திய மன்றம், நாட்டு மக்களுடைய மக்கள் அவையைப் போன்று கீழ்மன்றங்களின் மாதிரியைப்போல் அமைந்திருக்க வில்லையென இப்பொழுது பொதுவாகக் கருதப்படுகிறது. சாதாரணமாக, சுதந்திரமாயிருந்தவர்கள், தங்களுடைய ஷையர் மன்றங்களோடு நின்றுவிட்டனர். விடானஜிமூட், செல்வந்தர்களைக்கொண்ட பேரவையாயிருந்தது. அதன் உறுப்பினர்களாக மன்னர், ஏல்டர்மன்கள், அல்லது ஷையர்களின் கவர்னர்கள், மன்னருடைய தீன்கள், மேற்றிராணியார்கள், மடாலயத் தலைவர்கள் முதலியவர்களுடன் நாட்டின் தலைவர் களும் (பிரின்ஸிபிஸ்) அறிஞர்களும் (ஸ்பியன்டிஸ்) இருந் தனர். ஸபியன்டிஸ் = விடான் = அறிஞர்கள் என அவைக்கு வந்தவர்கள் பொதுவாக அழைக்கப்பட்டனர். சாதாரண தீன்கள், கூட்டத்திற்குச் செல்ல உரிமை பெற்றிருந்தாலுங் கூட, அதிகமாகச் செல்லவில்லை. எனவே, கூட்டம் ஒருபொழு தும் பெரிதாக இருந்திருக்க முடியாது. 'நான் நோக்கிய வரை அதிகப்பட்சமாக 106 உறுப்பினர்களின் கையெழுத்து கள் உள்ளன; எனினும், முடியாட்சி உறுதிபெற்ற பின் தொண்ணூறிலிருந்து நூறுவரை உறுப்பினர்கள் கூட் டத்திற்கு வருவது சாதாரண வழக்கமாயிருந்தது' எனக் கெம்பிள் கூறுகிறார். இன்னும் முந்திய காலத்தில், சிற்றரசு கள் இருந்த காலத்தில், உறுப்பினர்களின் எண்ணிக்கைசற்றுக் குறைவாக இருந்திருக்க வேண்டும்...மற்றக் கூட்டங்கள், மன் னரின் ஆணையின்றிக் கன்வென்ஷன் எனக் கூடிய கூட்டங்கள் படைகளுக்குமுன்னால் கூடின. இக் கூட்டங்கள் எண்ணிக்கை யில் மிகுதியாயிருந்ததோடு கலவரம் நிறைந்ததாயுமிருந் தன; ஃபிராங்கியர்களிடையே மெர்விஞ்சியன் மரபின் ஆட் சிக்கு முடிவுகட்டிய புகழ்வாய்ந்த அந் நாளில் குழுமியிருந்த படைக்கலந் தாங்கிய பழமையான மக்கள் அவையை ஒத்திருந்தன. இரும்பு போன்ற உறுதிவாய்ந்தவர் எனப்படும் எட்மண்டு அயர்னஸைட், மன்னரின் மரணத்திற்குப்பின் கான்யூட்டை நாட்டின் ஒரே மன்னராகத் தேர்ந்தெடுத்ததோ அல்லது ஏர்லாயிருந்த காட்வினையும் அவரது குடும்பத் தாரையும் நாடுகடத்துவதற்குக் கூடிய அவைகளோ அம் மாதிரியாக இருந்திருக்க வேண்டும்.'[71] இக் காலத்திய கருத் துப்படி, விடானஜிமூட் மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட அவை என்றில்லாவிட்டாலும், ஏதோ ஒரு விதத்தில் நாட்டு மக்களின் பிரதிநிதியாக அத்தப் பேரவை கருதப்பட்ட தென்பதில் ஐயமில்லை; எனவே, நாட்டின் கருத்தை எடுத்துக் கூறுவதாயும் அது கருதப்பட்டது.[72] எனினும், விடானும்

மற்ற நிறுவனங்களும் சிறப்பான அரசியல் சட்டவமைப்பைக் கொண்டிருந்தன எனும் கருத்துத் தவிர்க்கப்பட வேண்டியதாகும். அதனுடன், கூட்டத்திற்கு வரும் உரிமையைக் கொண்ட உறுப்பினர்கள் விவாதித்து வாக்களிப்பதுபோன்றவையுமிருந்தன எனும் கருத்தும் தவிர்க்கப்பட வேண்டியதாகும். எப்படியாயினும், ஒரு கம்பெனியின் கூட்டத்திற்கு வரும் பங்குதாரர்களின் கூட்டத்தைப் போன்று விடான் சபை இருக்கவில்லை.

எனினும்,நன்கு வரையறுக்கப்படாதிருந்தும், விடான் மன்றத்தின் அதிகாரம் மிகவும் விரிவுள்ளதாயிருந்தது.

**(1) மன்னரைப் பதவியிலிருந்து நீக்குதல்:** விடான் சபை, நன்முறையில் ஆட்சி செய்யாததற்கு மன்னரைப் பதவிநீக்கம் செய்தது எனக் காண்கிறோம். அம்மாதிரியான கடுமையான நடவடிக்கை எப்பொழுதாகிலும்தான் எடுத்துக் கொள்ள முடியும். நார்த்தம்பிரியாவில், மன்னர்களின் பதவி நீக்கங்கள், வல்லந்தச் செயல்களுடன் இரத்தக் களரியுடன் அடிக்கடி ஏற்பட்டது சிறப்பாயிருந்தது; ஆனால், எதல்வால்டு (ஒரு சமயம்) 765லும் அல்க்ரெட் (உறுதியாக) 774லும் விடானஜிமூட் மன்றத்தால் முறைப்படி பதவிநீக்கம் செய்யப்பட்டனர் எனக் கூறலாம்.[73] மேற்கு சாக்ஸானிய அரசமரபின் வழியில் விடான் சபையால் அரசபதவி நீக்கம் செய்யப்பட்டவர்கள் இருவராவர். இம் மரபினர் இங்கிலாந்தை ஆட்சி செய்யும் மன்னர் மரபினராகப் பின்னர் அமைந்தனர். 755-ல் வெஸ்ஸக்ஸ் மன்னரான சிக்பெர்ட் விடானால் பதவிநீக்கம் செய்யப்பட்டு அவரது உறவினரான சினி உல்ஃப் அவருக்குப் பதிலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.[74] 1013-ல் இரண்டாம் எதல்ரெட் அதேபோன்று பதவிநீக்கம் செய்யப்பட்டார்; பின்னர் 1014-ல் மீண்டும் பதவியிலமர்த்தப்பட்டார்.[75] நார்மானிய வெற்றிக்குப்பின் பதவிநீக்கம் செய்யும் அதிகாரம் தேசியப் பாராளுமன்றத்தால் மும்முறை பயன்படுத்தப்பட்டது. 1327-ல் இரண்டாம் எட்வர்ட், 1399-ல் இரண்டாம் ரிச்சர்ட், 1688-ல் இரண்டாம் ஜேம்ஸ் ஆகியோரே தேசியப் பாராளுமன்றத்தால் பதவிநீக்கம் செய்யப் பெற்றோர்.

**(2) மன்னர் தேர்தல்:** மன்னரை விடானஜி மன்றம் தேர்ந்தெடுத்தது. மூற்காலத்தில் டியூடானியா சிற்றரசர்கள் எல்லோரும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்; எனினும், ஒவ்வோர் இராச்சியத்திலும் ஓர் அரச குடும்பம் இருந்தது. அக் குடும்

பத்திலிருந்து மன்னருடைய அலுவல்களைத் திறமையாகச் செய்யக்கூடியவரை விடான் தேர்ந்தெடுக்கவேண்டியிருந்தது. கடைசியாக ஆட்சிபுரிந்த மன்னரின் மூத்தமகன், வயதுவந்தவராயும், வெளிப்படையாகத் திறமையற்றவராகக் காணப்படாதவராயுமிருந்தால், அவரையே தகப்பனுக்குப்பின் மன்னராகத் தேர்ந்தெடுப்பது வழக்கமாயிருந்தது. எனினும், மன்னருடைய நடத்தையும் இராணுவ வலிமையும் மிகவும் முக்கியமாகக் கருதப்பட்ட சமயத்தில், இள வயதினரை மன்னராகக் கொள்ளுவது இடர் நிறைந்ததாகும். எனவே, 871-ல் முதலாம் எதல்ரெட் இறந்தபொழுது, அவருடைய வாரிசுகள் குழந்தைகளாயிருந்ததால், அவருடைய தம்பியான ஆல்பிரெட் மன்னரானார். மற்றொரு சமயம் அதெல்ஸ்டன் மன்னர், நேர்வாரிசு முறையில் உரிமையில்லாதவர் என உலகமறிந்திருந்தும், 925-ல் மூத்த எட்வர்டின் நேர்வாரிசு உரிமை பெற்ற மகார் இளையவராயிருந்ததால் அவரே தேர்ந்தெடுக்கப்பட்டார்.[76] 946-ல் எட்மண்டின் மகனை எட்வி, அவரது சிற்றப்பனை எட்ரெட் என்பாருக்குச் சாதகமாகக் கவனிக்கப்படாமல் கைவிடப்பட்டார். 1042-ல் பக்தசீலரான எட்வர்ட், அவரது சகோதரரான எட்மண்டு அயர்ன்ஸைட்டின் மகன் நாட்டிலில்லாதபொழுது, மன்னராக விடான் சபையால் விரும்பித் தேர்ந்தெடுக்கப்பட்டார். இறுதியாக 1066-ல் அரச குடும்பம் முழுமையாகக் கைவிடப்பட்டும், அக் காலத்தில் சிறந்த அரசியல் நிபுணரும் திறமைமிக்க படைத்தலைவரும் ஏர்ல் பதவியைக் கொண்டவருமாயிருந்த ஹெரால்டு, மன்னராகத்தேர்ந்தெடுக்கப்பட்டார். செர்டிக் இனத்தைச் சேர்ந்தவர்கள் மீண்டும் ஒருமுறை முன்னர் நிகழ்ந்தது போல் கைவிடப்பட்டு, 1017-ல் கான்யூட் மன்னராகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார். அத் தேர்தல், நல்ல அமைப்புடனிருந்தும், அச்சுறுத்தலுடன் நிகழ்ந்தது. தகப்பன் பட்டமெய்திய பின்னர் பிறந்த—செந்நிற ஆடையுடன் பிறந்த மகன் போர்பைரோ ஜெனிடி எனப்படுபவர்—குழந்தைகளுக்கு ஓரளவு சிறப்புச் சலுகை காண்பிக்கப்பட்டது. அதனுடன் இறந்த மன்னரின் பரிவுரைக்கும் சலுகை ஏற்பட்டது. எனவே, எட்கார் தனது மகனை எட்மண்டை, விடான் சபைக்கு, மன்னராக ஏற்குமாறு பரிந்துரைத்தார். பக்தசீலரான எட்வர்ட், ஏர்ல் ஹெரால்டை மன்னராகத்தேர்ந்தெடுக்கப் பரிந்துரைத்தார்[77] சிம்மாதனமேறுவதைக் குறிக்கும் கலைச்சொற்கள் "தேர்ந்தெடுக்கப்பட்டு அரச பதவிக்கு உயர்த்தப்பட்டவர்' எனப் பொருள்படுவதாயிற்று. அதில் 'அஹ்ஃபென்' எனும் சொல் பழைய டியூடானிய வழக்

கத்தைக் குறித்தது. இப்பொழுது, தேர்தல் காலங்களில், வெற்றி பெற்ற வேட்பாளரை நாற்காலியிலமர்த்துவது என்று அழைக்கிறோம். ‘கோஸிரென்’ எனும் சொல், உண்மையில் நடந்த தேர்தலின் ஏற்கெனவே செய்யப்பட்ட முடிவை உறுதிப்படுத்துவதைக் குறித்தது.[78]

(3) **விடானும் அரசாங்கமும்:** அரசாங்கத்தின் நடவடிக்கை களில் விடானஜிமூட் நேரிடையாகப் பங்கு கொள்ளலாம்; மன்னருடன் சேர்ந்துகொண்டு பொதுப்பணிக்காக விடான் சட்டங்களியற்றவும் வரிவிதிக்கவும் கூடும். சமாதான உடன் படிக்கைகள் செய்யவும் நல்லுறவு ஏற்படுத்திக்கொள்ளவும் அதிகாரமிருந்தது; தேவையேற்படுங்கால், தரைப்படையையும் கடற்படையையும் திரட்டலாம்; மன்னரால் பட்டா நிலங்கள் வழங்கப்படுவதை அனுமதித்தது; திருச்சபையிலும் அர சாங்கத்திலும் உயர் அதிகாரிகள், ஷையரைச் சேர்ந்த ஏர்ல்டர் மன்கள், மேற்றிராணியார்கள் முதலியவர்களை நியமிப்பது, பதவி நீக்கம் செய்வது முதலியவைகளையும் செய்தது; குற்றம் புரிந்தவர்களின் நிலங்களையும், வாரிசின்றி இறந்தவர் களுடைய உயில் செய்யப்படாத நிலங்களை மன்னருக்குச் சேர்ப் பது போன்றவைகளையும் விசாரித்தது; சமயஞ்சார்ந்த நிறு வனங்களின் ஆணைகளை நிறைவேற்றும் அதிகாரமளித்தது; கடைசியாக, அடிக்கடி, சிவில், கிரிமினல் வழக்குகளில் நாட்டின் மிக்குயர் நீதிமன்றமாகப் பணிபுரிந்தது.[79]

விடான் சபையின் அதிகாரங்கள் மிக விரிவாயிருந்தும், அவ்வதிகாரங்களைச் செயல்படுத்துவது, மன்னரின் சொந்த நடத்தை, செல்வாக்கு இவைகளைப் பொறுத்து மாறுபட்டிருந் தன. ஆல்ஃபிரட், எதல்ஸ்டன் போன்ற வலிமைமிக்க மன்னர்கள் சொந்தச் செல்வாக்கை நியாயமான முறையில் பயன்படுத்தியதால், விடான் சபையை அவர்கள் விருப்பப் படி எப்படியும் செய்ய முடிந்தது. எனவே, மேலான அதி காரத்தை நடைமுறையில் அனுபவிக்க முடிந்தது. நார்மானி யரது ஆட்சியின் இறுதிக் காலத்தில், முதலில் மன்னராலும் விடான் சபையாலும் பங்கு கொள்ளப்பட்ட அதிகாரங்களில் பெரும்பான்மையானவை மன்னரால் மாத்திரமே செயல் படுவதாக ஆயிற்று. எனினும், சட்டமியற்றுதல், சிறப் பான வரிவிதிப்பு எனும் மூலக்கூறான இரண்டிலும் விடான் சபை பங்கு கொள்ளச்செய்து ஆலோசனை, சம்மதம் முதலியவற்றைப் பெறுவது எக் காலத்தும் ஏற்றுக்கொள்ளப் பட்டது.

## நீதிவிசாரணை முறை

பொதுமக்களின் ஆதரவைக் கொண்டு நிறுவப்பட்ட தல நீதிமன்றங்களில் வழக்கு விசாரணை செய்வது ஆங்கிலேய நீதிவிசாரணை முறையின் சிறப்பான மூலக்கொள்கையாயிருந்தது. பிற்காலத்தில் வழங்கியவாறு, வெகு தொலைவிலிருந்ததும் கேள்விப்படாததுமான விசாரணைக் குழுவால் விசாரணை செய்யப்படுவதற்கு மாருக, கௌண்டியிலுள்ளவர்களின் முன்னிலையில், தலத்திலேயே வழக்கு விசாரணை செய்வது என்பது ஆங்கிலேய நீதிவிசாரணை முறையின் சிறப்பான மூலக்கொள்கையாயிருந்தது. இது சுதந்திரத்திற்கும், நிலையான தன்மைக்கு நம்பிக்கையுள்ள உறுதியளிப்பதற்கும் சிறந்த சான்ருக இருந்தது. பல்வேறு தல நீதிமன்றங்களைப்பற்றிக் கூற முற்படுமுன், சுருக்கமாக உறுதிமொழியின் கொள்கையைப்பற்றி அறிவது தேவையானதாகும். இக் கொள்கைப்படி, ஒவ்வொரு வழக்கிலும், ஒவ்வொருவரும் நேரிடையாக முன்வருவதற்கோ அல்லது அவருக்காக வேருெருவர் அவர் பிரதிநிதியாகப் பதிலளிப்பதற்கோ வர வேண்டுமென வழிசெய்யப்பட்டிருந்தது.

**ஃபிராங்க்பிளட்ஜ்:** குற்றவாளியை நீதிமன்றத்தின் முன் கொண்டுவருவதற்கான கூட்டுப் பொறுப்பு முதலில் மாக்த் அல்லது குற்றவாளியின் உறவினர்கள் இனத்தைச் சார்ந்ததாயிருந்தது.[80] பின்னர் தன்னிச்சையாக அமைந்த கில்டு எனப்படும் சங்கங்களுக்கு அப் பொறுப்பு ஏற்பட்டது; அதன் பின்னர் டைதிங் என அழைக்கப்பட்ட தலப் பொறுப்பினிடம் இப் பொறுப்பு கில்டுகளிடமிருந்து மாறியது. டைதிங்கின் உண்மையான தன்மை தெளிவாக இல்லை. ஆனல், டவுன்ஷிப்புடன் நடைமுறையில் ஒத்ததாயிருந்த ஹண்ட்ரட் எனும் நிலப்பரப்பின் ஒரு பகுதி மக்களின் சொந்தப் பொறுப்பாயிருந்ததெனத் தோன்றுகிறது. முடிவில், ஒரு சமயம் நார்மானியரின் வெற்றியின்பொழுது, தல டைதிங்கிற்குப் பதிலாக ஃப்ரிபோர் அல்லது ஃப்ராங்க்பிளெட்ஜ் எனும் மக்களின் தனிப்பட்ட, கூட்டான பொறுப்பு ஏற்படுத்தப்பட்டது. பன்னிரண்டு வயது நிரம்பியவராயும், ஹ்லாஃபோர்டாயில்லாதவராயுமிருந்தால், ஃப்ரீபோர் எனும் குழுவில் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளத் தகுதிபெற்றவராவார். ஃப்ரீபோர் வடபகுதியில் 'டென்மானிடேல்' என வழங்கப்பட்டது. அதாவது, பத்துப் பேர்கள் ஒன்ருகச் சேர்ந்து, அவர்களில் எவராவது நீதிமன்றத்திற்கு வந்து பதில் கூறவேண்டுமென்று உத்தரவிடப்பட்டால், அவர் ஆஜராவதற்கு நிலையாகவும்

கூட்டாகவும் ஜாமீனாக இருக்க அமைந்த ஒரு சங்கமாயிருந்தது. ஒவ்வொரு சங்கத்திற்கும் ஒரு தலைவர் இருந்தார். இவருக்கு போர்-ஏல்டர் எனப் பெயர்; 'டைதிங்மான்' எனவும் அழைக்கப்பட்டார். இவ்வாறு அழைக்கப்பட்ட பத்துப் பேர்களடங்கிய குழு 'டைதிங்' என அழைக்கப்பட்டது. குற்றஞ்சாட்டப்பட்டவர் நீதிமன்றத்திற்கு வந்தபின் தண்டனை விதிக்கப்பட்டால், அதற்கு அவர் தன்னுடைய சொத்தைக் கொண்டு நஷ்டஈடு செய்யவேண்டும் அல்லது தானாகவே தண்டனையை அனுபவிக்க வேண்டும்; ஆனால், நீதி வழங்கப்படுமுன் ஓடித் தப்பிவிட்டால், டைதிங்கைச் சேர்ந்த மற்ற உறுப்பினர்கள், ஓடிப்போனவருடைய குற்றம் அல்லது தப்பியதற்கான குற்றத்திலிருந்து தங்களைக் குற்றவாளிகளல்லவென்று விலக்கிக்கொள்ளத் தவறினால், விதிக்கப்பட்ட தண்டனைக்காகப் பொருள் செலுத்தும் பொறுப்புடையவர்களாவார்கள்.

**பிரபுவும் மனிதனும்:** தல மக்களின் கூட்டுப் பொறுப்பு அல்லது தனிப்பட்ட சங்கம் இவைகளுடன்கூட, ஹ்லாஃபோர்ட் எனப்பட்ட பிரபு அவரைச் சார்ந்தவர்களுக்குச் சொந்த முறையில் பொறுப்பாளியாயிருந்தார். அதெல்ஸ்டன் மன்னருடைய (928) சட்டப்படி, நிலமில்லாத மக்கள் ஒவ்வொருவரும் நீதிமன்றத்தின்முன் ஆஜராவதற்குப் பொறுப்பாகவிருப்பதற்கு ஒரு பிரபுவை அண்டியிருக்க வேண்டும். எட்கார் மன்னரின் (962) அவசரச் சட்டம் கூறுவதாவது: 'ஒவ்வொருவரும் தனக்கு ஒருவர் உத்தரவாதமளிப்பவராகக் கொள்ள வேண்டும். அப்படி உத்தரவாதமளிப்பவர் நீதியின் முன்பு குற்றம் சாட்டப்பட்டவரைக் கொண்டு நிறுத்தவும் பாதுகாக்கவும் வேண்டும். குற்றஞ்சாட்டப்பட்டவர் ஏதாவது தீங்கிழைத்தாலோ அல்லது நாட்டைவிட்டுத் தப்பி ஓடிவிட்டாலோ, உத்தரவாதமளித்தவர் ஏற்கவேண்டியதை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஆனால், ஓடிப்போனவர் திருட்டுக் குற்றம் புரிந்தவராயிருந்து, ஓராண்டிற்குள் உறுதியளித்தவரால் பிடிக்கப்பட்டால், பிடிபட்டவரை நீதியின்முன் ஒப்படைத்துவிட்டு, அவர் ஏற்கெனவே செலுத்தியதை அவரிடம் திருப்பிக் கொடுக்கவேண்டும்.'[81]

**ஹண்ட்ரட் நீதிமன்றம்:** (ஹண்ட்ரட், ஷையர் இவைகளின் இரு நீதிமன்றங்களும் முக்கியமானவையாகும். ஹண்ட்ரட் நீதிமன்றம் மாதமொரு முறை கூடும். ஷையரின் ரீவான ஷெரீஃப் அல்லது அவருடைய உதவியாளர் இதற்குத் தலைமை வகித்தார்.) முதலில். ஹண்ட்ரடைச் சேர்ந்த எல்லாச்

சுதந்திரக் குடியானவர்களும் இம் மன்றத்தின் நீதிபதிகளாயிருந்தனர். ஆனால், காலப்போக்கில் சில குறிப்பிட்ட நிலங்களுக்குச் சொந்தக்காரர்களாயிருந்தவர்களுக்கு மாத்திரமே நீதிபதியாகப் பணிபுரியும் கடமை இறுதியில் ஏற்படுவதாயிற்று; சிறப்பாக டேன்லா பகுதியில் வழக்குகளிலீடுபட்டோர், முழுமையாக நீதிவிசாரணை செய்யும் அதிகாரத்தை அவர்களுடைய பிரதிநிதியான ஒரு குழுவினிடம் ஒப்படைப்பது வழக்கமாயிற்று. இக் குழுவில் பன்னிருவரோ அல்லது பன்னிரண்டால் பெருக்கப்படும் தொகையைக் கொண்டவர்களோ அடங்கியிருந்தனர். இவர்கள் அவ்வப்பொழுது தேர்ந்தெடுக்கப்பட்டோ அல்லது நிரந்தரமாக நியமனஞ் செய்யப்பட்டோ இருந்தனர்.[82] ஹண்ட்ரட் நீதிமன்றம் சிவில், கிரிமினல் வழக்குகளை விசாரணை செய்தது; தாமாகவும், சச்சரவால் தோன்றியவுமான வழக்குகளையும் விசாரித்தது. உயர் நீதிமன்றங்களுக்கு மனுச்செய்துகொள்வதற்குமுன், இந் நீதிமன்றத்தின் நீதிமுடிவைப் பெற வேண்டியவர்களாக வழக்காடுகிறவர்கள் இருந்தனர். ஃப்ரிபோர் அல்லது ஃப்ராங்க்பிளெட்ஜ் எனும் உத்தரவாதத்துடன் கூடிய ஜாமீன் அளிக்கும் நிறுவனத்தின்படி, ஆண்டிற்கு இருமுறை ஹண்ட்ரட் நீதிமன்றம், ஒவ்வொருவரையும் முறைப்படி அவருடைய டைதிங்கில் உறுப்பினராகச் சேர்க்கும் பணியை மேற்கொண்டது. இவ் வழக்கம், ஹண்ட்ரட் நீதிமன்றங்கள் தனிப்பட்டவர்களின் கையில் மாறிய பின்னருங்கூட, நெடுநாள்வரை தொடர்ந்து காணப்பட்டது. இவ்வாறு உறுப்பினர்களைச் சேர்ப்பது, ஆண்டில் இரு தடவைகளில், உண்மையையுரைக்க உறுதிமொழி எடுத்துக்கொண்டவர்களின் கருத்தையுணர ஷெரீஃப் நீதிமன்றத்தை நிறுவியபொழுதோ அல்லது ஷெரீஃப் ஹண்ட்ரட் பகுதிக்கு விஜயம் செய்தபொழுதோ நடைபெற்றுவந்தது.

பல வழக்குகளில், ஷெரீஃப் நீதிமன்றத்தைக் கூட்டி உறுதிமொழி எடுத்துக்கொண்டவர்களின் கருத்தை அறிவதற்குப் பதிலாக, ஹண்ட்ரடின் சொந்தக்காரரே அவ்வுரிமையையும் கைக்கொண்டிருந்ததுடன், அப் பிரபுவே அவருடைய 'நீதிமன்றத்தை'யும் கூட்டினர்.

**தனிப்பட்டோர் நீதிவிசாரணை :** பண்டைய நாளிலிருந்தே ஹண்ட்ரடிற்குள் அடங்கிய சில மாவட்டங்கள் ஹண்ட்ரடின் விசாரணை எல்லையிலிருந்து பிரிக்கப்பட்டு அவைகளுக்குச் சொந்தமாயிருந்த பிரபுவினிடமோ அல்லது

திருச்சபையின் ஆட்சிக்குட்பட்டோ இருந்தது. அம்மாதிரி அமைந்திருந்த மாவட்டங்கள் தனிப்பட்டோரின் உரிமைகள் அல்லது வாக்குரிமையைப் பெற்றவைகளாய் அமைந்திருந்தன. ஹாலாஃபோர்டு அவருடைய பிரபுவைக் காட்டிலும் பின்னர் பண்ணை என வழங்கப்பட்ட தனிப்பட்ட முறையில் நிலத்தைச் சொந்தமாகக் கொண்டிருந்தால், அவருடைய மாளிகையின் அறையிலிருந்தே நீதிவழங்குவது வழக்கமாயிருந்தது. இம்மாதிரி அறையிலிருந்தே நீதிமன்றம் அமைந்ததால் அது அறைமன்றம் என அழைக்கப்பட்டது. இது மானிய முறைக் காலத்திய மானியப் பிரபுவின் நீதிமன்றத்திற்கு முன்னோடியாயிருந்தது. சில சமயங்களில் ஒரு ஹண்ட்ரடின் முழுமைக்கும் அல்லது பல ஹண்ட்ரடுகளுக்குமாக நீதிவிசாரணை எல்லை திருச்சபைக்கோ அல்லது தனிப்பட்ட நபர்களுக்கோ அளிக்கப்பட்டது. இம்மாதிரி அளிக்கப்படுவது நீதித்துறையின் ரொக்க இலாபத்தைக் கருதித் தனிப்பட்டவருக்கு மன்னருடைய சாசனம் வழங்குவதன்மூலம் தொடங்கியது. வெகு காலத்திற்குப்பின், உரிமை வழங்கப்பட்டவர்கள் வெளிப்படையாக அரசருடைய சாசனம் பெற்றதை ஆதாரமாகக் கொண்டு, அவர்களுடைய சொந்த நீதிமன்றங்களிலேயே நீதிவிசாரணை செய்யத் தொடங்கினர். 'மக்கள் மன்றத்திலிருந்தவர்கள், தனிப்பட்டோரின் நீதிமன்றத்திற்குள் சென்றது, பதினோராம் நூற்றாண்டில் நடைமுறையில் இருந்ததென்பதை ருசுப்படுத்தக்கூடும்; மேலும், பத்தாம் நூற்றாண்டிலேயே காணப்பட்டதென்பதை ஊகிக்கலாம். அதற்கும் முந்திய நூற்றாண்டுகளில், இம்மாறுதலை ருசுப்படுத்த முடியாது; தவிர, நேர்ந்திருக்கவும் முடியாது.'[83]

**ஷையர் மன்றம் :** (ஸீர்கிமாட் அல்லது நார்மானிய வெற்றிக்குப்பின் கொமிடாடஸ் என அழைக்கப்பட்டதான ஷையர் மன்றம், ஷையரின் நீதிமன்றமாயிருந்ததுடன், ஷையர் மக்களின் பொது மன்றமான மக்கள் மன்றமாயுமிருந்தது (ஃபோக்கிமாட்).[84] ஷையர் மன்றம் ஆண்டிற்கிருமுறை ஷெரீஃபால் கூட்டப்பட்டது.) ஆல்டர்மன், மேற்றிராணியார், மற்றும் பொது அதிகாரிகள், நிலப்பிரபுக்கள், ரீவ், ஒவ்வொரு நகரத்திலிருந்தும் பாரிஷ் குருவும் நான்கு பேர்களும் இம் மன்றத்திற்கு வந்தனர். மன்னரைச் சார்ந்ததின், அரசாங்க உயர்தர அதிகாரி முதலியவர் பற்றியன நீங்கலாக மற்றெல்லா வழக்குகளும் ஷையர் மன்றத்தின் விசாரணைக்குட்பட்டிருந்தன. மேலே கூறப்பட்டவை மன்னருடைய நேரிடையான விசாரணைக்குட்படுத்தப்பட்டன. முதலில் ஹண்ட்ரட் மன்றத்தில் நீதி கோரப்பட்டு மறுக்கப்பட்டாலொழிய

ஷையர் மன்றத்திற்கு வழக்கை எடுத்துச் செல்ல முடியாது; அதே போல் ஷையர் மன்றம் நீதி வழங்கத் தவறினாலொழிய வழக்கை மன்னரின் நீதிவிசாரணைக்குக் கொண்டுவர முடியாது. நார்மானியரின் வெற்றிக்குப்பின், சிறப்பாகச் சுற்றிவரும் நீதிபதிகளின் நிறுவனம் தோன்றிய பின்னர் ஷையர் நீதிமன்றம் தன் முக்கியத் தன்மையை நாளடைவில் இழந்தபோதிலும், சிறு வழக்குகளில் சிவில் விசாரணை செய்வதைத் தொடர்ந்து முதலிலிருந்தே மிக விரிவாகக் கொண்டிருந்தது; அதனுடன் கௌன்டியின் நலனுக்காக ஷையரிலிருந்த எல்லாச் சுதந்திர நிலச்சுவான்தாரர்களுடைய பொதுப் பேரவையாயுமிருந்தது.[85]

## நடப்புமுறை

வழக்குகளின் உண்மையான செய்திகளைக் கண்டறிவதுடன், ஒவ்வொரு வழக்கிற்கும் பயன்படுத்தக்கூடிய சட்டத்தை அறிவிப்பதும் எல்லா நீதிவிசாரணை முறையிலும் அடங்கியதாகும். தலைமை வகிக்கும் மாஜிஸ்டிரேட்டுகளான ஏர்ல்டர்மன் அல்லது ஷெரீஃபு, மேற்றிராணியார் முதலியோரால் குற்றத்தை வலியுறுத்தும் சட்டம் அறிவிக்கப்பட்டது. வழக்கின் உண்மைச் செய்தி (கீழே குறிப்பிடவிருக்கும் சிவில் வழக்குகளில் ஒருவகையானவை நீங்கலாக) உறுதிமொழி எடுத்துக்கொண்டவர்களின் துணையைக்கொண்டும், கடுஞ் சோதனைகளைக்கொண்டும் முடிவு செய்யப்பட்டது.

**உறுதிமொழி வாயிலாக ருசுப்பித்தல்:** குற்றம் சாட்டப்பெற்றவர், தன்னுடைய உறுதிமொழிமூலமாகவும், மற்றும் உண்மையைக் கூறுவதாக உறுதிமொழி மேற்கொண்ட பன்னிருவரின் உறுதிமொழியாலும் தான் குற்றமற்றவர் எனத் தெளிவுபடுத்தலாம். இந்தப் பன்னிருவர்கள், குற்றஞ் சாட்டப்பட்டவரின் உறவினர்களாயோ அல்லது அண்டை வீட்டார்களாயோ இருக்கலாம். யாருக்காக உதவிபுரிய முன்வந்தார்களோ, அவருடைய உண்மையான தன்மையைக் குறித்து நற்சான்று பகர்ந்தனர். எனவே, உறுதிமொழிவாயிலாக உண்மையைக் கூறுகிறவர்களான காம்பர் கேட்டர்ஸ் என்பார் ‘நன்னடத்தைக்குச் சாட்சிகளாயிருந்தனர்’.[86] எனினும், உறுதிமொழி அளித்தவர்களின் சொத்து, சமூக அந்தஸ்து முதலிவைகளை அனுசரித்து அவர்களுடைய உறுதிமொழிகள் மாறுதலான சட்ட மதிப்பைக் கொண்டிருந்தன. ஆறு ஸியோர்ல்களின் உறுதிமொழிகளுக்கு ஒரு தீனின் உறுதிமொழி ஈடாயிருந்தது.

குற்றஞ்சாட்டப்பட்டவர் ஒருபிரபுவிற்குட்பட்டவராயிருந்தால், அவருடைய பிரபுவோ அல்லது ரீவோ அவருக்காக உறுதி மொழி கூற முன்வரலாம். பிரபுவின் சான்று அவருக்குச் சாதகமாயிராவிட்டால், குற்றஞ்சாட்டப்பெற்றவர், மும்மடங்கான உறுதிமொழி கூறுகிறவர்களை நீதிமன்றத்திற்கு அழைத்து வரவோ அல்லது மும்மடங்கு கடுமையான சோதனை முறையை மேற்கொள்ளவோ கடமைப்பட்டவரானார். குற்றஞ் சாட்டப்பட்டவருடன் குற்றஞ் சாட்டுகிறவரும் வேறு நோக்குடனோ அல்லது பழிவாங்கும் நோக்குடனோ தூண்டப் பெற்று எக் காரியத்தையும் செய்ய முன்வரவில்லை என உறுதி மொழி எடுத்துக்கொள்ளக் கடமைப்பட்டவராயிருந்தனர்.

**சோதனை முறை:** பிறர் உறுதிமொழி கூறிக் குற்றமின்மையை வெளிபடுத்தும் முறை எப்பொழுதும் பின்பற்றப்படவில்லை. குற்றம் புரிந்தவர் கையும் களவுமாகப் பிடிபட்டோ அல்லது குற்றம் புரிந்ததற்கு வேறு உரிய சான்றுகள் உடையவராகவோ காணப்படும் சில வழக்குகளில், குற்றம் புரிந்தவராகக் கருதப்படுகிறவர், சோதனைமுறைக்குட்பட வேண்டியவரானார். சோதனைமுறை தவிர்க்க முடியாததாயிருந்தவை யாவன : (1) குற்றமற்ற தன்மையை மெய்பிக்கத் தேவையான உறுதிமொழி கூறுகிறவர்கள், குற்றஞ் சாட்டப்பட்டவருக்கில்லாதபொழுதும்; (2) முன்னரே கொள்ளைக் குற்றம் புரிந்தவரெனக்குற்றம் சாட்டப்பெற்றவர்; (3) தனிச் சுதந்திரமற்றவராயிருந்தவர்—அதாவது, குற்றஞ்சாட்டப்பட்டவரின் குற்றமற்ற தன்மையைக் குறித்து அவருடைய பிரபு தமக்குத் தெரிந்த வரை குற்றமற்றவரென உறுதிமொழி அளிக்கத் தவறினாலோ அல்லது வெர்கில்ட் எனும் தொகையைச் செலுத்திக் குற்றஞ் சாட்டப்பட்டவரை விடுவிக்கத் தவறினாலோ சோதனைமுறை கட்டாயமாக ஏற்கப்படவேண்டியதாயிற்று.

சோதனைமுறை அல்லது இறையின் தீர்ப்பு எனக் கொள்ளப்பட்டது மூன்றுவிதப்படும்—பழுக்கக் காய்ச்சிய இரும்பு, கொதிக்கும் அல்லது குளிர்ந்த தண்ணீர், கார்ஸ்னீட் அல்லது சபிக்கப்பட்ட உணவைக் கொள்ளுதல் என்பனவாம். இச் சோதனைமுறைகள் (குளிர்ந்த தண்ணீர்ச் சோதனை நீங்கலாக) எல்லாம் திருக்கோயில் குருமார்களின் மேற்பார்வையின்கீழ் நடைபெற வேண்டும். குற்றமற்றவர்கூட இம் முறைப்படி அதிகாரிகளின் உதவியின்றி எவ்வாறு குற்றம் புரிந்தவரல்லர் எனத் தப்பிக்க முடியும் என்று நாம் புரிந்து கொள்ளுவது கடினமானது; ஆயினும், சோதனை முறை இறைவன் உண்மையை வெளிப்படுத்துவார் எனும் உறுதி

யான நம்பிக்கையின் பேரில் இறைவனுக்கு மிக்க மரியாதையுடன் செய்து கொள்ளும் விண்ணப்பத்தின் அடிப்படையில் தோன்றியது.

**கொடுக்கல், வாங்கல் பற்றிய சாட்சிகள்:** மனிதனின் நல்லியல்பைப் பற்றி உறுதிமொழி கூறுகிறவர்கள் அல்லது சாட்சிகளுடன்கூட, சிவில் வழக்குகளில், வாங்குதல், விற்றல் முதலியவைகளில் உண்மையைச் சான்று பகர்வதற்கெனச் சட்டப்படி சிறப்பானதொரு சாட்சிகளின் குழு நியமிக்கப்பட்டது. சில முறைகளில் இவர்கள் இக்காலத்திய நோட்டரி பப்ளிக் எனப்படுவோரை ஒத்திருந்தனர். இவர்கள் முதன்முதலாக அதெல்ஸ்டன் மன்னரின் (924—940) சட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளனர். அச் சட்டம், 'ஒவ்வொரு ரீவின் மானங் எனப்படும் மாவட்டத்தில், மெய்யுரைப்பவர்கள் என நன்கு தெரிந்தவர்களெல்லாம், ஒவ்வொரு வழக்கிலும் சாட்சியங் கூறுவதற்காக வேண்டி நியமிக்கப்பட வேண்டும்' என இயற்றியது.[87] எனினும், சட்டப்படி தோன்றிய இச் சாட்சியங்களைப்பற்றி மிகவும் வெளிப்படையாக எட்கார் மன்னரின் (959—975) சட்டங்களில் காணப்படுகின்றன; 'நான் கட்டளையிடுவதாவது: பரோக்குள்ளும் வெளியிலும் ஒவ்வொரு மனிதனும் உறுதிமொழி கூறுகிறவனுயிருக்க வேண்டும். ஒவ்வொரு பரோவிற்கும் ஹண்ட்ரடிற்கும் சாட்சியங் கூறுகிறவர்கள் நியமிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு பரோவிற்கும் சாட்சியங் கூறுகிறவர்களாக 36 பேர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். சிறிய பரோக்களுக்கும் ஹண்ட்ரடிற்கும் நீங்கள் அதிகம் தேவையென விரும்பினுலன்றி 12 பேர்கள் நியமனம் செய்யப்படவேண்டும். விற்பனை செய்கிறவர்களும் சொத்துகளை வாங்குகிறவர்களும் அவரவர்களுடைய பரோவிலோ அல்லது வேப்பன்டேக்கிலோ சாட்சிகளோடு விற்பதையோ வாங்குவதையோ செய்யவேண்டும். அவ்வாறு சாட்சியங் கூறுவதற்காக முதன்முதலாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒவ்வொருவரும் பணத்திற்காகவோ, ஆசைக்காகவோ, அச்சத்திலுலோ, அவர் எதெதற்குச் சாட்சியாயிருந்தாரோ அவைகளையெல்லாம் மறுக்காது உண்மையுரைப்பதாக உறுதிமொழி எடுத்துக்கொள்ள வேண்டும்; அதனுடன் தான் நேரில் பார்க்காததையோ அல்லது கேட்காததையோ தவிர வேறொன்றையும் சாட்சியமாக அறிவிக்கக்கூடாது; அவ்வாறு உறுதி கூறுகிறவர்களில் இரண்டு அல்லது மூன்று பேர்களாவது ஒவ்வொரு கொடுக்கல்வாங்கலிலும் சாட்சிகளாக இருக்கவேண்டும்.'[88] சட்டப்படி உத்தரவிடப்பட்ட இச் சாட்சிகளின்

சூளுரையுடன்கூடிய சான்று, பின்னர் தோன்றக்கூடிய எல்லா வழக்குகளிலும் முடிவானதாயிருந்தது.

**தண்டனைகள் :** உடலுக்கும் சொத்துக்கும் விளைவிக்கப் பட்ட ஊறுகள் யாவும் பணம் செலுத்தப்படுவதன்வாயிலாக நஷ்ட ஈடு செய்யப்படவேண்டும் என்பது வடக்கத்திய மக்க ளிடையே பொதுவாகக் காணப்பட்ட கொள்கையாகும். வெற்றிகொண்ட ஃபிராங்கியர்களால் ஃபிரான்சு நாட்டில் இது முதலில் தோற்றுவிக்கப்பட்டது. பிரிட்டனில் அந் நாட்டின்மீது படையெடுத்துவந்த ஆங்கிலேயரால் தோற்றுவிக்கப்பட்டது. ஒவ்வொரு மனிதனுடைய உயிருக்கும் வெர்கில்ட் எனப்படும் பணமதிப்புக் குறிப்பிடப்பட்டிருந்தது. கொலைக்காக நஷ்ட ஈடாகச் செலுத்தத்தக்க தொகை, சுதந்திரமான மனிதன் விஷயத்தில் இறந்துபோனவரின் உறவினர்களுக்கும், அடிமை விஷயத்தில் இறந்துபோன அடிமையின் எசமானருக்கும் நஷ்டத்தொகை செலுத்தப்படவேண்டும். வெர்கில்ட் தொகை அளவிடப்பட்ட விகிதப்படி கொலைசெய்யப்பட்டவரின் அந்தஸ் திற்குத் தக்கவாறு மாறுபாட்டுடன் காணப்பட்டது. ஒரு ஸியோர்ல் கொலைசெய்யப்பட்டால் அதற்கு நஷ்டஈடாக வெர் கில்ட் இருநூறு ஷில்லிங்கும், இரண்டாவது பிரிவைச் சேர்ந்த தீனுக்கு 600 ஷில்லிங்கும், மன்னரைச் சார்ந்த தீனுக்கு 1,200 ஷில்லிங்கும் நஷ்டஈடாக மதிப்பிடப்பட்டிருந் தது.[89] உடலுக்கு ஊறு விளைவித்தால் அதற்காக பாட் எனும் ஈட்டுத் தொகை செலுத்தப்பட வேண்டியதாகும். ஊறு விளைவித்ததன் பயனாய் உடலில் உருமாற்றம் ஏற்படின் பாட் தொகை மிகவும் உயர்ந்த அளவாக்கப்பட்டது. ஒவ்வொன் றின்மீதும் அமைதியைக் குலைத்ததற்காக வைட் அல்லது அபராதத் தொகையைப் பெறுவதற்கு மன்னருக்கு உரிமை யுண்டு. காலப்போக்கில் அரசாங்கம் அல்லது அதன் பிரதி நிதியாகக் கருதப்பட்ட மன்னர் முதலியவர்களுக்கெதிராகப் புரிந்த குற்றங்களுக்கு மரணதண்டனை விதிக்கப்படலாயிற்று. பிரபுவுக்கு அரசத்துரோகக் குற்றம் புரிந்தவருக்கு மன்னிப்பு அளிக்கக்கூடாதென ஆல்ஃபிரட் மன்னர் அறிவித்தார். அத னுடன் மன்னருடைய மன்றத்தில் சண்டையிட்டவர்களுக்கும், மற்றும் பல்வேறு அரசு குற்றங்களைச் செய்தவர்களுக்கும் தக்க 'மரண தண்டனை' விதிக்கப்பட வேண்டுமெனவும் அறிவித் தார். பிற்காலத்தில் சட்டங்களின் கடுமை மிகுதியாக்கப் பட்டுக் களவுபற்றிய தண்டனை சிறப்பாக அதிகமாக்கப்பட் டது. சில சமயங்களில் களவுக் குற்றத்திற்கு மரணதண்டனை விதிக்கப்பட்டது. எனினும், சட்டங்களின் கடுந்தன்மையோ

அல்லது மெதுத்தன்மையோ மக்களின் பொதுவான, கட்டுக் கடங்காத இயல்பைக் கட்டுப்படுத்தியதாகத் தோன்றவில்லை. பொதுமக்களின் அமைதியைக் குலைக்கும் வெளிப்படையான கட்டுமீறுதல்களின் விளைவாலுண்டான குற்றம்பற்றிய மனுக்கள் நிறைந்தனவாய்ச் சட்டங்கள் காணப்படுகின்றன. கொலையுண்டவரின் உறவினர்கள் பழிதீர்த்துக்கொள்ளும் உரிமையைத் தாராளமாகக் கடைப்பிடித்தனர்; தனிப்பட்ட சிறு சச்சரவு நெடுநாள்வரை இருகுடும்பங்களுக்கிடையே பகைமையை நீடித்திருக்கச் செய்வது அடிக்கடி காணப்பெற்றது. எனவே, பண நஷ்டஈட்டைக் குறித்த சட்டம், சமுதாயம் உண்மையில் இருந்ததைவிடச் சமுதாயம் எவ்வாறு இருக்க வேண்டும் எனும் நோக்கத்தைக் குறிப்பிடுவதாகத்தான் கருதப்பட வேண்டியதாகும். குறிப்பிட்ட சில குற்றங்களுக்கு நாட்டைவிட்டு வெளியேற்றுவது தண்டனையாக விதிக்கப்பட்டது; விசாரணைக்குட்படாது நாட்டைவிட்டு வெளியேறியவர் சட்டப் பாதுகாப்பில்லாதவராக அறிவிக்கப்பட்டார்; அவ்வாறு அறிவிக்கப்பட்டவரைக் கொடிய விலங்கைப் போன்று யாரேனும் கொன்றுவிடலாம்.[90]

## ஆங்கிலோ-சாக்ஸானிய சட்டங்கள்

ஆங்கிலேயர்களின் சட்டங்கள், கென்டின் முதல் கிறித்தவ மன்னரான எதல்பர்ட்டின் (600) காலத்திலிருந்து இன்றுவரை முரிவின்றித் தொடர்ச்சியாக வளர்ச்சியுற்றுள்ளது. இச்சட்டங்களின் எழுத்து வடிவிலமைந்த மிகப் பழைய தொகுப்புகள் வாய்மொழிவாயிலாக வழிவழியாக வந்தனவும், ஆங்காங்கு எழுத்து வடிவிலமைக்கப்படாத தல வழக்கங்களின் பொழிப்புரைகளுமாகும். இது வளர்ச்சியுற்றதும், மைய அதிகாரத்தைக்கொண்ட அரசாங்க நிறுவனத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக எழுத்து வடிவிலமைக்கப்படலாயிற்று. இச்சட்டத் தொகுப்பில் பெரும்பான்மையானவை, அதற்கும் முந்திய காலத்து எழுத்து வடிவிலமைக்கப்படாத பழக்கங்களைத் திருத்தம் செய்வதற்காக ஏற்பட்டவையாகும். திருத்தம் செய்யும் நோக்குடன்கூடிய அப் பழக்கங்கள் நமக்கு நன்கு தெரியாததால், அவை தெளிவற்றனவாயிருக்கின்றன. சட்டங்கள் தெளிவாயுள்ளபோதிலும், அவைகளில் பெரும்பகுதி, 'உறுதிமொழியுடன் மெய்ப்பிக்கும் வழக்கம், சோதனை, வெர்கில்ட், புனித இடங்கள், பேர்கள், பொருள்கள்பற்றிய தூய்மை முதலியவைபற்றியதாயும், திருச்சபைக்குச் சொந்தமான எஸ்டேட்களின் சுதந்திரத்தன்மை, குற்றத்திற்கான தண்டனை விவரங்

கள், சட்டம், குடும்பம், தனிப்பட்டவர் முதலியோருக்கெதிராக விளைவிக்கப்பட்ட குற்றங்களின் பல்வேறு அம்சங்கள் போன்ற பல முக்கியப் பிரச்சினைகளைப் பற்றியதாயுமுள்ளன எனினும், அரசியல் சட்டத்தின் தொடக்க வரலாற்றைத்தெளிவுறச் செய்வதில் முக்கியமானவையும் மிக்க சுவையுள்ளவையுமான அவ்வப்பொழுது ஏற்பட்ட பல்வேறு சட்டமியற்றல்கள் இத் தொகுப்பில் பரந்து காணக்கிடக்கின்றன.[91]

இச் சட்டங்களில் சில, எடுத்துக்காட்டாக, ஆல்ஃபிரட் (சுமார் 890), எதல்ரெட் (978—1016), கான்யூட் (1016—1035), மன்னர்களின் சட்டங்கள், சட்டங்களைத் தொகுப்பதில் தொடக்கமான முயற்சிகளை எடுத்துக்காட்டுவனவாயுள்ளன. எனினும், 'தொகுப்பு' எனும் பெயரை அதற்குச் சூட்டுவது பொருத்தமானதன்று. அவைகள் முறைப்படுத்தப்படாமலும் சிறுசிறு துண்டுகளாகவும் காணப்படுவதுடன், அவைகள் விதியாகக் கூறுபவை, சட்டஞ் சார்ந்த பொருள்வரையில்லாப் பொதுக் கொள்கைகளாயும், சமயம், ஒழுக்கம் முதலியவைகளிலிருந்து எடுத்துக்கொள்ளப்பட்ட கோட்பாடுகளைக் கொண்டவையாயுமிருந்தன.

ஆங்கிலேய நாட்டை ஆண்ட பழைய மன்னர்களுள் மகா ஆல்ஃப்ரட் மன்னர், சட்டமியற்றியவர் எனும் பெரும் புகழையடைந்தவராவர். ஆங்கிலேயருடைய நிறுவனங்கள் எல்லாவற்றிற்கும் அவரே மூல ஆசிரியர் எனப் பொதுவாக நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. அந்த நிறுவனங்களில் பல தோன்றுவதற்கான மூலங்கள் வெகு நாள்களுக்கு முன்னதாகவே காணப்பட்டன; இப்பொழுதுள்ளவையோ அவருடைய காலத்திற்கு வெகு நாள்களுக்குப் பின்னர்தான் உண்டாயின என்பது ஆய்ந்தறிவதால் தெரிகிறது. ஆங்கிலேயரது பழைய மன்னர்களைப்போன்று ஆல்ஃப்ரட் மன்னரும்சட்டங்களைஒன்றுதிரட்டி அவருக்குமுன் ஆட்சி புரிந்தவர்களின் சட்டங்களை முறைப்படுத்தினர் என்பதில் ஐயமில்லை; எனினும், புதிய சட்டங்களை இயற்றினர் என்பதைக் காட்டிலும் பழையவற்றைத் தொகுத்தார் என்பது அவருடை 'டூம்களின்' முன்னுரையில் அவராலேயே பின்வருமாறு கூறப்பட்டுள்ளது: 'ஆல்ஃப்ரட் மன்னனாகிய நான் நமது முன்னோர்களால் கையாளப்பட்டவைகளையும் எனக்கு விருப்பமானவைகளையும் ஒன்றுதிரட்டி எழுத்து வடிவில் பெரும் பகுதியை அமைத்துள்ளேன். எனக்கு விருப்பமில்லாதவற்றை என்னுடனிருந்த அறிஞர்களின் கருத்துப்படியும் நீக்கியுள்ளேன்; அதனுடன் அவைகளைப் பின்பற்றாமலிருக்கவும் உத்தரவிட்டுள்ளேன். எனக்குத் தெளி

வாகத் தெரியாதவற்றை, வருங்காலத்தில் மற்றவர் எவ்வாறு அறியக்கூடும் எனும் காரணத்தால், தெளிவற்ற சட்டங்களைத் தொகுக்கத் தைரியமற்றவனாயிருக்கிறேன்; ஆனால், என்னுடைய உறவினரான ஐன் மன்னர் காலத்திலோ, மெர்சியாவின் மன்னரான ஆஃபாவின் காலத்திலோ[92] அல்லது முதன் முதலில் ஞானஸ்நானம் பெற்றவரான எதெல்பர்ட் மன்னரின் காலத்திலோ ஏற்பட்டனவும், எனக்கு மிகவும் சரியானவையெனத் தோன்றியனவுமான சட்டங்களை இதில் ஒன்றுதிரட்டியுள்ளேன்; மற்றவைகளை விட்டுவிட்டேன். எனவே, மேற்கு சாக்ஸானிய மன்னரான ஆல்ஃப்ரட் எனும் நான், எல்லா அறிஞர்களுக்கும் அறிவித்தபொழுது, அவர்களும், அவையெல்லாம் நல்லவைகளைக் கொண்டுள்ளதாகக் கூறினர்.'[93]

## முடிவுரை

நார்மானியர்களின்வெற்றிக்கு முன்னவையாகவுள்ள ஐந்நூறு ஆண்டுகளில் ஆங்கிலேயருடைய நிறுவனங்கள், சட்டங்கள் முதலியவற்றின் பொதுக் கூறுகளைச் சுருக்கமாகக் கண்டோம். பல்வேறு மாவட்டங்களில், பல்வேறு காலங்களில், தலவழக்கங்களில் பெருமளவில் வேற்றுமைகள் காணப்பட்டன; எனினும், பல வேற்றுமைகளின் நடுவே முக்கியமான கொள்கைகளும், அரசாங்க ஆட்சியின் எந்திரமும் மேலே விவரித்துக் கூறப்பட்ட பொது இயல்புக் கூறுகளை முழுமையாகக் கொண்டிருந்தன. ஆயினும், நீண்டதான இக் காலத்தில் ஆங்கிலேயருடைய நிறுவனங்கள் எப்பொழுதாகிலும் மாற்றமில்லாது ஒரே நிலையிலமைந்திருந்ததாகக்கருதக்கூடாது. அவைசிறப்பானவையாயும், ஆனால்,நாளடைவில் வளர்ச்சிபெற்றவையாயுமிருந்தன. அவ் வளர்ச்சியின் நோக்கம், தனிப்பட்டோரின் சொந்த நிறுவனங்களாயிருந்த பழைய காலத்து அரசாங்கத்தின் இயல்பு, இக் காலத்திய அரசின் அடிப்படையாயமைந்துள்ள பிரதேச நிறுவனமாக அமைவதை நோக்கிச் செல்லும் இயக்கமாயிருந்ததெனக் கூறலாம். தொடக்கத்தில் ஆங்கிலோ-சாக்ஸானியர்களின் மன்னர்கள், மக்களின் தலைவர்களாயிருந்தனர்; நிலப்பகுதியின் பிரபுக்களாயிருக்கவில்லை. அவர்களுடைய அதிகார வெல்லை அவர்களுடைய குடிமக்களாயிருந்தவர்கள் மீது மாத்திரம் காணப்பட்டதே தவிர, அவர்களுடைய இராச்சியத்தின் இயற்கை எல்லைக்குட்பட்டிருந்த நிலப்பகுதிகளின் மீது காணப்படவில்லை.[94]

நார்மானியப் படையெடுப்பிற்கு முந்திய காலம் முடிவுறும் பொழுது, மன்னர் 'ஆங்கிலேயரின் மன்னர்' என அழைக்கப்

பட்டாலும், அதனுடன் ஆங்கிலேயரது நிலப்பகுதிக்கும் பிரபுவாக ஆனுர். ஜான் மன்னர், தம்முடைய பெருமுத்திரையில், ஆங்கிலேயரது மன்னன் என்பதற்குப்பதிலாக 'ஆங்கில நாட்டு மன்னன், எனத் தம்மை அறிவித்துக்கொள்ளுவதற்குச் சுமார் இருநூறு ஆண்டுகள் பிடித்தன. எனினும், இனத்திலிருந்து நிலப்பரப்பைக் கொண்ட முறைக்கு மாறுவது, மக்களின் மன்னர் எனும் கருத்திலிருந்து இராச்சியம், மக்கள் எனப்படும் இரண்டிற்கும் மானியப் பிரபுவாக மன்னர் இருந்தார் எனும் கருத்து முற்றுப்பெறுமளவிற்கு அம் மாற்றம் வளர்ச்சியடைந்திருந்தது.[95]

கொள்கையளவில் மன்னரின் அதிகாரம், மேன்மேலும் உயர்ந்துகொண்டிருந்தபோதிலும், செயலில், அதேசமயத்தில் பெரும் பிரபுக்களின் வளர்ச்சியால் கட்டுப்படுத்தப்பட்டு வரையறுக்கப்பட்டிருந்தது. இப் பிரபுக்கள் ஐரோப்பாவில் காணப்பெற்ற பெரிய மானியப் பிரபுக்களின் பதவியைப் பெறுவதையே இடைவிடாது நோக்கமாகக் கொண்டிருந்தனர். தியாகியான எட்வர்ட் மன்னரின் காலத்திய இங்கிலாந்தின் நிலைமை, சார்லஸ் மன்னரின் காலத்திய ஃபிரான்சு நாட்டின் நிலைமையை ஒத்திருந்தது. மாநிலத்திலுள்ள பெரிய ஏர்ல்கள் அல்லது ஏர்ல்டர் மன்னர்கள், நாட்டினுள் ஒரு தனி வகுப்பாக உருவாகிக்கொண்டிருந்ததுடன், மன்னரின் மேலாதிக்கத்திற்கும் குடிமக்களின் சுதந்திரத்திற்கும் பகைவர்களாயிருந்தனர். கான்யூட் மன்னர், இராச்சியத்தை நான்கு பிரபுக்கள் அல்லது கோமகாரின் பகுதிகளாகப் பிரித்தார். இதே கொள்கையைப் பக்தசீலரான எட்வர்ட் பின்பற்றினர். இவர் காலத்தில் நாடு முழுவதும், ஐந்து பிரபுக்களிடையே பிரிக்கப்பட்டிருந்தது. அவர்களில் மூவர் காட்வின் பிரபுவும், அவரின் மைந்தர்களான ஹெரால்டும், டாஸ்டிக் என்போரும் ஆவர். பிரபுக்கள் வலிமையால் இராச்சியம் பிளவுபட்டுச் சிதறுண்டுபோவதை, நார்மானிய மன்னரான வில்லியத்தின் வலிமையும் அரசியல் வல்லமையும் தடுத்து நிறுத்தின.

## அடிக்குறிப்பு

1. வாதத்திற்கென மேற்கொள்ளப்படும் இக்கருத்து, கெல்டிக் மொழியின் மூலத்திலிருந்து ஆங்கில மொழியில் கைக்கொள்ளப்பட்டுள்ள சில சொற்கள் (எண்ணிக்கையில் இடுகுறிப் பெயர்கள் நீங்கலாக முப்பத்திரண்டு சொற்களாயுள்ளன) கீழ்த்தரமானவைகளைக் குறிப்பதற்குப் பயன்

படுத்தப்படுவனவாயுள்ளன. அதனுடன் பெரும்பகுதி மகளிர் பயன்படுத்தும் பொருள்களைக் குறிப்பிடுவனவாயோ அல்லது மகளிரின் குடும்பஞ்சார்ந்த அலுவல்களைக் குறிப்பிடுவானவயோவுள்ளன என்பதை நோக்குமிடத்து உண்மையில் வலிமையுறுகிறது. (கார்னெட் எழுதியுள்ள மொழி நூல் சார்ந்த கழகத்தின் கட்டுரைகளில் காணப்படும் சொற்கள் தொகுப்பைக் காண்க; i,171-3.) மற்றொரு புறத்தில் ஜெர்மானியர்களின் இனம் அல்லது குடும்ப அமைப்பு முறை, கலப்புத் திருமணத்தின் வாயிலாகப் பொதுவான இனக்கலப்பு ஏற்பட்டிராதென்பதை வலியுறுத்துகிறது. அம்மாதிரியான கலப்பை பிரிட்டானியர்களும் நெடுநாள்வரை மறுத்துவந்தனர். ஸ்டப்ஸ் எழுதியுள்ள 'அரசியல் வரலாறு', 1, பக்கம் 62ஐக் காண்க.

2. ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்' (எச். டபிள்யூ. சி டேவிஸ் பதிப்பித்தது, 1913), முகவுரை, பக்கம் 3. சாட்விக் எழுதியுள்ள 'ஆங்கில இனத்தின் தோற்றம்' எனும் நூலில் (1907), ஆங்கிலோ-சாக்ஸானியர்களின் குடியேற்றத்தின் இயல்பைப் பற்றிக் காண்க; விநோகிரடாஃப், 'பண்ணை வளர்ச்சி' (இரண்டாம் பதிப்பு, 1911), பக்கம் 117 முதல்.

3. ஹாவர்ஃபீல்ட் எழுதியுள்ள, 'பிரிட்டனில் ரோமானியர்களின் ஆட்சி', மாக்டனல்ட் திருத்திப்பதிப்பித்தது (1924), ஆறும் சொற்பொழிவு. 'இனத்தாலும், நிலவமைப்பாலும், பண்பாட்டாலும் பழைய ரோமானியர்கள் இக்காலத்திய பிரிட்டானியருடன் எவ்விதத் தொடர்புமற்றவர்' என்பது அவரது பொதுவான கருத்தாகும் (பக்கம் 286); ஆர். ஜி. காலிங்வுட், ஜே. என். எல். மயர்ஸ், 'ரோமானியர் காலத்திய பிரிட்டனும் ஆங்கிலேயரது குடியேற்றமும்' (1937) எனும் நூலைக் காண்க.

4. மெயிட்லந்து, 'இங்கிலாந்தின் அரசியல் சாசன வரலாறு', எச். ஏ. எல். ஃபிஷர் பதிப்பித்தது, பக்கம் 5. 'ரோமானியரின் சட்ட இயல் நீடிக்கவில்லை எனினும், ரோமானிய நாகரிகத்தின் சம்பிரதாய முறைகள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கனவாயிருந்தன. சட்ட முன்னேற்றத்திற்குக் காரணமாயிருந்த சக்திதிருச்சபையாகும். அதனுடன்திருச்சபை கத்தோலிக்கப்பிரிவினதாய் இருந்ததால், ரோமானியப் பிரிவைச் சேர்ந்ததாயுமிருந்தது. எடுத்துக்காட்டாக, மிகப்பழமையான காலத்திலேயே ஆங்கிலோ-சாக்ஸானியர்களிடம் உயில் எழுதும் வழக்கத்தைக் காண்கிறோம். இப் பழக்கம் திருச்சபையிலிருந்து தோன்றியதெனத்

துணிவுடன் கூறலாம். விருப்ப ஆவணம் சார்ந்த நன் கொடைகளைத் திருச்சபை பெற்றது.' வாதத்திற்குரிய இப் பொருளின் மறுபரிசிலனை பற்றிப் பொதுவாக டி.எஃப்.டி. ப்ளக்நட் நூலைக் காண்க; 'பதினாறும் நூற்றாண்டு வரை ரோமானியச் சட்டமும் ஆங்கிலேயரது பொதுச் சட்டமும்' எனும்கட்டுரை; டொரான்டோ பல்கலைக்கழகச் சட்டமலர் III; 24—50. அதனுடன் பி. சி. காணிகம் எழுதியுள்ள 'அரசு ஆணைகள்' (செல்டன் கழகம்), பக்கம் 160 முதல்.

5. லிபர்மான், 'உபர்டெ இங்கிலீஷ் ரெக்ட்ஸ்பக்' என்பதில் 'ஹென்ரிசின் சட்டங்கள்' பக்கம் 22; அதனுடன் போலக் கும் மெயிட்லந்தும் எழுதியுள்ள, 'ஆங்கிலேயச் சட்ட வர லாற்றைக்' காண்க; இரண்டாம் பதிப்பு, பக்கம் 99.

6. வகேரியசின் வாழ்க்கை வரலாறு பற்றிப் பேராசிரியர் டி. சுளுடா எழுதியுள்ள 'வறியோர் நூல்' (செல்டன் கழகம்) எனும் நூலின் முகவுரையைக் காண்க; வால்யூம் 44 (1927), பக்கம் xiii.

7. ஜான் ஆஃப் ஸாலிஸ்பரி, 'பாலிகிராடிகஸ்', லிப். viii, c. 22.

8. ஜஸ்டீனியனின் (சாவிக்னி, கெஷ்சிடே டெஸ்ரோமிஸ்கன் ரெக்ட்ஸ், iv, 538 முதல்) சட்டத் தொகுப்பு, சட்டங்களைப் பற்றி ஆஸோ எழுதியுள்ள 'பொழிப்புரை'க்கு பிராக்டன் பெரிதும் கடமைப்பட்டவராவார். ரோமானியரின் சட் டத்தைப்பற்றிய அறிவுக்கு பிராக்டன் எவ்வளவு தூரம் கடமைப்பட்டுள்ளார் என்பது விவாதத்திற்குட் பட்டது. மெயின் எழுதியுள்ள, 'பண்டைய சட்டம்' (போலக் பதிப்பித்தது) எனும் நூலைக் காண்க, 87; மெயிட்லந்து,'ஆஸோவும் மறுவினைவும்' (செல்டன்கழகம்); உட்பைன், 'யேல் சட்ட இதழ்' xxxi; விநோகிரடாஃப், 'கட்டுரைத் தொகுப்பு', i, 237; பிளக்நட், 'டொரான்டோ சட்ட இதழ்,' iii, 24; அதனுடன் 'பொதுச் சட்டத்தின் வரலாற்றுச் சுருக்கம்' (1956), 261—2; எச். கண்டோரோ விக்ஸ்,'பிராக்டோனியன்பிரச்சினைகள்';(கிளாஸ்கோ,1941). உட்பைன், 'யேல் சட்ட இதழ்' iii, 428; ஷுல்ட்ஸ், 'காலாண் டுச் சட்ட மறுபரிசிலனை இதழ்', 59, பக்கம் 179, 61, 286; செமினார்; ii, 41, 'ஆங்கிலேய வரலாற்று மறு பரிசிலனை இதழ்', 9, 136; மாக்கில்வான்,'ஹார்வார்டு சட்ட மறுபரிசிலனை இதழ்', 57, பக்கம், 220; ரிச்சர்ட்ஸன், 'ஆங் கிலேயே வரலாற்று மறுபரிசிலனை இதழ்' 58, 22, 376; போஸ்டு,'ட்ரெடீஷியோ'வில் எழுதியுள்ளது,iv,197;ரிச்சர்ட்

ஸன், 'ட்ரெடீஷியோ'வில் எழுதியுள்ளது, vi, 61; ஆர்.ஸி. காணிகம், 'இங்கிலாந்தில் அரசு ஆணைகள்', 360.

9. பொதுவாக, 'இடைக்கால ஐரோப்பாவில் ரோமானியச் சட்டம்' (எஃப்.டி. சுலேட்டா பதிப்பித்தது) எனும் சுருக்கமாகவும், ஆனால், மிக்க திறமைவாய்ந்ததாகவும் சர்.பால் விநோகிரடாஃப் எழுதிய நூலைக் காண்க. அதனுடன் 'கேம்பிரிட்ஜ் இடைக்கால வரலாறு' நூலில் ஹாஸல்டைன் எழுதியது, v; கிரம்பும் ஜாகப்பும் எழுதியுள்ள, 'இடைக்கால மரபுரிமைப் பண்பு' எனும் நூலில் மெய்னியல் எழுதியுள்ளது.

10. பீட் (பிறப்பு 672, இறப்பு 735), பிரிட்டன்மீது ஆங்கிலேயர் கொண்ட வெற்றிக்கான ஒருசில சந்தர்ப்பங்களைப்பற்றி மாத்திரம், தன்னுடைய சொந்தமான மூலங்களிலிருந்து குறிப்பிடுகிறார். ஆனால், பெருமளவில் 'டி எக்ஸிடியா பிரிட்டனி' எனும் நூலைப் பயன்படுத்தியுள்ளார். இந் நூல் கில்தாஸ் என்பவரால் சுமார் 540-ல் தொகுக்கப்பட்டதாகும்.

11. சாட்விக், 'ஆங்கிலேய இனத்தின் தோற்றம்', அதிகாரம், 4 எனும் நூலில் ஆங்கில்களும் சாக்ஸானியர்களும் சிறப்பாக ஒரே இனத்தைச் சேர்ந்தவர்கள் எனக்கருதுகிறார். 88ஆம் பக்கத்தில் அவரது முடிவைக் காண்க: 'சாக்ஸானிய அரசுகளைச் சேர்ந்த மக்கள், ஆங்கிலிகன் அரசுகளைச் சேர்ந்தவர்களைக்காட்டிலும் தனிச்சிறப்பு வாய்ந்த இனத்தைச் சேர்ந்தவர்கள் அல்லர்; பிரிட்டன்மீது படையெடுத்தவர்கள் மூன்று இனப்பிரிவுகளைச் சேர்ந்தவர்களாயிராமல் இரு வெவ்வேறான இனத்தைச் சேர்ந்தவர்களாயிருந்தனர்; அவர்களை ஜூட் இனத்தைச் சேர்ந்தவர்கள், ஆங்கிலோ-சாக்ஸானிய இனத்தைச் சேர்ந்தவர்கள் என அழைக்கலாம். முதலில் கூறப்பட்டவர்கள் கென்ட் பகுதியிலும் தென்ஹாம்ப்ஷையரிலும் குடியேறினர். பின்னர் கூறப்பட்டவர் வெற்றி கொள்ளப்பட்ட நாட்டின் பிற பகுதிகளில் குடியேறினர்.'

12. டாஸிடஸ், 'ஜெர்மானியர்', c. xxvi; டபிள்யூ. ஸ்டப்ஸ் எழுதியுள்ள, 'பொறுக்கு சாசனங்கள்' நூலில் திரட்டிக்கொடுக்கப்பட்டவை. இச் சொற்றொடரின் கடினத்தன்மைபற்றியும், அதுபற்றி எழுந்துள்ள பல்வேறு விளக்கங்கள்பற்றியும் ஸ்டப்ஸ் எழுதியுள்ள, 'அரசியல் சட்ட வரலாறு', i, பக்கம் 19, குறி 3 எனும் நூலில் காண்க. ஸீபாம், 'ஆங்கிலேயக் கிராமச் சமுதாயம்', 342 முதல். மெயிட்லந்து

எழுதியுள்ள, 'டூம்ஸ்டே புத்தகமும் அதற்குப் பின்னரும்', 346 முதல் 347, குறி 1; 'கேம்பிரிட்ஜ் பொருளாதார வரலாறு' (1941), i, 13; அதனுடன் டோபாக் எழுதியுள்ள, 'ஐரோப்பிய நாகரீகத்தின் பொருளாதார, சமூக அடிப்படைகள்' (1937), 30—45. ட்யூடானியர்கள் விவசாயத் துறையில் பொதுவுடைமைக் கருத்தைப் பின்பற்றினர் எனும் பழைய கருத்தை இப்போதுள்ள கருத்து மறுக்கிறது.

13. மேலே கூறப்பட்டுள்ளது c. xi.

14. ,, c. vii.

15. ,, c. xii.

16. ,, c. vii.

17. ,, c. xiii.

18. பழைய ட்யூடானிய மகளிரின் நிலைமை குறித்து வெயிட்ஸ் எழுதியுள்ள, 'ஜெர்மன் அரசியல் சாசன வரலாறு' (கீல், 1880), i, 48, 67—69 பக்கங்களையும், எஃப்.எம். ஸ்டென்டன், 'இடப்பெயர்களும் வரலாற்றுத் தொடர்பும்' நூலில் 'ஆங்கிலோ-சாக்ஸானிய சமூகத்தில் மகளிர் நிலை' என்பதையும் காண்க. அரசினர் வரலாற்றுத் துறைக் கழகத்தின் வெளியீடுகள், நான்காம் தொகுப்பு xxv, 1.

19. மேலே குறிப்பிட்ட டாஸிடஸ் நூலைக்காண்க; குடும்ப உறவுத் தொடர்பின் முக்கியம்பற்றியும், பிரிட்டானியர்களுக்கு அதனால் ஏற்பட்ட விளைவுகள்பற்றியும், c. 7; சச்சரவுகள் பற்றி c. 21; வாரிசுரிமை பற்றி c. 20; கற்பில்லா இல்லாளின் உறவினர்கள் பற்றி c. 19; உறவினரல்லாதவருடன் ஏற்படும் திருமணங்கள் c. 4; டோப்க் (முன் கூறப்பட்டது) ட்யூடானியர்களின் மானிய முறையின் அளவை வற்புறுத்துவதுடன், அவை பண்ணை முறையின் தொடக்கத்தையும் கொண்டிருந்தனவெனும் கருத்தை வழங்குகிறார்.

20. ஃப்ரீமேன், 'நார்மானியர் வெற்றி' என்ற நூலில் i, 77 காண்க. 'ஆங்கிலோ-ஸாக்ஸானியரின் சட்டங்கள்', ii, 359 (எல்டர்மேன்—5 கீழ்); எல்டர்மேனின் சொற்களஞ்சியத்தில் பதங்களின் பல்வேறு பொருள்களைக் காண்க.

21. பீடின், 'ஹிஸ்டோரியா எக்லிஸியாஸ்டிகா', iv, 2. இங்கிலாந்தில் உள்ள ஒவ்வொரு திருச்சபைக்கும் கைகொடுத்து உதவ ஒத்துக்கொண்ட மதகுருக்களில் இவரே முதன்மையானவர்.

22. படையெடுப்பினரால் அமைக்கப்பட்ட சுயேச்சை இராச்சியங்கள் பத்து இல்லையெனினும், குறைந்தது ஒன்பதாவது இருந்திருக்கும். பல இராச்சியங்களை அங்கத்தினர்களாக ஒன்றுசேர்த்த ஒரு சமஷ்டி அரசாங்கம் இருந்ததில்லை. எனவே, 'ஹெப்டார்கி' என்ற சொல் பொருத்தமானதன்று. ஆனால், மொத்த எண்ணிக்கையில் ஏழு இராச்சியங்களுக்கு மிக முக்கியத்துவம் கொடுக்கவே இவ்வாறு குறிக்கப்பட்டது என எடுத்துக் கொள்வது நலம்.

23. பீடின், 'ஹிஸ்டோரியா எக்லீஸியாஸ்டிகா' நூலில் ii 5; 'ஆங்கிலோ - சாக்ஸன் காலவழித் தொகுப்பு', 827; கெம்ளின், 'இங்கிலாந்தில் சாக்ஸன்கள்', i, 20; சர் ஜான் ரைஸின், 'கெல்டிக் பிரிட்டன்', பக்கம் 136; சர் ஃபிராங்க் ஸ்டென்டனின், 'ஆங்கிலோ - சாக்ஸன் இங்கிலாந்து' 34—35.

24. ஃபிரீமனின், 'நார்மானியர் வெற்றி', i, 28; சாட்விக்கின், 'ஆங்கில இனத்தவரின் ஆரம்பம் அல்லது மூலம்', பக்கம் 12 முதல்.

25. எஃப். எல். அட்டன்பரோவின், 'முற்கால ஆங்கில அரசர்களின் சட்டங்கள்', 98. ஸ்டப்ஸ், 'பொறுக்கு சாஸனங்கள்', 9ஆம் பதிப்பு, பக்கம் 72.

26. வினோகிரடாஃப் எழுதிய, 'பண்ணை வளர்ச்சி' என்ற நூலில் பக்கம் 144 காண்க. (இந்த ஊகத்திற்கும் பின்னால் 'ஹண்டிரட்' என்ற நிலப்பகுதிக்கும் எல்லைக்கும் யாதும் தொடர்பில்லை.)

27. சாட்விக் எழுதிய, 'ஆங்கில நாட்டுப் பிறப்பிடம்' என்ற நூலில் பக்கம் 158, 185 காண்க. ஸ்டீவன்சனின், 'ஆங்கில வரலாற்றுப் பரிசீலனை' நூலின் iv, பக்கம் 356 காண்க. பெக்கின்,' கேம்பிரிட்ஜ் இடைக்கால வரலாறு', iii, பக்கம் 387—388 காண்க. கோர்பெட், மேலே கூறப்பட்டுள்ளது, iii, பக்கம் 566, 573 காண்க.

28. முதலாம் மூத்த எட்வர்டு, இரண்டாம் எட்வர்டு, முதல் சட்டம் (அட்டன்பரோவின் 'சட்டங்கள்', 117) இந்த இரண்டு வகையான நில உரிமைக் கட்டுப்பாட்டில் எல்லா நிலச் சொத்துகளும் அதனுள் அடங்கிவிடுகின்றன என்பதைக் குறிப்பாகக் காட்டுகிறது. 'போக்' நிலத்திலோ அல்லது 'போல்க்' நிலத்திலோ கொண்டுள்ள ஒருவருடைய உரிமையை மற்றொருவன் வைத்துக் கொண்டால் அவன் எத்தகைய நிலைக்கு ஆளாகவேண்டும் என்பதை நாங்கள் பிரகடனப்படுத்தியுள்ளோம்'.

29. 'போல்க்' நிலம் என்பது மக்கள் நிலம் என்ற தவறான கருத்தைத் தோற்றுவித்தவர் ஜான் ஆலன். 'இங்கிலாந்தில் அரசனுக்குரிய தனிச் சிறப்புரிமைத் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய ஆய்வு' (1830). ஸ்பெல்மென் பதினேழாம் நூற்றாண்டில் அதன் உண்மைப் பொருளை அறியும்வரை எல்லா வரலாற்று ஆசிரியர்களும் அதே கருத்தைப் பின்பற்றிவந்தனர். விநோகிரடாஃப் இக் கருத்தைக் கண்டவர்; 'ஆங்கில வரலாற்றுப் பரிசீலனை', viii, 1893. அதனுடன் மெய்ட்லந்து எழுதிய, 'டூம்ஸ்டே புத்தகமும் அதற்குப் பின்பும்', பக்கம், 244. இந்தக் கருத்து வேறுபாடுபற்றிய அண்மைப் புது முயற்சியினை ப்ளக்நட்டின் 'போக் நிலமும் போல்க் நிலமும்' என்பதில் காண்க. 'பொருளியல் வரலாற்றுப் பரிசீலனை', vi, 64—72.

30. ஆல்ஃபிரட், 41 (அட்டன்பரோவின், 'சட்டங்கள்', 83; ஸ்டப்ஸின், 'பொறுக்குச் சாசனங்கள்', பக்கம் 71.): 'உறவினர்கள் விட்டுச்சென்ற 'போக்' நிலத்தைப் பெற்றவன், முதலில் அதனை அடைந்தவர்களாலோ, அவனுக்கு அதனைக் கொடுத்தவர்களாலோ எழுத்துமூலமாகவோ சாட்சிமூலமாகவோ தடைவிதிக்கப்பட்டிருப்பின், அவன் தனது 'மீக்-பர்க்'கிலிருந்து அதனைக் கொடுக்கமுடியாதென மற்றவர்க்கு ஆணையிடுகிறோம்.'

31. மெயிட்லந்தின், 'டூம்ஸ்டே புத்தகமும் அதற்குப் பின்பும்', பக்கம் 257.

32. 'டன்' என்பது தனிப்பண்ணைக்கோ, அதனுடன் இணைந்த கிராமத்துக்கோ வேலி அமைப்பு அல்லது உயிர்வேலி அடைப்பு: 'பர்' என்பது சக்தி வாய்ந்த மனிதனின் வலுப்படுத்தப்பட்ட அரண்களையுடைய வீடு. நார்மானிய மொழியில் உள்ள இதற்கு இணையான சொல்

'கார்த்'; நம்முடைய 'கர்த்' அல்லது 'யார்டு'(முற்றம்).இதற்குச் சமமான ஜெர்மானிய விகுதி ஹெய்ம்; நம்முடைய 'ஹாம்'. இதற்கு டேனிஷ்காரரது அமைப்பு—பி (நார்மானியரது—பு; ஜெர்மன் பௌ). ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு.' i, 88,n. 5.(ப்ஃளமிங் பிரிஸ்க் மொழிகளில் ஹெம்—அம் ஆராய்க.)

33. மெயிட்லந்து, ஆதிகாலத்தில் ஒரு கிராமம் முறைமன்றத்தைப் பெற்றிருந்திருக்குமாவென ஐயப்படுகிறார். ('டூம்ஸ்டே புத்தகமும் அதற்குப் பின்பும்', பக்கம் 185); குறைந்தது சில நகரங்களாவது (மூட்) மன்றங்களைப் பெற்றிருந்தன என்பது இப்போது சரியெனத் தெரிகிறது. (மெயிட்லந்தின், 'சேகரித்த பத்திரங்கள்',பக்கங்கள் ii, 363, 364; விநோகிரடாஃப், 'பண்ணைமுறை வளர்ச்சி', 194, 273.)

34. விநோகிரடாஃப், 'பண்ணைமுறை வளர்ச்சி', பக்கம், 144. 'பதினோராம் நூற்றாண்டில் ஆங்கிலேய சமூகம்', பக்கம் 100. சில மிகச்சிறிய கோட்டங்களிலும் (shires) கணக்கற்ற ஹண்ட்ரட் மன்றங்கள் இருப்பதனால், இம் மன்றங்கள் தோன்றியமை எந்தக் கொள்கையின் அடிப்படையில் எனத் தீர்மானிப்பதிலுள்ள கஷ்டங்கள் அதிகமாகின்றன. லங்காஷையர் கோட்டம் ஆறே ஹண்ட்ரட் மன்றங்களைப் பெற்றிருக்க, கென்ட் 61, சஸ்ஸக்ஸ் 65, டார்செட் 34ஐப் பெற்றிருந்தன. 'ஆங்கிலோ — சாக்ஸன் இங்கிலாந்து', 295—298-ல் சர் ஃபிராங் ஸ்டென்டனின் கடைசி விவாதம், ஹண்டிரட் மன்றம் நிச்சயமாய் ஒரு பழைய நிலையம் எனக் கருதுகிறது. 'அரசியல் சாசன வரலாறு', 116—120-ல் J.E.A. ஜோல்ஃப். ஆங்கிலோ-சாக்ஸன் வரலாற்றின் கடைசியில்தான் ஹண்டிரட் மன்றம் தோன்றியிருக்கும் என்ற கருத்து, ஏற்கெனவே இந் நிறுவனம் பழமையானது என்பதை வலியுறுத்தப்பொருத்தமானதொன்றாகும். சில குறிப்பிட்ட தலங்களுக்குள் அடங்கிய சில பிரிவுகள் இருக்கின்றன. கென்ட் அநேகமாக ஒரே அளவுள்ள ஆறு 'லதேக்'களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. பிற ஷையர்களில் உள்ள ஹண்டிரட் சபையின் எல்லைக்குச் சமமான அளவுடையது ஒரு 'லதே'. இச் சொல் ஜூட் மொழியில் உள்ள 'லேதிவ்' என்பதிலிருந்து வந்தது. (நவீன டச்சு மொழியில் 'லேடிங்'—இராணுவ வரி). சஸ்ஸக்ஸ் ஆறு ரேப்ஸ்களாகப் பிரிக்கப்பட்டு அவை ஒவ்வொன்றின் உட்பிரிவு

ஹண்டிரட்டுகளாகப் பகுக்கப்பட்டது. பண்டைய நார்மானிய மொழியில் 'ஹ்ரிப்ர்' என்பது கிட்டத்தட்ட அதேபோன்ற நிலப்பிரிவினைக் குறிப்பது. (லாப்பன் பெர்க்கின், 'ஆங்கிலோ — சாக்ஸானியரின் கீழ் இங்கிலாந்து', ed. தோர்ப்பே, i, 96, 107.) யார்க்ஷையரும் லிங்கன்ஷையரும் 'திரிதிங்ஸ் அல்லது தேர்ட்ஸ்களாகப்' ரிக்கப்பட்டன. (இன்னும் யார்க்ஷயரில் ரைடிங்ஸ் என்ற மறைவுப் பெயரோடு நிலவிவருகிறது.) இவற்றின் உட்பிரிவாகப் பிரிக்கப்பட்டவை வேப்பன்டேக்ஸ் ஆகும். அவை ஹண்டிரடுகளுக்குச் சமமானவை எனக் கருதப்படுகிறது. (ெயிஸ்டின், 'ஆங்கில நாட்டு அரசியல் நிர்ணய சட்ட வரலாறு', பக். 41; கீழ்க் குறிப்பும் காண்க.)

35. எட்மண்டின் சட்டங்களில் (III, 2) ஹண்டிரடைப் பற்றிய முன்குறிப்பு உண்மையில் உள்ளது. (A. J. ராபர்ட்ஸன், 'சட்டங்கள்', 13, 940—46.)

36. J. E. A. ஜோலிஃப்ஃபின், 'மத்திய கால இங்கிலாந்தின் அரசியல் சட்ட வரலாறு', 116—123. 'இலண்டன் நகரத் தீர்ப்பு', (VI அதெல்ஸ்ன், அட்டன்பரோ, 'சட்டங்கள்', 157—169) பக். 11; கீழே குறிக்கப்பட்டுள்ளது; குறிப்பு 42. இது நன்கு எல்லோருக்கும் தெரியும். பிற்கால வரலாற்றுக்கு H.M. கேமின், 'ஹண்டிரடும் ஹண்டிரடின் ரோல்ஸும்', 'ஹண்டிரட் ரோல்சைப் படித்தறிதல்'— நூல்களைக் காண்க. மேலே குறிப்பு எண் 34-ன் விளக்கம் காண்க.

37. பலவகை வரலாற்று ஷயர்கள், கவுன்டிகளின் தோற்றங்களைப்பற்றி அறிய ஸ்டப்ஸின், 'அரசியல் சட்ட வரலாறு' i, 48 காண்க. அவர் கூறுவதாவது : 'ஷயரின் அரசியல் சட்ட நிர்வாக அமைப்பு எடுத்துக்காட்டுவது, மேற்கு சாக்ஸன் வெற்றி ஏற்படுத்திய பலவகைப் பிரிவுகளின் தேசிய அமைப்பாகவோ அல்லது மெர்ஸியன் அரசு மேற்குப் பக்கம் முன்னேறும்போது அதனை ஒன்றுபடுத்திய முற்காலக் குடியிருப்பாகவோ அல்லது இங்கிலாந்து முழுவதும் மேற்கு சாக்ஸன் வமிசம், தன்னுடைய ஷயர்களில் ஏற்கெனவே கையாளப்பட்ட கோட்பாடுகளின்படி மாற்றி அமைத்ததாகவோ இருக்கும். மத்திய நில ஷயர்களின் தோற்றம்பற்றி அறிய சாட்விக்கின்,

'ஆங்கிலோ—சாக்ஸன் நிறுவனங்கள்', பக்கம் 202, et. seq., 296; அதன்கீழ்ப் பக். 22; குறிப்பு 84

38. கேம்பிரிட்ஜ் விஷயமாக அது கிராம நிலையிலிருந்து பரோ வாக மாறிவந்ததை மெயிட்லந்தின், 'நகரமும் பரோக்களும்' என்ற நூலில் விளக்கப்பட்டுள்ளது. பொதுவாக ஜேம்ஸ் டெயிட்டின், 'மத்திய கால ஆங்கில பர்ரோ'(1936) ஐக் காண்க. அதனுடன் பெடிட்-டுடெய்லிஸ் 'ஸ்டப்ஸின் அரசியல் சட்ட வரலாற்றின் துணைப்படிப்பு', i, பக். 75 காண்க.

39. ஸ்டப்ஸின், 'அரசியல் சாஸன வரலாறு', i, 99.

40. இத்தொடர்பில், நகரம் என்பதற்கு 'போர்ட்' என்ற சொல் வழக்கத்திலிருந்தது என்பது குறிப்பிடத்தக்கது. அது, லத்தீன் சொல்லான 'போர்டஸ்' என்பதிலிருந்து வருவிக்கப்பெற்றது. அதற்குத் துறைமுகம் அல்லது கப்பல்துறை எனப் பொருள் உண்டு. உள்நாட்டிற்கும் கடலோர நகரங்களுக்கும் அப் பெயர் வழங்கலாயிற்று. 'மூத்த எட்வர்டின் சட்டம்' (முதலாம் எட்வார்டு I; அட்டன் பரோவின், 'சட்டங்கள்', 115); அதில் யாரும் 'போர்ட்' தவிர வேறெங்கும் எதையும் வாங்க முடியாது; போர்ட்ரீவே அதற்கு சாட்சி. மற்றும் II-ல் அதெய்ஸ்டன் 14 (அட்டன்பரோ, 'சட்டங்கள்', 135-ல் 'போர்ட்' தவிர வேறெங்கும் யாராலும் நாணயம் அச்சிட முடியாது. ஃபிளாண்டர்ஸில் உள்ள ஒரு நகருக்குள்ள பழைய பெயர் பூர்ட். பெடிட்-டுடைலிஸ், பக். 83.

41. 'கிராஸ், 'வியாபாரிகளின் சங்கம்', வால்யூம் 1, இணைப்பு B.

42. 'இலண்டன் நகரத் தீர்ப்பு' என்ற நூலை எதல்ஸ்டன் என்ற அரசனின்கீழ் இலண்டனைச் சார்ந்த சமயத் தலைவர்கள் வரைந்தனர். 'ஃபிரித் கில்தஸின்' உறுதிமொழிப்படி அது வலியுறுத்தப்பட்டது. இலண்டன் நகர ஃபிரித் 'சங்கம்' முழுச் சட்டத் தொகுப்பும் பாதுகாக்கப்பட்டது. அதில் திருடர்களுக்குரிய குற்றத் தீர்ப்பு, நஷ்டஈடு வசூலித்தல், எதெல்ஸ்டன், விடன் ஆகியோர் கிரேட்லே, எக்ஸெடர், தண்டர்ஸ்ஃபீல்டு ஆகிய இடங்களில் கொடுத்த தீர்ப்பினை நிறைவேற்றுதல் போன்றவற்றிற்கான வழிகளைக் குறிப்பிடுகிறது.—VI, எதல்ஸ்டன் அட்டன்பரோ, 'சட்டங்கள்', '157—169; 'தேர்ந்தெடுக்கப்பட்ட பிரகடனங்கள்', 75.

43. லீபர்மேன், 'ஆங்கிலோ - சாக்ஸன் காலத் தேசியச் சபை', பக். 37 காண்க. 'தேசியச் சபையின் முதன்மையான விழா வில் இந் நகரம் முக்கியப் பங்கு கொண்டது. இந் நிலை ஸ்டீஃபன், ரிச்சர்டு, ஜான் காலங்களிலும் தொடர்ந்து இருந்தது. இது ஆங்கிலோ-சாக்ஸன் சபைக்கும் நார் மானிய சபைக்கும் ஒரு முக்கியத் தொடர்பாக அமைந்தது.

44. அதிலேயே, பக். 45.

45. ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு', i, பக். 442.

46. முதலாம் ஹென்றியினுடைய லண்டன் பிரகடனத்தில் போர்ட் ரீவ் என்பவர் அதன் ஷரீஃபும் அரசனின் துணை வரும் ஆவர். அவர் லண்டனுக்கும் மத்திய செக்ஸுக்கும் ஷரீஃப் ஆவார். ஆனால், லண்டன் நகர விஷயமோ ஷயரை விட மிக முக்கியத்தும் வாய்ந்தது. அதன் அதிகாரி தன் னுடைய பதவியை முன்னையதில்தான் ஏற்பர் (பன்னி ரண்டாம் நூற்றுண்டுவரை). அவரை 'போர்ட்'ரீவ் என்று அழைத்தனரே தவிர 'ஷயர்-ரீவ்' என்றழைக்கவில்லை. ரவுண்டின், 'மாண்டேவில்லின் ஜியோஃபிரே' பக். 352 காண்க. பண்டைக் கால இலண்டன் வரலாற்றை ரவுண் டின் மேலே குறிப்பிடப்பட்டது,மற்றும் அவரது'லண்டன் சமுதாயத்தில்' காண்க;பெடிட்-டுடைலிஸ்,'ஸ்டப்ஸுக்குத் துணைப்படிப்பு' i, 91—106; 'விக்டோரியா கோட்ட இலண் டன் வரலாறு', (வளர்ச்சி); M. வெயின்பாம், 'கோட்ட இலண்டன் வரலாறு' 1066—1268 முதல், இரண்டு எட்வர்டின்கீழ் இலண்டன் (2, வால்யூம்.)

47. ஸ்டப்ஸின், 'பொறுக்கு சாசனங்கள்', 97.

48. ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு', i, 244—247.

49. இன்ஸின் சட்டப்படி அவர் அதன் தலைவர், c. 8. (அட்டன்பரோ, 'சட்டங்கள்', 39 ; ஸ்டப்ஸின், 'பொறுக்கு, சாசனங்கள்', பக். 67.)

50. ஆல்ஃபிரடின் சட்டங்கள், c. 40. (அட்டன்பரோ, 'சட்டங் கள்', 83.

51. சாட்விக்கின், 'ஆங்கிலோ-சாக்ஸன் நிறுவனங்கள்', பக். 168—171.

52. ஏர்ல் என்ற பட்டம் கென்ட் பகுதி அரசனுன எத்தல் பெர்ட்டின் சட்டங்களில் முன்பே தோன்றியுள்ளது, 13,14 (அட்டன்பரோ, 7). அது அநேகமாய் ஜூட்டுகளிடமிருந்து தோன்றியிருக்கலாம். ஆனால், ஆல்டர்மேனுக்குப்பதிலாக அதனைப் பயன்படுத்துவது, டேனிஷ் சொல் 'ஜார்ல்' என்பதிலிருந்து கடன் வாங்கியிருக்க வேண்டும்.

53. 'ஷெரீஃப்' சில அதிகாரங்களில் தோன்றுவதாகத் தெரிகிறது. ஆனால், ஆங்கிலோ-சாக்ஸன் சட்டங்களில் காணப்படவில்லை. F. E. ஹார்மரின், 'ஆங்கிலோ-சாக்ஸன் ரிட்ஸ்', பக். 48; F. லைபர்மேன், 'கெஜட்' ii, 649; W. A. மோரீஸ், 'மத்திய கால ஷெரீஃப்'; சர்ஃபிராங்க் ஸ்டென்டன், 'ஆங்கிலோ-சாக்ஸன் இங்கிலாந்து', 540 காண்க. அரசனுடைய ரீவ் என்பதற்கு லார்சனின், 'இங்கிலாந்தில் நார்மன் வெற்றிக்கு முன்னர் அரச குடும்பம்' காண்க. (மாடிஸன், விஸ்,1904) அதிகாரம் 4, மற்றும் சாட்விக்கின், 'ஆங்கிலோ-சாக்ஸன் நிறுவனங்கள்', அதிகாரம்-7.

54. நார்மானிய வெற்றிக்குப்பின் எர்ல் கோட்ட நிர்வாகத்தில் 'மூன்றாவது பென்னி' என்ற மூன்றில் ஒருபாக வழக்குப் பணம் பெறும் உரிமை தவிர யாதொரு தொடர்பும் கொள்ளவில்லை. மெயிட்லந்து கவனித்துக் கூறுவதுபோல, இந்த லத்தீன் பட்டமிருந்தும், ஷெரீஃப் எர்லுக்கு (நட்பில்) துணையாகவோ, உதவியாகவோ இருந்ததில்லை. போலக்கும் மெயிட்லந்தும் எழுதிய, 'ஆங்கிலச் சட்ட வரலாறு', i, 533.

55. ஜோலிஃபின், 'அரசியல் சட்ட வரலாறு', 17–20-ல் உள்ள பயனுடைய விவாதங்களைப் பார்க்க.

56. தீன்கள், சிறப்பாக அரசனின் தீன்கள் (பணியாளர்) பற்றி அறிய ஜோலிஃப், 88 காண்க. பேடே, கேசித் என்பதற்கு லத்தீனுகத் தோழனையும், தீன் என்பதற்கு லத்தீனுக அமைச்சனையும் உபயோகிக்கிறார். அவருடைய A.S. மொழிபெயர்ப்பாளர், சில சமயங்களில் பீடேயின் சிப்பாய்களைத், தீன் என மொழிபெயர்க்கிறார்.

57. அவன் இதுவரை கருதிக்கொண்டிருந்தபடி ஸ்டாலரைப் போன்றவன் அல்லன். ஸ்டாலருடைய பதவி வடக்கத்தியாரிடமிருந்து தோன்றியதாகும். டேனர்களால் அது இங்கிலாந்திற்குக் கொண்டுவரப்பட்டது. லார்ஸனின், 'இங்கிலாந்தில் அரச குடும்பம்', பக். 147 காண்க.

58. லார்ஸன். பக். 103. காண்க. 'டேனிஷ்காரரது படையெடுப்புக்கு முன்னர், அமைச்சர்கள், குறிப்பிட்ட இராணுவ உதவிகளோடு உள்ள பெரிய நிலவுரிமையாளர்களை விடச் சற்று உயர்ந்தவர்களாக இருந்தனர். அவர்கள் தங்களது தனிப்பட்ட அபூர்வத் தொடர்பினாலும், அரசின் பல பாகங்களில் நீதிமன்றங்களை விரிவாக அமைத்ததனாலும் அரசனோடு உயர்ந்த குடிமைப் பிணைப்பை உருவாக்கினார்கள். எளிய குடும்ப ஆட்சியின் ஊழியத்திலிருந்து இம்முறை உயர்ந்தோங்கியது. முதலில் அரசனின் மெய்காப்பாளர் என்ற கௌரவமும், அடுத்து நிலப்பிரபு என்ற செல்வாக்கும் ஏற்படலாயின. ஆட்சியின் முன்னேற்றமான நாள்களில் (காலங்களில்) அரசாங்க ஊழியத்தின் மிக உயர்ந்த வெளிப்புற வட்டமாக அது அமைந்துவிட்டது.

59. மக்களின் மதிப்புத் தரமும் சட்டங்களும் c. 2, 'பொறுக்கு சாசனங்கள்', பக். 88.

60. மெயிட்லந்தின், 'அரசியல் சாசன வரலாறு' ed, ஃபிஷர், பக். 147. 'ஆனால், அரசர்கள் மட்டுமே தீன்களை வைத்திருந்தார்களென்பதில்லை; பெரிய மனிதர்களும்கூட அவர்களைப் பெற்றிருந்தார்கள். ஒரு தீன் தன்னைச் சார்ந்த மிகக் குறைந்த தீன்களைப் பெற்றிருக்கலாம் என்ற உண்மை தெரிகிறது. இது, அரசனது நிலக்குத்தகைக்காரன், பிற்காலத்தில் வீரத்தொண்டிற்காக அவன்கீழ்க் குத்தகைக்காரர்களைப் பிடித்து அமர்த்துவது போன்றதாகும்.' F. M. ஸ்டென்டனின், 'ஆங்கிலேய நிலமானிய முறைகள்—முதல் நூற்றாண்டு' (1932) நூலின் முக்கிய அதிகாரமான IVஐக் (தீன்களும் வீரர்களும்) காண்க.

61. II எதல்ஸ்டன் 2 (அட்டன்பரோ, 'சட்டங்கள்', 129; 'பொறுக்கு சாசனங்கள்', பக். 74).

62. வினோகிரடாஃப், 'பண்ணை வளர்ச்சி', பக். 213. அதனுடன் மெயிட்லந்தின், 'டூம்ஸ்டே புத்தகமும் அதற்குப் பிறகும்', பக். 69—75.

63. லாப்பன்பர்க் ('ஆங்கிலோ - சாக்ஸன் கால இங்கிலாந்து,' ed. தார்பி, ii, பக். 322) கிறித்தவ மதகுருவின் மிக்குயர் நிலையை மேலும் விளக்குவது போல, டாஸிடஸ் கொடுத்த பேகன் ஜெர்மானிய மதகுரு பெற்றிருந்த தனிப்பட்ட நிலை

களில் உள்ள மிகப்பரந்த செல்வாக்கின் கணக்கினைக் குறிப்பிடுகின்றார். அதாவது, அம் மதகுருக்களிடம் வாழ்வு சாவுக்கான அதிகாரம் பூரணமாக அமைந்திருந்தது. 'இத்தகைய தொடக்க காலச் செல்வாக்கு, ரோமானிய மத குருவான போப்பின் ஆதிக்கம் பெருக உதவியாக இருந்தது. அவரது ஆதிக்க எல்லையின் ஒரு பகுதி, உத்தரவுகள், அதாவது, கடவுளின் தீர்ப்புகள், புறச்சமய குருமார்களின்மீது சட்டப்படி பயன்படுத்தப்பட்டபோது தோன்றியது என்னலாம்.

64. அதல்ஸ்டனுடைய சகோதரிகளில் நால்வர் அன்னியரைத் திருமணம் செய்துகொண்டனர்.

65. முற்கால ஆங்கிலேய அரசர்களது பேரரசு தன்மையைப் பால்கிரேவ், 'ஆங்கிலப் பொதுஅரசு', பக். 627 cccxlii—cccxliv; ஃபிரீமென், 'நார்மானியர் வெற்றி', i, 148; மற்றும் ஜோலிஃப், 'அரசியல் சட்ட வரலாறு', 101—102.

66. புதையல் கண்டுபிடிப்பு நார்மானியர் வெற்றிக்குமுன் காணக்கூடியதாக இல்லை (சர் ஜார்ஜ் ஹில், 'புதையல்', 186). கப்பல் உடைபட்டுக் கரை சேரும் பொருளின் அரசியல் உரிமை பக்தசீலரான எட்வர்டின் காலப்பழமை உடையது. (மார்ஸ்டன், 'தேர்ந்தெடுத்த கடற்படைத் தலைமைக் கோரிக்கைகள்' (செல்டன் கழகம், ii, xxxix). பொதுவாக ஆங்கிலோ-சாக்ஸன் முடியின் நிலைபற்றி அறிய ஜோலிஃப், 'அரசியல் சட்ட வரலாறு', 41—55, 106—114.

67. 'மண்டின்' (தனிப் பாதுகாப்பு) ஆரம்ப முக்கியத்துவம் 'ஹேண்ட்' (கை). அது, தனிப்பட்ட குடும்பத் தலைவன் தன்னுடைய மனைவி, மக்கள், அடிமைகள்மீது செலுத்தும் அதிகாரத்தைக் குறிக்கும். இதே கருத்தில் ரோமானியரது பண்டைய சட்டப்படி உள்ளசொற்றொடர்த்தொகுதிகளில் 'மேனஸ்' என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளதை ஒப்பு நோக்கலாம்.

68. லாப்பன்பர்க், A. S. ii, 310, 311. 'அரசி,' 'தலைவி' பற்றி ஃப்ரீமென், மற்றும் P.E. ஸ்கரம்', 'ஆங்கில முடிசூட்டு விழாவின் வரலாறு', காண்க. 'நார்மன் வெற்றி', iv, 765, பின்னிணைப்பு Q காண்க. ஆலிஸ்டர் கேம்பெல், 'அரசி எம்மாவின் மதிப்பு நிலை', அவரது பதிப்பு (பக். 62) 'அரசி எம்மாவின் புகழ்' (1949). அரசியின் தங்கம்பற்றி

அறிய W. பிரின், 'அரசியின் தங்கம்' (1668). மற்றும் கோக், 12 Rep. 21 காண்க.

69. 'விடான்', அறிவுள்ள மனிதன் என்ற சொல் எழுவாய் வேற்றுமைப் பன்மையில் 'விடன்' என்றும், ஆறும் வேற்றுமைப் (கிழமைப் பொருளில்) பன்மையில் 'விடேனு' என்றும் வரும். முழுக் கருத்துப் பெற லிபர்மேன், 'ஆங்கிலோ - சாக்ஸன் காலத் தேசிய சபை, (ஹாலே, 1913), மற்றும் ஜோலிஃப், 'அரசியல் சட்ட வரலாறு', 25—29, 103 காண்க.

70. ஃபிரீமென், 'நார்மன் வெற்றி', i, 107 ; கெம்பிள், 'சாக்ஸன்கள்', ii, 239.

71. கெம்பிள், 'இங்கிலாந்தில் சாக்ஸன்கள்', ii, 200, 201; லிபர்மேன், 'தேசீயச் சபை', 40, 42.

72. 931-ல் அதல்ஸ்டனின் சாசனம் ஒன்றில் அச்சட்டம் நிரந்தரமாக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது. 'பொதுவாக எல்லாச் சாதாரண மக்களின் மகிழ்ச்சி' இத்தகைய தொரு கூட்டம் 934-ல் வின்செஸ்டரில் கூடிற்று. அதில் அரசரும், வேல்ஸ் இளவரசர்களும், இரு தலைமைக் குருமார்களும், பதினேழு மதகுருமார்களும், நான்கு மடத்தலைவர்களும், பன்னிரண்டு கோமக்களும், ஐம்பத்திரண்டு தீன்களும் கலந்துகொண்டனர். இவ்வாறு நடைபெற்றதாக அச்சட்டத்தில் விவரிக்கப்பட்டுள்ளது. 'எல்லா மக்களின் பொதுச் சபை'—கெம்பிள், 'ஸாக்ஸன்கள்', ii, 199.

73. அல்க்ரெட்டுக்காக, டர்ஹாம் சைமியோன், s.a., 774 காண்க. எட்டாம் நூற்றுண்டில், நார்த்தம்பிரியாவின் பதினைந்து அரசர்களில், பதின்மூன்று பேர் தங்கள் ஆட்சியைத் தவிர்க்க முடியாத காரணத்தால் முடித்துக்கொண்டனர். ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு', i, 153 ல்-உள்ள அட்டவணையைக் காண்க.

74. 'ஆங்கிலோ - சாக்ஸன் காலவழிச் செய்திக் கோவை', *ann.* 755; 'வொர்செஸ்டரின் ஃபிளாரன்ஸ்', *ann.* 755; கெம்பிள், 'சாக்ஸன்கள்', ii, 219.

75. 'வொர்ஸெஸ்டரைச் சேர்ந்த ஃபிளாரன்ஸ்', ஆண்டுக் குறிப்பு, 1013, 1014 ; 'ஆங்கிலோ - சாக்ஸன் காலவழிச் செய்திக் கோவை', 1014. வெஸ்ஸக்ஸ் ஆல்டர்மன்களும் மேற்கிலுள்ள எல்லா தீன்களும் பாத்தில் உள்ள ஸ்வென்டிடம் வந்தார்கள் ; பிணைகளைக் கொடுத்து அவரை அடி

பணிந்தனர். 'பல்வேறு கருத்துகளின் அல்லது காரணங்களின் மொழியினை ஒன்றுசேர்த்துவைத்தல்' என்கிருர் ஃபிரீமென் ('நார்மன், வெற்றி' i, 396). 'எதல்ரெட்டைப் பதவியை விட்டு நீக்கி, ஸ்வெண்டை சிம்மாசனத்திற்குக் கொண்டுவருதல் என்ற செயல் வெஸ்ஸெக்ஸிலுள்ள விடன் சபையால் நடைமுறையில் நடத்தப்பட்டது என்பதில் சந்தேகம் கொஞ்சங்கூட இல்லை.' ஆயினும், ஸ்டப்ஸின், 'அரசியல் சட்ட வரலாறு', i, 156 பார்க்க.

76. கெம்பிள் கூறுவது: 'இளவரசரின் தனிப்பட்ட பண்புகள் அவருக்குச் சிபார்சு செய்யக்கூடியனவாக இருப்பின், சட்டத்திற்குப் புறம்பான நிலையில் அவர் இருந்தாலும், ஆங்கிலோ - சாக்ஸன்களின் மறுப்புக்கான மிக முக்கியக் காரணமாக அதைக் கருதவில்லை'—'இங்கிலாந்தில், சாக்ஸன்கள்', ii, 37, n.

77. ஃபிரீமன், 'நார்மன் வெற்றி', i, 118, காண்க.

78. கெம்பிள், 'இங்கிலாந்தில் சாக்ஸன்கள்', ii, 215, பக். 474.

79. கெம்பிள், 'இங்கிலாந்தில் சாக்ஸன்கள்', ii, 204—240; லைபர்மேன் 'தேசியச் சபை', 59—75.

80. பின்தொடரக்கூடியவைகளுக்குப் பொதுவாக W.A. மோரிஸ், 'ஃபிராங்பிளெட்ஜ் (வெளிப்படையான உறுதி மொழி) முறை, (1910) காண்க.

81. II எதெல்ஸ்டன் 2; எட்காரினுடைய சமயச் சார்பற்ற உத்தரவு, III எட்கார் 6; ராபட்ஸன் சட்டங்கள், 27; 'தேர்ந்தெடுத்த பிரகடனங்கள்', 83. ஃபிரீ

போர்க் (ஃபிரீ பிளெட்ஜ் = ஃபிராங்பிளெட்ஜ்) வரலாற்றின்படி மிகச் சரியானது; ஃபிரித்—போர்கின் (சமாதான உறுதிமொழி) அமைப்பானது, வெற்றிக்குப் பின் நிறுவனத்தின் தோற்றம்பற்றி எழுதிய எழுத்தாளர்களின் தவருன ஊகத்தின் காரணத்தால் உண்டானது; மோரிஸ், *op. cit*., 2.

82. இது வெற்றிக்குப்பின் ஏற்பட்ட வளர்ச்சியாகக் காண்கிறது. டெயிட், 'மத்திய ஆங்கில பர்ரோ' (1936), 287 n.3.

83. ஜோலிஃப், 'அரசியல் சட்ட வரலாறு', 64. மெயிட்லாண்டினுடைய வாதம், ஒன்பதாம் நூற்ருண்டின் முற்

பகுதியில் இருந்த தனியார் நீதிமன்றங்கள் ஜோலிஃப்பின் கூர்மையான திறனாய்வுக்கு உட்பட்டே இருந்தன என்று விரித்துரைக்கிறது. மேலும், அதிக விவரங்கள் பெற ஜூலியஸ் கோபல், 'கொடுங்குற்றமும் தவறான நடத்தையும்' (1937), i, 342—378.

84. 'பண்டைய அரசுக்கு அடுத்ததாய்க் காணப்பெற்ற ஷயர் அல்லது அவ்வரசின் ஆட்சிமுறையைப் போன்று ஆட்சி ஏற்பட்ட மாவட்டம் காணப்படுமானால், ஷயர் மன்றம் இருவிதங்களில் பொதுமக்கள் மன்றமாயமைந்தது. ஒன்று மாவட்டத்தின் முதன்மையான நீதிமன்றமாயும், இரண்டாவதாக ஹெப்டார்க்கி இராச்சியம் தோன்றுமுன் விடான் சபையிலிருந்து சுதந்திரமாகவுள்ள அம்மாவட்டத்து மக்களின் பொதுச் சபையாயுமிருந்தது. இக் கொள்கை பண்டைய முறையில் பெருமதிப்புடன் கூடிய சுதந்திரங்கள் நன்கு பேணப்பட்டன என்ற கருத்தைத் தோற்றுவிக்கும். ஏனென்றால், ஷயர் மன்றம் மக்களின் பிரதிநிதிகளைக் கொண்டது; வரலாற்றில் காணப்படும் விடான் சபை அப்படியன்று. இது இயற்கையுங்கூட. ஏனென்றால், மாவட்டம் எவ்வளவு சிறியதாயும், பொது நிலத்தில் பங்குள்ளவர்கள் அல்லது உரிமையுள்ளவர்களின் நிலைமை சரிசமமாகவும் காணப்படுகிறதோ, அங்கு மக்களை ஒன்றுதிரட்டுவது எளிதாயிருக்கும். மக்களின் குரலைப் புறக்கணித்து, மன்னர், அவருடைய மாஜிஸ்டிரேட்டுகள்வசம் மிக்குயர் அதிகாரம் குவிவதாலேற்படும் அபாயம் தடுக்கப்படுகிறது. இது ஓர் ஊகமேயாகும்'— ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 130.

85. இதைப்பற்றி நிரம்ப இலக்கியம் உள. B.H. புட்நம், 'தொழிலாளிகளின் சட்டம்' (1908), 162, *391; W.A. மோரிஸ், 'கோட்ட நீதிமன்றம்' (1926); R. ஸ்டூவர்ட்-பிரௌன், 'செஸ்டர் கோட்ட மரபு வரிசை' (1925); G. H. ஃபௌலர், 'ஷெரீஃப் அலுவலக மரபுவரிசை' (1929); சர் ஹிலாரி ஜென்கின்ஸன் கட்டுரைகள் (ஆங்கில வரலாற்று (மீள்பார்வை) ஆராய்ச்சி, xliii, 21; 'கேம்பிரிட்ஜ் வரலாற்றுத்துறை (பத்திரிகை) குறிப்பேடு, i, 103; பிளக்நட் [ஹார்வார்டு சட்ட (மீள்பார்வை)ஆராய்ச்சி, xlii, 639, xliii, 1,111], வுட்பைன் (உள்ளே, xliii, 1,083), மற்றும் லேப்ஸ்லே [சட்டக் காலாண்டு (மீள்பார்வை) ஆராய்ச்சி, il, 299]. இன்னும் பெறத்தக்க கருத்துகள்

G.O. சேயில்ஸ், 'அரசனது பெஞ்சு' (செல்டன் கழகம்), iii, பக். xcv-ல் உள்ளன.

86. நிலைமைக்கும் நடைமுறைக்கும் ஆன உறுதிமொழியின் முக்கியத்துவத்தையும், உறுதிமொழி கூறுவோரைத் தேர்ந்தெடுப்பதுபற்றியும் ஜோலிஃப், 'அரசியல் சட்ட வரலாறு' 58-ல் காண்க.

87. கான்சிலியம் எக்ஸோனியன்ஸில், V அதெல்ஸ்டன், 1, 5; அட்டன்பரோ, 'சட்டங்கள்,' 155; 'பொறுக்கு சாசனங்கள்', 75.

88. சமயச் சார்பற்ற உத்தரவு, IV எட்கார், cap. 3, 4, 5, 6. ராபர்ட்சன், 'சட்டங்கள்', 33-35; ஸ்டப்ஸ், 'தேர்ந்தெடுத்த பிரகடனங்கள்', 84. [பொர் = உறுதிப்பாடு; பர் = ஒரு பரோ அல்லது வலுப்படுத்தப்பட்ட இடம்.]

89. 'வெர்' தொகையைக்கொண்டு ஒரு தீன் சில சமயங்களில் ஆயிரத்து இருநூறு மதிப்புள்ள மனிதனுகவும், அவனை விடக் குறைந்த தீன் அறுநூறு மதிப்புள்ள மனிதனுகவும், ஒரு சியோர்ல் இருநூறு மதிப்புள்ள மனிதனுகவும் அழைக்கப்படுகிறார்கள். அறுநூறு மதிப்புள்ள மனிதன் ஆல்ஃபிரட் காலத்திற்குப்பின் மேற்கு மத்திய நாடுகளைத் தவிர வேறெங்கும் காணப்படவில்லை. அங்கும் 'ரேட்னிட்டுகளுடன்' அவனைக் காணமுடிகிறது. நிலமற்ற கெசீத்தும், வேல்ஸ் நில உரிமையாளர்களும் ஒன்றுசேர்ந்திருப்பார்களெனத் தெரிகிறது. சாட்விக், 'ஆங்கிலோ - சாக்ஸன் நிறுவனங்கள்', 90—98 காண்க.

90. இராச்சியம் (ஸ்டேட்) தண்டனைக்கான நடவடிக்கைகளாக, முறையே படிப்படியாக வளர்ந்த, முக்கியமாக உடலை வருத்தும் தண்டனைகளையும்; தட்டுமுட்டுச் சாமான்களையோ நிலத்தையோ அபகரிப்பதும், பண அபராதங்களை விதிப்பதுமான தண்டனைகளையும் எடுத்ததற்குக் காரணம் இந்தப் பழைய முறையோடு நீண்ட காலமாகப் போரிட்டு வந்ததேயாகும். ஏனெனில், இம் முறையிலுள்ள முக்கிய நோக்கங்கள் தண்டனைக்குரியனவாயிராமல், பழிவாங்குமியல்புடையனவாய் அல்லது கழுவாய் அளிக்கும் நிலைமையுடையனவாய் இருந்தன. ஜூலியஸ் கோபல், 'அரசு குற்றமும் கண்டிக்கத்தக்க குற்றமும்' (1937) நூலைக் காண்க.

91. இப் பகுதிகள் ஸ்டப்ஸால் சேகரிக்கப்பட்டவை; பொறுக்கு 'சாசனங்கள்', பக். 66—92.

92. ஆல்ஃபிரட் அரசரால் நேரிடையாகக் கண்டறிந்த ஆஃபா வின் சட்டங்கள்; ஆனால், அவை நீடிக்கவில்லை.

93. ஆல்ஃபிரடின் தீர்ப்புகள். தோர்பே, பண்டைக் காலச் சட்டங்களும் நிறுவனங்களும், i, 58, 59; அட்டன்பரோ, 'சட்டங்கள்', 63; ஸ்டப்ஸ்,'தேர்ந்தெடுத்த பிரகடனங்கள்', 70. மெயிட்லந்து, 'அரசியல் சட்ட வரலாறு', பக். 2, 3 காண்க. 'ஆல்ஃபிரடின் சட்டங்களில் ஆரம்பித்தால், பிறகு தொடர்ச்சியாகச் சட்டங்களின் வரிசைகளைப் பத்தாம் நூற்றாண்டு முழுவதும் காண்பதோடு, பதினோராம் நூற்றாண்டுக்கும் அவை பரவிச்செல்கின்றன. அவற்றில் மூத்த எட்வர்டு, எதெல்ஸ்டின், எட்மண்டு, எட்கார், எதல்ரட் ஆகியோரது சட்டங்கள் இடம்பெறுகின்றன.............. அவை ஆங்கிலோ-சாக்ஸன் சட்டங்கள் அல்லது தீர்ப்புகள் எனத் தங்களை அழைத்துக்கொண்டன. பல நூற்றாண்டுகள் கையெழுத்துப் பிரதியில் மறைந்து உறங்கிக் கிடந்தன. பின்னர் அவை பதினாறும் நூற்றாண்டில் புதைபொருள் ஆராய்ச்சி சார்பில் மிக்க ஆர்வத்தோடு தோண்டியெடுக்கப்பட்டன. லம்பார்ட் அவற்றில் சிலவற்றை 1568-ல் 'ஆர்கியோநாமியா' என்ற தலைப்பில் பதிப்பித்தார். 1840-ல் அவை நவீன ஆங்கில மொழிபெயர்ப்பில் ரிகார்டு கமிஷனர்களுக்காகப் 'பண்டைக் கால இங்கிலாந்தின் முக்கியச் சட்டங்களும் நிறுவனங்களும்' என்ற தலைப்பில் பதிப்பிக்கப்பட்டன. மீண்டும் அவை 1865-ல் ஜெர்மானிய மொழிபெயர்ப்பில் டாக்டர் ரெயின்ஹோல்டு ஸ்க்மிட் என்பவரால் பதிப்பிக்கப்பட்டன'. தற்போதைய சிறந்த பதிப்பு F. லிபர்மன்னின், 'ஆங்கிலோ 'சாக்சானிய சட்டங்கள்', 3 வால்யூம்கள், ஹலே, 1898—1916. ஆங்கில மொழிபெயர்ப்போடு உள்ள சௌகரியமான பதிப்பு,'முற்கால ஆங்கில அரசர்களின் சட்டங்கள்'. இதனைத் தொகுத்தவர் F.L. அட்டன்பரோ, 1922; மற்றும் A. J. ராபர்ட்சன், 1925 தொகுத்தது, 'ஆங்கில நாட்டு அரசர்களது சட்டங்கள்—எட்மண்டு முதல் முதலாம் ஹென்றிவரை'.

94. பால்கிரேவ், 'ஆங்கிலப் பொது அரசு', Pt. i, அதிகாரம், 3, திரு. ஜோலிஃபின் 'அரசியல் சட்ட வரலாறு' என்ற நூலில் கையாண்டுள்ள முக்கியக் கருத்துகளில் இதுவும் ஒன்று.

95. ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 183—185.

# 2. நார்மானியரின் வெற்றி

**வாரிசு முறை :** பக்தசீலரான எட்வர்டு இறந்ததும் (ஜனவரி 5,1066) பட்டத்திற்கு வருவது பற்றித் தகராறு ஏற்பட்டது. செர்டிக் மரபின் வாரிசும், காலஞ்சென்ற மன்னரின் உடன்பிறந்தாரின் பேரப்பிள்ளையுமான எட்கார் மிகச் சிறியவராயிருந்தார் என்பதுடன், அவருடைய பிற்கால வாழ்க்கை அறிவித்தவாறு, உறுதியற்ற பண்பினராயும் சாதாரண அறிவுள்ளவராயுமிருந்தார். நாட்டின் அரசியல் சூழ்நிலை, திறமைமிக்கதும் உறுதியானதுமான தலைவரைத் தவிர்க்க முடியாதவாறு எதிர்நோக்கியது. எட்வர்ட் மன்னர், அவர் இறக்குந் தறுவாயில், அவருடைய மைத்துனரும் ஏர்ல் பதவியிலிருந்தவருமான ஹெரால்ட் என்பாரைத் தமது வாரிசாகக் கொள்ளும்படி பரிந்துரைத்திருந்தார். ஹெரால்ட் அக் காலத்திய அரசியல் போர்த்தலைவர்களில் மிக்க திறமை வாய்ந்தவராவார். ஏற்கெனவே தமது சொந்தச் செல்வாக்கினாலும், காட்வின் குடும்பத்தின் ஏராளமான சொத்துகளைக் கைக்கொண்டிருந்ததாலும் அரச குடும்பத்தைச் சார்ந்த அதிகாரத்தைப் பெற்றிருந்தார். ஆங்கிலேய அரச குடும்பத்துடன் இன ஒற்றுமை கொண்டிருந்ததுடன், சிறிது காலத்திற்கு முன்பாக முடியைப் பெற்றிருந்த டென்மார்க்கு அரச குடும்பத்தின் இரத்தக் கலப்பையும் பெற்றிருந்தார்.[1] சாதாரணமாகக் குளிர்காலத்தினிடையில் கூடும் விடான் எனும் மக்கள் சபை ஒன்றுகூடியிருந்தபொழுது, எட்வர்டின் பரிந்துரைகளை ஏற்றுக்கொண்டு ஹெரால்டு ஏர்லை ஆங்கிலேய மன்னராக ஏற்றுக்கொள்வதற்குச் சம்மதமளித்தது. உடனேயே ஹெரால்ட், யார்க்கு நகரின் அதிமேற்றிராணியாரான ஆல்ட்ரட் என்பவரால் பதவியிலமர்த்தப்பட்டு முடிசூட்டப் பெற்றார்.[2]

ஆனுல், நார்மண்டி மாநிலத்தின் கோமகனுன வில்லியம் என்பார் ஆங்கிலேய முடியாட்சிக்குப் போட்டியிடுகிறவராக இருந்தார். இவர் பக்தசீலரான எட்வர்ட் மன்னரின் தாயான நார்மண்டியைச் சேர்ந்த எம்மா என்பாரின் வழியில் அவருக்கு உடன்பிறந்தாரின் மகன் எனும் முறையிலும், காலஞ்சென்ற மன்னர் தம்மை ஏற்கெனவே வாரிசாக நியமித்துள்ளார் எனும் கூற்றுப்படியும் சிம்மாசனத்திற்கு உரிமை பாராட்டினுர். அம்மாதிரியான நியமனம் அல்லது உறுதிமொழி செய்யப்பட்டிருக்குமேயானுல் (செய்யப்பட்டிருக்கலாம் என எண்ண இடமுள்ளது),[3] மன்னர் எட்வர்டின் கடைசிக் காலத்திய விருப்பத்தின்படி அது விலக்கப்பட்டதாகும். தவிர, எப்படியாயினும், அது விடான் மன்றத்திற்குச் செய்யப்பட்ட பரிந்துரையாகத்தான் கொள்ள முடியும். ஆங்கிலேய மன்னர்கள், நாட்டைச் சொந்த எஸ்டேட்டைப்போல் ஒருவருக்கு வாரிசாக அளிக்கும் உரிமையை ஒருபொழுதும் பெற்றிருக்கவில்லை. மன்னரைத் தேர்ந்தெடுக்கும் உரிமை விடான் மன்றத்திற்குத்தான் உரியது; விடான் மன்றமும் நாட்டு மக்களின்சார்பில் அமைந்திருந்தது. அம் மன்றத்தின் விருப்பமும், அதுவரையில் சுதந்திரமாகப் பின்பற்றப்பட்டபொழுது, அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களையே தேர்ந்தெடுப்பதில் காணப்பட்டது; ஆனுல், செர்டிக் மரபில் தேர்வுத் தகுதியுள்ள வாரிசு இல்லாமற் போகவே, நாட்டின் விருப்பம் எல்லையைக் கடந்ததாயிற்று.

**வெற்றி:** ஆயினும், வில்லியம், சட்டப்படி அவருக்கு ஏற்பட்டிருந்த உரிமையை வற்புறுத்துவதாகக் கூறியதுடன், பட்டத்திற்கு அவர் வருவதை ஒத்துக்கொள்ளுவதாக ஹெரால்டு ஒரு சமயம் வாக்குறுதி செய்திருந்ததையும் மேற்கொண்டு சுட்டிக்காட்டினுர்.[4] போப்பாண்டவரின் ஆசியைப் பெற்றதன் வாயிலாக நீதி, ஒழுக்கம், சமயம் இவைகளின் ஆதரவைப் பெற்றுர். ஆங்கிலேயரது தேசியத் திருச்சபையின் சுதந்திரத்தைக் குறைப்பதை ரோமானியத் திருச்சபையின் தலைமை பீடம் ஆவலுடன் எதிர்நோக்கியதால், வில்லியத்துக்கு ஆசி வழங்குவதற்குத் தயாராயிருந்தது. எனவே, நார்மானியர்களையும் வேற்று நாட்டவர்களையும் கொண்டதும், போர்முறைகளில் நன்கு பயிற்சியளிக்கப்பட்டதும், சூறையிடுவதில் விருப்பமுள்ளதுமான ஒரு பெரும் படையுடன் வில்லியம் இங்கிலாந்திலிறங்கினுர்; தனக்கும் 'உரிமையின்றி சிம்மாசனத்தைக் கைப்பற்றியவரான' ஹெரால்டுக்குமிடையே போரிடுவதன் வாயிலாக விதியை முடிவு செய்யக் கருதினுர். ஹேஸ்டிங்ஸ் எனுமிடத்தில் நடந்த சண்டையில் நார்மானியர்கள் உறுதியான வெற்றி பெற்றனர். ஹெரால்டும், அவருடைய

சகோதரர்களும், மன்னரின், மெய்க்காப்பாளர்களில் தலை சிறந்த வீரர்களும் போர்க்களத்தில் மாண்டனர். ஹெரால்ட் மரணமுற்ற செய்தியைக் கேட்டதும், லண்டன் மாநகர மக்கள் உடனேயே எட்கார் அத்லிங் என்பவரை மன்னராகத் தேர்ந்தெடுத்ததும், அவர்களிடையே காணப்பெற்ற ஒற்றுமையின்மையும், பயனுள்ள அமைப்பின்மையும் படையெடுத்து வருகிறவர்கள் முன்னேறுவதை வெற்றிகரமாகத் தடை செய்ய முடியாமற்போயின. அதுவரை, வில்லியம் நாட்டின் ஒரு பகுதியை மாத்திரம் வென்றிருந்தார். எனினும், நாட்டு மக்கள் மிகுதியாய் அச்சமுற்றிருந்ததால்' விடான் சபை வில்லியத்தை மன்னராகத் தேர்ந்தெடுத்ததுடன், 1066-ல் கிறிஸ்துமஸ் விழாவன்று மன்னராக முடிசூட்டப்பெற்ருர். நற்பேறற்ற ஹெரால்டை மன்னராக முடிசூட்டிய அதே யார்க்கு நகர அதிமேற்றிராணியாரான ஆல்ட்ரெட் இம் முடிசூட்டுதலையும் செய்தார்.[5] ஏற்கெனவே கொண்டிருந்த போலி உரிமைக்கு ஏற்ப 'ஆங்கிலேயரது மன்னர்' எனும் பட்டத்தைப் பூண்டார். அதனுடன், பழைய முடிசூட்டு விழாவின்பொழுது எடுத்துக் கொள்ளும் உறுதிமொழியின் வாயிலாக நாட்டு மக்களுடன் வழக்கமான ஒப்பந்தத்தையும் செய்துகொண்டார்.

**வெற்றிசீலரின் ஆட்சி:** எட்வர்டால் வாரிசாக நியமிக்கப் பெற்றவராயும், ஆங்கிலேய மன்னர்களின் முடிக்குச் சட்டப்படி தொடருகிறவராயும் தன்னைக் கருதிக்கொண்டு வில்லியம் ஆட்சி புரியத் தொடங்கினுர். அக் கருத்திற்கிணங்க, நாட்டின் சட்டங்களையும் வழக்கங்களையும் மதித்து நடக்க வேண்டியவரானுர். எனினும், நடைமுறையில், எல்லாவற்றையும் மதிக்காது தனது விருப்பப்படியே நடக்கலானுர். எனினும், நார்மானியர்கள் வெற்றிபெற்றதால், ஆங்கிலேய அரசியல் சட்டத்தில் முறிவு ஏற்படவில்லை. நார்மானியர்களின் வெற்றி ஆங்கிலேயரது வரலாற்றில் ஒரு புதிய தொடக்கத்தைத் தோற்றுவித்ததாகக் கருதாமல் 'சிறப்பானதொரு திருப்பத்தை உண்டுபண்ணியதாகவே கருதவேண்டும்.'[6]

இக்காலத்திய ஆங்கிலேய மக்களினத்தின் நான்கு முக்கியமான ஆக்கக் கூறுகளில் ஒன்ருன நார்மானியர்களின் இரத்தக் கலப்பு மிகுதியாயுள்ளதெனக் கருதப்பட்டு வந்துள்ளது எனினும், அது இரத்தக் கலப்பே தவிரப் பிறிதொன்றுமில்லை. சிறப்புப் பெற்றிருந்த ஆங்கிலேய இனத்தில் ஏற்கெனவே கலந்து மாறுபாடின்றி ஒன்ருகச் சேர்ந்த சிறிதளவு கெல்டிக் இரத்தமும் பெருமளவில் டேனர்களின் இரத்தமும் போலவே, ஒரு நூற்ருண்டுக்கும் சிறிது மேலான

காலத்திலேயே நார்மானிய இரத்தமும் கலந்து ஒன்ருகியது. இரண்டு இனத்தினரும் தோன்றியதற்கு மூலமான பொது வான ட்யூடானிக் இனமிருந்ததால், இரத்தக் கலப்பு ஏற்படுவ தற்கு சாத்தியமாயிருந்தது.[7] நார்மானியர்கள் உண்மையில் வடக்கத்தியர்கள்; ஸ்காண்டிநேவியாவிலிருந்து நேராக இங்கி லாந்திற்கு வருவதற்குப் பதிலாக, ஒன்றரை நூற்ருண்டுக் காலம் ஃபிரான்சு நாட்டில் தங்கிச் சுற்றித்திரிந்தனர். வடக்கத் தியர்களின் குண இயல்புகளைப் பெருமளவில் கொண்டிருந்தன ரெனினும், ஃபிரான்சிலிருந்த இடைவேளையில், ரோமானிய நாகரிகத்தால் மேவப்பட்ட, காலர்கள், ஃபிராங்கியர்களின் மொழியையும் நாகரிகத்தையும் அவர்கள் சேர்த்துக்கொண்ட னர். இவ்வாருக உருவாகிக்கொண்டிருக்கும்பொழுது, அவர் களுடைய பிறப்பிடம், புதிதாகத் தங்கிய இடம் இவைகளின் இனங்களைக்காட்டிலும் சிறப்பானதோர் இனத்தை உருவாக் கினர். மேலும், நாட்டின்மீது வெற்றி பெற்றவர்கள், தோற் கடிக்கப்பெற்றவர்களுக்கு எவ்விதத்திலும் அந்நியர்களல்லர். அண்மையிலிருந்ததும் மிகச் சிறப்புற்றிருந்ததுமான நார் மானிய இனம், ஆங்கிலேய மக்களின் மனத்தில் தொடக்கத்தி லிருந்தே மாற்றம் உண்டுபண்ணும் செல்வாக்கைத் தோற்று வித்தது. அதனுடன் இறுதியில் ஆதிக்க மேன்மையைப் பெறுவதற்கும் ஓரளவு வழியை உண்டுபண்ணியது. ‘வெற்றிக்கு முன்னர், ஆங்கிலேய இளவரசர்கள் நார்மண்டியில் கல்வி பெற்றுவந்தனர்; ஆங்கிலேய சமயஞ் சார்ந்த பதவி களும் எஸ்டேட்டுகளும் நார்மானியர்களுக்கு அளிக்கப்பட்டு வந்தன. நார்மண்டியில் பேசப்பட்டுவந்த ஃபிரெஞ்சு மொழி வெஸ்ட்மினிஸ்டர் அரண்மனையிலும் சாதாரணமாகப் பேசப் பட்டுவந்தது. ரூயின்கண் அமைந்திருந்த அரசவை, பக்த சீலரான எட்வர்டின் அரசவைக்கு மாற்றப்பட்டதுபோலத் தோன்றியதோடல்லாமல், நெடு நாள்களுக்குப் பின்னர் வேர்சயில்ஸ் எனுமிடத்தில் இரண்டாம் சார்லஸ் மன்னர் அமைத்திருந்த அரசவையையும் ஒத்திருந்தது.’[8]

வெற்றி உடனடியாகத் தோற்றுவித்த மாற்றங்கள் மிகச் சிறப்பானவை யென்பதில் ஐயமில்லை. அதனுடன் அம் மாறு தல்கள் சம்பிரதாயமானவையாயில்லாது நடைமுறைக்கு ஏற்றவையாயிருந்தன. மன்னரின் அதிகாரம் வெகுவாக வளர்ந் தது. ஆட்சிமுறை மிகுதியான மையத்தை நோக்கி ஒருமுகப் படுத்தப்பட்டதால், ட்யூடானிக் அரசியல் சட்டத்தின் முக்கிய இயல்பான ஆங்கிலேயரது தல சுயாட்சி முறை ஓரளவு காலம் தாழ்மையுற்றது. எனினும், பின்னர், மன்னரின் கொடுங்

கோன்மைக்கு எதிராகப் பிரபுக்களும் மக்களும் ஒன்று சேர்ந்த பொழுது, மீண்டும் தலையெடுக்கவாரம்பித்தது. இங்கிலாந்தின் சமூகக் கூறுகள் மிகுந்த மாற்றத்தைப் பெற்றன. பழைய அரச குடும்பம் அழிக்கப்பெற்று அந்நிய குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் அரசுபுரியலாயினர். அதனுடன் நாட்டின்பழைய செல்வந்தர்கள் மறைந்து புதியதொரு பிரபுத்துவ முறை தோன்றியது. பழைய பதவிகளான ஆல்டர்மன் அல்லது பிரபு, கொம்ஸ் எனப்படும் தோழர்களென்றும், ஷெரீஃபு என்பார் வைஸ்கொமிஸ் என்றும் புதுப்பெயர்களைப் பெற்றனர். புதிய பெயர்களும் அந்நியர்களான அதிகாரிகளும் பழைய சட்டங்களை அப்படியே பின்பற்றியும் புதிதாக இயற்றியும் வந்ததால், பழைய சட்டங்கள், ஆட்சிமுறையின் நடைமுறையில் பெருமளவிற்கு மாற்றத்தை அடைந்திருக்க வேண்டும்.

## நிலமானிய முறை

அரசியற் கூறில், வெற்றியின் மிக முக்கியமான விளைவு, அடியிலிருந்து நுனிவரை நாட்டிலிருந்த எல்லா நிறுவனங்களும் நிலமானிய முறையில் ஒன்றுபட்டிணைந்ததாகும்.[9] ஒரே சமயத்திலில்லாமல், அவ்வப்பொழுது மிகுதியான நிலங்களைக் கொண்ட எஸ்டேட்டுகள் பெருமளவில் கைப்பற்றப்பட்டதன் விளைவாக இறுதியில் வில்லியம் மன்னர், நாட்டில் தலையாய நிலச்சுவான்தாரராக அமைந்தபொழுது, இங்கிலாந்தில் நிலமானிய முறையைத் தோற்றுவித்தார்.

இப் பெரு மாற்றத்தை உண்டுபண்ணிய பல நிலைகளைப் பற்றியும், அவ்வாறு ஏற்படுத்தப்பட்ட மானியமுறையின் இயல்பைப்பற்றியும் நாம் நன்கறிய வேண்டும்.

முதலில், வெற்றிவீரர்,[10] மன்னருக்குச் சொந்தமான நிலங்களை, கடுமையான சட்டப்படி நடப்பது எனும் தோற்றத்தைக் கொண்டு, சொந்த உரிமையாக்கிக்கொண்டார்; அந்நிலங்கள் இறுதியில் மன்னரின் நிலங்களாக மாறின. அதனுடன் சாட்வின் குடும்பத்திற்குச் சொந்தமான மிகப்பெரிய எஸ்டேட்டுகள் பறிக்கப்பட்டதுடன், வில்லியம் மன்னருக்கு எதிராகப் போரிட்டவர்கள், போரிட்டவர்களாகச் சந்தேகிக்கப்பட்டவர்கள் முதலியவர்களுடைய நிலங்கள் அனைத்தும் பறிக்கப்பட்டன. பல்வேறு கௌன்டிகளில் பரவலாயிருந்த ஆயிரத்திற்கும் அதிகமான பண்ணைகளை மன்னருடைய சொந்த நிலங்கள் எனத் தமக்கு ஒதுக்கிவைத்துக்கொண்டு, மற்றவைகளை அவருடன் போரிட்ட தோழர்களுக்குப்

பங்கிட்டுக் கொடுத்தார். எல்லா ஆங்கிலேயர்களையும், மன்னருக்கு எதிராகப் போரிட்டது அல்லது மன்னருக்குப் பக்கத்தில் ஒன்ருகத் திரண்டுவராமலிருந்தது என்னும் அரசு குற்றம் புரிந்தவர்களாக வில்லியம் கருதியதாகத் தோன்றியபோதிலும், முதலில், நிலச் சொந்தக்காரர்களில் பெரும்பகுதியினர் அவர்களுடைய சொத்துகளை அவர்கள் வசமே வைத்துக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். எனினும், வெற்றி வீரரான வில்லியத்திடமிருந்து மறுபடியும் மான்யமாகப் பெற்றுக்கொண்டதான நிபந்தனைக்குட்படுத்தப்பட்டனர் என நம்பிக்கை கொள்ளுவதற்கு இடமளிக்கிறது; மிகவும் முக்கியமான பதவியைத் தாங்கியிருந்தவர்கள், மன்னரின் பக்கத்தில் துணையாயிருந்ததற்குப் பதிலாக மன்னரிடமிருந்து நிலங்களை இனுமாகப் பெற்றவர்களாயும், சிறிய அளவில் நிலங்களைப் பெற்றவர்கள் பணம் செலுத்தியதற்கு ஈடாகவும் பெற்றனர்.[11] இவ்வாறு செய்ததன் வாயிலாக வில்லியம், அவருடைய பதவியை, அதுவரை அவர் படையெடுத்து வெல்லாத மிகப் பரந்த மாவட்டங்களில் இருந்தவர்களையெல்லாம் சமாதானமான முறையில் ஏற்றுக்கொள்ளுவதைப் பெற்ருர்.

**திடீர் எழுச்சிகள் :** வெற்றி வீரரான வில்லியம், இங்கிலாந்திலிருந்து முதல் தடவையாக வெளிநாட்டிற்குச் சென்றிருந்த பொழுது, அச்சத்தாலேற்பட்ட மருட்சிக்குப்பின் தோன்றும் எதிர்விளைவு தோன்றியது. நார்மானியர்களும், பேயே நாட்டைச் சேர்ந்த ஓடோ என்பாரும், வில்லியம் ஃபிட்ஸ் ஆஸ்பர்ன் என்பாரும் நாட்டின் பாதுகாப்பிற்காக மன்னரால் விட்டு வைக்கப்பெற்றனர். அவர்கள் தங்களுடைய கொடுமையினுலும் இறுமாப்பினுலும் மக்களைக் கலகஞ் செய்யத் தூண்டினர். ஓர் எழுச்சி அடக்கப்பட்டவுடன், நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் வேறு எழுச்சிகள் தோன்றலாயின. எனவே, வில்லியத்தின் ஆட்சியில் முதல் நான்காண்டுகள் புதிதாக வென்ற இராச்சியத்தில் உண்மையான இறைமையை நிலைநாட்டுவதில் கழிந்தன. ஒவ்வொரு திடீர் எழுச்சியும், அது ஏற்பட்டதும், சட்டத்திற்கு எதிராக நடந்துகொண்டவர்கள் எனக் கருதப் பெற்றவர்களுடைய எஸ்டேட்டுகளைக் கைப்பற்றுவது தொடர்ந்து நிகழலாயிற்று. கலகம் விளைவித்தவர்கள் நாட்டுப் பற்று, நேர்மை முதலிய கருத்துடன் நியாயமாகத் தூண்டப் பெற்றவர்களாயினும், அவைகளைக் கவனியாது அவர்களுடைய நிலங்கள் கைப்பற்றப்பட்டன. இவ்வாறு, சட்டத்தைப் பின் பற்றுகிறது எனும் பெயரில் கொஞ்சங் கொஞ்சமாக நாட்டில் எல்லா நிலங்களும் மன்னரிடம் வந்தன. அவை நார்மானியப்

பிரபுக்களுக்கு அளிக்கப்பட்டு, அவர்கள் சொந்தநாட்டில் வழக்கமாகப் பின்பற்றிவந்த நிலமான்ய முறைப்படியே நிலங்களைக் கைக்கொள்ள அனுமதிக்கப்பட்டனர். பிற்காலத்திய கோட்பாடான, 'எல்லாம் அவரிடத்தில் உள்ளன ; தொடக்கத்தில் எல்லாம் அவரிடமிருந்தே வந்தன' என்பது சாதாரணக் கற்பனையாக இல்லாமல் பொருள் செறிந்ததாக[12] இருந்தது. டூம்ஸ்டே மதிப்பீட்டின்பொழுது பொதுவான மான்ய முறைக்குப் புறம்பாகச் சில நிலங்கள் காணப்பட்டனவெனினும், முதலாம் ஹென்றி சிம்மாதனத்தை அடையுமுன்னரே, நிலவுரிமை பற்றியவையெல்லாம் மான்ய முறையின்கீழ் ஒரே மாதிரியாகக் கொண்டுவரப்பட்டன.[13]

**ஃபிரெஞ்சு நிலமான்ய முறை :** நார்மானியர்கள் வெற்றியின் பொழுது, ஃபிரான்சில், நில உரிமை, ஆட்சிமுறை முதலிய இரண்டுமே நிலமான்ய முறையில் நன்கமைக்கப்பட்டிருந்தன. நிலமான்ய முறை தோன்றி வளர்ந்ததே ஃபிரான்சு நாட்டில் தான். அத்துடன் ஐரோப்பாக் கண்டத்தில் பிற நாடுகள் பெரும்பாலானவற்றிலும் இம்முறை வழக்கிலிருந்தது.[14] அம் முறையின் மூலக்கூறுகள் ரோமானியர்களிடமிருந்தும் டியூடானிக் இனத்தவரிடமிருந்தும் பெறப்பெற்று ஒன்று சேர்க்கப்பட்டு நாளடைவில் வளர்ந்தது. பகுதியாகவும் மறைமுகமாயும் அதன் கூறுகளை ரோமானிய வழக்கங்களில் காணலாம் ; எனினும், நேரிடையாகவும் முக்கியமானதாயுமுள்ள அதன் கூறுகளுக்கு மூலகாரணமாயிருந்தவை இரண்டாகும் : (1) ஃப்ராங்கிய மன்னர்கள், பேரரசர்களின்கீழ் வளர்ச்சியுற்ற நிதி ஊதியமான மான்யங்கள் வழங்கப்படும் முறை ; (2) அத்துடன் இணைந்து வளர்ந்த பணிபுரியும் முறை அல்லது தன்னையே பாதுகாக்குமாறு பரிந்து இறைஞ்சுதல் எனும் வழக்கம். இவ் வழக்கம், நாகரிக முதிர்ச்சியற்றதும், பல வகைகளில் ஜெர்மானியர்களின் கொமிடாடஸை ஒத்திருந்தது மானதைத் தன்னுடன் சேர்த்துக் கலந்துகொண்டு ஒதுக்கித் தள்ளி எழுந்ததாயிருந்தது.

ஐரோப்பாவில், நிலமான்ய முறை, நில உரிமை பற்றியது என்பதைவிட மிகுதியான கருத்துச் செறிவுடையதாயிருந்தது. மக்களுடைய ஆட்சிமுறை, சட்டம், சமூகம் முதலிய தொடர்புகளுடன் நிலமான்ய முறை பிரிக்க முடியாதவாறு இணைக்கப்பட்டிருந்தது. நிலமான்ய உரிமையும் தல நீதிமுறை உரிமையும் இணைக்கப்பட்டிருந்தன. தொடக்கத்தில் வாழ்நாள் முடிய அனுபவித்துவந்தது, விரைவிலேயே தலைமுறை வழியில் பெறப்படுவதாக நில உரிமை ஏற்பட்டது.[15] எனவே, பண்ணை

நிலவுரிமையில் கீழ்மான்ய அமைப்பு எனும் வழக்கம் இயற்கையாகவே தொடர்ந்தது. மன்னரிடமிருந்து பெரிய மான்யங்களைப் பெற்ற பெரிய நிலப்பண்ணையாளர், தனக்கென்ச் சொந்தமாக ஒரு பகுதி நிலத்தை வைத்துக்கொண்டு, மீதியைத் தன்னுடைய எசமானருக்குத் தான் செய்யக் கடமைப்பட்டிருந்த ஊழியங்களை, தனக்குச் செய்யும் அடிப்படையில் தன்னைச் சார்ந்து வாழ்ந்தவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுத்தார். எனவே, மான்ய ஊதியமாகப் பெரிய எஸ்டேட்டுகளைப் பெற்றிருந்த மாநில ஆட்சியாளர்கள், அவர்களுடைய மாநிலப் பகுதிக்குள் பல சிறு மாகாணப் பகுதிகளை—வல்லாட்சிக்குட்பட்ட சிறு வல்லாட்சிகளை—தோற்றுவித்தனர். இவைகளில் ஆட்சி புரிந்தவர்கள் மன்னருக்குக் கீழ்ப்படிவதைப் பெயரளவில் ஏற்றுக் கொண்டிருந்ததுடன், நடைமுறையில் இராணுவ, சிவில் பற்றிய துறைகளில் சுதந்திரமாக உரிமை பாராட்டி நடந்து கொண்டனர். எனவே, மான்ய முறையிலமைந்த பண்ணையாளர், அவருக்கு அடுத்து மேலாக இருந்த பிரபுவிற்குக் கீழ்ப்படிதலையும் பணிவையும் தெரிவித்துக்கொள்ளுவது என்பதைத் தவிர, நாட்டிற்கோ அல்லது நாட்டையாளும் மன்னருக்கோ தன்னை உட்பட்டவராகக் கருதவில்லை என்பது இம்முறையின் பயனாகக் காணப்பெற்றது. மன்னர் அடுத்த மேலான தலைமைப் பிரபுவாயிருந்தால் அவருக்குக் கீழ்ப்படிதல் உரித்தாகும். அவ்வாறு செய்யப்படுவது, அரசியல் துறையில் நாட்டையாளும் மன்னன் என்ற முறையில் அமையாது, மான்ய முறையில் தனக்கு மேற்பட்ட பிரபு எனும் காரணமாகச் செய்யப்பட்டதேயாகும். எனவே, ஃபிரான்சில் நில மான்ய முறை செருக்குற்றிருந்தகாலையிலும், மன்னருக்கு அடுத்த படியிலிருந்த மான்யப் பிரபுக்களின் குடிகள், மன்னருக்கு எதிராக அவர்களுடைய எசமானரான பிரபுவின்கீழ் போரிடத் தயங்கியதேயில்லை.[16]

நிலப்பண்ணை முறையைச் சாராத நிலங்களும் பண்ணை முறைக்குப் பொதுவாக மாற்றப்பட்டது, பெருமளவு சிறிய சுதந்திரமான நிலச் சொந்தக்காரர்களின் தன்னிச்சையான செயலாகும். அவர்கள், அராஜரிகமும் கொள்ளையும் தலைவிரித்தாடிய காலத்தில், தங்களுடைய எஸ்டேட்டுகளையும் உடைமைகளையும் பரிந்து இறைஞ்சும் முறையில், அக்கம் பக்கத்திலிருந்த வலிமை வாய்ந்த பிரபுக்களிடம் ஒப்படைத்துக் கொள்ளுவதை விரும்பினர்.[17] சாதாரணமான லௌகீகர்களுடையதோடன்றி திருச்சபையைச் சேர்ந்த நிலங்களும் எல்லாவற்றிலும் படிந்து பரவுகிற நிலமான்ய முறையின்கீழ்

வந்தன. மான்யப் பிரபுக்களின் இடையே வாழ்ந்த மேற்றிராணியார்கள், மடாலயத் தலைவர்கள் ஆகியோர் மான்யப் பிரபுக்களுடன் சரிநிகரராக, மன்னருக்கோ அல்லது மேலானவர்களுக்கோ அவர்கள் வசமிருந்த நிலங்களுக்காக உரிமைக் கடப்பாட்டு உறுதிமொழியை எடுத்துக்கொண்டனர். அவ்வாறு உறுதிமொழியைப் பெற்றவர்கள், மான்ய முறைப்படி அதிகாரத்தைக் கைக்கொண்டிருந்தனர்.

**ஆங்கிலேய நிலமான்ய முறை:** இங்கிலாந்தில், வெளி நாட்டுத் தொடர்பற்ற நிலமான்ய முறை வளர்ந்துகொண்டு வந்தது. எனினும், அதன் வளர்ச்சி மெதுவாகவும், ஐரோப்பாக் கண்டத்தைப் போலல்லாது டியூடானிய இன அடிப்படையிலேயே அமைந்ததாயுமிருந்தது. ஐரோப்பாவில், ரோமானியப் பேரரசின் சட்டஞ் சார்ந்த கொள்கைகளும் நடவடிக்கைகளும் வேகமாக முன்னேறச் செய்யும் செல்வாக்கைப் பெற்றிருந்தன. நிலமான்ய முறை, இங்கிலாந்தில், நார்மானியர்களின் வெற்றிக்கு முன்னர் ஏற்பட்டிருந்த ஒரு முறையாகக் கூறுவதற்கில்லை. என்றாலும், அதன் கூறுகள் தனிமையாகவும் ஒன்றோடொன்று இணைந்ததாகவும் இருவிதங்களில் நாட்டில் தொன்று தொட்டே வழக்கத்திலிருந்தன.[18] நிலமான்ய முறையின் முக்கியமான இரு கூறுகளாவன: (1) ஒப்பந்தத்தின் அடிப்படையில் பிரபுவிற்கும் பண்ணையாளுக்குமிடையே ஏற்பட்ட நேரிடையான தொடர்பும், இரு சாராரிடையே, ஒரு சாரார் பாதுகாப்பது, மற்றொரு சாரார் பணிவிடைகள் புரிவது என்னும் முறையில் உண்மையான பிணைப்பை ஏற்படுத்துவதும்; (2) இராணுவச் சேவை புரிவதெனும் நிபந்தனையுடன் நிலத்தைச் சொந்தமாக அனுபவிப்பதும், நிலத்தை வழங்கும் பிரபுவிடம் நிலத்தின் மீது நேரிடையான சொந்த உரிமை எப்பொழுதுமிருப்பது என்பனவாம்.[19] இவ்விரு கூறுகளும் ஒன்றாகச் சேர்ந்து இணைவது நிலமான்ய முறையாகும். தனித்தனியாகப் பிரித்து நோக்கினால் போதுமான பொருள் செறிவற்றதாகும். டியூடானிய காலத்திய பிரின்ஸெப்ஸிற்கும் அவரது கமிட்டெஸிற்குமிடையேயும், ஆங்கிலேயப் பிரபுவிற்கும் தீன்களுக்குமிடையேயும் காணப்பட்ட நேரிடை உறவுகளில், நிலமான்ய முறையின் முதற் கூற்றை முழுமையாகக் காண்கிறோம். பரிந்து இறைஞ்சுதல் எனும் வழக்கு நாட்டில் பொதுவாக எவ்வாறு காணப்பட்டது என்பதை ஏற்கெனவே கண்டோம்; அத்துடன் பிரபுவைச் சாராத ஒருவன், நாட்டில் ஒழுங்கு முறையற்றவனாகக் கருதப்பட்டு, சட்டப் பாதுகாப்பற்றவனாக

நடத்தப்பட்டான்.[20] பிரபு அவரைப் பின்பற்றுகிறவர்களுக்கு வெகுமதியளிப்பதெனும் வகைகளில் இயற்கையாகக் காணப்படுவது நிலத்தை மானியமாக அளிப்பது ஒன்றுகும். அவ்வாறு அளிக்கப்படுவது, பணிபுரிவது எனும் நிபந்தனையில் ஒருவிதமான இராணுவப் பணிபுரிவது என்பதன் மீது அமைந்ததாகும். பதினொன்றும் நூற்றுண்டின் தொடக்கத்தில், மன்னர் தம்மைப் பின்பற்றியவர்களுக்கு அவர்கள் முன்னர் செய்த சேவைக்கும், வருங்காலத்தில் சேவைக்காக உடன் வைத்துக்கொள்ளுவதற்கும் வெகுமதியாக நிலங்களைப் பகிர்ந்தளிக்கும் உரிமையைக் கைக்கொண்டதாகத் தெரிகிறது. மேலும், மான்ய முறைப்படி அதற்குட்பட்டு உள்ளடங்கிய மான்யங்களும், பரிந்து இறைஞ்சுதல் எனும் வாயிலாக, இங்கிலாந்தில் நிலப்பகுதியின் பெரும்பகுதி சார்ந்த நிலவுரிமைக்காரர்களால் பெறப்பட்டது. இவ்வாறு ஏற்பட்டது, மான்ய முறைக்குட்படாத மிகக் குறைவான எண்ணிக்கையுடைய, சொந்தமாக நிலமுடையவர்களை வேறுபடுத்திக் காட்டும் தனிச்சிறப்புடையதாயிருந்தது.[21] எனினும், இந்தப் பகுதிவரை, நிலமான்ய முறையின் இயல்பு நில உரிமையை மாத்திரம் பாதிப்பதாகவிருந்தது. கான்யூட் மன்னரால் தோற்றுவிக்கப்பட்டுப் பக்தசீலரான எட்வர்ட் மன்னரால் தொடர்ந்து கையாளப்பட்ட கொள்கை நிலமான்யக் கருத்தை ஒருபடி மேலே எடுத்துச்சென்றது. நாட்டை ஒருசில பெரும் ஏர்ல்களிடம் பிரித்துக் கொடுப்பதும், அவர்கள் சில சமயங்களில் தங்களுடைய அதிகாரத்தைத் தங்களுடைய குழந்தைகளுக்கு வாரிசுமுறையில் மாற்றிக் கொடுப்பதில் வெற்றி கண்டதும் மேலே குறிப்பிடப்பட்ட கொள்கையிலடங்கும். அத்துடன் நார்மானியர்களின் வெற்றி ஏற்பட்டிராவிட்டால், ஐரோப்பாவில் நிலவிய நிலமான்யமுறைக்கு ஒத்ததான வளர்ச்சியில் இதுவும் முடிந்திருக்கும் எனலாம்.

ஃபிரான்சு இராச்சியத்திலும் நார்மானிய மாநிலப் பகுதியிலுமாக இரண்டிலும் காணப்பட்ட நிலமான்ய முறையின் தீமைகளையும் அமைக்கப்பட்டிருந்த அமைப்பையும் வில்லியம் நன்கறிந்திருந்தார். அவருடைய சொந்தப் பிரபுக்களுக்கும் அவருக்குமிடையே நடந்த போட்டிகளின் தீவிரத் தன்மை அண்மையில் நடந்தது எனும் எண்ணம் இவைகளை நினைவுபடுத்தியதால், புதிதாக வெற்றிமூலம் பெறப்பட்ட இராச்சியத்தில் அதேமாதிரியான போராட்டம் மீண்டும் முடியுமானல் ஏற்படாதவாறு தடைசெய்யக் கருதினர். முதலிலிருந்தே இங்கிலாந்தில், நிலமான்ய முறையின் இயற்கையான வளர்ச்சி

யைத் தடைசெய்ய நடவடிக்கைகளை மேற்கொண்டார்; அத்துடன் இங்கிலாந்தில் வளர்ச்சியுற்றிருந்த சிக்கல் நிறைந்த முறைக்குப் பதிலாக ஃப்ராங்கியர்களின் நில உரிமைபற்றிய முறையைச் சிறிது சிறிதாக மாற்றியமைத்ததில், ஒரு புதிய நிலமான்ய முறையை அமைத்ததாக அவரைக் கூறலாம். அது அரசாங்கத்தின் நிறுவனம் என்றில்லாது நிலவுரிமையைப் பற்றிய ஒரு முறையாயிருந்தது. நாட்டின் மன்னராக ஆட்சி புரிய வேண்டும் என அவர் உறுதிபூண்டார்; நிலமான்ய முறைப்படி மிக்குயர் தலைமைப் பிரபுவாக விளங்க விருப்பமில்லாதிருந்தார். எனவே, நிலமான்ய முறையின் எல்லா நலன்களையும் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு, அதில் காணப்பட்ட பேரிடரை விளைவிக்கக்கூடிய போக்கை அடியோடு அகற்றினர். அதாவது, பழைய ஆங்கிலேய வழக்கப்படி குடியானவன் தன்னுடைய நிலச் சொந்தக்காரரான பிரபுவைச் சார்ந்திருத்தல் எனும் மரபிற்குப் பதிலாக, எல்லா நிலச் சொந்தக்காரர்களும், இடைப்பட்ட நிலச் சொந்தக்காரர்களும், தலைமை மான்ய பிரபுக்களும் மன்னருக்கு மான்ய முறைப்படி கீழ்ப்படிந்து நடப்பது எனும் சூளுரையை எடுத்துக்கொள்ளவேண்டும் என உத்தரவிட்டார்.

**சாலிஸ்பரி சூளுரை :** 1086-ல் ஆகஸ்டு மாதம் முதல் நாள் சாலிஸ்பரி சமவெளியில் கூட்டப்பெற்ற புகழ்பெற்ற மக்கள் கூட்டத்தில் இதற்கு முறைப்படி உத்தரவிடப்பட்டது. இக் கூட்டத்திற்கு, விடான் சபையைச் சேர்ந்தவர்கள், இங்கிலாந்தில் மதிப்புள்ள நிலம் படைத்த எல்லா நிலச் சொந்தக்காரர்கள், அவர்களைச் சேர்ந்த எல்லா உட்குடிகளும், 'அவருடைய ஆள்களாக மாறி, மற்ற எல்லா மனிதர்களுக்கும் எதிராக மன்னரிடம் மான்ய முறைப்படி உண்மையாகக் கீழ்ப்படிந்து நடப்பதெனும் சூளுரையைச் செய்யுமாறு' செய்தார்.[22]

**டூம்ஸ்டே புத்தகம் :** மன்னருக்குப் பணிவறிவிப்பையும், கடப்பாட்டையும் கொண்ட தேசியச் சட்டத்தைத் தொடர்ந்து டூம்ஸ்டே நில அளவு மதிப்பீடு திரட்டுவது உடனேயே தொடர்ந்தது. இது சேகரித்தல்பற்றிய உத்தரவு 1085—86-ல் மாரிக்காலத்தினிடையில் கிளௌஸஸ்டரில் கூடியதும் நினைவு கொள்ளத்தக்கதுமான மக்கள் கூட்டத்தில் பிறப்பிக்கப்பட்டது. அண்மையில் டென்மார்க்கிலிருந்து முயற்சிசெய்யப்பட்ட படையெடுப்பு, நாட்டின் வருவாய்த்துறை சார்ந்த வகைமுறை வாய்ப்புகளைப் பற்றிச் சரியான மதிப்பீடு விரும்பத்தக்கதென்பதை மன்னர் நன்குணர்ந்தார். நில அளவு மதிப்

மீடும் சிறப்பான குறுகிய கால அளவான ஒரே ஆண்டில் முற்றுப்பெற்றது. ஒவ்வொரு (ஷயரிலும்) மாவட்டத்திலும் கமிஷனர்கள், அவர்களுடைய விசாரணைகளை, ஷெரீஃபுகள், மான்யப் பிரபுக்கள், அவர்கள் பாதுகாப்பிற்காக உடன் வைத்துக்கொள்ளப்பட்டிருந்த நார்மானியர்கள், வட்டாரச் சமய குருமார்கள், ரீஃபுகள், ஒவ்வொரு நகர்ப்பகுதியைச் சேர்ந்த ஆறு ஸியோர்ல்கள் முதலியவர்களுடைய உறுதி மொழியைக் கொண்டு நடைபெற்றன. அவர்களுடைய தொண்டின் பயன், நாட்டிலுள்ள எல்லாவகையான நிலங் களைப்பற்றியும் நுண்ணிய விவரங்கள் திரட்டப்பட்டதேயாகும். அதில் வடக்குப் பகுதியைச் சேர்ந்த கௌன்டிகளான நார்த் தம்பர்லந்து, கம்பர்லந்து, வெஸ்ட்மோர்லந்து, டர்ஹாமும் அதைச் சேர்ந்ததும், இப்பொழுது லங்காஸ்டர் என வழங்கும் பகுதியுமாக நான்கும் விலக்கப்பட்டிருந்தன. அந் நூலில், தலைமை மான்யதாரர்கள், உட்குடிகள், சுதந்திரமாக இருந்த நிலவுரிமையாளர்கள், சிறு பண்ணையாள்கள், பண்ணையாள்கள் முதலியவர்கள் விவரிக்கப்பட்டுள்ளனர்; அத்துடன், அவர் களுடைய நிலவுரிமைபற்றிய தன்மையையும் கடமைகளையும் விவரித்துக் கூறுகின்றன. தவிர, மன்னர் எட்வர்டின் காலத் திலும், படையெடுத்து வெற்றியேற்பட்ட பின்னரும், நில அளவு மதிப்பீடு செய்யும்பொழுதும் இருந்த மதிப்பும் விசா ரணைக்கு மூலமாயிருந்தவைகளை அறிவிப்பதுடன், நில மதிப்பீடு செய்வதில் ஏதாவது கூடுதலைச் செய்யக்கூடுமாவென்பது பற்றியும் மன்னருக்குத் தெரிவிக்கக்கூடியதாயிருந்தது.[23]

**பெரிய நிலமான்யதாரர்கள்:** உட்குடிகளிடமிருந்து பணிவை வலிந்து பெற்றதுடன்கூட, பெரிய நிலமான்யதாரர் களைக் கட்டுப்படுத்துவதற்கும் பயனுள்ள நடவடிக்கைகளை மன்னர் மேற்கொண்டார். அவருடைய முக்கிய மான்யப் பிரபுக்களுக்கு வழங்கப்பட்ட பிரபுத்துவம் நாட்டின் பல பகுதி களில் சிதறுண்டு காணப்படுவதாக இருந்தது. இவ்வாறு வழங்கப்பட்டது, ஒரு மாவட்டத்தில் ஒருவருக்குச் சொந்தமான பகுதிகள் மிகுதியாக இருந்ததால், கலகம் செய்வதற்குப் போதுமான தூண்டுகோலாகவிருக்கக்கூடாது எனும் கருத் தின் அடிப்படையில் அமைந்ததாகும்.[24] எட்வர்டு மன்னர் காலத்தில் நாட்டின் முழுமையான தன்மையை அச்சுறுத்திய பெரிய பிரபுத்துவங்களை வில்லியம் ஒழித்தார். அத்துடன் பழைய ஆங்கிலேய வழக்கத்தைப் பின்பற்றி ஏர்லின் அதிகார எல்லையை ஒரு மாவட்டத்திற்குட்பட்டதாகக் கட்டுப்படுத் தினர். ஒரு மாவட்டத்தின் அரசாங்கம்—நீதித்துறை, இராணு வம், நிதிபற்றியவை—நடைமுறையில் ஷெரீஃப்பால் நடத்தப்

பெற்றது. அவர் நேரிடையாக மன்னருக்குக் கட்டுப்பட்டவ ராயிருந்தார். வில்லியத்தால் பின்பற்றப்பட்ட பொதுவான கொள்கைக்கு விலக்களிக்கும் வகை, செஸ்டர், டர்ஹாம், கென்ட் எனும் கோமகாரின் ஆட்சிக்குரிய பகுதிகள் தோற்றுவிக்கப் பட்டதன் வாயிலாக அறியப்படுவதாகும். இவ்வாறு சிறப் பான அதிகாரங்கள் வழங்கப்பட்டன. வேல்ஸ், ஸ்காட்லந்து, ஐரோப்பா முதலிய இடங்களிலிருந்து ஏற்படக்கூடிய தாக்கு தல்களிலிருந்து முறையே நாட்டைப் பாதுகாப்பதற்காகவே அவை அளிக்கப்பட்டன. அதிகாரம் அளிக்கப்பட்டவர்களில் இருவர் சமயப் பிரிவைச் சேர்ந்தவர்கள். எனவே, குடும் பத்தைத் தோற்றுவித்து வாரிசு முறையை ஏற்படுத்துகிறவர் களாக அவர்கள் இருக்கமுடியாது. மேலும், பிரபுக்களின் அதிகார வளர்ச்சிக்குத் தடையாக, மாவட்டங்களையும் ஹண்ட்ரட் பிரசித்தி வாய்ந்தது எனும் நிலப்பிரிவையும் சார்ந்தவையான நீதிமன்றங்கள் முழு வலிமை வாய்ந்ததாக நடத்தியது அமைந்தது. இதன் பயனாக, இயன்றவரையில், மான்யப் பிரபுக்களின் சொந்தமான பண்ணை நீதிமன்றங் களின் அதிகார வரம்பு கட்டுப்படுத்தப்பட்டது.

**உரிமை நுகர்வுக் காலம்: நைட் வீரர்களின் ஊழியம்:** நார் மானிய வெற்றிக்கு முன்னர் எல்லா நிலங்களும் மூன்றுவித மான கடப்பாடான தேவைகளுக்குட்படுத்தப்பட்டிருந்தன.[25] அக்கடப்பாடுகள் நீட்டிக்கப்பட்டன. ஆனால், நிலமான்ய முறைப் படி நிலவுரிமை ஏற்படுத்தியபின், எல்லா நிலங்களும் குறிப் பிட்ட வேறு கடப்பாடுகளுடன் சேர்ந்தனவாகக் கருதப்பட் டன. இக் கடப்பாடுகள் (மன்னர் எனும் பதவி காரணமாக இல்லாது, நிலமான்ய முறைப்படி தலைவர் எனும் காரண மாக) முதன்முதலாக மான்யத் தலைவர்கள் எனப்படுவோருக்கு நிலங்களை அளித்தவர் என்பதால் மன்னருக்கோ அல்லது அவர்களுக்குட்பட்டிருந்த கீழ்க்குடி மான்யதாரர்களால்[26] தலைமை மான்யப் பிரபுக்களுக்கோ செலுத்தப்பட்டன; மேலும், இடைப்பட்ட மான்யதாரர்களுக்கு அவர்களின் கீழிருந்த சொந்த மான்யக் குடிகளாலும் இக் கடப்பாடுகள் செலுத்தப்படவேண்டியவையாகும். இவ்வாறான கடப்பாடு களிளெல்லாம் மிகவும் முக்கியமானதாயிருந்தது, நைட் வீரர் களின் ஊழியமாகும். இந்த ஊழிய உரிமையையொட்டித் தான் மன்னர் அவரைச் சார்ந்தவர்களுக்கு ஊழிய மான்யங்களை வழங்கினார். அவ்வாறு ஊழிய மான்யம் வழங்கப்பெற்றவர்கள், நன்கு பயிற்சி யளிக்கப்பட்டவர்களும், தக்க போரணியைக் கொண்டவர்களும், ஆண்டிற்கு நாற்பது நாள்களுக்கு அவர்க

ளுடைய சொந்தச் செலவிலேயே (அடிமை ஊழியக் கடப்பாடுடன்)[27] படையில் சேர்ந்து பணி புரிவதற்கும் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையையுடைய நைட் வீரர்களை அனுப்பி உதவினர். மேற்றிராணியார்கள், மிக்க கௌரவம் வாய்ந்த சமயத் தலைவர்கள், சமயத் துறையைச் சார்ந்த நிறுவனங்கள் முதலியவைகளுக்கெல்லாம் சொந்தமான நிலங்களும் இதே ஊழிய உரிமையின் அடிப்படையிலேயே பொதுவாக வழங்கப்பட்டிருந்தன. எனினும், சில சமயங்களில், சமயஞ்சார்ந்த நிறுவனங்களும், மதகுருமார்களும் ஃப்ராங்கல்மாய்ன் அல்லது இனம் பிச்சையாக உரிமையுடன் நிலங்களைப் பெற்றிருந்தனர்; அவர்கள், மான்யப் பிரபுவிற்கு இவ்வுலகத்தைச் சார்ந்த எவ்விதப் பணியையும் செய்யவேண்டியதில்லை; அதற்குப் பதிலாக, நிலமளித்தவர்களின் ஆத்மா நன்னிலையெய்துவதற்காக இறை வழிபாடுகளையும், இறையருள் கிட்டுவதற்கான துதிகளையும் இடைவிடாது செய்யக் கடமைப்பட்டவர்களாவர்.

மான்யம் வழங்கப்பட்டவுடன், மான்யக் குடிக்கு நிலம் அளிப்பது, சீசன் லிவரி[28] எனப்படும் அடையாளத்துடனோ அல்லது தக்க அடையாளத்துடனோ எல்லோரும் அறியும் வகையில் செய்யப்பட்டது. அதன் பின்னர், மான்யம் பெற்றவர், மான்யம் பெறும் சடங்கில் உபயோகிக்கப்பட்ட, 'நான் தங்கள் மனிதனாகிவிட்டேன்' எனும் சொற்களுக்கு ஏற்ப, பணியறிவிப்பு வணக்கத்தைச் செய்தார். பிரபுவின் முன்னர் தாழ்மையுடன் மண்டியிட்டும், போர்க்கத்தியைக் கச்சையிலிருந்து தளர்த்தியும், தலையில் அணியில்லாமலும், தனது இரு கைகளையும் சேர்த்துப் பிரபுவின் கைகளுக்கு இடையில் பதித்தும் பின்வருமாறு கூறினார்:

'இன்று முதல் என்னுடைய உயிர், உடல், பொருள் முதலியவையுடன் நான் உங்கள் மனிதனாகியுள்ளேன். இவ்வுலகில் தங்களையே எனது வழிபாட்டுக்குரிய இறையாகவும் கொண்டுள்ளேன். தங்களிடம் உண்மையாயும் நம்பிக்கை கொண்டவனுயுமிருப்பதுடன், தங்களிடமிருந்து நான் பெற்றுள்ள குடியிருப்பு வசதிகளுக்கு ஈடாக நம்பிக்கையுறுதியுள்ளவனுயுமிருப்பேன்.'[29] உறுதிமொழியெடுத்தபின், மான்யக் குடியானவரின் கன்னங்களில் முத்தமிட்டு, மான்ய முறைப்படியான கடப்பாட்டுறுதிமொழியைப் பெற்றார்.[30] மான்ய முறையின் உட்குடியானவர் விஷயத்தில், அவருடைய கடப்பாட்டுறுதிமொழி யெடுத்துக்கொள்ளுவதில், அவருடைய இறையான மன்னரிடம் காட்டவேண்டிய நம்பிக்கை தனியாக ஒதுக்கப்பட்டிருந்தது.

போர்க்காலத்தில் பணிபுரிவதுடன்கூட ஆண்டுதோறும் நடைபெற்ற முப்பெரும் விழாக்களிலும் மன்னரவைக்கு வருவதற்குத் தலைமை மான்யதாரர்கள் கடமைப்பட்டிருந்தனர். அதே கொள்கையடிப்படையில் இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட சுதந்திரமான நிலச்சுவான்தாரர்களைக் கொண்டிருந்த இடைமான்யதாரர்களும் பண்ணையில் அமைந்திருந்த பண்ணையாட்சி நிலக்கிழார்களின் அவைக்கு வரும்படி கட்டாயப்படுத்தும் உரிமையைப் பெற்றிருந்தனர்.[31]

**நைட் வீரர்களின் ஊழிய வரி விழுக்காடு:** நைட் வீரர்களின் ஊழிய மான்ய உரிமை, மிகப் பளுவான வேறு பல பண்ணை சார்ந்த கடமைகளுக்கும் உட்பட்டதாயிருந்தது. இவைகள் நியாயமற்ற வகையிலும் கொடுமையுடனும் வலிந்து கைப்பற்றப்பட்டதால், நார்மானிய வமிசத்தரசர்களும், முதலில் ஆட்சி புரிந்த ஆஞ்சவின் வமிசத்தரசர்களும், பின்னர் ஜான் மன்னரிடமிருந்து மகாசாசனத்தைப் பறித்த மான்ய பிரபுக்களுக்கு முக்கியத் தூண்டுகோலாயிருந்தனர்.[32] மான்ய முறையைச் சார்ந்த கடமைகளாவன :

(1) மான்யப் பிரபு நெருக்கடிக்குள்ளானபொழுது, உதவிகள் எனும் பெயரில் மான்யக் குத்தகைதாரர்கள் சில துணையுதவி வழங்குதலையும் செய்யக் கட்டுப்பட்டவர்களாகத் தொடக்கத்தில் எதிர்பார்க்கப்பெற்றுப் பின்னர் வற்புறுத்தப் பெற்றனர். எனவே, பிரபு அவர் செலுத்தவேண்டிய கடன்கள், அவருடைய பிரபுவிற்குத் தொகை செலுத்துவதன் வாயிலாக விடுதலைபெறுவது, பண்ணை நிலங்களை வாங்கிச் சேமிப்பது போன்றவைகளுக்கும் பணவுதவி செய்யுமாறு மான்யக் குடிகள் வற்புறுத்தப்பெற்றனர். நியாயமான தொகையாயிருக்கும் நோக்குடன் இவ்வுதவித் தொகைகள் இறுதியில் மூன்று சிறப்புத் தறுவாய்களில் செலுத்தத்தக்கவையென முடிவு செய்யப்பட்டன. பிரபுவைப் போர்ச்சிறையிலிருந்து மீட்பது, அவருடைய மூத்த மகன் நைட் பதவிபெறும் சமயம், அவருடைய மூத்த மகளின் திருமணச் செலவைச் செய்தல் என்பனவாம்.[33] முதலாவது வெஸ்ட்மினிஸ்டர் சட்டம் (1275), கீழ்க்குடியானவர்கள் அவர்களுடைய பிரபுக்களுக்குச் செலுத்தவேண்டிய கடமைத் தொகையை ஒவ்வொரு நைட் வீரரின் கட்டணத்திற்கும், இருபது பவுன் மதிப்புள்ள மான்ய நிலத்திற்கும் நியாயமான உதவித்தொகையாக இருபது ஷில்லிங் செலுத்தப்படவேண்டுமென முடிவு செய்தது.[34]

(2) குடியானவன் இறந்தபொழுது, அவனுடைய நிலங்கள் அவனுடைய வாரிசுகளுக்கு வந்தன. அதில் பெண்

களைவிட ஆண்களுக்குச் சலுகை காட்டப்பட்டது. சகோதரர்களில் இளையவனைக்காட்டிலும் மூத்தவனுக்குச் சலுகை காட்டப்பட்டது. மூதாதையரின் எஸ்டேட்டை மேற்கொள்ளு முன், வாரிசுதாரர் தக்க பிராயத்தினராயிருந்தால், விடுதலைப் பணம் எனும் தண்டத் தொகையைச் செலுத்தவேண்டியவரானார்.[35] இது பழைய ஆங்கிலேயர் வழக்கமானதும், குடியானவர் மறைவின்போது பண்ணை மேலாட்சி உரிமைப்படி செலுத்தப்பட்ட விலங்கு அல்லது பொருட்கொடை என்பது மான்ய முறைப்படி அமைக்கப்பட்டதைப் போன்றிருந்தது. பொதுவாக நார்மானிய மன்னர்களும், சிறப்பாகச் செந்நிறத் தலைவரான வில்லியமும் தம்மிச்சைப்படி மிக்க மிகுதியான இடர்காப்புதவியை வன்முறையில் பெற்றதன் காரணமாக, வாரிசுதாரர் முடிவில் நிலத்தை விலை கொடுத்து வாங்குமாறோ அல்லது மீட்புத்தொகை செலுத்திப் பெறுமாறோ வற்புறுத்தப் பெற்றனர். இம்மாதிரித் தவறான வழியில் உதவித்தொகையைப் பெறுவதைத் தடை செய்வதற்காகவே சிறப்பாக முதலாம் ஹென்றியின் சாசனத்தில் வழி செய்யப்பட்டது. அச் சாசனத்தின்படி மன்னர், நியாயமானதும் சட்டப்படியுமுள்ள இடர்காப்புதவியை மாத்திரம் கட்டாயமாகப் பெறுவதாக உறுதிமொழி கூறியதுடன், அவருடைய மான்யப் பிரபுக்களையும் அவர்களுடைய உட்குடிகளையும் அதேபோன்று செய்யுமாறு உத்தரவிடுவதாயும் உறுதி கூறினார்.[36] இரண்டாம் ஹென்றியின் ஆட்சியில் நைட் வீரரின் கட்டணம் நியாயமான முறையில் நூறு ஷில்லிங் என்றும், மான்ய உரிமை நிலங்களுக்கு, ஓர் ஆண்டின் நிலவரி என்றும், ஆனால், இத்தொகை பெருமகன் காணியுரிமைக்குக் 'கருணையுள்ள பிரபுவான மன்னரின் விருப்பத்திற்கு ஏற்றவாறு மாறுபட்டதாயிருந்தது' எனவும் கிளென்வில் என்பார் கூறியுள்ளார். பழைய இடர்காப்புத் தொகையின் அளவு, மகாசாசனப் பத்திரம் ஏற்படும்வரை குறிப்பிடப்பெறவில்லை. அப்பொழுது பெருமகன் காணியுரிமைக்கு நூறு பவுன்கள் எனவும், நைட் வீரரின் கடமைக்கு நூறு ஷில்லிங் எனவும் உறுதி செய்யப்பட்டது.[37]

தலைமை மான்யப் பிரபுக்கள், பிரைமர் சீஸன் எனும் கூடுதலான இடர்காப்புதவிகளைச் செலுத்தவேண்டியவர்களானார்கள். இது குடிகளில் ஒருவர் இறந்துபட்டால் தக்க வயது வந்த அவரது வாரிசுதாரரிடமிருந்து வாரிசு முறையாகப் பெற்ற நிலங்களின்மூலம் கிடைக்கும் வருவாயில் ஓராண்டுக்குரிய இலாபத்தைப் பெறுவது மன்னரின் உரிமையைப் பற்றியதாயிருந்தது.[38]

(3) வாரிசுதாரர் இள வயதினராயிருந்தால், இளங்கண்மை (wardship) எனும் பெயரில், இலாபக் கணக்கு என்பதில்லாமல், இளையவரின் உடல், நிலங்கள் முதலியவற்றைப் பாதுகாப்பில் கொள்ளுவதற்கு மான்யப் பிரபுவிற்கு உரிமை இருந்தது. ஆண்கள் இருபத்தொரு வயதானபொழுதும், பெண்கள் பதினன்கு ஆனபொழுதும், பாதுகாப்பவரின் காப்பிலிருந்து விடுதலையைக் கோருவதற்கான உரிமையளிக்கப்பட்டிருந்தனர். இவ்வாறு விடுதலையைப் பெற, செலுத்த வேண்டிய இடர்பாதுகாப்புப் போன்ற எல்லாத் தொகைகளுக்கும் பதிலாக, நிலங்களிலிருந்து வரும் இலாபத்தில் அரை யாண்டுக்கான இலாபத்தைச் செலுத்த வேண்டுமெனவும் ஏற்பட்டது.[39]

(4) பாதுகாப்பிலிருந்த பெண்களைத் திருமணஞ் செய்விக்கும் உரிமையும் பிரபுவிற்கிருந்தது. தக்க மணளனை ஏற்றுக்கொள்ள மறுக்கும் பெண், திருமணஞ் செய்யச் செலவாகும் தொகைக்குச் சமமான தொகையை இழக்க நேரிட்டது. அதாவது, திருமணம் நடத்துவதற்கு விலையாக மான்யப் பிரபுவிற்கு மணளன் விருப்பமுடன் எவ்வளவு தொகை செலுத்த முற்படுகிருரோ அந்தத் தொகைக்குச் சமமாகப் பெண்ணின் இழப்புத் தொகை இருந்தது. மான்யப் பிரபுவின் சம்மதமின்றிப் பாதுகாப்பிலிருக்கும் பெண் திருமணஞ் செய்ய எண்ணிஞல், கால நிலவரப்படி திருமணச் செலவைப்போல இருமடங்குத் தொகையை இழக்கவேண்டியவளாஞள். இவ்வாருகப் பிரபுவிற்கு ஏற்பட்டிருந்த உரிமை, பாதுகாப்பிலிருந்த பெண்களுக்கு மாத்திரமன்றி, உயிருடனிருந்த குடியானவர்களின் பெண்களுடைய திருமண விஷயத்திலும் பின்பற்றப்பட்டது. இவ்வுரிமை முதலில் பகைமை கொண்டிருந்த அல்லது வெறுக்கத்தக்க மணமகனை மணந்துகொள்ளுவதால், மணமகனிடமிருந்து பணிவு உரிமையைப் பிரபு பெற வேண்டிய தொல்லை ஏற்படாது பாதுகாப்பாக அமைக்கும் நோக்கத்துடன் கருதப்பட்டது;[40] ஆனல், பின்னர், மான்ய முறைப்படியும் எவ்வித நியாயமுமின்றிப் பாதுகாப்பிலிருந்து ஆண்களையும் இவ்வுரிமைக்குட்படுத்தி, மன்னரும் இடைமான்யப் பிரபுக்களும் பணம் பறிப்பதற்கு வருவாய்மிக்க மூலமாக இது பயன்படுத்தப்பட்டது.[41]

(5) உயில்மூலம் நிலங்களை இறுதிப்பத்திரம் எழுதி உரிமை பார்க்கும் முறை (ஒருசில தலங்கள் நீங்கலாக) நார்மானிய வெற்றியுடன் முற்றுப்பெற்றது. பின்னர், சிறிது காலம்வரை, ஆங்கிலோ-சாக்ஸானியர் காலத்தில் நிகழ்ந்ததைப் போன்று

உயிருடனிருந்தவர்களுக்கு நிலத்தைப் பராதீனம் செய்யும் சுதந்திரம், வாரிசுதாரருக்குச் சாதகமாக ஒருசில கட்டுப்பாடுகளுடனிருந்ததாகத் தோன்றுகிறது. எனினும், மறைமுகமாக, மான்ய உரிமை நிலங்களின் பகுதிகளைப் பராதீனம் செய்வதென்பது, கீழ்மான்ய அளிப்பின் வாயிலாக நடந்து வந்தது. இம் முறை இரண்டாம் ஹென்றியின் ஆட்சிக்குள்ளாகவே நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் விரிவாகப் பயன்படுத்தப்பெற்றது. அக் காலத்திலேயே, வாரிசுதாரரின் நோக்கத்தை முரியடிப்பதற்கு வரையறுக்கப்பட்ட உரிமையை மூதாதையர் பெற்றனர் எனத் தெரிகிறது.[42] இதையடுத்து 1290-ல்[43] இயற்றப்பட்ட 'குயா எம்ப்டோர்ஸ்' (18 எட்வர்டு I, c.1) சட்டத்தின்மூலமாகக் கீழ்மான்யம் அளிப்பது தடை செய்யப்பட்டது. அத்துடன் ஒவ்வொரு சுதந்திரமான குடியானவரும் அவருடைய விருப்பப்படி (உயில் வாயிலாக உள்ளது நீங்கலாக) நிலங்களைப் பராதீனம் செய்ய அனுமதித்தும், அவ்வாறு பராதீனம் செய்யப்பட்ட நிலங்களைப் பெறுபவர் பராதீனம் செய்கிறவரிடமிருந்து நேரடியாக நிலத்தைப் பெறுது பராதீனம் செய்கிறவரை அடுத்த மேலாளரான பிரபுவிடமிருந்து பெறவேண்டுமெனவும் சட்டம் இயற்றப்பட்டது. எனினும், தலைமை மான்யதாரர்கள் எல்லோரும், நிலங்களைப் பராதீனம் செய்யுமுன்னர் மன்னரிடமிருந்து அனுமதியை இன்னும் பெறவேண்டும் எனக் கூறப்பட்டது; அவ்வாறு அனுமதியளிக்க தண்டத்தொகை செலுத்தவேண்டுமெனவும் கோரப்பட்டனர். மூன்றும் எட்வர்டின் ஒரு சட்டத்தால்[44] அனுமதியைப் பெறும் தேவை நீக்கப்பட்டது. தலைமை மான்யதாரர்கள், மன்னருக்கு நியாயமான ஒரு தொகையைத் தண்டமாகச் செலுத்துவதால், அவர்கள் விருப்பப்படி நிலத்தைப் பராதீனம் செய்ய அனுமதிக்கப்பட்டனர்.

(6) கடைசியாக, மிக்க மதிப்பு வாய்ந்த உரிமை ஒன்று இருந்தது. எஸ்சீட் என வழங்கப்பெறும் அவ்வுரிமை, பறிமுதல் செய்யப்பட்டதை இறைமைக்குரிமையாக்கியது. இவ்வுரிமைப்படி மான்ய நிலம் யாரால் கொடுக்கப்பட்டதோ அந்தப் பிரபுவினிடம் அல்லது யாருடைய மூதாதையர்களால் முதன்முதலில் வழங்கப்பட்டதோ அவரிடம் மீண்டும் சேருவதாகும். எஸ்டேட்டைப்பற்றி முடிவு செய்வதில்—எஸ்டேட்டிற்குச் சட்டப்படியமைந்த வாரிசுதாரர் (இரத்தக் கலப்பில்லாதவர்) இல்லாத காரணத்தாலோ அல்லது கொடுங்குற்றம் புரிந்ததற்காக மான்யக் குடிமகன் குற்றத் தண்டனை பெற்றவர்

(குடிமை உரிமையில்லாதவர்) என்பதைக் கொண்டோ முடிவு செய்யப்படவேண்டும். பறிமுதல் செய்யப்பட்டதை இறைமையுரிமையாக்குவதுடன், கிரிமினல் குற்றத் தண்டனை பெற்ற தேசத்துரோகியினுடைய நிலங்கள் மன்னரால் பறிமுதல் செய்யப்படுவதற்கு ஏற்றவையாகும் (இதனால் இடைப்பட்ட மான்யதாரரைச் சேரவேண்டிய பறிமுதல் செய்யப்பட்ட சொத்து இறைமையுரிமையைத் தகர்த்தது). பெருங்குற்றம் செய்ததற்காகத் தண்டனை விதிக்கப்பட்டவரின் பறிமுதல் நிலங்கள் இறைமையுரிமை முறையில் பிரபுவினிடம் சேர்ந்தது. இதற்கு மன்னர் அதன் 'ஆண்டு, நாள், கழிவு' முதலியவை பற்றி உரிமையாட்சி செய்ய முன்னதாகவே அனுமதித்திருந்தார்.

**வினைமுறை அலுவலர் ஊழிய உரிமை** (Tenure by Serjeanty): முறையாக அழைக்கப்பட்ட நைட் வீரர் ஊழிய உரிமை என்பதுடன், குடிவார முறையில் வினைமுறை அலுவலர் ஊழிய உரிமை எனும் ஒரு பிரிவுமிருந்தது. அதன்படி குடிவாரதார், மன்னருடைய போர்களில் பொதுவாகப் பணி செய்வதற்குப் பதிலாக, அவரே சொந்தமாகவும் நேரிடையாகவும் மன்னரின் கொடி அல்லது நீண்ட ஈட்டியைத் தாங்கிச் செல்பவராயும், மன்னருக்காகப் பரிந்து வினைபுரியும் வீரராயும், மன்னரின் அகப்பணியாளர் அல்லது முடிசூட்டு விழாவின்பொழுது வேறுபல பணிகளைப் புரிகிறவராயும் இருந்தார்.[45] மன்னரின் அகத்தைச் சேர்ந்த அதிகாரிகளான மேலாளர், அரண்மனைத் தலையாரி, அமைதிக் காவலர், மன்னரின் குடும்ப அலுவல் உயர் அதிகாரி போன்றவர்கள் வினைமுறை அலுவலர் ஊழிய முறையில் நிலங்களை மான்யமாகப் பெற்றிருந்தனர். மன்னருடன் கூடவே இருந்து அவருக்கு ஏவல் பணிகளைச் செய்த பணியாளர்களுக்கும் சிற்றூழியம் செய்வதற்கென ஊழிய மான்யங்கள் மன்னரால் அளிக்கப்பட்டன. டூம்ஸ்டே புத்தகத்தில் குறிப்பிடப்பட்டுள்ள தலைமை மான்யப் பிரபுக்களில், மன்னருடைய வன அதிகாரிகள், வேட்டையாடுகிறவர்கள், வல்லூறு வளர்ப்பவர், குதிரைப் படையின் காவற்றலைவர், சமையற்காரர்கள் போன்ற அதிகாரிகளின் பெயர்களும் காணப்படுகின்றன. பிற்காலத்தில் வினைமுறை அலுவலர்களில், 'மிக்குயர்' எனப்பட்டதும், 'முக்கியமில்லாத சிறியது' எனப்பட்டதுமான வித்தியாசங்கள் செய்யப்பட்டன. பின்னர் கூறப்பட்ட ஊழியம், ஆண்டுதோறும் மன்னருக்கு ஏதாவது படைக்கலம் கொடுப்பது எனும் ஊழிய உரிமையில் அடங்கியது.[46] உண்மை

யில், அவ்வூழிய உரிமை ஊழிய மான்யத்தின் கௌரவமிக்க ஒரு பிரிவாயிருந்தது. அடுத்து அதைப்பற்றிக் காண்போம்.

**சுதந்திரமான ஊழிய மான்யவுரிமை:** சுதந்திரமான ஊழிய மான்யவுரிமை[47] (இக் காலத்தில் இறையிலி நிலம் எனும் பெயரில் இன்றும் வழக்கிலுள்ளது), பொதுவாகவும் விரிவான தனிச்சிறப்புடனும், இராணுவ சேவையில்லாததும், ஆனால் குறிப்பானதும், முடிவு செய்யப்பட்டதுமான பணியாகிய உறுதி செய்யப்பட்ட தொகையை வரியாகச் செலுத்துவது, அல்லது ஆண்டில் குறிப்பிடப்பட்ட நாள்களில் பிரபுவின் நிலங்களை உழுதல் போன்றவற்றைக் குறிப்பதாகும். இக் கருத்துப்படி நைட் வீரரின் ஊழிய உரிமைக்கு இது நிலையாக மிகவும் மாறாயிருந்தது என்பது முன்னாள் சட்ட எழுத்தாளர்களின் கூற்றாகும். கௌரவம் வாய்ந்ததாக எண்ணப்பட்டபோதிலும், நைட் வீரரின் ஊழிய உரிமை தொல்லை வாய்ந்தது.[48] இராணுவ சேவையில்லாது மான்யம் வைத்திருந்தபோதிலும், சுதந்திரமான ஊழிய மான்ய உரிமையில், நிலமான்யத்தின் ஆக்கக் கூறுகளில் ஒன்றில் குறைபாடு காணப்பட்டது. எனினும், நிலமான்ய முறையின் மெய்க் கருத்து எல்லாவற்றையும் பற்றியிருந்ததால், அது ஒவ்வோர் ஊழிய உரிமையையும் நிறுவனத்தையும் பாதித்தது. எனவே, சுதந்திர ஊழிய மான்யம் நைட் வீரர்களின் ஊழியத்தைப்போலவே இறையிலி வகை உடைமை அடையாளச் சின்னத்துடன்கூடிய சுத்தமாக உடைமை மாற்றம் பற்றிய வார்த்தைகளால் தோற்றுவிக்கப்பட்டிருந்ததெனக் காணலாம். அத்துடன் ஒரே வகையான பண்ணை மேலாண்மையிடம் காட்டவேண்டிய உரிமைக் கடப்பாட்டைச் செய்வதற்குச் சில சமயங்களில் பணியறிவிப்புச் செய்யவும் கட்டுப்பட்டதாயிருந்தது. அதேமாதிரியே, சிறிது மாற்றத்துடன், நைட் வீரரின் ஊழியஞ் சார்ந்ததும் நில உரிமை பற்றியதுமான பல கடமைகளையும் கொண்டிருந்தது; நைட் வீரரின் ஊழியத்தைவிடச் சிறிது கௌரவக் குறைவானதாகக் கருதப்பட்டபோதிலும், சுதந்திர ஊழிய மான்ய உரிமை மிக்க நன்மை பயப்பதாயிருந்தது. சிறப்பாகக் கேடயப் பணம், மான்யப் பாதுகாப்பு முறை, திருமணம் பற்றியனவும் தொல்லை வாய்ந்தனவுமான கடமைகளைச் செய்வதிலிருந்து விடுபட்டிருந்தது.[49]

சுதந்திர ஊழிய மான்யம் வேறு இரு சிறப்பான வகைகளையும் கொண்டிருந்தது. ஒன்று, காவற் கடமையுடன்கூடிய நிலவுரிமை; மற்றொன்று உயில் செய்யாது இறந்தவரின்

உடைமைகளை அவருடைய மக்களுக்குச் சமமாகப் பங்கிடுவது பற்றியது.

காவற் கடமையுடன்கூடிய நிலவுரிமை, நகரத்தைச் சார்ந்த சுதந்திர ஊழிய மான்ய வகையைச் சேர்ந்ததாகும்.[50] மன்னர் அல்லது பிரபுக்களிடமிருந்து பெற்றதும், குறிப்பிடப் பட்ட வரி அல்லது ஊழியத்தைக் கொண்டதும், நகரவாழ்நர்க ளால் கைக்கொள்ளப்பட்டதும், பழமையானதுமான கோட் டைப் பாதுகாப்பையுடைய நகரங்களில் இருந்த குடியிருப்பு களைச் சார்ந்திருந்தது.[51] வெற்றியின்பொழுது, நகரங்களும் கோட்டைப் பாதுகாப்புடன்கூடிய நகரங்களும், மன்னரைச் சேர்ந்த சொந்தச் சொத்தின் ஒரு பகுதியாக, மன்னரால் தமது வசத்தில் வைத்துக்கொள்ளப்பட்டன. எனினும், அவைகளில் பெரும்பான்மை பின்னர் மான்யப் பிரபுக்களுக்கு வழங்கப் பட்டன. இவ்வுரிமை பல்வேறு தல வழக்கங்களுக்குட் பட்டதாயிருந்தது. மூத்த மகனுக்குப் பதிலாகக் கடைசி மகனுக்குச் சுதந்திர ஊழிய மான்யத்தில் நிலையான உடைமை, ஆங்கிலேயரின் கோட்டைப் பாதுகாப்புடன்கூடிய நகர வுரிமை என்பதன் வாயிலாக அளிக்கப்பட்டது மிக்க சிறப்பு வாய்ந்ததாகும்.[52]

காவல்கிண்ட்[53] என்பது கென்ட் நிலப்பகுதிக்குச் சிறப்பா யமைந்ததொன்றாகும். கென்டில் வாழ்ந்த மக்கள், வெற்றி யாளரான வில்லியத்திடமிருந்து இந்த உரிமையையும் வேறு சில உரிமைகளையும் தனிச்சலுகைமூலம் பெற்றதாகக் கூறப் படுகிறது.[54] நிலங்கள், நீதிமன்றத்தின் இசைவுடனும், மேலாண்மையிடம் காட்டவேண்டிய உரிமைக் கடப்பாட்டுட னும், பணிபுரிவதில் உறுதித் தன்மை வாய்ந்ததாயும் வைத்துக்கொள்ளப்பட்டன.[55] நாட்டின் வேறு பகுதிகளில், பொதுச் சட்டத்தால் மறைக்கப்பட்டிருந்த பல்வேறு உரிமை களையும் வழக்கங்களையும் காவல்கிண்ட் முறையிலமைந்த நில வுரிமையாளர் விடாது உடன் வைத்துக்கொண்டிருந்தனர். அவருடைய நிலங்கள் உயில் செய்வதுமூலம் உடைமை மாற்றம் செய்யத்தக்கது; உயில் எழுதாமலிருந்தால், அவ ருடைய எல்லா மகாரும் சமபாகமாக அடையத்தக்கது; நிலங்கள், பெருங்குற்றத்திற்காகப் பறிமுதல் செய்யப்பட்டு மன்னரை அடையத்தக்கனவல்ல. 'தகப்பன் தூக்கு மரத் திற்கும் மகன் கலப்பைக்கும்' என்பது மரபு கூற்றாயிருந்தது. எனினும், பதினைந்து வயது நிரம்பியபின் நிலங்கள் குடியானவ ரால் பராதீனம் செய்யப்படலாம்.

**பண்ணையாள் நிலவுரிமை :** சுதந்திரமான ஊழியத்தின்கீழ்ப் பண்ணையாள் நிலவுரிமை இருந்தது. இதன்படி விவசாயத் தொழில் புரிந்தவர்கள், அவர்களுக்களிக்கப்படவேண்டிய பண ஊதியத்திற்குப் பதிலாக நிலத்தை வைத்திருந்தார்கள். பண்ணை முறையின் வாசகக் கருத்துக் கூறுகள் பல்வேறு பண்ணைகளின் தல வழக்கங்களுக்கு ஏற்ப மாறுபட்டிருந்தன ; எனினும், எப்பொழுதும் அதன் பொருள் நிலையற்றதாயிருந்தது. பண்ணையாள் நில உரிமைபற்றி மூன்ரும் ஹென்றியின் காலத்தில் இருவிதங்களிருந்ததாக பிராக்டன் என்பார் குறிப்பிட்டுள்ளார். ஒன்று கலப்பற்றது, மற்ரென்று உரிமை பெற்றது. கலப்பிலாப் பண்ணையாள் உரிமை முறையில், இடைப்பட்ட பிரபுக்களின் சொந்தமான நிலங்களைப் பண்ணைக் குடியானவர்கள் பெற்றிருந்ததுடன், சுதந்திரமானவராகவோ அல்லது சுதந்திரமில்லாதவராகவோ இருப்பினும், அவர்களுக்கிடப்பட்ட வேலைகளை எல்லாம் செய்யக் கடமைப்பட்டிருந்தனர். 'காலை செய்யவேண்டியவை என்னவென்பதை முதல் நாள் சாயந்த்ரம் அறியாதவர்கள்' என பிராக்டன் கூறியுள்ளார். அவர்கள் பிரபுவின் விருப்பத்திற்கேற்ப நிலங்களை வைத்துக் கொண்டு வாழ்ந்தவர்கள். உரிமை பெற்ற பண்ணையாள்கள் அல்லது சுதந்திரமான ஊழியப் பண்ணையாள்கள் முறைப்படி பண்ணைக் குடிகள், மன்னருடைய சொந்த நிலங்களை வைத்துக்கொண்டிருந்தவர்கள் அவ்வாறு பெறுவதற்கு ஈனமான பணிகளையும் செய்வதெனும் உறுதியான நிபந்தனைக் குட்பட்டிருந்தனர். அத்துடன் செய்யவேண்டிய பணிகளைச் செய்ய இயலும்வரையிலும், செய்ய விருப்பம் உள்ளவரையிலும் நிலத்திலிருந்து அவர்களை நீக்கமுடியாது. 'உரிமையுடன் கூடிய பண்ணையாள்கள்' அல்லது 'சுதந்திரமான ஊழியவுரிமை கொண்ட பண்ணையாள்கள்' எனும் இவ்விருவகையினர் 'கிளேபி அஸ்கிரிப்டிட' (குடிமக்கள் அல்லது போர் வீரர்களாகச் சேர்க்கப்பட்டவர்களால் கைக்கொள்ளப்பட்டிருந்தவை) என முறையாகப் பெயரிட்டழைக்கப்பட்டன.[56]

## முதலாம் வில்லியமும் சட்டமும்

மான்யப் பிரபுக்களுக்கெல்லாம் மிக்குயர் மான்யப் பிரபு எனும் பதவியளித்த நன்மைகளையெல்லாம் பயன்படுத்திக் கொண்டதுடன், வில்லியம் மன்னர், அவருடைய உரிமைகளைப் பாதுகாத்துக்கொள்வதில் மிகுந்த கவனமுடையவராயிருந்தார். 'மான்ய முறைப்படி வெற்றிபெற்றவர் எனும் பகட்டான தகுதியைவிடப் பழைய அரசு மரபின் அமைப்பு முறையை' விரும்புகிறவராய், ஆங்கிலேயர்களின் மன்னர்

எனும் முறையில் தமது கடமைகளைச் செய்வதில் கருத்துடனிருந்தார்.[57]

**குரியா ரெஜிஸ்:** ஆண்டுதோறும் மூன்று பெரு விழாக்கள் கொண்டாடியபோது, வின்செஸ்டர், வெஸ்ட்மின்ஸ்டர், கிளௌசெஸ்டர் எனுமிடங்களில் மன்னர், அவைகளைக் கூட்டினார். அதற்கு அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்கள், மடாலயத் தலைவர்கள், ஏர்ல்கள், தீன்கள் (பண்ணையாள்), நைட் வீரர்கள் முதலியவர் வரவழைக்கப்பட்டனர்.[58] இம்மாதிரியான கூட்டங்கள், ஆங்கிலோ - சாக்ஸானியர் காலத்திய தேசிய மக்கள் கூட்டங்களைப் போன்ற நெருங்கிய மாதிரித் தன்மையைக் கொண்டிருந்ததென்றாலும்,[59] உண்மைப் பயனில் மாறுபட்டிருந்தன. ஆங்கிலோ - சாக்ஸானிய காலவழிச் செய்தித் தொகுப்பாளர், அவருக்கு நன்கு தெரிந்திருந்த விடான் எனும் சொல்லையே தொடர்ந்து பயன்படுத்துகிறார்.[60] எனினும், கூட்டத்தின் வருகைக்குத் தகுதி அறிஞர் என்பதில் அமையப்பெறவில்லை; ஆனால், மான்ய உரிமையில் அமைந்திருந்தது. வந்த உறுப்பினர்கள் தங்களை மான்யப் பிரபுக்களாகக் கருதினர். அரசாங்கத்தில் ஒவ்வொரு துறையிலும் மான்ய முறையின் கொள்கை மேலான செல்வாக்கைப் பெற்றிருந்தது. தேசிய மன்றமும், சற்றும் பொருளற்ற முறையில், அறிஞர்களின் அவை என்பதிலிருந்து மன்னருடைய அவையும் தலைமை மான்யக் குடிகளடங்கிய குரியா ரெஜிஸ் எனும் சபையாக மாறியது.[61]

**வில்லியமும் சட்டமியற்றுதலும்:** நாட்டின் சட்டங்களில் வில்லியம் எவ்வித மாறுதலையும் செய்யவில்லை. அவைகளை அந்நியர்களான அதிகாரிகள் செயலாட்சி புரிந்தபொழுது, மிகவும் பொறுக்க முடியாத மனக்குறையாக அமைந்தது. அவரது ஆட்சியின் முற்பகுதியில், வெற்றி கொள்ளுவது முடிவுற்றதும், ஆங்கிலேய - நார்மானியக் குடிகளுக்கிடையே அமைதி பாதுகாக்கப்பட வேண்டுமென உத்தரவிட்டார். அத்துடன், பக்தசீலரான எட்வர்டு மன்னரின் சட்டங்களைப் புதுப்பித்து ஆங்கிலேய மக்களுக்குப் பயனளிக்கும் வகையில் அவரால் செய்யப்பட்டவைகளையும் சேர்த்துக்கொண்டார்.[62] அதேபோன்று, ஐம்பத்திரண்டாண்டுகளுக்கு முன், மன்னர் கான்யூட், ஆங்கிலேயர்களையும் டேனர்களையும் ஆக்ஸ்ஃபோர்டில் கூடிய பேரவையில் சமரசம் செய்துவைத்தார். அத்துடன் சமாதானப் பிரியரான எட்கார் மன்னரின் சட்டத்தைப் புதுப்பிக்கவும் செய்தார்.[63] வில்லியத்தால் புதுப்பிக்கப்பட்டவற்றில், எட்வர்டு மன்னருடைய புகழ்வாய்ந்த சட்டங்கள் முதலில்கூறப்

பட்டுள்ளவையாகும். நார்மானியர்களும் ஆங்கிலேயர்களும், அவர்களுடைய சுதந்திரங்களுக்குப் பயனுடைய அளவில், அடிப்படையை மகாசாசனப் பத்திரம் அளிக்கும்வரை, ஒவ்வோர் ஆட்சியிலும் சுதந்திரம் கோருவதை விரைவில்கற்றுக் கொண்டனர். 'எட்வர்டின் சட்டங்கள்' என்பதை அவர்கள் அவரால் பிரகடனம் செய்யப்பட்டவை எனக் கருதாது அவர் எதைப் பின்பற்றினரோ,[64] அதைக் கருதினர். கடுமையும் நியாயமற்றவையுமான புது மாறுதல்களை உண்டுபண்ணுவதற்கு எதிராக, அமைதியானதும் நன்மை பயக்கக் கூடியதுமான அரசாங்கத்தை இடைப்படியாகக் கோருவதைக் கொண்டிருந்தது. சமாதானப் பிரியரான எட்வர்டின் சட்டங்கள் எனப்பட்ட மூலத்தொகுப்பைப் பற்றியவரை, அதை மிக்க எச்சரிக்கையுடனேயே உபயோகிக்க வேண்டியுள்ளது. ஏனென்றால், வேறு சாட்சியங்களால் ஆதரிக்கப்படாத நிலையில், அதன் வாசகங்கள், பன்னிரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த ஒருவர் — ஒரு சமயம் முதலாம் ஹென்றியின் காலத்தியவரொருவர் — அவ் வாசகங்கள் உண்மையாக இருக்க வேண்டுமென்று விரும்பினர் என்பதைத் தவிர, வேறொன்றையும் நமக்குப் புலப்படுத்தாது.[65]

நார்மானியர்களும் ஆங்கிலேயர்களும் கருத்தளவில் சட்டத்திற்குமுன் சமமாகக் கருதப்பட்டனர். எனினும், சில பயன்களைக் கருதித் தனியுரிமைச் சட்டத்தின் வேறுபாடு அனுமதிக்கப்பட்டது. நார்மானியர்கள் மல்யுத்த முறையில் தீர்வு காண்பதில் பழக்கப்பட்டவர்கள்;[66] ஆங்கிலேயர்கள் சோதனை முறைக்கும் குற்றச்சாட்டு நீக்கத்திற்கும் பழக்கமானவர்கள். அவரவர் நாட்டு வழக்கப்படி அவரவரினத்தைச் சேர்ந்தவர் நீதிவிசாரணை செய்யப்படுவதை வில்லியம் அனுமதித்தார்.[67] எனினும், ஃபிரான்சில் பிறந்தவர்கள் (ஃபிரான்ஸிஜனே பெரும்பாலும் நார்மானியர்களாயுள்ளவர்கள்) எனப்படுபவர், வெற்றிக்கு முன்னரே இங்கிலாந்தில் குடிபுகுந்தவர்கள்; ஆங்கிலேயரைப் போலவே நடத்தப்படத்தக்கவர்கள்.[68]

ஆங்கிலேயர்கள், அடிக்கடி சதிக்கொலை செய்வதன்மூலம், நிலக்கொடுங்கோலர்களின்மீது வஞ்சம் தீர்த்துக்கொண்டனர். இதைத் தடுப்பதற்கு, ஹண்ட்ரட் எனும் நிலப்பிரிவின் எல்லைக்குள் ஒரு நார்மானியன் இரகசியமாகக் கொலைசெய்யப்பட்டால், அந்த ஹண்ட்ரட் முழுமையும் அபராதம் விதித்தலுக்குக் கட்டுப்பட்டதாகும் என உத்தரவிட்டார்.[69] இச் சட்டமியற்றப்பட்டதையொட்டிப் புகழ்வாய்ந்த ('இங்கிலிஷ்ரி') 'ஆங்கிலேய இனத்தைச் சேர்ந்தவர்' எனும் சட்டம் வளர

லாயிற்று. இதன்படி, கொலையுண்டவர் எவரும் நார்மானியர் எனக் கருதப்பட்டார். அவ்வாறில்லை யென்பதற்கு, இறந்து போனவரின் மிக நெருங்கிய உறவினர்களில் நால்வர் இறந்தவர் 'ஆங்கிலேயரினத்தைச் சேர்ந்தவர்' என ருசுப்பிக்க வேண்டும்.[70] இரண்டாம் ஹென்றியின் ஆட்சியிலேயே இரு இனத்தாரும் (பண்ணையாள்கள் நீங்கலாக) கலப்பு மணஞ் செய்வதன்மூலம் ஒன்றுகலந்து நார்மானியர், ஆங்கிலேயர் எனும் இன வேறுபாடு அறவே மறைந்துபோயிற்று என்ருலும்',[71] கொலைக்காக விதிக்கப்படும் அபராதம், 1340-ல் சட்டமியற்றியதன் வாயிலாக ஒழிக்கப்படும்வரை தொடர்ந்து விதிக்கப்பட்டது.[72]

நாட்டில் பொது அமைதியை நிலைபெறச் செய்து பாதுகாத்தது வில்லியத்தின் ஆட்சியின் மிகப் பெரிய பயனுகும். அவர் கொள்ளையடிப்பதைத் தவிர்த்து மற்ருெருவர் கொள்ளையிடுவதை அனுமதிக்கவில்லை. நார்மானியர், ஆங்கிலேயர் போன்ற எல்லா இனத்தினருக்கும் ஒரேமாதிரியான கண்டிப்பான முறையில் நியாயம் வழங்கினுர். மரண தண்டனை விதிப்பதை ஒழித்து, அதற்குப் பதிலாக மென்மையான தண்டனையாகக் கருதப்படும் உறுப்பிழத்தல் தண்டனையை வழங்கினுர்.[73] முந்திய மன்னர்களான எதல்ரெட், கான்யூட் முதலியவர்களைப் போலவே, மக்களைப் பிறநாடுகளில் அடிமைகளாக விற்கும் இழிவான வழக்கத்தைத் தடைசெய்தார்.[74]

**காடுகள் :** மதிற்புற விளையாட்டுகளில் வில்லியத்திற்கிருந்த பேரவா, கட்டுக்கடங்காத வெறி யுணர்ச்சியாயிருந்தது; 'உயரமான மானை அதனுடைய தகப்பனைப்போலப் பெரிதும் விரும்பினுர்' என ஆங்கிலோ-சாக்ஸானியக் காலவழிச் செய்திக் கோவையாளர் கூறியுள்ளார். ஹாம்ப்ஷயரில் புதிய காட்டை அமைப்பதற்காக 17 ஆயிரம் ஏக்கர் நிலத்தைத் தரிசாக்கினுர் என்பது பொதுமக்களின் மனத்தில் ஆழப் பதிந்தது. அவரால் தோற்றுவிக்கப்பட்ட காட்டுச் சட்டங்கள், பின்னர் முதலாம் ஹென்றியின் காலத்தில் கடுமையானதைப் போன்றில்லையென்ருலும், சிறப்பான கடுமையுடன் கூடியிருந்தன.

ஆண்மானையும் பெண்மானையும் வேட்டையாடிய குற்றத்திற்குக் கண்ணெளி இழத்தல் தண்டனையாக விதிக்கப்பட்டது. காட்டுப் பன்றிகளையும் முயல்களையும் வேட்டையாடுவதுகூடத் தடைசெய்யப்பட்டிருந்தது. காட்டுச் சட்டங்களின் தோற்றம் கான்யூட் மன்னரின் சட்டங்களில் காணப்பட்டது. ஆனுல், ஒருவர் அவருடைய சொந்த நிலத்தில் வேட்டையாடுவது உறுதியாக அனுமதிக்கப்பட்டிருந்தது.[75] நார்மானிய வெற்றி

ஏற்படும் வரை, வேட்டையாடுதல் ஒரு பொழுதுபோக்கு என்பதுடன், கொடுமை விளைவித்த விலங்குகளை அழிப்பது, உணவைச் சேகரிப்பது எனும் காரணங்கள்பற்றியும் அனுமதிக்கப்பட்டிருந்தது. வில்லியத்தின் ஆட்சியில், வேட்டையாடுதல் என்பது ஒரு மகிழ்வூட்டும் பொழுதுபோக்காகக் கருதப்பட்டதுடன், வேட்டையாடுதல் மன்னருடையவும், மன்னரால் அதில் பங்குபெற அனுமதிக்கப்பட்டவர்களுடையவும் சிறப்புரிமையாகச் செய்யப்பட்டது.[76] மூன்றாம் ஹென்றியின் காலத்திலும் அதற்குப்பின் ஏற்பட்ட ஆட்சிக் காலங்களிலும் காட்டுச் சட்டங்களின் கடுமை குறைக்கப்பட்டபோதிலும், 'இதை அடிப்படையாகக் கொண்டு, பின்னர் வேட்டையாடுதல் சட்டம் என்ற பெயருடன் முறையற்ற நழுவல் தோன்றிற்று' எனப் பிளாக்ஸ்டோன் கூறியுள்ளார். நான்காம் வில்லியத்தின் ஆட்சிவரையிலும், இச் சட்டம், ஆண்டிற்கு நூறு பவுன் மதிப்புள்ள சொத்துரிமையில்லாதவரெவரும் அவருடைய சொந்த நிலத்திலேயே வேட்டையாடுவதையும், வேட்டையாடும் உரிமையை விற்பதையும் சட்டவிரோதமெனச் செய்தது.

**திருச்சபை:** நார்மானிய வெற்றிக்குமுன், ஆங்கிலேயத் திருச்சபை, 'தீவுக்குரியதும் நாகரிகமற்றதுமான சுதந்திரம்' என அழைக்கப்பட்டதான நிலையைப் பெற்றிருந்தது. வெற்றியின் பயனாக ஆங்கிலேயத் திருச்சபை ரோமாபுரியுடன் மிக நெருங்கிய தொடர்பு கொள்ளலாயிற்று. நாட்டு குருமார்கள் வசித்துவந்த உயர் பதவிகளில், அந்நிய நாட்டைச் சேர்ந்த சமயத் தலைவர்கள் நியமிக்கப்பெற்றனர். அத்துடன் திருச்சபை அதன் தேசிய சுதந்திரத்தில் சிலவற்றை இழந்தபோதிலும், அதன் அதிகாரம் வளர்ச்சியுற்றது. வெற்றிசீலரின் முறையில், மத்திய அரசாங்கம் மிக்க வலிமை பெற்றதன் விளைவாக, மதச் சார்பற்ற அரசாங்கமும் வலிமை பெறலாயிற்று. அதேபோலத் திருச்சபையின் வலிமையும், போப்பாண்டவரின் ஆட்சிக்கு முழுமையாகக் கீழ்ப்படிவதன்மூலம் மிகுதியாயிற்று. எனினும், ஆங்கிலேயத் திருச்சபையிலும் அரசாங்கத்திலும் தேவையெனத் தாமே முடிவுசெய்ததற்கு அதிகமாகப் போப்பாண்டவர் தலையிடுவதை ஏற்றுக்கொள்ள வில்லியம் விரும்பவில்லை. போப்பாண்டவரின் ஆட்சிக்குப் பெருமளவில் வில்லியம் கடமைப்பட்டிருந்தார்; அத்துடன், திருச்சபைக்கு மிக்க ஆதரவளிப்பவராக எப்பொழுதும் கருதப்பட்டார். எனினும், ஹில்டிபிராண்டின் (போப்பாண்டவர் ஏழாவது கிரிகரி) கர்வமிக்க போலி உரிமைகளை ஏற்றுக்கொள்ள உறுதியுடன் மறுத்தார். போப்பாண்டவர் ஹில்டிபிராண்டு, சமயஞ் சார்ந்த

நிலமான்யமுறைத் திட்டத்தைச் செயல்படுத்துவதில், புனிதத் திருச்சபையின் மான்யங்களாக எல்லா இராச்சியங்களையும் இப் பூவுலகைச் சேர்ந்த மன்னர்கள் பெறவேண்டும் எனும் கருத்தில் இங்கிலாந்தின் முடியைப் பெற்றதற்காக, வில்லியம் மான்யமுறைப்படி பணிவு அறிக்கையைத் தெரிவிக்கும்படி உத்தரவிட்டார்.[77]

நார்மானியர்களின் ஆட்சிக்கு முன்னர், திருச்சபையும் அரசாங்கமும் ஒன்றாக இருந்துவந்தன; ஏர்ல்களும் மேற்றிராணியார்களும் ஒன்றுபோலத் தேர்ந்தெடுக்கப்பட்டும், பதவி நீக்கம் செய்யப்பட்டும் வந்தனர். விடான் சபையின் கூட்டுறவுடன் மன்னர், லௌகிகம், சமயம் இவைகளைச் சார்ந்த சட்டங்களை இயற்றிவந்தார்.[78] ஷயர் அல்லது ஹண்ட்ரட் எனும் நிலப்பகுதிகளைச் சேர்ந்த அவைகளில், மேற்றிராணியாரும் பிரபுக்களின் பிரதிநிதியுமாகச் சேர்ந்து தலைமை தாங்கினர்; சிவில், சமயஞ் சார்ந்த வழக்குகளை விசாரணையும் செய்தனர். வில்லியத்தின் ஆட்சிச் சிறப்பில் மிகவும் முக்கியமானது, நீதிவிசாரணை மன்றங்களில் சிவில் விசாரணையெல்லையிலிருந்து சமயஞ்சார்ந்த விசாரணையைப் பிரித்துத் தனிமைப்படுத்தியதாகும். அது முதற்கொண்டு, மேற்றிராணியார் அல்லது தலைமை குரு சமயஞ்சார்ந்த விவகாரங்களில் ஷயர் அல்லது ஹண்ட்ரட் நீதிமன்றங்களில் வழக்குத் தொடுத்தல் கூடாது என வில்லியம் உத்தரவிட்டார். அதற்குப் பதிலாக, அம்மாதிரி வழக்குகள், சமயஞ்சார்ந்தும் திருச்சபையின் கட்டளைப் படியும் மேற்றிராணியாரின் முன்பு முடிவு செய்யப்பட வேண்டுமெனவும், அதற்காக மன்னர் குறிப்பிடுமிடத்தில் அவ் விசாரணை நடைபெறவேண்டுமெனவும் உத்தரவிட்டார். சமயஞ்சார்ந்த விஷயங்களில், ஷெரீஃபுகளும் மற்றும் லௌகீகர்கள் எல்லாரும் தலையிடுவதிலிருந்து தடைசெய்யப் பட்டனர்.[79] இவ்வாறாக மாற்றத்தைச் செய்த வில்லியம், மிகப் பழமையானதும் அரசாங்கத்தினுடையதுமான மிக்குயர் அதிகாரத்தை நிலைநிறுத்துவதில் கவனஞ் செலுத்தினார். மன்னரின் மேலாண்மையைக் குறிக்கும் புகழ்பெற்ற மூன்று கட்டளைகளையும் அமைத்தார். அவையாவன: (1) மன்னரின் சம்மதமின்றி இங்கிலாந்திற்குள் போப்பாண்டவரின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்வதோ அல்லது போப்பாண்டவரிடமிருந்து கடிதங்களைப் பெறுவதோ கூடாது. (2) நாட்டின் சமய மாநாடுகளில் நிறைவேற்றப்பட்ட கட்டளைகளை மன்னருடைய உறுதிமொழியைப் பெறாது பயன்படுத்தக்கூடாது. (3) மன்னருடைய அனுமதியின்றி மன்னருடைய மானியப் பிரபுக்களோ அல்லது அதிகாரிகளோ சமய விலக்கு அளிக்கப்

படக்கூடாது அல்லது சமயஞ்சார்ந்த கடுமையுடன்கூடிய எந்தத் தண்டனையைக்கொண்டும் வல்லந்தமாகக் கீழ்ப்படியு மாறு செய்யக்கூடாது என்பனவாம்.[80]

## நீதிமுறை அமைப்பு

வில்லியத்தின் ஆட்சியினிறுதியில், நாட்டின் நீதிமுறை அமைப்பில், பக்தசீலரான எட்வர்டின் காலத்திலிருந்ததி லிருந்து சிறிது மாற்றஞ் செய்யப்பட்டது. இப்பொழுது, நாம் ஏற்கெனவே கண்டவாறு, சமயஞ் சார்ந்த விவகாரங்களில் சமயஞ்சார்ந்த நீதிமன்றங்கள் தனிமையான அதிகார எல்லையைக் கொண்டிருந்தன; சிவில் விவகாரங்களில் சாதா ரணமான நீதிமன்றங்கள் தீர்ப்பளித்தன; இவ்வாறான நீதி மன்றங்கள், ஷயர், ஹண்ட்ரட், பரோ எனும் நிலப்பிரிவைச் சேர்ந்தவையாகும். அத்துடன் மன்னருடைய மான்யப் பிரபுக் களின் பண்ணையைச் சேர்ந்த நீதிமன்றங்களும், வேறு பிரபுக் களின் நீதிமன்றங்களும் சேர்ந்து நீதி வழங்கின. ஷயர் நீதி மன்றங்களில் ஷயரில் வாழ்ந்த எல்லாச் சுதந்திர மான்ய தாரர்களும்,[81] பண்ணைப் பிரபுவின் நீதிமன்றத்தில் பண்ணை யைச் சேர்ந்த எல்லாச் சுதந்திரமான குடியானவர்களும்[82] நடுவர்களாயிருந்து, தலங்களின் பழைய வழக்கங்களின்படி நீதித் தீர்ப்பளித்தனர்; ஆனால், ஷயர், ஹண்ட்ரட் நீதி மன்றங்களில் நார்மானியரான ஷெரீஃபு அல்லது தலைமை நீதிபதி இருந்தார். ஆனால், அவருக்கு முன்பு, அதே வைஸ் கோமிஸ் பதவியை வகித்த ஆங்கிலேயரின் அதிகாரம், ஆணை முதலியவைகளைக் காட்டிலும் அவருடைய அதிகாரம், ஆணை முதலியவை மிகக் குறைவாயிருந்தன.

நாட்டின் மிக்குயர் நீதிமன்றம் 'குரியா ரெஜிஸ்' என்பதாகும். இது மன்னரின் ஆலோசனை மன்றமாயும், நாட்டு மக்களின் அவையாயும் சேர்ந்து இருந்தது. இம் மன்றத்தின் ஆலோசனைப்படியும் சம்மதத்துடனும் மன்னர், சட்டமியற்று தல், நீதிவழங்குதல் எனும் இரு பணிகளையும் நடத்தினர். செயல்படவேண்டிய விஷயங்கள் மிகுதியாயிருந்ததும், மன்னர் அடிக்கடி நார்மண்டிக்குச் செல்லவேண்டியிருந்ததும், மற்றொரு மிக்குயர் அதிகாரி புதிதாக நியமனஞ்செய்யப் படுவதற்குக் காரணமாயிருந்தன. ஜஸ்டிஷியர் எனப்படும் இவ்வுயரதிகாரி, எல்லா விஷயங்களிலும் மன்னரின் பிரதிநிதி யாக விளங்கினர். மன்னர் நாட்டிலில்லாதபொழுது அவ ருடைய பதிலியான ரீஜென்டாகவும், நாட்டில் சட்டம், நிதி பற்றிய விவகாரங்களை எக் காலத்தும் ஆட்சி செய்கிறவராயு

மிருந்தார். சான்ஸலர் எனும் பதவியர், மன்னருடைய முத்திரை அடையாளத்தை வைத்திருக்கும் அதிகாரியெனும் பெயரில் முதன்முதலாக, பக்த சிலரான எட்வர்டின் ஆட்சியில் காணப் படுகிருர். (மன்னர்களில் பக்தசிலர் முத்திரை அடையாளத் தைக் கொண்டிருந்த முதல் மன்னர்.) இப் பதவி தொடர்ந்து காணப்பட்டது. எனினும், இவர் ஜஸ்டீஷியருக்குட்பட்டவரா யிருந்தார்; மன்னருடைய எழுத்தர்கள், அரண்மனையைச் சார்ந்த திருக்கோயிலில் பணிபுரிகிறவர்களான சமய குரவர் கள், மன்னருடைய பல்வேறு பணிகளைச் செய்கிறவர்கள் ஆகியோருக்குத் தலைமையாயிருந்தார்.

## பின்னேக்குதல்

கிறித்தவ உலகிலேயே மிகுந்த செல்வம் படைத்தவராக வில்லியம் புகழ்பெற்று விளங்கினர். ஆங்கிலேயரின் மன்னர், மான்ப முறையில் மான்யப் பிரபுக்களின் உயர்தலைவர், நாட்டு மக்கள் எல்லோரின் தலைவர் எனும் காரணம்பற்றி, வில்லியம் அவருக்குமுன் ஆட்சி புரிந்தவர்கள் செலுத்தியதைக்காட்டிலும் மிகப்பெரியஅதிகாரத்தைச்செலுத்துகிறவராயிருந்தார். ஆங்கி லேயரின் அரசியல் சட்டம், ஆட்சிமுறைச் சட்டங்கள் முதலிய வற்றில் வில்லியம் செய்த மாற்றங்கள் மிகக் குறைவான போதிலும், அவரது ஆட்சி யதேச்சாதிகார ஆட்சியாயும், ஆட்சிமுறை கடுமையானதாயுமிருந்தன. அவருடைய கொடுங்கோன்மையில், மக்களின் துயரத்தைத் துடைப்பதில் உணர்ச்சிப் பெருக்கம், கோபம் இவைகளைக் காட்டிலும் அலட் சியம் செய்வது மிகுதியாகக் காணப்பட்டது. இவ்வாறு 'அலட்சியம் செய்வது, ஈவிரக்கமற்றவரும் வருங்காலத்தை அறிந்தவருமான அரசியல் தந்திரியை வேறுபடுத்திக் காண்ப தாகும்' என ஹாலம் கூறியுள்ளார்.[83] இக் கருத்துணர்வுடன், டென்மார்க்கிலிருந்து அச்சுறுத்தப்பட்ட படையெடுப்பைத் தடைசெய்வதற்காக, டைன் நதிக்கும் ஹம்பர் நதிக்குமிடைப் பட்டுள்ள நிலப்பகுதி முழுமையையும் பாழ்படச்செய்தார். எனவே, பல ஆண்டுகளுக்குப் பின்னும், அப்பகுதியில் மக்கள் குடியேறியிருந்த கிராமத்தையோ அல்லது குடியிருந்த வர்களையோ காணமுடியாதுபோயிற்று.[84]

வெற்றிவீரரின் ஆட்சி பொதுவாக நாட்டு மக்களுக்கு நன்மை பயப்பதாயிருந்தது. வலிமைமிக்க மத்திய அரசாங் கத்தை அமைப்பதன் வாயிலாகப் பல பகுதிகளை ஒன்ருக இணைக்க முடிந்தது. மன்னரான வில்லியம் அறிஞராயும், அவருடைய கருத்துப்படி நேர்மையானவராயும் விளங்கினர்.[85]

ஆனால், அவருடைய கடுமையான இயல்பும், அவரது ஆட்சி யின் கொடுமையும், அவருடைய மக்களில் எல்லாப் பிரிவினரை யும் அவரிடம் அச்சங்கொள்ளச் செய்தது. ஆங்கிலோ-சாக் ஸானிய காலவழிச் செய்திக் கோவையாளர் படம்பிடித்துக் காட்டும் முறையில் எழுதியுள்ளதில், 'அவர் சற்றும் வளைந்து கொடுக்காதவர்; கொடிய சுபாவமும் உடையவர்; எனவே, அவருடைய விருப்பத்திற்கு மாறாக எதையும் செய்ய மக்கள் அஞ்சினர். அவருடைய விருப்பத்திற்கு மாறாகச் செயல்புரிந்த ஏர்ல்களை (பிரபுக்களை) சிறையிலிட்டார்; மேற்றிராணியார்களை அவர்கள் ஆட்சி செலுத்திய பகுதிகளிலிருந்து நீக்கினார்; மடாலயத் தலைவர்களை மடாலயத்திலிருந்து வெளியேற்றினார்; தேனர்கள் எனப்படும் குடியானவர்களைச் சிறையிலிட்டார்; இறுதியில் அவருடைய உடன்பிறந்தாரான ஒடோ என்பாரை யும் விட்டுவிடவில்லை.' 'உண்மையில் அவர் காலத்தில் மக்கள் மிக்க தொல்லைகளுக்கும் பல்வேறு இடர்களுக்கும் ஆளாயினர். கோட்டைகளைக் கட்டச் செய்தார். எளியோர்கள் கொடுந் துயருக்குட்படுத்தப்பட்டனர். அவ்வளவு கடுமை நிறைந்தவரா யிருந்தார். குடிகளிடமிருந்து ஏராளமான மார்க்கு அளவுள்ள பொன்னையும், பல நூற்றுக்கணக்கான பவுண்டு நிறையுள்ள வெள்ளியையும் பறிமுதல் செய்தார். அவ்வாறு ஒவ்வொரு சிறிய தேவைக்கும், சில சமயம் உரிமையோடும், மற்ற சமயங் களில் தமது வலிமையைக் கொண்டும் பறிமுதல் செய்தார்.' 'அவருடைய நிலங்களை இயன்றவரை அதிகமான தொகை யைக் கொடுக்க முன்வந்த குடியானவரிடம், பயிர்செய்வதற் காக விட்டார். பின்னர் முதல் குடியானவர் அளித்த தொகை யைக் காட்டிலும் அதிகத் தொகை கொடுப்பதாகச் சொல்லிக் கொண்டு மற்றொருவர் வந்தால், மன்னர், அதிகத் தொகை செலுத்துவதாகச் சொன்னவரிடம் நிலங்களை விட்டார். பின்னர், மூன்றாவதாக ஒருவர் மேலும் அதிகமான தொகை கொடுப்பதாக முன்வந்தால், மிக அதிகமான தொகை செலுத்துகிறவரிடம் மன்னர் நிலங்களை ஒப்படைத்தார். ஏழைகளிடமிருந்து அவருடைய அதிகாரிகளான ரீவ்ஸ் எவ்வளவு நேர்மையற்ற முறையில் பணம் திரட்டினர் என்ப தைப்பற்றிச் சற்றும் கருதவில்லை; எவ்வளவுசட்டவிரோதமான செயல்களைப் புரிந்தனரென்பதையும் கவனிக்கவில்லை. சட்டத் தின் நேர்மையைப்பற்றி மனிதன் பேசும்பொழுது, சட்ட விரோதமானதை மனிதன் செய்ய முற்பட்டான்; செல்வந் தர்கள் துன்பமுற்றனர்; ஏழைகள் முணுமுணுத்தனர்; எனினும், அவர் மிகவும் கடுமையான மனத்தினராயிருந்த தால், அவர்கள் எல்லோருடைய வெறுப்பையும் பாராட்டா திருந்தார்.'[86]

## அடிக்குறிப்பு

1. ஹெராால்டின் சகோதரி எடித், பக்தசீலரான எட்வர்டின் மனைவியாவர். அவரது தாயார், கிதா, உல்ஃப் ஜார்லின் சகோதரி; நட் அரசனை நீக்கிய முதல் உறவினள் (அத்தை மகள் அல்லது சித்தி மகள்).

2. வொர்செஸ்டரின் ஃபிளாரன்ஸ், an. 1066.

3. ஃபிரீமன், 'நார்மானியர் வெற்றி' (3ஆவது பதிப்பு), ii, 302–309.

4. இக் கதை தெளிவற்றது. ராம்சேயின், 'இங்கிலாந்தின் மூலக்கூறுகள்', i, 496, ii, 21 காண்க.

5. 'பாய்டியர் பிரதேசத்தைச் சேர்ந்த வில்லியம்' (வில்லியம் வரலாறு), மாசெரிஸ் பதிப்பு, பக்கம் 145. வொர்ச்செஸ்டரைச் சேர்ந்த ஃபிளாரன்ஸ், an. 1066.

6. ஃபிரீமனின், 'நார்மானியர் வெற்றி', i, 1. காண்க.

7. மேலே கூறப்பட்டதில் பக்கம் 2.

8. மெக்காலேயின், 'இங்கிலாந்து வரலாறு', i, 10.

9. பொதுவாக நிலமான்ய முறைக்கு F. L. கன்ஷாஃப், 'நிலமான்ய முறை என்றால் என்ன?' என்ற நூலின் அடிப்படை முன்னுரையைக் காண்க. (அதனை P. கிரியர்சன் நிலமான்ய முறையென மொழிபெயர்த்துள்ளார்.) மற்றும், திறமையான மார்க் பிளாக்கின் (அளவீட்டை) மதிப்பீட்டையும் காண்க. 'லேரெஜிம் ஃபியோடல்' (2 வால்யூம், 1939). 'இங்கிலாந்தில் நிலமான்ய முறை' என்ற தலைப்பில், போலக்கும் மெயிட்லண்டும் எழுதிய, 'ஆங்கிலச் சாசன வரலாறு', i, புத்தகம் ii, அதி. 1 காண்க; மெயிட்லண்டின், 'அரசியல் சட்ட வரலாறு', பக்கம் 23—24, 141—164; ரவுண்டின், 'இங்கிலாந்தில் நிலமான்யம்', பக்கம் 225; மற்றும் சிறப்பாக F. M. ஸ்டென்டன், 'ஆங்கில நிலமான்ய முறையின் முதல் நூற்றாண்டு' (1932).

10. 'வெற்றிவீரர்'—என்ற சொல்லைப்பற்றிய குறிப்பு ஓரளவு தேவைப்படுகிறது. அச் சொல், நாம் கீழ்ப் படிதல் என்ற கருத்தில் கையாளும் காலத்தில் உள்ள மொழியில் காணப் படவில்லை. ஆனால், யாரொருவர் தமது உரிமையை அடைய முயற்சி செய்து பின் அதனை அடைகின்றாரோ

அவர்தான் வெற்றிவீரர் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எப்படி இருப்பினும், அச் சொல்லின் உண்மையான (இக் கால) நவீன காலப் பொருளை, வில்லியத்துடைய நடைமுறை நிலை மிகத் தெளிவாக விளக்குகிறது. அவரே ஒரு முறை வெளியிட்டபடி அதன் பொருள் யாதெனில், 'கத்தி நுனியால் அரசன்' என்பதாகும்.

**11.** அதே காலத்திய பீட்டர்பரோவின் காலவரிசை நிகழ்ச்சியை எழுத்தாளர் வில்லியத்தின் பட்டமளிப்பு விழா வன்றோ அல்லது அதற்குச் சற்றுப் பின்போ, நிலம் பெற அவரை வழிபட்டுக் கீழ் அடங்கியோர்களைப்பற்றிக் கூறுகிறார். 'தேர்ந்தெடுத்த பிரகடனங்கள்', 94—95.

**12.** ஆண்டுப் புத்தகம் 24, மூன்றும் எட்வர்டு, f. 65, எண் 70 (1350).

**13.** ஸ்டப்ஸின், 'பொறுக்கு சாசனங்கள்' முன்னுரைக் குறிப்பு, 14—15.

**14.** நிலமானிய முறையின் தோற்றம் பற்றிய பல்வேறு அண்மை ஆராய்ச்சிக் கருதுகளை அறிந்துகொள்ள சர் பால் விநோகிரடாஃபின், 'கேம்பிரிட்ஜ் மத்திய கால வரலாறு', ii, அதிகாரம் XX காண்க. மேலும், மார்க் பிளோச், 'லேரெழும் ஃப்ளோடல்' (1939) பார்க்க. அண்மையில் எழுந்த கருத்து வேறுபாடுகளை அளவிட H. A. குரோன், 'நிலமானிய முறையின் தோற்றங்கள்—வரலாறு', XXIV, 251—259 (1939); மற்றும் F. L. கான்ஷாஃப், 'மானியமும் பண்ணையாளும்', கேம்பிரிட்ஜ் வரலாற்றுக் குறிப்பேடு, VI, 145—175 (1939); C. E. ஓடிகார்டு, 'அடிமையும் மானியமும்' (1945) காண்க.

**15.** முதன்முதலாக, கீழ்க்குத்தகைக்காரரது நிலமானிய உரிமையை, தலைமுறை வழியில் (1037) விளம்பரத்தின் (கட்டளையின்) மூலம் உறுதிப்படுத்தியவர் இரண்டாம் கான்ராடு எனத் தெரிகிறது. ஜெர்மன் வரலாற்றுச் சின்னங்கள், i, 89 முதல்; 'கேம்பிரிட்ஜ் இடைக்கால வரலாறு', iii, 266.

**16.** அது அவர்களுடைய இயற்கைப் போக்கு என்பதில் ஐயமில்லை. உயர்ந்த குறிக்கோளுடைய நிலமானிய முறை அந்த நடத்தையைக் கட்டுப்படுத்திக்கொள்கின்றதா அல்லது வெறுக்கின்றதா என்பது வெளிப்படை விவா

தத்திற்கு உரியதாகும். ஆடம்ஸ்,'ஆங்கில அரசியல் சட்டத் தோற்றம்', 187, 190.

17. 'பரிந்து இறைஞ்சும் முறைப்' பழக்கம் ஆரம்பத்தில் நிலத்தோடு தொடர்புடையதாக இல்லை. ஆனால், ஒருவருக்கொருவருக்கான பாதுகாப்புக்கும் நம்பிக்கைக்கும் ரோமானியரது கினியன்டேலாவை ஒத்த, ஒரு தனிப்பட்ட பந்தம் ஏற்படுத்தப்பட்டது.

18. கடினமானதும் சச்சரவுக்கு இடமானதுமான இத் தலைப்பைப்பற்றிய அண்மை ஆராய்ச்சி வேலையின் கருத்துத் தொகுப்பை அறிந்துகொள்ள, டுக்ளாஸ், 'நார்மானியர் வெற்றியும் ஆங்கில நிலமானிய முறையும்', 'பொருளியல் வரலாற்றின் மீள்பார்வை', IX, 128 காண்க.

19. ஐரோப்பாவைச் சார்ந்த வழக்கறிஞர்கள், நிலமானிய முறை எவ்வாறு கடைசியாகக் கொண்டுவரப்பட்டது என்ற சூழ்நிலையை, ரோமானியச் சட்டத்தின் அடிப்படையில் வெளிப்படுத்த முயன்றபோது, இவ்விரு சொற்றொடர்களும் பயன்படுத்தப்பட்டன. நம்முடைய சொந்தச் சாதாரணச் சட்டம் இவ் விளக்கங்களைப் பயன்படுத்தவில்லை. ஏனெனில், ரோமானிய 'டொமினியம்' (உரிமை) கருத்துப்படி நிலமானிய முறையைச் சரிசெய்யவேண்டிய அவசியம் ஏற்படவில்லை. போலக்கும் மெயிட்லந்தும், 'ஆங்கில சட்டத்தின் வரலாறு', ii, 6; டிகிளாரில், 'ஃபிரெஞ்சு நாட்டு வரலாறு', 27 முதல்.

20. ஷெ, பக்கம் 15.

21. ஸ்டப்ஸ் குறிப்பிடுவதாவது: 'சார்புடையவன்—அரசனோடு (1) ஊழியத்தால், (2) நட்பால், (3) பரிந்துரையால், (4) மானியமாக நிலத்தைப் பெறுவதால் தொடர்புடையவனாகிறான். ஃபிராங் நிலமானிய முறை பின் இரண்டிலிருந்து வளர்ந்ததாகும். முதல் இரண்டிலிருந்தே ஊழியம் செய்யும் ஆங்கிலப் பெருமை தோன்றிற்று. நார்மானிய வெற்றியைத் தொடர்ந்து வந்தன நிலமானிய முறை ஃபிராங்கும் நில ஆட்சி முறையும் ஆகும். அவற்றின் முன்னோடியாக இருந்தது, தனிப்பட்டதும் சட்ட பூர்வமானதுமேயன்றி, நிலஆட்சி முறையின் செல்வாக்கினால் வளர்ந்ததன்று. 'அரசியல் சட்ட வரலாறு', i, 170n.

22. முதலாம் எட்மண்டின் III-ல் முன்னைய சூளுரையைக் (Circ. கி.பி. 943) A. J. ராபர்ட்சனின், 'எட்மண்டுமுதல்

முதலாம் ஹென்றிவரையுள்ள சட்டங்கள்', 13, 298லும், ஸ்டப்ஸின், 'பொறுக்கு சாசனங்கள்' 77லும் காண்க. வில்லியத்துக்கான சூளுரையை ராபர்ட்சனில் உள்ள Wl. art. 2லும் Wl. art. retr. 2லும் 239, 245; மற்றும் ஸ்டப்ஸின், 'தேர்ந்தெடுத்த சாசனங்கள்', 98; 'ஆங்கிலோ-சாக்ஸானியக் காலவரிசை', s.a. 1086, மேலே கூறியது பக்கம் 96லும் காண்க. டேவிஸின், 'நார்மானியர் அஞ்ஜீவினியர்கீழ் இங்கிலாந்து', பக்கம் 37, மேலும் ஆடம்ஸின், 'ஆங்கிலேய அரசியல் சட்டத் தோற்றம்', 186, 187 ஆகிய நூல்கள், சாலிஸ்பரி சூளுரையின் முக்கியத்துவம் மிகைபடக் கூறப்பட்டுள்ளதாகக் கருதுகின்றன. அண்மையில் நடைபெற்ற ஆராய்ச்சியானது, சாலிஸ்பரி சூளுரை உண்மையான முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளதாகக் குறிப்பிடுகிறது. அது நிலமானியத்திற்கு எதிரிடை அன்று. 'ஆனல், வலியுறுத்தப்படவேண்டிய கருத்து யாதெனில், இங்கிலாந்தில் உள்ள நிலமானிய அமைப்பு, ஆரம்பத்திலிருந்து செயற்பட்டுவந்ததோடு, பிற இடங்களில் நடைமுறையில் இல்லாத பலவகைப் பண்புகளோடு காணப்பட்டது'—டி. ஸி. டோக்ளாஸ்; 'நிலமானியப் பத்திரங்கள்' (1932), c. குறிப்பு 1. F. M. ஸ்டென்டனின், 'ஆங்கிலேய நிலமானிய முறையின் முதல் நூற்றாண்டு', 111—113; H. A. குரோனின், 'வரலாறு', XIX, 248. இந்தச் சபையில் இறுதியான அல்லது மிக உயர்ந்த நிலமானியக் கருத்து விளக்கத்தை, J. H. ரவுண்டின், 'பிரபுத்துவமும் மரபும்', i, 335 காண்க. முதலாம் ஹென்றிகூட சாலிஸ்பரியில் சூளுரையை வலிந்து பெற்றார்; ஷை, பக்கம் 127.

23. இவ்வறிக்கைகள் வின்செஸ்டருக்கு அனுப்பப்பட்டன. அவை நன்கு உணர்ந்தறியப்பட்டபின் இரண்டு தொகுதி (வால்யூம்)களில் பதிவுசெய்யப்பட்டன. அவையே 'டூம்ஸ்டே புத்தகம்' என்ற பெயரளவில் பிற்கால நிலைக்கு இறங்கி வந்துள்ளன. 'ஸ்கக்காரியோவின் உரையாடல்' என்ற நூலின் ஆசிரியர் மிகப் பொருத்தமான விளக்கம் தருகின்றார்: "இப் புத்தகத்தை 'நீதிதேவதை'யாகச் சுதேசிகள் அழைக்கின்றனர். எடுத்துக்காட்டு உவமையாக இது கையாளப்படுகிறது," I xvi, 3. 'இந்தப் புத்தகத்தின்மூலம் தான் எல்லா மக்களையும் மதிப்பிட முடியும்' (புதிய ஆங்கில அகராதி). 'இந்த ஆவணத்திலிருந்துதான் (ரிஜிஸ்தர்) அதில் விவரிக்கப்பட்டுள்ள நிலங்களின் மதிப்பு, உரிமைக்காலம், ஊழியம் ஆகியவற்றை மதிப்பிட்டுத் தீர்ப்பளிக்க முடியும்' (எல்லிஸ், 'பொது முன்னுரை'). 'நாம்

கவனித்தபடி, இதுபோன்ற பல ஆவணங்களுக்கு இப் பெயரைப் பயன்படுத்தியிருப்பது நிச்சயமே. அவை செயின்ட் பாலின் டூம்ஸ்டே, செஸ்டரின் டூம்ஸ்டே, யார்க்கின் டூம்ஸ்டே முதலியன. இத்தகைய நம்பத்தகுந்த பதிவேட்டின் அல்லது ஆவணத்தின்மூலம் உள்ளூர்ப் பழக்கவழக்கங்களில் உள்ளபடியே, பண்டைய ஆங்கிலச் சட்டத்தின் செய்திகளை மிக நிச்சயமாகப் பெறமுடிகிறது; மேலும், நகராண்மை ஆட்சிப் பண்பையும், நகரங்களின் பழக்கவழக்கங்களையும், எர்ல்களின் நிர்வாகத்தின்கீழ் இருக்கும்வரை ஷயர்களின் பொருளாதார முறையையும், வில்லியத்தினுடைய ஆட்சியின் இறுதிக் காலம் வரையில் இங்கிலாந்தின் அரசியல், சமூகப் பொதுநிலைமைகளையும் அறிந்துகொள்ள முடிகிறது. மூன்றும் ஜார்ஜ் 1783-ல் முழுமை பெற்ற இத் தேசீயச் சுவடியை (ரிஜிஸ்தரை) இரு மடிப்புத் தொகுதிகளாக அச்சிடுவதற்குக் காரணமாயிருந்தார். பதிவேட்டுக் குழுவினரால் 1816-ல் இவற்றிற்கு நான்கு பிற்சேர்க்கைச் சுவடிகளும் (ரிஜிஸ்தர்கள்), மேலும் இரு தொகுதிகளில் பொருளடக்க அகர வரிசைகளும் கொண்டுவரப்பட்டன. கடைசி இரு தொகுதிகளை வெளியிட்ட சர் ஹென்றி எல்லிஸ், மிகத் திறமை வாய்ந்த ஒரு முன்னுரையை இதற்கு எழுதி, அதைத் தனியாக 1833-ல் வெளியிட்டார். அதற்குப்பின் 'டூம்ஸ்டே புத்தகம்' உருவ நேர்படியில் மீண்டும் உற்பத்தி செய்யப்பட்டது. இரு தொகுதிகளும் அழியாதிருப்பதற்கான வழியைப்பற்றியும், அதன் உடல் அமைப்பைப்பற்றியும் மிகப் பயன்தரக்கூடிய விவரங்கள் அல்லது குறிப்பினை, பதிவேட்டு அலுவலகத்திற்காக, 1954-ல் 'டூம்ஸ்டே மறுகட்டமைப்பு'ச் செய்யுங்கால், எழுதுபொருள் அலுவலகத்தார் வெளியிட்டனர். டூம்ஸ்டே புத்தகத்தின் பொருளைப் பற்றிய சிறந்த பகுப்பாராய்ச்சிகள், மெயிட்லந்தின், 'டூம்ஸ்டே புத்தகமும் அதற்குப் பின்பும்' என்ற நூலிலும், J. H. ரவுண்டின், 'இங்கிலாந்து நிலமானியம்' என்ற நூலிலும் உள்ளன. மிகச் சிறந்த சிறிய முன்னுரையை, அண்மை ஆராய்ச்சிப் பொழிப்பையும், தேர்ந்தெடுக்கப்பட்ட நூலாசிரியர் பெயர் அட்டவணையையும் சேர்த்து D. C. டக்ளாஸ், 'டூம்ஸ்டே மதிப்பீடு', வரலாறு, xxi, 249 (1936)-ல் கொடுத்துள்ளார். டூம்ஸ்டே புத்தகத்தைப் படித்தறிவது, தவிர்க்க முடியாத மிகப் பெரிய தனித்துறை மரபாக உள்ளது.

24. டூம்ஸ்டேயிலிருந்து நாம் அறிந்துகொள்வது யாதெனில், அரசரது சகோதரர்களான, பாயக்ஸ் மதகுருவான ஓடோவும், மார்டைன் கோட்டத் தலைவரான ராபர்ட்டும் வைத்திருந்த மிகப் பரந்த உடமைப்பொருள்கள் முறையே பதினேழு, இருபது கோட்டங்களிலே பரவியிருந்தன. பௌலோன் கோட்டத் தலைவர், எஸ்டேஸ், பன்னிரண்டு கோட்டங்களில் மானியம் வைத்திருந்தார். அவுரேஞ் சஸின் ஹக் (லுபஸ்), அவரது ஆட்சிக்குரிய செஸ்டர் எர்ல்டமிலுள்ளவை நீங்கலாக, இருபத்திரண்டு கோட்டங் களில் நிலம் பெற்றுள்ளார். எல்லிஸின், 'முன்னுரை'யில், குத்தகை எடுத்தோரது அகரவரிசைப் பொருளடக்கத்தில் காண்க. சிதறியுள்ள எஸ்டேட்டுகளை அளித்தல், ஒருகால் சிறிதுசிறிதாக வெற்றி பெற்றதனாலும், வில்லியத் தினுடைய அரசியல் நோக்கத்தினாலும் இருக்கக்கூடும். டேவிஸின், 'நார்மானியர், ஆஞ்ஜீவின்களின்கீழ் இங்கி லாந்து', பக்கம் 31 காண்க. ஸ்டென்டனின், 'ஆங்கில நிலமானியம்' 29-ல் உள்ள கருத்துரையைக் கவனிக்க. சிதறியுள்ள எஸ்டேட்டுகள் உள்ளூர் இனத்தவரின் குழு அமைப்பினைத் தடுத்துவிட்டன; படையெடுத்தோர் கலந்து உறவாடும் வாய்ப்பினை மேலோங்கச் செய்தன.

25. செல்டனால் 'டிரினோடா' என்ற தவறான அமைப்பு ஏற் பட்டது. உண்மையான அச் சொல்லின் அமைப்பு G. H. டர்னரால் 'பிரிட்டனின் அறிவுக் களஞ்சியம்' நூலின் (1911), xxvii, 287ஆம் பக்கத்திலும், மற்றும் W. H. ஸ்டீவன்சனால் 'ஆங்கில வரலாற்று மீள்பார்வை' நூலின் xxix, 689ஆம் பக்கத்திலும் நிலைநாட்டப்பட்டுள் ளது. முக்கடமையாவன: நாட்டு இராணுவத்தில் சேவை, வாராவதிகளைச் செப்பனிடல், கோட்டைகளைச் சீர் பார்த்தல் என்பனவாம். இதிலிருந்து எவ்வித விலக்கும் (நமக்குத் தெரிந்தது உண்மையான ஒரே ஒரு விலக்கு தான்) கிடையாதென அரசு வற்புறுத்தியது. பணிகள் தனித்தனியே பிரித்துக் கூறப்பட்டுள்ளன. 'அவசியமான முக்கடமைகள்' எனும் சொற்றொடர் ஐயப்படச்கூடிய சாசனமொன்றில் ஒரே ஒரு தடவைதான் குறிப்பிடப்பட் டுள்ளது.

26. டூம்ஸ்டேயின் எண்ணிக்கைப்படி, தலைமை நிலமானியப் பிரபுக்கள், திருச்சபை சார்புள்ள மாநகராண்மைகள் உட்பட, மொத்தம் கிட்டத்தட்ட 1,500. கீழ்க்குடிமானிய தாரர்கள் கிட்டத்தட்ட எண்ணிக்கையில் எண்ணாயிரம்

பேர் ஆவர். அவர்கள் பெரும்பாலும் விலக்கப்பட்ட ஆங்கில நிலச் சொந்தக்காரர்கள். அவர்கள் தீன் என்ற நிலையிலிருந்து நார்மானியப் பிரபுவின் கீழுள்ள எளிய ஃபிராங்ளின் நிலைமைக்குக் குறைக்கப்பட்டவர்களாவர்.

27. ரவுண்டின், 'நிலமான்ய இங்கிலாந்து' காண்க. 'இங்கிலாந்து நைட்வீரர்களின் ஊழியத்தின் முன்னுரை', பக்கம் 225. முதலாம் வில்லியம், அவரது மனப்போக்கின்படி ஒவ்வொரு தலைமை நிலமானியப் பிரபுவின் கடமையையும் நிலைநாட்டினர். (H. M. சியூவின், 'திருச்சபை சார்ந்த தலைமை நிலமானியப் பிரபுக்கள்' நூலையும், M. D. நவுல்ஸ்ஸின், 'மடாலய உத்தரவு', 610 நூலையும் காண்க). அளித்த நிலத்தின் மதிப்பையோ அல்லது பரப்பையோ கொண்ட அதே வீதாச்சாரப்படி அடிமை ஊழியக் கடப்பாடு நிர்ணயிக்கப்படவில்லை. ரவுண்டின் கொள்கையின் சுருக்கம் (சிறிய) பெடிட்-டுடைலிஸின், 'ஸ்டப்ஸின் அரசியல் சட்ட வரலாற்றுக்கான துணைக்குறிப்புகளும் படித்தறிதலும்' என்ற நூலில் காணப்படும். 'நிலமானிய காலத்தில் ஆங்கிலச் சமூகம்', i, பக்கம் 52. கான்ஸ்டாபுலேரியா என்ற அவரது கொள்கைக்கு A. L. பூலின், 'சமூகத்தின் கடமைகள்', 48—51 காண்க.

28. போலக்கும் மெயிட்லந்தும் எழுதிய, 'ஆங்கிலேயச் சட்ட வரலாறு', ii, 83–89.

29. லிட்டில்டன் (*temp*. நான்காம் எட்வர்டு), lib. ii, c. i, s. 85. கிளான்வில் (temp. இரண்டாம் ஹென்றி), lib. ix, c. 1; போலக்கும் மெயிட்லந்தும், i, 296–307 காண்க.

30. கீழடங்கி வழிபாடு செய்யும் நிலையை ஏற்றுக்கொள்வது நிலத்தின் தனிப்பட்ட சட்டத்திற்குப் போதிய பலன்களைப் பெற்றதாகும்; ஆனால், அது அரசியல் சட்ட எல்லைக்கு அப்பாற்பட்டதாகும்.

31. பண்ணையின் எல்லைபற்றி அறிய மெயிட்லந்தின், 'பண்ணை நீதிமன்றங்களிலும் பிற பெருநிலக்கிழார் நீதிமன்றங்களிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட வழக்குகள்' என்ற நூலிலும், 'பெருமகன் நீதிமன்றம்' என்ற நூலிலும் காண்க. (இரண்டும் செல்டன் குழுவினரால் பதிப்பிக்கப்பட்டவை). மேலும், ஹோல்ட்ஸ்வொர்த்தின், 'ஆங்கிலச் சட்ட வரலாறு', i, 181–187 காண்க.

32. நிலமான்ய விவரங்களின்மீதான இதனையும் இதன் தொடர்புள்ள பிற நடவடிக்கைகளையும் பிளக்நட்டின், 'முதலாம் எட்வர்டின் சட்டம் இயற்றும் முறை' என்ற நூல் விவரிக்கிறது.

33. கிளான்வில், lib., ix, c, 8; மகாசாசனம், c, 12 (ஷை, திகாரம்-4).

34. 3 முதலாம் எட்வர்டு, c, 36; 'பொறுக்கு சாசனங்கள்', 442; அரசனுக்குத் தலைமை மான்ய பிரபுக்களின் உதவியின் எண்ணிக்கைகள் 1352-ல் உள்ளபடி நிர்ணயிக்கப்பட்டுள்ளன. (25 மூன்றும் எட்வர்டு, stat. 5, c. 11.)

35. ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு', ii, 284; போலக்கும் மெயிட்லந்தும், i, 312.

36. 'பொறுக்கு சாசனங்கள்', 118.

37. உள்ளே கூறப்பட்டுள்ள அதிகாரம் 4; கிளான்வில், lib. ix, c. 4; மேலே கூறப்பட்டது 193.

38. 'லிட்டில்டன் பற்றிக் கோக்', sect. 103, பக்கம் 77A. நிலமானிய முறைப்படியான 'பிரைமர் சீஸின்' என்பதற்கு ஒப்புவமையாகப் போப்பாண்டவர்கள் — ஹில்டிபிராண்டின் கருத்துகளை நிறைவேற்றும்போது திருச்சபையின் நிலங்களுக்குத் தாங்களே நிலமானியத் தலைவர்கள் என்று உரிமை கொண்டாடியதோடு—தொடர்ந்தாற்போல் இங்கிலாந்திலுள்ள, ஒவ்வொரு பயனைப் பெறுகிற மதகுருமாரிடமிருந்தும், அவரது மானியத்தின் முதற் பலனை வலிந்து பெற்றார்கள்.

39. மானியத் திறையில் வலிந்து பெற்றவற்றுள் மிகக் கொடுமையானவை இளங்கண்மை (wardship), திருமணம் முதலியவை மீது பெற்றவையாகும். இவை வில்லியம் ரூஃபஸ் என்பவரால் மிகத் தவறான முறையில் பயன்படுத்தப்பட்டன. முதலாம் ஹென்றி தனது முடிசூட்டுவிழாச் சாசனத்தில் குறைகளை நீக்குவதாக உறுதி செய்திருந்தும், அவருடைய வாக்கை அவர் காப்பாற்றவில்லை. நிலமானிய வழக்கறிஞர்கள் இளங்கண்மையின் (wardship) உரிமை பற்றித் தக்க ஆதாரத்துடன் காரணம் காட்டி விளக்கினார்கள். அதாவது, இளமை வயதுள்ள வாரிசுதாரர் இராணுவச் சேவைசெய்ய இயலாத காரணத்தால், நிலத்தை மானியமாக அவர்கள் வைத்துக்கொள்ளக்கூடாது என்பதாம். அந் நபர் வாரிசு உடையவரானதனால், அவருக்கு

இராணுவ சேவைக்கு ஏற்றபடி பயிற்சி அல்லது படிப்புக் கொடுத்தல் மானியத் தலைவரின் அக்கறையே யாகும். ஃபார்டெஸ்கியூவின், 'டி லாடிபஸ் லீகம் ஆங்கிலியே', c. xliv. கிளான்வில்லின் காலத்திய ஒரு நார்மானியர், ஒரு குழவி வாரிசு அதனது தலைவனைவிட ஓரளவு அதனது உறவினராலேயே கொலைசெய்யப்படலாம் என்று தீவிரமாக வாதிடுகிறார். போலக்கும் மெயிட்லந்தும், i, 326. R. ஜெனஸ்டாலின், 'லா டுடிலீ' (1930) நூலில் நிலமானியத்திற்கும் குடும்பத்திற்குமான சச்சரவைக் காணலாம்.

40. கிளான்வில், lib. vii, c. 12.

41. மெர்டன் சட்டம், 20 மூன்றும் ஹென்றி, c. 6. கிளான்வில் (*temp.* இரண்டாம் ஹென்றி), பாதுகாப்பிலுள்ள பெண்களின் திருமணத்திற்கான தலைவனின் அல்லது பிரபுவின் உரிமையைத் தெளிவாக வரையறுத்துள்ளார். பிராக்டன் (*temp.* மூன்றும் ஹென்றி), அதனை ஆண், பெண் இருவருக்கும் பொருந்தும்படி விரிவுபடுத்தினர். மெர்டன் சட்டப்படி, தலைவன் அல்லது பிரபு தன் பாதுகாப்பிலுள்ளவரைத் திருமணத்தில் விற்கவோ அல்லது அதற்குரிய மதிப்புப் பொருளைப் பெறவோ வேண்டிய உரிமை அச் சட்டத்தில் தெளிவாகப் பிரகடனம் செய்யப்பட்டுள்ளது.

42. கிளான்வில், lib. vii, c. i; போலக்கும் மெயிட்லந்தும், i, 329; உள்ளே பக்கம் 89.

43. 'பொறுக்கு சாசனங்கள்', 437; போலக்கும் மெயிட்லந்தும், i, 337 [வேறு விதமான நோக்கிற்குப் பிளக்நட்டின், 'பொதுச் சட்டத்தின் சுருக்கமான வரலாறு' (ஐந்தாவது பதிப்பு), 540 காண்க].

44. 1 மூன்றும் எட்வர்டு, சட்டம், 2, c. 12.

45. 'லிட்டில்டன் பற்றிக் கோக்', i, விதி, 153. ஒருவர் இடைமானியக் குடிவார வினைமுறை அலுவலாலும் பெறலாம். போலக்கும் மெயிட்லாந்தும், i, 285 காண்க. இத்தலைப்பின் முழுமையும் அறிய, ரவுண்டின், 'முடிசூட்டுவிழா ஊழியங்களுள் அரசரது வினைமுறை அலுவலர்களும் இராஜ்ய அலுவலர்களும் (1911)' என்ற நூலையும், A. L. பூலின், 'சமூகக் கடமைகள்', 57 என்ற நூலையும் காண்க.

46. 'லிட்டில்டன் பற்றிக் கோக்', ss. 159, 160. 'சிறு கத்திகளையோ, அம்புகளையோ, அல்லது இத்தகைய பிற சிறு

பொருள்களையோ வழங்குவதன் மூலம் கடமையை ஆற்றல்', மகாசாசனம், c. 37, உள்ளே அதிகாரம் 4.

47. அச் சொல்லின் மூலத்தைப் பெறப் போலக்கும் மெயிட்லந்தும், i, 294 பார்க்க.

48. பிராக்டன், lib. 2, c. 16, s. 9; ஃபிளாடா, lib. 3, c; 14, s. 9. போலக்கும் மெயிட்லந்தும், i, 294 காண்க.

49. மானிய ஊழியஞ்சார்ந்த எஸ்டேட்டைச் சேர்ந்த குடியானவனுன குழந்தையின் இளங்கண்மை, திருமணம் (பதினுன்கு வயது வரை இளங்கண்மை நீடித்திருந்தது) முதலியவை வாரிசு முறையில் பெறப்படுகிறவரல்லாத ஓர் உறவினரால் செய்யப்படத்தக்கனவாகும். இதற்கு மாருக, மானிய ஊழியஞ்சார்ந்த நிலத்திற்காகப் பணிபுரியும் நைட் வீரர்கள் குழந்தையாயிருந்தபொழுது போஷகர்கள் குத்தகை, இலாபம் முதலியவைகளுக்குப் பொறுப்புள்ளவராகச் செய்யப்பட்டனர். அத்துடன் 14 வயதுக்குள்ளாகவே இளங்கண்மையிலிருக்கும் சிறுவனைத் திருமணம் செய்துகொள்ள அனுமதித்ததால், திருமணம் சம்பந்தமாக ஏற்பட்ட செலவிற்குக் கணக்குக் காட்டவும் கடமைப்பட்டிருந்தார். திருமணத்திற்காக ஏதும் பெறப்படாமலிருந்தபோதிலும், திருமணத்தால் செய்து கொண்டவருக்கு இலாபகரமான பயன் ஏற்பட்டாலொழியக் கணக்குக் காட்டக் கடமையுண்டு. மார்ல்பரோ சட்டம், விதி 17 (1267).

50. ஸ்டப்ஸின், i, 445-ம் அதன் குறிப்பும். போலக்கும் மெயிட்லந்தும், i, 295—காவற் கடமையுடன் கூடிய நிலவுரிமை பற்றிய சிறப்புத் தன்மைகளை அறிய—காண்க.

51. 'லிட்டில்டன் பற்றிக் கோக்', ss. 162, 163; M. de W. ஹெம்மோன், 'மத்திய கால இங்கிலாந்தின் காவற் கடமையுடன் கூடிய நிலவுரிமை' (1914).

52. லிட்டில்டன், s. 165; 'மூன்ருவது உண்மைச் சொத்து அறிக்கை', பக்கம் 8; மேரி பேட்சன், 'காவற் கடமையுடன் கூடிய நிலவுரிமை வழக்கங்கள்' (2 பகுதிகள், செல்டன் கழகம்), பயன்படக்கூடிய செய்திகளின் தொகுப்பாகும். மேலும், ஜேம்ஸ் டெய்ட், 'மத்திய கால ஆங்கிலேய காவற் கடமையுடன் கூடிய நிலவுரிமை' நூலில் சிறப்பாக c. iv, தவிர்க்க முடியாதது.

53. காவல்கிண்டு, ஆங்கிலோ–சாக்ஸானிய 'காஃபோல்கண்ட்' என்றதிலிருந்து வந்தது. 'நிலவாடகை அளித்தல்' எனப் பொருள்படும். காஃபல் என்ருல் வாடகை அல்லது தொழிலாளர்கள் வழக்கமாய்த் தரும் கட்டணம்; லம்பார்டியின், 'கென்டைச் சுற்றிலும்' (1826-ல் பதிப்பித்தது), பக்கம் 477. 'கென்டிஷ் எஸ்டேட் (நிலப்பகுதி) பற்றிய விவரப் புத்தகம்', பதிப்பித்தவர் K. C. லாட்ஜ் (பிரிட்டிஷ் கல்விக் கழகம், 1927), பக்கம் xvi, xvii; N. நெயில்சனின், 'கென்டின் வழக்கமும் பொதுச் சட்டமும்', ஹார்வார்டு சட்ட மீள்பார்வை, xxxviii, 482.

54. ஆனுல், போலக்கும் மெயிட்லந்தும் காண்க, i, பக்கம் 187. 'கென்ட் மக்கள் எவ்வாறு தனிப்பட்ட உடன்படிக்கை வாசகங்களை வெற்றியாளரான வில்லியத்துடன் ஏற்படுத்திக்கொண்டனர் என்பதைக் கூற ஒரு கதை தோன்றியுள்ளது. ஆனுல், நார்மானியரது வெற்றியின் பக்கம் அமைந்துள்ள அக்காலத்தில் விளக்கவேண்டிய கருத்திற்கான விளக்கத்தை எதிர்நோக்கியிருப்பின், நாம் நல்லதைச் செய்தவர்களாவோம்' (மேலே குறிப்பிட்டபடி, ii. 271—272). ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலச் சட்ட வரலாறு', iii, 260—263 என்ற நூலில் முக்கியமான, ஆனுல், கடினமான இச் சிக்கலைப்பற்றிய மிக நம்பத்தகுந்த நவீன ஊகங்களைக் கொடுத்துள்ளார்.

55. ரைட்டின், 'உரிமைக் கட்டுப்பாடுகள்', 210.

56. பிராக்டன், f. 208b–209. 'பொறுக்கு சாசனங்கள்', பக்கம் 415. பண்ணையாள்களின் தனி மதிப்பு நிலையையும், அவர்கள் எத்தகைய உரிமைக் கட்டுப்பாட்டுடன் நிலத்தினைப் பெற்றுள்ளனர் என்பதனையும் அறிய, உள்ளே பக்கம் 178 முதல்.

57. ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு', i, 314.

58. 'ஆங்கிலோ–சாக்ஸன் காலவரிசை வரலாறு', 5, a. 1087. இது நார்மானியரது புதிய அமைப்பு; லிபர்மேன், 'ஆங்கிலோ-சாக்ஸன் காலத்திய தேசிய சபை', பக்கம் 82 காண்க.

59. லிபர்மேன், மேலே கூறப்பட்டது, 75—88.

60. 'ஆங்கிலோ-சாக்ஸன் காலவரிசை வரலாறு', s. a. 1086.

61. ரவுண்டின், 'பிரபுத்துவமும் மரபும்' என்ற நூலில், 'பிர புக்கள் சபையின் தோற்றம்', i. 324 காண்க.

62. Wl. விதி 7 (ராபர்ட்சன், 'ஆங்கில அரசர்களின் சட்டங்கள்', 240); 'பொறுக்கு சாசனங்கள்', 98–99.

63. வொர்செஸ்டரின் ஃபிளாரன்ஸ், s. a. 1018, Cn. 1020; 13 (ராபர்ட்சன், 'சட்டங்கள்', 142).

64. இக் குறிப்பு மால்மெஸ்பரியின், வில்லியம் பற்றியது. ஹாலம், 'இடைக்காலம்', ii, 325. ஹோவ்டன், 'காலவரிசை வரலாறு', ii, 218, s. a. 1070-ல் உள்ள கதை யாதெனில், வெற்றியாளரான வில்லியம்ஸ் எட்வர்டின் சட்டத்தைப் பிரகடனம் செய்ய ஜூரிகளுக்கு உத்தரவிட்டதாக உள்ளது 'பொருத்தமானதன்று'; போலக்கும் மெயிட் லந்தும், i, 104, n. 3.

65. போலக்கும் மெயிட்லந்தும், i, 104; பக்தசிலரான எட்வர் டின் சட்டங்களின் மூலப்பகுதி லிபர்மானின் கெஜட் டில் உள்ளது, i, 627—670. பிராக்டனும் அதைப் பயன் படுத்தினர்; கோக்கும் அவ்விதமே செய்தார்.

66. 'மற்போர்ச் சோதனை முறை ஆதாரங்களைத் தெளிவாக ஆராய்ச்சிசெய்ததன் பயனாக அது நார்மானியர்களால் இங்கிலாந்துக்குக் கொண்டுவரப்பட்டதென்றாலும், அது பழைய டியூடானியர்கள் நீதிமுறையின் ஒரு சின்னமா யுள்ளது. ஆங்கிலோ—சாக்ஸானிய நீதிமன்றங்களில் அம் முறை காணப்படாததைவிட வெளிநாட்டிலிருந்து புகுத் தப்பட்டதென்பது வியக்கத்தக்கது'—ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு,' i, 299 (குறிப்பாக புரூனர், 'டி. என்ஸ் டங்க் டெர்ஷ்வார்கெரிட்சே'). ஆங்கிலேயரது கிரிமினல் வழக்கு விசாரணை முறையில் 1818-ல்கூடக் கொலை சம்பந்த மான வழக்குகளில், குறிப்பாக ஆஷ்ஃபோர்டு—தாரன் டனில் (பார்ன், ஆல்ட், 405 முதல்) மற்போர்ச் சோதனை முறை ஓர் அம்சமாயுள்ளதென நீதிபதிகள் கருதிய பொழுது, மறுவருடத்தில் சிவில், கிரிமினல் வழக்குகளில் இம் முறை மூன்றாம் ஜார்ஜ் 59, விதி 46-ன் வாயிலாக விலக்கப்பட்டது. உண்மையை உரைப்பதாக உறுதி மொழி எடுத்துக்கொண்டவர்களை வழக்கு விசாரணை செய் வது 'மன்னரும் வில்லியம்ஸும்' எனும் வழக்கில் கடைசி யாகப் பயன்படுத்தப்பட்டது, 2 பியும் ஸியும் 538 (1834). நான்காம் வில்லியத்தின் 3, 4 சட்டங்களால் விதி 42,

பிரிவு 13; 1833-ல் நீதியின்மீது சூளுரை உரைப்பது தடை செய்யப்பட்டது. ஸ்டீபன், 'கிரிமினல் சட்டவரலாறு', வால்யூம் 1, பக்கம் 244, குறிப்பு 2; நீல்ஸன், 'மற்போர்ச் சோதனைமுறை' (கிளாஸ்கோ, 1890); அதிலேயே, அதிகாரம் 4 மகாசாசனத்தின் 54ஆம் பிரிவுக்குக் குறிப்பாயுள்ளது.

67. Wl. lad. 2.=Wl. art. 6 (ராபர்ட்சன், 232, 241).

68. WL. art. 4; 'தேர்ந்தெடுத்த சாசனங்கள்', 98.

69. Wl. art. 3, sec. 1. லெய்ஸ் Wl. 22. (ராபர்ட்சன் 238, 264); 'ஸ்கக்காரியோவின் உரையாடல்', lib. i. c. 10, 'பொறுக்கு சாசனங்கள்' 98, 218; போலக்கும் மெயிட்லந்தும், i, 89.

70. பிராக்டன், f. 134 b. பண்டைக் காலத்தில் கொலைக்குற்றத்தை இரகசியக் கொலையோடு நிறுத்திக்கொண்டனர். 'ஸ்கக்காரியோவின் உரையாடல்', lib. i, c. 10. கொலைக் குற்றம் பற்றி மெயிட்லந்து, 'கிளக் முடிபற்றிய வழக்குகள்' (முன்னுரை, xxix) என்ற நூலையும், இன்டெமா, 'கொலைச் சட்டம்', ஹார்வார்டு சட்ட ஆராச்சி இதழ், xxxvi, 146 காண்க.

71. 'ஸ்கக்காரியோவின் உரையாடல்', lib. i. c. 10; 'பொறுக்கு சாசனங்கள்', 218.

72. 14 எட்வர்டு 3, சட்டம் i, c. 4.

73. Wl. art. 10; 'பொறுக்கு சாசனங்கள்', 99.

74. மேலே கூறப்பட்டுள்ளபடி, c. 9.

75. II கான்யூட் 80; 'பொறுக்கு சாசனங்கள்', பக்கம் 88. கான்யூட் மன்னரால் ஏற்படுத்தப்பட்டவை எனக் கூறப்படும் சட்டங்களான 'காடுகள்பற்றிய சாசனங்கள்' என்பவை லிபர்மேனால் கள்ளக் கையொப்பமுடையன என்று காட்டப்பட்டுள்ளன. 'பொறுக்கு சாசனங்கள்', பக்கம் 185.

76. ஃபிரீமேனின், 'நார்மானியர் வெற்றி', iv, 607 முதல் காண்க. சிறப்பாக G. J. டர்னரின், 'பொறுக்கியெடுக்கப்பட்ட காடு சம்பந்தமான வழக்குகள்' (செல்டன் கழகம்) என்ற நூலையும், N. நெயில்சனின், 'இயங்கும் ஆங்கில அரசாங்கம்', 1327—1336 (J. வில்லார்டு, W. A. மோரிஸ் பதிப்பு) என்ற நூலையும் காண்க.

77. Z. N. புருக், 'வெற்றியாளரான வில்லியத்திடமிருந்து போப்பாண்டவர் ஏழாம் கிரிகரி பணிவான வரவேற்பை வேண்டுதல்', ஆங்கில வரலாற்று மீள்பார்வை, xxxi, 225 முதல் (1911) என்ற நூலையும், 'ஆங்கிலத் திருச் சபையும் போப்பாண்டவரும்' (1931), 140 முதல் என்ற நூலையும் காண்க.

78. லிபர்மானின், 'தேசியச் சபை', பக்கம் 62—65.

79. வில்லியத்தின் அவசரச் சட்டம், 'பொறுக்கு சாசனங்கள்', 99—100-ல் காண்க.

80. ஏட்மர், 'புதிய வரலாறு', i, பக்கம் 6; 'பொறுக்கான சாச னங்கள்', 96; ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு', i, 310; 'முன் நிகழ்ச்சியாக, முதலாம் ஹென்றியால் உரிமை கொண்டாடப்பட்ட, மேற்கொண்டு செயற்படும் நிலை யாதெனில், இங்கிலாந்திலுள்ள போப்பின் அதிகாரத்தை நடைமுறையிலிருந்து நீக்குவதும், போப்பின் தூதரைக்கூட அரசரது நிலப்பரப்பிற்குள் அவரது அனுமதியின்றிக் காலடி வைப்பதை நீக்குவதுமாகும். Z. N. புருக் எழுதிய, 'ஆங்கிலேயரது திருச்சபையும் போப் பாண்டவரும்' என்ற நூல் (1931), 132 காண்க.

81. ரோசெஸ்டர், பிசாட் மதகுருக்களுக்கிடையே ஏற்பட்ட வழக்குகளின் குறிப்புகளையும், அரசன் பக்கமாயுள்ள ஷெரீஃபையும் — 'ரோஃபன்சிஸ் மூலபாடம்' (ஹியர்ன் பதிப்பு) என்ற நூலில், 150—காண்க. உல்ஸ்தான் மத குருவுக்கும் ஈவ்ஷாம் மடத்தலைவர் வால்டருக்கும் 'ஒவ் வொரு முறையும் பாதுகாப்புத் தீர்மானிப்பதும் சோதிப் பதும்'; ஹேமிங் எழுதிய, 'சார்டுலரி' (ஹியர்ன் பதிப்பு), பக்கம் 77; லேன்ஃபிரான்ங், ஓடோ மதத்தலைவர்களுக் கிடையேயான வழக்குக்கு, பேயக்ஸ் மதகுரு, 'ரோஃபென் ஸின் மூலபாடம்', வார்டனின் 'புனித ஆங்கிளியா', i, 334-ல் காண்க. 'விடனுஜ்மூட்' என்ற சொல்லால் (1124 வரை) அரசாங்கக் கமிஷனர்கள் முன்னிலையில் ஷயரின் பெரிய கூட்டங்கள் நடைபெற்றன என்பதை விவரிக்க முடியும்; கீழே பக்கம் 52, குறிப்பு 19.

82. கோக், 'நான்காவது நிறுவனங்கள்', 46, 268; 'லிட்டில் டன்மீது கோக்', 58A. டூம்ஸ்டே புத்தகத்தில், ஒரு பிரபு, மற்றவருக்குச் சில குத்தகைக்காரரைத் தனது சபையை நிரப்பக் கடனாகத் தந்து உதவியதாக ஒரு குறிப்புக் காணப்

படுகிறது. 'அவரது சொந்த மகிழ்ச்சிக்காகப் பெறப் பட்டது.' ஸ்பென்ஸ், 'சமமான எல்லை அல்லது வரம்பு', i, 100, n. (a).

83. 'இடைக்காலங்கள்', ii, 305.

84. மால்மஸ்பரி வில்லியம், 'அரசனின் செயல்கள்', lib, iii, s. 249. 'வடக்கில் கொள்ளை' என்ற தலைப்பில், T. A. M. பிஷப்பின் அண்மை ஆராய்ச்சியான, 'யார்க்ஷயரில் நார் மானியர் குடியேற்றம்' என்பதை, 'F. M. போவிக்கிக்கு சமர்பிக்கப்பட்ட ஆராய்ச்சிகள்' (1948), 1—14 என்ற நூலில் காண்க.

85. ஏழாம் கிரிகோரி நீதியின்பால் தான் கொண்ட அன்பினைப் பின்வருமாறு புகழ்கின்ருர் (ரெக், iv, 17); ' இறையருளால் உம்மிடம் பல்வேறு நற்பண்புகள் காணப்படினும், சிறப் பாக விரும்பப்பெறுவது உயர்நீதியேயாகும். நீதி தவருமை விருப்பதுதான் இறை, மக்கள் முதலியோரின் முன்னிலை யில் புகழைப் பெறச் செய்கிறது.'

86. 'ஆங்கிலோ-சாக்ஸன் காலவரிசை வரலாறு', s. a. 1086, 1087.

# 3. நார்மானிய, முதல் ஆஞ்சோ மரபைச் சார்ந்த மன்னர்கள்

*வில்லியம் ரூஃபஸ், கி.பி. 1087—1100.*
*முதலாம் ஹென்றி, கி.பி. 1100—1135.*
*ஸ்டீஃபன், கி.பி. 1135—1154.*
*இரண்டாம் ஹென்றி, கி.பி. 1154—1189.*
*முதலாம் ரிச்சர்ட், கி.பி. 1189—1199.*

## இரண்டாம் வில்லியம், ரூஃபஸ் (செந்நிறத்தவர்)

வில்லியம் ரூஃபஸின் ஆட்சியின் அரசியல் சட்டஞ் சார்ந்த முக்கியத்துவம், சிறப்பாக இரு பிரிவுகளைக் கொண்டிருந்தது. (1) மான்ய நிலவுரிமை நிலைப்பாட்டின் கொள்கை, ரானல்ஃப் ஃபிளாம்பார்ட் என்பவரால் முறைப்படி விரிவுபடுத்தப்பட்டு, சமயஞ்சார்ந்தவர்களுக்கும் லௌகீகர்களான குடியானவர்களுக்கும் ஒரேமாதிரியாக அரசிறை வருவாய்க்கு அவசியமாகக் கருதி நடைமுறையில் கடுமையாகப் பின்பற்றப்பட்டது; (2) மன்னருக்கும் மான்யதாரர்களான வல்லமை பொருந்தியவர்களுக்குமிடையே தொடர்ந்து நிகழ்ந்த போராட்டமும், அதன்பயனாக நாட்டு மக்களான ஆங்கிலேயர்களின் உதவியை நாடும்படி மன்னரைச் செய்ததும், நார்மானிய வெற்றிக்குப் பின்னர் மான்யப் பிரபுக்களின் அதிகாரம் இறுதியில் சிதறுண்டுபோவதற்கு வழிவகுத்ததுமாகும். மிக மோசமான வல்லாட்சிபுரிந்த வில்லியம் சிற்றின்பத்தில் மிகுதியாக ஈடுபட்டிருந்தார்; அவரது திறமைவாய்ந்த அதிமேற்றிராணியார் ஆலோசகரான லான்ஃப்ராங்க் என்பாரின் மரணத்திற்குப் பின், அரசாங்க அலுவல்களையெல்லாம் அவருடைய ஜஸ்டிஷியரிடம் விட்டுவிட்டார்.

**ரானல்ஃப் ஃபிளாம்பர்ட்:** வெற்றிவீரரான வில்லியத்தின் காலத்திலிருந்ததைப் போன்று, இவ்வுயரதிகாரி வலிமை மிக்க மான்யப் பிரபுவாக இராமல், இரக்கமும் இணங்கும் தன்மையுமுடையவராயும், எளிமையும் அறிவுக்கூர்மையும் வாய்ந்தவராயும் மன்னர் அவையின் குருவாக ரானல்ஃப் ஃபிளாம்பர்ட் இருந்தார்.[1] திருச்சபை, மானியதாரர்கள், மக்கள் முதலானோர் இவருடைய முறையான கொடுமைகளுக்கும் பணப்பறிப்புக்கு முட்படுத்தப்பெற்றனர்; ஜஸ்டீஷியர் என்ற முறையில், நாட்டின் அரசிறை வருவாய், நீதித்துறை பற்றிய விவகாரங்களை முழுமையாகக் கட்டுப்படுத்தி இயக்கினர்; தம்மை மிக்குயர் பதவிக்கு நியமித்த மன்னருடைய வீண்செலவிற்குத் தேவைப்பட்ட பொருளை அளிப்பதில், நான்கு நூற்றாண்டுகளுக்குப்பின் எம்ப்ஸன், டட்லி என்போர் கையாண்டதைப் போன்று, தம்முடைய அறிவுக்கூர்மையைச் செலுத்தினர்; மான்யத் தலைவன் என்ற முறையில் மன்னருடைய உரிமைகளையும் நீதிமன்றங்களின் நடவடிக்கைகளையும் பணத்தை மக்களிடமிருந்து வல்லந்தமாகத் திரட்டுவதற்குத் தக்க கருவிகளாக்கிக்கொண்டார். விடுதலை பெறுவது, பராமரிப்பு, திருமணம் முதலியவைகளுக்காகச் செலுத்தப்பட வேண்டிய மான்யக் கடமைகள் வெற்றிவீரரின் காலத்தில் உண்மையான மான்யக் கொள்கை அடிப்படையில் அமைந்திருந்தன; அத்துடன் பேரளவிற்கு நியாயமானவையாகவும் பெறப்பட்டன. அவைகளை இப்பொழுது, சட்டப்படி செலுத்தப்பட வேண்டியவைஎனும் பெயரால், தன்னிச்சைப்படி மான்யப் பிரபுக்களின்மீது வரிவிதிப்பதை முறைப்படி ஏற்படுத்தினர். மன்னருடைய மான்யதாரர்களின்மீது விதிக்கப்பட்டுக் கட்டாயமாக வசூல் செய்தது, இயற்கையாகவே, உண்மையில் அவசியமாகவே, அவர்களால் அவர்களின் கீழிருந்த மான்யதாரர்களுக்கும் விஸ்தரிக்கப்பட்டது.[2] இவ்வாறு, இராணுவ மான்ய நிலவுரிமைப்படி நிலம் வைத்துக்கொண்டிருந்தவர்களெல்லாம், புதிய வரிவிதிப்புக்கு ஆளாயினர். திருச்சபைக்குச் சொந்தமான மான்யங்கள் இயன்ற அளவிற்கு லௌகீகர்களின் மான்யங்களாக ரானல்ஃபால் மாற்றப்பட்டன. பல்லாண்டுகளாகச் சேர்ந்தாற்போல் மேற்றிராணியார்களின் ஸ்தானங்களும் மடங்களும் நியமனஞ் செய்யப்படாமலேயே வேண்டுமென்றே காலியாக வைக்கப்பட்டிருந்தன. இக் காலங்களில், லௌகீகர்களின் மான்யங்களைப் பராமரிப்பதைப் போன்று, தம்முடைய சொந்த உபயோகத்திற்கு எல்லாப் பயன்களையும் பெறுவதற்கு மன்னர் உரிமை பாராட்டினர்; அத்துடன், காலியாகக் கிடந்த ஸ்தானங்களுக்குப் பதில் ஆள்கள் நியமனஞ்

செய்யப்பெற்றபொழுது, லௌகீகர்களின் மான்யங்களுக்கு வாரிசுதாரர்களை நியமனஞ் செய்யுங்கால் செலுத்தப்பட வேண்டிய தொகைக்குச் சமமாகத் தண்டத்தொகை செலுத்து மாறு கோரப்பட்டனர்.[3]

**திடீர்க் கலகங்கள் :** மன்னருக்கும் மான்யதாரர்களுக்கு மிடையே நிகழ்ந்த பெரும் போராட்டம், வெற்றிவீரரான வில்லியத்தின் காலத்திலேயே, நார்ஃபக் பிரபுவான ரால்ஃப் டிகுவேடர், ஹெரிஃபோர்ட் பிரபுவான ரோஜர் (1075) இவர் களின் சதியில் தொடங்கியது; அது ரூஃபஸ் மன்னரின் காலத்தில் மும்முரமாகத் தொடர்ந்து நடந்தது. இங்கிலாந்தின் முடியாட்சிக்கு ராபர்ட் கோமகனின் உரிமையைப் பயன் படுத்திக்கொண்டு, மான்யப் பிரபுக்களில் பெரும்பாலோர், மன்னருக்கு எதிராகக் (1088) கோமகனுடன் சேர்ந்தனர். ஏழாண்டுகளுக்குப் பின் (1095) நார்மண்டி கோமகனை முதலாம் ராபர்ட்டின் பேரனை ஆமலேயைச் சேர்ந்த ஸ்டீபன் என்பவருக்குச் சாதகமாக வெற்றிவீரரான வில்லியத்தின் சந்ததியார்களை அறவே தள்ளிவைக்க முயற்சி செய்யப் பட்டது. இவ்விரு சமயங்களில் தோன்றிய திடீர்க் கலகங்கள் வெற்றி பெறவில்லை; இதன் விளைவாகக் கணிசமாக ஏற்பட்ட இழப்புகள், அழிவை உண்டுபண்ணுவதற்கு வழிகோலின. இறுதியில், நார்மானியர்களின் வெற்றிக் காலத்தில் தோன்றிய பிரபுத்துவம் அழிக்கப்படுவதற்கு அது காரணமாயமைந்தது.[4] தம்முடைய நிலையைப் பாதுகாத்துக்கொள்ளுவதற்காக, மன்னர், ஆங்கிலேயக் குடிகளின் ஆதரவைத் தேடும்படி தூண்டப்பெற்றார்; அக் குடிகளும், அவர்களை ஒறுத்த மான்யப் பிரபுக்களுக்கு எதிராகக் கிளம்பி, விருப்புடன் மன்ன ருக்காக வெற்றிகரமாகப் போரிட்டனர். தனித்தனியே, மூன்று சந்தர்ப்பங்களில்—முடி சூட்டப்பெற்றபொழுதும், அதைத் தொடர்ந்தாற்போல் ஏற்பட்ட நார்மானிய மான்யப் பிரபுக் களின் கலகம் தோன்றியபொழுதும், மீண்டும் 1093-ல் துன்பமும் மரணமும் ஏற்படுமெனும் அச்சமுண்டாகிய பொழுதும்—அரசியல் சட்டஞ் சார்ந்த நோக்க விளக்கங்களை வெளியிடுவதன் வாயிலாக மக்களின் அன்பைத் தம் பக்கலி லீர்க்க முயன்றார். அந் நோக்க விளக்கங்களில், நன்மை பயக்கும் சட்டங்கள், குறைவான வரிவிதிப்பு, வேட்டையாடச் சுதந்திரம் போன்ற பல சலுகைகளை வழங்குவதாக உறுதி யளித்தார்.[5] ஆனால், வாக்குறுதிகள் முழுமையாகக் காப் பாற்றப்பெறவில்லை. சுதந்திரமாக வேட்டையாடுவதற்கு வாக்களிப்பதற்கு மாறாக, மானைப் பிடிப்பது தண்டிக்கத்தக்க குற்றமெனச் செய்தார்.[6] அவர் இனத்தவரைப் போலவே,

ரூஃபஸூம், வளர்ச்சியடைந்துவந்த நீதி சார்ந்த அமைப்புகளில் தம்முடைய சேர்க்கைகளை விட்டுச் சென்றார்.[7]

## முதலாம் ஹென்றி

பட்டத்திற்கு வந்தவுடன், முதலாம் ஹென்றி, உரிமைகளடங்கிய சாசனத்தை வெளியிட்டார். இச் சாசனம், முடிசூட்டு விழாவில் எடுத்துக்கொண்ட உறுதியில், மன்னர், தம்முடைய மக்களுடன் செய்துகொண்ட உடன்படிக்கையின் விளக்கமாக அமைந்தது. சாசனத்தின் படிகள் எல்லாக் கௌன்டிகளுக்கும் அனுப்பப்பெற்றதுடன், முக்கியமான மடாலயங்களிலும் பாதுகாப்பிற்காக வைக்கப்பெற்றன.

**முதலாம் ஹென்றியின் சாசனம் (1100) :** இச் சாசனத்தின் வாயிலாக முறையற்ற பழக்கத்தின் அடிப்படையில் சட்ட விரோதமாக நிதி வசூலித்ததால் கடந்த ஆட்சியின்பொழுது பொதுவாகத் தொல்லையுற்ற குருமார்கள், மான்யப் பிரபுக்கள், மக்கள் முதலியவர்களுக்கு இதமளிக்க இவ் வரிவிதிப்புகளை நீக்கஞ் செய்ய முயன்றார். (1) அதிமேற்றிராணியார், மேற்றிராணியார், அல்லது மடாலயத் தலைவர் இறந்தால், திருச்சபைக்கும் அல்லது திருச்சபைக்குட்பட்ட குடியானவர்களுக்கும் சொந்தமான நிலங்களை விற்பதையோ[8] அல்லது வேறு குத்தகைக்கு விடுவதையோ செய்வதில்லையென்றும், அந்தப் பதவிகள் காலியாக இருக்கும்பொழுது எவ்விதப் பயனையும் பெறுவதில்லையென்றும் திருச்சபைக்கு வாக்களித்தார். (2) சட்ட விரோதமாகப் பல்வேறு வழிகளில் பணம் திரட்டுவதை வஜா செய்வதாக மான்யப் பிரபுக்கள், மற்றும் மான்யத் தலைவர்கள் முதலியவர்களிடம் வாக்குறுதி செய்தார். அவர்கள் எல்லோரும் மான்ய முறைப்படி பல்வேறு கடமைகளைச் செலுத்துவதற்குட்படுத்தப்பெற்றிருந்தனர். காலஞ்சென்ற மன்னரான வில்லியம் ரூஃபஸ் காலத்தில் நடந்ததைப் போன்று, வாரிசாக வருகிறவரை மீட்டுத்தொகை செலுத்துமாறு கட்டாயப்படுத்தக்கூடாது என்றும், சட்டப்படியும் நியாயமானதுமான விடுதலை பெறுவதற்கான தொகையை மாத்திரம் செலுத்தவேண்டியதெனவும் கூறினார். மான்யதாரரின் மகளுக்குத் திருமணஞ் செய்யவும் மற்றும் பெண் உறவினருக்குத் திருமணஞ் செய்யவும் மன்னருடைய அனுமதியைத் தொடர்ந்து பெறவேண்டியதென்றும், அவ்வாறு அனுமதியளிப்பது எவ்விதக் கட்டணமும் செலுத்தப்படாமல் அளிக்கவேண்டுமென்றும், திருமணஞ் செய்துகொள்ளுகிற ஆடவர், மன்னருடைய பகைவராயில்லாதவரை,

அனுமதியளிப்பதை மன்னர் மறுக்கக்கூடாதெனவும் ஏற்பட்டது. பெண்வாரிசுதாரரைத் திருமணஞ் செய்விக்குமுன் திருமணஞ் செய்துகொள்ள அனுமதிக்கும் விஷயத்தில், மன்னர் மற்ற மான்யப் பிரபுக்களைக் கலந்து ஆலோசனையைக் கேட்கலாம் என்றும், கைம்பெண்கள் அவர்களுடைய விருப்பத்திற்கு மாருக மறுமணம் செய்துவைக்கப்படாக்கூடாது என்றும், குழந்தைகளைப் பெற்றெடுக்காத கைம்பெண்கள் எவ்வித நிபந்தனையுமின்றிப் புருஷனின் சொத்தில் அவர்களுடைய பங்கைச் சொந்தமாக வைத்துக்கொள்ளலாம் என்றும், குழந்தைகளுடனிருந்தால் கற்புடையவர்களாயிருக்கும்வரை பங்கைக் கைக்கொண்டிருக்கலாம் என்றும் உறுதியளிக்கப்பட்டது.

வாரிசு முறையில் குழந்தைகளின் நிலங்களும், வயதுநிரம்பப்பெருதவர்களுடைய பராமரிப்பும், தாயையோ அல்லது மற்ற உறவினர்களையோ சேர்ந்ததாயிருக்க வேண்டும்.

இராணுவ ஊழியம் பெற்றுள்ள நைட் வீரர்கள் தனியுரிமை பெற்றிருந்த நிலங்கள் எல்லா வரிகளிலிருந்தும், மான்ய ஊழியங்களிலிருந்தும் விடுதலை பெற்றிருக்க வேண்டும். இவ்வாறு செய்யப்பட்டது, மன்னரையும் நாட்டையும் பாதுகாப்பதற்குத் தேவையான தளவாடங்களை வல்லமை பொருந்தியதாக வைத்துக்கொள்ளவேண்டுமென்பதற்காகும்.

மன்னருக்கு மான்யமுறைப்படி கீழ்ப்படிந்துள்ளவர்கள் அவர்களுடைய சொந்தச் சொத்துகளை உயில் எழுதுவதன் வாயிலாகப் பிறருக்களிப்பது ஏற்றுக்கொள்ளப்பட்டது; உயில் எழுதப்பெருதவைகளில், இறந்துபோனவரின் மனைவி, மக்கள், சுற்றத்தார்கள், சட்டப்படி அதிகாரம் பெற்றவர்கள், அல்லது மான்ய முறைப்படி ஊழியம் புரிகின்றவர்கள், இறந்துபோனவரின் சொத்தை அவருடைய ஆத்மா நற்கதியை அடைவதற்காக எது நல்லதென்று தோன்றுகிறதோ அம்முறையில் சொத்தைச் செலவிட வேண்டும்.

குற்றங்களுக்காக விதிக்கப்படும் தண்டத்தொகைகள் (அபராதம்) மன்னருடைய தயவை முன்னிட்டு, மன்னருடைய தகப்பனர், சகோதரர் காலத்தில் நடந்ததைப்போன்று மதிப்பிடப்படக்கூடாது; குற்றத்தன்மைக்கேற்ப தண்டத்தொகைகள் மன்னரின் 'மூதாதையர்' காலத்தில் நடந்ததுபோல் விதிக்கப்பட வேண்டும். இவ்வாறு ஆங்கிலேயர்களின் சட்டங்களை, அவ்வளவு நாள்கள் முன்னதாகவே, நார்மானிய மான்யப் பிரபுக்கள் தங்களுக்காக உரிமை பாராட்டினர்.

(3) நாட்டு மக்களுக்குப் பொதுவாக மன்னர், பக்தசில ரான எட்வர்டின் காலத்திலிருந்த சட்டத்தைப் பின்பற்றினர். இச் சட்டங்கள், மான்யப் பிரபுக்களைக் கலந்து வெற்றிசிலரான வில்லியத்தின் திருத்தங்களைக் கொண்டிருந்தன. மக்களுடைய கோரிக்கைகளும், மன்னரின் சமாதானப் பேரறிவிப்பில் ஏற்றுக்கொள்ளப்பட்டன; அத்துடன் சிறப்பாக, மன்னருக்கு அடுத்தபடியாகவுள்ள மான்யதாரர்களுக்கு வழங்கப்பட்டிருந்த நலன்கள், அவர்களுக்குக் கீழிருந்த குடியானவர்களுக்கும் கிட்டும்படியாகச் செய்யப்பட்டது. மேலும், எட்வர்ட் மன்னர் காலத்தில் விதிக்கப்படாத நாணயம் அச்சிடும் வரியையும் விதிப்பதில்லையென மன்னர் உறுதியளித்தார். அத்துடன் கள்ள நாணயங்களை அச்சிடுபவர்களையும், அவைகளைச் செலா வணிக்கு விடுகிறவர்களையும் தண்டிப்பதாக மன்னர் எடுத் துரைத்தார். காலஞ்சென்ற தமது சகோதரனுக்குச் சேர வேண்டிய கடன்களையும் ரத்து செய்தார்; அத்துடன் அவர் பட்டமெய்திய நாள்வரையில் விதிக்கப்பட்டனவும், கொலைக் குற்றத்திற்கு விதிக்கப்பட்டனவுமான தண்டத்தொகைகளை யும் ரத்துசெய்தார். அவ்வாறு விதிக்கப்படவேண்டிய அபரா தங்கள் இனிமேல் எட்வர்ட் மன்னருடைய சட்டத்தின்படி ஒழுங்குபடுத்தப்படவேண்டியனவாயின.[9]

சாசனத்தில் வெறுக்கத்தக்கதான விதி, காடுகள் முழு வதையும் தம்மிடமே வைத்துக்கொள்ளப்போவதாக ஹென்றி வெளியிட்ட கருத்தேயாகும். தகப்பனர் வைத்திருந்ததைப் போன்று காடுகளைத் தம்வசம் வைத்துக்கொள்ள விரும்பினர்; தம் விருப்பப்படி இதற்காக மான்யப் பிரபுக்களுடைய 'பொது வான சம்மதத்தைப்' பெற வாதாடினர்.[10]

வரலாற்று முறையில், சாசனம், அது சிறப்பாக விலக்க எண்ணியதும், அண்மையில் தோற்றுவிக்கப்பட்டதுமான சட்டவிரோதமான வல்லந்த வசூல் செய்வதன் தன்மையைக் குறிப்பிடுகிறது; அரசியல்சட்டப்படி, நாட்டு மக்களின் பழமை யானதும் சட்டபடி அமைந்ததுமான சுதந்திரமும், மன்ன ரதிகாரத்தின் எல்லையும் நடைமுறையில் தன்னிச்சைப் படி ஆட்சிபுரியும் மன்னர் துணிவுடன் ஏற்றுக்கொண்டதால் முக்கியமானவையாயுள்ளன. இச் சாசனம், பல்வேறு சமயங் களில் மறுபிரசுரம் செய்யப்பட்டதெனத் தோன்றுகிறது. ஆனல், சிம்மாதனத்தில் உறுதியாக அமர்ந்தவுடனேயே, சாச னத்தின் ஷரத்துகளைப் புறக்கணிப்பதற்கு மன்னர் சற்றும் தயங்கவில்லை. இச் சாசனம் ஸ்டீஃபனலும் இரண்டாம் ஹென்றியாலும் புதுப்பிக்கப்பெற்றது; ஜான் மன்னராட்சி

யில், அதிமேற்றிராணியாரான ஸ்டீஃபன்லாங்டன் என்பவரின் கையில், நாட்டு மக்களின் பழைய சுதந்திரங்களை மீட்பதற்கு மான்யப் பிரபுக்கள் தங்களது கோரிக்கைகளை அமைத்துக் கொள்வதற்கு வழிகோலிய ஒரு முதல் நூலாக அது இருந்தது.

சுதந்திரங்களைக்கொண்ட சாசனம் ஒன்றுதான் ஹென்றியின் ஆட்சியில் இயற்றப்பட்டதாகும். ஏனென்றால், 'முதலாம் ஹென்றியின் சட்டங்கள்' எனப்படுபவை, சட்ட மன்றங்களால் இயற்றப்பட்டவையல்ல; தனிப்பட்ட சட்ட வல்லுநரால், ஆங்கிலேயச் சட்டத்தைப்பற்றி அதிகாரமற்ற முறையில் எழுதப்பெற்ற ஆராய்ச்சிக் கட்டுரையாகும்.[11]

**உள்நாட்டுக் கொள்கை:** ஹென்றி பட்டத்திற்கு வந்தது ஓரளவு எதிர்ப்புக்குரியதாயிருந்தது. அக் காலத்தில் வாரிசு முறைப்படி பட்டத்திற்கு வருவதுபற்றிய விதிகள் (நிலங்களைப் பெறுவது அல்லது முடியைப் பெறுவதுபற்றிய) தெளிவாக வரையறுக்கப்பெறவில்லை. எனவே, மன்னருடைய மூத்த சகோதரனை ராபர்ட் என்பவருடன் போட்டியிட்டதும், கொந்தளிப்பை உண்டுபண்ணுகிறதும், வலிமை நிரம்பியதுமான பிரபுக்களினத்தை அடக்கியாளுவதில் உண்டான தொல்லையும், மன்னரை, நாட்டு மக்களின் உதவியையும் ஆதரவையும் தேடிக்கொள்ளச் செய்தன. நாட்டிலேயே பிறந்தவரும் கல்வி பயின்றவரும் ஒரு புதிய மரபின் முதலாவது அரசராயிருந்தார் எனும் காரணத்தினால், மக்கள் மன்னரிடத்தில் ஏற்கெனவே நல்லெண்ணம் கொண்டிருந்தனர். ஸ்காட்லாந்திய மன்னரான மால்கம் கான்மோருக்கும், எட்கார் அத்லிங்கின் சகோதரியான மார்க்கரெட்டிற்கும் பிறந்தவளான 'நல்லரசி மாட்' என்பவளை மன்னர் சூழ்ச்சித்திறனுடன் மணந்து கொண்டது, நாட்டு மக்களின் ஆதரவைப் பெறுவதற்கு வன்மையான உரிமை பாராட்டுதலை அளித்தது. மேலும், மான்யப் பிரபுக்களும் எப்பொழுதும் தங்களுடைய சுதந்திரத்தைப் பெறுவதையே நோக்கமாகக் கொண்டிருந்ததால், மன்னர், மக்கள் இவர்களுடைய பொதுவிரோதிகளாக இருந்தனர். நாட்டுணர்ச்சி, குறிக்கோளின் ஒற்றுமை முதலியவைகளால் தூண்டப்பெற்றும், நல்லாட்சியை வழங்குவதாக மன்னர் அளித்த வாக்குறுதியினால் உற்சாகமூட்டப்பெற்றும் இறுருந்த மக்கள், எல்லாப் பகைவர்களுக்கும் எதிராக மன்னருக்கு ஆதரவளித்தனர். எனவே, கலகம் விளைத்துக்கொண்டிருந்த மான்யதாரர்களின்மீது முழுமையான வெற்றியைப் பெறுவதற்கு ஹென்றிக்கு வாய்ப்பு ஏற்பட்டது. மான்யப் பிரபுக்களில், ராபர்ட் டி பிலஸ்மே போன்ற மிக்க வலிமை வாய்ந்தவர்களையும், அவர்

களிலெல்லாம் பேரிடரைத் தோற்றுவிக்கக்கூடியவரான ஷ்ரூஸ்பரி பிரபுவையும் அவர்களுடைய எஸ்டேட்டுகளைப் பறிமுதல் செய்து நாடு கடத்தினர்.[12] இறுதியில், ஹென்றி, வெற்றிசீலரான வில்லியம் துய்த்த அதிகாரத்திற்கும் மிஞ்சியதாயிராவிட்டாலும், சமமான அரசு அதிகாரத்தைக் கைக்கொண்டார். பறிமுதல் செய்யப்பட்ட நிலங்களையும் அதிகார வரம்பினையும் மீண்டும் பங்கீடு செய்வதில், தம்முடைய தகப்பனாரின் கொள்கையைப் பின்பற்றி, எந்த ஒரு மான்யக் குடியினுடைய சொத்துகளும் மிதமிஞ்சியதாகப் போகாமல் பார்த்துக் கொண்டார். வெற்றிகொண்ட காலத்தில் ஏற்பட்டதும் மிக்க வலிமை வாய்ந்ததுமான பிரபுத்துவத்தின் வளர்ச்சியை மேலும் கட்டுப்படுத்துவதற்காகப் பல புதிய பிரபுக்களைத் தோற்றுவித்தார். இவ்வாறு புதிய பிரபுக்களாகச் செய்யப்பட்டவர்கள், கௌரவம் வாய்ந்த பழைய பிரபுக்களுடன் சரி நிகரான நிலையிலிருக்கும்படி செய்தார்.[13]

## தல நீதிமன்றங்கள்

கடந்த ஆட்சியின்பொழுது, மான்யப் பிரபுக்கள், மாவட்டங்களிலும் ஹண்ட்ரட் எனும் சிறு நிலப்பகுதிகளிலும் செயலாற்றிவந்த தல நீதிமன்றங்களுக்கு ஊறு செய்யும் வகையில், தாங்கள் மரபுமுறையில் பெற்றிருந்த வாக்குரிமைகளை விரிவுபடுத்திக்கொண்டிருந்தனர் எனத் தெரியவருகிறது. இந் நீதிமன்றங்களின் அதிகார எல்லைகளை ஹென்றி மீண்டும் அவைகளின் மிகப் பழைய அளவிற்குத் திறமையுடன் பணிபுரியுமாறு நிலைபெறச் செய்தார்; மன்னர் எட்வர்டின் காலத்தில் நடந்ததைப்போன்று, குறிப்பிட்ட காலப்பிரிவுகளில் ஏற்கெனவே நடைபெற்ற இடங்களிலேயே கூடவேண்டுமென விதித்தார். மன்னருடைய நீதிமன்றத்தில், முக்கிய மான்யப் பிரபுக்களுக்கும் மன்னருக்குமிடையே தோன்றும் நிலம் பற்றிய வழக்குகள் விசாரணை செய்யப்பட வேண்டுமென்றும், ஆனால், மான்யக் குடிகளுக்கும் மற்றும் இடைப்பட்ட பிரபுக்களுக்குமிடையே ஏற்படும் நிலவுரிமை பற்றிய வழக்குகள் மாவட்ட நீதிமன்றங்களிலேயே விசாரணை செய்யப்பட வேண்டுமென்றும் விதிக்கப்பட்டது.[14] மாவட்டங்களில் மன்னரின் நீதிபதிகளைத் (பதினோராம் நூற்றாண்டின் கடைசி ஆண்டுகளில்) தோற்றுவித்தது ஆட்சிமுறையில் மிக முக்கியமானதாகும். இவர்களுடைய அதிகாரங்கள் ஷெரீஃபுகள் சுதந்திரமுள்ளவாறு வாரிசு முறையில் தம்மிச்சைப்படி நடக்காதவாறு தடை செய்தன.[15] ஒரே பிரபுவின் கீழிருந்த இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட குடியானவர்களுக்குள் ஏற்படும்

வழக்குகள் முழுமையாக மான்யப் பிரபுவின் நீதிமன்றத்தின் விசாரணைக்கே விடப்பட்டன; எவ்விதத் தலையீடும் அங்குக் காணப்பெறவில்லை.

மன்னர் பல நகரங்களுக்கும் சாசனங்களை வழங்கியதன் வாயிலாக அவைகளின் பழைய உரிமைகள் மீண்டும் புதுப்பிக்கப்பெற்று உறுதி செய்யப்பட்டன. மன்னர், லண்டன் நகர மக்களுக்களித்த சாசனம், நகராட்சியில் சுதந்திரத்தையும் சுய ஆட்சியையும் வழங்கியதற்காகச் சிறப்பாகவுள்ளது. எனினும், லண்டன் நகரம் எப்பொழுதும் தனிச்சிறப்பான நிலையைப் பெற்றிருந்தது. அதற்குரிய உரிமைகள், நாட்டின் கண் காணப்பெற்ற மற்ற நகரங்களைக்காட்டிலும் மிகவும் முன்னணியிலிருந்தன.[16]

## வலிமைமிக்க மத்திய அரசாங்கம்

மாவட்டங்கள், ஹண்ட்ரட், நகரங்கள் முதலியவைகளிலிருந்த தல நீதிமன்றங்களை, மான்யப் பிரபுக்களுக்கு அடிப்படையிலிருந்தே தடையாக இருக்குமாறு ஹென்றி மன்னர் அவைகளை வலிமை பொருந்தியனவாகச் செய்த அதே சமயத்தில், மன்னரின் ஆட்சிமுறையை மேலிருந்தும் ஒழுங்குபடுத்தி, வலிமை பொருந்திய மத்திய ஆட்சியை ஏற்படுத்தி மான்யப் பிரபுக்களை ஒடுக்குவதற்காகவும் முயற்சி செய்தார். 1101-ல் இருந்து 1103 வரை சான்ஸலராகப் பதவியிலிருந்தவரும், ஸாலிஸ்பரியின் மேற்றிராணியாராயிருந்தவருமான ரோஜர் டி. போயர் என்பார், பிற்காலத்திய காலக்குறிப்பேடுகள் வருணித்துள்ளவாறு, தலைமை நீதிபதியாக நியமிக்கப்பெற்றார்.[17] இப் பெரும் பதவியில் முப்பத்திரண்டாண்டுக் காலமிருந்தகாலை, அவருடைய உத்தரவின்படி, குரியா ரெஜிஸ் எனும் மன்னருடைய ஆலோசனை மன்றத்தின் ஆட்சி, நீதி, நிதி சார்ந்த விஷயங்களைச் செம்மையுறச் செய்வதற்காக ஒழுங்குபடுத்தப்பெற்றது. ஆண்டுகளில் கூடும் மன்றங்கள், முன்னர் நடந்ததைப்போலவே, கிளௌஸெஸ்டர், வின்செஸ்டர், வெஸ்ட்மினிஸ்டர் நகரங்களில் திருவிழாக் காலங்களில் நடைபெற்றன. எனினும், நாட்டின் வளர்ந்துகொண்டிருந்த அலுவல்களைக் கவனிக்க அவை போதுமானவையாயில்லை.

**சுற்றிவரும் நீதிவிசாரணை மன்றங்கள்:** தலைமை நீதிபதி, மன்னருடைய நீதிமன்றத்தைச் சேர்ந்த வேறு சில நீதிபதிகள் பின்தொடர, ஹென்றியின் ஆட்சியின் இறுதிக் காலத்தில், சிறப்பாக அரசிறை வருவாய் சம்பந்தமானதும் ஓரளவு நீதி

விசாரணை செய்வதற்காகவும் நாட்டில் சுற்றிவரத் தொடங்கினர்.[18] தல நீதிமன்றங்கள் இவ்வாறு நாட்டின் மிக்குயர் நீதி விசாரணைக் குழுவுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளுமாறு செய்யப்பட்டன. சட்டம், ஆட்சிமுறை இவைகளில் ஒழுங்கையும் முறையையும் ஏற்படுத்துவதன் வாயிலாக, ஹென்றி மன்னர், அவருடைய பேரர் ஆட்சியில் நாம் காணவிருக்கும் முக்கியமான சீர்திருத்தங்கள் ஏற்பட வழிவகுத்தார்.

ஹென்றி, சட்டத்திற்கு எதிராகக் குற்றம் புரிந்தவர்களைக் கடுமையாகத் தண்டித்ததால், மெர்லின் என்பார் வருங்காலத்தைப்பற்றி முன்னுரையாகக் கூறியவற்றில் விவரித்துள்ளபடி, 'நீதிச்சிங்கம்' எனும் சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டார். காட்டுச் சட்டங்களை மீறிய குற்றங்களுக்கு மரண தண்டனை விதிப்பதை வில்லியம் ரூஃபஸ் மீண்டும் தோற்றுவித்தார்; ஹென்றி மன்னர் சாதாரணமான குற்றங்களுக்கும் இத் தண்டனையை விஸ்தரித்தார். 1124-ல் ஒரே சமயத்தில் நாற்பத்துநான்கு கள்ளர்கள் சட்டங்களை மீறியதற்காக லீஸஸ்டர் மாவட்டத்தில் தூக்கிலிடப்பெற்றனர்.[19] ஆங்கிலேய-சாக்ஸானிய காலவழி வரலாறு கூறுகிறது போல், 'அவருடைய காலத்தில் ஒருவருக்குத் தீங்கிழைக்க மக்கள் அஞ்சினர். மன்னர், மக்களுக்கும் மாக்களுக்கும் ஒரே சீரான நீதி வழங்கியதன் வாயிலாக அமைதியை நிலவச் செய்தார். தங்கம், வெள்ளிச் சுமையை யார் எடுத்துச் சென்றாலும், அவரைக் கெட்ட எண்ணத்துடன் ஒருவரும் நெருங்க முடியாது.'[20] கடுந்தண்டனைகள் விதிப்பதன் வாயிலாக நாணயம் அச்சிடுவோரின் குற்றங்களைக் கடுமையாகத் தடைசெய்தார். இவர்கள் நாணயத்தின் மதிப்புக் குறைவதற்குக் காரணமாயிருந்தனர். அரசாங்க அதிகாரிகள் உணவுப் பொருள்களைத் திரட்டுவதற்கு மன்னருக்கிருந்த உரிமையை முறைகேடான வழியில் பயன்படுத்துவதையும் தடை செய்தார். எனினும், வெளிநாட்டுப் போர்களும் உள்நாட்டு ஆட்சி முறையும் ஏற்படுத்திய செலவை ஈடுசெய்வதற்காகக் கடுமையானதும் முறையானதுமான வரிவிதிப்பதை மேற்கொள்ள வேண்டியதாயிற்று. இவ்வாறு கடுவரிகள் விதிக்கப்பட்டதைப்பற்றி அக் காலத்திய காலவழிச் செய்திகளைத் தொகுத்தவர்கள் மிகக் கடுமையாகத் தாக்கி எழுதியுள்ளனர்.[21]

**பதவிச் சின்னமளிப்புப்பற்றிய தகராறு:** பிரபுக்களை அடக்கி வெற்றி கொண்ட பின்னர், ஹென்றிக்கு நாட்டில் எதிர்ப்பைக் காட்டக்கூடியதும் வலிமை வாய்ந்ததுமான இனம், திருச்சபையைச் சேர்ந்ததாயிருந்தது. பதவிச் சின்னமளிப்பது

பற்றிய தகராறில், மன்னருக்கும் அதிமேற்றிராணியாரான ஆன்ஸெல்மிற்குமிடையே சமரசம் ஏற்பட்டது. சின்னங்களான மோதிரமும் சிலுவை பொறித்த கோலும் சமயத்தின் வரம்பெல்லேயைக் காட்டுவனவாக இருந்தன என்பதால் வருங்காலத்தில் போப்பாண்டவரால் அளிக்கப்படவேண்டியன வென்றும், கீழ்ப்படிதல், மரியாதை செய்தல்போன்றவை சிவில் சம்பந்தமான செயல்களாதலால் சிவில் அதிகாரத்தின் தலைவரான மன்னருக்குத் தொடர்ந்து செய்யப்படவேண்டியன வென்றும், மேற்றிராணியாரின் சொத்துகளுக்கு லௌகீக முறையில் அனுபவிப்பதற்குப் பதிலாக இவை செய்யப்பட வேண்டுமென்றும் ஏற்பட்டது. இவ்வாறாகத் தேசியத் திருச்சபை, மான்யமுறைக் கொள்கை விரைவாக வளர்ச்சியுற்றதன் பயனாகக் கடுந்தொல்லேக்குட்பட்டிருந்ததிலிருந்து, சமய விஷயத்தில் சுதந்திரத்தை மீண்டும் பெற்றது ; மன்னரும் நியாயமாகக் கோரியவைகளே முழுமையாகப் பெற்றார்—அது லௌகீக விஷயங்களில் தலைமைப் பதவியைக் குறிப்பதாகும்.[22] இத் தகராறில், மன்னருடைய அதிகாரத்திற்கு ஓர் எல்லேயை வெற்றிகரமாக ஏற்படுத்தியது அரசியல் சட்டத்தில் முக்கியமானதாயிருந்தது.

## ஸ்டீஃபன்

பட்டமெய்தியதும், ஸ்டீஃபன் ஒரு சாசனத்தை வெளியிட்டு உறுதியளித்தார். அச் சாசனத்தில், பொதுவான வாசகங்களில், ஸ்டீஃபனின் சிற்றப்பனும் ஆங்கிலேயர்களுடைய மன்னராயுமிருந்தவரான ஹென்றி, இங்கிலாந்தின் மான்யப் பிரபுக்களுக்கும் மற்றோருக்கும் வழங்கிய நல்ல சட்டங்களும் சுதந்திரங்களும் குறிப்பிடப்பட்டிருந்தன. அத்துடன், மக்கள் மன்னர் எட்வர்டின் காலத்தில் அனுபவித்த நல்ல சட்டங்களும் நல்ல வழக்கங்களும் குறிப்பிடப்பட்டிருந்தன.[23] சிறிது இடைவேளேக்குப் பின், மன்னர், நாட்டு மக்களின் முதல் கூட்டத்தை ஆக்ஸ்ஃபோர்டில் கூட்டினார்;[24] அக் கூட்டத்திற்குப் பல நார்மானியத் தலைமை குருமார்களும், மான்யப் பிரபுக்களுடன் ஆங்கிலேய குருமார்களும், மான்யப் பிரபுக்களும் வந்திருந்தனர். இக் கூட்டத்தில் இரண்டாவதாக ஒரு சாசனத்தை வரைந்து விளம்பரம் செய்தார். முதலில் வெளியிட்டதைக் காட்டிலும் இச் சாசனத்தின் அமைப்புத் தெளிவு பெற்றிருந்தது ; முப்பத்தேழு சாட்சிகளுக்குக் குறையாமல் கையொப்பம் செய்யப்பட்டிருந்தது. அதில் பதினான்கு பேர்கள் மேற்றிராணியாராகவும் (பதினொரு பேர்கள் ஆங்கிலேயர்கள், மூவர் நார்மானியத் திருச்சபையைச் சேர்ந்தவர்களாவர்)

மற்றவர்கள் லௌகீகர்களான மான்யக் குடிகளாகவுமிருந்தனர். இவர்களில் பெரும்பான்மையோர், உயர்ந்த பதவியிலிருந்தவர்களாகவும் அரசாங்க அதிகாரிகளாகவுமிருந்தனர்.

ஸ்டீஃபன், மன்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதற்குச் சமய குருமார்கள் முக்கிய உதவியாயிருந்தனர். வின்செஸ்டர் மேற்றிராணியாரும் ஸ்டீஃபனின் சகோதரருமான ஹென்றி என்பாரின் செல்வாக்கு குருமார்களிடம் மிகுதியாயிருந்தது. எனவே, இரண்டாவதுசாசனத்தில் கண்டிருந்தவற்றில் பெரும் பகுதி திருச்சபைக்கு அளித்த சலுகைகளைப் பற்றியதாயிருந்ததில் வியப்பில்லை.

**சலுகைகள் :** (1) குருமார்கள் சமய நிறுவனங்களுக்குச் சொந்தமான சொத்துகளை வாங்குவது அல்லது விற்பதைத் தடைசெய்வதாயும், திருச்சபையைச் சேர்ந்தவர்களின்மீதும் அவர்களுடைய சொத்துகளின்மீதும் மேற்றிராணியார்கள் அதிகார எல்லையைப் பாதுகாப்பதற்கு உதவியளிப்பதாயும் மன்னர் உறுதிமொழி கூறினர். சமயஞ் சார்ந்த பதவிகள், அவைகளின் உரிமைகளுடன், பழைய வழக்கப்படி மீறப்படாமலிருக்கவேண்டியவை என்றும் உறுதிகூறினர். வெற்றிசீலர் இறந்தபொழுது, எவ்வித மறுப்புமின்றி அனுபவித்து வந்ததோ அல்லது அதற்குப் பின்னர் சமயத்தில் நம்பிக்கை கொண்டிருந்தவர்கள் தாராளமான மனப்பான்மையுடன் அளித்ததோவான எல்லா நிலங்களும் திருச்சபைக்குச் சொந்தமாயிருக்கவேண்டும். ஆனால், வெற்றிசீலர் இறப்பதற்குமுன்னர் திருச்சபை அதன்வசம் வைத்திருந்தது அல்லது சொந்தமென உரிமை பாராட்டியதைப் பின்னர் இழந்துவிட்டிருக்குமானால், அவைகளை மீண்டும் திருச்சபைக்கு அளிப்பதோ, மறுப்பதோ மன்னருடைய அனுமதிக்கும் பகிர்ந்து கொடுக்கும் நல்ல எண்ணத்திற்கும் ஒதுக்கப்பட்டது. இறந்துபோன குருமார்கள் உயில் எழுதிவைத்தோ அல்லது எழுதிவைக்காமலோ விட்டுச் சென்ற சொத்துகளுக்கு உரிமை பாராட்டுவதை முழுமையாக மன்னர் துறந்தார்; அத்துடன் காலியேற்பட்ட மேற்றிராணியாரின் பதவிகளையெல்லாம் அவைகளின் சொத்துகளோடு குருமார்களுடைய பாதுகாப்பின்கீழ் விட்டுவிட வேண்டியதென்றும், அப்படிச் செய்ய இயலாத நிலையில், மேற்றிராணியாரின் அதிகாரவெல்லைக்குட்பட்ட பகுதியில் வாழ்ந்த நல்லோரிடம் மற்றொரு குரு நியமிக்கப்படும்வரை ஒப்படைக்க வேண்டியதென்றும் கூறினர். (2) பொதுவாக எல்லாவற்றிலும், அமைதியையும் நீதியையும்பாதுகாத்தளிப்பதாக மக்களுக்கு உறுதி கூறினர்; ஷெரீஃபுகளாலும்

மற்றோராலும் முறைகேடான வழியில் மக்களிடமிருந்து வசூலிக்கப்பெற்ற எல்லா வல்லந்த வசூல்களையும் முழுமையாக நீக்கினார்; கொலைக்குற்றம், மற்றும் பல்வேறு வழக்குகளையும் விசாரித்து நீதி வழங்குவதில், பழையனவும் நியாயமானவுமான வழக்கங்களைப் பின்பற்றுவதுடன், ஒழுங்கான சட்டங்களின் படி ஒழுகுவதைச் செய்யவும் செய்விக்கவும் உதவி புரிவதாகவும் வாக்களித்தார்.

ஸ்டீஃபன், தம் பாட்டனாரான வில்லியம் மன்னரும், சிற்றப்பனாரான வில்லியமும் வைத்துக்கொண்டிருந்த காடுகளைத் தமக்கே சொந்தமானவையாக ஆக்கிக்கொண்டார்; ஹென்றி மன்னரால் சேர்த்துக்கொள்ளப்பட்டவைகளைத் திருச்சபைக்கும் நாட்டு மக்களுக்கும் உரிமையானவையாகச் செய்தார். மேற்கூறப்பட்டவைகளையெல்லாம் மன்னர், 'மன்னருடைய, நியாயமான கௌரவத்தைக் காப்பதற்கு' ஊறு ஏற்படாத வகையில் வழங்கி உறுதி செய்தார். மன்னருடைய கௌரவம் பற்றிய வாசகம் தெளிவற்றதாயும், வேறு பொருள் கொள்ளத் தக்கதாயுமிருந்தது.[25]

**ஆட்சி குலைந்த நிலை (அராஜகம்):** ஸ்டீஃபன் மன்னருடைய 'ஆட்சி' எனப்பெறும் பகுதி, கலகங்களும் ஆட்சியில் குழப்பமும் நிறைந்திருந்தது; மத்திய அரசாங்கத்தின் வலிமை சீரழிந்துபோயிற்று. சாசனங்களின் ஷரத்துகளும், சட்டம், ஆட்சிமுறை முதலியவைகளுடன் சேர்ந்து முழுமையாகச் செயலற்றுப்போயின. எனினும், அந்த ஷரத்துகள், பக்தசீலரான எட்வர்ட் மன்னர் வெளியிட்ட சட்டங்கள் நாட்டு மக்களின் பழைய சுதந்திரங்களின் சின்னமாக விளங்கினவெனப் பொதுமக்களின் கருத்தில் உருப்பெற்றிருந்த தொடர் சங்கிலியில் ஒரு கரணைபோன்றிருந்தது என்பதால் முக்கியமானவையாகும். அத்துடன் மகாசாசனத்தை உருவாக்கியவர்களிடம் அந்த ஷரத்துகள் சற்றும் முரிவுபடாமல் வழங்கப்பட்டன.

வீரமும், சுறுசுறுப்பும், பொதுமக்களின் ஆதரவும் பெற்றிருந்த ஸ்டீஃபன், மக்களை அடக்கியாளும் கலையையும் திறமையையும் பெற்றிருக்கவில்லை. அவருடைய குறையைப் பயன்படுத்திக்கொண்டு மானியப் பிரபுக்கள் தங்களின் கோட்டைகளை வலுப்படுத்திக்கொண்டனர். அத்துடன், மன்னரையோ அல்லது பேரரசி மாடில்டாவையோ ஆதரிக்கிறவர்கள் எனும் பெயரில் நடைமுறையில் தங்களை இருவருடைய ஆதிக்கத்திலிருந்தும் விடுவித்துக்கொண்டு, சுதந்திரமுடைய

வர்களாக ஆயினர் ; ஐரோப்பாவின் மானிய முறையில் காணப் பெற்றஅருவருக்கத்தக்க உரிமைகளைக் கைக்கொண்டு அதன் படி நடக்கலாயினர். காலவழிச் செய்தித் தொகுப்பாளர் கூறுவதாவது: 'பிரபுக்கள் எவ்வளவு கோட்டைகளைக் கொண்டிருந்தார்களோ அவ்வளவிற்குக் கொடுங்கோலாட்சி புரிகிறவர்களாயிருந்தார்கள்'' [26] மன்னருக்குச் சொந்தமான நிலங்களையும், அரசாங்கக் கருவூலத்தினின்றும், தாராளமாக வழங்குவதைத் துணைக்கொண்டு புதிய பிரபுக்களின் பதவியைத் தோற்றுவிப் பதன்வாயிலாகத் தனது நிலையை வலுப்படுத்திக்கொள்ளுவதற்கு மன்னர் முயன்றார். தம்மை எளியவராக்கிக்கொண்டதும், பழைய பிரபுக்களின் பொறாமையைத் தூண்டியதுமே இதன் விளைவாயின. சாலிஸ்பரியைச் சேர்ந்த ரோஜர், அவருடைய உறவினர்களான இலியைச் சேர்ந்த நைஜல், லிங்கனைச் சேர்ந்த அலெக்சாண்டர் எனும் மேற்றிராணியார்கள்மீது நியாயமென ஏற்றுக்கொள்ளத்தக்கதும், ஆனல், கண்ணியமில்லாத முறையில் மேற்கொள்ளப்பட்டதுமான கடுந்தாக்குதலினுல் அவர்களுடைய கோட்டைகள் மன்னர் வசமாயின என்றாலும், மன்னருக்கு முக்கிய ஆதரவை அளித்து வந்த குருமார்கள் அனைவரையும் பகைவர்களாக்கிக்கொண்டார்; அத்துடன், அரசாங்கத்தின் ஆட்சி முழுவதையும் குழப்பத்திற்குள்ளாக்கினர். மேற்றிராணியாரான ரோஜர், ஜஸ்டீஷியர் எனும் பதவியுடன் அதுவரை தலைமை தாங்கி ஆட்சியை நடத்திவந்தார்.[27] வின்செஸ்டர் பிரபுவும் மன்னரின் சகோதரருமான ஹென்றியும் பேரரசியின் பக்கத்தில் சேர்ந்து கொண்டனர். நெடுநாளாக நடந்த உள்நாட்டுப் போரின் பொழுது மக்களின் நிலைமை சொல்லொணுத் துயரத்தில் மூழ்கியிருந்தது. இரு கட்சியினரும் கூலிப்படைகளை அமர்த்திக் கொண்டனர். இப்படையினர் சிறப்பாக ஹாலந்து நாட்டைச் சேர்ந்தவர்களாயிருந்தனர் ; அத்துடன், மிக்க துடுக்குடனும் கொடுமையுடனும் நடந்துகொண்டனர். ஆங்கிலோ - சாக்ஸானிய காலவழிச் செய்திக் கோவை கூறுவதுபோல், 'மன்னராட்சியில் எல்லாத் தீமைகளும், பூசல்களும், கொள்ளைகளும் மலிந்திருந்தன... நாட்டில் இதற்குமுன் இதைவிடக் கொடுமையான ஆட்சியைக் காணமுடியவில்லை.' [28]

**வின்செஸ்டர் உடன்படிக்கை:** இறுதியில் 1153-ல், ஸ்டீஃபன் மன்னரின் மூத்த மகனுன ஈயூஸ்டேஸ் என்பவரின் மரணத்திற்குப்பின், வின்செஸ்டர் எனுமிடத்தில் ஒரு சமாதானம் ஏற்படலாயிற்று. இச் சமரசத்தை ஏற்படுத்த மேற்றிராணியார்கள் முன்வந்தனர்.[29] இவ்வுடன்படிக்கை, மாடில்டாவின் மகனும் இருபத்தொரு வயது நிரம்பப்பெற்ற

வருமான ஹென்றியாலும் மன்னராலும் ஏற்றுக்கொள்ளப் பட்டது. இரு தரப்பிலும், மேற்றிராணியார்களும் மானியப் பிரபுக்களும் இதற்குப் பணிந்து தங்களுடைய சம்மதத்தைத் தெரிவித்துக்கொண்டனர். அவ் வுடன்படிக்கையின்படி, சிம்மாதனத்திற்கு அப்பொழுது உரிமை பாராட்டியதை ஹென்றி கைவிடவேண்டுமென்றும், ஸ்டீஃபன் மன்னரின் மரணத்திற்குப்பின் முறைப்படி வாரிசாகப் பதவியேற்பதை எல்லோரும் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்றும், போரிடுவது நிறுத்தப்பெறவேண்டுமென்றும், கூலிப்படைகளைக் கலைத்து விடவேண்டுமென்றும், 'சட்ட விரோதமாகக்' கட்டப்பட்ட கோட்டைகளைத் தகர்த்தெறிய வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது.[30]

உடன்படிக்கை ஏற்பட்டதிலிருந்து ஓராண்டிற்குள்ளாகவே, **1154** அக்டோபர் திங்கள் **25**ஆம் நாள், ஸ்டீஃபன் இறந்தார். ஒழுங்கும் நல்லாட்சியும் முறையாக அமைக்கப் படாமலேயே ஆட்சி, ஆஞ்சோ வம்சத்தைச் சேர்ந்த ஹென்றியிடம் ஒப்படைக்கப்பெற்றது.

## இரண்டாம் ஹென்றி

வின்செஸ்டர் உடன்படிக்கையின்படி, எதிர்ப்பு எனும் எவ்விதத் தோற்றமுமின்றி இரண்டாம் ஹென்றி பட்டமெய்தினார். ஐரோப்பாவில் மிகப் பரந்த நிலப்பகுதியைச் சொந்தமாகக் கொண்டிருந்ததன் வாயிலாக அவரிடம் காணப்பெற்ற வலிமை, ஆங்கிலேயச் சிம்மாதனத்தை முறைப்படி ஒழுங்காக அவர் பெறுவதற்குத் துணை புரிந்தது.[31] மேலும், பழைய அரச மரபின் வழித்தோன்றல் என்ற காரணத்தினால் ஆங்கிலேயர்கள் அவர் பட்டத்திற்கு வருவதை வரவேற்றனர். அத்துடன் நெருக்கடி ஏற்பட்டபொழுதெல்லாம் மக்கள் அவரது ஆட்சிக் காலம் முழுமையும் அவரைத்தொடர்ந்து ஆதரித்தனர். தாய்வழியில் ஒரே சமயத்தில் நார்மானிய இனத்தையும் ஆங்கிலேய இனத்தையும் சேர்ந்தவராக உரிமை பாராட்டிய போதிலும், பிறப்பாலும் பண்பாலும் ஹென்றி நார்மானியராகவோ அல்லது ஆங்கிலேயராகவோ இருக்கவில்லை.[32] அவர், அந்நிய மரபான ஆஞ்சவின் அல்லது பிளான்டாஜெனட் எனப் பின்னர் அழைக்கப்பட்ட புதிய இனத்தைச் சேர்ந்தவராவார்.[33] இவ் வமிசம் இங்கிலாந்தில் முன்னூறு ஆண்டுகளுக்கும் மேலாக (**1154—1485**) ஆட்சி புரிய ஊழ் வழி செய்தது. ஆங்கிலேய மன்னரைப் போலவே ஆட்சி புரிவதற்கு ஹென்றி முயன்றார். எனினும், அந்நிய நாட்டினர் அல்லது

இங்கிலாந்தைச் சேர்ந்த எவருக்கும் மன்னருக்குப் பிடித்தமான நண்பர் எனும் முறையில் அவரது வலையில் விழாத அளவிற்குத் திறமையும் உறுதியும் மிகுதியாகப் பெற்றிருந்தார். ஆனால், அவரது மைந்தர்களான ரிச்சர்ட், ஜான், பேரரான மூன்றும் ஹென்றி இவர்களது ஆட்சிகளில் அந்நிய மரபைச் சேர்ந்தவர்கள் எனும் தீமைகள் மக்களால் நன்குணரும்படி ஆயின. ஆங்கிலேய, நார்மானியர்களின் வழித்தோன்றல்கள், ஒரே தன்மையாக, வெளிநாட்டுக் கூலிப்படைகளின் வலிமையைப் பெற்று, மன்னரின் ஆதரவைப் பெற்று நாட்டை ஆட்சி புரிந்த அந்நிய இனத்தவரின் ஆட்சியினால் ஏற்பட்ட தொல்லைகளைக் கண்டனர்.

**முடிசூட்டு விழாவின்பொழுது வழங்கப்பட்ட சாசனம்:** நெடு நாள்கள் நடந்த உள்நாட்டுப் போருக்குப்பின், இரண்டாம் ஹென்றி பட்டமெய்தியதில் அவருக்கு நன்மை இருந்தது. உள்நாட்டுப் போர் நிகழ்ந்தகாலை, மக்கள் நாட்டில் நிலவிய ஆட்சிக் குழப்பத்தைக் கண்டு சலித்துப்போயிருந்தனர். முடிசூட்டு விழாவின்பொழுதோ அல்லது அதையடுத்தாற் போலவோ, திருச்சபைக்கு மானியமாக அளித்தும், அளிக்கப் பட்டதை உறுதி செய்யும் வகையிலும் சுருக்கமானதொரு சாசனத்தை வழங்கினர்; அத்துடன், ஏர்ல்கள், மான்யப் பிரபுக்கள், மற்ற எல்லோருக்கும் எல்லா உரிமைகளையும் மன்னருடைய பாட்டனரான ஹென்றி மன்னரின் சாசனத்தால் வழங்கப்பெற்ற எல்லாச்சுங்கவரியில்லாச் சலுகைகளையும் வழங்கியதோடு, பாட்டனர் வஜாசெய்து நீக்கிய சட்டத்திற்குப் புறம்பான கட்டாய வரிவசூல்களை நீக்கி வஜா செய்தார்.[34] சற்றும் காலதாமதமின்றி இளையவரான மன்னர், நாட்டில், சட்டத்தையும் ஒழுங்கையும் சாசுவதமாக நிலை நிறுத்துவதற்காகச் சலியாது உறுதியுடன் உழைப்பதை மேற்கொண்டதுடன், ஆட்சி முழுவதிலும் அந் நோக்கத்திற்காக இடைவிடாது பாடுபட்டார். அவரது பாட்டனரான முதலாம் ஹென்றியின் ஆட்சி முறையை உடனடியான மாதிரியாகக் கொண்டு, நாட்டின் ஒழுங்கற்ற நிலையிலிருந்த ஆட்சி, நீதித் துறைப் பொறிகளைப் புதுப்பித்தார். எனினும், அவைகளில் காணப்பெற்ற முன்னேற்றங்களும் புதிய அமைப்புகளும் அவருடைய சொந்தக் கொள்கையின் பயனாக ஏற்பட்டவையாம்.[35]

**ஷெரீஃபுகளின் உள்விசாரணை, 1170:** அரசாங்க அதிகாரிகள் ஆட்சிமுறையில் அரசாங்கப் பணத்தைக் கையாடல் செய்வது போன்ற தவறுகளைத் தடைசெய்வதில் மன்னர்

உறுதியோடிருந்தார் என்பது 1170-ல் அவரது சிறப்பான நடவடிக்கை வாயிலாக உணரப்படுகிறது. அவ்வாண்டில், லண்டனில் கூட்டப்பெற்ற பெருமன்றத்தில், நாட்டிலிருந்த எல்லா ஷெரீஃபுகளையும் அவர்களுடைய கட்டளைகளை நிறைவேற்றுகிறவர்களான பெய்லிஃபுகளையும், அவர்கள் தங்களது பதவியில் முறைதவறி நடந்தார்கள் எனும் குற்றச்சாட்டைக் கேட்டுப் பதவிநீக்கஞ் செய்தார். பதவிநீக்கம் செய்யப்பட்ட அதிகாரிகள் மறுமொழி கூறுமுகத்தான் வாக்குறுதி எடுத்துக் கொள்ளுமாறு கட்டாயப்படுத்தப்பட்டதுடன், அவர்கள்மீது குசுவாக்கப்பட்ட, முறையற்ற வகையில் செய்த கட்டாய வசூல்களுக்கு நஷ்டஈடு செய்யுமாறும் உத்தரவிடப்பட்டனர். அத்துடன், ஒவ்வொரு கௌன்டியிலும், கௌன்டியில் வாழ்ந்த மானியப் பிரபுக்கள், நைட் வீரர்கள், சுதந்திரமான நிலச்சுவான்தார்கள், மானியக் குடிகள் முதலானவர்களின் உறுதிமொழியின் துணைகொண்டு விசாரணையை நடத்துமாறு கட்டளையிட்டு, மன்னர் ஒரு சிறப்பு அரசவதிகாரம் பெற்ற குழுவை நியமித்தார்; ஷெரீஃபுகள் மற்றும் எல்லோரிடமிருந்தும் அரசாங்கக் கருவூலத்திற்குச் சேரவேண்டியதைக் குறித்த பற்றுச்சீட்டுகளைச் சோதனையிடவும் கட்டளையிட்டார்.[36]

அவருடைய ஆட்சியின் நோக்கம், மன்னருடையவான அதிகாரங்களைத் தம்மிடமேகொண்டு வலுவான மத்திய ஆட்சியை ஏற்படுத்தி நிலைநிறுத்துவதாகுமெனத் தோன்றுகிறது. அத்துடன், செவியட் குன்றுகளிலிருந்து பிரனீஸ் மலைத்தொடர்வரை பரவியிருந்த பெரியதான பேரரசை முழுமையுறச் செய்வதும் நோக்கமாயிருந்தது. வேல்ஸ் நாட்டு மக்களை, ஓரளவுதான் வெற்றி கிட்டியதெனினும், அடிபணியச் செய்தார். அயர்லாந்தும், நற்பேறின்மையின் காரணமாக முழுமையாக வெற்றிகொள்ளப்படாது, ஆங்கில முடியரசுடன் சேர்த்துக்கொள்ளப்பட்டது; ஸ்காட்லாந்து ஹென்றியின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டது.

ஹென்றியின் ஆட்சியினது அரசியல் சட்டஞ் சார்ந்த இரு முக்கியப் பயன்களாவன: (1) முடியாட்சியில் மன்னரின் பதவி, மானிய முறையிலும் தேசிய முறையிலும் முழுமையான வளர்ச்சி பெறுவதற்காகத் திருத்தியமைக்கப்பெற்றது. (2) தேசியத் திருச்சபையை நாட்டின் சட்டப்படி அமைந்த மேலாதிக்கத்திற்கு உட்பட்டிருக்கச் செய்தது. அவருடைய கொள்கையை நடைமுறையில் செயல்படுத்திய நிலையில் வலிமை மிக்க இரு எதிரிகளுடன் மன்னர் சமாளிக்க நேர்ந்தது: (1) மானியப் பிரபுக்கள்—இவர்களுடைய அதிகாரத்தையும்

உரிமைகளையும் வெகுவாகக் குறைக்க நேர்ந்தது; (2) வெற்றி வீரரான வில்லியம் மன்னரால் தொடங்கப்பெற்றதும், தனித் தனியான லௌகீக, சமயஞ் சார்ந்த அதிகாரவெல்லைகளைக் கொண்டிருந்த முறையின்கீழ் நாட்டின் சாதாரணமான எல்லாச் சட்டங்களிலிருந்தும் தொல்லையை விளைவிக்கக் கூடியதும் பேரிடரை உண்டுபண்ணக்கூடியதுமான விடுதலையைப் பெறுவதில் வெற்றிபெற்றிருந்த குருமார்கள்.

**ஆட்சிமுறைபற்றிய சீர்திருத்தங்கள் :** ஹென்றி மானியப் பிரபுக்களை முழுமையாக அடக்கினார். வின்செஸ்டர் சமாதானத்தில் சேர்க்கப்பட்டிருந்த வாசகப்படி ஆட்சிமுறைச் சீர்திருத்தங்கள் வரிசைப்படி தயக்கமின்றிப் பின்பற்றப்பட்டன. 'சட்ட விரோதமாக'க் கட்டப்பெற்ற கோட்டைகள் அழிக்கப்பட்டன ; தனியுரிமை பெற்ற நிலத்திலிருந்து நீக்கப்பட்டவர்கள் மீண்டும் அவர்களுடைய நிலங்களைப் பெற்றனர்; வெளிநாட்டுக் கூலிப்படைகள் நாட்டைவிட்டு வெளியேறும்படி செய்யப்பட்டன. நாணயம் அச்சிடும் முறை சீர்திருத்தம் செய்யப்பட்டது.[37] மன்னர், கடுமையான கடமைகளை நைட் வீரர்களின்மீது விதிக்க உதவியாயிருக்கும் எனும் நோக்கத்துடன், நைட் வீரர்களாயிருந்த உட்குடிகளினுடைய எண்ணிக்கை, பெயர்களடங்கிய பட்டியல்கள் முக்கிய மானியதாரர்களிடமிருந்து பெறப்பட்டன.[38] செயல்திறனுடையவர்கள்[39] என மன்னரால் ஆய்ந்தெடுக்கப்பட்ட ஆலோசனையாளர்களின் துணைகொண்டு, குரியா ரெஜிஸ் மன்றத்தைச் சார்ந்து, நீதி, கருவூலத் துறையைச் சார்ந்த நிதி முதலியவைகளின் ஆட்சிமுறையைத் திருத்தியமைத்து விரிவுபடுத்தினார். சுற்றிவரும் நீதிபதிகள் மாநிலங்களுக்குச் சென்றுவருவதைப் புதுப்பித்ததுடன், அவர்களின் எண்ணிக்கையையும் அதிகமாக்கினார்; சுற்றுப்பயணம் செய்வதையும் ஒழுங்குபடுத்தினார். குறிப்பிட்ட காலங்களில் கூடும் மிக்குயர் நீதிமன்றத்தையும், மற்றும் பல 'சிறு' நீதிவிசாரணை செய்யும் மன்றங்களையும் தோற்றுவித்தது, இவரது ஆட்சியில், நீதித்துறையில் காணப்பெற்ற மற்றொரு வளர்ச்சியாகும். இவைகளை ஏற்படுத்தியதன் வாயிலாக, பழைய முறையான மற்போர் செய்வதற்குப் பதிலாக, ஜூரிகள் முடிவிற்கு வழக்கு விசாரணையை விட்டுவிடுவதற்கு வழக்குத் தொடுப்போருக்கு வசதியேற்பட்டது. ஜூரிகளின் தீர்ப்பை ஏற்றுக்கொள்ளுதல் எனும் கொள்கை, நிதி, சட்டம் சார்ந்த எல்லாவிதமான நடவடிக்கைகளுக்கும் ஏற்றதாகச் செய்யப்பட்டது. சுற்றிவரும் நீதிபதிகளுடன் இணைந்து, மக்கள் சுய ஆட்சியைப் பெறுவதற்குத் தக்க பயிற்சியை அளிப்பதில் முக்கியச் செல்வாக்கைப் பெற்றிருந்தது.[40]

ஹென்றியின் ஆட்சியில் நடைபெற்ற சீர்திருத்தங்களால் மக்கள் ஒழுங்கானதும் சட்டப்படி அமைந்ததுமான பாதுகாப்பைப் பெற்றதோடல்லாமல், மன்னருக்கும் மக்களுக்கும் ஒன்று போல் பேரிடரைத் தோற்றுவிக்க மூலமாயிருந்த மானியப் பிரபுக்கள் கடுமையாக அடக்கப்பட்டதுடன் நிர்வாக அதிகாரம் அவர்களிடமிருந்து பறிக்கப்பட்டது. 1170-ல் நடைபெற்ற விசாரிணைக்குப்பின், ஷெரீஃபுகள் எனும் அதிகாரப் பதவியை மானியப் பிரபுக்களிடம் ஒப்படைப்பதற்குப் பதிலாக, ஹென்றி, கருவூலத் துறையில் பயிற்சி பெற்றவர்களுக்கு அப் பதவிகளை அளித்தார். மானியப் பிரபுக்கள் அப் பதவியைத் தங்கள் குடும்பத்தினருக்கு வாரிசு வழிமுறையில் பெறத்தக்கதெனும் எண்ணத்தை வெளியிட்ட காரணத்தால் நியமன முறையில் மாற்றம் ஏற்படலாயிற்று. தலைமை நீதிபதி எனும் மிக்குயர் பதவிக்குச் சமயஞ்சார்ந்த குருமார்களுக்குப் பதிலாக, லௌகீகர்களில் மிக்க திறமை வாய்ந்தவரைத் தேர்ந்தெடுத்தார்; இதன் வாயிலாக, மேற்றிராணியார்கள், மானியப் பிரபுக்கள் முதலியோரின் அதிகாரத்தைக் குறைத்தார். மானியப் பிரபுக்களின் அதிகாரம் டூலூஸ் நாட்டுப் போரின் பொழுது இராணுவச் சேவை செய்வதற்கு ஈடாகக் கேடயப் பணம் என்னும் தொகையைச் செலுத்துவது எனும் முறை ஏற்பட்டதால், மேலும் நிலையாகக் குறைக்கப்பட்டது.[41] அவ்வாறு திரட்டப்பட்ட பணம் போரிடுவதற்குக் கூலிப்படைகளைச் சேர்க்கப்பயன்பெற்றதுடன், கூலிப்படைகள், மான்ய முறைப்படி திரட்டப்படும் போர்வீரர்களைக் காட்டிலும் நம்பிக்கைக்குத் தகுதியுள்ளவையாயிருந்தன. ஆயுத நீதிக்குழு, பழைய ஃபியர்டு அல்லது நாட்டுப் படை[42] முதலியவைகளை மீண்டும் தோற்றுவித்து (1181-ல் வெளியிடப்பெற்ற சட்டம்) மான்யதாரர்களைஅடக்கியதுடன், முன்னிருந்ததைக்காட்டிலும் ஹென்றி மன்னர் சுதந்திரமாயிருந்தார்.

ஹென்றியின் கொள்கையின் பயன், மன்னரதிகாரத்தை மேலும் உயர்த்துவதாயிருந்தது. வலிமையான மத்திய ஆட்சியை நடத்தியபொழுது, வல்லாட்சியை நோக்கமாகக் கருதவில்லை. மான்ய முறையில், அரசியல் சட்ட வரம்பிற்குட்பட்ட அரசாங்கத்தை ஏற்படுத்தும் கருத்தால் உண்மையில் தூண்டப்பெற்றவராயிருந்தாரெனத் தோன்றுகிறது. மன்னர், தொடர்ச்சியாக மிக்குயர் ஆலோசனை மன்றத்தை ஒன்று கூட்டினார். அம் மன்றத்தின் ஆலோசனையும் சம்மதமுமின்றிப் பொதுநலமான எவ்விதச் சட்டமும், முக்கியமான எந்த விஷயமும் முடிவு செய்யப்படவில்லை.

## இரண்டாம் ஹென்றியும் பெக்கட்டும்

குருமார்களுடனும் பெக்கட்டுடனும் ஏற்பட்ட சச்சரவில் ஹென்றி வெற்றி முழுமையானதாக ஆகாது. திருச்சபையின் முக்கியமான இரண்டு உரிமைகளுக்கு மன்னர் அடிபணிய நேர்ந்தது. அவை, ரோமாபுரிக்கு மறுவிசாரணைக்காக மனுச் செய்துகொள்ளும் உரிமை, கொலைக்குற்றம் முதலியவைகளுக்காகக் கணக்கர்கள்மீது அதிகார எல்லை (1164) ஆகியனவாகும்.

புகழ்பெற்ற கிளாரண்டன் அரசியல் சட்டங்கள் (1164) பதினாறாகும். அவை நாட்டின் ஏர்ல்கள், மான்யப் பிரபுக்கள், மற்ற உயர்குடி மக்கள் முன்னிலையில், அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்களால் ஒத்துக்கொள்ளப்பட்டுப் பதிவு செய்யப்பட்டதாகும். அத்துடன் அவை முதலாம் ஹென்றியின் காலத்தில்,[43] திருச்சபை, அரசாங்கம் இவைகளுக்கிடையே இருந்த உறவுகளை ஒழுங்குபடுத்தி, தெளிந்து ஒத்துக்கொள்ளப்பட்ட வழக்கங்களையும் கொண்டனவாயிருந்தன. குருமார்களுக்கும் மன்னருடைய நீதிபதிகளுக்குமிடையே தோன்றிய கருத்து மாறுபாடுகளின் காரணமாக இப் பத்திரம் ஏற்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. நாட்டின் வழக்கங்களைப் பற்றி இக் கருத்து மாறுபாடு தோன்றலாயிற்று. பத்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளபடி நடப்பதாக அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்கள் சிறப்பாக உறுதிமொழி அளித்ததையும் பத்திரம் குறிப்பிடுகிறது.

முக்கியமான ஷரத்துகளை நன்கறிய ஏற்றவாறு ஐந்து கூறுகளாகப் பிரிக்கலாம்:[44]

(1) குற்றம் புரிந்ததாகக் கூறப்படும் எல்லா எழுத்தாளர்களும் முதலில் மன்னரது நீதிபதிகளின் முன்பு வரவழைக்கப்பட வேண்டும் என்றும், நீதிபதிகள், வழக்கு லெளகீக மன்றத்தில் அல்லது குருமார்களின் மன்றத்தில் விசாரிக்கப்பட வேண்டும் என்று முடிவு செய்யவேண்டும் என்றும் குறிப்பிடுகிறது. குருமார்களின் நீதிமன்றத்தில் வழக்கு விசாரணை செய்யப்பட வேண்டுமென ஒதுக்கப்பெற்றால், மன்னருடைய நீதிபதிகளால் அனுப்பப்படுகிற அரசாங்க அதிகாரி ஒருவர் அம் மன்றத்தின் நடவடிக்கைகளைக் கவனிக்க வேண்டுமென்றும்; குற்றஞ் சாட்டப்பட்டவர், குற்றவாளியெனத் தீர்ப்புக் கூறப்பட்டால், அதன் பின்னர் திருச்சபையால் எவ்விதப் பாதுகாப்பும் அளிக்கப்படக்கூடாதென்றும்குறிப்பிடுகிறது. அரசரின் நீதிமன்றத்திற்குரிய எல்லா விஷயங்களும்

அங்கேயே முடிவாக வேண்டும்; ஆனால், சமயஞ்சார்ந்த நீதி மன்றங்களின் எல்லைக்குட்பட்டனவாகக் காணப்பெறும் எல்லா வழக்குகளும் நீதி வழங்குவதற்காக அங்கு அனுப்பப் பெறவேண்டும். இவ்வாறாக, வெற்றிசீலரான வில்லியம் மன்னரால் ஏற்படுத்தப்பெற்ற சிவில், சமயஞ் சார்ந்த எல்லைகளின் வேற்றுமை நடைமுறையில் பின்பற்றப்பட்டது. சமயஞ் சார்ந்த நீதிமன்றத்தில் குற்றம் சாட்டப்பெற்றவர் விசாரிக்கப்படவேண்டுமா, வேண்டாமா என்பதை முதலில் முடிவு செய்ய மன்னருடைய நீதிமன்றத்திற்கு உரிமையுண்டு; அதன் பின்னர் சமயஞ் சார்ந்த நீதிமன்றம், அதனிடம் ஒப்படைக்கப்பட்டுக் குற்றஞ்சாட்டபெற்றவர்கள் உண்மையில் குற்றவாளிகளா அல்லது நிரபராதிகளா என்பதை மாத்திரம் முடிவு செய்து, குற்றவாளிக்குத் தண்டனை விதிப்பதையோ அல்லது தண்டிப்பதையோ மன்னர் நீதிமன்றம் செய்தது.

பொதுமக்கள் அல்லது கணக்கர்கள் அல்லது பொது மக்களுக்கும் கணக்கர்களுக்குமிடையே எழும் திருச்சபைக்கு வழங்குவதற்கு உரிமை அல்லது வாழ்க்கைக்காக அளிக்கப் படுவது சம்பந்தமான எல்லா விஷயங்களும் மன்னருடைய நீதிமன்றத்திலேயே விசாரணை செய்து முடிவுசெய்யவேண்டியதாகும்.[45]

நம்பிக்கை உறுதியுடன் கூடியதாயும் இல்லாமலுமிருப்பினும் (நம்பிக்கை உறுதி செய்யப்பட்டவை திருச்சபையின்சிறப்பான விசாரணைக்குட்பட்டதென உரிமை பாராட்டப் பெற்றது), கடன்சம்பந்தமான எல்லா வழக்குகளையும் விசாரிப்பதற்கு மன்னரின் நீதிமன்றம் அதிகாரம் பெற்றிருந்தது.

இனாமாகப் பெறப்பட்டதாக உறுதி கூறும் நிலம் பற்றிக் கணக்கர்களுக்கும் லௌகீகர்களுக்குமிடையே ஏற்படும் வழக்குகளைத் தலைமை நீதிபதி முடிவுசெய்யவேண்டும். அவ்வாறு செய்யும்பொழுது, நிலம் லௌகீக முறையில் அல்லது சமயத்தின்பேரால் இனாமாகக் கொடுக்கப்பட்டதா என்பதைச் சட்ட அறிவு பெற்றிருந்த பன்னிருவரின் சாட்சியத்தைக் கொண்டு முடிவு செய்து, அதன்படி வழக்கை லௌகீக விசாரணைக் குழுவிடமோ அல்லது சமயஞ் சார்ந்த விசாரணைக் குழுவிடமோ தீர்ப்புக்கு விடவேண்டும்.

லௌகீகர்கள், சட்டப்படியும் குறிப்பாகக் குற்றஞ் சாட்டுகிறவர்களும் சாட்சிகளுமிருந்தால், மேற்றிராணியாரின் நீதிமன்றங்களில் விசாரணை செய்யப்படலாம். வலிமை வாய்ந்த

குற்றவாளியை யெதிர்த்து, குற்றஞ் சாட்டுவதற்கு தைரிய மில்லாமலும் விரும்பாமலுமிருந்தால், அப்பொழுது, மேற்றி ராணியாரின் வேண்டுகோளின்படி, அக்கம்பக்கத்திலுள்ள பன்னிருவரைச் சட்டப்படி உறுதிமொழி கூறச்செய்து ஒரு குழுவாயமைத்து உண்மையைக் கூறச் செய்யலாம்.

(2) தலைமை மான்யதாரர்கள் அல்லது மன்னரின் குடும் பத்தைச் சேர்ந்த அதிகாரிகள் முதலியவர்கள் நாடு கடத்தப் படக்கூடாது, அவர்களுடைய நிலங்களையும் மன்னரின் முன் சம்மதம் பெறுமல் தடையாணைக்குட்படுத்தக்கூடாது. மன்னர் நாட்டிலில்லாமற்போனுல் மன்னரின் பிரதம நீதிபதி யின் சம்மதத்தைப் பெறவேண்டும்.

அதே கொள்கையின் அடிப்படையில், மன்னருடைய நகரங்கள், கோட்டைகள், பரோக்கள் அல்லது தனியுரிமை பெற்ற பண்ணைகள் இவைகளைச் சேர்ந்த குடியானவர்கள், தலைமைக் குருவாலோ அல்லது மேற்றிராணியாராலோ சட்டப்படி அவர்களின் அதிகார எல்லைக்குட்பட்ட குற்றங் களுக்கு மறுமொழி கூறுமாறு சொல்லப்பட்டு அவர்கள் விசாரணைக்கு வர மறுக்கும்பொழுது, அவர்கள் மீது தடை யாணை விதிக்கப்படலாம். ஆனுல், முதலில் மன்னரின் தல முக்கிய அதிகாரி தலையிடுவதற்கு மனுச் செய்யாதவரை நாடு கடத்தக்கூடாது.

(3) அதிமேற்றிராணியார், மேற்றிராணியார், மடங்கள், அரசரது தனியுரிமை பெற்ற மடாதிபதிகள் முதலியவர்களின் பதவிகளில் காலியிருக்குமானுல் அவை மன்னரின் பாதுகாப்பி லிருக்கவேண்டியதுடன், அவைகளின் வருவாயும் மன்னரிடம் செலுத்தப்பட வேண்டியதாகும்.[46]

மன்னருடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்து, திருச்சபையின் தலைமைக் குருவால் காலியான பதவிகளுக்குப் புதியவர்கள் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். தேர்தல் கூட்டம் மன்னருடைய சிறிய கோயிலில் மன்னருடைய சம்மதத்துடனும், அதற்கென மன்னரால் நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்டவர்களுடைய ஆலோசனையின்படியும் நடைபெறவேண்டும்.

பதவியில் அபிடேகம் செய்யப்படுமுன், பதவியில் அமரப் போகிறவர் தனக்கு எசமானர் என்ற காரணத்தினுல், சமயப் பிரிவைச் சார்ந்த உரிமைகளை நீக்கி, மற்றபடி உடல், பொருள், ஆவி போன்றவைகளின் எசமானரான மன்னருக்குக் கீழ்ப் படிதலுடன் அரச விசுவாசப் பிரமாணமும் எடுத்துக்கொள்ள வேண்டும்.

அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்கள், மற்றும் நாட்டின் திருச்சபையைச் சேர்ந்த எல்லாக் குருமார்களும் மன்னரிடமிருந்து மான்யமாகப் பெற்றிருப்பவைகளுக்கு, மன்னருடைய நீதிபதிகளிடமும் அதிகாரிகளிடமும் அவர்கள் வசமுள்ள மான்ய நிலங்கள்பற்றிய கேள்விகளுக்குப் பதில் கூற வேண்டியவர்கள் என்பதுடன், அரச சம்பந்தமான உரிமைகளையும் வழக்கங்களையும் பின்பற்றுவதுடன், கடைப்பிடிக்கவும் வேண்டும். மற்ற மான்யப் பிரபுக்களைப் போலவே, உயிரிழப்பு, உறுப்பு இழத்தல் பற்றிய வழக்கங்களைத் தவிர, அரசரது நீதிமன்றத்தால் அளிக்கப்படும் தீர்புகளை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

மன்னருடைய அனுமதியின்றி அதிமேற்றிராணியார், மேற்றிராணியார், அல்லது திருச்சபையைச் சேர்ந்த எவரும் நாட்டைவிட்டு வெளியேறக்கூடாது; நாட்டைவிட்டுச் செல்ல அனுமதிக்கப்பட்டவர்கள், கோரப்பட்டால், மன்னருக்கு அல்லது நாட்டிற்கு அவர்கள் வெளிநாடு செல்லுங்கால் எவ்விதத் தீமையும் ஏற்படுவதற்குத் துணைபுரியமாட்டார்கள் என உறுதிமொழி அளிக்கவேண்டும்.

(4) மறுவிசாரணைக்கான மனுக்கள் ஆர்ச்டீகனிடமிருந்து மேற்றிராணியாருக்கு அனுப்பப்பட வேண்டும்; அங்கிருந்து அதிமேற்றிராணியாருக்குச் செல்ல வேண்டும். அதிமேற்றிராணியார், நீதி வழங்குவதற்குத் தவறினால் கடைசி பட்சமாக மன்னரிடம் சமர்ப்பிக்கப்படலாம். அவ்வாறு செய்வதால், மன்னரின் உத்தரவின்படி விவாதத்திற்குரிய பிரச்சினை அதிமேற்றிராணியாரின் நீதிமன்றத்திலேயே, மன்னரின் சம்மதமின்றி மேலே செல்லாதவாறு (அதாவது, போப்பாண்டவரிடம்) முடிவு செய்யப்படலாம்.

(5) இறுதியாக, நாட்டுப்புறத்தில் உட்குடிகளின் பிள்ளைகள், அவர்கள் பிறந்த இடத்திற்கு எசமானராயுள்ள மான்யப் பிரபுக்களின் சம்மதமின்றிச் சமய வாழ்க்கையை மேற்கொள்ளுவதற்கு அனுமதிக்கக்கூடாது.

கிளாரண்டன் அரசியல் சட்டங்களின் இந்த ஷரத்துப்படி, மன்னர், மான்யப் பிரபுக்களின் நோக்கம், மான்யப் பிரபுவிற்கு அவருடைய உட்குடிகளின் ஊழியத்தைப் பெறுவதில் சட்டப்படி சொத்தாகக் கருதப்படும் உரிமையைப் பாதுகாப்பதாகும். எனினும், நடைமுறையில், மக்களில் மிகத் தாழ்மையான நிலையிலுள்ளவர் மேலும் தாழ்த்தப்பட்டவர்களாகச்

செய்ததே அதன் விளைவாயிற்று. 1166-ல் ஹென்றியால் வெளியிடப்பட்ட கிளாரண்டன் அஸ்ஸைஸ் சட்டத்திலும், மடாலயங்களில் சேருவதைத் தடை செய்யும் இந்த விதி சேர்க்கப்பட்டுள்ளது. 1391-ல் இருநூற்றாண்டுகளுக்குமேல், பாராளுமன்றத்தில் காமன்ஸ் சபை, உட்குடிகள் அவர்களுடைய குழந்தைகளைப் பள்ளிகளுக்கு அனுப்புவதைத் தடை செய்ய வேண்டுமென மனுச் செய்தது. அவ்வாறு பள்ளிக்கனுப்புவதால், திருச்சபையின் துணைக்கொண்டு முன்னேற்றமடையக்கூடும் என்றும், இதைத் தடை செய்வது, 'நாட்டிலுள்ள சுதந்திரமானவர்களின் புகழை நிலைநிறுத்துவதாகும்' எனவும் கருதப்பட்டது.[47] இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சியில், மான்யமுறை, உரிமைமுறை பற்றியதென்பதைக் காட்டிலும், ஜனநாயகக் கொள்கைக்குப் புறம்பாயும், சாதி வேற்றுமையை வெளிக்காட்டுவதாயும் அமைந்திருந்தது.

## முதலாம் ரிச்சர்ட்

முதலாம் ரிச்சர்டின் ஆட்சி, இங்கிலாந்தின் வரலாற்றில் இடம்பெறுவதைக் காட்டிலும் ஐரோப்பிய வரலாற்றில் இடம் பெறுவதாயுள்ளது. மன்னர், 'அவரால் தோற்றுவிக்கப்பட்ட காலத்தின் தோற்றமாகவும், காலத்தின் உருத்தோற்றத்தை வெளிப்படுத்துகிறவராயும் இருந்தார்.[48] அத்துடன் அவர் காலத்திய வரலாற்றில் சிறப்பான இடத்தையும் பெற்றிருந்தார்.

ரிச்சர்டு முடிசூட்டிக்கொண்டதையடுத்த நான்கு மாதங்களையும், 1194-க்குப்பின் போரில் சிறைபிடிக்கப்பட்டு விடுதலை அடைந்தபின் இங்கிலாந்தில் கழித்த இருமாதங்களையும் தவிர, அவர் ஆட்சி செய்த பத்தாண்டுக் காலம் முழுமையையும் அவர் வெளிநாடுகளிலேயே கழித்தார்.[49] பிறப்பாலும், கல்வி, இரக்கவுணர்ச்சி முதலியவற்றாலும் அவர் வெளிநாட்டைச் சேர்ந்தவராகவே இருந்தார்; இங்கிலாந்தை, ஐரோப்பாவில் அவருக்குச் சொந்தமாயிருந்த பகுதிகளின் ஓர் இணைப்பாகக் கருதியதுடன், வருவாய்க்கு மூலாதாரமான பகுதியாகவும் எண்ணினார். அவருடைய தகப்பனார் காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட வலுவான ஆட்சிமுறையின் பயனாக, மன்னரின் அதிகாரம் வெகுவாக விரிவடைந்ததோடல்லாமல், ரிச்சர்டு மன்னர் நாட்டிலேயே தங்கியிராமல் நாட்டை ஆளுவதற்குச் சாத்தியமாயிற்று.

**வரி விதிப்பு:** பாலஸ்தீனப் படையெடுப்பிற்காகவும், போரில் சிறைபிடிக்கப்பட்டுவிடுதலை பெறுவதற்காகவும்,

ஃபிரான்சுடன் போர்களைத் தொடர்ந்து நடத்துவதற்காகவும், எந்தெந்த வழிகளில் வரி வசூலிக்கக்கூடுமோ அவையெல்லாம் கையாளப்பட்டன. அதிகாரப் பதவிகளும் உயர் பதவிகளும் அதிகத் தொகையைக் கொடுக்க முன்வருகிறவர்களுக்கு மறைவின்றி அளிக்கப்பட்டன. மன்னருக்குச் சொந்தமான தனியுரிமை பெற்றிருந்த நிலங்கள் முதன்முதலில் விற்கப் பட்டன; சிறிது காலம் கழிந்த பின்னர், வல்லந்தமாகக் கைப்பற்றப்பட்டன; மான்ய முறைப்படி செலுத்தப்பட வேண்டியவை எல்லாம் கடுமையாக வசூலிக்கப்பட்டன; 'காருகேஜ்' எனும் மாற்றுப் பெயரில் பழைய டேன்கல்டு எனும் வரி விதிப்பது மீண்டும் கடுமையான முறையில் தோற்றுவிக்கப்பட்டது; நிலத்தின்மீது மட்டுமன்றி, சொந்தச் சொத்துகளின்மீதும் மிகுதியாக விதிக்கப்பட்டது. இவ் வரி விதிப்பு ஏற்கெனவே, 1188-ல்[50] இரண்டாம் ஹென்றிக்கு மான்யமாக வழங்கப்பட்ட சாலடின் டைத் எனும் பெயரால் வரி விதிப்புக்குட்படுத்தப்பட்டிருந்தது. திருச்சபையிடமிருந்த தங்கம், வெள்ளி முதலானவை கைப்பற்றப்பட்டன. அத்துடன் சிஸ்டர்ஸியன் (செயின்ட் பார்னார்டு) வகையைச் சேர்ந்த துறவிகள் எல்லோரும் அவர்களிடமிருந்த கம்பளி உரோமத்திற்குப் பெருந்தொகையைப் பாதுகாப்புப் பணமாகச் செலுத்துமாறு வற்புறுத்தப்பட்டனர்.[51] இவ்வாறு கொடுமையாகவும் முறையாகவும் விதிக்கப்பட்ட வரிகளை மக்கள் குறிப்பிடத்தக்க பொறுமையுடன் பொறுத்துக்கொண்டிருந்தனர். வில்லியம் எனும் ஒரு வழக்கறிஞரின் தலைமையில் ஏற்பட்ட லண்டன் நகர மக்களின் கிளர்ச்சி, வரிகளை எதிர்த்து ஏற்பட்டதென்பதைக் காட்டிலும், நியாயமற்ற முறையில் வரி விதிக்கப் பட்டதென்பதை எதிர்த்துத் தோன்றியதாகும். இதற்குச் செல்வந்தர்கள் 'தங்களுடைய பணத்தைப் பாதுகாத்துக் கொண்டு, வரிகளை முழுமையாக எளியோர்கள் செலுத்த வேண்டுமென உறுதி பூண்டிருந்தது' காரணமாயமைந்தது.[52] ஆனால், உண்மையான எதிர்ப்புக் குருமார்களிடமிருந்து தோன்றியது. 1198-ல் குருமார்கள் காருகேஜ் எனும் வரியைச் செலுத்த மறுத்தனர். காருகேஜ் என்பது காருகேட் (அல்லது நூறு ஏக்கர்கள்) எனும் ஒவ்வொரு நிலப்பகுதிக்கும் ஐந்து ஷில்லிங்குகள் வீதம் விதிக்கப்பட்ட வரியாகும். மன்னர், உடனடியாக ஒரு பேரறிக்கையை வெளியிட்டார். அதன்படி ஒருபுறத்தில் திருச்சபையைச் சேர்ந்தவர்களுக்குச் சாதாரண மக்கள் குற்றம் புரிந்தால் அதற்கு ஈடுசெய்ய வேண்டியதில்லை யென்றும், மற்றொருபுறத்தில் திருச்சபையைச் சேர்ந்தவர்கள் எவரும் சாதாரண மக்களுக்குத் தீங்கிழைத்தார்களானால்

அவர்களை உடனடியாகப்பரிகாரம்செய்யுமாறுகட்டாயப்படுத்த வேண்டுமென்றும் ஏற்பட்டது.[53] இவ்வறிவிப்பு, அவர்களைச் சமூகத்திலிருந்து விலக்கப்பட்டதாகச் செய்ததற்கு ஒப்பாகச் செய்ததால், மடங்களைச் சேர்ந்த குருமார்களை அடிபணியச் செய்தது. அதேயாண்டில், லிங்கனின் அதிமேற்றிராணியா ரான ஹியூக் என்பாரும் சாலிஸ்பரியின் அதிமேற்றிராணியா ரான ஹெர்பர்ட் என்பாரும் இப் பேரறிவிப்பை எதிர்த்து வெற்றிகரமாகக் கிளர்ச்சி செய்தனர். முந்நூறு நைட் வீரர்களை உதவியாக அனுப்புவதற்கும், நாளொன்றுக்கு ஒவ்வொரு வருக்கும் மூன்று ஷில்லிங்குகள் வீதம் கொடுக்கப்படுவதற்கும், ஃபிரான்சின்மன்னரான ஃபிலிப்பை எதிர்த்துப்போரிடுவதற்கு ஓர் ஆண்டுக் காலம் மன்னருடன் படையில் சேர்ந்து பணி புரிவதற்கும் மன்னர் விடுத்த கோரிக்கையை ஆலோசிப்பதற் காக ஜஸ்டீஷியரும் அதிமேற்றிராணியாருமான ஹியூபர்ட் வால்டர் என்பவர் ஆக்ஸ்ஃபோர்டில் மான்யப் பிரபுக்களைக் கூட்டிய ஆலோசனை மன்றத்தில், மேலே கூறப்பட்ட இரு மேற்றிராணியார்கள் மாத்திரம் இணங்குவதற்கு தைரியத் துடன் மறுத்தனர்; அவர்கள் மறுத்ததற்கு, அவர்களுடைய ஆதிக்கத்திற்குட்பட்டிருந்த திருச்சபை நிலங்கள், நாட்டிற் குள்ளேயே இராணுவ சேவை செய்வதற்கு மாத்திரம் கடமைப்பட்டிருந்ததே தவிர, வெளிநாடுகளிலும் சேவை புரியக் கடமைப்பட்டிருக்கவில்லை என்பது காரணமாகும்.[54] எதிர்ப்பு வெற்றி பெற்றது; மன்னருடைய கோரிக்கையும் மீளப் பெறப்பெற்றது; சிறிது காலத்திற்கெல்லாம் ஜஸ்டீ ஷியர் பதவியைத் துறந்தார்.[55]

**ஜஸ்டீஷியரின் ஆட்சி :** ரிச்சர்டு மன்னர் நாட்டில் தொடர்ந்து இல்லாதிருந்த காலம் முழுமையிலும், நாட்டின் ஆட்சிமுறை, மன்னரின் பிரதிநிதியாக அடுத்தடுத்து வந்த நான்கு ஜஸ்டீஷியர்களால் நடத்தப்பெற்றது. (1)ஈலியின் மேற்றிராணி யாரான வில்லியம் லாங்சாம்ப் ஒரு நார்மானிய அடிமைக் குடும்பத்தைச் சேர்ந்தவர்; இவர் கருவூலத் தலைவராகவும் ஜஸ்டீஷியராகவுமிருந்தார். முக்கியமானவராயிருந்த இவர் மான்யப் பிரபுக்களிடம் பொறாமையை உண்டுபண்ணினார்; மன்னரின் உரிமைகளை வன்மையாக வற்புறுத்தியதன் காரண மாக ஏர்ல் ஜான் என்பவரின் தலைமையில் கடுமையான எதிர்ப் பைத் தோன்றச் செய்தார். ஜான், அவருடைய சகோதரனின் ஆட்சிக்கு எதிராக எப்பொழுதும் சூழ்ச்சி செய்துகொண் டிருந்தார். இப் போராட்டம் 1191-ல் முடிவுற்றது. மேற் றிராணியார்கள், ஏர்ல்கள், இங்கிலாந்தின் மான்யப் பிரபுக்கள், லண்டன் நகர மக்கள் முதலியோர் செயின்ட் பால் திருக்

கோயிலில்,ஏர்ல்ஜான் என்பவரால் கூட்டப்பெற்ற கூட்டத்தில், ஜஸ்டீஷியர் பதவியிலிருந்து லாங்சாம்ப் பதவி நீக்கம் செய்யப் பட்டார். இவ்வாறு நடந்ததற்கு, சில மாதங்களுக்கு முன்னரே மெஸ்ஸினு எனுமிடத்திலிருந்து மன்னர், இரகசியமாக ஜஸ்டீஷியர் பதவிக்கு நியமனம் செய்து, தேக்கச் சூழ்நிலை ஏற்படும்பொழுது பயன்படுத்திக்கொள்ளுமாறு, ரூயன் மேற்றிராணியாரான கூட்டன்ஸைச் சேர்ந்த வால்டர் என்பாரை இங்கிலாந்திற்கு அனுப்பியிருந்ததே காரணமாகும். இதனைத் துணையாகக் கொண்டு மேற்படி கூட்டம் கூட்டப்பெற்றது.[56] 'ஆங்கிலேயரது அரசியல் சட்டத்தில் பாராளுமன்றத்திற்கு அமைச்சர்கள் பொறுப்புள்ளவர்கள் எனும் கொள்கையை வலியுறுத்தும் மிகப் பழைய எடுத்துக் காட்டாக'[57] இந் நிகழ்ச்சி வருணிக்கப்பட்டுள்ளது. எனினும், இக் கருத்து, செயின்ட் பால் திருக்கோயிலில் நடைபெற்ற கூட்டத்தின் செயலுக்கு மிக முக்கியத்துவம் அளிப்பதாகத் தோன்றுகிறது. மன்னருடைய அமைச்சர்களை அரசியல் சட்டப்படி கட்டுப்படுத்துவது எனும் கொள்கையை, நாட்டு மக்களின் பிரதிநிதிகளாக முறைபிசகாக நடித்தவர்களால் அமைக்கப்பட்ட ஒரு கூட்டத்தினரின் முரட்டுத்தனமான நிகழ்ச்சியெனக் கருதுவதே பொருந்தும்; அவ்வாறு கட்டுப் படுத்தியது முறைப்படியமைந்த பாராளுமன்றத்தால் பின்னர் உரிமை பாராட்டப்பெற்றுப் பெறப்பட்டதாகும். (2) லாங் சாம்பைப் பதவியிலிருந்து நீக்கம் செய்த மன்றம் அவருடைய வாரிசாக ரூயன் அதிமேற்றிராணியாரை ஏற்றுக்கொண்டது. 1193ஆம் ஆண்டினிறுதியில், ரூயன் அதிமேற்றிராணியாருக்குப்பின், (3) காண்டர்பரியின் அதிமேற்றிராணியாரான ஹியூபர்ட் வால்டர், ஜஸ்டீஷியரின் பதவியைப் பெற்றார். இவர், மிக்க புகழ்வாய்ந்த இவரது சிற்றப்பனாரான ரானல்ஃப் டி கிளான்வில் என்பவரால் வளர்க்கப்பட்டவர். 1198-ல் ஹியூபர்ட் வால்டர் பதவியிலிருந்து ஓய்வெடுத்துக் கொண்டபொழுது, (4) எஸ்ஸக்ஸின் ஏர்லும், ரிச்சர்டு மன்னரின் நான்காவதும் கடைசி ஜஸ்டீஷியருமான ஜியாஃப்ரே ஃபிட்ஸ்பீட்டர் என்பார் பதவியேற்றார்.

**பிரேத விசாரணை செய்கிறவர்கள்; ஆட்சி முறை வளர்ச்சி:** ஒவ்வொரு ஜஸ்டீஷியரின் ஆட்சியின்பொழுதும், சிறப்பாக ஹியூபர்ட் வால்டர், அவருக்குப்பின் பதவிக்கு வந்த ஜியாஃப்ரே ஃபிட்ஸ்பீட்டர் ஆட்சியின்பொழுதும், இரண்டாம் ஹென்றியின் ஆட்சிமுறை பாதுகாக்கப்பட்டு மேலும் முன்னேற்றமடைந்தது. உண்மையானவும் சொந்தமானவுமான சொத்து

களின் மீது வரி விதிப்பதற்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதெனும் கொள்கையை விரிவான முறையில் பயன்படுத்தியதன் வாயிலாக, மக்கள் சுயாட்சி முறையில் சிறிதுசிறிதாகப் பயிற்சியளிக்கப்பெற்றனர். 1194–ல், கௌன்டி அதிகாரிகளை நியமனம் செய்வதில் தேர்தல் முறை தோற்றுவிக்கப்பட்டது. ஒவ்வொரு கௌன்டியிலும் 'மன்னர் வழக்குகளைப் பதிவு செய்கிறவர்கள்', மூன்று நைட்வீரர்கள், ஒரு மதகுரு ஆகியவர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென உத்தரவிடப்பெற்றது.[58] இந்த ஆட்சியில் முக்கியமான மற்றோர் அம்சம், சுதந்திரத்தை நோக்கி பரோக்கள் முன்னேறியதாகும். இதற்கு மன்னர் பணம் திரட்டுவதை நோக்கமாகக் கொண்டு பரோக்களுக்குச் சாசனங்களை மிகுதியான அளவில் விற்றது காரணமாகும். சில சந்தர்ப்பங்களில், வழங்கப்பெற்ற உரிமைகள், லண்டன் நகர மக்களுக்கும் வழங்கப்பட்டதாகக் கொள்ளப்பட்டதுடன், மாநில நகரங்களுக்கெல்லாம் லண்டன் நகரம் ஓர் எடுத்துக்காட்டாக இருந்தது; அத்துடன் நகர ரீவ் எனும் அதிகாரியைத் தேர்ந்தெடுக்கும் உரிமையையும் பெற்றது.[59] லாங்சாம்ப் பதவி நீக்கம் செய்யப்பட்டபொழுது, ஏற்கெனவே நாம் அறிந்தவாறு, லண்டன் நகர மக்கள் அதற்குச் சம்மதத்தைத் தெரிவித்தனர் என்பதிலிருந்து, அவர்கள் ஒரு சாமானிய மக்களாக இருந்தனர் என ஜஸ்டீஷியராலும் மான்யப் பிரபுக்களாலும் ஏற்றுக்கொள்ளப்படுவதைப் பெற்றனர்; 'கம்யூண்' எனும் சொல்லின் பொருள் தெளிவாக இல்லை யெனினும், 'கார்ப்பரேஷன்' எனப்படும் மாநகராட்சி எனும் சொல் உணர்த்தும் கருத்திற்கு நெருக்கமுள்ளதாயிருந்தது.[60] கம்யூண் எனும் நிறுவனம் அமைக்கப்பட்டதிலிருந்து, முதன்முதலாக மேயர் எனும் நகராட்சித் தலைவரின் தோற்றமும் உண்டாயிற்றென்பதில் சிறிதும் ஐயமில்லை.

பொதுவாக நோக்குமிடத்து, சொந்தமான எவ்வித நற்பண்பினைப் பெற்றிராவிட்டாலும், ரிச்சர்டின் ஆட்சி, மக்களின் சுதந்திரம் வளருவதற்குச் சாதகமாயிருந்தது. வலிமையை அடிப்படையாகக் கொண்ட சட்டத்திற்கு மாறாக எல்லோருக்கும் ஒரே மாதிரியான சட்டம் அமல் செய்யப்படுவதற்குப் பழக்கமுள்ளவர்களானார்கள். இதற்குமுன் காணப்பெறாத வரிவிதிப்பும்கூடச் சட்டஞ் சார்ந்த வரையறைகளைக் கொண்ட தோற்றத்தை அளித்தது. ஏராளமாகப் பெறப்பெற்ற தொகைகள், இவருடைய ஆட்சிக்கு முந்திய ஆட்சிக்காலத்தில் நாட்டு மக்கள் செல்வத்தைப் பெறுவதில் முன்னேறியிருந்தனர் என்பதை விளக்கச் சான்றாகவிருந்தன. இரண்டாம் ஹென்றி

யினுல் மிகக் கடுமையாக அடக்கப்பட்ட மான்யப் பிரபுத்துவமும், முன்னிருந்ததைவிட உடனடியாக ஒழுங்குமுறையை மேற்கொண்டதாயிருந்தது. முன்பு மன்னரின் தலையீட்டைப் பொறுத்துக்கொள்ளும் பழக்கமில்லாதவர்களாய் மன்னரின் மனப்போக்கிற்குக் கீழ்ப்படிய விருப்பமில்லாதிருந்தனர்.[61] இரண்டாம் ஹென்றியின் காலத்தில் இரண்டு இனங்களும் ஒன்ருகச் சேர்ந்து கலப்பாகச் செய்யப்பட்டது, ரிச்சர்டின் ஆட்சியிலும் தொடர்ந்து மிக்க அமைதியாக நடந்தது; அத்துடன் அடுத்து வந்த ஆட்சியில், மான்யப் பிரபுக்களும் மக்களும், ஆங்கிலேய மக்களுடைய பொதுவான சுதந்திரங்களைப் பெறுவதற்கு, மன்னரை எதிர்த்து உரிமை பாராட்டியதைக் காண்போம்.

## அடிக்குறிப்பு

1. ரானல்ஃப், பேயக்ஸ் மதகுருவின் குமாரர். வெற்றி வீரர் வில்லியமுடன், உத்தரவுபெற்று இங்கிலாந்துக்கு வந்தார். டூம்ஸ்டே புத்தகத்தில் (i, 51), அவர் ஹாம்ப்ஷயரின் ஒரு சிறிய நிலச்சொந்தக்காரராகக் காணப்படுகிருர். ஒரு சமயம் அவர், லண்டன் பிஷப் (மதகுரு) மாரிஸின் சேவையில் ஈடுபட்டிருந்தார். பிறகு வில்லியம் ரூஃபஸிடம் 'சாப்ளிணுக' இருந்தார். அவர் இவரைத் தலைமை நீதிபதியாக்கினுர். 'ஆர்டரிகஸ் விடாலிஸ்', லி பிரவோஸ்ட் பதிப்பு, iii, 310; iv, 107. மாம்ஸ்பரி வில்லியம், iv, 314. R. W. சதர்ன், 'ரானல்ஃப் ஃபிளாம்பர்ட்டும் முற்கால ஆங்கிலோ-நார்மானிய நிர்வாகமும்', அரசாங்க வரலாற்றுக் குழுவின் நடப்புகள் (1933), 95—128. டேவிஸ், 'நார்மானியர், ஆஞ்சோவினர்களின்கீழ் இங்கிலாந்து', பக்கம் 78 காண்க. நீதிபதியின் அலுவலகம்பற்றி அறிய உள்ளே பக்கம் 94 காண்க. தனிப்பட்ட தனக்குரிய அலுவலகத்தை, லான்ஃபிராங்கோ, ஃபிளாம்பார்டோ அல்லது சாலிஸ்பரியின் ரோகரோ பெற்றிருந்ததாக உத்தரவோ அல்லது உத்தரவாதமோ இருப்பதாகத் தெரியவில்லை; அங்கே பல தலைமை நீதிபதிகள் இருந்திருக்கக்கூடும் (ஜோலிஃப், 'அரசியல் சட்ட வரலாறு', 192, n. 1, 196).

2. இருவகையான வளர்ச்சிகள் இப் பலனுக்கு உறுதுணையாக இருந்தன. (1) முடிசூட்டும் பழக்கம் நிலமானிய நிகழ்ச்சிகளின் சட்டத்தை நிலைநிறுத்தியது. அச் சட்டப்படி, (முக்கிய) தலைமைக் குத்தகைக்காரர் அவரது சொந்தக்

குத்தகைக்காரர்களை நடத்திச் சென்றார். (2) அக் குத்தகைக்காரர் தனக்குக் கீழ்ப்பட்ட குத்தகைக் காரர்களிடம் மேலான அரசரின் நிலமானிய உரிமைகளை நிறைவேற்ற, குறிப்பிட்ட காலம் உதவிபெற உரிமை பெற்றிருந்தார். கிளேன்வில், ix, c. 8. பண்ணை வேலை யாள்கூட அவர்களது பங்கை அளிக்குமாறு அழைத் தலும் உண்டு.

3. 'ஆர்டரிகஸ் விடாலிஸ்' (உயிர்த்துடிப்பான மூலச் சாசனம்), viii, 8. 'குருமாராயினும் சாதாரண மனித னாயினும் சரி, ஒவ்வொருவருக்கும் வாரிசுதாரராக விளங்க அவர் விரும்பினார்'. ஆங்கிலோ — சாக்ஸன் கால வரலாறு, *s. a.* 1100; ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு' i, 325. ரானல்ஃபின் முறை களுக்கு எடுத்துக்காட்டாக 1095ஆம் ஆண்டின் உத்தர வைக் காண்க (ரவுண்டின், 'நிலமானிய இங்கிலாந்து', பக்கம் 310, 'தேர்ந்தெடுத்த சாசனங்கள்', பக்கம் 109); அதில் வொர்செஸ்டர் பாதிரி இறந்ததற்கு, அவர் எல்லா வகையான குத்தகைக்காரர்களிடமும் பொரு ளுதவி செய்யுமாறு கோரினார்.

4. ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு', i, 321. முதலாம் வில்லியமும் ரூஃபசும் நிலமானியதாரர்களோடு மிக நெருங்கிக் கூட்டுறவு கொண்டனர் என்ற வேறுபட்ட கருத்தை ஜோலிஃபின், 'அரசியல் சட்ட வரலாறு', 200-ல் காண்க.

5. மாம்ஸ்பரியின் வில்லியம், 'மன்னர் செயல்கள்', 306; எட்மர், 'ஹிஸ்டோரியா நோவாரம்', பக்கம் 30; 'பொறுக்குச் சாசனங்கள்', 109.

6, மாம்ஸ்பரியின் வில்லியம், 'மன்னர் செயல்கள்', iv, § 319.

7. கீழே பக்கம் 51, குறிப்புகள் 15, 16.

8. இது அலுவலக விற்பனைபற்றிக் குறிப்பிடுவதேயன்றித் திருச்சபையின் சொத்துகளை அகற்றுவதுபற்றி அன்று. ஸ்டீஃபனின் இரண்டாவது சாசனத்தைக் கவனிக்க; உள்ளே பக்கம் 53; ஸ்டப்ஸின், 'ஆதிகால ஆங்கில வரலாற்றுச் சொற்பொழிவுகள்', பக்கம் 110. ஆனால், மெக்கக்னி, 'மகா சாசனம்', பக்கம் 97 காண்க. அவர் அதனை நீக்குதல் சம்பந்தமாகக் குறிப்பிட்டுள்ளார்.

9. தற்காலக் கருத்து ஒருமைப்பாட்டின்படி, எட்வர்டு அரசர் காலத்தில் மரண தண்டனைக்கான கட்டணங்களை ஒழுங்கு செய்யும் சட்டம் ஏதும் இல்லை. ஏனெனில், அக்கட்டணம் நார்மானியர்களது உயிர்களைக் காக்க நார்மானியரது புதிய அமைப்பாகும் (மேலே பக்கம் 83 காண்க). எனினும், நார்மானியரது வெற்றிக்குமுன் ஓர் எடுத்துக் காட்டாக இந்த அதிகாரத்தைப் (பகுதியை) (பிற கருத்து களோடு) பயன்படுத்திக்கொள்ளலாம். மேலும், டேனிஷ் காரர் கட்டணத்தை ஆரம்பித்த மூலத்தை அறியவும் இது உதவும். யென்டமாவில் உள்ள 'கொலைச் சட்டம்' விவாதத்தை, ஹார்வர்ட் சட்ட ஆராய்ச்சி, xxxvi, 146-ல் காண்க.

10. சாசனம் முழுவதும் பார்க்க, ராபட்சன், 'சட்டங்கள்', 276; 'பொறுக்குச் சாசனங்கள்', பக்கம் 117–119.

11. லிபர்மேன், 'Ueber das englische Rechtsbuch Leges Henrici' (Halle, 1901), போலக்கும் மெயிட்லாந்தும், 'ஆங்கிலச் சட்ட வரலாறு', i, 99. மூலவாசகம் B. தோர்ப்பின், 'பண்டைக் காலச் சட்டங்களும் நிறுவனங்களும்' என்ற நூலிலும், லிபர்மேனின், 'கெஸட்ஸி'என்ற நூலிலும் உள்ளது (1903). 'பொறுக்குச் சாசனங்கள்' (123—126) என்ற நூலில் இப் பகுதிகள் அச்சிடப்பட்டுள்ளன. ஆங்கில மொழி பெயர்ப்புக் கிடையாது.

12. ஆர்டரிகஸ் விடாலிஸ், 'சமய ஆட்சி வரலாறு', xi, 3.

13. ஷை ஷை. , xi, c. 2; 'பொறுக்குச் சாசனங்கள்', 114.

14. ராபர்ட்சன், 'சட்டங்கள்' என்ற நூலில் (286) உத்தரவைக் காண்க. 'பொறுக்குச் சாசனங்கள்,' 122. G. B. ஆடம்ஸ், 'அமெரிக்க வரலாற்று மீள்பார்வை', viii, 487 காண்க. 'ஆங்கில அரசனுன ஹென்றி உர்ஸன் மேற்றிராணியாரான சாம்சன், மடத்துத் தலைவர், மற்றும் ஃபிரெஞ்சு, ஆங்கிலேய மானியப் பிரபுக்களுக்கு வணக்கம் கூறுகிறார்'. இப்பேச்சுஇருகாரணங்களுக்காகக் குறிப்பிடத் தக்கதாகும். அவை (1) வெற்றிவீரனல் ஆணையிடப்பட்ட ஆன்மீக, அரசாங்க எல்லைகள் இருப்பினும், பண்டைய அமைப்பின்படி, சமயப் பகுதியின் மதகுரு ஷெரீஃபுடன் ஒன்ருகச் சேர்க்கப்பட்டார். (2) ஆங்கிலப் பெருமக்களும் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

15. G. B. ஆடம்ஸ், 'ஆங்கிலோ–நார்மானிய இங்கிலாந்தின் கழகங்களும் நீதிமன்றங்களும்' (1926), 142, 148 காண்க.

16. லண்டன் சாசனம் பிவர்லேயுக்குக் கொடுத்ததும் நியூ கேசில்-டைன் வழக்கங்களும்—'பொறுக்குச் சாசனங்கள்', 129—134 காண்க. முதலாம் ஹென்றியின் சாசனப்படி, லண்டனுக்குக் கொடுத்த ஷெரீஃபையும், முறை வழங்குவோரையும் நியமிக்கும் உரிமை போன்ற பல சலுகைகள் ஸ்டீஃபனால் கவர்ந்துகொள்ளப்பட்டன. லண்டனில் அரசியல் சட்ட வளர்ச்சிபற்றி பெடிட் டூடாலிஸ், ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாற்றுத் துணைப்பாடங்கள்', i, அதிகாரம் ix; 'பன்னிரண்டாம் நூற்றாண்டில் லண்டன்'.

17. அடிக்குறிப்பு 1 காண்க.

18. 1096-ல் வில்லியம் ரூஃபஸின் ஆட்சியிறுதியில், அரசு வழக்குகளை விசாரிப்பதற்காகச் சுற்றிவரும் கமிஷனர்களான மேற்றிராணியர் வாக்லினும் ஃபிளாம்பார்டும் எக்ஸிடருக்கும் காரன்வாலுக்கும் அனுப்பப்பட்டனர் (பீஜ்லோ, 'பிளாஸிடா ஆங்கிலோ-நார்மானிகா,' பக்கம் 69). இவ்வாறு அனுப்பப்படும் வழக்கம் ஏற்பட்டிருந்ததாகத் தெரியவில்லை; எனினும், சிறப்பான அலுவல் காரணமாக அனுப்பப்பட்டனர். கினீஸ்டு, 'இங்கிலாந்து அரசியல் சாசன வரலாறு', i, 273 குறிப்பிடுவதாவது: 'கௌன்டிகளில் துணைத் தலைவர்களின் ஆட்சி, தொடக்கத்திலிருந்தே சரிவர நடைபெறவில்லை. இதன் காரணமாக, முதலாம் ஹென்றியின் காலத்திலேயே மன்னர் நீதிமன்றத்திலிருந்து அனுப்பப்பெற்ற கமிஷனர்களால், துணைத்தலைவர்களிடமிருந்த நீதித்துறை சார்ந்த அலுவல்கள் பறிக்கப்பட்டன' என்பதுடன் பைப் ரோல், 31 முதலாம் ஹென்றி (1130) படி அன்றுமுதல் சுற்றிவரும் நீதிபதிகளை நியமிப்பது என்பது வழக்கத்தில் வந்துள்ளதும் குறிப்பிடப்பட்டுள்ளது. தொடக்கத்தில் கமிஷனர்களின் பணி நிதி சம்பந்தமானதாயிருக்கக்கூடும். எனினும், கௌன்டி நீதிமன்றத்தில் அமர்ந்திருந்ததால் நாளடைவில் நீதி வழங்குவதையும் மேற்கொண்டனர். ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 425; ஜாலிஃப், 'அரசியல் சட்ட வரலாறு', 193—194.

19. 'ஆங்கிலோ-சாக்ஸன் காலவரிசை வரலாறு', 1124E (அங்கு அமரும் காலத்தை 'கிவிடனிமுட்' என்று விவரிக்கப்பட்டுள்ளது).

20. 'ஆங்கிலோ-சாக்ஸன் கால வரிசை வரலாறு', 1135; 'பொறுக்குச் சாசனங்கள்', 115.

21. வொர்செஸ்டரின் ஃபிளாரன்ஸ், 1104; 'பொறுக்குச் சாசனங்கள்', 113; 'ஆங்கிலோ–சாக்ஸன் கால வரிசை வரலாறு', 1104, 1105, 1110, 1118, 1124 காண்க.

22. ஸ்டப்ஸின், 'அரசியல் சாசன வரலாறு', i, 266—267. ஆடம்ஸின், 'இங்கிலாந்தின் அரசியல் வரலாறு', ஹண்டும் பூலும் பதிப்பித்தது, பக்கம் 148. ஆங்கிலோ–சாக்ஸன் காலத்தில், வெற்றிக்குப்பின், நார்மண்டியிலும் இங்கிலாந்திலும் எழுந்த திருச்சபை, அரசு இவற்றின் சிக்கல்கள்; M. D. நௌல்ஸ், 'இங்கிலாந்து மடத்து முறை' என்ற நூலையும், Z. N. புருக், 'ஆங்கிலேயத் திருச்சபையும் கத்தோலிக்க மதமும்' என்ற நூலையும் காண்க.

23. 'பொறுக்குச் சாசனங்கள்', 142.

24. இந்தச் சபை முதலாக ஈஸ்டரின்போது லண்டனில் கூடியது. பின் ஆக்ஸ்ஃபோர்டுக்கு ஒத்திவைக்கப்பட்டு, அங்கு ஏப்ரலில் கூடியது. ரவுண்டு, 'ஜாஃப்ரே டி மாண்டவிலி', பக்கம் 21—22.

25. 'பொறுக்குச் சாசனங்கள்', 143—144.

26. நீயூபரோவைச் சேர்ந்த வில்லியம், 'ஆங்கில வரலாறு', i, 22; உள்ளே 139.

27. 'வெற்றிக்குப்பின் ஏற்பட்ட மிக முக்கியமான அரசியல் நிகழ்ச்சி, ரோஜர் என்ற மதகுருவைச் சிறைசெய்ததாகும். தேசத்தின் (நாட்டின்) எல்லா நிர்வாகமும் வேலைசெய்ய மறுத்தன. அரசருக்கு எதிராக எல்லா மதகுருமார்களின் அதிகாரமும் அணிவகுத்து நிறுத்தப்பட்டது. பின்னுல் பதினைந்கு ஆண்டு நடைபெற்ற உள்நாட்டுப் போருக்கு இது அறிகுறியாயிருந்தது'.—ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 352.

28. 'ஆங்கிலோ - சாக்ஸன் கால வரிசை வரலாறு' (இங்கிரேம் பதிப்பு), பக்கம் 364, 367.

29. வின்செஸ்டரில் ஏற்பாடு செய்யப்பட்ட ஒப்பந்தப் பேச்சுகள், வெஸ்ட்மின்ஸ்டரில் ஒழுங்கு செய்யப்பட்டன; 'பொறுக்குச் சாசனங்கள்', 141.

**30.** தேசிய முன்னேற்றத்தையும் நல்ல அரசாங்கத்தையும் மீண்டும் பெறுவதற்காக எல்லாச் சீர்திருத்தங்களேயும் தன்னுள் அடக்கியுள்ள ஒரு திட்டம், ஸ்டீஃபன், ஹென்றி ஆகியவர்களால் நடைமுறைக்குக் கொண்டுவரும்படி தயாரிக்கப்பட்டுள்ளதாகப் பிற்காலக் காலவரிசை வரலாறு விளக்குகின்றது. அதில் மானியப் பிரபுக்களால் மேற்கொள்ளப்பட்ட அரசாங்க உரிமைகளே, மன்னர் மீண்டும் ஏற்றதும், படையெடுப்பினரால்அபகரிக்கப்பட்ட பண்ணைகளே (எஸ்டேட்டுகள்) அவற்றின் சொந்தக்காரர்களிடம் மீட்டுத் தந்ததும், வறுமைமிக்க விவசாயிக்கு அரசாங்கப் பணவுதவி தரும் திட்டத்தின் மூலம் விவசாயம் புத்துயிர் பெற்றதும், மதகுருக்களின் உரிமைகளே நிலேநாட்டியதும், ஷெரீஃபின் அதிகார எல்லேயைப் புதுப்பித்ததும், அவர் தம் அலுவலகத்துக்கு எச்சார்புமற்ற ஆள்களே நியமித்ததும், நீதியைக் கண்டிப்புடன் நிர்வகித்ததும், வியாபாரத்தை உற்சாகப்படுத்தியதும், நாணயச் செலாவணியின் சீர்திருத்தமும் சேர்க்கப்பட்டுள்ளன. ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 360.

**31.** ஹென்றி, தன் தந்தையிடமிருந்து மரபுரிமையாக ஆஞ்சௌ, டூரைன் என்பவற்றையும், தாயின் உரிமையால் நார்மண்டி, மெய்ன் என்பவற்றையும், ஃபிரான்சு தேச ஏழாம் லூயியால் நீக்கப்பட்ட எலிநார் என்ற மனேவியின் மூலம் ஏழு மாகாணங்களான பாய்டௌ, செயின்டவ், ஆவென், பெரிகார்டு, லிமோசின், அங்கோமாய்ஸ், கியென் ஆகியவற்றையும் பெற்ருர். ஸ்டப்ஸ், 'பீட்டர் பரோ பெனிடிக்ட்'டின் முன்னுரையை மேலும் கவனிக்க (ரோல்ஸ் வரிசை), vol. ii.

**32.** ஃப்ரீமென், 'ஆங்கில அரசியல் சட்ட வளர்ச்சி', 72 காண்க. 'இரண்டாம் ஹென்றியின் தனிப்பட்ட நிலேயானது, ஐந்தாம் சார்லஸ் மாமன்னரின் (சக்கரவர்த்தி) நிலேயைக் கிட்டத்தட்ட ஒத்ததாகும். அதாவது, ஓர் இளவரசர், பல தனிப்பட்ட அரசுகளே, அவற்றில் ஏதேனும் ஒன்றுடன் கூடத் தேசியத் தொடர்பின் அடையாளமின்றி அரசாள்வதாகும். ஹென்றி, இங்கிலாந்து, நார்மண்டி, அக்விடெய்ன் நாடுகளே ஆண்டார். ஆனல், அவர் ஆங்கிலேயருமல்லர்; நார்மானியருமல்லர்; கேஸ்கானியருமல்லர்'. Ibid., 177.

**33.** 'ஆஞ்சிவியன் குடும்பம் பொதுவாகப் பிளான்டாஜனட்ஸ் என்றழைக்கப்பட்டனர். ஆனல், பதினேந்தாம் நூற்

ருண்டுவரை அப் பெயர் குடும்பப் பெயராக வழங்கப்பட வில்லை'.—Ibid., *176*.

34. 'நாட்டின் சட்டங்கள்'—சுதந்திரங்களடங்கிய சாசனம், பக்கம் 4; 'பொறுக்குச் சாசனங்கள்', 158.

35. 'அரசியல் சட்டத்தில், தங்கள் சொந்தத் தனித்தன்மையை நிலையான முத்திரையாக விட்டுச்சென்ற மூன்று பேரரசர் களில் இரண்டாம்ஹென்றி முதன்மையானவர். எதைஅவர் மீண்டும் ஒழுங்குபடுத்தினரோ அதை முதலாம் எட்வர்டு விளக்கப்படுத்தி முடிவுறச் செய்தார். எட்டாம் ஹென்றி யிடம் உருவகப்படுத்தப்பட்ட டூடர்களின் கொள்கை யானது, அச் சட்டத்தின் முழுக் கருத்தை, மிக உயர்ந்த அளவு சோதித்துப் பார்த்தது. இம் மூன்று அரசர்களில் ஒவ்வொருவரும் ஒரு வன்மையான தனிச்சிறப்புள்ள பண் பினைப் பெற்றிருந்தனர். அவர் நடவடிக்கை எடுத்த ஒவ்வோர் அரசியல் செய்தியிலும், அவரது தனிப்பட்ட பண்பு நிரந்தரமாகவும் வெளிப்படையாகவும் தோன்றும் நிலையைக் காணலாம்'. ஸ்டப்ஸ், 'அரசியல் சாசனவரலாறு', i, 483. மேலும், போலக்கும் மெயிட்லந்தும், 'ஆங்கிலச் சட்ட வரலாறு', i, 136 காண்க. இவர்கள் ஆட்சிக் கால நீதிச்செயல்களைப் பின்னோக்கிக் காண, மெயிட்லந்து, 'அரசியல் சட்ட வரலாறு', பக்கம் 10—14 காண்க.

36. பெனிடிக்ட் அப்பாஸ், 1, 5. பதினைந்து ஷரத்துகளில் அடங்கிய ஆணையர்களுக்கான கருத்துத் தொகுப்புக் கட் டளைகள், 'தேர்ந்தெடுக்கப்பட்ட சாசனங்களில்' கொடுக்கப் பட்டுள்ளன (175) (போட்லெய்ன் சுவடிகள், ராவின் ஸன், C. 641-லிருந்து). சில மூலநூலின் சேர்க்கைக்கும், இந்தக் கையெழுத்துப் பிரதியின் நகலுக்கும் 'அரசன்முன் முறையீடுகள்' என்ற நூலின் (செல்டன் குழு, ஸ்டென்டன் மாதரசி பதிப்பித்தது) i, 151—154 காண்க. 'இத்தகைய (தருணத்தில்) சமயத்தில் அவர்களது அலுவலகங்களி லிருந்து நீக்கப்பட்ட ஷெரீஃபுகள் பெரும்பாலும் உள்ளூர்ப் பெருமக்களாவர். அவர்களுடைய எதிர்ப்புக்கான வாய்ப் பும், நீதிநிலமானிய நிர்வாகம்பற்றி அறிந்துகொள்ளும் ஆசையும் மிக அதிகமாக இருந்தன. அவர்களுக்குப் பதிலாக, ஹென்றி கருவூல அதிகாரிகளை ஏற்படுத்தி, பொருளால் அவர்கள் மாகாணங்களுடன் குறைந்த தொடர்பு கொள்ளுமாறு செய்து, அரச செல்வாக்குக்கும் மிக ஒத்துச்செல்வதோடு, மிகத் திறமையுள்ள நிர்வாகிக ளாக அவர்களை அமைத்தார்' (கீழே காண்க).

37. நியூபரோவைச் சார்ந்த வில்லியம், ii, விதி 1, 'பொறுக்குச் சாசனங்கள்', 151; ராபர்ட் டி மான்டி, s.a. 1155 பதிப்பு. ஹௌட், 'ஸ்டீஃபன், இரண்டாம் ஹென்றி, முதலாம் ரிச்சர்டு' (ரோல்ஸ் தொகுப்பு) முதலியோர் ஆட்சியின் காலவழி ஏடு' iv, 183. புதிய நாணய முறைபற்றி பெனி டிக்ட் அப்பாஸ், i. 23, s. a. 1180. ஆனால், ஹென்றி, ஸ்டீஃபனால் தோற்றுவிக்கப்பட்ட பிரபுத்துவங்களை, சில இடங்களில் கூறப்படுவதுபோல், அழிக்கவில்லை. ரவுண்டு, 'ஜெஃப்ரே டி மெண்டவில்லி', 274 முதல் காண்க.

38. 1166-ல் மான்யப் பிரபுக்களின் சாசனம் என அழைக்கப் படும் இவை ஜே. எச். ரவுண்டு எழுதியுள்ள, 'நிலமான்ய முறை இங்கிலாந்து', 236 முதல் ஆய்ந்துரைக்கப்பட் டுள்ளது; எஃப். எம். ஸ்டென்டன், 'இங்கிலாந்து நில மானிய முறையின் முதலாம் நூற்றுண்டு', 136 முதல் காண்க.

39. ஹென்றியின் முதல் அமைச்சர்களாக, அதிமேற்றிராணி யார் தியோபால்ட் (சச்சரவுக் காலங்களின் பிற்பகுதியில் அரசியாரின் நலன்களைக்கருதுவதில் உறுதியுடனிருந்தவர்), வின்செஸ்டரின் (பிளாய்) மேற்றிராணியாரான ஹென்றி ஈலியைச் சேர்ந்த நைஜல் (இவர் குடும்பப் பிரதிநிதியும், முதலாம் ஹென்றியின் நீதித்துறை முதல்வரும், சாலிஸ்பரி யைச் சேர்ந்த ரோஜருக்கு அரசியல் பயிற்சி அளித்தவரு மாவார்); லீஸ்டர் ஏர்ல், ராபர்ட் டி பௌமான்ட், ரிச்சர்டு டி லூஸி (வின்ட்ஸர், லண்டன் கோட்டைகளின் ஆட்சியை உடையவராயும், சமாதான காலத்தில் ஸ்டீஃபனின் ஆட்சி யிறுதி ஆண்டிலும், ஹென்றியின் ஆட்சியில் முதல் இருபத் தைந்து ஆண்டுக் காலமும் நீதித்துறைத் தலைவராய்ப் பணியாற்றியவர்) ஆகியோர் இருந்தனர். அடுத்துச் சற்றுக் கீழான பதவியில் தியோபால்டின் சீடரும், பின்னர் அதிமேற்றிராணியானவரும், கொள்கைக்காக உயிர்த் தியாகம் செய்தவருமான தாமஸ் பெக்கெட் இருந்தார்.' ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 486. 1180-ல் ஜஸ்டீஸியராக டி லூஸிக்குப்பின் ரானல்ஃப் ஃபிளாம் பார்டு என்பவர் பதவியேற்றுர். இவர் காலத்தில் புகழ் வாய்ந்த (ஆனல், ஊர்பேர் தெரியாத) கட்டுரை ஒன்று எழுதப்பெற்றது.

40. ஹென்றியின் சட்டம், ஆட்சி சார்ந்த சீர்திருத்தங்கள் பற்றி முழுமையான விவரங்களுக்கு அதிலேயே அதிகாரம் 3ஐக் காண்க.

41. ராபர்ட் டி மாண்டே, *s.a.* 1159; காண்டர்பரி கர்வாஸே, i, 167; 'பொறுக்குச் சாசனங்கள்', 152. கேடயவரி இரண்டாம் ஹென்றியால் தோற்றுவிக்கப்பட்டதன்று. முதலாம் ஹென்றியின் ஆட்சியிலேயே சில சமயங்களில் இராணுவச் சேவை புரிவதற்கு ஈடாகக் குறிப்பிட்ட தொகையைச் செலுத்துவது அனுமதிக்கப்பட்டிருந்தது. லௌகீக மான்யத் தலைவர்கள் நேரிடையாக இராணுவச் சேவை புரிவதை இரண்டாம் ஹென்றி கோரினுர். ஆனல், திருச்சபைகளும் இடைப்பட்ட மான்யதாரர்களும் நைட்வீரரின் கட்டணத்தில் இரண்டு மார்க்குகள் விகிதம் பணியீடாகத் தொகை செலுத்த அனுமதிக்கப்பட்டனர். போலக்கும் மெயிட்லந்தும், 'ஆங்கிலேயச் சட்ட வரலாறு', வால். i, பக்கம் 266 முதல்; ரவுண்டு, 'நிலமானிய முறையில் இங்கிலாந்து', பக்கம் 262 முதல்; ஜே. எஃப். பால்ட்வின், 'இங்கிலாந்தில் கேடய வரியும் நைட்வீரர் பணியும்' (சிகாகோ, 1897). 'இப்பொழுது மானியமுறையில் மன்னரின் அதிகாரம் மீண்டும் நிலைபெற்றது. அதனுலே பதிமூன்றும் நூற்ருண்டில் ஸ்கூட்டேஜ் என வழங்கப்பட்ட கேடய வரி அரசியல் சட்ட அடிப்படையில் விதிப்பதற்கான வழி கோலப்பட்டது'.—ஸ்டென்டன், 'ஆங்கிலேய நிலமானிய முறை', 185.

42. பெனிடிக்ட் அப்பாஸ், i, 278; ஹோவ்டன், ii, 261; 'பொறுக்குச் சாசனங்கள்', 183-4.

43. 'அவை கொடுங்கோன்மையையோ அல்லது திருச்சபையைச் சார்ந்த ஒருவர்மீது லௌகீக முறையில் பகைமையையோ குறிப்பிடுவன அல்ல; அவை ஆட்சிமுறைச் சீர்திருத்தத்தின் அடிப்படையில் ஏற்பட்ட திட்டத்தின் ஒரு பகுதியாகும். இதனுல் லௌகீக, சமயஞ் சார்ந்த இரு வலிமை வாய்ந்த சக்திகளுக்கிடையே விவாதத்திற்குரிய பகுதி பொது நீதியின் எல்லைக்குள் கொண்டுவர வழிகோலியது என்பதுடன், தொழில் காரணமாக ஏற்பட்ட போட்டியில் சட்டத்தை மீறுவதையும் தவிர்த்தது'. —ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 503.

44. அரசியல் சட்டத்தின் மூலத்தை ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', 163–7-ல் காண்க. ஆய்வுக்குப் போலக்கும் மெயிட்லந்தும், i, 447 முதல் காண்க; மெயிட்லந்து, 'இரண்டாம் ஹென்றியும் குற்றவாளிகளும்', ஆங்கிலேய வரலாற்று மீள்பார்வை, vii, 224 முதல்; 'இங்கிலாந்து

திருச்சபையின் புனிதமான சட்டங்கள்', மீண்டும் வெளியிடப்பட்டது, 132 முதல்; Z. N. புரூக், 'ஆங்கிலத் திருச்சபையும் போப்பாண்டவர் ஆட்சியும்', அதிகாரம் xiii; ஏ. எல். பூல், 'குற்றவாளிகளுக்குத் தண்டனையாக நாடு கடத்தப்படுதல்' ('ஜேம்ஸ் டெயிட்டைக் கௌரவிக்கும் முறையில் எழுதப்பட்ட கட்டுரைகள்'), 'ஆங்கிலேய வரலாற்று மீள்பார்வை', li, 215.

45. இது திருச்சபைக்கு அளிக்கப்படும் ஆதரவு, உண்மையான சொத்துடன் ஒன்றாகச் சேர்க்கப்படுவதற்காக மேற்கொண்ட நடவடிக்கையை முற்றுப்பெறச் செய்தது; எச். பாமர், 'இங்கிலாந்தில் இஜின்கிர்சென்டம்' (ஃபெஸ்ட் கபே ஃபர் லீபர்மான்); எம். டி. நோல்ஸ், 'இங்கிலாந்தில் துறவிகள் சமூகம்', c. xxxiv.

46. இவ்வுரிமையின் எழுச்சி, தீய முறையில் கையாளப்படுதல் முதலியவைபற்றி எம். டி. நோல்ஸ், 'இங்கிலாந்தில் துறவிகள் சமூகம்', 612.

47. 'ரோடுலி பார்லிமென்டோரம்', iii, 294 (அரச அங்கீகாரம் மறுக்கப்பட்டது); ஹாலம், 'இடைக்காலங்கள்', iii, 181.

48. ஸ்டப்ஸ், 'இட்டினிரேரியம் ரிகார்டி பிரைமி' (ரோல்ஸ் வரிசை), xi.

49. நீஸ்டின், 'அரசியல் சட்ட வரலாறு', i, 294 கூறுவதாவது: 'இங்கிலாந்தில் நைட்வீரர்கள் எளியோருக்குத் துணை புரியும் வகையில் வீரச்செயல்கள் புரிந்தது, ஒரு சில மாதங்கள் தடைப்பட்டிருந்ததைத் தவிரத் தொடர்ந்து காணப்பட்டது, நன்கமைக்கப்பட்ட உள்நாட்டு ஆட்சி தடையின்றி நடைபெறுவதற்கு மிக்க உதவியாயிருந்தது.'

50. சாலடின் வரி (பொ. சா., 189) விதிப்பதற்கு ஜங்கம சொத்துகளும் உட்படுத்தப்பட்டன என்பது முதல் தடவையன்று. 1166-ல் புனித நாட்டின் விடுதலைக்காக ஒவ்வொருவரும் அவரது ஜங்கம சொத்து மதிப்பில் பவுனுக்கு ஒரு பென்னி விதம் உதவித்தொகை அளிக்குமாறு கோரப்பட்டனர். டேவிஸ், 'நார்மானியர், ஆஞ்சவின்கள் ஆட்சியில் இங்கிலாந்து', பக்கம் 271.

51. பெனிடிக்ட் அப்பாஸ், ii. 90; வரி விதித்தல் பற்றிய பல்வேறு வகைகளுக்கு ஹோவ்டன், iii, 210, 240, s. a. 1193—1194; 'பொ. சா.', 244–6ஐக் காண்க.

52. ரோஜர் ஹோவ்டன், iv, 5, *s. a.* 1196. பணக்காரர், ஏழை என்று கருதப்படாமல் சமமாகத் தலைவரியைப் போன்று டல்லேஜ் வரி விதிக்கப்பட்டது. குடிமகனுடைய சொத்தின் அடிப்படை விகிதத்தில் வரி விதிக்கப்பட வேண்டுமென ஃபிட்ஸ்-ஆஸ்பர்ட் விரும்பினர்.

53. ரோஜர் ஹோவ்டன், iv, 66; 'பொ. சா'., 251.

54. 'விடா மாக்ன செயின்ட் ஹியூக்னேஸிஸ்', பக்கம் 248; 'பொ. சா'., 248.

55. 'இந்நிகழ்ச்சி அரசியல் சாசன வரலாற்றில் முக்கியத்துவம் வாய்ந்தது; மன்னர் பணத்திற்காக விடுத்த கோரிக்கையைச் சட்ட அடிப்படையில் எதிர்த்த இது இரண்டாவது தடவையாகும்; அத்துடன் வெற்றியும் கிட்டியது. தோல்வியுற்றதன் காரணமாக அமைச்சர் பதவி துறந்தார் என்று கருதும்பொழுது, இக்காலத்திய வழக்கத்திற்கு முன்னோடியாய் அமைந்தது எனக் கருதுவது வலிந்து கொள்ளுவதாகும்'.—ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 548. வரிவிதித்தலில் மன்னருக்கு எதிராகத் தோன்றிய முதல் சம்பவம் என ஸ்டப்ஸ் கூறுவது (பக்கம் 500) இரண்டாம் ஹென்றி ஷெரீஃப்பு உதவித் தொகையான 'ஆக்ஸிலியம் வைஸ்கோமிடிஸ்' என்பதையும் அரசாங்கத்தின் வருவாயோடு சேர்த்து எண்ணியதை எதிர்த்து பெக்கட் மறுப்புத் தெரிவித்ததாகும். ஸ்டப்ஸ் இதை டேன்கெல்ட் எனத்தவறுகக் கொண்டார். 'பொ.சா.', 152; ரவுண்டு, 'நிலமானிய முறையில் இங்கிலாந்து', 497—502.

56. பெனிடிக்ட் அப்பாஸ், ii, 213, *s. a.* 1191; 'பொ. சா'., 245.

57. ஹாலம், 'இடைக்காலங்கள்', ii, 325. ஆட்சிமுறை வரலாற்றில் இக்காலத்திய ஆய்வுகளின் பயன்களையும் கொண்ட இந்நிகழ்ச்சியின் மதிப்புள்ள முழு விவரங்களை அறிய ஜோலிஃப், 'அரசியல் சட்ட வரலாறு', 229—235ஐக் காண்க.

58. 'காபிடுலா பிளாஸிடொரம் கொரனே ரெஜிஸ்', தலைப்பு 20; 'பொ. சா.', 254. கொரனர் எனும் அதிகாரப் பதவியின் தோற்றம் இதிலிருந்து ஏற்பட்டதா அல்லது 1194-க்கு முன்னரே இருந்ததாவென்பது பற்றி கிராஸ், 'கொரனர்களின் வரிசை' (செல்டன் கழகம்); ஐ. எல். லாங்பீன், 'கொரனரும் ஜூரியின் அறிவிப்பும்', கொலம்பியா சட்ட மீள்பார்வை, xxxiii, 1329ஐயும் காண்க.

59. லிங்கன் நகருக்கு முதலாம் ரிச்சர்டு வழங்கிய சாசனம், 1194, ரைமர், i, 52-லும், 'பொ. சா'., 261-லும் காண்க.

60. பெனிடிக்ட் அப்பாஸ், ii, 214, *s. a.* 1191; 'பொ. சா'., 245. இக் காலக் கருத்துப்படி, நகராட்சி நிறுவனங்களாக எந்த பரோவும் குறிப்பிட்டு இணைக்கப்படவில்லை. ஆரும் ஹென்றியின் காலத்திற்குப் பின்னர்தான் இவ்வாறு நிகழ்ந்தது — மெரிவீடரும் ஸ்டீஃபன்ஸனும், 'பரோக்கள்', வால். i, முன்னுரை. ரௌண்டு, 'லண்டன் நகரக் கம்யூன்', பக்கம் 245-ல், லண்டன் நகராட்சியமைப்பிற்கு ரூவன் நகராட்சியமைப்பு மாதிரியாயிருந்ததெனக் கருத்துரைக்கிறார். 'ஜான் மன்னராட்சியில் லண்டன் நகராட்சி இணைப்பு', மிஸ் பேட்ஸன் எழுதியுள்ளதைக் காண்க ('ஆங்கிலேய வரலாற்றுப் பரிசீலனை', xvii, 480 முதல்). இப்பிரச்சினைபற்றிச் சுருக்கமாய் அறிய பெடிட் டூடாலிஸ், 'ஸ்டப்ஸின் அரசியல் சாசன வரலாற்றின் அனுபந்தக் கட்டுரைகள்' எனும் நூலைக் காண்க, i, 96 முதல். கம்யூன் எனும் ஃபிரெஞ்சு நிறுவனம், 'மக்கள் கூட்டத்தின் மாபெருந் தலைவன்' என வரையறுக்கப்பட்டுள்ளது. ஆங்கில நிறுவனங்களுடன் அது ஒப்பிடப்பட்டுள்ளது. ஜே. டெயிட், 'இடைக்கால ஆங்கிலேய பரோ', 159 முதல்.

61. ஒரு நவீன எழுத்தாளர் கூறியுள்ளது போல், '1191-ல் ஏற்பட்ட குழப்பம் மானியப் பிரபுக்கள் அரசியலில் தலையிடுவதைச் சுட்டியது. தலையீட்டினர், நிலக்குத்தகை ஒப்பந்த அடிப்படையில் தனி நபர்களாயிராமல் அரசாட்சியைக் குறைகூறுகிறவர்களாயும், நேரில் ஆட்சியில் பங்கு கொள்ளுகிறவர்களாயும் இருந்தனர். ஒருவிதத்தில் 1215-ல் ஏற்பட்ட பெருமுயற்சிக்கு இது வழிகாட்டியாயுமிருந்தது'.—ஜோலிஃப், 'அரசியல் சட்ட வரலாறு', 237.

# 4. மகாசாசனம்

ஆங்கிலேய அரசியலமைப்பு வரலாற்றில் மூன்று சிறப்பான அரசியல் பத்திரங்கள் கலங்கரை விளக்குப் போன்று சிறப்புடன் திகழ்கின்றன. இவை மன்னருக்கும் மக்களுக்குமிடையே ஏற்பட்ட அடிப்படை ஒப்பந்தங்களைப் போன்றவையெனக் கருதுவது மரபாகும். மகாசாசனம், உரிமை விண்ணப்பம், உரிமைகள் மசோதா என அழைக்கப்படும் மூன்றும் ஆங்கிலேய அரசியலமைப்பின் மறைநூலாகும் எனச் சாத்தம் பிரபு கூறுகிறார். பதின்மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாயோ அல்லது பதினேழாம் நூற்றாண்டைச் சேர்ந்ததாயோ உள்ள இப் பத்திரங்கள் ஒவ்வொன்றிலும், புதிதாக ஒன்றையும் சேர்த்துக் கூறாமலிருக்கும் தன்மையைக் காணலாம். ஒவ்வொரு பத்திரமும் பழமையானவும் ஏற்கெனவே உள்ளனவுமான உரிமைகளையும் சுதந்திரங்களையும் வற்புறுத்திக் கூறுவதுடன், மக்களது மிகப் பழமையான சுதந்திரங்களின்மீது மிகையாகவும் புதியவாகவும் தோன்றியனவான மனக்குறைகளைத் தீர்ப்பதில் முனைந்து காணப்பெற்றது.[1] தவிர, பழமை இயல்புகளுடன் தாராளமான அவாக்களைக் கலந்து செயல்படுத்துவதிலும், பின்வரும் தலைமுறையினருக்கேற்ப அரசியல், சமூகத் தேவைகளின் மாற்றங்களுக்குகந்தவாறு பொருத்தமாகச் செய்வதிலும், முறையாக வளர்ச்சி பெறுவதற்கான ஆற்றலைப் பெற்றிருப்பதிலும், இப் பத்திரங்களின் தனிச்சிறப்புக் காணப்பெற்றது; அத்துடன் ஆங்கிலேய அரசியல் சட்டத்திற்கு உறுதியான பாதுகாப்பாயும் இருந்தன[2].

உயர்குடி மக்களின் கோரிக்கைகள், மிக்க நிதானமாயும், நடைமுறைக்கேற்பனவாயும், பழமையில் தோய்ந்ததனவாயும்

இருந்தனவென்பது குறிப்புடன் நோக்கத்தக்கதாம். மகா சாசனம் உண்மையில், மன்னருக்கும் அவருக்கெதிராகப் போர் நோக்குடன் எழுந்த மக்களுக்குமிடையே உண்டான சமாதான ஒப்பந்தமேயாகும். பழமையான உரிமைகளையும் சுதந்திரங்களையும் வரவொப்பந்தம் பெறுவதில் மன்னரை அச்சுறுத்திப் பெற்றபோதிலும், இவைகள் மன்னரது சாசனத்திலிருந்து தாமாகவே தோன்றுவது போல் குறிப்பிடப்பட்டிருந்தன. சாசனப் பத்திரம் மன்னரது 'கொடையாக' மாத்திரமன்றி 'உறுதிப்படுத்தலாகவு'மிருந்தது. இச் சொற்கள் சட்டப்படி புதிதாகச் சொத்து மாற்றஞ் செய்து பிறருக்கு உரித்தாக்குதல் எனும் முறையில் மிக்க சக்தி வாய்ந்தவையாக ஆகிக்கொண்டிருந்தன. 'மொத்தத்தில் புதிதாக ஏதும் சிறிதளவுகூடப் பத்திரத்தில் காணப்படவில்லை. அது மறுவாழ்வளிப்பதாயிருந்தது. ஆட்சியின் இறுதியாண்டுகளில் மன்னர் ஜான் சட்டத்தை மீறிக்கொண்டிருந்தார். எனவே, சட்டத்தை வரையறுத்து எழுத்து வடிவில் அமைக்கவேண்டியதாயிற்று'.[3]

**அதன் அரசியல் கருத்துகள்:** மிக முக்கியமான இப் பத்திரத்தை, மிக்க நேர்மையான கொள்கையைக் கொண்டதாயும், பத்தி நிறைந்த வாக்குமூலமாயும், அக் காலத்தில் வாழ்ந்த மிக்க செல்வாக்குடையோருக்கு மகிழ்ச்சியூட்டுவதாயும் நாம் கருதுவோமானால், பத்திரம் ஏற்பட்ட காலத்தில் மக்கள் கொண்டிருந்த கருத்தை நாம் பெற்றவர்களாவோம். அவர்கள், மன்னருக்கும் மக்களுக்குமிடையே நல்லுறவை வளர்ப்பதற்கான கொள்கைகளை எழுத்து வடிவிலமைக்கும் முயற்சியாகக் கருதினர். தொன்றுதொட்டே, பொது விவகாரங்களைப் பற்றிய நிலைமைகளை இதுபோன்று அவ்வப்போது நுணித்துப் பார்த்தல் எனும் முயற்சிகள் நடைபெற்றுள்ளன. அவைகளில் சில தத்துவ அடிப்படையிலும், சில கருத்தமைப்பாகவும், மற்றும் சில கோட்பாடுகளைக் கொண்டும் இருந்தன. அவை இக்காலத்திய அரசியல் நூலுக்கு அடிப்படையாயமைந்தன. வேறு சில, கோட்பாடுகளைப் புறக்கணித்து, துரைத்தனக் கலையில் நடைமுறையில் காணும் தொல்லைகளை ஆய்ந்து முடிவு காண்பதில் முனைந்தன. சாசனப் பத்திரம், கடைசியாகக் கூறிய இனத்தைச் சேர்ந்ததாகும். கோட்பாடுகளோ அல்லது புரட்சிகரமானவையோ எதுவும் பத்திரத்தில் இல்லை. துரைத்தனம் பற்றிய தெளிவற்ற கருத்துகளுடைய அறிக்கையுமில்லை. பத்திரம், மன்னருக்கும் அவரது குடிகளுக்குமிடையே வலியுறுத்தப்பெற்ற செயல்முறைக்கொப்பான உரிமைகளையே கொண்டிருந்தது. அத்துடன் மானிய நிலவுரிமைப்படி இடை

மானியப் பிரபுக்களுக்கும் அவர்களது துணைக்கீழாள்களுக்கு மிடையே இயற்கையில் ஏற்பட்ட துணைமுடிவைக் குறிப்பதாயு மிருந்தது.

**முடிசூட்டு விழா உறுதிமொழி:** இக் கருத்தின்படி கொள்வோ மானல், சாசனப் பத்திரம், இதற்குமுன் தொடர்ந்து நிகழ்ந் தவைகளின் விளைவாகும். மன்னரது நிலையை வரையறுத்தலில், முடிசூட்டு விழாவின்பொழுது புதிய மன்னருக்குப் பக்தி நிறைந்த உறுதிமொழியைக் கொடுக்கும் முறை வழக்கத்தில் முதன் முதலாகக் காணப்பெற்றது. முடிசூட்டு விழாவை யொட்டிய சடங்குகளின் வரலாறு[4] கான்டர்பரியின் அதிமேற் றிராணியாராயிருந்த டன்ஸ்டன் அடிகளாரின் காலத்திலிருந்து தொடர்ந்து காணப்படுகிறது. 960ஆம் ஆண்டு வாக்கில் துரைத்தனம் பற்றி அரசன் மூன்று கட்டளைகளை இடுவதாக எதிர்பார்க்கப்பெற்றது.[5] 973-ல் இக் கட்டளைகள் முடிசூட்டு வதற்கும் புனித எண்ணெயைத் தடவுவதற்கும் முன்ன தாகவே செய்யப்பட்ட உறுதிமொழிகளாக மாறின. அடுத்து வந்த நூற்றுண்டில் இவ்வுறுதிமொழி சிம்மாதனமேறும் பொழுதெல்லாம் தனிச்சிறப்புள்ள சூழ்நிலைக்கேற்ப விரிவாக்கப் பெற்றது. வழக்கமான முடிசூட்டு விழா உறுதிமொழியுடன், வெற்றி வேந்தர், வேறு பல உறுதிமொழிகளையும் மேற் கொண்டுள்ளார்.

**முந்திய சாசனங்கள்:** இது போன்ற மேற்கொள்ளல்கள் மிகவும் முக்கியமானவையாகக் கருதப்பட்டனவென்பது, முடி சூட்டு விழாவின்போது (சடங்குகளின் ஒரு பகுதியாகக் கருதப் படாவிட்டாலும்) அல்லது வேறு சமயங்களில், சில மன்னர்கள் விரிவான ஒப்பந்தங்களை ஏற்படுத்தி அவைகளையும் சேர்த்துப் பிற்சேர்க்கையாக்கப்பட்டதிலிருந்து நன்கு தெரியவருவதாகும். கான்யூட் மன்னரின் சாசனம்[6] வழக்கமாகச் செய்யப்படும் உறுதிமொழி என்ற அளவில் மகாசாசனப் பத்திரத்தில் காணப்படுவதையே கொண்டதாயிருந்தது. (எனினும், இது ஒரு கடித வடிவில் அமைந்திருந்தது.)

பதவிக்கு வந்தவுடன் வெற்றி வேந்தரான வில்லியம் என்பார் லண்டன்வாழ் மக்களுக்குப் புகழ்வாய்ந்த தமது சாசனத்தை அளித்தார்.[7] வில்லியம் ரூபஸ் மன்னர் எவ்விதச் சாசனத்தையும் வெளியிடாதிருந்தும், அவருக்குப்பின் பட்ட மெய்திய முதலாம் ஹென்றி அவரது தந்தையின் வழியைப் பின்பற்றி 1100-ல் முடிசூட்டு விழாச் சாசனம் என முறைப்படி வழங்கப்பெறும் பத்திரத்தை வெளியிட்டார்.[8] இப் பத்திரம்

மிக்க முக்கியத்துவம் வாய்ந்திருந்தது ; மகாசாசனப் பத்திரத்திற்குக் காலத்திஞல் முந்தினதாயும் நேர்மாதிரியாகவும் இது இருந்தது. மன்னர் ஸ்டீபன் இரு முடிசூட்டு விழாப் பத்திரங்களை வெளியிட்டார். இரண்டாம் ஹென்றி ஒரு சாசனத்தை வெளியிட்டார். முதலாம் ரிச்சர்டும் ஜான் மன்னரும் சாசன வெளியீட்டைச் செய்யவில்லை.

## மகாசாசனத்தை உருவாக்கிய நிகழ்ச்சிகள்

பல காரணங்கள் ஒன்றுசேர்ந்து ஜான் மன்னரை மகாசாசனப் பத்திரத்தை அளிக்கும்படியான நிலைக்குக் கட்டாயப்படுத்தின. இவைகளில் நற்பேருக நார்மண்டியை இழந்தது தலையாய காரணமாகும். உயர்குடிப் பிறந்தோர், இங்கிலாந்தின் எல்லைகளுக்குள் அடைக்கப்பட்டவர்களாய், நாட்டின் விவகாரங்களில் அவர்களது முழுக் கவனத்தைச் செலுத்தலாயினர். மன்னரது கொடுங்கோன்மையை எதிர்த்து மக்களுடன் ஒன்றுசேர்ந்து, உரிமை பாராட்டுவதிலும் இரக்கங்கொள்ளுவதிலும் இவர்கள் முழுமையான ஆங்கிலேயர்களாக மாறினர்.[9] மேலும், பெரும்பகுதி நிலவுரிமைப் பிரபுத்துவமும், முதலாம், இரண்டாம் ஹென்றி மன்னர்களின் கொள்கையினுல் தோற்றுவிக்கப்பட்டதான புதிய அமைச்சர் குடும்பங்களைக் கொண்டிருந்தது. எனவே, இக் குடும்பங்கள் படையெடுப்பதற்காகத் தோற்றுவிக்கப்பட்ட நிலவுரிமைப் பிரபுத்துவத்தைக் காட்டிலும் நார்மண்டியின்மீது மிகக் குறைவான தொடர்புள்ளவையாயிருந்தன. தவிர, இவர்கள் படைமானிய ஊழியர்போலல்லாது தேசிய உணர்ச்சியுள்ளவராயிருந்தனர்.

இரண்டாம் ஹென்றியின் கொள்கையின் விளைவாகப் படைமானிய முறை அழிந்துபோனதே நார்மண்டிப் பகுதியின் இழப்பிற்குக் காரணமாயிற்று.[10] ஆற்றலும் தைரியமும் படைத்திருந்த ஜான் மன்னர் நார்மண்டியை மீட்பதற்கு முயன்ருர். எனினும், நிலமானியப் பிரபுக்கள் வெளிநாடுகளில் போர்ப்பணி புரியத் தாங்கள் கட்டுப்பட்டவர்களல்லர் எனக் கூறி, மன்னரைத் தொடர்ந்து போருக்குச் செல்ல மறுத்தனர். இவ்வாறு மறுத்த நிலமானியப் பிரபுக்கள் இங்கிலாந்தின் வடபகுதியில் காணப்பட்டனர். புதியவாகத் தோன்றிய அமைச்சர் குடும்பங்களின் சொத்துகளும் இப் பகுதியில்தான் இருந்தன.

**மன்னர் :** மானியப் பிரபுக்கள் இம்மாதிரி மறுத்ததுடனும், சாசனத்தைக் கட்டாயப்படுத்திப் பறித்ததுடனும், மன்னரின்

குணங்கள் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தன. இக் குணங்கள், எல்லாக் குடிமக்களிடமும், மன்னர் மீது அவ நம்பிக்கையையும் வெறுப்புணர்ச்சியையும் தூண்டின. ஜான் மன்னர் குணத்திலும் தன்மையிலும் கிழக்கத்திய நாட்டுச் சர்வாதிகாரியாயும், மிக்க கொடுங்கோலாட்சி புரிபவராயும் இருந்தார். இரண்டாம் ஹென்றி, முதலாம் ரிச்சர்டின் அமைச்சர்கள் ஆகியோரின் மக்கள், சட்ட ஆதிக்கத்திற்குப் பழக்கப் படுத்தப்பட்டனர். ஜான், இறைமை சார்ந்தனவும், மனித இனத்தைச் சார்ந்தனவுமான எல்லாச் சட்டங்களையும் புறக் கணித்தார்.[11] வெளிநாட்டைச் சேர்ந்த கூலிப்படைகளின் கூட்டத்தின் உதவியைக் கொண்டு ஜான் தனது கொடுங் கோலாட்சியில், மக்களில் எல்லாப் பிரிவினர் மீதும் வரி களையும் அபராதங்களையும் விதித்தார்; சட்டபூர்வமான கட்டுப்பாடுகளை வெளிப்படையாக உதறித் தள்ளினர்; கொடுஞ்செயல்கள் புரிவதில் ரோமானிய மன்னரான நீரோ வையும் மிஞ்சிய குற்றவாளியானர்.[12] திருச்சபை, மானியப் பிரபுத்துவம், மக்கள் முதலானோர் பொதுவான அடக்கு முறைகளைக்கொண்ட கொடுங்கோலாட்சியின்மீது ஏற்பட்ட வெறுப்புணர்ச்சி காரணமாக ஒன்றுசேர்ந்தனர். அரசியல் வரம்புக்குட்பட்ட துரைத்தனத்தை ஏற்படுத்துவதைக்காட்டிலும் தனிமனிதனின் உரிமைகளைப் பெறுவதற்கு இவ்வாறு ஒன்றுசேர நேர்ந்தது.

**போப்பாண்டவர்:** கான்டர்பரியின் மிக்குயர் சமயத் தலைவர் பதவிக்கு ஹியூபர்ட் வால்ட்டருக்குப்பின் வேறொருவரை வாரிசாகத் தேர்ந்தெடுக்கும் வழக்கின் விளைவாகப் போப்பாண்டவர் மூன்றுவது இன்னொஸன்ட் என்பாருடன் போராட்டம் நடந்தது. இதில் மிக்குயர் திறமைவாய்ந்தவரும், கொள்கை, நடைமுறை இவ்விரண்டிலும் போப்பாண்டவரின் தலைமையான மேலாதிக்கக் கொள்கையை நிலைபெறச் செய்தவருமான மூன்றுவது இன்னொஸன்டுடன் பொருதவேண்டியதாயிற்று. உண்மையில், திருச்சபையின் ஆணைகளுக்கு நிகராகக் கருதப் பட்டபோதிலும், சமயஞ்சார்ந்த உயர் பதவிகளின் பயன் பெறுவோரைத் தேர்ந்தெடுக்கும் முறையில் சுதந்திரத்தை ஆங்கிலேய மன்னர்கள் நடைமுறையில் ஒருகாலும் ஒத்துக் கொண்டதில்லை. நார்மானியர்களின் வெற்றிக்குமுன், விடான் சபை இப் பதவி நியமனத்தைச் செய்தது. பின்னர் அரசரது ஆலோசனை மன்றத்தில் அரசரால் அல்லது நாட்டின் உயர் ஆலோசனை சபையால் நியமிக்கப்பட்டார். மேற்றிராணியாருடையவும், சிறப்பாகக் கான்டர்பரியின் அதிமேற்றிராணி

யார்களுடையவுமான அரசியலதிகாரம் இடைக்காலத்தில் மிகுதியாயிருந்தமையால், அவர்களை நியமனம் செய்வதென்பது நாட்டின் தலைமை சிவில் அதிகாரத்திற்கு இன்றியமையாததாயிற்று. தேர்தல் செய்யப்படும் முறை முதலாம் ஹென்றியின் இணக்கத்தைப் பெற்றிருந்தும், பின்பு மேற்றிராணியாரைத் தேர்ந்தெடுக்க மன்னரின் அனுமதி பெறுதல் எனும் முறை பெயரளவில்தான் இருந்தது. இச் சமயத்தில் கிறித்துவ சர்ச், காண்டர்பரி இவைகளைச் சேர்ந்த மடத்துத் தலைவர் நாட்டிலிருந்த மேற்றிராணியார்களைக் கலந்துகொள்ளாமல் தேர்தல் நடத்தும் உரிமையை வலியுறுத்தினதோடு, விரைவில் துணைச் சமயத் தலைவரையும் தேர்ந்தெடுத்தனர். இதற்கிடையில் மன்னர் நார்விச்சின் மேற்றிராணியாரான ஜான் டி கிரே என்பாரைத் தேர்ந்தெடுக்குமாறு மதாசாரியராகத் தீட்சை பெற்ற மேற்றிராணியார்களின் உறவினர்களைப் பணித்தார். எனவே, இவ் வழக்குப் போப்பாண்டவரான இன்னொஸன்ட் முன்பு எடுத்துரைக்கப்பெற்றது. அவர் இரு தேர்தல்களையும் (ஒன்றை இரகசியமாகச் செய்யப்பட்டதாயும், மற்றதை வரம்பு கடந்த செய்கையென்றும் கருதி) தள்ளுபடி செய்தார். அத்துடன் அவரது முன்னிலையிலேயே, கற்றறிந்தவர் எனப் புகழ்பெற்றவரும், உயர்ந்த பண்புகளைக் கொண்டவரும், ஆங்கிலேயருமான ஸ்டீபன் லாங்டன் என்பாரைத் தேர்ந்தெடுக்கச் செய்தார்.[13]

ஜான் கீழ்ப்படிவதில்லையென உறுதிபூண்டதுடன் மேற்றிராணியாக லாங்டனை வரவேற்கவும் மறுத்தார். போப்பாண்டவர் அதன்பின் (1208) இங்கிலாந்து முழுமைக்கும் தடையாணை பிறப்பித்தார். (இதன் பயனாக நாடு முழுவதிலும் சமய வாழ்க்கையே நிறுத்தப்பட்டது.) மன்னரை வழிக்குக் கொண்டு வருவதற்காக மக்கள் அல்லலுறும்படி செய்யப்பட்டனர். ஆனால், ஜான் மன்னர் சமயச் சொத்துகள் முழுமையும் கைப்பற்றினார். இதன் விளைவாக (1209-ல்) அவர் மதப்பிரஷ்டம் செய்யப்பட்டார். அத்துடன் (1212-ல்) இராச்சியத்தையும் இழந்ததாக அறிவிப்பு ஆணை வெளியிடப்பெற்றது.

ஃபிரான்சு நாட்டு மன்னரான ஃபிலிப்பு அகஸ்டஸ் என்பாரை, இழந்த ஆங்கிலேய இராச்சியத்தைக் கைப்பற்றும்படி போப்பாண்டவர் ஊக்குவித்ததன் காரணமாக, ஜான் மன்னர் அச்சுறுத்தப்பட்டார். பகைமையுள்ளங் கொண்ட மக்களை நம்பாது ஜான் மன்னர் இறுதியில் பணிந்தார். மிக்க இறுமாப்பையும் கொடிய முறைகளையும் கையாண்ட மன்னர் இப்பொழுது எவ்வித நிபந்தனையுமின்றி அடிபணிவதை மேற்

கொண்டார்; அதிமேற்றிராணியாராக லாங்டனை ஏற்றுக் கொண்டதோடல்லாமல், திருச்சபைகளிடமிருந்து தான் புறத்திப் பெற்ற பொருள்களுக்கு நட்டஈடு செய்வதாக வாக் குறுதி செய்தார். எனினும், போப்பாண்டவரின் தூதரான பாண்டல்ஃபிடம் இராச்சியத்தையே அடிமைப்படுத்தி மீண்டும் போப்பாண்டவரின் திருப்பீடத்தின் மானியமாகப் பெற்றார்; ஆண்டுதோறும் ஆயிரம் மார்க்குகளைத் திறையாகச் செலுத் தவும் ஒப்புக்கொண்டார்.[14] சில திங்களுக்குப்பின் டஸ்குலம் எனுமிடத்தின் மேற்றிராணியாரான நிக்கோலஸ் என்பார் முன் மன்னர், தலைவனுக்குச் செய்யப்பெறும் பணிதலை நேரிடை யாகச் செய்வதன் வாயிலாகக் கீழ்ப்படிதலைப் புதுப்பித்துக் கொண்டார்.[15] இவ்வாறு அப்பொழுது கீழ்ப்படிந்தது அவ மானம் என்பதில் சிறிதும் ஐயமில்லை. இக் காலத்தில் அதை அவ்வளவு பெரிதாகக் கருதாமலிருக்கலாம். எனினும், இரண்டாம் ஹென்றி வகித்த பதவியை மனத்தில் கொள்ளும் பொழுது, அவரது மகாரில் ஒருவர் பேரரசருக்குக் கீழ்ப் படிந்ததும், மற்றொருவர் போப்பாண்டவருக்குக் கீழ்ப்படிந் ததும் மிகவும் திடுக்கிடச்செய்யக்கூடிய நிகழ்ச்சிகளாம்.

**உயர்குடி மக்கள்:** இராச்சியத்தின் லௌகீக சுதந்திரத் தையும் சமயம் சார்ந்த சுதந்திரத்தையும் அடிபணியச் செய்தது மக்களுக்கு மன்னரிடம் ஏற்பட்ட பகைமை யுணர்ச்சியை முற்றுப்பெறச் செய்தது. மன்னரின் நியாயமற்ற ஆட்சி இந்தத் தேசிய மதிப்பிழப்பிற்குக் காரணமாயிற்று. மற்றொரு புறத்தில் கீழ்ப்படிதலை உறுதியாகப் பெற்ற போப்பாண்டவர் தம்முடைய தந்திரங்களை மாற்றிக்கொண்டு தமது கீழா ளான மன்னரின் கொடுங்கோன்மையை ஆதரித்தார். இதை எதிர்க்க உயர்குடி மக்கள் உறுதி பூண்டனர். அதிமேற் றிராணியாரான லாங்டனின் தலைமையில் அமர்ந்த நாட்டுத் திருச்சபையும்,[16] நாட்டுப்பற்றுக் கொண்டிருந்தவர்களுக்கு ஆதரவளிக்கலாயிற்று.

மகாசாசனப் பத்திரத்தை உடனடியாக வழங்கும்படி செய்த காரணங்களில் மிக முக்கியமானவற்றைச் சுருக்கமாக இங்குக் குறிப்பிடுவது பொருத்தமாகும்.[17] 1213-ல் ஜூலை மாதத்தில் உயர்குடி மக்களுடன் வெளிப்படையான சச்சரவு உண்டாயிற்று. இதற்கு வடபாகத்திலிருந்த பிரபுக்கள் ஜான் மன்னருடன் ஃபிரான்சு நாட்டின் மீது படையெடுத்துச் செல்ல மறுத்ததே காரணமாகும். கீழ்ப்படிய மறுத்த கீழாள் களின் மீது வஞ்சம் தீர்த்துக்கொள்ள மன்னர் சூளுரைத்த

பொழுது, ஆகஸ்டு திங்கள் 4ஆம் நாளில் முதலாவதாக செயின்ட் ஆல்பன்ஸ்[18] எனுமிடத்திலும், இரண்டாவதாக 25ஆம் நாள் லண்டனிலுள்ள செயின்ட் பால் திருக்கோயிலிலும் மேற்றிராணியார்கள், உயர்குடி மக்கள் இவர்களது முக்கியமான இரு கூட்டங்கள் நடைபெற்றன. இக் கூட்டங்கள் பெயரளவில் திருச்சபைக்கு வாக்களிக்கப்பெற்ற இழப்பீட்டை மதிப்பிடுவதற்காகக் கூட்டப்பெற்றன. இந்த வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு அரசியல், நீதித்துறைத் தலைவரான ஜியாஃப்ரே ஃபிட்ஸ் பீட்டரும் மேற்றிராணியாரான லாங்டனும் மன்னருடைய அநியாயமான ஆட்சியைப்பற்றிப் பொதுவான பேச்சுவார்த்தையைத் தொடங்கினர். செயின்ட் ஆல்பன்ஸ் கூட்டத்திலேயே, மக்கள் மறந்திருந்த முதலாம் ஹென்றியின் சாசனத்தையே மக்கள் உரிமைகளின் அளவாகக் குறிப்பிட்டும், செயின்ட் பால் கூட்டத்தில் அதிமேற்றிராணியாரால் வெளிக்கொணரப்பெற்றும் உயர்குடிப் பிறந்தோரின் கோரிக்கைகளுக்கு அடிப்படையாக ஏற்றுக்கொள்ளப்பட்டது.

1214ஆம் ஆண்டின் பெரும் பகுதியில் ஜான் மன்னர் ஐரோப்பாவிலிருந்தார்; அக்டோபர் மாதத்தில் இங்கிலாந்து திரும்பினர். இதற்கிடையில் உயர்குடி மக்கள் பியூரி செயின்ட் எட்மண்ட்ஸ் எனுமிடத்தில் கூடி, தங்களைக் கட்டுப்படுத்தக் கூடிய ஒரு கூட்டுக் குழுவை ஏற்படுத்தினர். அதன்படி அவர்கள் கோரிய உரிமைகளை மன்னர் ஏற்றுக்கொள்ளாவிட்டால், அவர்களின் விசுவாசத்தை மீளப்பெறுவதென்றும், மக்களின் சட்டங்களையும் உரிமைகளையும் முத்திரையிடப் பெற்ற சாசனம்மூலம் உறுதிசெய்து கொடுக்கும்வரை போர் தொடுப்பதென்றும் முடிவாயின.[19]

1215-ல் ஜனவரி 6ஆம் நாள் டெம்பிள் எனுமிடத்தில் உயர்குடி மக்கள் ஆயுதம் தாங்கியவர்களாய் மன்னரிடம் தங்களது கோரிக்கைகளைத் தெரிவித்தனர். மன்னருடைய அவசர வேண்டுகோளுக்கிணங்கி, கோரிக்கைகளை நன்கு ஆலோசிக்கத் தேவையான காலத்தை அளிக்க வேண்டுமென்ற எண்ணத்துடன் ஈஸ்டர் திருநாள் வரை அவகாசம் அளிக்க ஒத்துக்கொண்டனர்.[20]

இவ்வாறு கிடைத்த இடைவேளையில் தனக்கு எதிராக இருந்த கூட்டைத் தகர்க்க ஜான் மன்னர் இயன்றவரை முயன்றார். திருச்சபைக்குத் தனியாக ஒரு சாசனத்தை வழங்கியதன் வாயிலாக மேற்றிராணியார்களையும் மடாதிபதிகளையும் தேர்ந்தெடுப்பதில் சுதந்திரத்தை அளித்தார்.[21] ஒவ்வொரு

ஷயரிலும் சுதந்திரமாக வாழ உரிமை பெற்றவர்களுக்குப் பற்றுறுதி, விசுவாசம் போன்ற பிரமாணங்களைச் செய்ய ஷெரீஃபுக்கு உத்தரவிட்டார்; கிறித்துவச் சமயப் போர்வீரனைப் போன்று திருச்சபையின் சிறப்புப் பாதுகாப்பைப் பெறும் நோக்குடன் சிலுவையை அணிந்துகொண்டார்; சிறப்பான தனிச் சலுகைகளை வழங்குவதன் வாயிலாக உயர்குடிப் பிறந்தோரைக் கூட்டிலிருந்து பிரிப்பதற்கும் முயன்றார். ஆனால், தேசிய அடிப்படையில் எழுந்த கட்சி ஒற்றுமையுடன் உறுதியாயிருந்தது. செயின்ட் ஆல்பன்ஸ், செயின்ட் பால் மகாசபைகளுக்குப் பிறகு எண்ணற்றவர்கள் சேர்க்கையினால் வலிமை பெற்ற உயர்குடிப் பிறந்தோர் ஸ்டாம்ஃபோர்டு எனுமிடத்தில் ஆயுதங்களுடன் திரண்டனர். மன்னரிடமிருந்து பதில் கிடைக்காமல் குறிப்பிட்ட காலம் கடந்ததும், நார்த்தாம்டன் ஷயரிலுள்ள பிரக்லியை நோக்கி அணிவகுத்துச் சென்றனர். அங்கு ராபர்ட் ஃபிட்ஸ்வால்டர் என்பாரைப் 'புனிதத் திருச்சபையினுடையவும் இறையினுடையவுமான படைக்குத் தலைவராக நியமித்தனர். இதற்காக மன்னரிடம் கொண்டிருந்த கீழ்ப்படிதலை இகழ்ந்துரைத்தலின் வாயிலாக மன்னரை முறையாக எதிர்த்தனர்'. இவ்வாறு செய்வது படைமானியக்காரர்களின் எழுச்சிக்குத் தேவையான முன்னேற்பாடாகும். இவ்விடத்திற்கு மன்னர் அவர்களது கோரிக்கைகள் என்னவென்று கேட்டறிய அனுப்பினர். கோரிக்கைகள் பணிவுடன் எடுத்துரைக்கப்பெற்றபொழுது அவைகளை அளிக்க அதிகாரத்துடன் மறுத்தார்.

**லண்டன்வாழ் மக்கள்:** உயர்குடிப் பிறந்தோர் லண்டன் நகரை நோக்கி அணிவகுத்துச் செல்வதைத் தொடர்ந்தனர். நகர மக்களுடைய உற்சாகமான வரவேற்புகளுடன் மே மாதம் 17ஆம் நாள் லண்டனுக்குள் நுழைந்தனர்.[22] நகர மக்களுடைய ஆதரவு இப் போட்டிக்கு முடிவு காணும்போல் தோன்றியது. இதுவரை மன்னரிடம் உண்மையான நம்பிக்கையுடன் நடந்துகொண்டவர்களும், அளவில் சிறியதாயினும் உயர்குடி மக்கள் இனத்தில் ஒரு பகுதியார் கூட்டுக் குழுவின் பக்கலில் சேர்ந்தனர். அவர்களுடன் மன்னர் ஆலோசனைக் குழுவைச் சேர்ந்த அதிகாரிகளில் பெரும் பகுதியினரும், கருவூலத்துறையைச் சேர்ந்தவர்களும், அரசரது குடும்பத்தைச் சேர்ந்தவர்களும் சேர்ந்துகொண்டனர்.[23]

பிற நாட்டினரான ஒருசில உடனிருக்கும் ஆதரவாளர்களைத் தவிர மற்றவர்களால் கைவிடப்பட்டும், மேற்கொண்டு எதிர்ப்பை நீடிக்க முடியாத நிலையில் ஜான் மன்னர் உயர்குடி

மக்களின் ஷரத்துகளை ஏற்றுக்கொண்டார். இவை 1215ஆம் ஆண்டு ஜூன் மாதம் 15ஆம் நாள் ரன்னிமீடு எனுமிடத்தில் ஏற்பட்ட மகாசாசனத்தில் அடங்கியுள்ளன.[24]

## சாசனத்தின் சுருக்கமும் கூறுபாடுகளும்

மகாசாசனத்தில், பாயிரத்தோடு முறையாக அமைக்கப் படாத நிலையில் 63 ஷரத்துகள் அடங்கியுள்ளன. அதன் முக்கிய ஷரத்துகளைக் (வழக்காற்று முறையில் எண்ணிக்கை யிடப்பெற்ற அதிகாரங்கள் அல்லது பிரிவுகளை முன்னிடு களாகக் கொண்டு) கீழ்க்காணும் வகையில் ஒன்றுசேர்த்தும் சுருக்கியும் காண எளிதாகும். பிந்திய வெளியீடுகளில் கடிய மாற்றத்துடன் அல்லது விடப்பட்டவையான பகுதிகளில் முக்கியமான சதுர அடைப்புக் குறிகளுடன் காணப்பெறும்.

1. மீற முடியாதனவான உரிமைகளுடனும் சுதந்திரங் களுடனும் [ஏற்கெனவே தனிச் சாசனம் வாயிலாக மன்னர் வழங்கிய தேர்தல்பற்றிய சுதந்திரத்தைத் தெளிவாக மீண்டும் உறுதி செய்ததுடன்] திருச்சபை சுதந்திரமாக இருக்கும் எனும் அறிக்கையுடன் தொடங்கி, இராச்சியத்திலுள்ள[25] எல்லாச் சுதந்திர மக்களுக்கும் கீழ்க்காணும் சுதந்திரங்களை ஜான் மன்னர் வழங்குகிறார் :

## I.—படைமானியப் பொறுப்புகள்

2, 3. (விடுதலைக்கான வரிகள்.) வாரிசுரிமையுடையோர் (வயதுடையோராயின்) 'பழைய விடுதலைக்கான வரிகளை' மாத்திரம் செலுத்துவர். அதாவது, மானிய உயர்குடிப் பிறந் தோர் அல்லது ஏர்ல் நூறு பவுனும், நைட் எனும் வீரன் நூறு ஷில்லிங்கும் ஒரு நைட்டின் கட்டணத்திற்குக் குறைவாகவுள்ள சொத்துக்குக் குறைந்த விகிதத்திலும் செலுத்த வேண்டியது.[26] பாதுகாப்பின்கீழுள்ள இளவயதினர், வயது வந்ததும் விடுதலைக்கான வரி அல்லது தண்டனையின்றி உரிமை வழியாக அடையவேண்டியதை அடைவர்.

முதலாம் ஹென்றியின் சாசனத்தின் 2ஆவது பிரிவுப் படி, விடுதலைக்கான வரிகள் 'நேர்மையாயும் நியாய மானவையாயும்' இருக்கவேண்டுமென்றிருந்தது. தொகை குறிப்பிடப்படவில்லை.[27]

4, 5. **(பாதுகாப்பு முறை.)** போஷகர்கள் அழிவு ஏற்படுத் தாமலும் வீணுகச் செய்யாமலும் நியாயமான பயனையும் இலாபத்தையும் மாத்திரம் பெறுவதுடன், பாதுகாப்பின்கீழ் உள்ள காலத்தில் தாவரச் சொத்துகளை நன்னிலையில் வைத் திருக்க வேண்டும்.

முதலாம் ஹென்றியின் சாசனம், விதி 4-ன்படி, இறந் தவருடைய மனைவி அல்லது மிக நெருங்கிய உறவினர்தான் போஷகராயிருக்கவேண்டும். நார்த்தாம்டன் நீதிமன்றம் (அஸைஸ் 1176), விதி 4, மான்யப் பிரபுதான் போஷகரா யிருக்க வேண்டுமெனக் கூறியது. இதன் பயனுகக் குடும்ப உறவைக் காட்டிலும் மான்யத் தொடர்பு மேலோங்குவதை ஏற்றுக்கொண்டது. பாதுகாப்பு முறையில் காணப்பட்ட குறைகளை மகாசாசனம் நீக்கியது.[28]

6. **(திருமணங்கள்.)** தாழ்வுறுதலின்றி வாரிசுரிமை பெற் றவர்கள் திருமணஞ் செய்துகொள்ள வேண்டும். [நெருங்கிய இரத்தக் கலப்புள்ள உறவினர்கள் முன்னதாக அறிவிக்கப் பட்டிருக்க வேண்டும்.]

முதலாம் ஹென்றியின் சாசனம், விதி 3-ல், வாரிசுரிமை கொண்ட மாதர்களுக்குத் திருமணஞ் செய்விப்பதில் மன்னர் மான்யப் பிரபுவைக் கலக்க வேண்டுமென்று கட்டுப்பாடு இருந்தது. பிரபுக்களின் விதிகளில் விதி 3-ன் படி வாரிசுரிமையுள்ளவர்கள் அவர்களது இரத்த உறவி னர்கள் அடங்கிய கூட்டு மன்றத்தின் இசைவு பெற்றுத் திருமணஞ் செய்விக்கப்பட வேண்டும். சாசனத்திலேயே உறவினர்களுக்கு அறிவிக்க வேண்டுமென்றுதான் வாச கத்தின் கடுமை குறைக்கப்பட்டிருந்தது. இந்தத் தேவை யுங்கூட மூன்ரும் ஹென்றியின் காலத்தில், மீண்டும் வெளியிடப்பெற்றதில் நீக்கப்பட்டிருந்தது.[29]

7, 8. **(கணவனை இழந்தோர்.)** கணவனை இழந்த நாற்பது நாள்களுக்குள்ளாகவே வாரிசு முறையில் பெறவேண்டியவை களையும், கணவன் வீட்டிற்கு எடுத்துவந்த சொத்துகளையும் நிபந்தனையின்றிப் பெற்றுக்கொள்ள வேண்டும். குடும்பத் துக்குச் சொந்தமான பெரிய வீட்டில் நோயுற்றிருக்குங்காலை (நாற்பது நாள்கள்) தங்கியிருக்கலாம். மறுமணம் செய்து கொள்ளக் கட்டாயப்படுத்தக்கூடாது ; மறுமணம் செய்து கொள்ள விரும்பினல் மான்யப் பிரபுவின் ஒப்புதலைப் பெற வேண்டும்.

மன்னரும் அவருடைய மான்யதாரர்களான பிரபுக்களும் சில சமயங்களில் அவர்களுடைய குடியானவர்கள் இறந்தபின் அவர்களுடைய மனைவிமாரைத் திருமணத்திற்கு ஒத்துக்கொள்ளச் செய்வதற்காகச் செலுத்தப்பட வேண்டிய அபராதத்தைப் பெறுவதற்காக மறுமணஞ் செய்துகொள்ளுமாறு துன்புறுத்தினர். இத் துன்புறுத்தல் தடைசெய்யப்பட்டது.

15. (உதவித்தொகைகள்.) [சாதாரணமாகச் செலுத்தப்படும் உதவித்தொகைகளைத் தவிர வேறொன்றையும் வசூலிக்க இடைமானியப் பிரபுக்களுக்கு மன்னர் அதிகாரம் வழங்கக் கூடாது. மூன்று உதவித்தொகைகளாவன: பிரபுவின் உயிரை மீட்பதற்கும், மூத்த மகனை நைட்வீரனாகச் செய்வதற்கும், மூத்த மகளுக்குத் திருமணஞ் செய்வதற்குமாகும். இவைகளுக்குத்தான் தொகையும் நியாயமானதாயிருந்தது.]

16. (ஊழியர்கள்.) நைட்வீரனுடைய கட்டணத்திற்காகவும், மற்றச் சுதந்திரமான குடியிருப்புக்காகவும் செய்யவேண்டிய ஊழியங்களுக்கதிகமான ஊழியஞ் செய்யுமாறு ஒருவரையும் துன்புறுத்துதல் கூடாது.

29. (கோட்டைக் காவல்.) கோட்டையைக் காவல் புரியும் ஊழியத்தை நேரிடையாகச் செய்ய விரும்புகிறவர்களையோ அல்லது (நியாயமான காரணம் காட்டி) பொறுப்புள்ள பதிலாள்மூலம் செய்வதையோ தடுத்து, அதற்காகக் கட்டணம் செலுத்துமாறு எந்த நைட்வீரனும் துன்புறுத்தப்படக் கூடாது. இராணுவத்தில் பணிபுரிந்துகொண்டிருக்கும் பொழுது கோட்டைக்காவல்புரியும் ஊழியத்திலிருந்து விடுதலை அளிக்கப்பட வேண்டும்.

32. (கொடுங்குற்றம் புரிந்தவர்களின் நிலங்கள்.) தண்டிக்கப்பட்ட கொடுங் குற்றவாளிகளுடைய நிலங்களை ஓர் ஆண்டுக்குமேல் ஒரு நாளைக்குத்தான் வைத்துக்கொள்ளலாம்; அதற்குமேல் மன்னர் தம்வசம் வைத்துக்கொள்ளக்கூடாது. இக் கெடு முடிந்ததும் மான்யப் பிரபுவிடம் நிலங்கள் ஒப்படைக்கப்பட வேண்டும்.

பொது நீதிப்படி அரசத்துரோகம் புரிந்ததாகத் தீர்ப்பளிக்கப்பட்டவருடைய நிலங்கள் அரசனைச் சேரும்.

அரசத்துரோகம் அல்லது கொடுங் குற்றஞ் செய்ததற்காகத் தண்டனை விதிக்கப்பட்டவருடைய நிலங்கள்

அவருடைய தலைவரான பிரபுவால் பறிமுதல் செய்யப்பட்டன. எனினும், இம்மாதிரியான வழக்கில் ஓர் ஆண்டும் ஒரு நாளும் மேற்படி நிலங்கள் மன்னரிடம் இருக்கவேண்டுமென்ற நிபந்தனைக்குட்பட்டிருந்தது.[30] மூன்றும் ஜார்ஜ் 54 விதி, 145-ன்படி நிலப்பறிமுதல் (அரசத்துரோகம், சிறிய அரசத்துரோகம், அல்லது கொலைக்குற்றம் நீங்கலாக) குற்றம் புரிந்தவர் உயிருடன் இருந்தவரைதான் என வரையறை செய்யப்பட்டிருந்தது. ஆனால், கொலைக்குற்றம் செய்தவர்களுடைய சொந்தச் சொத்துகள் 1870 ஆம் ஆண்டுவரை அரசு பறிமுதலுக்கு உட்பட்டிருந்தது என்பது தொடர்ந்து காணப்பட்டது. முற்காலங்களில் 'நெறிகேடான இரத்தக் கலப்புப்' போன்ற தண்டனையினால் உரிமை நீக்கம் செய்யப்பட்டது. இவ்வாறு உரிமை நீக்கம் செய்யப்பட்டவர்களின் வாரிசு வழியாகவோ அல்லது நேர்வழியாகவோ சொத்துகளை வழியுரிமையாய்ப் பெறுதல் தடை செய்யப்பட்டிருந்தது. இச் சட்டத்தின் கடுமை 54, மூன்றும் ஜார்ஜ் விதி 145ஆலும் வேறு சட்டங்களாலும் இறுதியாக 1870-ல் நிறைவேற்றப்பட்ட 33, 34 விக்டோரியா விதி 23ஆல் தணிக்கப்பட்டு, அரசத்துரோகம், கொடுங்குற்றம், அல்லது தற்கொலை புரிந்து கொள்ளுதல் முதலிய குற்றங்களுக்கும், குற்றத்தை ஒத்துக்கொள்ளுதல், குற்றத் தீர்ப்பு, குற்ற விசாரணை, தண்டனை அல்லது நீதிமன்ற முடிவு முதலியவைகளுக்கு (நாடுகடத்தல் தண்டனை விதிக்கப்பட்டதன் விளைவாகப் பறிமுதல் செய்யப்பட்டது மாத்திரம் நீங்கலாக) உரிமை நீக்கம் அல்லது நெறிகேடான இரத்தக் கலப்பு, பறிமுதல், அரசுக்குப் பறிமுதல் செய்தல் போன்ற எதுவும் செய்யப்படக்கூடாது எனச் சட்டம் இயற்றப்பெற்றது. ஜூலியஸ் கோபல் என்பார் எழுதியுள்ள, 'கொடுங்குற்றமும் கெட்ட நடத்தையும்' எனும் நூலில் (நியூயார்க், 1937, பாகம் 1), பறிமுதல், எளிய தண்டனை விதித்தல், நெறிகேடான இரத்தக் கலப்புப்பற்றிய பழைய வரலாற்றின் செய்திகள் காணக்கிடக்கின்றன.

37. (இடைப்பட்ட பாதுகாப்பு முறைகள்.) மன்னருடைய வேறு நிலத்தை மான்யத் தொகை செலுத்துவதற்குப் பதிலாகப் பணி புரிவதற்காகவோ, பர்கேஜ் அல்லது காவல் செய்வதற்காகவோ துணைமானியதாரராக அனுபவித்துக் கொண்டிருக்கும் காரணத்தை முன்னிட்டு வீரச்செயல் புரிந்ததற்காக மானியமாக இடைப்பட்ட பிரபுவுக்கு வழங்கப்பட்ட

நிலத்தை மன்னர் தமது பாதுகாப்பின்கீழ் வைத்துக் கொள்ளக்கூடாது. இராணுவ சேவை செய்வதற்காக மான்ய மிருந்தால்மட்டில் நிலங்களின் பாதுகாப்பை மேற்கொள்ள லாம்.[31]

துணைமான்யதாரர் நைட் வீரனுகப் பணிபுரிதற்கு மன்னருடைய தாவரச் சொத்தைப் பெற்றிருந்தால், மன்னரது தடையிலாத் தனிச்சிறப்பான பாதுகாப்பின் கீழ் யாரால் வைத்துக்கொண்டிருக்கப்பட்டிருந்தாலும், எல்லா நிலங்களையும் கைப்பற்ற முடியும்.

43. (அரசால் வாரிசு இன்றிப் பறிமுதல் செய்யப்பட்ட மானியப் பிரபுக்களின் சொத்துகள்.) அரசால் பறிமுதல் செய்யப்பட்ட மான்யப் பிரபு நிலங்களின் குடிவாரதாரர்கள் ஏற்கெனவே செலுத்திவந்த விடுதலைக் கட்டணத்தைச் செலுத்தி ஊழியத் தையும், இடைப்பட்ட மான்யப் பிரபுவிடமிருந்து நிலம் பெற்றதைப் போன்று, செய்துவர வேண்டும்.

பறிமுதல் செய்ததாலோ, வாரிசு இல்லாத காரண மாக நிலங்களை அரசு பறிமுதல் செய்ததாலோ பிரதம மான்யதாரர்களின் எண்ணிக்கை தொடர்ந்து குறைந்து கொண்டுவந்ததும், அதன் விளைவாக அரசரிடமிருந்து நிலம் குத்தகையாகப் பெற்ற துணைக்குடியானவர்கள் பிரதம குடியானவர்களாக ஆனதும், அதன் காரணமாக அவர்கள் முன்பு மான்ய உரிமை பெற்றிருந்தவர்களைப் போன்று கடுமையான வரிப்பளு இல்லாதவர்களானுர்கள் என்பதும் தெரியவரும். அரசின் உரிமைகள் இவ்வாருகத் தொடர்ந்து குறைந்துபோகலாயின.

46. (மடங்களின் பாதுகாப்பு.) மானியப் பிரபுக்களால் தோற்றுவிக்கப்பெற்ற மடங்கள், காலியாகும்பொழுது மான்யப் பிரபுக்களின் பாதுகாப்பின்கீழ் வரும்.

மான்யக் கடமைகள் அல்லது பொறுப்புகள் என்ற மேலே குறித்த தலைப்பின்கீழ்த் திரட்டப்பட்டுள்ள பரிகரிப் பானவும் சட்டவரம்பிற்குட்பட்டவுமான (ஷரத்துகள்) ஏற்பாடுகளின் மேலான தன்மை, நார்மானியருடையவும் முந்திய ஆஞ்சவினருடையவுமான மான்ய முறையில் அமைந்த முடியரசினுடைய கட்டாய வசூல்களின் வருத் தல்களுக்கும் சுமக்க முடியாத தன்மைக்கும் சான்ருக அமைந்திருந்தது.

## II. சட்ட, நீதி ஆட்சி

*17.* (பொது வழக்குகள்) *மன்னர் நீதிமன்றத்தைப் பின் தொடர்ந்து செல்லாமல் ஒரு குறிப்பிட்ட இடத்தில் நடைபெறும்.*

முன்போல் இராச்சியத்தின் முழுமையிலும் மன்னரைப் பின்தொடர்ந்து செல்வதனுல் உண்டாகும் பணச் செலவு, தொல்லே முதலியவைகட்கு உட்படுவதைத் தவிர்ப்பதும், நிலேயான ஓர் இடத்தில் அமைந்துள்ள நீதிமன்றத்தை வழக்காடுகிறவர்கள் எப்பொழுதும் நாடிச் செல்ல வழிசெய்வதும் இப் பிரிவின் நோக்கமாகும்.

*18, 19.* (குறிப்பிட்ட காலத்திய நீதிமன்றங்கள்.) *வழக்கு சம்பந்தமான நிலங்கள் இருக்கும் மாவட்டங்களில்தான் நாவல் டிஸ்ஸீஸன், முன்னோர்களது மறைவு, டர்ரீன் பிரசன்டுமென்டு முதலியவைகளே ஒத்துக்கொள்ளுதல் நடைபெற வேண்டும். மன்னர் அல்லது அவருக்குப் பதிலாகப் பிரதம நீதிபதி ஆண்டுதோறும் [நான்கு முறைகள்] ஒவ்வொரு மாவட்டத்திற்கும் இரு நீதிபதிகளே அனுப்புவார். [மாவட்ட நீதிமன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட நான்கு] நைட்வீரர்களுடன் சேர்ந்துகொண்டு இவ்விரு நீதிபதிகள் மேற்கண்ட நீதிமன்றங்களே அமைப்பர். [ஒவ்வொரு மாவட்டத்திற்கும் குறிப்பிட்ட நாளன்று எல்லா வழக்குகள் பற்றிய விவரங்களேயும் தீர்மானிக்க முடியாமற்போனுல், நீதிமன்றத்திற்கு வந்துள்ளவர்களில் தேவையான நைட்வீரர்களும் (சொந்தக்காரர்களும்) உரிமை மான்யதார்களும் தங்கியிருந்து வழக்குகளேத் தீர்மானிப்பர்.]*

1217-லும் 1225-லும் ஏற்பட்ட சாசனங்கள் 'நான்கு முறைகள்' என்பதற்குப் பதிலாக 'ஒரு தடவை' என்று குறிப்பிடுவதுடன், அடைப்புக் குறிக்குள் காணப்பெறுபவைகளேக் குறிப்பிடவில்லே.

*20.* (தண்டனேகள், அபராதங்கள்.) *குற்றத்திற்கேற்பச் சிறு குற்றங்களுக்கு உரிமை பெற்றவர் அபராதம் விதிக்கப்படுவார். வெறுக்கத்தக்க கொடுங் குற்றம் புரிந்தவருக்குக் குடும்பச் சொத்துகளே நீக்கி மற்ற அபராதங்களும், அதேபோன்று வியாபாரிக்கு வாணிகப் பொருளே நீக்கியும் உட்குடிகளுக்கு ............வெய்னேஜ் நீக்கியும் அபராதம் விதிக்கப்படும்.*

எல்லா விசாரணைகளிலும் பக்கத்திலுள்ள நேர்மையானவர்களின் உறுதிமொழிகளைக்கொண்டு அபராதங்கள் தீர்மானிக்கப்பட வேண்டும்.

21. ஏர்ல்களும் மான்யப் பிரபுக்களும் அவரவர்களது குற்றத்திற்கேற்பப் பிரபுக்களாலேயே தண்டிக்கப்படுவர்.

22. திருச்சபை மான்யங்கள் உள்ள ஒருவரை, அச் சொத்து மதிப்பின் அடிப்படையை விடுத்து, லௌகிகச் சொத்துகளின் அடிப்படையிலேயே, மேலே கூறிய அளவின்படி எந்தப் பணியாளருக்கும் தண்டனை விதிக்கப்பட வேண்டும்.

தண்டனைகள் என்ற பெயரில் ஜான் மன்னர் குடிமக்களைக் கொடுங்கோன்மை வாய்ந்த கட்டாய வசூல் வாயிலாகத் துன்புறுத்தியதைத் தடைசெய்து பாதுகாப்பளிப்பது இவ் விதிகளின் (20, 21, 22) நோக்கமாகும். அதே சமயத்தில் இவ் விதிகள், குற்றத்திற்கேற்றவாறு தண்டனை விதிக்கப்பட வேண்டியது எனும் பொதுக் கொள்கையையும், உரிமைபெற்ற மக்கள், வணிகர்கள், உட்குடிகள் முதலியவர்களுடைய சாதாரண வழக்குகளில் தண்டனை விதிக்கப்படும் தொகை மன்னரது விருப்பம் போல் விதிக்கப்படாமல் அண்டையிலுள்ள உள்ளூரிலுள்ள அக்கம்பக்கத்திலுள்ளவர்களின் குழுவால் நிர்ணயம் செய்யப்பட வேண்டுமென்பதையும், ஏர்ல்கள், மான்யப் பிரபுக்கள் பற்றிய வழக்குகளில் உயர்குடி மக்களின் தீர்ப்பின்படி நிர்ணயஞ் செய்யவேண்டியதையும் எடுத்துரைக்கின்றன.[32] சமவெளிகளில்வழங்கிய இலத்தீன் சொல்லான 'அமர்ஸியர்' எனும் சொல்லிலிருந்து, பழைய பிரெஞ்சு மொழியில் 'அமர்ஸீர்' எனும் சொல்லாக மாறி, ஆங்கிலத்தில் அமெர்ஸ்மென்டு என்ற சொல் உருவாகியுள்ளது. இரு சொற்களும் தண்டனை அல்லது அபராதம் விதிப்பது எனும் பொருளுடையதாகும்; குற்றஞ் செய்தவரின்மீது விதிக்கப்படும் பண அபராதத்தைக் குறிக்கும். இது பண்ணை நீதிமன்றங்களில் சிறு குற்றங்களுக்காகவும், நடைமுறை அல்லது ஆட்சிமுறையில் ஏற்பட்ட குற்றங்களுக்காகவும் விதிக்கப்படும் அபராதமாகும். மேலே கண்ட நீதிமன்றங்களில் சில வாதிகள் இவ்வபராதத்தை உறுதிப்படுத்தினர். இலத்தீன் மொழியில் காணப்படும் வாதிகளின் ஏடுகளில் இச் சொல் வாதி கருணையுள்ளம் படைத்திருந்ததாகக் கூறும் எனினும், இச் சொல் உறுதிசெய்யப்பட்டதும் நடுத்தரமானதுமான

அபராதத்தைக் குறிப்பதாகக் கொள்ளுவது முறையாகும். மற்ருெரு புறத்தில் நீதிமன்றம் கடுங்குற்றம் புரிந்தவர்களை மன்னருடன் அபராதத்தை உறுதி செய்துகொள்ளுமாறு உத்தரவளிக்கக்கூடும். அதுபோது கருவூலத்தாரோடு நல்ல பேரம் செய்ய வாய்ப்புக் கிடைக்கும். இடைக்காலத்தில் நீதிமன்றங்களாலும் சட்டத்தாலும் அபராதத்தை உறுதிப்படுத்துவதென்பது அரிதாயிருந்தது. குடும்பச் சொத்துகள் என்பது ஒருவனது வாழ்விற்கு உறுதுணையாயுள்ளதையும், அவரவர் பதவிக்கும் தகுதிக்கும் ஏற்ருற்போல் காப்புக்கு இன்றியமையாததாயுமுள்ளதைக் குறிக்கும்.[33] இடைமானியப் பிரபு அவருடைய உட்குடியானவர்களிடமிருந்து விடுதலைக்கான வரிகளைக் கோரவேண்டும் என கிளன்வில் குறிப்பிடுகிருர்.[34] 'வெயினேஜ்' என்பது உட்குடியானவர்களுடையவும் பயிர்த்தொழில் புரிகிறவர்களுடையவுமான பயிர்களையும் உழுதற் கூலியையும் குறிக்கும்.[35]

24. (மன்னரின் வழக்குகள்.) ஷெரீஃப், கோட்டையைக் காவல் புரிபவர், சவ விசாரணை புரிகிறவர், மன்னரது பெய்லிஃப் போன்றவர்கள் அரசாங்க வழக்குகளை விசாரணை செய்யக்கூடாது.

ஆங்கிலேயரது குற்ற இயல் நீதி ஆட்சித்துறை வரலாற்றில் இவ் விதி ஒரு புதிய சகாப்தத்தைத் தோற்றுவிக்கும் முக்கியம் வாய்ந்தது. மன்னரின் நீதிபதிகளின் முன்பாக எல்லாக் கடுங்குற்றங்களின் விசாரணையும் உறுதி செய்யப்பட்டது. சட்டத்தில் பட்டறிவும் நுண்ணறிவும் உள்ளவர்களாயும், ஓரளவு தலத்தொடர்பில்லாதவர்களாயும் மன்னரது நீதிபதிகள் இருந்தனர். அநேகமாக எல்லாக் குற்ற விசாரணைகளையும் மாவட்ட நீதிமன்றங்கள், இன்னும் தரக்குறைவான தல நீதிக்குழு இவைகளின் அதிகார எல்லையிலிருந்து நீக்குவது இவ். விதியின் செயல்முறைப் பயனுயிற்று; முக்கியமான இந் நீதிச் சீர்திருத்தம் திடீரென்று ஏற்பட்டதன்று; நாளடைவில் ஏற்பட்ட முறைப்பயனுயிருந்தது. 1166–ல் ஏற்பட்ட கிளாரன்டன் அஸ்ஸைஸ் எனும் சட்டப்படி கொள்ளை, கொலை, களவு புரிந்ததாகக் குற்றஞ்சாட்டப்பட்டவர்களை விசாரணைக்காக ஷெரீஃப், மன்னரின் நீதிபதிகளிடம் அனுப்பி வைக்க வேண்டுமென்றிருந்தது.[36] 1194–ல் அவருடைய சொந்த மாவட்டத்தில் எந்த ஷெரீஃபும் நீதி விசாரணை

செய்கிறவராக இருக்கக்கூடாது என உத்தரவிடப் பட்டது.[37] ஷெரீஃபுகள் மற்றும் தல அதிகாரிகளுடைய அதிகார எல்லையிலிருந்து அரசாங்க வழக்குகளை மகா சாசனம் பிரித்தது.[38] இதுமுதல் குற்றஞ்சாட்டப்பட்ட அல்லது குற்றம் புரிந்ததாகச் சந்தேகமேற்பட்டவர் களின்மீது குற்றப் பத்திரிகை தயார் செய்து அவர்களைச் சிறையிலடைக்கலாம் எனினும், அரசாங்க நீதிபதிகள் தாம் அவர்களை விசாரணை செய்யலாம் என ஏற்பட்டது. 'அரசாங்க வழக்குகள்' என்பவை மன்னரது பெயரால் நடத்தப்பெறும் கொலைக் குற்ற வழக்குத் தொடர்தல் களாகும். சமூகத்தின் பொது உரிமைகளைப் புறக்கணித்து முரிவை உண்டுபண்ணும் ஒவ்வொரு செயலாலும் துன் புற்றவராகச் சட்டப்படி, கருதப்படுகிறவர் மன்னர்தான் என பிளாக்ஸ்டன் கூறுகிறார். கான்ஸ்டபிள்கள் எனப் படுவோர் கோட்டைகளின் கவர்னர்கள் அல்லது கோட்டையைப் பாதுகாக்கிறவர்கள் எனப்படுவர். இரண் டாவது ஹென்றியின் காலத்தில் இங்கிலாந்தில் 1100-க்கும் அதிகமான கோட்டைகள் இருந்தன. இக் கோட்டைக் காவலர்களின் அதிகாரம் மிகுதியாயிருந்தது. அவர்களின் கோட்டைகள் பண்ணை நிலங்களில் கட்டப்பெற்றிருந்தன. பண்ணை நிலங்கள் அடங்கிய பகுதிக்குள், அந்தந்த மாவட் டத்தில் ஷெரீஃபுகள் நடத்தியதைப்போன்று அவர்களும் கொலைக்குற்ற விசாரணை செய்தனர். கோட்டைகள் இல்லாத பண்ணை நிலங்களில் கிரிமினல், சிவில் வழக்குகள் பிரபுவின் அதிகாரத்திற்குட்பட்டிருந்தன. இவ் வதிகா ரத்தை ஸ்டுவேர்டுகளும் பெய்லிஃபுகளும் நிறைவேற்றி வந்தனர். தனிப்பட்டவர்களுடைய கோட்டைகளில் கிடைத்த பாதுகாப்புள்ள சிறைச்சாலை வசதிகள், மாவட் டங்களில் குற்றஞ்சாட்டப்பட்டுச் சிறையிலிருப்பவர்களைக் கான்ஸ்டபிள்களின் பாதுகாப்பின்கீழ் மாற்றஞ்செய் தனுப்புவதற்குக் காரணமாயிருந்தன. இதனால் கான்ஸ்ட பிள்கள் அவர்களுடைய பராமரிப்பைத் துஷ்பிரயோகஞ் செய்தனர். மகாசாசனப் பத்திரத்திற்குப்பின் சற்றேறக் குறைய இருநூறாண்டுகள் கழிந்து (ஹென்றி 4. விதி 10.) ஒரு சட்டம் அமைதிக் காவலர்கள் ஒரு பொதுச் சிறைச் சாலையில் குற்றவாளிகளைச் சிறைவைக்கும்படி ஆணை யிட்டது. 'இங்கிலாந்தின் எல்லைக்குட்பட்ட பல கோட்டைக் காவலர்கள், நாட்டின் தலைமைத் தலைவரான மன்னருடைய ஆணையின்படி அமைதிக் காவலர்களாக இருக்கும்படி நியமிக்கப்பட்டனர். இவ்வாணையை ஒட்டி

அவர்கள் யார்யாரைப்பற்றிக் கெட்ட எண்ணங் கொண் டிருந்தார்களோ, அவர்களையெல்லாம் கோட்டைக்குள் சிறையிலிட்டனர். தங்களது விடுதலைக்காக அபராதம், மீட்புப் பணம் முதலியவற்றைக் கோட்டைக் காவலர் களுக்குச் செலுத்தும் வரையில் அவர்கள் சிறையிலிருக்க நேர்ந்தது.' சிறையிலிருப்பவர்களை விசாரணை செய்யும் அதிகாரம் பெற்றிருந்தவர்களிடமிருந்து அவ்வதிகாரத்தை ரத்து செய்தது மக்களுக்கு அளிக்கப்பட்ட ஒரு பெருங் கொடையாகும்.

34. (**பிரசிபி ஆணைக் கட்டளை.**) சுதந்திரமானவர் அவரது உரிமையை இழக்காதிருப்பதற்காக எந்தச் சொத்து பற்றியும் யாருக்கும் வருங்காலத்தில் பிரசிபி எனும் ஆணையை வெளி யிடக்கூடாது.

நில உரிமை பற்றிய இறைமை பொருந்திய ஆணை, நிலத்தை வழங்கியுள்ள மானியப் பிரபுவின் உத்தரவுப் படியே அனுபவிக்கவேண்டும் எனும் நிலமானிய விதியை உறுதிப்படுத்துவதற்காக இவ் விதி வழிசெய்தது. பிரபு வின் நீதிமன்றத்தில் விவகாரம் துவங்கியது, (ஆனால். அங்கிருந்து மன்னருடைய நீதிமன்றத்திற்கு எடுத்துச் செல்லலாம் என்று ஆயிற்று.) பிரசிபி கோட் ரெட்டாட் எனும் உருவில் வெளியிடப்பட்ட ஆணை ஷெரீஃபுக்கு விண்ணப்பஞ் செய்வதென்றும் அதிகார வழுவைக் கண் டித்தது. பிரபுவிற்கு விண்ணப்பம் செய்வதால், அவரது எல்லைக்குட்பட்ட இலாபங்களை இழக்கச் செய்ததுடன் பதவிக் காலத்திற்கும் தொல்லை உண்டுபண்ணக்கூடும்.[59]

36. (**டி. ஓடியோ எட் ஆடியா ஆணை.**) உயிரிழப்பு அல்லது உறுப்பிழப்புபற்றிய ஆணை இது தொடர்பான விசார ணையை மறுக்காமல் இனாமாகச் செய்ய வேண்டும் என்று செய்தது.

'பகைமை, வெறுப்பு' பற்றியது இவ்வாணை. மோசக் கொலை அல்லது கொடுங்குற்றம் செய்ததாக (54 விதி பார்க்க) தனிப்பட்ட மனிதரால் குற்றஞ் சாட்டப்பட்டவர் குற்றம் கூறுவது நியாயமானதன்று என்றும் பகைமை காரணமாகக் கூறப்படுகிறது என்றும் எதிர்வாதம் புரியலாம். இதுகுறித்து, குற்றம் புரிந்தவர் அல்லது குற்றமற்றவர் என்று தலத் தீர்ப்புச் சான்றுளர் அளிக்கும் தீர்ப்பே முடிவானதாகக் கருதப்பட்டது. இவ்வாணை

குற்றஞ்சாட்டப்பெற்றவருக்கு மல்யுத்தம் செய்யவேண்டிய வாய்ப்பைத் தவிர்த்தது. அத்துடன் குற்றஞ்செய்ததற்காகச் சிறையிலடைக்கப்பட்டவர் சிலசந்தர்ப்பங்களில் ஜாமீனில் விடுதலை பெறவும், சுற்றுப்பிரயாணஞ் செய்யும் மன்னரின் நீதிபதிகளின் வருகையை எதிர்நோக்கியிருக்கவும் வழி செய்தது. ஆயினும், இவ்வாணையைப் பிறப்பிக்க உரிமையடிப்படையில் கேர்ர முடியாது; அரசரது ஆணையின் இணக்கத்தை முன்னிட்டுப் பிறப்பிக்கலாம்.[40] மன்னர் ஜானின் ஆட்சியைச் சாதகமாகக்கொண்டு இச் சிறப்புரிமைக்காகப் பெருந்தொகை மக்களிடமிருந்து பறிக்கப்பட்டது. மகாசாசனம், கட்டணமின்றி உரிமை முறையில் வழங்கப்பட வேண்டுமென்று கூறியது.[41]

38. (சூளுரைத்தல் சட்டம்.) நம்பத்தகுந்த சாட்சிகளைக் கொண்டு நிரூபிக்காமல், ஒருவருடைய வாய்மொழியைக் கொண்டே இனிமேல் பெய்லிஃப் எவரையும் அவருடைய சட்ட ஆட்சிக்குட்படுத்தக்கூடாது.

பதினான்காம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்தே இவ் விதியின் பொருள்பற்றி விவாதம் நடந்துகொண்டு வந்தது.[42] ஒருவனைச் சட்டப்படி நடத்துவதென்பது அவனுக்குத் தற்பாதுகாப்பு அளித்தல் எனப்படும்.[43] வழக்கு விசாரணையிலிருக்கும் பொழுது கிரிமினல், சிவில் நடவடிக்கைகளின் கொடுமைகளைத் தவிர்க்க இடைக்காலத்திலும், அதன் பின்னர் நெடுநாள்வரையிலும் கடு முயற்சிகள் எடுக்கப்பட்டன. மூல ஆணை, முறையீடு அல்லது குற்றஞ்சாட்டுதல் முதலியவைகளின் அடிப்படையில்தான் மன்னரின் நீதிமன்றங்களில் சட்ட நடவடிக்கைகள் தொடரக்கூடும் என அடிக்கடி வலியுறுத்தப் பட்டுவந்தது. எனவே, நீதிமன்றத்தில் ஆஜராக வேண்டுமென விடுக்கப்படும் உத்தரவு மூல ஆணையாகாதெனவும், குற்றஞ்சாட்டப்படாமலேயே மன்னர் நீதிமன்றமும் முடிவு செய்துவந்ததும் நீதிநேர்மையானதன்று என்று எதிர்ப்பு இருந்து வந்தது. நேர்மையானவர்கள் வழக்குத் தொடர விருப்பில்லாத காரணத்தாலும், பழிக்கஞ்சாதவர்கள் வழக்குத் தொடர விரும்பிய காரணத்தாலும் உண்டான பிரச்சினைகளைச் சமயஞ் சார்ந்த நீதிமன்றங்களும் மன்னர் நீதிமன்றங்களும் அணுகவேண்டியிருந்தன. இருமுறைகளிலும் நீதி தவறியது. திருச்சபையில் திருக்கூட்டத்தைச் சேர்ந்தவர்களாலான தீர்ப்புச் சான்றாளர் குழு நெடுநாள்களாகவே இருந்து வந்தது.[44] 1164-ல் இரண்டாம்

ஹென்றி திருக்கூட்டத்தைச் சார்ந்த தீர்ப்புச் சான்ருளர் களை நீதி விசாரணைக்காக அமைக்கும் பணியில் ஷெரீஃபு களுடைய ஒத்துழைப்பை திருச்சபைக்கு அளித்திருந்தார் எனினும், திருக்கூட்டத்துத் தீர்ப்புச் சான்ருளர் குழு அல்லது மெய்ப்பிக்கக்கூடிய சாட்சியம் குற்றஞ் சாட்டிஞ லன்றி லௌகீகர்களை, திருச்சபை விசாரணை செய்வது கூடாதென வற்புறுத்தியது.[45] இதற்குச் சிலவாண்டு களுக்கு முன்னரே நாட்டுத் திருக்கோயில் தலைவருடைய வெறும் வாய்ச்சொல்லே ஒருவரைக் குற்றம் கூறுவதற்குப் போதுமானதாகாதென நார்மண்டியில் ஹென்றி விதித் திருந்தார்.[46] குற்றஞ் சாட்டப்படும் முறையை நெறியாக்கி யதிலிருந்து 1166-ல் இச் சோதனை முறைகள் திருச்சபை நடவடிக்கையிலிருந்து மன்னரின் நீதி மன்றங்களுக்கு மாற் றப்பட்டன.[47] இப்போதுள்ள விதி (பெய்லிஃபையும் கூறுவதால்) நீதி விஷயத்தைச் சற்று உயர்த்தி, மான்யப் பிரபுக்களின் நீதிமன்றங்களுக்கும் தொடர்ந்தது. ஏனென் ருல், இம் மான்யப் பிரபுக்களின் நீதிமன்றங்களில் பெய்லிஃபுகளுக்குப் பழி வாங்கும் எண்ணத்திற்கும் துன்புறுத்தல்களுக்கும் நிறைய வாய்ப்பிருந்தது. பெய் லிஃப் பொதுவாகப் பண்ணை மன்றங்களில் வழக்குத் தொடர்ந்தார். குற்றஞ் சாட்டப்பெற்றவர் 'வழக்கையும் பெய்லிஃபையும் எதிர்த்து' வாதாடுவது பொதுவாக வழக்கிலிருந்தது.[48] இம்மாதிரியான வழக்குகள் கற்பனை களாகவேயிருந்தன என ஐயப்பட இடமளித்தது.

42. (நீ எக்சீட் ரெக்னே.) [இனிமேல் அவரவர் விருப்பப்படி நாட்டிலிருந்து வெளிச்செல்லலாம், திரும்பலாம்; போர்க்காலங் களில் 'நாட்டின் பொதுநலனைக் கருதி ஒரு சிறிதளவு காலம்' போக்குவரவைத் தடை செய்யலாம். கைதிகள், நாடு கடத்தப் பட்டவர்கள், வெளிநாட்டுப் பகைவர்கள் இவ் விதிக்கு விலக்கா யிருந்தனர். வெளிநாட்டு வணிகர்கள் 41ஆவது விதியில் கூறி யுள்ளபடி நடத்தப் பெறுவர்.][49]

இவ் விதி சமயத் தொடர்பையும் கொண்டிருந்தது. மறு விசாரணைக்காக வழக்குகளை ரோமாபுரிக்கு எடுத்துச் செல்லுவதில் காணப்பட்ட நடைமுறைத் தடங்கல்களை விலக்கியது. மூன்ரும் ஹென்றியினுல் இச் சாசனம் மறு வெளியீடு செய்யும்பொழுது மேற்கொண்டு கருதி முடிவு செய்வதற்காக இவ் விதி ஒதுக்கி வைக்கப்பட்டது எனினும், பின்னர் கைவிடப்பட்டது. நாட்டைவிட்டு,

யாரும் வெளியில் செல்லக்கூடாது எனும் ஆணைப்படி, நாட்டைவிட்டு எந்தக் குடிமகனும் வெளியேறுவதைத் தடை செய்யும் சிறப்புரிமை மன்னரிடம் அளித்திருந்தது. கட்டளையில்லாத வரையில், நாட்டிலேயே தங்கியிருக்க வேண்டுமென பொதுச் சட்டப்படி நாட்டை விட்டு விரும்பும்பொழுது வெளியில் செல்ல எவருக்கும் உரிமை உண்டெனினும், மன்னருடைய முன் அனுமதியின்றி, நாட்டை விட்டு வெளியில் செல்லுவதற்கு முன்பு சில வகுப்பினருக்கு தொடர்ந்து தடையிருந்து வந்தது.[50] இவ்வாறு பிரபுக்கள் தடை செய்யப்பட்டிருந்தனர். காரணம் மன்னருக்கு ஆலோசனை கூறுபவர்களாயிருந்ததுதான். படையெடுப்பிலிருந்து நாட்டைக் காக்கவேண்டியிருந்ததால் நைட் வீரர்களும், ரோமாபுரியின் மேற்றிராசனத்தைச் சேர்ந்திருந்தால் தனிச் சட்டத்தால் (கிளாரண்டன் அரசியல் சட்டங்கள் 1164) கட்டுப்படுத்தப்பட்டிருந்த சமயஞ் சார்ந்தவர்களும், இங்கிலாந்தில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களுடன் போட்டியிடுவதற்குத் தக்க அறிவை வெளிநாட்டினருக்கு அளிக்கக் கூடுமென்ற காரணத்தால் வில்லாளிகளும் தொழிலறிவு பெற்றவர்களும் தடை செய்யப்பட்டிருந்தனர். அனுமதியின்றி வெளி நாட்டிற்குச் செல்வதற்கு எல்லோருக்கும் 1381-ல் ஏற்பட்ட சட்டம், (5. ரிச். 2, சட். 1, விதி 2) தடை விதித்திருந்தது. இதற்கு விலக்காக, நாட்டின் பிரபுக்களும், பெருமகார்களும் சிறப்பு வாய்ந்த உண்மையான வணிகர்களும் மன்னரின் படைவீரர்களுமிருந்தனர். இச் சட்டம் முதலாவது ஜேம்ஸ் காலம் (4. விதி 1, பிரிவு 22) வரை ரத்து செய்யப்படாமலிருந்தது. அவருடைய ஆட்சிக்காலத்தில் போப்பின் ஆட்சியிலிருந்து பாதுகாத்துக் கொள்வதற்காக அனுமதி இன்றி நாட்டைவிட்டு, கடல்கடந்து வெளிநாடுகளிலுள்ள கல்விச்சாலைகளுக்காகவும் மற்ற எந்தக் காரணத்திற்காகவும் சிறுவர்கள் அனுப்பப் பெறுவதைத் தடைசெய்ய, பல சட்டங்களியற்றப்பட்டன (3. ஜேம்ஸ் 1, விதி 5). நியாயமான கடன்கள், உரிமைகள் பற்றிய நடவடிக்கைகளில் தொடர்புள்ளவர்கள் நீதிமன்றத்தின் அதிகார வரம்பிலிருந்து தங்களையும், தங்களது சொத்துகளையும் விலக்குவதற்காக வெளியேறுவதைத் தடை செய்ய நீ எக்சீட் ஆணை செயல்முறையிலிருந்தது.

44. (காடுகள்.) [காட்டு எல்லைக்குள் குடியிருக்காதவர்கள், காட்டுப் பகுதிகளில் நடக்கும் மன்னரின் நீதிமன்றங்களுக்கு

வருமாறு இனிமேல் பொதுக்கட்டளைகளால் கட்டாயப்படுத்தக் கூடாதெனவாயிற்று. காட்டுக் குற்றம் புரிந்தவர்கள் குற்ற விசாரணை செய்யப்படும்பொழுது உறுதிமொழி பகர்பவராகவோ அல்லது அவர்கள் மீது வழக்குத் தொடருகிறவர்களாகவோ இருந்தால் நீதிமன்றத்திற்கு வர, கட்டளையிடப் படலாம்.]

உட் ஸ்டாக் அஸ்ஸைஸில் (1184), இரண்டாம் ஹென்றி ம்ாவட்டம், காட்டுப் பகுதி இவைகளின் நீதிமன்றங்களுக்கிடையே மிகப் பொருத்தமான ஒற்றுமையை யேற்படுத்தினர். அதன்படி எல்லோரும் மன்னருக்குச் சொந்தமானதும் அல்லாததுமான மரங்களடர்ந்த காடுகளின்மீது மேலான சட்ட எல்லையைக் கொண்டிருந்த மன்னரது காட்டு நீதிமன்றங்களில் ஆஜராக வேண்டுமென்பதாம். சுற்றுப் பிரயாணம் செய்யும் நீதிபதிகளைப் போன்று அதேமுறையில் அதேசமயத்தில் காட்டுப் பகுதிகளுக்குச் செல்வதற்காக நீதிபதிகளை நியமித்தார். 1217-ல் சாசனத்திலிருந்து காடுபற்றிய விதிகள் நீக்கப்பட்டிருந்தன. மூன்றும் ஹென்றியின் (1217) தனிப்பட்ட காட்டுச் சாசனத்தில் சீர்படுத்தும் ஷரத்துகளாக இவ் விதிகள் அடங்கியிருந்தன.[51]

45. (நீதிபதிகளும் அமைச்சர்களும்.) ['சட்டத்தை அறிந்தவர்களையும் அதைக் கடைப்பிடிப்பதையே கடமையாகக் கருதுபவர்களையுமே' நீதிபதிகளாகவும், கான்ஸ்டபிள்களாகவும் (கோட்டைப் பாதுகாப்பாளர்), ஷெரீஃபுகளாகவும், பெய்லிஃபுகளாகவும் நியமிப்போம்.]

54. (மகளிரது குற்றச்சாட்டுகள்.) கணவரின் மரணத்திற்காக அன்றி மகளிரின் குற்றச்சாட்டிற்காக எவரையும் கைப்பற்றுவதோ சிறையிடுவதோ கூடாது.

கொலை புரிந்ததால் ஏற்படும் மரணங்களுக்கு கொடுங் குற்றச்சாட்டுதலைச் செய்ய இறந்தவருடைய சில குறிப்பிட்ட உறவினர்கள், அல்லது மான்யப் பிரபு, இறந்தவருடைய மனைவி, அல்லது ஆண் வாரிசுக்காரர் அனுமதிக்கப்பட்டிருந்தனர். கீழ் நீதிமன்றங்களில் வழங்கப்பட்ட தீர்ப்பை மறு விசாரணை செய்வதற்காக உயர் நீதிமன்றங்களுக்குச் சாதாரணமாக எடுத்துச் செல்லப்படும் வழக்கைக் குறிப்பிடுவதாக 'அப்பீல்' எனும் சொல் வழங்கப் படவில்லை; குற்றஞ் சாட்டுதலையோ அல்லது அறை

கூவுதலேயோ குறிக்கிறது. பொது மக்களுக்கு இழைத்த குற்றத்தைக் காட்டிலும் ஒருவனுக்கு இழைத்த சிறப்பான சேதத்திற்காக ஒருவர்மீது மற்றொருவரால் தொடங்கப் பெறும் வழக்கு எனப் பொருள்படும். இம்மாதிரி வழக்குகளில் பிரதிவாதிக்கு மற்போர் சோதனையிலீடுபடுவதற்கு உரிமையுண்டு (நார்மானியர் காலத்தில் தோன்றியது). வழக்கில் சம்பந்தப்பட்டவர்களேதான் மற்போர் புரிய வேண்டும். வழக்குத் தொடுப்போர், பெண்டிர், சமயகுரு, குழவி, கூன் குருடு அல்லது அறுபதாண்டு நிரம்பப் பெற்றவர் முதலியவர்களாயிருந்தால், அவர்களுக்காக ஒரு வெற்றி வீரனை மற்போருக்காகக் கூலிக்கு அமர்த்திக் கொள்ள அனுமதிக்கப்பட்டனர். எனவே, பெண்டிர் தொடுக்கும் வழக்கு விரும்பத்தக்கதன்று என்றும் அம்மாதிரியான வழக்கு கணவரின் மரணத்திற்காக மாத்திரம் தொடங்கலாம் என்றுமிருந்தது. இவ் வழக்குகளில் பிரதிவாதியாயுள்ளவர் கடுஞ்சோதனைவாயிலாக தனது குற்றமின்மையைத் தெளிவுறச் செய்யலாம். கடுஞ் சோதனை முறை அறவே விலக்கப்பட்ட (ஒழிக்கப்பட்ட) பொழுது குற்றம் புரிந்தவரின் நாட்டைச் சேர்ந்த சான்ருேளர் குழுவினரது தீர்ப்பினுல் குற்றமின்மையைத் தெளிவுபடுத்தலாம்.[52] மற்போர்ச் சோதனையில் பிரதிவாதி தோல்வியுற்ருலோ அல்லது குற்றவாளியென முடிவு செய்யப்பட்டாலோ, குற்றஞ் சாட்டப்பட்டு தண்டனை பெற்றவரைப் போன்று அதே தண்டனைக்குள்ளாஞர். இதில் வழக்கு தனிப்பட்டவருடையதாதலால்,[53] மன்னருக்கு மன்னிப்பு அளிக்க அதிகாரமில்லாதிருந்தது. குற்றஞ்சாட்டப்பட்டு விசாரணைக்குப்பின் விடுதலை செய்யப்பட்ட பிரதிவாதியை மறு விசாரணைக்குக் கொண்டு வரலாம். இவ்வாறு மறு விசாரணை உரிமையைச் செயல்படுத்துவதற்கான கால அளவு க்ளௌஸெஸ்டர் சட்டத்திஞல் (6 எட்வ. 1, விதி 9) ஓராண்டும் ஒரு நாளும் வரையறுக்கப்பட்டது. 'மற்போர்', அரசு நீதிபதிகளின் மன்றத்தைச் சேர்ந்த அல்லது பொதுக் குற்றச் சாட்டுகளை விசாரணை செய்யும் நீதிக் குழுவைச் சேர்ந்த நீதிபதிகளின் முன்னிலையில் நடந்தது. இந் நீதிபதிகள் சிகப்பு மேலாடைகளை அணிந்துகொண்டு போரை நோக்குவர். போர் புரிகிறவர்கள் ஒவ்வொருவரும் 45-லிருந்து 27 அங்குலம் வரை நீளமுள்ள நீண்ட கோலேயும் தோல் கேடயத்தையும் போர்க்கருவிகளாகக் கொண்டு, கதிரவன் தோன்றியது முதல் விண்மீன்கள் உதிக்கும் வரையிலோ

அல்லது அவர்களில் ஒருவர் 'தயை வேண்டும்' என கூக்குரல் எழுப்பும் வரையிலோ போர் நடைபெறும். நெடு நாட்களாகவே வழக்கு ஒழிந்துபோனாலுங்கூட குற்றஞ் சாட்டப்படுவதும் மற்போர்ச் சோதனையும் 19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில்தான் சட்டரீதியாக ஒழிக்கப் பட்டன.[54] *1817*-ல் மேரி ஆஷ்ஃபோர்டைக் கொலை புரிந்ததாயும் பலாத்காரமாய் கற்பழித்ததாயும் குற்றஞ்சாட்டப் பட்ட ஆபிரகாம் தாரன்டன் என்பவர் மன்னரது நீதிமன்றத்தில் விசாரணை செய்யப்பட்டார். குற்றஞ் சாட்டப் பட்டவர் வார்விக் நீதி மன்றத்தில் இதே குற்றச்சாட்டிற்காக விசாரணை செய்யப்பட்டு விடுதலை பெற்றார். எனினும், நீதிமன்றத்தில் நடுவர் முன்னிலையில், வழக்குத் தொடுத்த இறந்துபோனவருடைய உடன்பிறந்தானுடன் மற்போர் புரிய அறை கூவினார். இக் கோரிக்கையை நீதிமன்றம் அனுமதித்தது. எனினும், இவ் வழக்கில் ஏற்பட்ட புதிய சார்பு நிலையைக் கருத்தில்கொண்டு அவகாசம் அளிக்கப்பட்டது. இறுதியில் வாதி அறை கூவலை ஏற்க மறுத்துவிட்டார். 1818-ல் அக்டோபர் 20ஆம் நாள் எதிர்வாதி ஜாமீன் ஏதுமின்றி விடுதலை செய்யப்பட்டார்.[55] இதன் பயனாக 59 ஜார்ஜ் 3, விதி 46 எனும் அரசுச் சட்டம் (சூன் 22, 1819) ஏற்படலாயிற்று. இதற்கு 'கொலை, அரசுத் துரோகம், கொடுங்குற்றம் போன்ற வேறு குற்றங்கள் முதலிய குற்றச்சாட்டுகளையும் உரிமை ஆணை பற்றி மற்போர் புரிய அறைகூவுதல் அல்லது விவகாரத்தைத் தொடர்ந்து மற்போர் சோதனை முதலியவைகளை விலக்கும் சட்டம்' எனப் பெயரிடப் பட்டது.[56]

## III.—அரசியல் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகள்

**12.** (கேடய வரி.) [மன்னரை மீட்பது, மன்னரது மூத்த மகனை நைட் வீரனாக்குவது, அவரது மூத்த மகளுக்கு முதன் முதலாகத் திருமணஞ் செய்வித்தல் போன்ற இம் மூன்றிற்கும் தவிர வேறு எதற்கும் கேடய வரியோ அல்லது உதவித் தொகையோ விதிக்கக்கூடாது. மேற்கூறிய மூன்றிற்கும் விதிக்கப்படும் உதவித்தொகையும் நியாயமானதாயிருக்க வேண்டும். லண்டன் நகருக்கு ஏற்பட்ட உதவித்தொகைகளும் இதே போன்று இருத்தல் வேண்டும்.]

14. (பொதுச்சபை.) [உதவித்தொகை, கேடய வரி முதலியவைகளை விதிப்பதில் (முறைப்படி செலுத்தப்பட வேண்டிய மூன்று மான்யத் தொகை நீங்கலாக) நாட்டு மக்கள் சபையின் கருத்தைப் பெறுவதற்கு அதிமேற்றிராணியார், மேற்றிராணியார், மடத்துத் தலைவர்கள், ஏர்ல்கள், பெரிய பிரபுக்கள் முதலியவர்களைத் தனித்தனியாக அழைப்பாணை விடுவதன் வாயிலாகவும், மற்ற எல்லா மான்யக் குடிகளுக்கும் ஒவ்வொரு மாவட்டத்தின் ஷெரீஃபுக்கு விடுக்கப்பட்ட பொதுவான ஆணை வாயிலாகவும் கூட்டங் கூட்டுவதற்கு மன்னர் கட்டளையிடுவார். இக் கூட்டத்திற்கு ஒரு நாளையும் இடத்தையும் குறிப்பிடவேண்டும்; அத்துடன் கூட்டம் கூடுவதற்கான காரணத்தையும் அழைப்பு உத்தரவில் கண்டிருக்க வேண்டும்; கூட்டத்தின் நாளுக்கு நாற்பது நாள்களுக்கு முன்னதாக அறிவிக்கப்பட வேண்டும். குறிப்பிட்ட நாளில் ஆஜராயிருந்தவர்களின் ஒப்புதலைப் பெற வேண்டும். இவர்களது ஒப்புதல் கூட்டத்திற்கு அழைக்கப்பட்டு வராதவர்களையும் கட்டுப்படுத்தும்.]

இவ்விரு விதிகளும் (12, 14) தன்னிச்சையாக வரி விதிப்பதற்கு மன்னர் கொண்டாடிய உரிமையை அடிபணியச்செய்வதாயிருந்தன எனவும், நாட்டுச் சபையின் ஒப்புதலின்றி மக்கள் மீது வரிவிதிப்புக் கூடாதென்னும் கொள்கையை உறுதி செய்ததெனவும் கூறப்படுவதுண்டு. ஆனல், இவ் விதிகள் பொதுவான வரிவிதிப்பை விடுத்து குறிப்பிட்டவைகளான கேடய வரி, மான்யக் குடிகளிடமிருந்து பெறவேண்டிய உதவித்தொகை, லண்டன் நகர் வாழ் மக்களிடமிருந்து பெறவேண்டிய உதவித்தொகை முதலியவைகளைப் பற்றியதாயிருந்தன. பட்டணங்களின் மீது விதிக்கப்பட்ட டல்லேஜ் வரி சேர்க்கப்படவில்லை.[57] பட்டணங்கள் பெரும்பாலும் மன்னருடைய அல்லது வேறு பிரபுவினுடைய மான்ய நிலங்களாக இருந்தன. அங்கு வாழ்ந்த மக்களும் உட்குடி போன்றவர்களாகக் கருதப்பட்டனர். பிரபுக்களுடைய கோரிக்கைகளில் (திருத்தஞ் செய்யப்படாத நகல் பின்னர் சாசனத்தில் சேர்க்கப்பட்டது) கேடய வரி, உதவித் தொகை முதலியவை நாட்டு மன்றத்தின் ஒப்புதலின்றி விதிக்கக் கூடாதென்று குறிக்கும் ஷரத்துகளைத் தொடர்ந்து இச் சொற்கள் காணப்படுவது தெரியவரும். லண்டன் நகரம், அதனிடமிருந்து விடுதலைபெறப்பட்ட நகரங்கள் முதலியவைகளிடமிருந்து பெறப்படும் டல்லேஜ் வரி முதலான உதவிகளும் மன்ற ஒப்புதலின் பேரில் செய்யப்பட

வேண்டும் என்பதாம். டல்லேஜ் வரியை விலக்கியதிலும் (1340-ல் இவ் வரிக்கு அரசுரிமை நீக்கப் பெற்றது) சாசனம் வழங்கப்பெற்ற வேறு பட்டணங்களேயும் சேர்க்காமல் விட்டதிலும், மான்யப் பிரபுக்கள், அவர்களுடைய பாத்தியதைகள் சம்பந்தப்படாத விஷயங்களில் ஜான் மன்னருக்குச் சலுகையை அளித்திருக்கலாம். அப்படியாயினும், துணைக் குடியானவர்கள் இவ் விதியினுல் இலாபமடைந்தனர். கட்டாய வரி விதிப்புக்குட்பட்டிருந்த பிரபுக்கள், அச் சமயங்களில் மான்யக் குடியானவர்களுடைய உதவியைப்பெறுவதற்கு உரிமையை உடையவர்களாயிருந்தனர் என்பதாம்.[58] 'மான்யப் பிரபு' எனும் சொல் பரந்த பொருளேக் குறித்தது; இக்காலத்தில் ஏற்றுக்கொள்ளப் பட்டிருப்பதைப்போல் அப்பொழுது ஒரு பதவியைக் குறிப்பிடுவதாயில்லே. லண்டன் நகரத்திய குடிமக்களும் இங்கு துறைமுகப்பகுதியில் உள்ளவர்களும் சில சமயங்களில் 'மான்யப் பிரபுக்கள்' எனப் பெயரிட்டழைக்கப் பட்டனர். 'பெரும் பிரபுக்கள்' பிரபுக்கள் சபையில் இடம் பெற்றனர்; மற்றவர்கள் தனி அரசியல் பிரிவை இழந்து பொது மக்களுடன் கலந்து, மக்கள் சபையில் பட்டணங்களுடன் சேர்ந்து பிரதிநிதித்துவம் பெற்றனர். தேசிய மன்றத்தைக் கூட்டும் முறைபற்றி விளக்கம் கூறுவதாயுள்ள 14ஆம் விதியின் உட்கருத்தை 'பார்லிமென்டின் தோற்றம்' எனும் அதிகாரத்தில் பின்பு எடுத்துரைக்கப்படும். சாசனத்தைப் புதுப்பித்துள்ள மூன்ரும் ஹென்றியின் வெளியீடுகளில் 12, 14ஆம் விதிகள் விடப்பட்டபோதிலும், அவரது ஆட்சியில் கேடய வரி, உதவித் தொகை முதலியவற்றை அளிக்கும் முறை பின்பற்றியதாகத் தோன்றுகிறது.[59] மேலும், இப்பகுதி அரசருக்குச் சேரவேண்டியவைகளேப்பற்றித்தான் கூறுகிறதெனினும், பிரபுக்கள் அவர்களுடைய சொந்த மான்யக் குடிகளுடைய விஷயத்திலும், இக் கொள்கையைக் கடைப்பிடித்தனர் என்பது தெரியவரும். 1235-ல் ஹென்றி டி டிரேஸி என்பார், அவருடைய நைட் வீரர்களே ஒன்றுதிரட்ட ஆணையிட்டார். மன்றத்தில் கூடியிருந்தவர்கள் அவருக்கு உதவித் தொகையை வழங்கினர்.[60]

39. (**நீதியின்றிச் சிறைபிடித்தல்.**) சுதந்தரமான மக்களேக் கைப்பற்றுவதோ, சிறைபிடிப்பதோ, சொத்துப் பறிமுதல் செய்வதோ, சமூகத்திலிருந்து விலக்குவதோ, நாடு கடத்துவதோ, எவ்விதத்திலும் அழிவையுண்டாக்குவதோ கூடாது.

அத்துடன் அவனுடைய பிரபுக்களின் சட்ட மன்றத்தின் தீர்ப்பினலும் அல்லது நாட்டின் சட்டப்படியும் குற்றமற்றவரா யிருப்பவரின்மீது நேரிலோ பிறர்வாயிலாகவோ நாம் வழக்குத் தொடரமாட்டோம்.

40. (நீதி விற்பனை.) நீதி வழங்கப்படுவதையும் உரிமையை யும் நாம் விற்கவோ, மறுக்கவோ, தாமதப்படுத்தவோ மாட்டோம்.

சாசனத்திற்கு முன்பு தெளிவுரை கூறியவர்கள் இவ் விதிகளில் பிற்காலத்தில் ஏற்பட்ட சட்டக் கருத்துகளை எடுத்துக் கூறியதுடன், விதிகளில் அடங்கிய கொள்கை களின் முக்கித்துவத்தையும் மிகைபடக் கூறுவராயினர். உதாரணமாக, ஸர் ஜேம்ஸ் மாகிண்டோஷ் கூறுவ தாவது:[61] இதில் 'ஹெபியஸ் கார்ப்பஸூம், நீதிச் சான் ருேளர் குழுவைக் கொண்டு குற்ற விசாரணை செய்வதும் அடங்கியுள்ளன என்பதில் ஐயமில்லை. இவ்விரண்டும் கொடுங்கோன்மைக்கு எதிரான பயனுள்ள பாதுகாப்பாக மனித அறிவினல் நிறுவப்பட்டதாகும்;' ஹாலம் என்பார் இவ் விரு விதிகளையும் 'மிகத் தேவையானவை' எனவும், 'தன்னிச்சைப்படி சிறையிடுவது, தன்னிச்சைப்படி சூறை யாடுவது இவைகளிலிருந்து எல்லாச் சுதந்தரமானவர் களுடைய சொந்த உரிமை, சொத்து இவைகளைக் காப் பாற்றுவதற்குப் பாதுகாப்பை அளிப்பதாயும்' கூறு கிருர்.[62] இக் கருத்துகளுக்குச் சிறிது மாற்றம் அளிக்கப் படவேண்டும். சிறிய தீர்ப்புச் சான்ருேளர் குழு அடங்கிய குற்ற விசாரணையோ, ஹெபியஸ் கார்ப்பஸ் ஆணையோ ஆட்சியில் இல்லை. அவ்வப்போது மன்னர்கள், முடியாட் சிக்கு எதிராக திட்டமிடுகிறவர்களெனச் சந்தேகப்பட்ட வர்களைத் தன்னிச்சைப்படி, சிறையிலிடும் தனிச் சிறப் புரிமைக்கு உரிமை பாராட்டுவதைத் தொடர்ந்து செய் தார்கள். மகா சாசனத்தின் கருத்துக்கு மாருகயிருந்தது என்று கூறப்படும் காரணத்தைக்கொண்டு உரிமை விண் ணப்பத்தால் இவ் வுரிமை ஒழிக்கப்பெற்றது.[63] இவ் விதி கள் புதிய கொள்கைகளை எடுத்துக் கூறவில்லை. ஜான் மன்னர் புரிந்த தன்னிச்சையான செயல்களிலிருந்து சுதந் தரமானவரைக் காப்பாற்றுவதற்கென ஏற்பட்டன.[64] எனினும், எவ்விதத்திலும் விதிகளின் முக்கியத்துவத்தைக் குறைக்கவில்லை. மன்னருடைய போக்கிற்கு உட்படுத் தாமல் உரிமையுள்ள மனிதனை அவனது உயிர், உரிமை, சொத்து முதலியவைகளைச் சட்டத்திற்கு மாத்திரம்

உட்படும்படி செய்தது அடிப்படையான ஒரு முன்னேற்றத்தை ஏற்படுத்தியது. பிராக்டன் என்பவரின் குறிப்புப் புத்தகத்தில் நி. 857, ஹ்யூபர்ட் டி பர்க் என்பவரைக் குறித்து இக் கொள்கை உறுதி செய்யப்பட்டுள்ளது. ஆங்கிலேய அரசியலமைப்பு வரலாற்றின் வழக்குகளில் (நன்கு அறியப்படாத) முக்கியமானவைகளில் இது ஒன்றாகும்.

(1) உரிமையுள்ளவன் எவனும், விசாரணையின்றி தடைசெய்யப்படுவதோ சிறையில் அடைக்கப்படுவதோ கூடாது.

(2) உரிமை, மான்யம், உரிமைகள், பழக்கத்திலுள்ள மாமூல்கள், அதாவது ஒருவருக்கு அளிக்கப்பட்டுள்ள மான்யம் பற்றிய வாக்குரிமைகள், கட்டுப்படுத்தப் பெறாத உரிமைகள், சுதந்திரங்கள் முதலியன அவரிடமிருந்து பறிக்கப்படமாட்டா.[65]

(3) அல்லது எவரும் நாடு கடத்தப்படுவதோ அல்லது எவ்விதத்திலும் அவருக்கு அழிவை உண்டு பண்ணுவதோ கூடாது. சமூக விலக்கு என்பது பொது மக்களுக்கு பேரறிவிப்புச் செய்வதன் வாயிலாக ஒரு மனிதனை சமூக சட்டதிட்டங்களிலிருந்து விலக்குதலைக் குறிப்பதாயிற்று. இவ்வாறு விலக்கப்பட்டவர்களுக்கு சட்டம் பாதுகாப்பளிக்கும் பயனை அளிக்காது. இம்முறை ஆல்ஃபிரட் மன்னர் காலம் முதல் வெற்றிவீரன் வில்லியம் மன்னர் காலத்திற்குப்பின் நெடுநாள் வரை கொடுங்குற்றம் புரிந்தவர்கள் மாத்திரம் இத் தண்டனையை ஏற்பதாயிருந்தது. கொடுங்குற்றத்திற்கு மரண தண்டனை விதிக்கப்பட்டது. எனவே, சமூக விலக்குத் தண்டனை அளிக்கப்பட்டவர், ஓர் ஓநாயின் தலையை எவரும் அறுக்கலாம் என்று சொல்லப்பட்டது போல, எவராலும் கொல்லப்படலாம். மூன்றாம் எட்வர்டினுடைய ஆட்சியின் முற்பகுதியில் ஷெரீஃபைத் தவிர மற்றெவரும் சமூக விலக்குச் செய்யப்பட்டவரைக் கொலை செய்யக்கூடாதென முடிவு செய்யப்பட்டது. மற்றவர் எவரும் கொலை செய்தால் கொடுங்குற்றம் புரிந்ததாகக் குற்றஞ்சாட்டப்படுவர். சமூக விலக்களிக்கப்பட்டவரைக் கைப்பற்றும்பொழுது எதிர்பாராதவகையில் கொலை செய்யப்பட்டால் மாத்திரம் கொடுங்குற்றஞ்செய்த தண்டனையிலிருந்து விலக்கு அளிக்கப்படும். குற்றஞ்சாட்டப்பட்டவர் நாட்டை விட்டு ஓடியபொழுது விசாரணை செய்யும் முறை நடைபெற இயலவில்லை. அப்பொழுதெல்லாம் சமூக விலக்கு அளிப்

பது முறையாயிருந்தது. இம்மாதிரி செய்வது, குற்ற தண்டனையை விதிப்பதற்குச் சமமாயிருந்தது. 'நாடு கடத்தல்' வெளியேற்றப்படுவது என்பதை அவ்வளவாகக் குறிக்கவில்லை. பதிலாக சிறிய அல்லது பெரிய மான்யக் குடியானவரை அவருடைய சொத்துகளைக் கைவிடுமாறு துன்புறுத்துவதைக் குறித்தது.[66] 'அழிக்கப்பட்டது' என்பது எல்லாவற்றையும் 'இழத்தல்' எனும் பொருள் படும்படியாக நாட்டு மக்கள் வழங்கும் கொச்சைச் சொல் லாயிருந்தது.

(4) 'எவரையும் எதிர்த்து நாமோ (மன்னர்) அல்லது படைகளோ செல்லுவது இல்லை'. இச் சொற்களைக் கோக் என்பார் சட்ட வழக்கின் நடைமுறை அமைப்புபற்றித் தொடர்புடையதாகத் தவறாக விளக்கஞ் செய்துள்ளார். ஆனால், வின்கார்டு என்பார் சொற்களின் சரியான சிறப்புக் கருத்தை சொல்லியுள்ளதாவது, ஜான் மன்னர் எவ்வித மான சட்டத்தையும் பின்பற்றாது[67] அவருக்கு ரகசிய மான பகைவர்கள் என ஐயப்பட்டவர்கள் அல்லது தெரிந் தவர்களுடைய கோட்டைகளை எதிர்த்து ஆயுதந்தாங்கிய படையுடன் செல்லுவதையோ அல்லது ஆயுதந்தாங்கிய படையை அனுப்புவதையோ பழக்கமாகக் கொண்டிருந் தார். மே மாதம் 10ஆம் நாள் குறிப்பிடப்பட்டதும் ஆட்சிக்கு வந்த 16ஆவது ஆண்டில் வின்ஸர் அரண்மனை யில் ஏற்பட்டதும் ரன்னிமீட் சந்திப்பிற்குச் சுமார் ஒரு மாதம் முன்னதாக வெளியான மன்னரது உரிமைத் திரு முகம்,[68] அவருக்கு எதிராகத் தோன்றிய நாட்டுக் கூட்டத் திலிருந்து மான்யப் பிரபுக்களைப் பிரிப்பதற்கு முயன்றது. இராச்சியத்திலிருந்த சுதந்தரமானவர்களுக்கெல்லாம் பின்பு சிறப்பாக வழங்கப்பட்டவைகளை மான்யப் பிரபுக் களுக்கும் அவர்களின் பாதுகாப்பிற்காக வைக்கப்பட் டிருந்த துணையாட்களுக்கும் அளிப்பதாக உறுதிகூறிற்று. 'என்னை (மன்னர்) எதிர்த்த மான்யப் பிரபுக்களையோ அல்லது அவர்களுடைய ஆட்களையோ சிறைபிடிப்பதோ, அல்லது அவர்களைப் பதவிகளிலிருந்து விலக்குவதோ, அல்லது அதிகாரத்தாலோ அல்லது படையைக் கொண்டோ அவர்களைத் தாக்குதலோ செய்யப்படமாட் டாதென ஒத்துக்கொண்டுள்ளதை எல்லோரும் அறிய வேண்டும். எதுவும் நாட்டின் சட்டப்படிக்கும் அல்லது குற்றம் புரிந்தவருக்கு, சமமான தகுதி வாய்ந்தவர்களால் முடிவு செய்யப்படுவதற்கேற்ப நடந்துகொள்ளுவேன்'.

(5) 'நாட்டின் சட்டப்படிக்கோ அல்லது குற்றம் புரிந்ததாகக் கூறப்படுகிறவருக்குச் சமமான அந்தஸ்து (தகுதி) உடையவர்களால், சட்டப்படி தீர்ப்பளிக்கப் படாதவரை', இந்தச் சொற்கள் பலவாறாகப் பொருள் கூறப்பட்டுள்ளன. 'வெல்' எனும் சொல் இணைப்பதாக உள்ளதா அல்லது பிரிப்பதாகவுள்ளதா என்பதுபற்றி வெகுவாக வாதம் செய்யப்பட்டுள்ளது. இணைப்புச் சொல்லான 'உம்' அல்லது[69] எனும் பொருளுடையதான 'துணை பிரிப்பதாகவுள்ள' சொல் என்ற மெயிட்லந்து என்பாரின் யோசனை சிறந்த கூற்றாகும். 'இவ் விதியைப் பற்றி மான்யப் பிரபுக்கள் மனத்தில் கொண்டிருந்த கருத்து விசாரணை அமைப்பைப் பற்றியதன்று; சட்டத்தின் பொதுத் தன்மையும் அவை அளிக்கும் உரிமைகளைப் பற்றியதாகும்' என்று பேராசிரியர் ஆடம்ஸ் கூறுவது பொருத்தமுடையதாகும்.[70] மகா சாசனத்திலுள்ள 'சமமான அந்தஸ்துடையவர்கள் தீர்ப்பு' (ஜூடிஷியம் பாரியம்) எனும் சொற்றொடர் விசாரணைத் தன்மையின் பொருள் நுட்பம் பற்றிய இலக்கணத்தைக் காட்டிலும் நெடுநாட்களாக வழக்கத்திலிருந்துவந்த சட்டக் கொள்கையை விரிவாகக் கூறுவதாயுள்ளது; 'ஜெர்மன் நீதிச் சட்டத்திற்கு எல்லாம் இது அடிகோலிற்று. அத்துடன் இங்குப் பயன்படுத்தப்பட்ட விதி முறை ஃபிரான்கோனிய, சாக்ஸானிய மன்னர்களுடைய[71] சட்டங்களிலிருந்து ஏற்றுக் கொள்ளப்பட்டதாயுமிருந்தது'. வழக்கில் பிரபுக்களும் துணை வழக்காடுபவர்களாயிருந்தனர்; மான்யப் பிரபு விஷயத்தில் 'குரியாரெஜிஸ்' எனப்படும் மன்னர் கௌன்சிலிலுள்ள (சபை) மற்றப் பிரதம மான்யதாரர்களும் இடைப்பட்ட மான்யப் பிரபுவின் குடியானவர்களின் விஷயத்தில் மான்யப் பிரபுவின் நீதிமன்றத்திலுள்ள மற்றவர்களும் வழக்காடுபவர்களாக இருந்தனர்.[72]

(6) எவருக்கும், நேர்மையானதை அல்லது நியாயமானதை வழங்குவது என்பதைத் தவிர நீதியை விற்கவோ அல்லது மறுக்கவோ அல்லது காலங்கடத்துவதோ செய்தல் கிடையாது. இந் நிபந்தனை, நீதி விசாரணை பற்றிய நடவடிக்கைகளைத் தாமதப்படுத்துவதற்கு அல்லது விரைவுபடுத்துவதற்காக முற்காலங்களில் செலுத்தப்பட்ட கையூட்டு அல்லது தண்டத் தொகையைக்குறித்து ஏற்பட்டதாகும்.[73] 'யாருக்கும் நாம் விற்கமாட்டோம்' எனும் தொடர் உரிமை அல்லது தீர்ப்பைச் சேகரிப்ப

தற்குச் செலுத்தப்பட்ட தண்டத் தொகையை நீக்கும் நோக்கத்தையுடையதா யிருந்தன. 'எவருக்கும் நாம் மறுக்கமாட்டோம்' என்பது வழக்குகளைத் தடை செய்வதையும் அரச ஆணை பிறப்பிக்க மறுப்பதையும் 'எவருக்கும் நாம் தாமதஞ் செய்ய மாட்டோம்' என்பது மன்னருடைய உத்தரவினுலோ அல்லது பிரதிவாதிகளுடைய எதிர்மறையான தண்டத் தொகையினுல் உண்டாக்கப்பட்ட தாமதங்களை (இவர்கள் சில சமயங்களில் வாதிகளைக் காட்டிலும் அதிகமாகத் தொகை கொடுக்கலாயினர்) குறித்தும் ஏற்பட்டன. சாசனத்தின் இவ் விதி, சட்ட நடவடிக்கைகளுக்கான தண்டத் தொகையை நியாயமானதாகச் செய்யவும் மேற்கூறிய குறைபாடுகள் நாளடைவில் மறைந்து போகவும் பயனுடையதாயிருந்தது என மாடோக்ஸ் என்பார் கூறுகிருர்.[74]

## IV.—நகரங்கள், கிராமங்கள், வாணிகம்

*13.* (லண்டன்.) லண்டன் நகரம் அதன் பழமையான உரிமைகளையும் சுங்கத் தடையில்லாமையையும் பெற்றிருக்கும். அதேபோன்று மற்ற நகரங்களும், பட்டிணங்களும் துறைமுகங்களும் இருக்கும்.

*33.* கடற்கரை நீங்கலாகத் தேம்ஸ், மெட்வே ஆறுகளின் மீதும் இங்கிலாந்தில் மற்றெல்லாப் பகுதிகளிலும் அணைக் கட்டுகள் எடுக்கப்பட வேண்டும்.

கைடெலி எனப்படுபவைகள் மீன் பிடிப்பதற்காகக் கட்டப்படும் அணைகளாகும். இவ் வணைகளை எடுப்பது, எல்லோருக்கும் பொதுவான ஆறுகளில் மீன் பிடிக்கும் உரிமையை தனிப்பட்ட மனிதர்கள் அவர்களுக்கு உரிமையாகக் கொள்வதைத் தடை செய்யும் நோக்கத்தைக் கொண்டதென அடிக்கடி கூறப்பட்டது எனினும், நீர்த் துறைகளின் வழியாகப் படகு போக்குவரத்தைத் தடை செய்யக்கூடியவை எல்லாவற்றையும் நீக்குவதுதான் அடிப்படை நோக்கமாகும்.[75] தேம்ஸ், மெட்வே ஆறுகளின்மீது அமைக்கப்பட்டிருந்த அணைகளை எடுப்பதுபற்றிய உத்தரவு இப்போது ஏற்பட்டதுடன் மிகப்பழைய வேறுபல சாசனங்களிலும் சட்டங்களிலும் வலியுறுத்தப்பட்டிருக்கிறது.

35. (நிறுவையும் அளத்தலும்.) இராச்சியம் முழுமைக்கும் ஒரேமாதிரி அளவுள்ள அளக்கும் கருவிகளும், ஒரேமாதிரி எடையுள்ள நிறுக்கும் கருவிகளும் இருக்க வேண்டும்.

முதலாம் ரிச்சர்டின் அஸ்ஸைஸ் ஒன்றில் ஒரே மாதிரியான நிறுவைக் கருவிகளும் அளத்தல் கருவிகளும் இருக்க வேண்டியது பற்றிக் கட்டளையிடப்பட்டுள்ளது. அத்துடன் 1194-ல் அம் மன்னரால் நாட்டைச் சுற்றும்பொழுது வெளியிடப்பட்ட விதிகளிலும் இதுபற்றிக் கட்டளையிடப்பட்டது காணப்பெறுகிறது. சுற்றிவரும் நீதிபதிகளும் இதைப்பற்றி விசாரணை செய்யுமாறு உத்தரவிடப்பட்டிருந்தனர்.[76] (திராட்சை ரசம், மற்றும் பல பொருள்கள் விற்பனையில் சரியான எடைகளைப் பயன்படுத்துதல்).

41. (வெளிநாட்டு வணிகர்கள்.) வாணிகத்திற்காக இங்கிலாந்திற்கு வருவதற்கும், தங்குவதற்கும், பிரயாணஞ் செய்வதற்கும், நாட்டைவிட்டுப் புறப்பட்டுச் செல்வதற்கும் எல்லா வியாபாரிகளுக்கும் பாதுகாப்பு உரிமையுண்டு. போர்க் காலங்கள் தவிர மற்றக் காலங்களில் பழமையானவையும் அனுமதிக்கப்பட்டவையுமான சுங்கத் தீர்வைகளுக்குட்பட்டும், கொடிய எல்லைச் சுங்கவரிக்கு உட்படாமலும் அவர்களுக்கு உரிமை அளிக்கப்பட்டிருந்தது. போர் மூண்டபொழுது, இங்கிலாந்தில் தங்கியிருந்தவர்களும் நாட்டிற்குப் பகைமையான நாட்டைச் சேர்ந்தவர்களுமான வியாபாரிகள் அவர்களுடைய சொத்துகளுடன் சட்டங்களுக்குட்படுத்தப்படுவார்கள். அக்காலை அவர்களுடைய உடலுக்கோ, சொத்துக்கோ எவ்விதத் தீங்கிழைப்பும் இருக்கக்கூடாது. இவ்வாறு நடத்தப்படுவது பகைமை நாட்டில் ஆங்கிலேய வியாபாரிகள் எவ்வாறு நடத்தப்படுகிறார்கள் என்று அறிவதைப் பொறுத்ததாகும். ஆங்கிலேய வணிகர்களுக்குப் பாதுகாப்பளிக்கப்பட்டால் இவர்களுக்கும் அதேபோன்று பாதுகாப்பளிக்கப்படும்.

வணிகர்களுக்குச் சாதகமாயிருந்த இந்த ஷரத்துகள், ஐரோப்பா முழுவதிலும் மான்யப் பிரபுக்கள் வாணிகத்தைக் கொடுமைகளுக்குள்ளாக்குவதும் சூறையிடுவதும் வழக்கமாயிருந்த நாள்களில் தடையிலா வியாபாரத்திற்கு வழிசெய்ததுபோல் இருந்தன என்று புகழ்ந்துரைக்கப்பட்டன. இதற்கு மாறாக, மான்யப் பிரபுக்களுக்குச் சாதகமாக வெளிநாட்டு வாணிகத்தை ஊக்குவிப்பதற்காக இந்த ஷரத்துகள் ஏற்பட்டனவென்றும், நாட்டின் நலனுக்குத் தீமை பயப்பனவாயும் இருந்தன

வென்றும் ஓர் எண்ணமுமிருந்தது. மான்யப் பிரபுக்கள் ஐரோப்பாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட ஒயினையும் போகப்பொருள்களையும் துய்ப்போராயிருந்ததால், அவர் களுக்குச் சாதகமாயிருந்ததாகக் கருதப்படுவதற்குக் காரணமாயிற்று. முதலில் கூறப்பட்ட கருத்து நிலைபெற முடியாதென்பது வெள்ளிடை. பின்கூறியது மிக உண்மை யானது. 'மொத்தத்தில், மன்னர், குருமார்கள், மான்யப் பிரபுக்கள் வணிகர்களுக்கு உதவி புரிந்தனர்; பயனுள்ள வர்களாயும் இருந்தனர்; கடன் கொடுத்தனர்; விலைவாசி களைக் குறைத்தனர்; ஆதரவு பெறுவதற்குப் பணஈடு செய்தனர்'.[77] பல நூலாசிரியர்கள் இதற்கும் விதி 13-க்கும் உள்ள முரண்பாட்டைப்பற்றிக் கூறியுள்ளனர்.[78] இவ் வதி காரம் பழைய வழக்கங்களைச் சாதிக்கிறதுடன் (வியாபா ரிகள் நாற்பது நாள்கள் மட்டுந்தான் தங்கலாம் என்பதும், மொத்த வாணிப பேரங்கள் செய்வதும் போன்றவை) 'கொடுஞ் சுங்கவரிகளிலிருந்து' நிவாரணத்தைமாத்திரம் அளித்தது. இங்கிலாந்தில் அந்நிய வியாபாரிகளுக்கு அளிக் கப்பட்ட கண்ணியமான உபசரிப்புப் பொதுவாக வணிகர் களுக்கு நன்மை பயப்பதாயிருந்தது. காரணம் பன்னாட்டு வாணிகத்திற்குப் பதிலுக்குப் பதில் செய்வது வழக்கமா யிருந்தது. வியாபாரத்தில் ஈடுபட்டிருந்த பட்டணங்கள் உண்மையில் அவைகளுடைய பழைய சுங்கங்கள் நிலை பெறுதலைப் பெற்றன. இச் சுங்கங்கள் வெளிநாட்டு வியா பாரிகளுக்கு அதிகத் தொல்லைகளை அளிப்பதற்கு உதவியா யிருந்தன; இந்த அதிகாரம் மன்னரைத் தடை செய்வதா யிருந்தது. மூன்றும் ஹென்றியின் சாசனம் முதன்முதலில் வெளியிடப்பட்டபொழுது, 'எல்லா வியாபாரிகளுக்கும்' எனும் சொற்றொடரை அடுத்து, 'அவர்கள் தடைசெய்யப் பட்டுள்ளார்கள் என ஏற்கெனவே பிரகடனம் செய்யப் பட்டிருந்தால் ஒழிய' எனும் சொற்றொடர் சேர்க்கப் பட்டது. இதன் பயனாக வெளிநாட்டு வாணிகத்தில் மன்னருக்கு இருந்த சுயேச்சை விருப்பம் மீண்டும் அளிக்கப்பட்டது.[79]

## V.—உணவுப் பொருள் கட்டாயக் கொள்முதலும், மற்றும் மன்னரால் கட்டாயமாகப் பறிக்கப்படுபவையும்

**28.** **(உணவுப் பொருள் பாதுகாப்பு.)** கோட்டைப் பாதுகாப் பாளரோ அல்லது மன்னரது பெய்லிஃபோ விற்பனை செய் கிறவர், தானாகவே கடன் கொடுக்காதவரை, அவரிடமிருந்து

உடனடியாகப் பணம் செலுத்தாமல் தானியத்தையோ அல்லது ஜங்கமப் பொருள்களையோ எடுத்துக்கொள்ளக் கூடாது.

*30, 31.* **(உணவுப் பொருள் கட்டாயக் கொள்முதல்: கட்டாயப் படுத்துதல்.)** மன்னரும், அவரது ஷெரீஃபுகள் அல்லது பெய்லிஃபுகள் சுதந்திரமான ஒருவரிடமிருந்து பொருள்களை எடுத்துச் செல்லுவதற்கும், அதேபோன்று கோட்டைகளைக் கட்டுவதற்கும், மற்றும் பிற உபயோகத்திற்குமான மரங்களை எடுத்துச்செல்லுவதற்கும் சொந்தக்காரருடைய சம்மதமின்றிக் குதிரைகளையும் வண்டிகளையும் கட்டாயப்படுத்திப் பயன்படுத்தக்கூடாது.

கட்டாயச் கொள்முதல் (பர்வேயர் எனும் சொல்லிலிருந்து, திட்டஞ் செய்து ஒதுக்குதல் எனப் பொருள்படும்) என்பது 'சொந்தக்காரருடைய சம்மதமில்லாமலேயே, மற்றவைகளைக்காட்டிலும் சலுகையுடன் மதிப்பீடு செய்யப்பட்ட விலையில், மன்னரது அரண்மனையின் உபயோகத்திற்காக, மன்னருடைய கட்டாயக் கொள்முதல் செய்கிறவர்களுடைய தலையீட்டால், உணவுப் பண்டங்களையும் மற்றத் தேவையானவைகளையும் வாங்குவது மன்னரின் சிறப்புரிமையாக இருந்தது. அத்துடன் குறிப்பிட்ட விலையைக் கொடுத்துப் பொதுச்சாலைகளில் மன்னருக்குச் செய்யவேண்டிய பணிக்காகப் பொருள்களை எடுத்துச் செல்லும் மக்களுடைய வண்டிகளையும் குதிரைகளையும் கட்டாயப்படுத்திப் பெறுவது எனும் சிறப்புரிமை பொதுவாக ஐரோப்பா முழுவதிலும் பரவலாகக் காணப்பெற்றது'.[80] மூன்றும் ஹென்றியின் சாசனங்களில் கட்டாயக் கொள்முதல்பற்றிய கட்டுப்பாடுகள் மாற்றியமைக்கப்பட்டதுடன் விலைகளின் அளவும் சேர்க்கப்பட்டன. இம் முறையால் விளைந்த சீர்கேடுகள் பலவாறாகவும் தொல்லையளிப்பனவாயுமிருந்தன. இரண்டாம் சார்லஸினால் இச் சிறப்புரிமை விலக்கப்படும்வரை அதன் கொடுமையை முழுமையாக அடக்க முடியவில்லை.[81] இவ்வுரிமை மக்களுடைய பணிபுரிதலுக்கும் சொத்துகளுக்கும் நீட்டிக்கப்பட்டது. எனவே, மூன்றும் எட்வர்டு வெஸ்ட்மின்ஸ்டரில் செயின்ட் ஸ்டீபன் கோயிலில் வேலை செய்வதற்காக வர்ணந் தீட்டுவோரைக் கட்டாயப் பணிபுரிவதற்கு வால்ஸிங்காமைச் சேர்ந்த வில்லியம் என்பாருக்கு ஆணையிட்டார். 'தேவை இருக்கும்வரை நாம் கொடுக்கும் கூலியைப் பெற்றுக்கொள்ள வேண்டு'மென்றும்,

'இவ்வாறு பணிபுரிய மறுத்தவர்களைக் கைதுசெய்து சிறைப்பிடிக்குமாறும்' எல்லா ஷெரிஃப்புகளுக்கும் ஆணையிட்டார். கட்டட வேலை செய்கிறவர்கள் அடிக்கடி கட்டாயப் பணிக்கு அழைக்கப்பட்டனர்.[82] இம்மாதிரியாக அரண்மனைக்குத் தேவையானவற்றைச் செய்யப் பொற்கொல்லர்களைக் கட்டாயப் பணி புரிவதற்காக நான்காம் ஹென்றி ஆணையை வெளியிட்டார்.[83]

23. (பாலங்கள்.) பழைமையான வழக்கப்படியும் உரிமைப்படியும் கட்டுப்படுத்தப்பட்டாலொழிய எந்த மனிதர் அல்லது நகரத்தையும் ஆற்றங்கரைகளின்மீது வாராவதிகள் கட்டுவதற்காகச் சொத்துப் பறிமுதல் செய்யக்கூடாது.[84]

25. (கவுன்டிகளின் பண்ணை முதலியன.) [கவுன்டிகள், ஹண்ட்ரட் எனும் பகுதிகள், வெபன்டேக் எனும் கவுன்டியின் சிறிய பகுதிகள், டிரைதிங்[85] எனப்படும் சிறு பகுதிகள் முதலியவையெல்லாம், மன்னருக்குச் சொந்தமான பண்ணைகள் நீங்கலாகப் பழைய பண்ணையிலேயே அமைந்திருக்கும்.]

கவுன்டிகளின் ஷெரீஃப்புகள் முதலான பதவிகளை, அதிக விலை கொடுத்து எடுக்கிறவர்களுக்கு ஆண்டுதோறும் குத்தகைக்கு விடுவது மன்னரது வழக்கமாயிருந்தது. அதிகாரிகள் அதிகமான தண்டத் தொகைகளையும் கட்டணங்களையும் வல்லந்தமாக வசூல் செய்வதன்மூலம் செலவு செய்ததை மீண்டும் பெற்றனர்கள். இதனால் அளவிற்கு மீறிய வாரத்தைச் செலுத்தவேண்டியிருந்ததால் மக்கள் அவதியுற்றனர். இந்தப் பகுதி, சாசனத்தின் மறுவெளியீடுகளிலெல்லாம் கைவிடப்பட்டிருந்தது.

9. (மன்னரைச் சேரவேண்டிய கட்டணங்கள்.) மன்னருக்குச் சேரவேண்டியதற்காக, கடன்காரரின் வீட்டுச் சாமான்கள் பெறுமானமுள்ளவையாயிருக்கும்பொழுது, அவரது நிலத்தையோ அல்லது வாரத்தையோ கைப்பற்றக்கூடாது. கடனாளி கடன் தொகையைச் செலுத்தத் தகுதியுள்ளவராயிருக்கும்பொழுது உத்தரவாதமளித்தவர்களுடைய சொத்துகளைக் கைப்பற்றக்கூடாது; அப்படியில்லாமல் அவர்களே செலுத்தும்படி நேரிட்டால், அவர்கள் விருப்பப்படி, உத்தரவாதமளிக்கப்பட்டவருடைய நிலங்களையும் வாரத்தையும் அவர்கள் வசம் வைத்துக்கொள்ளலாம்.

மன்னருடைய கடனாளிகளின் உத்தரவாதமாயிருந்தவர்களுக்குக் கொடுக்கப்பட்ட நஷ்டஈட்டு உரிமை—இவ்

வுரிமை (ஒப்பந்தமில்லாதவை நீங்கலாக) மற்றக் கடன் காரர்களுடைய உத்தரவாதமாயிருந்தவர்களுக்கு அளிக் கப்படாதது நோக்கத்தக்கது.[86] பிரதிவாதிகளின் சொத்தை நஷ்டஈடு பெறும்வரை வாதியிடம் விட்டு வைக்கும் நீதிமன்றத்து ஆணை[87] ஏற்படுவதற்கான நட வடிக்கையைத் தோற்றுவித்தது.

*10, 11.* (யூதர்கள்.) [இறந்துபோன கடன்காரருடைய வாரிசு, சட்ட வயதை அடையாமலிருக்கும் காலத்தில், யூதர் களுக்குச் செலுத்தப்பட வேண்டிய கடன்களுக்கு வட்டி கிடையாது; கணவனை இழந்தவள், அவளது சீதனச்சொத்தை அடைவதுடன், கடனைக் கொடுக்கவேண்டியதில்லை; எஞ்சிய வற்றிலிருந்து கடனைத் திருப்பிக்கொடுக்குமுன் இறந்தவ ருடைய குழந்தைகளுக்கு வேண்டிய வசதிகள் செய்துகொடுக்க வேண்டியது.]

யூதர்களுக்குச் செலுத்தப்பட வேண்டிய கடன்கள் எல்லாவற்றிலும் மன்னருக்கு இரகசியமான பாத்தியதை உண்டு. அவர்கள் மன்னருடைய நிலச்சார்பான அடி மைகள் என்று முதலாம் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில் அழைக்கப்பட்டனர். இதன்படி, பன்னிரண்டு வயதும் அதற்கு மேற்பட்ட வயதினர்களுமான யூதச் சிறுவர்கள் ஆண்டுதோறும் மூன்று பென்சு செலுத்த வேண்டும் எனவும், ஸ்காட் என்றும் லாட் என்றும் கூறப்படும் கிராமங்களிலிருந்து செலுத்தப்படும் இறைகளோ வேறு எவ்விதமான வரியோ பட்டணங்களிலும் கிராமங்களிலு முள்ளவர்களைப் போன்று செலுத்தப்பட வேண்டியதில்லை எனவுமாயிற்று.[88] நார்மானிய மன்னர்கள், தொடக்கத்தில் ஆண்ட ஆஞ்சவின் மன்னர்கள் காலங்களில், யூதர்கள், மக்களுடைய செல்வத்தை உறிஞ்சுவதற்காகக் 'கடற் பஞ்சு' போன்று பயன்படுத்தப்பட்டார்கள். அவர்களும் மன்னருடைய தேவைகளை நிறைவு செய்வதற்காகப் பிழிந்து எடுக்கப்பட்டனர். கருவூலப் பத்திரங்களில் காணப்பட்ட செய்திகளிலிருந்து யூதர்களின் நிலையை மேடாக்ஸ் என்பவர் சுருக்கிக் கூறியுள்ளார்: 'மன்னர்கள், அவர்களுக்குச் சொந்தமான எஸ்டேட்டுகள், சொத்துகள், அவைகளில் தொடர்பு கொண்டிருந்த மனிதர்கள், அவர் களுடைய மனைவியர், மக்கள் முதலியவர்களின்மீது கட்டுப் பாடில்லா இறைமை கொண்டிருந்தனர். கீழ் உள்ளவர் களை வியாபாரம், பொருள் திரட்டல் முதலியவைகளைச்

செய்ய மன்னர் அனுமதித்திருந்தார் எனினும், அவர்கள் மன்னருடையவும் தங்களுடையவுமான இலாபத்திற்காகத் தொழில்களில் ஈடுபட்டிருந்தனர் எனத் தெரியவருகிறது. ஒவ்வொரு சமயத்தில் அவர்களுடைய பொருள்கள் அல்லது பெரும்பகுதி மன்னருடைய கருவூலத்தை அடைந்தன'.[89]

26. (இறந்தோரின் சொத்துகள்.) அரசுக்குக் கடன்பட்டுள்ள தலைமைக் குடியானவர் இறந்தால், அவருடைய சமயச் சார்பிலா மான்ய நிலத்தில் காணப்படும் சொத்துகளை, ஷெரீஃப்பு அல்லது மற்ற பெயிலிஃப்பு, நேர்மையானவர்களின் கருத்துக்கிணங்கக் கடன் மதிப்பளவிற்குப் பறிமுதல் செய்யலாம். கடன் தொகை முழுமையும் செலுத்தப்படும்வரை எதுவும் அகற்றப்படாது, எஞ்சியவை இறந்தவரின் உயிலின்படி நிறைவேற்றுவதற்குக் கொடுக்கப்பட வேண்டும். மன்னருக்குச் சேரவேண்டியது இல்லாமலிருந்தால், இறந்தவருடைய மனைவி, மக்களுக்கு நியாயமாகச் சேரவேண்டியதை ஒதுக்கி, மற்றச் சொத்துகளை யெல்லாம் இறந்தவருக்காகச் செலவிட வேண்டும்.[90]

27. (உயில் இல்லாத பாத்தியதைகள்.) [உயில் செய்யாமல் யாராவது இறந்தால், திருச்சபையின் மேற்பார்வையின்கீழ் இறந்தவருடைய நெருங்கிய உறவினர்களாலும் நண்பர்களாலும் சொத்துகள் விநியோகம் செய்யப்பட வேண்டும். இவ்வாறு செய்வதற்குமுன் இறந்தவர் கொடுக்க வேண்டிய கடன்கள் எல்லாம் உரியவருக்குக் கொடுக்கப்பட வேண்டும்.][91]

ஏற்கெனவே குறிப்பிட்ட 60ஆவது விதி, மன்னருடைய மான்யக் கீழாள்கட்கு வழங்கப்பெற்ற, மேலே கண்டுள்ள உரிமைகளும் சிறப்புரிமைகளும் இடைமான்யப் பிரபுக்களுடைய குடியானவர்களுக்கும் பயனளிப்பனவாக ஆயின. சாசனம் இறுதியில் கூறுவதாவது: '63. இங்கிலாந்தின் திருச்சபை சுதந்திரமாயிருக்கும் என உறுதி கூறுகிறோம். முன்பு கூறப்பட்டது போல் நாட்டிலுள்ள எல்லாருக்கும் எப்பொழுதும் எல்லா இடங்களிலும் எப்பொருள் பற்றியும் எங்களுக்கும் எங்களுடைய வாரிசுகளுக்கும், அவர்களுக்கும் அவர்களுடைய வாரிசுகளுக்கும் குறைவின்றியும் முழுமையாகவும் சுதந்திரமாகவும், அமைதியாகவும், நன்முறையிலும், சமாதானமாயும் மேற்கூறிய உரிமைகள், சுதந்திரங்கள், சிறப்புரிமைகள் முதலியவைகளைப் பெற்றிருப்பர்.' மன்னரும்

மான்யப் பிரபுக்களும் எடுத்துக்கொள்ளவேண்டிய உறுதி மொழி இதைத் தொடர்ந்துள்ளது. சாசனத்தில் கண்டுள்ள எல்லா விதிகளையும் நல்லெண்ணத்துடனும் புறக்கணிக்கா மலும் இரு சாராரும் பின்பற்றுவது என்பது உறுதிமொழி யாகும்.

விதிகள் 47-லிருந்து 53 வரையிலும், 55-லிருந்து 59 வரை யிலும், 62-ம் இச் சுருக்கத்தில் விடப்பட்டுள்ளன. சிறப் பானவை, தாற்காலிகமானவை என்ற எண்ணம் இதற்குக் காரணமாகும். இவ் விதிகள், காடுகள்பற்றிய சீர்திருத்தங் களையும், மன்னரிடம் ஈடாக வைக்கப்பட்ட சாசனங்கள், பிணையாளிகள் முதலியவைகளைக் கைவிடுதலையும், வெளி நாட்டைச் சேர்ந்த ஊழியர்களையும் கூலிப்படைகளையும் பதவி நீக்கம் செய்தலையும், வேல்ஸ் நாட்டினர் ஸ்காட்டுகளின் மன்னர் முதலியவர்களுடைய உரிமைகளையும், பொதுவாக அரசியல் குற்ற மன்னிப்பு வழங்கப்படுவதையும் குறிப்பிடுவனவா யுள்ளன.

## VI.—இருபத்தைந்து பேர் கொண்ட குழுவால் நிறைவேற்றப்படுதல்

*61.* (நிறைவேற்றப்படுதல்.) எஞ்சியுள்ள 61ஆவது விதி சாசனத்தைப் பின்பற்றுவதில் வற்புறுத்தலுக்கு வழி செய் தது. மன்னருக்கும் அவருடைய மக்களுக்குமிடையேயுள்ள ஒப்பந்தத்தை எவ்வாறு வற்புறுத்துவது எனும் பிரச்சினை கடினமாயும் அவசியமாயுமிருந்தது. மன்னர், தனக்குரிய அதிகாரத்தையும் கௌரவத்தையும் பெற்றிருந்தார். எனவே, முன்பு ஆண்ட மன்னர்கள் புனிதமான, எழுத்து மூலம் உறுதி செய்யப்பட்ட ஒப்பந்தங்களைப் புறக்கணித்துள்ளனர் என்பது முந்திய அநுபவமாகும். ஜான் மன்னர் நம்பத்தக்கவ ரல்லர் என்பது நாடறிந்ததாகும். இக் காலங்களில் மன் னரைக் கட்டுப்படுத்துவதற்கான அரசியல் சட்டத் தடைகள் ஏற்படவில்லை. எனவே, நாகரிகமில்லாத முறையில் ஒரு திட்டம் வகுக்கப்பெற்றது. இத் திட்டத்தின் தன்மை நடை முறைக்குச் சற்றும் ஏற்றதன்று. அத்துடன் ஜான் மன்னர் அவருடைய குடிகளுக்கெல்லாம் கலகஞ் செய்யத்தக்க உரிமை வழங்கினர் எனும் கருத்து மக்களிடையே பரவியிருந்தது. மானியப் பிரபுக்கள் எல்லோரும் சேர்ந்து இருபத்தைந்து பேர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றும், சாசனத்தில்

கண்ட ஷரத்துகளை நடைமுறையில் கொண்டுவருவதற்கு அவர்களுடைய முழு வலிமையையும் பயன்படுத்திப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு இவர்களிடம் இருக்கவேண்டுமென்றும் ஏற்பட்டது. மன்னரோ அல்லது அவருடைய அதிகாரிகளோ சாசனத்தைச் சிறிதளவேனும் மீறி நடந்தால், மேற்கூறிய 25 மான்யப் பிரபுக்கள் அல்லது அவர்களில் நால்வர், மன்னரிடமோ, மன்னர் இல்லாத சமயத்தில் பிரதம அரசியல் நீதிபதியிடமோ குறைகூறி உடனடியாகக் குறை நீக்கத்தைக் கோரவேண்டும். நாற்பது நாள்களுக்குள் குறைநீக்கம் செய்யப்படாவிடின், 'மேற்கூறப்பட்ட 25 மான்யப் பிரபுக்கள் நாட்டுப் பொதுமக்களுடன் சேர்ந்துகொண்டு எங்களுடைய கோட்டைகள், நிலங்கள், சொத்துகள் முதலியவைகளை அவர்களுக்கு விருப்பப்படி குறைநீக்கம் செய்யும்வரை, எம் முறையிலும் கைப்பற்றி எல்லாச் சாத்தியமான வழிகளிலும் பறிமுதல் செய்து தொல்லையை உண்டுபண்ணலாம். இதில் எங்களுடைய உடலுக்கும், எங்கள் இராணி, குழந்தைகள் முதலியவர்களுடைய உடலுக்கும் எவ்வித ஊறும் விளைவிக்காமலும் பார்த்துக்கொள்வதுடன், குறைநீக்கம் செய்யப்பட்டதும் முன்போலவே கீழ்ப்படிந்து நடக்கவேண்டும். நாட்டு மக்களில் எவரும், மேற்கூறப்பட்டுள்ள நடவடிக்கைகளை நிறைவேற்றுவதில் 25 மானியப் பிரபுக்களின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதற்கு உறுதிமொழி கூறி, அவர்களால் இயன்ற அளவு ஒன்றுசேர்ந்து எங்களுக்குத் தொல்லையை உண்டுபண்ணலாம். இவ்வாறு உறுதி பூணுவதற்கு எல்லாருக்கும் நாங்கள் வெளிப்படையாகவும், எவ்விதத் தடையின்றியும் உரிமை அளிக்கிறோம். உறுதிமொழி எடுத்துக்கொள்வதில் எவருக்கும் ஒருபொழுதும் தடை செய்யமாட்டோம். நாட்டு மக்களில் அவர்களுடைய சுயவிருப்பப்படி, எங்களுடைய சொத்துகளைக் கைப்பற்றித் தொல்லையை உண்டுபண்ணுவதற்கு 25 மானியப் பிரபுக்களுடன் சேருவதற்கு இணங்காதவர்களுக்கும் முன் கூறியபடி அதே உறுதிமொழியை எடுத்துக்கொள்ளக் கட்டளை இடுவோம்'.

சிறப்புவாய்ந்த இவ்விதியைப்பற்றிப் பலவாறாக எழுதப்பட்டுள்ளன. மன்னருக்கு எதிராகவே போர் முழக்கம் செய்வதற்கு 25 பிரபுக்களுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளதென ஸ்டப்ஸ் என்பார் எண்ணினர்.[92] அண்மையில் விளக்கங்கூறியவரும் இதேபோன்ற கருத்தை வெளியிட்டுள்ளார்.[93] மானியப் பிரபுக்களுடைய விதிக் கோட்பாடுகளிலேயோ அல்லது சாசனத்திலேயோ இக்

கருத்திற்குச் சான்று காண்பது எளிதன்று. போரைப் பற்றியோ அல்லது எதிர்ப்பைப்பற்றியோ குறிப்பிட வில்லை. மானியக் குடியானவனுக்கும் அவனுடைய பிரபு விற்கும் இடையே எதிர்ப்புக்குக் காரணமாய் அமையும் விரோதங்களும் இல்லை. பிரபுக்கள் கேட்டதெல்லாம், மன்னருக்குச் சொந்தமான கோட்டைகள், நிலங்கள், சொத்துகள் முதலியவை பறிமுதல் செய்யப்படுவதற்கு உட்பட வேண்டும் என்பதாகும். மன்னரும் இதற்கு இணக்கம் தெரிவித்தார். இதைச் செய்ததில் மன்னர், சொத்தைப் பிறருக்கு உரிமையாகும்படி சட்டப்படி மாற்றஞ் செய்துகொடுக்கிற சட்ட வல்லுநர்களின் சாதாரண மான முறையைப் பின்பற்றினர். சொத்து மாற்றஞ் செய்து கொடுக்கும் சட்ட வல்லுநர்கள் நாள்தோறும் வாரக்குத்தகையையும், அதே போன்ற பொறுப்புகளைக் குறிக்கும் பத்திரங்களில் பறிமுதல் செய்வதற்கான அதி காரங்களையும் சேர்த்து எழுதிவந்தனர். இந்தப் பத்திரத் தில் சொத்து மாற்றஞ்சார்ந்த அதிகாரம், நஷ்டமடைந்த கட்சிக்காரனுக்கு அளிக்கப்படாமல், மானியப் பிரபுக்க ளடங்கிய ஒரு நிரந்தரக் குழுவிற்கு அளிக்கப்பட்டது. இக் குழுவின் நிலை பன்னிரண்டாம் நூற்றாண்டில் ஏற்பட்ட சமாதான ஒப்பந்தங்கள் செயல்படுத்துவதைக் கண் காணித்துவந்த அல்லது நல்லெண்ணத்துடன் செயல் புரிந்துவந்த குழுவோடு ஒப்பிடப்பட்டது.[94] இந்த எண்ணத் தோற்றம் பயனுள்ளதாயும் புதுமையாயும் இருந்தது. எவ்விதத்திலும் இவைகள் நீதிமன்றமாய் அமைந்திருந்தன எனக் கருதுவது பிழையாகும்.

1215ஆம் ஆண்டில் வாழ்ந்தவர்கள், அரசியல் சட்டம் கடிகாரம் போன்று தானே சாவி கொடுத்துக்கொண்டு இயங்கும் பொறியன்று என்பதை நன்குணர்ந்திருந்தனர். பல நூற்றாண்டுகள் சென்றதன் பயனாக நாம் பெற்ற பட்டறிவால், இருக்க முடியாத நிறைவையுடைய எவ்வித இயந்திர சாதனத்தையும் அடையமுடியாதென்பதை உணர்ந்துள்ளோம். ஒக்கிடுவதற்கும் சரிசெய்வதற்கும் ஓரிரு சமயங்களில் வெளியிலிருந்து தலையீடு தேவையா யிருக்கும். அம்மாதிரி சமயங்களில்—நன்கமைக்கப்பட்ட அரசியல் அமைப்பில் காணமுடியாதபோது — திறமை யையும் நல்ல கருத்தையும் எதிர்நோக்கலாம். 1215ஆம் ஆண்டைச் சேர்ந்த மானியப் பிரபுக்கள் சாசனத்தை அமைத்தபோது மொத்தத்தில் இப் பண்புகளை வெளிப்

படுத்தினர்; சிறப்பாக இந்த விதிமூலம் வெளிக்காட்டினர். சில சமயங்களில் அவர்களைப்பற்றிக் கூறப்படுவதைப் போன்று அரசியல் குலைந்த நிலைக் கொள்கையை அவர்கள் பின்பற்றவில்லை; பறிமுதல் செய்வதற்கான ஒப்பந்த மானதும் நன்கு சோதிக்கப்பட்டதுமான சட்ட வல்லுநர் களுடைய உபாயத்தையே கையாண்டனர்.[95]

**(பெரும்பான்மையோரின் ஆட்சி.)** இச் சாசனத்தில் மற்றொரு ஷரத்து உள்ளது. சாசனத்திலுள்ள எல்லா ஷரத்துகளைக் காட்டிலும் உண்மையில் இக்காலத்திய ஒலியைக் கொண்ட தாயுள்ள இந்த ஷரத்து மக்கள் கவனத்தை அவ்வளவாக ஈர்க்கவில்லை. குழுமியிருக்கும் 25 பிரபுக்களில் பெரும்பான்மை யோரது கருத்து மேற்கொள்ளப்படும் என்பது இந்த ஷரத் தாகும். பெரும்பான்மையோரது ஆட்சியைக்குறித்து முதன் முதலாகக் கூறும் செய்தி இதுதான். இந்த விதியில்லாமல் இக்காலத்திய ஆட்சிமுறை நடப்பது எளிதன்று; இதன் வரலாற்றை இங்கிலாந்தில் மக்கள் நன்கறியவில்லை என்பது வருந்தத்தக்கதாகும்.[96]

**ஜான், போப்பாண்டவர், சாசனம்:** சாசனத்தை மீறு வதற்கு முடியுமானால் மீறவேண்டும் எனும் நோக்கத்தை ஜான் வெளிக்காட்டினார். அப்பொழுது மானியப் பிரபுவாக அவரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட போப்பாண்டவரின் உதவிக்கு ஜான் விண்ணப்பஞ் செய்தார்.[97] போப்பாண்டவர், சாசனம் செல்லத் தக்கதன்று என்றும், மானியப் பிரபுக்களைச் சாதிவிலக்குச் செய்தும், ஸ்டீபன் லாங்டனைப் பதவிச் சிறுகால விலக்குச் செய்துள்ளதாகவும் ஓர் அறிக்கை வெளியிட்டார். 25 பேர் கொண்ட குழுவினருள் ஒருவராக லண்டன் நகரத்து மேயரு மிருந்தார். லண்டன் நகரம், பிரபுக்களுடைய கோரிக்கை களுக்கு ஆதரவளித்தது. இவை காரணமாக லண்டன் நகரத் திற்குத் தடை ஆணை விதிக்கப்பட்டது. சமயஞ் சார்ந்தன வான இப் போர்க்கருவிகளுடன் நிற்காமல், ஜான் கூலிப்படை களின் உதவியை நாடி உள்நாட்டுப் போரை மீண்டும் தொடர லானார். அரைகுறையாகப் பயிற்றுவிக்கப்பட்ட பணியாள் களைக்கொண்ட மானியப் பிரபுக்களுக்கு, போரிடுவதையே தொழிலாகக் கொண்டிருந்த கூலிப்படையினர் கடும் போட்டியளிப்பவராக இருந்தனர். இந்த இறுதியான நிலை யில் மானியப் பிரபுக்கள், ஜான் மன்னருக்குக் கீழ்ப்படி தலைத் துறப்பது என்றும், ஃபிரான்சு மன்னரான ஃபிலிப்பு அகஸ்டஸ் என்பாரின் மூத்த மகனான லூயி என்ப

வரின் துணைகொண்டு ஜானை அரச பதவியினின்றும் நீக்குவது என்றும் உறுதி பூண்டனர். அத்துடன் ஃபிரெஞ்சு மன்னருக்கு ஆங்கில முடியை முறையாக அளித்தனர்.[98] லூயி உடனடியாகப் பிரபுக்களுக்கு உதவியனுப்பியதுடன், அவரும் 1216ஆம் ஆண்டு மே மாதம் 21ஆம் நாள் இங்கிலாந்திற்குள் காலடி வைத்தார். அதே ஆண்டில் அக்டோபர் மாதத்தில் ஜான் மன்னர் எதிர்பாராத நிலையில் மரணம் அடைந்தார். அவ்வாறு ஏற்பட்டிராவிடில், அரச பரம்பரையில் மாற்றம் ஒருகால் ஏற்பட்டிருக்கக்கூடும்.

## மூன்றும் ஹென்றியின் மகாசாசனம்

ஜான் இறந்தபொழுது மூன்று வயதான அவருடைய மகன் ஹென்றி பட்டத்திற்கு வருவதுபற்றிய நிலைமை மிக மோசமாயிருந்தது. நாட்டின் தென்பகுதியில் லூயியும் வடபாகத்தில் ஸ்காட்லாந்தியரும் பகைவர்களாய்க் காணப்பட்டனர். மேற்குப் பகுதியிலுள்ள வேல்ஸ் மலைப்பகுதியில் வாழ்ந்த மக்கள்தாம் ஆஞ்சவின் மரபினருக்கு அடைக்கலம் புகுவதற்குத் தக்க புகலாயிருந்தனர். தாமதமின்றி 1216ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 28ஆம் நாள் சிறுவரான ஹென்றி, போப்பாண்டவரின் தூதரான குவாலோ என்பாரின் ஆணைப்படி, கிளௌசஸ்டர் எனுமிடத்தில் முடிசூட்டப்பெற்றார்.[99] நண்பர்களாயிருந்த பிரபுக்களின் சம்மதத்தின்பேரில் பெம்புரோக்கின் ஏர்லான வில்லியம் மார்ஷல் என்பார் ஆட்சித் தலைவராகப் பதவி ஏற்றார் (நாட்டையும் மன்னரையும் ஆளுகிறவர்). ஆட்சியாளர் தனது அமைதியான நடத்தையால் பன்னிரண்டு மாதங்களுக்குள்ளாகவே அரச விசுவாசமில்லாத பிரபுக்களை மன்னருடைய பக்கத்தில் சேருவதற்கு உபாயம் செய்தார். அத்துடன், ‘லிங்கன் சந்தை’க்குப் (19 மே 1217) பிறகு டோவருக்கப்பால் நடந்த கடற்சண்டையில் உதவிப் படை அழிவுற்றதும் (ஆகஸ்டு 24), ஆங்கில முடிக்குக் கொண்டிருந்த போலி உரிமையைக் கைவிடும்படி லூயியையும் தூண்டினர்.

**1216ஆம் ஆண்டின் சாசனம்:** பெம்புரோக் ஏர்ல் முதன்மையாகச் செய்த செயல்களில் மகாசாசனத்தைப் புதுப்பித்தது முக்கியமானதாகும். இது, ஜான் இறந்த சில வாரங்களுக்குப்பின், 1216ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 12ஆம் நாள், பிரிஸ்டலில் கூடியிருந்த அரச விசுவாசமுள்ள அதிகாரிகள், பிரபுக்கள் முதலியவர்களடங்கிய கூட்டத்தில் நடந்தது. மறுபிரசுரத்தில் காணப்பட்ட மாற்றங்கள் மிகுதியாயிருந்தன.

ஜானுடைய சாசனத்திலிருந்த தற்காலிகமான ஷரத்துகள் வழிமுறையாக நீக்கப்பட்டன. நாட்டு மக்களுடைய சம்மதமின்றிச் சிறப்பு உதவிகள் விதிக்கப்படுவதைக் குறித்த 12, 13ஆவது விதிகளும் நீக்கப்பட்டன. அத்துடன், மன்னரது வருவாயை அதிகரிக்கச் செய்வதைத் தடைசெய்த எல்லா விதிகளுடன்கூட எம்முறையில் சட்ட ஆலோசனை செய்யப்பட வேண்டியதென்பதும் வகைப்படுத்தப்பட்டது. இதில் அஞ்சத்தக்கனவும் ஐயப்பாடுகளும் நிறைந்திருந்ததால் அவ் விதிகளை நீக்கக் காரணமாயின என மன்னருடைய அமைச்சர்கள், மறு பிரசுரமான 42ஆவது விதியில் காரணங் கூறினர். அத்துடன், நீக்கத்திற்கு நாட்டு மக்களின் நலனுக்குகந்தனவான வேறு சிலவற்றுடன்கூட நன்கு ஆலோசித்து முடிவு செய்வதற்குத் தேவையான கால அளவுவரை இவ் விதிகளை ஒத்திவைப்பது மிகச் சிறந்ததென அதிகாரிகளும் பிரபுக்களும் கருதியதும் காரணமாம். ஜானுடைய சாசனத்தில் நாட்டைவிட்டு வெளியேறுகிற மக்களைத் தடைசெய்யும் மன்னரது சிறப்புரிமையைக் கட்டுப்படுத்தும் 42ஆவது விதியும், மன்னருடைய நீதிபதிகளின் தகுதிகளை எடுத்துக்கூறும் 45ஆம் விதியும் விடப்பட்டுள்ளன. மான்யம் சம்பந்தமான விதிகளில் செய்யப்பட்ட மாற்றங்கள், உட்குடிகளின்மீது இடைமான்யப் பிரபுக்களுக்கு மேலான அதிகாரத்தை அனுமதிப்பதைக் காட்டுவனவாயிருந்தன. பிற்போக்காக உள்ள இக் கொள்கை, ஒருகால் மான்யப் பிரபுக்களைச் சமரசம் செய்யும் நோக்கத்தால் தூண்டப்பட்டிருக்கலாம்.[1]

**1217ஆம் ஆண்டுச் சாசனம்:** அடுத்த ஆண்டில் (1217), லூயி நாட்டைவிட்டு வெளியேறியதும், மகாசாசனம் மறுபடியும் வெளியிடப்பட்டது. (எனவே, இது மூன்றும் ஹென்றியின் இரண்டாவது சாசனமாகும்.) இதில் இன்னும் அநேக முக்கியமான நீக்கல்களும், மாறுதல்களும், சேர்க்கைகளும் காணப்பட்டன. இதற்குமுன் வெளியிடப்பட்ட சாசனத்தில் காணப்பட்ட காடுகளைப்பற்றிய விதிகள் நீக்கப்பட்டு, அதே சமயத்தில் வெளியான காடுகள்பற்றிய சாசனத்தில் சேர்க்கப்பட்டன.[2] ஒத்திவைத்தலைக் குறிக்கும் விதி 42-ம் (1216) நீக்கப்பட்டு, இதிலும் காடுபற்றிய சாசனத்திலும், அதற்கும் முன்னர் ஒத்திவைக்கப்பட்ட வேறு பல விஷயங்களுக்கும் வழி செய்யப்பட்டிருந்தது. மற்றவை பற்றி, இப்பொழுது வெளியிடப்பட்டதில் (1217), புதிய விதியை 46-ல் சேர்த்ததன் வாயிலாக ஓரளவு நிறைவு செய்யப்பட்டது. பழக்கத்திலுள்ள உரிமைகளையும் சுதந்திரமான வழக்கங்களையும் இப்

புதிய விதி உறுதி செய்தது. முக்கியமான மாற்றங்களாவன: ஜானுடைய சாசனத்தில் காணப்படும் மிகத் தேவையான விதிகளில் (39, 40) மேலே குறிப்பிட்ட சொற்கள்[3] சேர்க்கப் பட்டன. இவ்வாறு சேர்க்கப்பட்டது மிகச் சரியான கருத்துத் தெளிவை உண்டுபண்ணவும், பழைய மான்ய முறைக்கு ஒருகால் சலுகை காண்பித்தலுக்காகவும் இருக்கலாம். ஏனென்றால், மான்யதாரர்கள், அரசருடைய மத்திய அரசாங் கத்தின் அதிகாரவரம்பு விரிவுபடுத்தப்படுவதை வெறுப்புடன் நோக்கினர். சுற்றிவரும் நீதிபதிகளின் மன்றங்கள் நான்கி லிருந்து ஆண்டுக்கு ஒன்று வீதம் குறைக்கப்பட்டது. அத் துடன், குற்றவாளிகளை அடையாளங் காண்பதற்காக ஒவ்வொரு மாவட்டமும் நான்கு நைட் வீரர்களைத் தேர்ந்தெடுப் பதற்கான உத்தரவும் நீக்கப்பட்டது. மாவட்ட நைட் வீரர் களுக்குப் பதிலிகள் நியமிக்கப்பெற்றனர்.

46ஆவது விதியுடன் கூட ஹென்றியின் இரண்டாவது சாசனம் வேறு புதிய விதிகளையும் கொண்டிருந்தது. 42, 43, 44, 47ஆம் விதிகள் புதியவை; 39ஆவது விதியின்படி பண்ணையின் மேலான பிரபுவிற்குச் செய்யவேண்டிய கடமை களுக்குத் தேவையானவைகளைக் கைவசம் வைத்துக்கொள் ளாமல் நிலத்தைத் தானமாக வழங்குவது அல்லது விற்பது போன்றவைகளால் பராதீனப்படுத்துவது தடைசெய்யப் பட்டது;[4] 42ஆம் விதி, மாவட்ட நீதிமன்றங்கள் மாதந் தோறும் நடைபெறவேண்டுமென்றும், ஷெரீஃபினுடையது ஆண்டிற்கு இருமுறையென்றும், ஒருவர் மற்றொருவருடைய நன்னடத்தைக்காக அளிக்கும் உத்தரவாதம் மைக்கல்மஸ் நாளில் நடைபெறவேண்டுமென்றும் குறிப்பிட்டது; அத் துடன், கட்டணம், தண்டப்பணம் முதலியவைகளைப் பெறு வதற்குப் பொருள் ஆசையால் தூண்டப்பட்டு, பொதுமக்களை அடிக்கடி நீதிமன்றங்களுக்கு நேரில் வரும்படி கட்டாயப் படுத்தியதையும் முறைப்படுத்தியது.

43ஆவது விதி, சமய நிறுவனங்களுக்கு மார்ட்மெயின் எனும் பெயரில் நிலங்கள் தானமாக வழங்கப்படுவதைத் தடை செய்கிறது. 'இதுமுதல் சமயஞ்சார்ந்த எந்தவிதமான நிலையங்களுக்கும் நிலங்களை யார் கொடுத்தாலும், அதே நிலையத்திலிருந்து அந்த நிலத்தை மீண்டும் பெற்றாலும், அவை சட்டவிரோதமானவை. அதேபோன்று ஒருவருடைய நிலத்தைச் சமயஞ்சார்ந்த நிலையம் பெறுவதும், பெற்றுக் கொண்டவருக்கே மீண்டும் ஒப்படைப்பதும் சட்ட விரோத

மானவை. இதுமுதல் சமயஞ்சார்ந்த நிலையத்திற்கு ஒருவர் அவரின் நிலங்களை அளித்து அதற்காகத் தண்டிக்கப்பட்டால், தானம் செய்தது சட்டப்படி செல்லத்தக்கதன்று; கொடுக்கப் பட்ட நிலமும் மான்யப் பிரபுவைச் சேர்ந்துவிடும்.' [5]

44ஆவது விதி, மன்னருக்குக் கேடயப் பணம் பெறும் உரிமையைப் பாட்டனுரான ஹென்றியின் காலத்தில் நடந்த வழக்கத்தைத் தொடர்ந்து நிலைநாட்டியது. 47ஆவது விதி, மானியப் பிரபுக்களுடைய போர் துவங்கியதிலிருந்து எழுப்பப் பட்ட அல்லது புதுப்பிக்கப்பட்ட முறைகேடாயுள்ள கோட்டைகளையும் முகாம்களையும் உடனடியாக அழிக்க வேண்டும் என விதித்தது. (இச்சொற்றொடர் ஸ்டீஃபன் மன்னர் காலத்திய ஒழுங்கீனங்களை வல்லந்தமாக நினைவிற்குக் கொணர்ந்தது.)

**1225ஆம் ஆண்டுச் சாசனம்:** வயதடைந்தவர் என்று அறிவிக்கப்பட்ட ஹென்றி மன்னர், அவரது ஆட்சியின் ஒன்ப தாவது ஆண்டில் 'பதினைந்து' எனும் உதவி வழங்கப்பெற்ற தற்காக மகாசாசனத்தையும், காடுகள் பற்றிய சாசனத்தை யும் மறுபிரசுரஞ் செய்தார். மூன்றும் முறையாக ஹென்றி யினுல் வெளியிடப்பெற்ற (1225) இச்சாசனங்கள் இரு மாற்றங்களை மாத்திரம் கொண்டிருந்தன. (1) பாயிரத்தில், 'வேண்டுமென்றே' எனும் சொல்லுக்குப் பதிலாகத் தூண்டுத லின்றித் தானுக விரும்பியளித்த நல்லெண்ணத்துடன்' எனும் சொற்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இம் மாற்றம், பிரபுக்க ளுடைய ஆலோசனைக் குழுவிலிருந்து மன்னர் சுதந்திரமானவர் எனும் பொருள் கொள்ளும்படி விளக்கம் செய்யத்தக்கதா யிருந்தாலும், பின்னர் மன்னர், சாசனத்தின் வாசகத்தி லிருந்து தப்புவதைத் தெளிவுபடுத்தி நீக்குவதற்காக ஏற்பட் டது என நம்புவதற்கு அதிகமாக இடமளிக்கிறது. இவ்வாறு கருதுவதற்கு, இளம்பிராயத்திலிருந்தபொழுது அவர் காலத் திய சாசனங்கள் பிறரால் அளிக்கப்பட்டவை என்றும், அதன் காரணம்பற்றி அவரைக் கட்டுப்படுத்தாது எனக் கூறலாம் என்றுமான எண்ணம் இடமளித்தது.[6] இதைத் தவிர்க்க மேற் கூறியவாறு செய்யப்பட்டது. (2) அரசருக்குச் சலுகை காண்பிப்பதற்காகப் 'பதினைந்து' எனும் உதவியளிப்பதாகக் கூறும் ஒரு விதி இறுதியாகச் சேர்க்கப்பட்டது. 'இச் சுதந் திரங்களையும், மற்றும் காடுகள் பற்றிய சுதந்திரச் சாசனங்களி லுள்ள சுதந்திரங்களையும் நாம் வெகுமதியாக வழங்கியதற்குப் பதிலாக, அதிமேற்றிராணியார், மேற்றிராணியார், பிஷப்புகள்,

மடாலயத் தலைவர்கள், சமய உயர் அதிகாரிகள், ஏர்ல்கள், மானியப் பிரபுக்கள், நைட் வீரர்கள், சுதந்திரமான குடியான வர்கள் முதலிய நம்முடைய குடிகள் அவர்களுடைய ஜங்கமச் சொத்துகளில் பதினைந்தாம் பங்கைக் கொடுத்துள்ளனர்.'[7]

**சாசனங்களை உறுதிப்படுத்துதல், 1297:** மகாசாசனமும், காடுகள் பற்றிய சாசனமும் 1225, 9-ல் மூன்றும் ஹென்றி மன்னரால் எந்த முறையில் அறிக்கையிடப்பட்டதோ, அதே முறையில் 1297-ல் முதலாம் எட்வர்டால் அவைகள் உறுதிப் படுத்தப்பட்டன. இது அவரது ஆட்சியின் இருபத்தைந்தாம் ஆண்டில் நடந்தது. நாட்டு மக்களின் சுதந்திரங்களைக் காக்கும் மேலான இறையாக மகாசாசனத்தைக் கருதிய மக்கள், பல நூற்றாண்டுகளாகப் பட்டத்திற்கு வந்த மன்னர்களுக்கெல்லாம் தாராளமாக உதவித் தொகையை அளிப்பதன் வாயிலாகச் சாசனத்தின் உறுதிப்படுத்துதலைப் பெறுவதற்கு எப்பொழு தும் ஆயத்தமாயிருந்தனர். இவ்வாறாக, ஆறும் ஹென்றியின் ஆட்சியின் இரண்டாவது ஆண்டிற்குள்வாக இச் சாசனம் 37 தடவைகள் பக்தியுடன் உறுதிசெய்யப்பட்டுள்ளது.[8]

## சாசனத்தின் முக்கியத் தன்மை

மகாசாசனத்தின் நிலை, வரலாற்றில் அது ஏற்பட்ட காலத் தைக்கொண்டே முதலில் கருதப்பட வேண்டியதாகும். அரசாங்கப் பிரச்சினை குறித்து அவ்வப்பொழுது ஏற்பட்ட சிறந்த கருத்துகளைக் கூறும் சாசனங்களின் சங்கிலி போன்ற தொடரில் மகாசாசனம் ஒரு கரணை போன்றது என்பது முன்னமேயே கூறப்பட்டுள்ளது. அதன் தனிச்சிறப்பு, அதற்கு முன்னர் ஏற்பட்டவைகளைக்காட்டிலும் இது மிகக் குறிப்பான தாகவும் மிக விளக்கமானதாகவும் இருந்ததேயாம். தவிர, 'சாதாரணமான மானியமுறை பற்றியதென' அதைப் புறக் கணிக்கக்கூடாது. அதில் காணும் சொற்கள், மானியமுறையில் அமைந்திருந்த அக்காலத்திய அரசின் பிரச்சினைகளைக் கையாளு வதில் செயல்முறைக்கு மிகவும் பொருத்தமாயிருந்தது எனும் உண்மையைக் குறிப்பனவாகும். இக்காலத்திய கருத்துப்படி, அவை மக்களிடையே காணப்பட்ட வகுப்புகளுக்காக ஏற்பட் டன அல்ல. நிலத்தை அடிப்படையாகக்கொண்ட மானிய முறையில் காணப்பட்ட அதிகார வர்க்கத்தினர் இங்கிலாந்தில் வகுப்பு வேற்றுமைகளை ஒருபொழுதும் கொண்டிருந்ததில்லை;[9] மானியக் கடமைகள்பற்றிய இலக்கணம் உயர்ந்த, தாழ்ந்த

பதவியிலிருந்த மானியக் குடியானவர்களில் இருபாலாருக்கும் நன்மை பயப்பதாயிருந்தது. அரசியலமைப்பில், சுதந்திரமான மனிதன் மூல அளவாக இருந்தான்; மானியப் பிரபுக்களுக்காக வன்றிச் சுதந்திரமானவருக்காகவும் சாசனம் மிகச் சிறந்த சுதந்திரங்களை அளித்தது. மானியப் பிரபுக்களே அவர்களுடைய மூலக்கோரிக்கைகளடங்கிய பட்டியலில் இக் கோரிக்கையையும் சேர்த்துள்ளனர்.

எனினும், அது ஆங்கிலேயருக்காக மாத்திரம் ஏற்பட்ட தனிச்சிறப்பு வாய்ந்த ஒரு பத்திரமோ அல்லது அரசியலறிவை வெளிப்படுத்தும் சாசனமோ அன்று. பல்வேறு பட்டணங்களும் தங்களின் உரிமைகளை வரையறுத்தும் விரிவுபடுத்தியும் பல சாசனங்களைப் பெற்றன.[10] செஸ்டர் பகுதியின் ஏர்ல் அவருடைய குடியானவர்களுக்கென ஒரு சாசனத்தை அளித்தார்.[11] சில ஆண்டுகளுக்குப் பின்னர், ஒரு நூற்றாண்டுக் காலத்திற்குள்ளாக ஹங்கேரி இராச்சியமும் சிறப்பானதொரு சாசனத்தைப் பெற்றது.[12] பேரரசர் இரண்டாம் கான்ராட் என்பவரால் வழங்கப்பெற்ற இச் சாசனத்தில் 39ஆவது பிரிவிற்குச் சமமான ஒரு முக்கிய அம்சம் அடங்கியிருந்தது.[13] இதே பகுதிக்கு ஓரளவு 1188-ல் லியானின் கார்டேட் மன்றம் முன்னோடியாயிருந்தது.[14] வேறு சொற்களில் கூறுவதாயின், மானிய முறையை அடிப்படையாகக் கொண்டிருந்த பல்வேறு நாடுகளும் ஒரே விதமான தொல்லைகளைக் கொண்டிருந்ததுடன் ஒரே மாதிரியான நிவாரணம் காணும் முறையையும் பின்பற்றின; எனினும், விவரங்களில் காணப்பட்ட எண்ணற்ற வேறுபாடுகளையும் கருத்தில்கொண்டு தக்க நிவாரணங் காண முயன்றன. மானிய முறையில் வெளிப்படையாக எவ்வளவு ஒத்த தன்மை காணப்பட்டதோ அவ்வளவிற்கு வேற்றுமைகளும் காணப்பட்டது அதன் சிறப்பியல்பாயிருந்தது. உண்மைச் சொத்துகளின் சட்டத்தைப்பற்றிய விவரங்கள் போல் காணப்படுபவைகளைக்குறித்து வற்புறுத்தும் இம் மாதிரியான பத்திரங்கள் மானியமுறையில் தவிர்க்கமுடியாத பயனுக ஏற்பட்டன; அத்துடன் வலிமையூட்டுவனவாயும் இருந்தன. கடும் எதிர்ப்புக் காணப்பட்ட காலத்தில், நிலமும் அதைப்பற்றிய சட்டங்களும், வளர்ச்சியடைந்தனவும் நன்முறையில் முடிவு செய்யப்பட்டனவுமான சமயச் சார்பற்ற அமைப்புகளில் ஒன்ருயிருந்தது. நல்லாட்சியின் மிகச் சிறப்பான அடையாளம் சச்சரவின்றி வாரிசுமுறையில் சொத்துகளை அடைவதாகும். லண்டன் நகருக்கு வெற்றியாளர் அளித்த சாசனத்துடன் நாட்டு மக்களை ஒன்றுசேரச்செய்து மன்ன

ருக்கெதிராக எழச் செய்த ஜான் மன்னருடைய கவலையற்ற உண்மைச் சொத்துரிமையை இழக்கச் செய்ததுடன் உற்று நோக்கி ஒப்பிடவும்.[15] மன்னருக்கும் மக்களுக்கும் இடையேயுள்ள நிலையானவும் முறைப்படி அமைந்தனவுமான உறவுகள் மிகச் சக்திவாய்ந்த இரு காரணிகளின் இயற்கையில் ஏற்பட்ட பயன்களாகும்: ஒன்று, படைமானிய முறைப்படி இந்த உறவுகள் பிரபுக்களுக்கும் குடியானவர்களுக்கும் இடையே ஏற்பட்ட உண்மையான உறவுகளாகும். இரண்டாவது, நிலம் பற்றிய சட்டம், சட்டங்களிலெல்லாம் தலைசிறந்தது என்ற உறுதியான நம்பிக்கையாகும். பல நூற்றாண்டுகள் வரை தனிப்பட்டவரின் சட்டம் ஆங்கிலேயருடைய அரசியல் சட்டத்திற்குத் துணைப் பொருளாயிருந்ததுடன், தனிப்பட்டவரின் வழக்குகள் அரசியல் சட்டத்திற்கு மேற்கோள்களாயிருந்தன. இடைக்காலத்திலும் மன்னர் மானியப் பிரபுவைவிட மேலானவர் என எண்ணியது உண்மைதான். இப் பிரச்சினை குறித்து மிகுதியான ஊகங்களுமிருந்தன. ரோமானியர்களின் சட்டத்தினுடைய பெயர்பெற்ற சில சாதாரண எடுத்துக்காட்டுகள் எல்லோரும் நன்கறிந்தனவாகும். அவைகளிலிருந்து, செயல்முறைக்கான முடிவுகளைப் பெறும் முயற்சிகள் இங்கிலாந்தில் இடைக்காலம் நீடித்திருந்தவரை வெற்றி பெறுவெனக் கருதப்பட்டன. விரைவிலேயே பொது நீதி எனப்படும் கற்பாறையில் மோதி அவை சிதறுண்டன.

நாட்டில் வழங்கிய சட்டம், படைமான்ய அமைப்பு முதலியவைகளுக்குச் சாசனத்தின் விவரமான ஷரத்துகளைத் தொடர்ந்து பயன்படுத்துவதற்காக இச் சாசனம் இடைவிடாமல் பக்தியுடன் நோக்கப்பட்டது. படைமான்ய முறை தளர்ச்சியுற்றபொழுது மேலும் சாசனம் விந்தையான ஒரு புது வாழ்வைப் பெற்றது; அதிசயிக்கத்தக்க சாசனம் மூல சாசனத்தைக்காட்டிலும் வலிமையிற் சிறந்து விளங்கியது.

கோக் என்பவரின் காலம் முதல் பத்தொன்பதாம் நூற்றாண்டுவரை ஆங்கிலேயரின் அரசியல் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகள் எல்லாமே மகாசாசனப் பத்திரத்தில் காணலாம் எனக் கருதப்பட்டது. 'இங்கிலாந்தின் அடிப்படையான சட்டங்களுக்கு முக்கிய ஆதாரமாயுள்ளது என மகாசாசனம் அறிவிப்பதாயிற்று' எனக் கோக் கூறினார். 'ஆங்கிலேயருடைய உரிமைக்கு ஆதாரக்கல்' போன்றது என்றும், இதனுடன் பின்பு சேர்க்கப்பட்டவையெல்லாம் 'ஓரளவு உறுதி செய்வனவாகவோ அல்லது விளக்கவுரையாகவோ

அமையும்' என்றும் ஹாலம் என்பார் சிறப்பித்துக் கூறியுள்ளார். இக்கூற்று மிகைபடக் கூறியதாகும்; புகழ்ச்சியாகக் கூறப்பட்டது என்பதில் ஐயமில்லை. ஓர் இயக்கத்தைப் பற்றி அதை எடுத்துக்கூறுகிறவர்கள் சொல்வன்மையுள்ளவர்களாயிருக்கும் காரணத்தைக்கொண்டு இயக்கத்தைக் குற்றங் காண வேண்டா. நூற்றூண்டிற்கு நூற்றூண்டு பொதுநலக் கருத்துள்ளவர்களுடைய தாராளமான உள்ள எழுச்சியைத் தூண்டியதாகச் சாசனம் இருக்குமானல், ஸ்டீபன் லாங்டன் காலத்திலிருந்ததைக் காட்டிலும் கோக் என்பவரின் காலத்தில் மிகப் பெரிய செய்கைகளைச் செய்வதற்கு ஏற்றதாயிருந்ததும், ஒரு காலத்தில் செயல்முறைக்கு நலமாயிருந்ததும், அடுத்து வந்த காலத்தில் புனிதமாக்கப்பெற்ற பழங்கதையாயின என்பது பற்றி நாம் நன்றியறிதல் உள்ளவர்களாக இருக்க வேண்டும்.

## அடிக்குறிப்பு

1. 'மகாசாசனமும் பொது நீதியும்' எனும் கட்டுரை, 'மகாசாசனம் நினைவு கூர்தல் கட்டுரைகளில்' (1917), பக்கம் 122—179; சி. எச். மக்கில்வெயின் எழுதியதைக் காண்க.

2. பால்கிரேவ், 'ஆங்கிலக் குடியரசு', i, 6ஐக் காண்க.

3. போலக்கும் மெயிட்லந்தும், i, 172.

4. இவை குறித்து பி. ஈ. ஷிராம் எழுதியுள்ள, 'ஆங்கில முடிசூட்டு விழாவின் வரலாறு' (ஆக்ஸ்ஃபோர்ட், 1937), இடைக்காலத்தில் முடியாட்சி பற்றிய கருத்துப்பற்றிச் சிறப்பான விளக்கங் கூறுவது; அதிலேயே பக்கம் 532.

5. அவையாவன: இறைவனது திருச்சபையும் எல்லாக் கிறித்தவர்களும் எப்பொழுதும் உண்மையாக அமைதியை நிலைபெறச் செய்வர். எல்லா வகுப்பினரிடத்தும் கொள்ளையிடுதல், அநீதி புரிதல் முதலியவைகளைத் தடைசெய்கிறார். எல்லா நீதித்தீர்ப்புகளிலும் நேர்மையையும் கருணையையும் காட்ட வேண்டுமென்கிறார் என்பதாம். ஸ்டப்ஸ், 'பொறுக்கு சாசனங்கள்', 69. (நாள்பற்றி ஷிராமைப் பார்க்க, 19.)

6. ஏ. ஜே. ராபர்ட்ஸன் எழுதியுள்ள, 'இங்கிலாந்து மன்னர்களின் சட்டங்கள்' எனும் நூலின் மூலம்; ஸ்டப்ஸ் எழுதியுள்ள, 'பொறுக்கு சாசனங்கள்', 90, காலம் 1020.

7. ஸ்டப்ஸ், 'பொ.சா.', 97; ராபர்ட்சன், 'சட்டங்கள்', 231.

8. ஸ்டப்ஸ், 'பொ.சா.', 117–19; ராபர்ட்சன், 'சட்டங்கள்,' 277.

9. 'இங்கிலாந்தில் ஆட்சி புரிந்த முதல் ஆறு ஃபிரெஞ்சு மன்னர்களின் திறன்களும் நல்லொழுக்கமும்கூட நாட்டிற்குத் துன்பத்தை விளைவிப்பனவாயிருந்தன. ஏழாவது மன்னருடைய குற்றங்களும் தீய ஒழுக்கமும் நாட்டிற்கு மறுவாழ்வளிப்பனவாயிருந்தன. ஜான் நார்மண்டியிலிருந்து விரட்டப்பட்டார். நார்மானியப் பிரபுக்கள் ஐரோப்பாவிற்கும் ஆங்கிலேயத் தீவிற்கும் இடையே தங்களுடைய தேர்தலை நடத்திக்கொள்ளுமாறு வற்புறுத்தப்பட்டனர். கொடுமைக்கும் அலட்சியத்திற்கும் இதுவரை உட்படுத்தப்பட்ட மக்களுடன் வாழும்படி கடலால் தடுக்கப்பட்ட பிரபுக்கள், நாளடைவில் இங்கிலாந்தைத் தங்களுடைய நாடாகவும், ஆங்கிலேயர்களைத் தங்களுடைய தோழர்களாகவும் கருதலாயினர். இதுவரை பகைமை பாராட்டிய இரண்டு இனத்தாரும் ஒன்றுசேர்ந்து விரைவிலேயே பொதுவாயுள்ள நலன்களையும் பொதுவாயுள்ள எதிரியையும் காணலாயினர். கொடுங்கோலாட்சி செய்த மன்னரிடம் இரு சாராரும் தொல்லையுற்றனர். பாய்டூ, அக்விடைன் பகுதிகளில் வாழ்ந்த மக்களுக்குச் சலுகைகள் காண்பித்ததைக்குறித்து அரசுமீது இரு சாராரும் கோபம் கொண்டனர். வில்லியத்தின் தலைமையின்கீழ்ப் போர் புரிந்தவர்களுடைய பேரன்களும், ஹெரால்டின் தலைமையின்கீழ்ப் போர்புரிந்தவர்களுடைய பேரன்களும் ஒன்றாக இணைந்து நட்புறவில் கலந்து, அதன் விளைவாகத் தோன்றியது மகாசாசனமாகும். இச் சாசனம் அவ் விருசாரார்களின் கூட்டுறவு முயற்சியாலும் அவர்களுடைய பொது நலன்களுக்காகப் பெறப்பட்டதாகும்'. மெக்காலேயின், 'இங்கிலாந்து வரலாறு', i, 12.

10. கால்வாய்த் தீவுகள் இழக்கப்படாத நார்மானிய நிலப்பகுதி ஆங்கிலேய முடியாட்சியின்கீழ்ச் சார்புள்ள தனிப்பகுதியாக இணைக்கப்பட்டு இன்றும் உள்ளது. 'மான் தீவும் கால்வாய்த் தீவுகளும் இங்கிலாந்து மன்னரும் பாராளுமன்றமும் அவைகளுக்கான சட்டங்களை இயற்றினாலும், அவை ஐக்கிய இங்கிலாந்தின் ஒரு பகுதியன்று. பாராளுமன்றம் இயற்றிய சட்டங்கள் அவைகளைக் குறிப்பாகக் குறிப்பிடாவிட்டாலொழிய அல்லது சந்தர்ப்பத்தை

யொட்டி ஆங்கிலேயச் சட்டசபையின் அதிகாரவரம்பிற் குட்பட்டதென்று ஆதாரமிருந்தாலொழியக் கட்டுப்படுத் தாது. அவைகளின் நீதிமன்றங்களிலிருந்து மறு விசாரணைக்கான விண்ணப்பங்கள் பிரபுக்கள் சபைக்குச் செய்யப்படாமல் மன்னருடைய ஆலோசனைக்கு அனுப்பும் இங்கிலாந்தைச் சார்ந்திருந்த இச் சிறு பகுதிகளின் பயன் இதுதான். இங்கிலாந்திற்கும் இவைகளுக்குமிடையே காணப்பட்ட உறவு ஆங்கிலேய ஐக்கிய அரசைச் சுற்றி நாளாவட்டத்தில் திரண்ட மிகப் பெரிய சார்புள்ள நாடுகளை ஆட்சி செய்வதற்கு முன்மாதிரியாக அமைந்தது' என மெயிட்லந்து கூறுகிறார். —'அரசியல் அமைப்பு வர லாறு', பக்கம் 337. ஜே. எச். லெ. படுரே, 'கால்வாய்த் தீவுகளின் இடைக்கால ஆட்சி முறை' (ஆக்ஸ்ஃபோர்டு, 1937) எனும் நூல் சுவைமிக்க இவ்வதிகார எல்லையைப் பற்றி அறியச் சிறந்ததாகும். ஆன்ஸன் எழுதியுள்ள, 'அரசியல் அமைப்பின் சட்டங்களும் பழக்கங்களும்' (1935), பாகம் 2, 54–61 பார்க்க.

11. வேவர்லி ஆண்டுக் குறிப்புகள் (லுவார்டு பதிப்பு, பக்கம் 282).

12. வேவர்லி ஆண்டுக் குறிப்புகள், பக்கம் 264–5. வெண்டோ வரைச் சேர்ந்த ரோஜர், 'ஃப்ளோர்ஸ்', ii, 77. ஜானுடைய கொடுங்கோன்மையைப்பற்றி அண்மையில் ஏற்பட்ட சிறப்பு மதிப்பீடுகளுக்கு ஜாலிஃபேயின், 'அரசியலமைப்பு வரலாறு', 247 முதல். போப்பாண்டவருடையவும் மான்யப் பிரபுக்களுடையவுமான அரசியல் முரண்களுக்கு எஃப்.எம். போவிக்கின், 'கேம்பிரிட்ஜ் இடைக்கால வரலாற்றைப்' பார்க்க, vi, 232 முதல். மிக அண்மையில், ஜான் சட்டச் சீர்திருத்தம் செய்வதிலும், அதேபோல் சமயச் சீர்திருத்தம் செய்வதிலும் மிகவும் நோக்கங் கொண்டிருந்தார் என்ற எண்ணம் எழுந்துள்ளது. ஸ்டென்டன் சீமாட்டி, 'பைப் ரோல்', 6, ஜான் (1940), 28, முகவுரை. வெண்டோவரைச் சேர்ந்த ரோஜரும் மாத்தியூ பாரிசு என்பாரும் அவர் களுடைய காலவழிச் செய்திக் கோவைகளில் ஜான் மிகவும் கொடுமைக்குள்ளாக்கப்பட்டுள்ளார். அவர் இயல்புபற்றிச் சாதகமான கருத்தறிய ஏ.எல். பூல் எழுதியுள்ள, 'டூம்ஸ்டே புத்தகத்திலிருந்து மகாசாசனம்வரை', 425-ஐப் பார்க்க.

13. பன்னிரண்டாம் நூற்றாண்டில் எப்பொழுதாவது ஒரு சமயம் கோரப்பட்டதும், அதிமேற்றிராணியாரைத் தேர்ந்

தெடுப்பதில் பங்கு கொள்ள மேற்றிராணியார்கள் உரிமை பாராட்டியதைப் போப்பாண்டவர் மூன்றும் இன்னெசென்ட் மறுத்தார். அதன்பின் இவ் வுரிமையைப்பற்றிய பேச்சு எழவில்லை. ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', iii, 313. யார்க்கு மாநிலத்தில் இவ்வாறான உரிமை எதுவும் கோரப்படவில்லை.

14. போப்பாண்டவரிடம் இராச்சியத்தை இணங்கச் செய்வதற்கும், விசுவாசப் பிரமாண முறைக்கும் ரைமர் எழுதியுள்ள, i, 111, 'பொறுக்கியெடுத்த சாசனங்கள்', 279-ஐப் பார்க்க. ஆயிரம் மார்க்குகளில் இங்கிலாந்திற்கு 700 என்றும், அயர்லாந்திற்கு 300 என்றும் ஒதுக்கப்பட்டது. முதலாம் ரிச்சர்டு பேரரசர் இங்கிலாந்தைத் தடையின்றி ஒப்படைத்து அவரிடமிருந்து அதை மான்யமாகப் பெற்றார் என்பதை நினைவில் கொள்ள வேண்டும். முழு மொத்தமான தலைமைப் பதவிக்குப் போப்பாண்டவர் மூன்றும் இன்னெசென்டும் பேரரசர் ஆறும் ஹென்றியும் போட்டியிட்டனர். ஏ. எல். பூல், முன்பு கூறியது, 366.

15. வேவர்லி ஆண்டுக் குறிப்புகள், 277, 278; 'பொறுக்கு சாசனங்கள்', 272.

16. இதையும் இதைப் போன்ற சொற்களையும் நவீன உட்கருத்துகளைக் கொண்டனவாகப் பயன்படுத்தலால் ஏற்படும் அபாயத்தைப்பற்றி இஸட். என். புரூக் எழுதியுள்ள, 'ஆங்கிலேயத் திருச்சபையும் போப்பாண்டவராட்சியும்' எனும் நூலைப் பார்க்க (கேம்பிரிட்ஜ் 1931), அதி. 1.

17. மிக விளக்கமான விவரத்திற்கு ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', i, 565–71; ஜே. எச். ராம்ஸே, 'ஆஞ்சவின் பேரரசு', 466 முதல்; மெக்கக்னி, 'மகாசாசனம்' (இரண்டாம் பதிப்பு, 1914), 27–36; ஏ. எல். பூல், 'டூம்ஸ்டே புத்தகத்திலிருந்து மகாசாசனம்வரை', 459 முதல்.

18. செயின்ட் ஆல்பன்ஸ் சபைபற்றி நூலின் அதி. 6-ஐப் பார்க்க.

19. மாத்யூ பாரிஸ், 'கிரானிகா மெஜோரா', லுவார்டு பதிப்பு, ii, 583, 'பொறுக்கு சாசனங்கள்' 273.

20. அதே இடத்தில்.

21. 'பொறுக்கு சாசனங்கள்', 283. 1214 நவம்பர் 21-ல் முதலில் வழங்கப்பட்டது; அடுத்த ஆண்டு ஜனவரி 15-ல் மறுபடியும் வழங்கப்பட்டது.

22. சில நாள்களுக்குமுன், மே மாதம் 8ஆம் நாளன்று, லண்டனிலிருந்த 'மான்யப் பிரபுக்களுக்கு' ஆண்டுதோறும் மேயரைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை அளிக்கும் சாசனத்தை வழங்குவதன் வாயிலாக அவர்களுடைய ஆதரவைப் பெறுவதற்கு முயன்றார். 'பொறுக்கிய சாசனங்கள்', 311. லண்டன் மக்களுடைய எண்ணத்தை அறிய மாத்யூ பாரிஸைப் பார்க்க. பட்டணங்களும் துறைமுகங்களும் மன்னரிடம் விசுவாசம் கொண்டிருந்தன. நாட்டிலுள்ள எளிய மக்கள் உற்சாகமின்றியும் ஓரளவு ஆதரவளிப்பவர்களாயும் இருந்தனர். ஜாலிஃப், 'அரசியலமைப்பு வரலாறு', 248.

23. பிளாக்ஸ்டன், 'சாசனங்களுக்கு முன்னுரை' (1759) அவருடைய சட்டச் சிறுநூல்களில் மறுபிரசுரம் செய்யப்பட்டது (1762); அத்துடன் அவர் வெளியிட்டுள்ள சிறுநூல்கள் (1771). சாசனம் பற்றிய மிகப் பழமையான கருத்துகள், சர் எட்வர்டு கோக்ஸ் என்பாரின், 'இரண்டாம் கட்டளை' (1642-லும் பிறகு வெளியான பதிப்புகளிலும்) எனும் நூலில் காண்க.

24. மான்யப் பிரபுக்களுடைய விதிகளும் மகாசாசனமும், 'பொறுக்கு சாசனங்களில்', 285—302 அச்சிடப்பட்டுள்ளன. மெகக்னீ எழுதிய நூலில் இவைகளின் மொழிபெயர்ப்பும் விளக்கவுரையும் தனித்தனியாகச் சேர்க்கப்பட்டுள்ளன. '1215ஆம் ஆண்டு மகாசாசனத்தின் அரசியல் பத்திரங்கள்', ஏ. ஜே. காலின்ஸ் என்பார், 'பிரிட்டிஷ் கல்விக் கழகத்தின் நடவடிக்கைகளில்' (1948, 233–279) எழுதியிருப்பவை முக்கியமான படிப்பாகும். இதுபற்றி முழுமையாக அறிய டபிள்யு.எஸ். மெகக்னீயின், 'மகா சாசனம்' (இரண்டாம் பதிப்பு, கிளாஸ்கோ, 1914); ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலேயச் சட்டத்தின் வரலாறு', ii, 207–216; 'மகாசாசனப் பத்திர நினைவு விழாக் கட்டுரைகள்', எச். இ. மால்டன் பதிப்பித்தது (அரசு வரலாற்றுக் கழகம், லண்டன் 1917); ஜி. ஆர். ஆடம்ஸ், 'ஆங்கிலேய அரசியலமைப்பின் தோற்றம்' (யேல் யுனிவர்ஸிடி பிரஸ், 1920), அதிகாரம் vi; சார்லஸ் பேமாண்ட், 'ஆங்கிலேயருடைய சாசனங்களும் சுதந்திரங்களும்' (பாரிசு, 1892) முதலியவைகளைப் பார்க்க. 'ஜூன் மாதம் 15ஆம் தேதி குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால், மன்னர் அவருடைய பல ஆணைகளில் சமாதானம் செய்து முடித்த நாளை ஜூன் மாதம் 19ஆம் நாளாகக் குறிப்பிடுகிறார். ஜூன் 15ஆம்

நாளன்று பிரபுக்களின் ஷரத்துகள் சமாதானத்தின் அடிப்படையாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கலாம். மகா சாசனத்தின் திருத்தமான படி ஜூன் 19ஆம் நாளன்று முத்திரையிடப்பட்டது'; 'பொறுக்கியெடுத்த சாசனங்கள்', 285.

25. 'சுதந்திர மனிதன்' எனும் தொடர் உட்குடிகளையும் குறித்ததெனக் கோக் கருதினர். ஆனால், சாசனத்தில் இச் சொற்றொடர் உரிமை மான்யதாரருக்குச் சமமானது எனத் தெளிவாகத் தோன்றுகிறது. மெகக்னீ 114 முதல் பார்க்க. வினோகிரடாஃப், 'மகாசாசனப் பத்திரம் நினைவு விழாக் கட்டுரைகள்', 80-8; போவிக்ஸ், அதிலேயே 103-109; ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலேயச் சட்டத்தின் வரலாறு', ii, 211-212.

26. மகாசாசனத்தில் கண்டுள்ள 'மான்யப் பிரபுக்கள்', 'நைட் வீரர்கள்' பற்றி மகாசாசன நினைவு விழாக் கட்டுரைகளில் (1917), ஜே. எச். ரவுண்டு என்பார் எழுதிய கட்டுரையைக் காண்க, பக்கம் 46-77.

27. மேலே கூறியதில் 37, 49. முதலாம் எட்வர்ட் காலத்தில் மான்யப் பிரபுத்துவத்திலிருந்து விடுதலைக் கட்டணம் 100 மார்க்குகளாயிருந்தன.

28. மேலே கூறியதில் 37, 49.

29. மேலே கூறியதில் 38, 49. இவ் விதியில் ஹெரிடீஸ் எனும் சொல், ஆண்பெண் வாரிசுகளையும் சேர்த்துக் கூறுவதாக வலிந்து பொருள் கொள்ளப்பட்டதாகச் சாதாரணமாகச் சொல்லப்பட்டுள்ளது. ஆனால், போலக்கும் மெயிட்லந்தும் எழுதியுள்ளதைக் காண்க, i, 324. 'கிளான்வில்லினுடைய மரணத்திற்குப் பின் சில ஆண்டுகளுக்குள்ளாகவே சிறுவர் திருமணங்கள் விற்பனை செய்யப்பட்டதைக் காணலாம்.'

30. ஹாக்கின்ஸ், 'மன்னர் வழக்குகள்', ii, c. 49, ss. 1-3. அந்த இடைக்காலத்தில் தாவரச் சொத்துகளை அனுபவிக்க மன்னருக்கு உரிமை இருந்தது — 'ஆண்டு, நாள், பயனடைதல்' இவை வழக்கமாகக் கூறப்படும் சொற்கள். 'பயனடைதல்' எனும் சொல் மகாசாசனத்தில் விடுபட்டிருந்தது விநோதமானது.

31. மான்ய முறை அனுபோகங்களுடைய விளக்கங்களுக்கு உள்ளே பார்க்கவும்; பக்கம் 43 முதல்.

32. இவ் வதிகாரத்தில் பர் பாரிஸ் ஸுவோஸ் என்றதற்கு மான்யப் பிரபுக்கள் என்ற பொருள் கண்டார்கள் என்ப தற்கு மெக்கக்னீயைப் பார்க்க; பக்கம் 295–297. தண்டனை கள்பற்றி சர் ஜான் நாக்ஸ் எழுதியுள்ள, நீதிமன்ற அவமதிப்பு எனும் நூலைப் பார்க்க, 119 முதல். கோபல் எழுதியுள்ள, 'அரசத் துரோகமும் கெட்ட நடத்தையும்.'

33. ஃபிரெஞ்சுச் சொல்லான 'கன்டினிர்' எனும் சொல்லி லிருந்து இச் சொல் வந்திருக்கிறது; 'டெனமென்டம்' எனும் சொல்லுடன் சேர்ந்த கூட்டுச் சொல் அன்று. டெயிட் எழுதியுள்ள 'ஆங்கிலேய வரலாற்று மதிப்புரை' யைப் பார்க்க, xxxvii, பக்கம் 720 முதல், (1912); போலார்ட், 'ஆங்கிலேய வரலாற்று மதிப்புரை', xxxviii, 117; எனவே, 1327-ல் அரசனுடைய கடனாளிகளைக் குறித்த நடவடிக்கை 'அவர்களுடைய கௌரவத்தைக் காப்பாற்றுவதாக' இருந்தது. 'ரோடுலி பார்லிமென் டோரம்', ii, 8, எண் 8. 'டயலோக் டி ஸ்காக்காரியோ', II, xiv ஒப்பிட்டுப் பார்க்க.

34. Lib. ix, விதி 8; அதிலேயே விதி 11ஐக் காண்க.

35. டெயிட், மேலே குறிப்பிட்டுள்ளது. வெயினேஜ் என்பது உழவுத் தொழிலுக்கான கருவிகளை எடுத்துச்செல்லும் வண்டியைக் குறிப்பிடுவது அன்று; ஃபிரெஞ்சு மொழியில் காக்னேஜ் எனும் சொல் இலத்தீன் மொழிக்கேற்பத் திருத்தியமைக்கப்பட்டது. உட்குடியின் 'உழவுப் பணத்' தைச் சேமித்தலின் நோக்கம், உழுகிறவனை யெல்லாம் இழந்தவனாகச் செய்வதனின்றும் தடுப்பதற்காகும். உழவுப் பணம் அவனுடைய பராமரிப்புக்கு வகை செய்தது. 'கான்டெனமென்டத்'திற்கு அடிப்படையா யிருந்தது.

36. கிளாரன்டன் அஸைஸ், விதி 1. ('பொறுக்கு சாசனங்கள்', 170.)

37. மன்னருக்கு விருப்பமானவைகளில் பின்பற்றப்பட வேண் டிய முறைகள் (1194), விதி 21. ஹோவ்டன், ii, 262–7; 'பொறுக்கு சாசனங்கள்', 254.

38. ஷெரீஃபினல் ஒரு சிலர் வைத்துக்கொள்ளப்பட்டனர்; மெகக்னீயைப் பார்க்க, 309. 'காரனர்களுடன் சேர்ந்து அரசு தொடர்பான வழக்குகளையும்கூடப் பூர்வாங்க விசா ரணை செய்தார். அற்புமான் குற்றங்களின் விசாரணையில்

ஒவ்வொரு நிலையிலும் ஷெரீஃபு சுற்றுப்பயணம் செய்யும் பொழுது பொறுப்புள்ளவராக்கப்பட்டார். (1217-ல் மறு பிரசுரம் செய்யப்பட்ட சாசனத்தின் 42ஆவது விதியின்படி, ஆண்டிற்கு இருமுறை சுற்றுப்பயணம் செய்ய வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருந்தது.)

39. கிளென்வில் நூலில் ஆணையைப் பார்க்க, lib. i, c. 5; 'பொறுக்கு சாசன்ங்கள்', 190. மகாசாசனம் முக்கிய மான்யக் குடிகளுக்குள்ளோ அல்லது நிலவுரிமைபற்றி வழக்கு யாரிடையே தொடரப்பட்டுள்ளதோ, அவர்களுக்கும் மன்னருக்குமிடையே தோன்றிய வழக்குகளைத் தீர்மானிப்பதற்காகவோ இவ்வாணையைப் பயன்படுத்தும் உரிமையை மன்னருக்கு அளித்தது. இவ் விஷயத்தில் மன்னர் அவரது விருப்பப்படி செய்யலாம் என ஒரு தலைமுறைக்கு முன்னதாகவே உள்ளது என கிளான்வில் கூறுகிறார். அந் நூற்றாண்டின் இறுதிக்குள், இம்மாதிரியான வழக்குகளை நடத்துவதால், நீதிவிசாரணை செய்யும் பிரபுக்கள் எவ்வித இலாபமும் பெறவில்லையென ஹெங்காம் கூறுகிறார் ('சம்மா மாக்னு', 7, டபிள்யூ. எச். டன்ஹாம் பதிப்பு). வழக்குத் தொடருவதற்கான ஆணைகளால் இவ் விதி புறக்கணிக்கப்பட்டுப் பயனற்றதாக ஆகியது. 'சட்டங்களும் அவைகளின் விளக்கங்களும்', பிளக்நட், 8–283; மெகக்னி, 346–355; போலக்கும் மெயிட்லந்தும், ii, 63–70.

40. கிளான்வில், lib. xiv, விதி 3.

41. இவ்வதிகாரம், பொதுவாக எண்ணப்படுவதுபோல், ஹெபியஸ் கார்பஸ் வரலாற்றுடன் தொடர்புள்ளதன்று. இவ்வாணை எல்ஸா டி. ஹாஸ் என்பவரால் முழுமையாக ஆய்ந்து பார்க்கப்பட்டுள்ளது. 'பழமை ஜாமீன் விடுதலை' (நியூயார்க், ஆக்ஸ்ஃபோர்ட், 1940), அதி. iv.

42. பல்வேறு விளக்கங்களுக்கு மெகக்னியைப் பார்க்க, 370–375. மேலே கூறப்பட்டுள்ளது முற்றிலும் புதுமையானது எனினும், போலக் – மெயிட்லந்தின் குறிப்பை அடிப்படையாகக் கொண்டது, i, 151, குறிப்பு 1; சற்று மாற்றியமைக்கப்பட்டது, ii, 606.

43. 1217-ல் மறுபடி பிரசுரிக்கப்பட்டதில் சொற்கள் சிறிதளவு மாற்றப்பட்டுள்ளன. 'ஜூரிகளின் தீர்ப்பை மாத்திரம் கருதாது தெளிவாயுள்ள சட்டங்களை ஒட்டியும்.'

44. ஃபூர்னியர், 'புரூமைச் சேர்ந்த ரெஜினின் சமய விதிக ளடங்கிய நூல்கள்' (1920), 'பிப்ளியோதிகே டி இகோல் டெஸ் சார்டிஸ்', lxxxi, 5, 23.

45. கிளாரண்டன் சட்டங்கள், விதி 6. (ஸ்டப்ஸ், 'பொறுக்கு சாசனங்கள்', 165). போலக்கும் மெயிட்லந்தும், i, 151–152. ஹாஸ்கின்ஸ், 'நார்மானியரின் அரசியல் நிறு வனங்கள்', 219, 329.

46. 'ஃபாலே அவசரச் சட்டம்' (1159), ஸி. எச். ஹாஸ்கின்ஸ் நூலில்.

47. கிளாரண்டன் அஸைஸ், விதி 4. (ஸ்டப்ஸ், 'பொறுக்கு சாசனங்கள்', 170.)

48. மெயிட்லந்து, 'மான்யப் பிரபு நீதிமன்றம்' (செல்டன் கழகம்), 20-39; டி. எஃப். டி. பிளக்நெட், 'இடைக்கால பெயிலிஃப்' (1954), 11–13.

49. மூலநூலில், பக்கம் 83 பார்க்க; 41ஆம் விதிக்கு விளக் கமாய் அமைந்தது.

50. 3, இன்ஸ்டி. விதி 84.

51. மூலநூலில், பக்கம் 89. காட்டுச் சட்டங்கள்பற்றி முக்கிய மானவை, மான்வுட், 'காட்டுச் சட்டங்கள்', (1598, 1615). ஜி. ஜெ. டர்னர், 'சில பொறுக்கான காட்டு வழக்குகள்' (செல்டன் கழகம், 1899); ஸி. பெடிட்டுடெயிலிஸ், 'ஸ்டப்ஸின் நூலுக்குத் துணையானது', i, 148-251; என். நீல்சன், 'ஆங்கிலேய நடைமுறை ஆட்சி' (பதிப்பு, ஜே. எஃப். வில்லார்ட், டபிள்யூ. ஏ. மாரிசு, 1940, 394—467); ஏ. எல். கிராஸ், 'காடுகள் பற்றி 18ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பத்திரங்கள்' (ஆன் ஆர்போர், 1928). 'டெக்'கின் நூலோடு ஒப்பிட்டுப் பார்க்க.

52. மெகக்னீ, பக்கம் 451–452. 'மற்போர் முறை விசாரணை', அதி. xvi; 'மன்னர் நீதிமன்றத்தில் பொறுக்கான வழக் குகள்', சேயில்ஸ், (செல்டன் கழகம்), iii, பக்கம் lxvii; ஸ்டீபன், 'கிரிமினல் சட்ட வரலாறு', i, 244; ஹோல்ட்ஸ் வொர்த், iii, 608.

53. கிளென்விலேப் பார்க்க, xiv; பிராக்டன், iii; ஹாக்கின்ஸ், 'மன்னருடைய வழக்குகள்', ii, 392.

54. நூலின் 42ஆம் பக்கம் முதல் பார்க்க.

55. ஆஷ்ஃபோர்ட் v. தாரன்டன் (1818), 1, பார்ன்-ஆல்ட் 405.

56. மற்போர் விசாரணை முறை செயல்படுதலில் வலிமைமிக்க வீரர்கள் கலந்துகொண்டு போரிட்டனர்; கட்சிகள் போரிடவில்லை. ஆஷ்ஃபோர்ட் v. தாரன்டன் வழக்கு, புகழ்வாய்ந்த வழக்குகள் வரிசையில் முழுமையாகக் காணப்படுகிறது.

57. மெகக்னீ, பக்கம் 238–239.

58. எஃப். எம். ஸ்டென்டன், 'ஆங்கிலேயரது படைமானிய முறை', பக்கம், 139.

59. கேடயப் பண வசூல்பற்றிய ஆணை, 1235; 'பொறுக்கு சாசனங்கள்', 357. சாசன(1217) மறுவெளியீடு, விதி 44-ல், இரண்டாம் ஹென்றியின் காலத்துப் பழக்கத்தைப்போல், வருங்காலத்தில் கேடயப் பணம் வசூலிக்கப்பட வேண்டும் எனக் கூறப்பட்டுள்ளது. உதவித்தொகைபற்றிக் குறிப்பு ஒன்றுமில்லை. கேடயப் பணம் பற்றிய அண்மையில் உண்டான மாற்றங்களால் மேற்கண்ட விதிகள் தேவையற்றனவாயின எனும் கருத்துக்கும், அதன் விளைவாக விதிகள் விடப்பட்டதற்கும் பாஸ்கட் எழுதியுள்ள, 'காமன்ஸ் சபையின் தோற்றம்', அனுபந்தம் iii எனும் நூலில் லாப்ஸ்லி எழுதியுள்ள குறிப்பைப் பார்க்க.

60. பிராக்டனுடைய குறிப்பேடு (மெயிட்லாந்து பதிப்பு), 1146.

61. 'இங்கிலாந்து வரலாறு' i, 219–220.

62. ஹாலம், 'இடைக்காலங்கள்,' ii, 327.

63. மெகக்னீ, 392–395. விநோகிரடாஃப், 'மகாசாசன நினைவுக் கட்டுரைகள்', 94. இம்மாதிரிச் செயல் எதிர்ப்பைத் தூண்டின. சில சமயங்களில் மகாசாசனம் ஆதரவுக்காக நோக்கப்பட்டது. தடைசெய்தலை அடுத்து விசாரணை நடந்தது எனினும், இது வழக்கொழிந்துபோன வகையைச் சார்ந்திருந்தது. பிளக்நட், 'துரோகக் குற்ற விசாரணையின் தோற்றம்', 'அரசினர் வரலாற்றுக் கழக நடவடிக்கைகள்' (1942), 47. பிற்காலத்திலும் இதுபோன்ற அதிகாரங்கள் பிரிவி கௌன்சிலர்களாலும் அரசாங்கச் செயலாளராலும் உரிமை பாராட்டப்பெற்றன (பக்கம் 308–310).

64. போவிக்கே, 'மகாசாசன நினைவு விழாக் கட்டுரைகள்', 103. 'ஜான் மன்னர் கையாண்டவையான, தன்னிச்சைப் படி சிறைப்பிடித்தல், சொத்துப் பறிமுதல் செய்தல், சட்டப்படி பாதுகாப்பில்லாமல் செய்தல் போன்றவைகளி லிருந்து மக்களுக்குப் பாதுகாப்பை அளிக்கவேண்டிய தேவையை வற்புறுத்துவதை 39ஆவது விதி நோக்கமாகக் கொண்டிருந்தது. விசாரணைபற்றி எவ்வித முறையையும் வற்புறுத்துவது அதன் நோக்கமில்லையெனக் கூறலாம்.' ஹியூபர்ட் டி பர்க்கின் வழக்குப்பற்றி பிராக்டனுடைய குறிப்புப் புத்தகம், எண் 857ஐயும் பார்க்க; போலக்கு–மெயிட்லந்து, ii, 581.

65. 'சுதந்திரமாயுள்ள நிலத்திலிருந்து அல்லது சுதந்திரத்தி லிருந்து அல்லது சுதந்திரமாக ஏற்பட்டுள்ள உரிமை வழக்கங்கள்', 1217–ல் மறுபடி வெளியிட்ட சாசனத்தில் சேர்க்கப்பட்டன. கோக் விளக்கம் கூறுவதுபோல் தனி யுரிமையைத் தடைசெய்வதாகச் 'சுதந்திரத்திலிருந்து' எனும் தொடரைக் கருத முடியாது.

66. மார்ல்பரோ சட்டம் (1267), விதி 23, 'நாடுகடத்தல்' எனும் சொல்லைப் பயன்படுத்துகிறது; இது நிலங்களை விட்டு உட்குடிகளை ஓடச்செய்வதை வற்புறுத்துவதையும், அதன் விளைவாகப் பண்ணையை வறுமையுறச் செய்வதை யும் குறிப்பிடுவதாயுள்ளது.

67. லிங்கார்டு, 'இங்கிலாந்து வரலாறு', iii, c. 1. கிளென்வில், ix, 1, தனிப்பட்ட மானியப் போர்முறையில் 'எதிர்த்துப் போதல்' எனும் சொற்களைப் பயன்படுத்துகிறார். ஸ்டென்டன், 'படைமானிய முறை', 250, குறி. 2.

68. 'ரோடுலி பாடென்டியும், 16 ஜான், பாகம் 1 m, 3, d, ஹார்டி பதிப்பு, பக்கம் 141; பிளாக்ஸ்டன், 'சாசனங் களுக்கு முகவுரை', xiii.

69. ஆடம்ஸைப் பார்க்க, 'ஆங்கிலேய அரசியலமைப்பின் தோற்றம்', 262; மெகக்னி, 381; விநோகிரடாஃப், 'மகா சாசனக் கட்டுரைகள்', 80. ஆனால், போவிக் நூலுடன் ஒப்பிடுக; பக்கம், 90. போலக்கும் மெயிட்லந்தும், i, 173, குறி, 3 மிகவும் முக்கியமானது.

70. ஆடம்ஸ், 242. விநோகிரடாஃப், 85: 'நாட்டில் நிலையாக நிறுவப்பட்ட நீதிமுறைக்கேற்ப, முறைப்படி அமைக்கப்

பட்ட நீதிமன்றங்களில் விசாரணையைப் பெறுவதற்காகப் போராட்டம் நடைபெற்றது;' போவிக், 120. '1215-ல் நீதியைக் கருதியதுபோல் உயர்குடிப் பிறந்தோர்களது தீர்ப்பை, மானியப் பிரபுக்களோ அல்லது சுதந்திரமான மனிதனோ கருத்தில் கொள்ளவில்லை'.

71. ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 577. கான்ராடின் அரசியல் சட்டம் 'டி பெனிபிஷியஸ்' (1037); 'ஜெர்மனி வரலாற்று நினைவுச் சின்னங்கள்', 'அரசியல் சட்டங்கள்', i, 89ஐக் காண்க. அதைப்போன்றே இரண்டாம் லோதயர் அறிவிப்பதாவது: 'குற்றங்களை மேலே குறிப்பிட்டபடி சமமான அந்தஸ்தில் உள்ளவர்கள் விசாரணை செய்து குற்றமன்று எனப் புகழ்ந்துரைத்தால், இராணுவ வீரர்கள் தங்கள் வசமுள்ள நிலத்திலிருந்தோ அல்லது வேறு பயன்தரும் பொருள்களைக் கைக்கொண்டிருப்பதிலிருந்தோ நீக்கம் செய்யப்படக்கூடாது என நாம் உத்தரவிடுகிறோம்'. முதலாம் ஹென்றியின் சட்டங்களில் இதே கருத்தைக் கிட்டதட்ட இதே சொற்களில் வெளிப்படுத்துவதை நாம் காணலாம். 'ஒவ்வொருவரும் அவருக்குச் சமமானவரால் விசாரணை செய்து தீர்ப்பளிக்கப்படவேண்டும்'.

72. பி. சி. கினே, 'பெருமகாரின் தீர்ப்பு' காண்க. பெருமகார் சம்பந்தப்பட்டது தீர்ப்பேயொழிய விசாரணையன்று என்பதைக் குறிப்பிடவேண்டியுள்ளது. விசாரணை என்பது சாதாரணமாக உத்தரவின் மூலமோ, சலுகையின் மூலமோ இருக்கும்.

73. மேடாக்ஸின், 'கருவூல வரலாறு', அதிகாரம் 12-ல் எடுத்துக்காட்டுகள் உள்ளன.

74. போலக்கும் மெயிட்லந்தும், i, 195; மகக்னி, 395-8; ஆணைகளுக்குக் கட்டணம் செலுத்துவதுபற்றி டர்னர் குறிப்பிடுகிறதாவது: 'வாதி ஒரு குறிப்பிட்ட நீதிமன்றத்திலோ அல்லது குறிப்பிட்ட காலத்திலோ தனது வழக்கை விசாரணைக்குக் கொண்டுவர விரும்பினால், மன்னர் கட்டணம் வசூலிக்கலாம்; வசூலிக்கவும் செய்தார்'; 'பிரீவியா பிளாஸிடாடா' (செல்டன் கழகம்), 49 முதல்.

75. மெகக்னி 343-344 காண்க.

76. ஹௌடன், iii, 263; iv, 33; 'தேர்ந்தெடுக்கப்பட்ட சாசனங்கள்', 254.

77. போலக்கும் மெயிட்லந்தும், i, 464. இங்கிலாந்தில் இக் காலத்திய அன்னிய வியாபாரிகளின் இன்றியமையாமை பற்றி அறிய கன்னிங்ஹாம், 'ஆங்கிலத் தொழில், வாணிப வளர்ச்சி', i, 194 காண்க.

78. எடுத்துக்காட்டு: போலக்கும் மெயிட்லாந்தும், i, 465; மெகக்னி, 404; லிப்ஸன், 'பொருளாதார வரலாறு', i, 449.

79. மெகக்னி, 404.

80. பிளாக்ஸ்டோன், 'உரைவிளக்கங்கள்', i, 287.

81. 12, சார். 2, c. 24 (1660).

82. D. நூப்பும் G. P. ஜோன்சும், 'பொருளாதார வரலாற்று மீள்பார்வை'யில், VIII, 57 காண்க.

83. ரைமர், vi, 417; xi, 852; ஹாலம், 'இடைக்காலங்கள்', iii, 149.

84. பாலங்களைச் சீர்படுத்துவதில் மன்னருக்கிருந்த அக்கறை, வேட்டைக்குப் பருந்து வளர்த்தலோடு, ஒரு வகையில் தொடர்புற்றிருந்தது; இதற்கு மெகக்னி, 300-302ஐப் பார்க்க. பல்வேறு இனத்தவர்கள் அல்லது குறிப்பிட்ட நிலச்சொந்தக்காரர்களின்மீது, பாலங்களைச் சீர்படுத்துவதற்கு, பொதுச்சட்டத்தால் விதிக்கப்பட்ட கடமைக்கு—தல அரசாங்கச் சட்டங்களுள் மிகப் பழைய முக்கியமான பகுதிகளில் ஒன்றான சட்டம்—சர் சிரில் ஃபிளவர், 'இடைக்காலச் சட்டத்தில் பொதுப்பணி'யைப் (இரு வால்யூம்கள், செல்டன் கழகம்) பார்க்க.

85. கௌன்டிகள் அல்லது ரைடிங்குகளின் மூன்றும் பகுதிகள்; யார்க்ஷயரும் லிங்கன்ஷயரும் அவ்வாறு பிரிக்கப்பட்டன.

86. R. M. ஜேக்ஸன் என்பாரின், 'அரசு தொடர்புள்ள ஒப்பந்தங்களின் வரலாறு', 4.

87. பிளக்னெட், 'பொதுச் சட்டத்தின் வரலாற்றுச் சுருக்கம்' (ஐந்தாம் பதிப்பு), 390–391.

88. 'நாட்டின் சட்டங்கள்', i, 221, 222. 1275ஆம் வருடம்; ஜி. ஜே. டர்னர், 'சட்டப் பத்திரிகையும் மீள்பார்வையும்' (நான்காம் வரிசை), xxi, 310-ல்.

89. மேடக்ஸ், 'அரசாங்கக் கருவூல வரலாறு' (இரண்டாம் பதிப்பு), i, 221. யூதர்களுக்குச் சேரவேண்டிய கடன் பற்றிய எல்லா ஒப்பந்தங்களும் எழுத்து வடிவத்தில் இருக்கவேண்டியிருந்தன ; பல நகல்கள் எடுக்கப்பட்டன. இரு யூதர்களாலும், இரு கிறித்தவர்களாலும், இரு பொது அதிகாரிகளாலும் பரிசீலிக்கப்பட்ட பின்னர் சேர்க்கப் பட்டன. ஹோவெடன், iii, 266. யூதர்களின் அரசாங்க நிதிச்சாலேக்கு, J. M. ரிக் என்பாரின், 'யூதர்களின் அரசாங்க நிதிச்சாலேயில் குறிப்பிடத்தக்க நியாயமான முறைப்பாடுகள்' (செல்டன் கழகம்) காண்க.

90. உயில்கள் தயாரிப்பதற்குரிய உரிமைகளே இவ் வதிகாரம் தெளிவாக்கியதுபற்றியதற்கு மெகக்னி, 323-326 பக்கங் களேப் பார்க்க.

91. இப் பகுதி, பின்னர் வெளிவந்த மறுவிளேவுகளில் விலக்கப் பட்டது ; ஆனால், இது மரண சாசனம் எழுதாது இறத் தலேப்பற்றிய சட்டத்தை அமைத்தது. திருச்சபை, அவ்வாறு மரண சாசனம் எழுதாது இறப்பவரின் நிலப் பகுதியை நிர்வகித்தலே மேற்பார்வையிட்டது. போலக்— மெய்ட்லந்து, ii, 357ஐப் பார்க்க.

92. ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 605.

93. ஜே. ஈ. ஏ. ஜோலிஃபே, 'அரசியல் சட்ட வரலாறு' (1937), 258.

94. ஷை 258–259.

95. இடைக்காலத்தில், சீர்படுத்துவதற்குக் கலகம் விளேவிப் பதே கையாளக்கூடிய ஒரே செயலாகக் கருதப்பட்டு வந்தது; 'எதிர்ப்புத் தெரிவிப்பதற்கான உரிமை' என்ற அதிகாரத்தை ஃபிரிட்ஸ் கெர்ன் என்பாரின், 'இடைக் காலத்தில் அரசுரிமையும் சட்டமும்' (S. B. கிரைம்ஸ், 1939) 81–133-லும், மார்க் பிளாக்கின் நூலிலும் காண்க. ஆனால், நீஸ்ட் என்பார் இவ்வதிகாரம் சற்றுத் துன்பம் தோய்ந்ததாக உள்ளது எனக் கண்டார்; 'எதிர்ப்புக் குழு தன்னுடைய புரட்சிகரமான கொள்கையை விட்டுவிடு மளவிற்குத் துன்பப்படுத்துவதற்கான உடன்படிக்கை உரிமை இடைக்காலத்திய நீதிவழக்கங்களுடன் இணைக்கப் பட்டிருந்தது', நீஸ்ட், 'ஆங்கிலேயப் பாராளுமன்றம்', பக்கம் 85. மூலப்புத்தகத்தின் கருத்து, T. F. T. பிளக்னெட்

என்பாரின் 'முதலாம் எட்வர்டின் சட்ட நிருபணங்கள்', 75-76-ல் சற்று விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது; A. L. பூல் என்பாரின், 'டூம்ஸ்டே புத்தகம் முதல் மகா சாசனப் பத்திரம்வரை 476, n. 3-ல் தனி ஒதுக்குதல்களைப் பார்க்க.

96. 'சமூக அறிவியல் கலைக்களஞ்சியம்', x, 54ஐப் பார்க்க. நூல் அட்டவணையில் J. ரெட்லிச் என்பாரின், 'பொதுச் சபையின் வழிமுறைகள்', ii, 261–264ஐயும், O. பிராஸ் நிட்ஸ் என்பவரின், 'பிரதிநிதித்துவமும் பெரும்பான்மைக் கொள்கையும்'—'பாலிடிகா', i, 215–223ஐயும் காண்க.

97. மூலப்பகுதி ரைமரின், 'ஃபோடரா', i, பக்கம் 203–205-லும், பெமான்டின், 'சாசனம்', 41-லும் உள்ளது. 'மகாசாசனப் பத்திர நினைவுக் கட்டுரைகளில்' (1917), பக்கம் 26–45-ல் உள்ள, G. B. ஆடம்ஸால் எழுதப்பட்ட 'மூன்றும் இன்னொசன்டும் மகாசாசனமும்' என்பதையும், (அவருடைய, 'மன்றங்களும் நீதிமன்றங்களும்', 353 என்பதையும்), T. F. டௌட் என்பவரின், 'தொகுக்கப்பட்ட காகிதங்கள்', ii, 285ஐயும் பார்க்க. உரோமானியத் திருச்சபைத் தலைவரின் நடவடிக்கை பல்வேறு நோக்கங்களையும், அண்மையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளின் மீள் பார்வையையும் அடிப்படையாகக் கொண்டது. மான்ய முறையில் தலைமைப் பதவி குறிப்பிடப்பட்டுள்ளது. ஏனெனில், 'உறுதியானவர்களைக்கூடக் கலங்கும்படி செய்த அச்சுறுத்தல்களால்' வலிந்து பெறப்பட்ட உறுதிமொழிகளையும் கைவிடுவதற்குதவியாகத் திருச்சபை அடிக்கடி அதன் அதிகார எல்லையைச் செலுத்தியதே அவ்வாறு குறிப்பிடப்படுவதன் முக்கியமான நிதி அடிப்படையில் அமைந்த காரணமாகும். இக் கொள்கை கெயஸைப் போன்று மிகப் பழமையானது (டிக். 4, 2, 6); இடைக்கால உரோமன் கத்தோலிக்கர்களையும், (H. கான்ட்டரோவிக்கின், 'கிளாஸட்டோர்ஸ் கட்டுரை', 189–190ஐப் பார்க்க), சாதாரண வழக்கறிஞர்களையும் (F. W. மெய்ட்லந்து, 'பிராக்டன், அஸோ' 184ஐயும், 'அரசியல் சட்ட வரலாறு', 283, n. 2-ல் ஜோலிஃபே கொடுத்துள்ள கட்டாயத் திருமணத்திற்கு ஒரு வியப்பான எடுத்துக்காட்டையும்) சமயத்துறை வல்லுநர்களையும் காண்க. அதிகாரத்தின் அடிப்படையில் பெறப்படும் சமாதானத்தை ஒழுங்காக நிறைவேற்றுவது அச் சமாதானத்தின்

நியாயத்தின் அடிப்படையில் அமைந்திருந்தது எனவும், வல்லந்தமாக ஏற்பட்டதால் அன்று என்றும் திருச்சபை கருதியது. இது பற்றியும் சாசனத்திற்குப்பின் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் பற்றியும் எச். ஜி. ரிச்சர்ட்ஸன், 'ஜான் ரைலண்டு நூலகத்தின் கைப்புத்தகங்கள்', 28, 29ஐக் காண்க.

98. வேவர்லி ஆண்டுக் குறிப்புகள், 283; ரைமர், i, 140; மாத்யூ பாரிஸ், 'மேஜர் காலவழிச் செய்திக் கோவை' (லுவார்டு பதிப்பு), ii, 647.

99. முடிசூட்டு விழாவில் போப்பாண்டவரின் தூதர் பங்கு பற்றியதும் தொல்லை நிரம்பியதுமான பிரச்சினையை ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', ii, பக்கம் 18, குறிப்பு; நார்கேட், 'மூன்றாம் ஹென்றி வயதுவராதவரா யிருந்தபோது', பக்கம் 4; பி. ஈ. ஷிராம், 'ஆங்கிலேய முடி சூட்டு விழாவின் வரலாறு', 45ஐயும் காண்க.

1. மூன்றாம் ஹென்றியின் சாசனத்தின்படி அயர்லாந்துக்கு அனுப்பப்பட்டது. அங்கிருந்த மன்னரிடம் உண்மை விசுவாசத்துடன் இருந்தவர்களது நலனைக் கருதி இடத் திற்குத் தேவையான ஒருசில சிறிய மாற்றங்களுடன் திருத்தியமைக்கப்பட்டு, தீவின் பாதுகாப்பாளர், தூதர் இவர்களின் கையெழுத்துகளுடன் அனுப்பப்பட்டது. அயர்லாந்தின் தல அமைப்பிற்கு ஏற்றவாறு செய்யப் பட்ட மாற்றங்கள் பின்னர் அயர்லாந்தில் செய்யப்பட்ட தாகத் தோன்றுகிறது எனினும் (தொகுப்பாளரின் கருத்துப்படி) மாற்றஞ்செய்ய அதிகாரம் வழங்கப்பட் டிருந்தது. அதுவும் 1216, நவம்பர் 12ஆம் நாள் அனுப்பப் பெற்ற சாசன மூலத்துடன் மேலுரையாக எழுதப்பட்ட கடிதத்தில் குறிப்பிடப்பட்டிருந்தது. எச். ஜி. ரிச்சர்ட்சன், 'அயர்லாந்து மகாசாசனப் பத்திரம்', 'அயர்லாந்து வரலாற்றுக் கட்டுரைகள்', iii, 31–33.

2. மகாசாசனத்தின் (44, 47, 48) காடுகள்பற்றிய ஷரத் துகள் அல்லாமல் வேறு காடுகள்பற்றிய சாசனத்தை ஜான் மன்னர் வெளியிடவில்லை. 1217 நவம்பர் 6ஆம் நாளில் மூன்றாம் ஹென்றியின் பெயரால் மார்ஷல் ஏர்லால் வெளியிடப்பட்ட காட்டு சாசனத்தில் 17 ஷரத் துகள் உள்ளன. அவை 1184-ல் உட்ஸ்டாக் அஸ்ஸைஸில் இரண்டாம் ஹென்றியால் உருவாக்கப்பட்டதும், காட்டுச்

சட்டங்கள்பற்றிய மிக்க துயர் நிறைந்த சுமைகளை மாற்றவும் திரும்பப்பெறவும் வகை செய்தன. காடுகள், 'பழைய பொதுச் சட்டத்தின் நடுவில் எதேச்சாதிகாரம் மிகுந்த பாலைவனச் சோலைக் காட்சி'களாக விடப்பட்டிருந்தன; ஜான் மன்னரின் சாசனத்து 44ஆவது ஷரத்தில் காடுகள் சார்ந்த நீதிமன்றங்களின் அதிகார எல்லையைச் சுருக்குமாறு விதிக்கப்பட்டது கடைப்பிடிக்கப்பட்டபோதிலும், ஜான், ரிச்சர்டு காலங்களில் காடுகள் உண்டாக்கப்பட்ட நிலங்கள் உடனேயே அழிக்கப்பட்டதுடன், அரசருக்குச் சொந்தமில்லாத நிலங்களுக்குட்படாத இடங்களில் இரண்டாம் ஹென்றியால் காடுகள் உண்டாக்கப்பட்ட நிலங்களும் அழிக்கப்பட வேண்டியதாயிற்று. மரணதண்டனை அல்லது உறுப்புக் குறைத்தல் போன்ற தண்டனைகள் நீக்கப்பட்டும், வருங்காலத்தில் அபராதம், சிறைத்தண்டனை, நாடுகடத்தல் போன்றவை அவைகளுக்குப் பதிலாக விதிக்கப்பட வேண்டுமெனவும் (ஷரத்து 10) கூறிற்று. எனினும், வேட்டைக்குப் பயன்படுத்தப்பட்ட நாய்களை மீண்டும் பயன்படுத்தாமலிருக்கக் கொடுமையாக உறுப்புக்குறைத்தல் செய்தல் எனும் வழக்கம் ஷரத்துகளில் குறிப்பாகக் காணப்பட்டதுடன், முன்னங்காலின் மூன்று விரல்கள் துண்டிக்கப்பட வேண்டியதெனவும் விதிக்கப்பட்டது. காடுகள் பற்றிய சாசனம், உட்ஸ்டாக் அஸ்ஸைஸ் இரண்டையும் 'பொறுக்கு சாசனங்கள்', 186–188, 344–348ஒடு ஒப்பிட்டுக் காண்க.

3. மேற்கூறியதிலேயே பக்கம் 81, குறிப்பு 65.

4. ஷை பக்கம் 38.

5. பழைய சட்டங்கள், மானியப் பிரபுக்களை ஏமாற்றும் நோக்குடனும், மானியக் கடமைகளைச் செய்வதிலிருந்து விடுதலை பெறுவதற்காகவும் பொய்யான முறையில், பிறர் அறிய ஆடம்பரமாகத் திருச்சபைக்கு மானிய நிலங்களை நன்கொடையாக அளித்துப் பின்னர் திரும்பப் பெறுவதெனும் வழக்கத்தை ஒழிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டன. மகாசாசனத்தில், இந்த ஷரத்து அறியாமல் செய்வதை விடுத்து மோசடி செய்யும் கருத்துடன் நில மாற்றம் செய்யும் நடவடிக்கையைக் குறிப்பாகத் தடை செய்தது. அடுத்த ஆட்சியில் (முதலாம் எட்வர்டு, 7) 'டி ரிலிஜியோஸிஸ்' எனும் சட்டம், பொதுவாக வீடுகள்

சமயஞ்சார்ந்த நிறுவனங்களுக்கு அளிக்கப்படுவதையும் தடை செய்தது. அதாவது, சமயஞ்சார்ந்த நிறுவனங்கள் பெற்ற வீட்டை நிலச் சொந்தக்காரரிடம் திரும்பக் கொடுக்காமல் தாமே வைத்திருந்ததையும் தடை செய்தது. இச் சட்டத்தில் காணப்பட்ட குறைகளைப் பயன்படுத்திக்கொண்டு தப்பித்துக்கொள்ள எடுத்த முயற்சிகளும் இரண்டாம் ரிச்சர்ட் 15 சட்டத்தால் இறுதியில் வெற்றிகரமாகத் தடைசெய்யப்பட்டது.

6. 'டன்ஸ்டபிள் ஆண்டுக் குறிப்புகள்', பக்கம் 93, *s. a.* 1225; 'பொறுக்கு சாசனங்கள்', 322.

7. 'நாட்டுச் சட்டங்கள்', 'சுதந்திரச் சாசனம்', 22–25; 'பொறுக்கு சாசனம்', 350.

8. சாசனம் உறுதி செய்யப்பட்டது:

மூன்றும் ஹென்றியால் 6 தடவைகள்.

முதலாம் எட்வர்டால் 3 தடவைகள்.

மூன்றும் எட்வர்டால் 14 தடவைகள்.

இரண்டாம் ரிச்சர்டால் 6 தடவைகள்.

நான்காம் ஹென்றியால் 6 தடவைகள்.

ஐந்தாம் ஹென்றியால் 1 தடவை.

ஆறும் ஹென்றியால் 1 தடவை.

இவ்வுறுதிகள் செய்யப்பட்டதுபற்றி எஃப். தாம்ப்சன், 'மகாசாசனத்தின் முதலாவது நூற்றூண்டு' எனும் நூலைக் காண்க.

9. போலக்கும் மெயிட்லந்தும், i, 296-ல் மேற்கோளைக் காண்க. பேராசிரியர் ஜெங்க்ஸ், 'மகாசாசனப் பத்திரம் ஒரு கட்டுக்கதை' ('இன்டிபெண்டன்ட் ரீவியூ', 1904) எனும் கட்டுரையில், சாசனம் பரவலான அடிப்படையில்லாது தனிப்பட்ட ஒரு வர்க்கத்தினருக்காக இயற்றப்பட்ட சட்டந்தான் எனும் சிந்தனையைத் தூண்டிவிடும் படியான ஒரு கருத்தை உருவாக்கியுள்ளார். 1685-ல் ராபர்ட் பிராடியும் அதே கருத்தைக் கொண்டிருந்தார். சாசனம்பற்றிய கருத்துரைகளின் அளவைகளை எல். லெக்லேர், 'ரிவியூ டி யுனிவர்சிடி டி பிரஸ்ஸல்' (1913) xviii, 481-ல் காண்க.

10. ஜான் மன்னர் சாசனங்கள் வழங்குவதில் மிக்க தாராள மாயிருந்தார்.

11. ஜே. டெயிட், 'செஸ்டர் மடாலயத்தின் சாசனக்கூடம்' (சேதாம் கழகம், N. S. 79–ல்) மூலத்தைக் காண்க.

12. இரண்டாம் ஆண்டிரூவின் (1222) பேருத்தரவைப்பற்றி சேயஸ், 'ஹிஸ்டார் ஜெனரலி டெஸ் ஹோங்கிராய்' (இரண்டாம் பதிப்பு 1900), 116–121; ஃபெஸ்ட், 'புல் டி ஆர் எட் மாக்னுகார்டா': ஹங்கேரியில் ஆங்கிலேயரது செல்வாக்குத் தொடக்கம்' ('ஹங்கேரியின் புது விமரிசகன்', LIII, 33).

13. 1037–ல்; 'ஜெர்மன் வரலாற்று நினைவுச் சின்னங்கள்,' சட்டப் பிரிவு iv, i, 90; ஸ்டப்ஸ், 'இடைக்காலத்தில் ஜெர்மனி', 146.

14. 'மகாசாசனத்தை நினைவுகூரும் கட்டுரைகள்', 227-ல் ஆர். அல்டாமிரா திறனாய்வு செய்துள்ளார்.

15. ஆர்டரிக்கின் குறிப்பான வாசகத்தைக் காண்க. மேலே கூறப்பட்டுள்ளதில் பக்கம் 48, குறிப்பு 3.

# 5. நார்மானிய, பிளான்டாஜெனட் மன்னர்கள் காலத்திய நிறுவனங்கள்

ஆட்சிமுறை முழுமைக்கும் மன்னர்தான் தலைவராயிருந்தார். சட்டம் இயற்றுவதிலும், அரசிறை வரவு, நீதிமுறை போன்ற ஒவ்வொரு வகையான நிர்வாகத் துறையிலும் நேரிடையாகப் பங்கு கொண்டார்.[1]

மன்னரும் அவருடைய உயர்தர அதிகாரிகளும் நார்மானிய வெற்றிக்குப்பின் சிறிதுகாலத்திலேயே ஆங்கிலேய மன்னர்கள் எப்பொழுதாகிலும் அவர்களது நீதிமன்ற நடவடிக்கைகளில் நேரிலேயே நடத்துவதையோ அல்லது பங்கு கொள்வதையோ கைவிட்டனர்.

**மன்னர் நீதிபதியாயிருத்தல்:** குரியா ரெஜிஸ் எனும் மன்னரது நீதிமன்றம் நீதி வழங்குவதிலும், அதன் பகுதியான பொருளாதாரக் குழுவான கருவூலத் துறையிலும்[2] இரண்டாம் ஹென்றி உதவிபுரிவது வழக்கமாயிருந்தது. தீர்ப்பளிக்கும் போது அவர் கூறிய நீதிமொழிகளில் சில பாதுகாத்துவைக்கப் பட்டிருக்கின்றன. 1154–ல் அவர் சிம்மாதனமேறியபின், அவர் முன்னிலையில் விசாரணை செய்யப்பட்ட வழக்கில் சான்றாக முன்வைக்கப்பட்ட முதலாம் ஹென்றியின் சாசனம், முறைதவறான வழியில் பெறப்பட்டது எனப் பிரதிவாதி குற்றஞ்சாட்டினார். சாசனத்தைக் கையில் எடுத்துக்கொண்டு மன்னர், 'கடவுள் முன்பு இதைப் பொய்யென நிரூபித்தால் உனக்கு ஆயிரம் பொற்காசுகள் கொடுக்கக் கடமைப்பட்டவனாவேன்' என வியந்து கூறினார்.[3] கான்டர்பரி அதிமேற்றிராணியாரான பால்ட்வின் என்பாருக்கும் செயின்ட் எட்மண்டஸ் மடாலயத் தலைவருக்குமிடையே நிலம் சார்ந்தவாக

குரிமை பற்றிய மற்ருெரு வழக்கில், ஒன்றுக்கொன்று முரண் பாடாயிருந்த சாசனங்களை ஆஜர் செய்ததைக் கண்டு செய்வ தறியாது, 'இச் சாசனங்கள் ஒன்ருேடொன்று சண்டை யிட்டுக்கொள்ளட்டும் என்று சொல்வதைத் தவிர வேறு ஒன்றும் எனக்குத் தோன்றவில்லை' என அறிவித்ததாக நாம் கேள்வியுறுகிருேம். மடாலயத் தலைவர், நார்ஃபக், ஸஃபக் எனப்படும் மாவட்டங்களுடைய தீர்ப்புக்கு வழக்கை எடுத்துச் செல்வதாகப் பணிவுடன் கூறியதை அதிமேற்றிராணியார் மறுத்தபொழுது, மன்னர் கோபத்துடன் எழுந்து, 'புரிந்து கொள்ளக்கூடியவன் புரிந்துகொள்ளட்டும்'[4] என்று சொல்லிக் கொண்டு நீதிமன்றத்தைவிட்டு அகன்ருர். பட்டத்திற்கு வந்த ஆருவது ஆண்டில் கருவூல மன்றத்தில் ஜான் மன்னர் நேரிலேயே ஒரு வழக்கை விசாரணை செய்து முடித்தார். மூன்ரும் ஹென்றி அவருடைய நீதிபதிகளுடன் அடிக்கடி வெஸ்ட்மின்ஸ்டர் மன்றத்தில் அமர்ந்திருந்தார். ஜான், மூன்ரும் ஹென்றி, முதலாம் எட்வர்ட், இரண்டாம் எட்வர்ட்[5] முதலிய மன்னர்கள் நேரிலேயே கிரிமினல் குற்ற விசாரணை செய்ததுபற்றிப் பல எடுத்துக்காட்டுகள் பதிவு செய்யப்பட் டுள்ளன.

ஆயினும், சாதாரண அதிகார எல்லைக்குட்பட்டதை மன்னர் கையாளுவதென்பது பொது விதிக்கு விலக்காக உள்ளது. நான்காம் எட்வர்ட், மூன்று நாள்கள் தொடர்ந்து மன்னருடைய நீதிமன்றத்தில் அமர்ந்திருந்து, தன்னுடைய சட்டங்கள் எவ்வாறு நிறைவேற்றப்படுகின்றன என்று பார்த் தார் என்றும் நாம் அறிகிருேம். ஆனல், நீதி விசாரணை நடவடிக்கைகளில் அவர் தலையிட்டார் என்று சொல்லப்பட வில்லை.[6] பல நூற்ருண்டுகளின் வழக்கத்தையொட்டி மறுக்க முடியாத கொள்கையாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருப்பது என்னவெனில், நீதிமன்றத்தில் மன்னர் நேரில் வந்திருந்த போதிலும், 'நீதி வழங்கும் அதிகாரம் முழுமையையும் அவரால் ஒப்படைக்கப்பெற்ற நீதிபதிகளின் வாய்மொழி வாயிலாக எந்த வழக்கையும் விசாரித்து முடிவுசெய்வதைத் தவிர மன்னர் தாமாகவே ஒன்றும் செய்யக்கூடாது' என்பதாகும்.[7] முதலாம் ஜேம்ஸ், நீதிமன்றத்தில் நேரில் அமர்ந்திருந்து வழக்கு விசா ரணையில் தலையிட விரும்பியபொழுது, அவர் எக் கருத்தையும் சொல்லக்கூடாது என நீதிபதிகள் சொன்னுர்கள்.[8]

**ஜஸ்டீஷியர் :** மன்னருடைய அதிகாரத்திற்கும் மேலாண் மைக்கும் அடுத்தாற்போல் இருந்தவர் அவரது தலைமை அமைச்சராவார் ; சட்டம், பொருளாதாரம் இவைகளின்

ஆட்சித் தலைவராகவும் அவர் இருந்தார். 'இங்கிலாந்தின் குடிகளில் முதன்மையானவர்' என்றும், எல்லா விவகாரங்களிலும் மன்னருடைய பிரதிநிதியாகவுமிருந்த பதவி காரணமாக லெப்டினன்ட், வைசிராய் அல்லது ரீஜன்ட் என்றும் மன்னரில்லாத காலங்களில் ஆட்சிப் பொறுப்பை நடத்தினர். ஜஸ்டீஷியர் எனும் புதிய அதிகாரி வெற்றிவீரரான வில்லியம் மன்னரால் நியமிக்கப்பட்டார் என்பது நாம் அறிந்ததாகும். மன்னர் அடிக்கடி இங்கிலாந்தைவிட்டு வெளிச்சென்றகாலை அரசாங்கத்தை நடத்துவதற்கும், எல்லாக் காலங்களிலும் புதிதாக வெற்றியின் காரணமாகச் சேர்த்துக்கொள்ளப்பட்ட இங்கிலாந்தின் அரசாங்கத்தை நடத்துவதான அலுவல்களின் பொறுப்புப் பளுவிலிருந்து மன்னருக்கு ஓய்வு அளிப்பதற்காகவும் இவர் நியமிக்கப்பட்டார். சுருங்கக் கூறின், மாவட்டத்தில் எவ்வாறு ஷெரீஃப் தொடர்பு கொண்டிருந்தாரோ, அதைப்போன்று ஜஸ்டீஷியர் நாட்டின் அரசாங்க ஆட்சியில் இருந்தார்.[9] ஜான் மன்னர் இறக்கும்வரை ஜஸ்டீஷியரின் அதிகாரமும் கௌரவமும் எவ்வித ஊறுமின்றிச் சிறந்து விளங்கியது. பின்பு ஹியூபர்ட் டி பர்க் என்ற ஜஸ்டீஷியர் டோவர் கோட்டையில் முற்றுகையிடப்பட்டார். மூன்றும் ஹென்றியை மன்னர் எனப் பேரறிவிப்புச் செய்த மான்யப் பிரபுக்கள் பெம்புரோக்கின் ஏர்லை நாடு, மன்னர் முதலியவர்களின் ஆளுநர் எனச் செய்தனர். எனினும், டி பர்க் தன்னுடைய பதவியைத் தொடர்ந்து வகித்தார்.[10] 1241-ல் ஹென்றி மன்னர், பாய்டுவிற்குச் சென்றிருந்தபொழுது, யார்க்கு அதிமேற்றிராணியார் ரீஜென்டாக நியமிக்கப்பட்டிருந்தார். ஜஸ்டீஷியர் எனும் பட்டம் அவருக்குக் கிடையாது. ஆயினும், இவ் வதிகார பதவி மிகச் சிறந்ததாகக் கருதப்பட்டுவந்ததுடன், 1258-ல் ஆக்ஸ்ஃபோர்ட் ஷரத்துகளில் மான்யப் பிரபுக்கள் தங்களுடைய சம்மதத்தின்பேரில் ஆண்டுதோறும் ஜஸ்டீஷியர் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும் எனக் கோரினர். இறுதியாக முதலாம் எட்வர்ட் இப் பதவியை அறவே ஒழித்தார். இப் பதவியினர் வகித்த உரிமைகளையும் கௌரவங்களையும் இப்போது 'சான்ஸலர்' என வழைக்கப்படுகிறவர் வகித்துவருவதுடன், முக்கிய அமைச்சராயுமுள்ளார்.

**சான்ஸலர்:** பக்தசீலரான எட்வர்ட் மன்னர் ஆட்சியில் 'சான்ஸலர்' எனும் பட்டம் இங்கிலாந்தில் தோற்றுவிக்கப்பட்டது.[11] மன்னருடைய குருமார்களின் தலைவராகவும், மன்னருடைய அதிகார முத்திரையைப் பாதுகாக்கும் பொறுப்புடையவராகவும் இவருக்குப் பதவியளிக்கப்பட்டது. சான்ஸ

லரின் தலைமையின்கீழ் மன்னருடைய குருமார்கள், 'ஃபிராங்கிய மன்னர்'களுடைய 'அரண்மனை அலுவலரைப்' போன்று எழுத்தாளர்களையும் செயலாளர்களையும் கொண்ட ஒரு குழுவாக அமைந்தனர். ஜஸ்டீஷியரின்கீழ் அரசருடைய ஆணைகளை எழுதவும் முத்திரையிடவும் செய்தனர்; மன்னருடைய கடிதப் போக்குவரத்தையும் செய்தனர்; அரசாங்கக் கணக்குகளை வைத்துக்கொள்ளுவதில் கருவூலத் தலைவருக்கு உதவி புரிந்தனர்.[12] நார்மானிய மன்னர்களின்கீழ் சான்ஸலர் பதவி கௌரவமானதாயும் முக்கியமானதாயும் கருதப்பட்டபோதிலும், ஜஸ்டீஷியர் பதவி தோன்றியதன் விளைவாக மறைந்து போகலாயிற்று. ஆயினும், பக்கெட் என்பவருடைய காலம் முதல், சான்ஸலர் பதவி, கௌரவத்தில் உறுதியாக முன்னேறிக் கொண்டிருந்தது. ஜஸ்டீஷியர் பதவி நீக்கப்பட்டபொழுது சான்ஸலர் பதவி முன்னணியில் வந்தது.

குரியா ரெஜிஸ்: இச் சொல் மிக்க விரிவான பொருள் கொள்ளுதலில், நாட்டின் பெரிய ஆலோசனை மன்றத்தையோ அல்லது தேசிய ஆலோசனை மன்றத்தையோ குறிப்பிடுவது போல் தோன்றியது—படைமானிய முறையில் விடானஜிமுட் எனும் மன்றத்தை ஒத்திருந்தது—இம் மன்றத்தின் மூன்று விதக் கூட்டங்களில் மேற்றிராணியார்கள், ஏர்ல்கள், பிரதம மான்யதாரர்கள் ஆகியோர் கூடுவது கடமையாயிருந்தது. முதலிலிருந்தே அதிகாரிகளில் பொறுக்கியெடுக்கப்பட்ட ஒரு சிலரைக்கொண்ட ஒரு சிறு குழு இருந்தது. இது அடிக்கடி கூடி அரசாங்கத்தின் முறையான அலுவல்களைக் கவனித்தது. இது பெரிய மன்றத்தைப் போன்ற நிறுவனமேயாகும்; அதிலிருந்து அளவிலும் கூட்டம் கூடும் முறையிலும் மாத்திரம்தான் வேறுபட்டிருந்தது.[13] தேசிய முக்கியத்துவம் வாய்ந்த பல்வேறு செயல்கள், சட்டம் பற்றிய மாறுதல்கள் முதலியவைகளுக்கு 'ஆலோசனையும் சம்மதமும்' அளிக்கும் அரசியல் வேலையுடன் குரியா சபை, நீதிநிர்வாகத் துறையில், பழைய விட்டானஜிமூட் சபைக்கிருந்த மறுவிசாரணை செய்யும் நீதி மன்றமாக அதிகாரத்தையும் பெற்றிருந்தது. அத்துடன், பிரதம மான்யக் குடியானவர்களிடையே தோன்றிய வழக்குகளிலெல்லாம், மன்னருடைய மான்யதாரர்களின் நீதிமன்றத்தின்மீது நேரிடையான அதிகாரம் பெற்றுள்ளதாயுமிருந்தது. பிற்காலத்தில், மன்னர் நீதிமன்றம், பொது வழக்கு விசாரணை மன்றம், கருவூலம் என்று ஏற்பட்ட மூன்று நீதிமன்றங்களுக்கிடையே பகிர்ந்துகொடுக்கப்பட்ட எல்லா அதிகாரங்களையும் முதலில் இது பெற்றிருந்தது. குரியா ரெஜிஸ், மன்ன

ருடையவும் நாட்டைப்பற்றியும் உடனடியாக எழுந்த எல்லா வழக்குகளையும் ஆலோசனை செய்தும் விசாரணை செய்தும் முடிவு செய்தது; மன்னருடைய வருவாயை நிர்ணயஞ் செய்து வரி வசூலிப்பதை மேற்பார்வையும் செய்தது; மறுவிசாரணைக்கு வந்த வழக்குகளை விசாரித்து முடிவு செய்தது. அத்துடன் மிகப் பழமையானவும், ஆனால், நிலையில் கீழ்த்தரமானவுமான மாவட்டம், ஹண்ட்ரட் என அழைக்கப்பட்ட நிலப்பகுதிகளைச்சார்ந்த நீதிமன்றங்களிலிருந்து தங்களுடைய வழக்குகளை விலக்கிக்கொள்வதற்காகக் கட்சிக்காரர்கள் தண்டத்தொகை செலுத்துவதன் வாயிலாக அனுமதிக்கப்பட்டனர்.[14]

## கருவூலத்துறையும் நிதியும்

முதலாம் ஹென்றியின் ஆட்சியில் சாலிஸ்பரியின் மேற்றிராணியாரான ரோஜர் என்பவரால் ஜஸ்டீஷியரின் ஆட்சி முறை முதன்முதலில் முறையாக அமைக்கப்பட்டது. ரோஜர் பல அதிகாரிகளைக் கொண்ட ஒரு குடும்பத்தைத் தோற்றுவித்தவராவார். அம் மன்னரது ஆட்சிமுதல், குரியா ரெஜீஸின் ஒரு பகுதி அல்லது ஒரு குழு, வரவுசெலவுத் தொடர்புள்ள விவகாரங்களில் சிறப்பாகக் கவனம் செலுத்தி வந்தது. இவ்வாறு வேலையை மேற்கொண்டிருக்கும்போது அது மன்றத்தில் அமர்ந்தது. இது காரணம்பற்றிக் கருவூலத்துறை மன்றம் என (ஸ்காக்கரியத்து மன்னர் மன்றம்) அழைக்கப்பட்டது.[15] ஆண்டிற்கு இருமுறை, ஈஸ்டர், மைக்கல்மஸ் பண்டிகை நாள்களில் ஒவ்வொரு ஷெரீஃபும் வெஸ்ட்மின்ஸ்டர் அரண்மனையில் அமைந்திருந்த கருவூல மன்றத்திற்கு வரவேண்டுமென்றும், அவரவருடைய மாவட்டத்திலிருந்து செலுத்தப்பட வேண்டிய தொகைகளுக்குக் கணக்கு ஒப்பிக்க வேண்டுமென்றும் விதிக்கப்பட்டிருந்தது.

**வருவாயின் மூலங்கள் :** இவை இரண்டு வகையாயிருந்தன. (1) பழமையானதும் தேசியமானதுமான தொகை செலுத்தப்பட வேண்டியவைகளாவன (இவைகளுக்குப் புதிய அத்தாட்சி எதுவும் தேவையில்லை): (அ) மாவட்டத்தின் குத்தகை (ferm), அதாவது, மன்னருக்குச் சேரவேண்டிய வாரமும் சிற்றூர்களிலிருந்து வரவேண்டியவைகளும் முன்பு தானியமாகச் செலுத்தப்பட்டது, தற்போது குறிப்பிட்ட தொகையாக மாற்றப்பட்டது. (ஆ) டேன்கல்டு எனும் வரி, ஒவ்வொரு ஹைட் எனும் அளவுடைய நிலங்களுக்கு இரண்டு ஷில்லிங் வீதம்

செலுத்தப்படுவது. இது இரண்டாம் எதல்ரெட் மன்னரால் முதன்முதலாக டேனர்களுக்குத் திறையாகச் செலுத்துவதற்காகத் திரட்டப்பட்ட வரி; நார்மானிய மன்னர்கள் காலத்தில் பொதுப் பாதுகாப்பிற்காக வசூலிக்கப்பட்ட சாசுவதமான நன்கொடையாக இதனை மாற்றினார்கள்.[16] (இ) தல நீதிமன்றங்களில் விதிக்கப்படும் தண்டத்தொகைகள்—மன்னருக்குச் செலுத்தப்படவேண்டியனவும் பழைய ஆங்கிலேய முறைப்படி ஏற்பட்டனவும். (2) புதியவான, மான்ய முறைப்படி செலுத்தப்படவேண்டிய உதவித்தொகைகள், விடுதலைப் பணம் போன்றவை. இவைகளை வசூலிக்க எவ்வித அதிகாரத்தை முன்னிட்டும் அனுமதி தேவையில்லை. விசேடமான வெகுமதியாகக் கொடுக்கப்படவேண்டியதற்குமாத்திரம் முன்னனுமதி தேவையாயிருந்தது. வருவாய்க்கான இம் மூலங்களுடன் மன்னருடைய சொந்த நிலங்களும் பட்டணங்களும் டல்லேஜ் வரிக்கு உட்படுத்தப்பட்டிருந்தன. இவ் வரி, பாராளுமன்றத்தின் சம்மதமின்றித் தன்னிச்சைப்படி வல்லந்தமாக வசூலிக்கப்பட்டது; மூன்றும் எட்வர்ட் இவ்வுரிமையைக் கைவிட்டார்.[17] 'மன்னருடைய வழக்குகளி'லிருந்து பெறும் வேறு ஆதாயங்களிலிருந்தும் தண்டங்களிலிருந்தும் கருவூலத்துறை மிகுதியான வருவாயைப் பெற்றது. அத்துடன், சேர்த்தல் அல்லது விடுத்தல்பற்றிய ஏராளமான சிறு குற்ற வகைகளைக் குறித்துச் செலுத்தப்படும் சிறு தொகைகளும், விசாரணையிலிருக்கும் வழக்குகளில் தொடர்புள்ள கட்சிக்காரர்கள் செலுத்தும் அபராதங்களும் சேர்ந்தன. வாதி விரைவில் தீர்ப்புப் பெறுவதற்காகவும், பிரதிவாதி நடவடிக்கைகளைத் தாமதப்படுத்துவதற்காக அல்லது மேற்கொண்டு செய்யவேண்டிய நடவடிக்கைகளைக் கைவிடுவதற்காகவும் மன்னருக்கு அபராதத் தொகை செலுத்தினர்.

**வரிவிதிப்பு:** இம் முறையில் இரண்டாம் ஹென்றி முக்கியமான மாறுதல்களைத் தோற்றுவித்தார். மக்களில் எல்லா வகுப்பினரும், எல்லாவிதமான சொத்துகளும் உதவித் தொகை அளிக்கும்படியாகச் செய்யப்பட்டன. வீரமுள்ள குடியானவர்கள், சாதாரணமானவர்கள், சமயஞ் சார்ந்தவர்கள் ஆகியோர்மீது கேடய வரி விதிக்கப்பட்டது; இவ் வரி பழைய முறையான நில அளவு அடிப்படையில் விதிக்கப்படாமல், நைட் வீரர்களின் கட்டணத்தின் அடிப்படைமீதே விதிக்கப்பட்டது. இவ் வரி முதலாம் ஹென்றியின் காலத்தில் விதிக்கப்பட்டது. எனினும், இரண்டாம் ஹென்றியின் காலத்தில் மிகவும் விரிவுபடுத்தப்பட்டது.[18] 1162-க்குப் பிறகு அரசிறை

வருவாய் முறையிலிருந்து டேன்கல்டு வரி எடுபட அனுமதிக்கப்பட்டது ; எனினும், மிக விரைவிலேயே வெகுமதி (டோனம்) அல்லது நில அளவு வரி (ஹைடேஜ்—ஹைட் என்பது 80 முதல் 120 ஏக்கர்வரை உள்ள நில அளவு) எனும் வேறு பெயரில் விதிக்கப்பட்டது. முதலாம் ரிச்சர்டு காலத்தில் இது 'காருகேஜ்' எனும் நிலவரியாக மாறியது. இது, நில உரிமைத் திட்டம் எவ்வாருயினும், நிலம் வைத்திருந்தவர்மீதெல்லாம் விதிக்கப்பட்டது. ஆனுல், ஹென்றி புதுமையை உண்டு பண்ணியது மிக முக்கியமானது. இது வருமானத்தின்மீதும் சொந்தச் சொத்தின்மீதும் விதிக்கப்பட்ட வரியாகும். 1188-ல் சாலடின் டைத் எனும் அவசர ஆணைப்படி இது உதவித் தொகையாகச் செய்யப்பட்டதென்பதை முன்னர் கண்டோம்.[19] ஒரு தடவை புகுத்தப்பட்ட இவ் வழக்கம் விரைவில் பரவலாக்கப்பட்டு நிலையாக வைத்துக்கொள்ளப்பட்டது. 1193-ல் முதலாம் ரிச்சர்டை மீட்பதற்காகப் பெறப்பட்ட தொகைக்கு நாட்டிலுள்ள எல்லோரும் வருவாயில் அல்லது சொத்தில் நான்கில் ஒரு பங்கைச் செலுத்துமாறு அழைக்கப்பட்டனர். 1203-ல் ஜான் மன்னர், அவருடைய மான்யப் பிரபுக்களுடைய ஜங்கம சொத்துகளில் ஏழிலொரு பங்கைக் கட்டாயமாக வசூலித்தார். 1207-ல் மக்களிடமிருந்து பதின்மூன்றிலொரு பங்கை வசூல் செய்தார்.[20]

**நைட் வீரர் பதவி:** இரண்டாம் ஹென்றி பின்பற்றிய கேடய வரிவிதிப்பைப் போன்று முதலாம் எட்வர்ட் பணம் திரட்டுவதற்காக ஓர் உபாயத்தைக் கையாண்டார். முழு வயதையடைந்த ஒவ்வொரு குடியானவனும் நைட் வீரர் பதவிக்கு ஏற்ற தகுதியைப் பெற்று, அதற்குப் பொருத்தமான ஆயுதங்களையும் தளவாடங்களையும் கைக்கொண்டு, நைட் வீரருடைய ஊழியத்தைச் செய்வது பொறுப்பாக ஏற்பட்டிருந்தது. 1224—ல் மூன்ரும் ஹென்றி, நைட் வீரருடைய பண்ணையைச் சேர்ந்த[21] எல்லாச் சாதாரணமான குடியானவர்களையும், இக் கடமையைச் செய்யுமாறு வற்புறுத்த ஷெரீஃபுகளுக்கு உத்தரவிட்டார் ; 1234—ல் தலைமையான குடியானவர்களுக்கு மாத்திரம் என மீண்டும் விதிக்கப்பட்டது.[22] 1278-ல் பணத்தேவை மிகுதியாயிருந்ததால் முதலாம் எட்வர்ட் ஷெரீஃபுகளுக்குக் கடுமையான உத்தரவிட்டார். இதன்படி எல்லோரும் பிரதான மான்யக் குடியானவர்களான இடைப்பட்ட மான்யப் பிரபுவிற்குட்பட்டிருந்த குடியானவர்களும், ஆண்டுக்கு 20 பவுன் மதிப்புள்ள நிலத்தைப் பயிரிடுகிறவர்கள் அல்லது அதே ஆண்டு மதிப்பைக் கொண்ட முழுமையான

நைட் கட்டணம் செலுத்துகிறவர்களும், நைட் வீரர்களா யிருக்கக்கூடியவர்களுமான எல்லோரையும் நைட் பதவியைப் பெறத் தூண்டுமாறு ஷெரீஃபுகள் வற்புறுத்தப்பட்டனர்.[23] இராணுவ ஊழியத்தில் மதிப்புள்ளவர்கள் படையில் சேரு வதற்குப் பதிலாகப் பணம் செலுத்துவதற்கு அனுமதிக்கப் பட்டனர். நைட் பதவிக்காகச் சொத்துப் பறிமுதல் செய்தது பணம் திரட்டுவதற்காக மாத்திரம் பின்பற்றப்பட்ட முறை யன்று; தகுதிவாய்ந்த சுதந்திர நிலச்சுவான்தாரர்களைக் கொண்டு நைட் வீரர்களைச் சேர்க்கும் இராணுவ நோக்கத்தை நிறைவேறச் செய்வதற்காகவும் ஏற்படுத்தப்பட்டது. நைட் வீரர்கள், சட்டத்தொடர்பு கொண்டிருந்த பல்வேறு காரியங் களுக்காகவும், சிறப்பாக ஜூரிகளாகவும், அஸைஸ் மன்றங் களிலும், கணக்கற்ற ஆட்சிமுறைத் தொடர்புள்ள அலுவல் களிலும்[24] நேரில் ஆஜராக வேண்டியிருந்ததால், நைட்டுகளின் எண்ணிக்கையை நிறைவு செய்வதற்காகவும் நைட்வீரர் பறி முதல் முறை ஏற்பட்டது. இது, இச் சிறப்புரிமையைத் தொடக்கத்தில் முறையற்ற வழியில் செயலாற்றியதைத் தடுக்க 1274-ல் கட்டாய நைட் பதவித்தன்மை[25] குறித்து ஷெரீஃபுகள், மற்றும் பலர்மீது விசாரணை செய்யும் நிறுவனம் ஏற்படுத்தியதிலிருந்து தெரியவருகிறது. இரண்டாம் எட்வர் டின் ஆட்சியின் முதலாண்டில் வீரர்கள்பற்றிய ‘டிமிலிடிபஸ்’ எனும் (சட்டம் என அழைக்கப்படுவதுண்டு) பரிகார நட வடிக்கை எடுக்கப்பட்டது. இந் நடவடிக்கையின்படி, ஆண்டிற்கு 20 பவுன் மதிப்புக்கும் அதிகமான மதிப்பையுடைய நிலங்களைக் கொண்டிராத குடியானவர்களும், வயதுவராதவர் களும், சமயத்துறையில் சேர்ந்திருந்தவர்களும், சாகேஜ், பர்கேஜ் முறையில் நில உரிமை பெற்றிருந்தவர்களும் நைட் வீரர் பதவித்தன்மையைப் பெறும்படி கட்டாயப்படுத்தக் கூடாதென முடிவு செய்தது; அத்துடன், அதிக வயதான வர்கள், காயமடைந்ததாலும் தீராத நோயினாலும் அல்லலுறு கிறவர்கள், அதிகமான மக்கட்பேறு பெற்றவர்கள், அதிகமான வழக்குகளில் ஈடுபட்டுத் தொல்லையுறுகிறவர்கள்போன்ற எல் லோரும் ‘நியாயமான’ தண்டம்[26] செலுத்துவதை முன்னிட்டு விலக்களிக்கப்படவேண்டும் என்றும் முடிவு செய்தது. பிற் காலத்தில் பாராளுமன்றத்தின் சம்மதம் பெறாது இம்மாதிரி யாகப் பணம் திரட்டுவது மக்களுக்குத் தொல்லை கொடுக்கு மளவிற்கு, ஆறும் எட்வர்ட், எலிஸபெத், முதலாம் சார்லசு ஆட்சிக் காலங்களில் கையாளப்பெற்றது. இரண்டாம் சார்ல சின் சட்டத்தினால் மான்ய உரிமை பற்றிய வரிகளுடன் இதுவும் ஒழிக்கப்பட்டது.[27]

**மறைமுக வரிவிதிப்பு:** நார்மானிய, ஆஞ்சவின் மன்னர் காலத்தில் விதிக்கப்பட்ட பலவகையான நேர்முக வரிகளுடன், இறக்குமதி செய்யப்பட்ட திராட்சை ரசத்தின்மீதான வரியும், ஏற்றுமதி இறக்குமதி செய்யப்பட்ட வேறு பொருள்களின் மீது விதிக்கப்பட்ட சுங்க வரிகளும் (முற்காலங்களில் விதிக்கப்பட்ட ஆயத்தீர்வை உரிமையின் அடிப்படையில் விதிக்கப்பட்டது; சில இடங்களில் பண்ணைப் பிரபுக்களாலுங்கூட இவ் வுரிமை அமல் செய்யப்பட்டது), மறைமுக வரிகளை விதிக்கும் முறைக்கு மூலமாயிருந்தன. நாளடைவில் இவை வாணிகம் விரிவடைந்ததாலும், மன்னருடைய பணத்தேவைகள் மிகுதியானபொழுதும் அதிகமாக வளர்ச்சியுற்றன. சுங்க வரிகளுக்கு உரிமை பாராட்டியதையும், அதனை முறையற்ற முறையில் பெற்றதையும் மகாசாசனத்தின் ஷரத்து (விதி 41) தெரிவிக்கிறது. வியாபாரிகள் பழமையானதும் நியாயமானதுமான முறைப்படி எவ்விதத் தொல்லையுமின்றி வாங்கவும் விற்கவும் செய்யலாம். பிற்காலத்தில் மன்னருக்கும் பார்லிமென்டிற்குமிடையே மறைமுக வரிகளைப்பற்றி நிகழ்ந்த சண்டைகளின் அரசியல் சட்டவமைப்புப்பற்றி இனி ஆராய்வோம்.

## நீதிவழங்கல் முறை

குரியா ரெஜிஸ், நாட்டின் மிக்குயர் நீதிமன்றமாக இரண்டாம் ஹென்றியின் ஆட்சிக் காலம்வரை இருந்தது. நீதிபதிகளில் சிலர், அவ்வப்போது அக் குழுவிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டனர். இவர்களின் எண்ணிக்கை மாறுபட்டதுடன், நிதித் தொடர்புள்ள அலுவல்களைக் கவனிப்பதற்காக, கருவூல மன்றத்தின் குழுவைச் சேர்ந்த பலருடைய சேர்க்கையுடன் அநேகமாகத் தொடர்ந்து அது நீதிமன்றங்களை நடத்தியது. இரண்டாம் ஹென்றியின் காலத்தில்—சிறப்பாக 1166-ல் கிளாரன்டன் அஸ்ஸைஸிலிருந்து தொடங்கி 1176-ல் நார்த்தாம்டன் அஸ்ஸைஸுடன் முடிந்த ஒரு பத்தாண்டுக் காலத்தில்—குரியாவின் அலுவல்கள் மிகவும் அதிகமாயின. மத்திய மன்றக் கூட்டங்களும், நிதிபற்றியும் நீதிபற்றியும் நாட்டைச் சுற்றிவருவதும் மிகுதியாயின. இதன் பயனாக நீதிபதிகளின் எண்ணிக்கை கொஞ்சங்கொஞ்சமாக வளர்ந்து பதினெட்டாக ஆயிற்று. ஆனால், 1178-ல் இவ்வெண்ணிக்கை அதிகமென எண்ணிய மன்னர், உறுப்பினர்களைப் பதினெட்டிலிருந்து ஐந்தாகக் குறைத்தார் (சமயஞ் சார்ந்தவர் இருவரும் சாதாரணமானவர்களில் மூவருமாக). அத்துடன் மறுவிசாரணை செய்யும் நாட்டின் மிக்குயர் நீதிமன்றமாயிருந்த அதன் தன்மை

யையும் நீக்கினார் ; குரியா நீதி வழங்குவதில் தவறிய காரணங்களுக்காக, ஆலோசனை உறுப்பினர்களைக் கொண்டதும், தானே நேரில் விசாரணை செய்வதுமான நீதிமன்றத்திற்கு வழக்குகளை ஒதுக்கிவைத்துக்கொண்டார்.[28] ஒரு புதிய நீதிமன்றத்தை ஏற்படுத்தும் நோக்கம் மன்னருக்குக் கிடையாது ; ஆனால், 'தற்காலிகமான' இவ் வழக்குகளின் பொது நலத்தைக் கருதி அடிக்கடி நீதிமன்றத்தை அமைத்தது. (இம் மாதிரி பல நன்கு தெரிந்தவை.) அதன் இறுதி விளைவாகப் பொது வழக்கு நீதிமன்றம் (அதாவது, தனிப்பட்டவர்களுக்கிடையே, முக்கியமாக சிவில் வழக்குகளை விசாரிக்க) தோன்றியது.[29] இந்த நீதிமன்றம் மன்னரைப் பின்தொடர்ந்து சென்றது ; இவ் வழக்கம் வழக்குத் தொடுத்தவர்களுக்கும் சாட்சியமளிப்பவர்களுக்கும மிகவும் அசௌகரியமாயிருந்ததை நேரில் கண்டு, மகாசாசனம், பொது நீதிமன்றங்கள் ஏதாவது ஒரு குறிப்பிட்ட இடத்தில் நடைபெற வேண்டும் என வகுத்தது. ஆகவே, நீதிமன்றம் வெஸ்ட்மின்ஸ்டரில் நிலையாக ஏற்படலாயிற்று.[30]

**குரியாவின் பிரிவு :** மூன்றாம் ஹென்றியின் ஆட்சி முடிவடைந்தபொழுது, குரியா ரெஜிஸ் அதன் அரசியல் தோற்றத்தில் மூன்று நிறுவனங்களாக அல்லது நீதிமன்றங்களாக நிலையாகப் பிரிந்துபோயிற்று. ஒவ்வொரு பகுதியும் அலுவல்களில் ஒரு பங்கை எடுத்துக்கொண்டது. (1) கருவூலம் வருவாய் பற்றிய விஷயங்களைக் கவனித்தது. (2) குற்றத் தொடர்பில்லாதனவும் மன்னரைப் பற்றியவல்லாதனவுமான சிவில் வழக்குகள் பொது நீதிமன்றத்தில் விசாரிக்கப்பட்டன. (3) மன்னரது நீதிமன்றம் முதலில் உண்மையாகவும், பின்பு கொள்கையளவில் மன்னருக்கு முன்பாகவும் நடைபெறும் நீதிமன்றம் (கோரம் ரீகே). இந் நீதிமன்றம் மற்ற எல்லா அலுவல்களையும் தன்பால் ஏற்றுக்கொண்டதுடன், பொது நீதிமன்றத்தின் தவறுதல்களைச் சீர்செய்யும் அதிகார வரம்பையும் முக்கியமாகக் கொண்டிருந்தது.[31] இம் மூன்று பிரிவுகளிலும் அவைகளின் பழைய அமைப்பு ஒற்றுமையின் அடையாளம் எப்பொழுதும் காணப்பட்டது. ஆயினும், கருவூல மன்றத்தில்[32] கூடியிருந்த எல்லா நீதிபதிகளும் அறுநூறுண்டுகள் வரை தனித்திருக்கும் தன்மையை விடுத்து, முடிவில் நியாய விசாரணைச் சட்டத்தின்படி[33] அவை ஒன்றாக இணைக்கப் பட்டன.

சான்ஸரி (சான்ஸலரின் நீதிமன்றம்), உயில் உறுதி செய்யும் நீதிமன்றம், திருமண ரத்து, இராணுவ நீதிவிசாரணை

மன்றம் போன்ற நீதிமன்றங்களுடன் ஒன்ருக இணைக்கப்பட்ட உயர் நீதிமன்றத்தின் பிரிவுகளாக இவை உள்ளன. உயர் நீதிமன்றமும் மிக்குயர் நீதிவிசாரணை மன்றத்தின் ஒரு பிரிவாக உள்ளது.[34]

**சுற்றிவரும் நீதிபதிகள்:** அல்லது இடம் விட்டு இடம் செல்லும் நீதிபதிகள் எனும் முறை இரண்டாம் ஹென்றியினுல் தோற்றுவிக்கப்பட்டதன்று எனினும், இங்கிலாந்தில் அது முறைசெய்யப்பட்டு, நிலையான நிறுவனமாக அமைக்கப்பட்ட தென்பது அவரைச் சார்ந்ததாகும். முதலாம் ஹென்றியின் ஆட்சிமுதல் குரியா ரெஜிஸைச் சேர்ந்த நீதிபதிகளில் சிலர் சில சமயங்களில் மன்னரால் நியமிக்கப்பட்டனர். இவர்கள், நாட்டின் வருவாயை வசூலிக்கவும், சிவில், கிரிமினல் தொடர்புள்ள வழக்குகளை விசாரிக்கவும் கோட்டங்கள் தோறும் சென்று வந்தனர்.[35] அவர்களுடைய முதல் தொழில் வருவாயை வசூலிப்பது; செலுத்தப்பட வேண்டிய வருவாய் எவ்வளவு என்பது பற்றிய வழக்குகளை முடிவு செய்வது, ஷெரீஃபுகளும் அரசிறை வசூல்செய்யும் அதிகாரிகளும் செய்யும் சூதுகளைத் தண்டிப்பது ஆகியவையும் கடமையாயிருந்தன. அத்துடன், பழைய ஆங்கிலேய மன்னர்கள் கீழ்க்குற்ற விசாரணை மன்றங்களில் நீதி வழங்குவதில் ஏற்பட்ட தவறுதல்கள் பற்றிய மனுக்களை நேரில் கேட்டு விசாரிப்பதற்காக இடம் விட்டு இடம் சென்றதைப் போல் சென்று விசாரணை செய்வதையும், வெற்றியாளர் வில்லியமும் அவரது இரு மகாரும் வழக்கமாக கிளௌசஸ்டர், வின்செஸ்டர், வெஸ்ட்மின்ஸ்டர் எனுமிடங்களில் ஆண்டுதோறும் முப்பெரு விழாக்களின் பொழுது நடத்திவந்த நீதிமன்றங்களை நடத்துவதையும் தொடர்ந்து செய்துவந்தனர். ஸ்டீபன் மன்னருடைய ஆட்சியில் அரசியல் குழப்பமாயிருந்த காலத்தும் நீதிபதிகள் பல இடங்களுக்குச் செல்லுவது முழுமையாக நிறுத்தப்படவில்லை.[36] இரண்டாம் ஹென்றி இவ்வழக்கத்தை மீண்டும் தொடங்கினர். 1166-ல் ஏற்பட்ட கிளாரண்டன் அஸ்ஸைஸ் எனும் சட்டத்தில் நாட்டைச் சுற்றிவரும் நீதிபதிகளின் குழுவின் அலுவல்களில் துணைபுரிவதற்காகக் கட்டளைகள் அடங்கியிருந்தன. இந் நீதிபதிகள் கோட்டம் தோறும் சென்று ஷெரீஃபுகளுடன் சேர்ந்து வழக்கைத் தொடுக்கும் ஜூரிகளால் குற்றஞ்சாட்டப்பட்ட குற்றவாளிகளை விசாரணை செய்தனர்.[37]

**ஒழுங்காகச் சுற்றிவருதல் அமைக்கப்பெறல்:** 1176-ல் நார்த்தாம்டனில் நடந்த பெரிய கூட்டத்தில் ஹென்றி, அரசிறை,

நீதி விசாரணை தொடர்பானவைகளை முன்னிட்டு இராச்சியத்தை ஆறு சுற்றுப் பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொரு பிரிவிற்கும் மூன்று சுற்றிவரும் நீதிபதிகளை நியமித்தார்.[38] மக்களிடமிருந்து வரவேண்டிய தொகைகளைக் கசக்கிப் பிழிந்து மக்களிடமிருந்து பெறுவதற்காக மன்னருடைய ஏஜன்டுகளாக இச் சுற்றிவரும் நீதிபதிகள் மாறினர்; எனவே, மக்களால் பெரிதும் வெறுக்கப்பட்டனர். மூன்றும் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் நீதிபதிகள் ஏழாண்டுகளுக்கு ஒருமுறை சுற்றுப்பயணம் செய்வது வழக்கமாயிற்று; பதினுன்காம் நூற்றூண்டின் இறுதியில் இவ்வழக்கம் முற்றிலும் கைவிடப்பட்டது.[39] சுற்றுப்பயணம் செய்யும் நீதிபதிகளின் நிறுவனம் ஏற்பட்டதிலிருந்து அவர்கள் சுற்றுப்பயணத்தில் கோட்ட நீதிமன்றங்களில் அமர்வது வழக்கமாயிற்று. இவர்களை நோக்கியே இந் நீதிமன்றங்கள் கூட்டப்பெற்றன. 'நாட்டில் சுற்றிவருவதால், குரியா ரெஜீஸிற்கும் மாவட்ட மன்றத்திற்குமிடையே தொடர்பை உண்டுபண்ணியது; அத்துடன் அரசருடைய நீதி விசாரணைக்கும் பொதுமக்கள் விசாரணைக்கும், பழைய முறைக்கும் புதிய முறைக்கும் இணைப்பாக இருந்தது.'[40] மன்னருடைய நீதிமன்றத்திற்கும் மாவட்ட நீதிமன்றத்திற்குமிடையே ஏற்பட்ட நேரிடைத் தொடர்பு மிக முக்கியமான அரசியலமைப்புப் பயன்களைக் கொண்டிருந்தது. இனிக் காணப்போகும் தேசியப் பிரதிநிதி சபை வளருவதும், அதே காரணம் பற்றியே பொதுச் சட்டம் ஒரே சீராக அமைவதும், தல நிலமான்யச் சட்டத்தின் நீதி எல்லைகளுக்குட்பட்டு அந் நீதி அடக்கப்படுவதும் ஏற்படலாயின.[41]

**அஸ்ஸைஸஸும் ஜூரி மன்றமும் :** இரண்டாம் ஹென்றியின் காலம்முதல் கோட்டங்களுக்கு நீதிபதிகள் அனுப்பப்படலாயினர். மார்டி, அன்ஸெஸ்டர், நாவல் டிஸ்ஸீஸன், டரையின் பிரசென்டுமென்டு எனும் நீதிமுறைகளை வழங்குவதற்காக இவர்கள் சென்றனர். மகாசாசனத்தின்படி (விதி 18) இரு நீதிபதிகள் ஆண்டிற்கு நான்கு முறைகள் அனுப்பப்பட வேண்டுமென்றுயிற்று; ஆனுல், சாசனம் மூன்றும் ஹென்றியால் மறுமுறை வெளியிடப்பட்டபொழுது, 1217-ல், இவர்கள் ஆண்டிற்கு ஒருமுறை (விதி 13) செல்லவேதென மாற்றப்பட்டது.

இரண்டாம் வெஸ்ட்மின்ஸ்டர் சட்டப்படி 13, முதலாம் எட்வர்ட், விதி 30 (1285), அஸ்ஸைஸ், ஜூரி மன்றங்கள் (நிஸி பிரைஸ்) மன்னரிடம் உறுதிவிசுவாசம் எடுத்துக்கொண்ட நீதிபதிகளிலிருந்து நியமிக்கப்பட வேண்டுமென்று உத்தரவு

பிறப்பிக்கப் பெற்றது. இவ்வாறு நியமனம் பெற்றவர்கள் ஒவ்வொரு கோட்டத்திலிருந்தும் விவேகமுள்ள இரு நைட் வீரர்களுடன் சேர்ந்துகொண்டு அஸ்ஸைஸிலும், ஜூரி மன்றத்திலும் உண்மையை விசாரிக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டது.[42] இவ்வாறு ஏற்படுத்தப்பட்ட அஸ்ஸைஸ் நீதிபதிகள் பழைய சுற்றிவரும் நீதிபதிகளை விலக்கி இன்றுவரை தொடர்ந்து வந்துள்ளனர்.[43]

## ஜூரி முறையின் பழைய வரலாறு

சட்டம் சார்ந்த பல சீர்திருத்தங்களைச் செய்ததுடன், உறுதிமொழி எடுத்துக்கொண்டவர்களைக் கொண்டு விசாரணை செய்யும் முறையை ஒத்துக்கொண்டு இதை மிக விரிவுபடுத்தி முறையாக அமைத்ததும் இரண்டாம் ஹென்றியைச் சார்ந்ததாகும். இம்முறைப்படி மன்னருடைய ஆணைப்படி, செயல் புரியும் மன்னருடைய அதிகாரியால் நடத்தப்படும் நீதிமன்றத்திற்கு வரவழைக்கப்பட்டவர்கள், தல மக்களின் சான்றுகளின் தன்மையைப் பிரதிபலிக்கிறவர்களாயும் நடுநிலையான சாட்சிகளாயுமிருக்க உறுதிமொழி எடுத்துக்கொண்டவர்களுடையவும் குழுவின் துணைகொண்டு உண்மையைக் கண்டறிந்து நீதி வழங்குவதாகும். இம்முறையிலிருந்துதான் இக்காலத்திய ஜூரி முறை விசாரணை வழிமுறையாக வந்துள்ளது.

'நீதித்தொடர்புள்ள நிறுவனங்களில் மிக்க ஜனநாயக முறையில் அமைந்துள்ள'தும் அரசியலமைப்புச் சுதந்திரத்தைக் காப்பதில் நெடுநாளாகப் பாதுகாக்கப்பட்ட அரணுமுள்ள இந்த ஜூரி முறையின் தோற்றம் குறித்து, பல அறிஞர்களின் கட்டுரைகள் எழுந்துள்ளன. அத்துடன் பல முரணான கருத்துகளும் வெளியிடப்பட்டுள்ளன. 'ஜூரி விசாரணை முறை வரலாறு'[44] எனும் நூலை எழுதிய சிறந்த அறிஞரையுள்ளிட்ட சில புகழ்வாய்ந்த ஆசிரியர்கள் ஆங்கிலேய ஜூரி முறை நாட்டில் தானாகத் தோன்றி வளர்ந்ததேயல்லாது, ஐரோப்பாவில் நிலவியிருந்த எவ்வித விசாரணைக் குழுவிலிருந்தும் நேரிடையாகவோ மறைமுகமாகவோ பெறப்பட்டதல்ல எனப் பிடிவாதமாகக் கூறியுள்ளனர். மற்றும் சிலர், ஆங்கிலோ-சாக்ஸானியர் காலத்திய உண்மையை உரைப்பதாக உறுதிமொழி அளித்தவர்கள் எனப்படும் காம்பர்கேட்டர்கள், உண்மையை விளக்கச் சாட்சியம் சொல்ல உறுதிமொழி அளித்தவர்கள் ஃபிரிபோர்கள் என்போர், எதல்ரெட் மன்னரின்

சட்டப்படி குற்றமற்ற எவரையும் குற்றவாளியெனக் குற்றஞ் சாட்டக்கூடாது என உறுதிமொழி எடுத்துக்கொண்ட பன்னிரு உயர் தீன்கள், மாவட்டத்திலும் ஹண்ட்ரடிலும் உள்ளவர்களால் தல நீதிமன்றங்களில் விசாரணை செய்யும் முறை போன்ற இவைகளெல்லாம் தனியாகவோ அல்லது கூட்டாகவோ இக்காலத்திய ஜூரி முறையின் அடிப்படையான அம்சங்களைக் கொண்டிருந்ததாகக் கருதப்படுகிறது.[45] எனினும், எதல்ரெட் மன்னருடைய வழக்குகளை நீதிபதிகளின் முன் அறிவிக்கும் ஜூரிகள் தவிர, (பிற்காலத்தில் கிராண்ட் ஜூரி என அழைக்கப்பட்டதுடன் சேர்த்துக் கூறப்படும்) மேற்கூறியவைகளில் ஜூரிக்கு மூலமாகக் கருதப்படும் எதையும் கூர்ந்து பார்த்தோமானால், உண்மையைக் கூறுவதாக உறுதிமொழி அளித்து வழக்கை விசாரணை செய்தவர்களுடன் —இன்றுள்ள ஜூரி முறைக்கு வரலாற்று அடிப்படையில் மூலமாகக் கருதப்படுகிறவர்கள்—மேலெழுந்த வாரியாக, ஒத்த தன்மையைக் காண்பதைத் தவிர வேறு எவ்விதத் தொடர்பையும் காணமுடியாது.

**நார்மானியர்கள் மூலகாரணமாயுள்ளவர்கள் எனும் புருனரின் கோட்பாடு:** காரணம்—பயன் என்று கருதுவதில் மிக்க குறைவான தொல்லையையுடையதும், நேரிடையாகச் சோதித்துப் பார்த்தல் என்பதைத் தவிர மற்றபடி வாதங்கள், சாட்சியம் முதலியவைகளால் நிலைபெற்றதுமான இக் கோட்பாடு, உறுதிமொழி அளித்தவர்களைக் கொண்டு நடத்தப்பட்ட ஆங்கிலேய விசாரணை முறை நார்மண்டியிலிருந்து கொண்டு வரப்பட்டது எனக் கூறுவதாகும். அங்கு, 911-ல் எளிமையானவர் எனப் பெயர்பெற்ற சார்லஸ் மன்னர் ரோலோ என்பவருக்கு நியூஸ்டிரியன் மாநிலத்தை ஒப்படைத்ததற்கு முன்னதாகவும், பின்னும் காரோலின்ஜன் மன்னர்களின்கீழ் நிறுவப்பட்ட ஃபிரான்சு நாடு முழுவதிலும் நடந்து வந்ததைப் போன்று ஜூரி முறை இருந்து வந்தது. காரோலின்ஜன் மரபைச் சேர்ந்த மன்னர்களுடைய சட்டத் தொகுப்புகளில், தல நீதிமன்றங்களில் உறுதிமொழி எடுத்துக்கொண்ட சாட்சிகளால் நடத்தப்பெறும் விசாரணை குறித்து மிகவும் நுணுக்கமான விதிகள் அடங்கியுள்ளன.[46] ஆனால், ஜூரி முறை விசாரணை தோன்றுவதற்கு மூல காரணமாயுள்ளது எதுவாயிருப்பினும் சரி, அல்லது பழைய ஆங்கிலேய நீதி விசாரணை முறையில் மாற்றியமைக்கப்பட்டதாகக் கருதினாலும் சரி, அல்லது காரோலின்ஜன் மன்னர்களிடமிருந்து நார்மானியர்கள் வழியாகப் பெற்றது என்றாலும் சரி, இரு விஷயங்கள்

கட்டாயமாகத் தெளிவாகும்: (1) குற்றவாளிகளை அடையாளங் கண்டு சொல்லுவதில் உறுதிமொழி எடுத்துக் கொண்டவர்களால் விசாரணை செய்யப்படும் முறை, மிக்க நாகரிக வளர்ச்சியடையாததும் மிக்க எளிமையானதுமான அமைப்பில்கூட நார்மானியர்களின் வெற்றிக்குப் பின்னர், ஆனால் அடுத்தாற்போல் இங்கிலாந்தில் முதன்முதலாகத் தோன்றியிருக்க வேண்டும் எனவும்; (2) இங்கிலாந்தில் தொடக்கம் முதற்கொண்டே இம்முறை அதற்குமுன் நாட்டில் மாவட்ட மன்றங்களில் நடைபெற்று வந்ததும் வழக்கிலிருந்ததுமான நடைமுறையுடன் மிக நெருங்கிய இணைப்புக் கொண்டதாய் செயல்பட்டிருக்க வேண்டும் என்பதாகும்.[47]

**அண்மையிலேற்பட்ட சில திறனாய்வுகள்:** மேற்கூறிய இரு முடிவுகள் பற்றி, 1952-ல் எஞ்சி நின்ற ஆங்கிலோ-சாக்சானியர்களுடைய சட்டம் பற்றிய ஆணைகளைத் தொகுத்துப் பதிப்பித்ததிலிருந்து, மேற்கொண்டு இன்னும் மிகுதியானதும் விளக்கமானதுமான ஆய்வு நடந்துள்ளது.[48] மேலும், 1958-ல் நார்மானியர் வெற்றியிலிருந்து க்ளன்வில் வரை ஏற்பட்ட ஆணைகளைத் தொகுத்து, சிறப்பாக ஜூரியின் மூலகாரணமாயுள்ளது எது எனும் பிரச்சினையைக் குறித்துப் பதிப்பித்ததிலிருந்து ஆய்வு நடந்துள்ளது.[49] இதன் பயனாக இங்கிலாந்தில், நார்மானியர் வெற்றிக்குமுன், விசாரணை முறை உறுதியாகயிருந்ததென்றும், அம்முறையைப் பயன்படுத்துவது கட்டாயமாகச் செய்யப்படவில்லையென்றும், குற்றவாளிகளை அடையாளங் காண்பித்துக் கொடுத்தலில் உறுதிமொழியளிக்கிறவர்களைத் தேர்ந்தெடுப்பதில், வழக்கிலீடுபட்டுள்ள கட்சிகளே அவர்களுக்குள் சம்மதத்தைப் பொறுத்திருந்ததென்றும் மன்னர் அவர்களைத் தேர்ந்தெடுக்கவோ அழைக்கவோ இல்லையென்றும் தெரியவரும். டாக்டர் கேனிகம் என்பார் கூறுவது போல், 'பிற்காலத்தில் நாம் காண்பதுபோல் இங்கு (பத்தியாளரான எட்வர்ட் காலத்திய வழக்கொன்றில்) சுதந்திரமானதும் பொதுமக்களால் ஏற்றுக்கொள்ளப்படுதலையும் கொள்கிறோம். நடவடிக்கை முறை மன்னரால் நடத்தப்படுவதினின்றும் முற்றிலும் வேறானது; அத்துடன் மேலேயிருந்து எவ்வித உத்தரவும் இல்லாமலும், மற்ற எந்த அதிகாரியாலும் ஆட்சி இயல், அரசிறை வருவாய், ஆட்களைச் சேர்த்தல் போன்ற எவ்வித நோக்கம் இல்லாமலுமிருந்தது.' இதே போன்று கணக்கற்ற நடவடிக்கைகள் நார்மானியர்களின் வெற்றிக்குப் பின்னும், இரண்டாம் ஹென்றியின் கடுமையான அஸ்ஸைஸ்கள் ஏற்படுவதற்கு முன்பும் இருந்தன. எனவே,

பன்னிரெண்டாம் நூற்றுண்டில் காணப்பட்ட பெரிய அஸ்ஸைஸ்களுக்கு முன்னரே வழக்கின் உண்மையைக் கண்டு பிடிப்பதில் கவர்ச்சியானதும், முறைப்படி தொகுக்கப்பட்ட ஆதாரங்களையுடையதுமான நிலை எதிர்ப்படுவதைப் பார்க்கிறேம்.

ஆயினும், ப்ருனரின் சிறப்பான ஆராய்ச்சி முடிவுகளையும் அவைகளைப் பின்பற்றி ஹாஸ்கின்ஸ் செய்துள்ளவைகளையும் நாம் முற்றிலும் மறுக்க வேண்டியதில்லை. நார்மானியர்களிடமிருந்து உரிமை வழியாய் அடைந்ததையும், காரோலின்ஜன் ஆட்சியின் சிறப்பை நினைவூட்டுதலையும் கொண்ட மன்னரது நீதிமுறை சிறப்பானதாயிருந்தது. இதையொட்டிய நடைமுறைகளுக்கு அரசர்களையும் (பேரரசர்கள்) நார்மானியரின் மூலங்களையும் ஆதாரமாகக் கொள்ளுவதைக் காட்டிலும் ஆங்கிலோ-சாக்சானிய மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்ததும் சிறப்பு வாய்ந்ததுமான பழக்கங்களை ஆதாரமாகக் கொள்ளலாம் எனத் தோன்றுகிறது. நீதித்துறையின் மற்றப் பகுதிகளில் காணப்படுவது போன்று இத்துறையில் தேவையானது மன்னர் முன்னின்று தோற்றுவிப்பதும், அதை அமல் செய்வதுமாகும். ஆங்கிலோ-சாக்சானியச் சட்டத்தின் இந்தப் பிரிவை நடைமுறையில் செயல்படுவதற்கு ஏற்றதாகச் செய்த மிகுதியான நல்லெண்ணம் நமக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணும். இரண்டாம் ஹென்றியின் அஸ்ஸைஸ்கள், சில குறிப்பிட்ட வழக்குகளில் உறுதிமொழி அளித்தவர்களைச் சேர்த்துக் கொள்ளுவதை வற்புறுத்தின; அத்துடன் (மிக்குயர் அஸ்ஸைஸ் நீங்கலாக) ஜூரிகளைப் பொறுக்கி எடுப்பதில், கட்சிக்காரர்களை விடுத்து ஷெரீஃபிற்கு அதிகாரமளித்தது.[50] இவ்வாறு ஏற்படுத்தியதால் அரசருடைய நீதி வழங்கும் முறை அவரால் மத்திய ஆட்சியின்கீழ்க் கொண்டுவரப்பட்டது; இது அஸ்ஸைஸ்கள் கூடித் தீர்ப்புகள் வழங்கப்படுவதில் உறுதிமொழி அளித்தவர்களைப் பயன்படுத்திக்கொள்ளுவதைக் கட்டாயம் செய்தது.

**சிவில் ஜூரியின் வளர்ச்சி:** நாளாவட்டத்திலேதான், நீதி வழங்கும் நடவடிக்கையில், ஜூரி முறையின் கொள்கையை ஏற்றுக் கொள்ளுவதனுல் ஏற்படும் நலன்களை மன்னர்களும் மக்களும் நன்குணரலாயினர். தொடக்கத்தில் உறுதிமொழி எடுத்துக் கொண்டவர்களைக் கொண்டு விசாரணை செய்வதென்பது நீதித்தொடர்பற்ற விஷயங்களில் முக்கியமாகப் பின்பற்றப்பட்டதென்று தோன்றுகிறது. உதாரணமாக, டேம்ஸ்டே சர்வேபற்றியும்[51] வில்லியம் ரூஃபஸ், முதலாம்

ஹென்றி இவர்கள் ஆட்சியில் நிலமான்ய வரிகளை விதித்தல், யார்க்கு நகரத்துத் திருச்சபையின் சுங்க வரிகள் போன்றவை களில் பயன்படுத்தப் பெற்றது. 1106-ல் பின்னர் கூறப்பட்டுள்ள மன்னர், மக்களில் பன்னிருவர்களின் உறுதிமொழியைக் கொண்டு சுங்கவரிகளை ஒத்துப் பார்க்குமாறு ஐந்து கமிஷனர் களை உத்திரவிட்டார்.[52] எனினும், நாட்டுமக்களிலிருந்து தேர்ந் தெடுக்கப்பட்டவர்களும், அண்மையிலுள்ள பகுதிகளுக்குப் பிரதிநிதிகளாயும் அப் பகுதிகளைப் பற்றிச் சிறப்பாக நன்கறிந் தவர்களும் உண்மையை நிலைநிறுத்த, சான்றுகள் கூறுகிறவர் களுமான ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள மனிதர் களுடைய உறுதிமொழி வாயிலாக அளிக்கப்படும் சாட்சி யத்தைக் கொண்டு நீதித்தொடர்புள்ள வழக்குகளை விசாரித்து முடிவு செய்யும் வழக்கம் முன்னரே இருந்ததென்பதற்கு எடுத்துக்காட்டுகள் உள. ஈலி எனுமிடத்தின் திருச்சபை யைச் சேர்ந்த சில நிலங்கள் பற்றிய வழக்கில் ஈலி மடாலயத் திற்குச் சொந்தமான நிலங்கள் எந்தெந்த மாவட்டங்களிலிருந் தனவோ அந்தந்த மாவட்ட மன்றங்களைக் கூட்டி, மன்னர் முதலாம் எட்வர்ட் காலத்தில் நிலங்கள் யார் யாருக்குச் சொந்தமாயிருந்தன வென்பதை நன்கறிந்திருந்த ஆங்கிலேயர் களில் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையைத் தேர்ந்தெடுத்து அவர்களுடைய உறுதிமொழியின் அடிப்படையில் உண்மையை விசாரித்துத் தெரிவிக்குமாறு வெற்றி வீரரான வில்லியம் அவருடைய ஜஸ்டீஷியர்களுக்கு உத்திரவிட்டார்.[53]

இதே போன்ற நடவடிக்கை ராம்சேயைச் சேர்ந்த துறவி களுடைய உரிமைகளைக் குறித்து எடுத்துக் கொள்ளப்பட்ட தென்பது செஞ்சடை மன்னர் வில்லியம், நார்த்தாம்ப்டன் மாவட்ட ஷெரீஃப்புக்கு[54] விடுத்ததும், இன்றும் அழிவுறாத ஆணையின் வாயிலாகத் தெரியவரும். நீதி விசாரணைக்காக ஜூரியாக வருவதற்கு அக்கம்பக்கத்திலுள்ள நேர்மை வாய்ந்த வர்களைக் கூட்டுவது என்பது மிகப் பழமையானதென்பதற்கு முதலாம் ஹென்றியின் ஆட்சியில் ஓர் எடுத்துக்காட்டு உள்ளது. வில்லியம் அத்லெங் எனும் மன்னருடைய பெயரில் கென்ட் மாவட்டத்தின் ஷெரீஃப்புக்கு ஓர் ஆணை பிறப்பிக்கப் பட்டது. அதன்படி, ‘விட்டல் என்பாரின் மகனை ஹோமோ என்பாரையும் சாண்ட்விச் பகுதியைச் சேர்ந்தவரும் உண் மையை உரைப்பதற்காக ஹோமோவால் குறிப்பிடப்பட்ட வருமான உள்ளூரைச் சேர்ந்த நேர்மையாளர்களை விசார ணைக்கு அழைக்கும்படி’ உத்திரவிட்டது. இவ் விசாரணை, கட்டணம் செலுத்தாததற்காக செயின்ட் அகஸ்டீன் மடத்துத்

தலைவருக்குச் சொந்தமான நாவாயைக் கைப்பற்றியதால், ஏற்பட்டது. நாவாய்க்குச் சுங்கம் செலுத்த வேண்டியதில்லை யென்பது வழக்குத் தொடுத்தோரின் வாதம். பின்னர் ஏற்பட்ட ஆணையின்படி ஷெரீஃப்பு, மடத்துத் தலைவரிடம் படகை ஒப்படைக்குமாறு உத்திரவிடப்பட்டார். இவ்வாறு செய்வதற்கு நாட்டின் நற்பண்புடையோரின் (மன்றத்து நேர்மையாளர்கள் ஒத்துக்கொண்டது) சொல்லை ஏற்றுக்கொள்ளுவது என்பது காரணமாயிற்று.[55] அரசிறை வருவாய், சட்டம் போன்ற நாட்டின் எல்லா அலுவல்களிலும் ஜூரி முறையை ஒத்துக்கொள்ளுவதை இரண்டாம் ஹென்றி பின்பற்றினர். அதுமுதல் முதலாம் எட்வர்டின் ஆட்சி வரை, வரி விதிப்புச் செய்வதில் ஜூரி முறை சிறப்பாகப் பயன்படுத்தப் பெறுவது வழக்கமாயிற்று.[56]

**இரண்டாம் ஹென்றியின் அஸ்ஸைஸ்கள்:** கொலைக்குற்றம் செய்தவர்களை ஆஜர்படுத்துவதிலோ அல்லது சிவில் விசாரணை செய்வதிலோ, ஜூரி முறை பயன்படுத்தப்பட்டதை க்ளாரண்டன் சட்டங்கள் (1164) எனவழைக்கப்படும் சட்டத்தில் முதன்முதலாகக் காண்கிறோம். ஜூரி முறையைப் பற்றி அதில் குறிப்பிடப்படுவதை நோக்கும்பொழுது, அம்முறை பொதுமக்களால் ஏற்கப்பட்டு அதிக அளவில் பயன்படுத்தப் பெற்றதுபோல் தோன்றுகிறது. மேற்றிராணியாரின் எல்லைக் குட்பட்டவரும் வலிமை மிக்கவருமான ஒருவரைக் குற்றஞ் சாட்டுவதற்கு ஒருவரும் முன்வராவிட்டால், மேற்றிராணி யாரின் வேண்டுகோளுக்கிணங்கி ஷெரீஃப்புகள் (விதி 6), 'அக்கம்பக்கத்திலுள்ளவர்களும் மனச்சாட்சி உடையவர் களுமான பன்னிருவரை உண்மையைக் கூறுவதற்காக உறுதி மொழியுடன் குறிப்பிட வேண்டும்' எனவும், அதே சட்டத் தொகுப்பில் (விதி 9), உண்மையுள்ள இப் பன்னிருவர்களின் துணைகொண்டு தலைமை நீதிபதி சாமானிய மக்கள் அல்லது சமயஞ் சார்ந்தவர்களுடைய நில உரிமைகளை முடிவு செய்ய வேண்டும் எனவும் விதிக்கப்பட்டது.[57]

1179-ல் வின்ட்சரில் நடைபெற்ற கூட்டத்தில்[58] பெரிய அஸைஸ்[59] அமைப்பது பற்றிச் சட்டமியற்றப்பட்டது. இதனால், பல்வேறு சிவில் வழக்குகளிலும் சாதாரணமாக, காலப்போக்கில் பழக்கத்திற்கு வந்துள்ள ஜூரி முறைக் கொள்கையை ஏற்றுக்கொள்ளுவது என்பது இரண்டாம் ஹென்றியால் அனுமதிக்கப்பட்டது. இது நிலவுரிமையை விசாரித்துத் தீர்மானம் செய்வதில் வழக்கமாக எடுக்கப்படும்

நடவடிக்கையாயமைந்தது. மக்களுக்களிக்கப்பட்ட மன்னரது வரப்பிரசாதம் என கிளன்வில் இதைப் பற்றிக் கூறுகிறார். அத்துடன் நடவடிக்கை யெடுப்பதில் ஈடுபட்டுள்ள உயர்குடி மக்களின் இணக்கம், ஆலோசனை இவைகளின் அடிப்படையில் அமைந்ததும், ஐயத்திற்கு இடமளிக்கும் மற்போர் முறை விசாரணையின் வாயிலாக நிலவுரிமையைக் காப்பாற்றுவதில் சுதந்திரமான குடியானவர்களுக்கு ஏற்படும் தொல்லைகளைத் தவிர்ப்பதற்காகவும் உள்ளது எனக் கூறுகிறார்.[60] பெரிய அஸ்ஸைஸினால் பிரதிவாதி மற்போர் குறித்து சூளுரை செய்கிறவரையோ அல்லது அக்கம்பக்கத்திலுள்ள பன்னிரு நைட் வீரர்களடங்கிய ஜூரியை ஏற்றுக்கொள்ளுவதையோ, இரண்டிலொன்றை ஏற்றுக்கொள்ளுவதற்கு அனுமதிக்கப் பட்டார். ஷெரீஃபால் விசாரணை செய்வதற்கென்று அழைக்கப் பட்ட நான்கு நைட் வீரர்கள் மேலேகண்ட பன்னிருவர்களைத் தேர்ந்தெடுத்தனர்.

வரம்பிலா நிலவுரிமையைத் தீர்மானித்தல் போன்றதை விடுத்து, அண்மையிலேற்பட்ட சொத்துகள் உரிமையைக் குறித்துள்ள நடவடிக்கைகளில் (இதில் புதிய டிஸ்ஸீஸின் [சொத்து விலக்கு] அஸைஸ் சிறப்பான இடம்பெற்றிருந்தது.) அக்கம்பக்கத்திலுள்ளவர்களின் பன்னிரு நைட் வீரர்களையோ அல்லது சுதந்திரமாயுள்ள குடியானவர்களையோ நீதி வழங்கு கிறவர்களாக ஷெரீஃபு தேர்ந்தெடுத்தார். இவ்வாறு தேர்ந் தெடுக்கப்பட்டவர்கள் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அமர்ந் தனர். இவ்விரண்டிலும் அடையாளம் காட்டிக்கொடுப்போர் அவர்களுடைய தீர்ப்பை, அவர்களுக்கு நேரிடையாகப் பார்த்துத் தெரிந்தவைகளைக்கொண்டு அல்லது அவர்களுடைய தகப்பனாரிடமிருந்து நேரிடையாகக் கேள்விப்பட்டதைக் கொண்டு அல்லது அவர்களுக்கு முழுமையான நம்பிக்கை யுள்ளவர்களிடமிருந்து தெரிந்துகொண்டதைக்கொண்டு தாங் களே நேரில் பார்த்துத் தெரிந்துகொண்டதாகக் கூறக்கூடிய சொற்களைக்கொண்டு, முடிவு செய்யவேண்டும்.[61] எல்லோருமே உண்மையை அறியாதவர்களாயிருந்தால், புதிதாக ஜூரி அமைக்கப்படவேண்டும். ஒருசிலர் மாத்திரம் அறியாதவர் களாயிருந்தாலும் அல்லது உண்மைபற்றி அவர்களுக்குள் கருத்தொற்றுமை இல்லாதிருந்தாலும், மற்றவர்களை ஜூரியில் சேர்க்கவேண்டும்—பிற்காலத்தில் ஜூரியை வலுப்படுத்துவது (afforcing) எனும் முறை. ஜூரியினுடைய அல்லது பன்னி ருவர் அடங்கிய அஸ்ஸைஸின் தீர்ப்பைப் பெறும்வரையில் இவ்வாறு புதியவர்களைச் சேர்க்கவேண்டும்.[62]

அஸ்ஸைஸ் வாயிலாகப் பரிகாரம் காணும் முறை பிற்காலத்தில் பாராளுமன்றத்திஞல் இயற்றப்பட்ட பல சட்டங்களிஞல் சீர்திருத்தம் செய்யப்பட்டது. சிறப்பாக, 13, எட்வர்ட் I, விதி 25 குறிப்பிடத்தக்கதாகும். அஸ்ஸைஸ் விசாரணைக்கான வழக்குகளெல்லாம் மன்னருடைய நீதிமன்றம் அல்லது சுற்றுப் பயணம் செய்துவரும் நீதிபதிகளின் மன்றங்களில் விசாரணை செய்யப்பட்டதால், இந்தக் காலம்முதல், மான்ய நீதிமன்றங்கள், கவுன்டி, ஹன்ட்ரட் இவைகளுடைய நீதிமன்றங்கள் விரைவாக மறையத் தொடங்கின.

## ஜூரியும் கொடுங்குற்றமும்

பன்னிரு மூத்த தீன்கள் (உடனிருப்பவர்கள்) கொலைக் குற்ற வழக்கு விசாரணைகள்பற்றி இரண்டாம் எதல்ரெட் மன்னருடைய (978–1016) தனி ஆணைகளில், குற்றஞ்சாட்டும் ஒருவகை ஜூரியைப்பற்றிக் காண்கிருேம். இம்முறை மிக்குயர் ஜூரியை ஒத்திருந்ததுடன் அதன் தோற்றத்திற்கு மூல காரணமாயிருக்கக்கூடியதாயுமிருந்தது. வாபன்டேக் எனும் சிறிய நிலப்பகுதியின் மன்றத்தில் பன்னிரு மூத்த தீன்கள், ரீவுடன், தனித்தனியே பிரிந்தும் குற்றஞ்சாட்டுவதை அல்லது நாம் கூறவேண்டியதுபோல் உறுதிமொழி எடுத்தபின்பு எந்த விதமான கொடுங்குற்றஞ் செய்தவர்கள் என நம்புகிருர்களோ அவர்களையெல்லாம் அறிவிக்கவேண்டியதைச் செய்யவேண்டுமெனக் கட்டளையிடுகிறது.[63] இப் பன்னிரு தீன்களும் வழக்குத் தொடுக்கிறவர்களின் பணியைச் செய்துவந்ததுபோல் தோன்றுகிறது. எனினும், குற்றஞ்சாட்டப்பட்டவரின் குற்றம் அல்லது குற்றமின்மை என்பது குற்றமற்றவர் என்று உறுதிமொழி அளிப்பவர்களுடைய சொற்களாலும் அல்லது கடுஞ்சோதனையாலும் தீர்மானிக்க வேண்டியதாயிருந்தது. மிகப் பழமையான மிக்குயர் ஜூரிமுறை நார்மானியர்கள், வெற்றிபெற்ற பின்பும் இரண்டாம் ஹென்றியிஞல் திருத்தியமைக்கப்படும்வரை தொடர்ந்து வழக்கத்திலிருந்திருக்கக்கூடுமென ஊகித்தறியப்பட்டுள்ளது. எனவே, குற்ற விசாரணைக்காக அமைந்த ஜூரி முறை, சிவில் வழக்குகளை விசாரணை செய்வதற்காக அமைந்த ஜூரி முறையுடன் சேர்ந்து காணப்பட்டதால், பிற்காலத்தில் அதன் வளர்ச்சியில் மாறுதல் ஏற்பட்டது. என்றுலும், முழுமையாகவே நாட்டில் தோன்றிய துறை என்று கொள்ளுவதற்கு மறுக்கமுடியாத காரணங்கள் உள.[64]

**மிக்குயர் ஜூரி :** 1166-ல் க்ளாரண்டன் அஸ்ஸைஸ் மன்றத்தில், கொடுங்குற்ற விசாரணை செய்வதிலும் ஜூரி முறையை ஏற்றுக்கொள்வது எனும் கொள்கை பரவலாயிற்று. ஒவ்வொரு கௌன்டியிலும், ஹண்ட்ரட் பிரிவைச் சேர்ந்தவர்களும் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்களுமான பன்னிருவர்கள் நகரங்களிலிருந்து சட்டத்திற்குக் கட்டுப்பட்டுள்ள நால்வருடன்கூட அந்தந்த கௌன்டி நீதிமன்றங்களில், அவரவர்களுடைய மாவட்டத்தைச் சேர்ந்தவர்களும் பெயர் பெற்றவர்களுமான கொடுங் குற்றவாளிகளை அறிவிப்பதற்காக உறுதிமொழி எடுத்துக் கொள்ள வேண்டும் எனக் கட்டளையிடப்பட்டது. அவ்வாறு அறிவிக்கப்பட்டவர்கள் உடனேயே நீர்க்கடுஞ் சோதனைக்கு அனுப்பப்பெற்றனர்.[65] இப்படிச் செய்வது மிக்குயர் ஜூரி முறையை ஒத்திருந்தது ; மேலும், பழைய ஆங்கிலேய நிறுவனம் விரிவான முறையில் திருத்தியமைக்கப்பட்டதாகும். மிக்குயர் ஜூரிமுறை, ஏற்கெனவே நாம் அறிந்தபடி இரண்டாம் எதல்ரெட் மன்னரின் காலத்திலேயே இருந்துவந்தது.

1194-ல் முதலாம் ரிச்சர்டு மன்னரால் வெளியிடப்பெற்ற அயர் சட்டங்கள், சுற்றிவரும் நீதிபதிகளுக்குக் கட்டளை போன்று அமைந்தன. இவை நீதிபதிகளின் முன்பு அறிவிக்கப்படுவதற்கான ஜூரியைத் தேர்ந்தெடுப்பது, அமைப்பு முதலியவைபற்றியதாகும். இரண்டாம் ஹென்றியால் தோற்றுவிக்கப்பட்ட இது மீண்டும் முறையாக்கப்பட்டு மிக்குயர் அஸ்ஸைஸில்[66] அடையாளங் கூறுவோரை நியமனஞ் செய்யும் முறையுடன் ஒன்று சேர்க்கப்பட்டது. இவ்வாறு வளர்ச்சியடைந்த அறிமுகப்படுத்தும் ஜூரியிலிருந்து பிற்காலத்திய மிக்குயர் ஜூரி வரலாற்றுத் தொடர்புடையதாய் வந்துள்ளது.[67]

இவ்வாறாக, அறிமுகப்படுத்துவது, கடுஞ் சோதனைக்குள்ளாக்குவது போன்றவை ஏற்பட்டதன் விளைவாக கொடுங் குற்ற வழக்கு விசாரணைகளில் பழைய முறையான நண்பர்களுடைய உறுதிமொழிகளால் குற்றமற்றவர் என நிரூபிக்கப்படும் நாணமற்ற பொய்யாணை ஊற்றாயிருந்த முறை எடுபட்டது.[68]

**சிறு ஜூரி அல்லது விசாரணை ஜூரி :** 1215-ல் நான்காவது லாடரன் (செயின்ட் ஜான்) திருக்கூட்டத்தில் கடுஞ் சோதனை முறை, கிறித்தவ உலகில் ஒழிக்கப்பட்டது. விசாரணையில் பங்கெடுத்துக்கொள்வதினின்று, சமயஞ் சார்ந்த துறவிகளைத்

திருச்சபை தடைசெய்தது. கொடுங்குற்றம் சார்ந்த விசாரணை களில் மாத்திரம் மற்போர்முறை வழக்கிலிருந்து வந்தது எனினும், துறவிகள் இதில் பங்குகொள்ளத் தேவையில்லை. மற்போர் செய்யும் முறை (இருவர் சண்டையிடுவது), காய மடைந்து வழக்கைத் தொடுக்கிறவர் அல்லது மறு விசாரணை கோருகிறவர், விசாரணையை விரும்பி முன்வந்தா லொழியப் பயன்படுத்தக்கூடாது. இப்பழக்கம், (கடுஞ் சோதனை முறையை ஒழிப்பதற்கு முன்னதாகவே தோற்று விக்கப்பட்டது) முதல் விசாரணையைச் செய்தவர்களின் முடிவை உறுதி செய்யவோ அல்லது மறுக்கவோ இரண் டாவது விசாரணை அல்லது சிறு ஜூரியை அனுமதிப்பது எனும் இவ் வழக்கம் நாளடைவில் வளரலாயிற்று. மூன்றும் ஹென்றியின் ஆட்சிக்காலத்தில் இது பொது வழக்கமாயிற்று. அப்படியிருந்தும் நெடுநாள்வரை, சிறை புகுந்தவருக்கு வாதாடுவதற்கு அனுமதி அளிக்கப்படவில்லை. அதாவது, ஜூரியினால் விசாரணை செய்யப்படுவதைக் கைதி மறுக்கலாம். ஆனால், அவன், பாதுகாப்பிற்காகச் சிறையிலடைக்கப்பட் டான்; முதலாம் வெஸ்ட்மினிஸ்டர் சட்டம் ஏற்பட்டதி லிருந்து (விதி 12, 3 எட்வர்ட் I, 1275) கடுஞ் சிறைக்குள் ளானான். இது பிற்காலத்தில் பினி ஃபார்டே எட் டூரே (peine forte et dure) எனும் நாகரிகமற்ற கொடுந்தளையாக மாறியது. இதுவும் வெகு நாட்களுக்குப்பின் மூன்றும் ஜார்ஜின் காலத் தில் ஒழிக்கப்பட்டது.[69]

இரண்டாம் ஹென்றியாலும் அவருடைய சந்ததியார்க ளாலும் சிவில், கிரிமினல் வழக்குகளில் ஜூரி முறைப்படி விசாரணை செய்யும் வழக்கம் நிறுவப்பட்டபோதிலும், இக் காலத்தில் வழங்கும் விசாரணை முறையிலிருந்து அம்முறை நெடுநாள்வரை மாறுபட்டிருந்தது என்பதை நாம் நினைவில் கொள்ளவேண்டும். அப்பொழுதெல்லாம் ஜூரியிலுள்ள வர்கள் அடையாளங் காண்பிப்போர்களாக மாத்திரம் இருந் தனர். தவிர, அக்கம்பக்கத்திலுள்ளவர்களின் நம்பிக்கையைக் கொண்டு அல்லது அவர்களுக்குச் சொந்தமாகத் தெரிந் துள்ளவைகளைக் கொண்டு முடிவு செய்துவந்தனரேயன்றி அவர்கள்முன் கொணரப்பட்ட சாட்சியங்களைக்கொண்டு முடிவு செய்யவில்லை. எனவே, பழைய கடுஞ்சோதனை முறைக்கு அவர்களுடைய நிலைமை பதிலியாக இருந்தது. இக் காரணம் பற்றியே அவர்கள், வழக்குத் தோன்றிய இடமாகிய ஹண்ட்ரட் அல்லது சுற்றுப்புறத்தைச் சேர்ந்தவர்களிலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்டனர்.[70]

**உண்மையை அறிவதில் நீதிபதியைப் போன்ற ஜூரி முறை:** சிவில், கிரிமினல் வழக்குகளில் பொதுவாக ஜூரிகள் ஒரே மாதிரியாகப் பிற்காலத்தில் வளர்ச்சியுற்றதால், ஜூரியிலுள்ளவர்கள் சாதாரணமாக அடையாளங் கண்டுபிடிப்பவர்களிலிருந்து நாளடைவில் உண்மையைத் தீர்மானிப்பவர்களாக மாறினர். இவ்வாறு தீர்மானித்தலுக்குப் பிறருடைய சாட்சியங்கள் மாத்திரமே சான்றுயினவென்பதை இப்பொழுது கருத்தில் கொள்ளவேண்டும். அடையாளங் காட்டுவோரின் எண்ணிக்கை முதலில் குறிப்பிடப்படாமலிருந்தது. ஆனால், இரண்டாம் ஹென்றியின் காலத்தில், கிளன்வில் குறிப்பு எழுதியபொழுது ஜூரர்களின் எண்ணிக்கை பன்னிரண்டாக வழக்கத்தில் வந்துவிட்டதென்றும், இவ்வெண்ணிக்கை மாற்றமுடியாததாய் மன்னருடைய ஆணைகளில் குறிப்பிடப்படவில்லையென்றும் தெரிகிறது. தீர்ப்பளிப்பதில் பன்னிருவரும் ஒன்று சேர்ந்து ஒத்துக்கொள்ள வேண்டியதவசியம் என்பதை ஏற்கெனவே அறிந்துள்ளோம். இதன் காரணமாக, சிவில் வழக்குகள் சம்பந்தப்பட்ட வரையிலாவது ஜூரிக்கு அதிக ஆள் சேர்ப்பதனுல் பெறப்பட்டது. அக்கம்பக்கத்திலுள்ளவர்களில் வழக்குடன் தொடர்பு கொண்டிருந்தவர், அடையாளம் காண்பிப்பவர்களாகச் சேர்த்துக்கொள்ளுதல் ஆள் சேர்க்கை எனப்படும். பன்னிருவரும் சேர்ந்து ஒருமுகமாகத் தீர்ப்பளிப்பதில் தொல்லையிருந்ததால், சிலகாலம் வரை அவர்களில் பெரும்பான்மையோரின் தீர்ப்பைப் பெறலாம் என மாறியது. ஆனுல், மூன்றும் எட்வர்டின் ஆட்சியில் பன்னிருவருடைய ஒருமுகமான தீர்ப்பு அவசியமென மீண்டும் உறுதி செய்யப்பட்டது.[71]

மூன்றும் ஹென்றியின் காலத்தில் சிறப்புச் சாட்சிகள் (பத்திரங்களில் சாட்சி ஒப்புதல் செய்தவர்கள் போன்றவர்கள்) சில சமயங்களில் ஆணையிட்டழைக்கப்பட்டு ஜூரிகளுடன் சேர்ந்தனர்.

மூன்றும் எட்வர்டின் ஆண்டுக் குறிப்பேடுகளில் 23, சாட்சியம் அளிப்பதற்காக ஜூரியுடன் சேர்க்கப்பட்ட சாட்சியாளர்கள் குறிப்பிடப்பட்டுள்ளனர். இவர்களுக்குத் தீர்ப்புக் கூறுவதில் எவ்வித உரிமையுமில்லை. ஜூரி, அவருக்குத் தெரிந்தவற்றுடன், சாட்சியமாக முறையாகச் சொல்லப்பட்டதையும் கவனித்துத் தீர்ப்பளித்தலில் முதன்முதலாகக் காணப்படும் குறிப்பு இதுவேயாகும். இதுவே பழைய ஜூரிக்கும் இன்றைய ஜூரிக்கும் இடையே தொடர்பை ஏற்படுத்துவதாயுள்ளது.[72]

பின்னர் நான்காம் ஹென்றியின் காலத்தில் மேலும் ஒரு முன்னேற்றம் காணப்பட்டது. எல்லாச் சாட்சியங்களும் நீதி மன்றத்தில் நீதிபதிகளின் முன்னதாக அளிக்கப்பட வேண்டு மென்று ஏற்பட்டது. இது முறைகேடான சாட்சிகளை விலக்கு வதற்கு நீதிபதிகளுக்கு உதவியாயிருந்தது.[73]

இம் மாற்றத்திலிருந்து இரு முக்கிய விளைவுகள் தோன்ற லாயின: (1) நீதிபதிகள் கையாண்ட கட்டுப்பாடுகளிலிருந்து சாட்சியமளிப்பது பற்றிய விதிமுறை முழுமையும் தோன் றியது. (2) நீதிமன்றத்தில் பகிரங்கமாக சாட்சியத்தைப் பெறுவது எனும் வழக்கம் நீதிமன்றத்தில் வாதாடுகிறவர் களின் கடமையை மிகவும் விரிவுபடுத்தியது. அதுமுதல், 'நீதிமன்றத்தில் பகிரங்கமாக சாட்சிகள் விசாரணை செய்யப் பட்டதுடன் குறுக்கு விசாரணையும் செய்யப்பட்டனர். சட்டஞ் சார்ந்த வாதங்களில் சொல்திறனுகும் வெள்ளம் பெருக் கெடுத்தது; வாதாடுகிறவர்கள் அறிவுக்கூர்மையையும் ஜூரர்களை வயப்படுத்துவதில் திறமையையும் நன்கு பயன் படுத்துவதற்கு முழுவாய்ப்பை அளித்தது; உண்மை பற்றிய செய்திகளை விவேகத்துடன் சோதித்துப் பார்க்கும் அதிகாரம் ஜூரிகளிடம் ஒப்படைக்கப்பட்டது'.[74]

1470ஆம் ஆண்டில் பிரதம நீதிபதி ஃபார்டெஸ்க்யூ என் பார் எழுதிய, 'டி லாடிபஸ் லிகம் ஆங்கிலியே' எனும் நூலில், ஜூரிகளின் முன்னதாக இன்றுள்ளதுபோல் வாய்மொழி மூலம் சாட்சியமளிக்கும் நடைமுறைபற்றி நாம் தெளிவாகக் காண்கிறோம்.[75]

ஆனால், நெடுநாள்வரை சாட்சியங்களுடன்கூட அவர்கள் அறிந்ததையே நம்புவதற்கு உரிமை பெற்றிருந்தனர். ஆன் அரசியார் ஆட்சியின் முதலாம் ஆண்டில் அரசியாரின் உயர் நீதிமன்றத்தில், ஜூரிகள் அவர்கள் அறிந்தவற்றைக் கொண்டே தீர்ப்பளிப்பதாயிருந்தால், அவர்களைச் சாட்சிகளாக உறுதிமொழி எடுக்கச் செய்யுமாறு நீதிபதியிடம் தெரிவிக்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. இதுவும் முதலாம் ஜார்ஜின் ஆட்சியில் ஏற்பட்ட மற்றொரு வழக்கும் இறுதியாக ஜூரர்கள் அடையாளங் காட்டுகிறவர்களாகக் கருதும் எல்லாப் பழைய சின்னங்களுக்கும் முற்றுப்புள்ளி இட்டது.[76]

அதேபோன்று இரண்டாம் ஜார்ஜின் ஆட்சிக்காலத்தில், ஜூரிகள் அவர்கள் சொந்தமாகத் தெரிந்திருந்தவற்றை நம்பியே இருந்ததால், வழக்குகள் தோன்றிய இடமான ஹண்ட்ரட்

அல்லது அக்கம்பக்கத்திலிருந்து ஜூரிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதென்னும் மிகப் பழமையான விதியும், பல்வேறு மாற்றங்களுக்குப்பின், சிவில் வழக்குகளிலெல்லாம் ஒழிக்கப் பட்டது.[77] அத்துடன் ஜூரிகளும் கவுன்டியிலிருந்து ஆணை யிட்டு அழைக்கப்பட வேண்டுமென்றும் உத்திரவிடப்பட்டது.

**ஜூரிகள் பற்றிய கட்டுப்பாடுகள் :** ஜூரிகள் அடையாளம் தெரிந்துகொள்ளுகிறவர்களாயிருந்தவரை, அவர்கள் தவறுத லான தீர்ப்பையளித்தால், பொதுவாகப் பொய்யாணை செய்த குற்றத்திற்கு உட்படுபவராவர். எனவே, பொதுச்சட்டப்படி உரிமையிழக்கும் ஆணைக்குட்படுபவராவர். இவ்வாணை இரண்டாம் ஹென்றியின் காலத்தில் அஸ்ஸைஸ்களிலுள்ள வழக்குகளை மாத்திரம் கட்டுப்படுத்துவதாயிருந்தது (சொத்து இழப்பு போன்றவை). ஆனால், பிற்காலத்தில் பல்வேறு சட்டங்களை இயற்றியதன் வாயிலாக, 'உண்மையானதும் சொந்தமானதுமான எல்லா வழக்குகளுக்கும் விரிவுபடுத்தப் பட்டது.' [78]

ஜூரிகள், அடையாளங் காண்கிறவர்களாக இருந்த நிலை ஒழிந்தபொழுது உரிமையிழக்கும் ஆணை விதிப்பதும் வழக் கொழிந்துபோயிற்று. 1583-ல் சர் தாமஸ் ஸ்மித் கூறிய தாவது : 'உரிமையிழக்கும் ஆணை விதிப்பது பயன்படுத்தப் படவில்லை'.[80] 1757-ல் மான்ஸ்ஃபீல்ட் பிரபு கூறியதாவது, 'இப்பொழுது ஒவ்வொரு வழக்கிலும் உரிமையிழக்கும் ஆணை என்பது ஓர் ஒலி எழுப்பப்படுவது போன்றிருந்தது'; [81] ஆயினும், நான்காம் ஜார்ஜின் ஆட்சிவரை சட்டப்படி அது ஒழிக்கப்படவில்லை.[82]

உரிமையிழக்கும் ஆணை சட்டமன்றம் மூலம் ஒழிக்கப்படு வதற்கு வெகு நாள்களுக்கு முன்னரே, அந்த நடவடிக்கையின் முக்கிய நோக்கமாயிருந்தது மறைமுகமாக வேறு வழியில் பெறப்பட்டது—முதலில் வழங்கப்பட்ட தீர்ப்பினை மறு பரிசீலனை செய்வது—புதிதாக விசாரணை செய்யத் தீர்மானம் கொண்டுவருவது வழக்கில் வந்தது.[83]

சட்டரீதியாக உரிமையிழப்பு ஆணையிருந்ததுடன், உண் மைக்குப் புறம்பாகத் தீர்ப்பு அளித்ததற்காக ஜூரிகளைத் தண்டிக்கவும் சட்டத்திற்கு மாறான வேறொரு முறையும் இருந்தது. இதை டியூடர் மன்னர்களும் ஸ்டூவர்ட் மன்னர் களும் அடிக்கடி அரசியல் காரணங்களுக்காகப் பயன்படுத்தி வந்தனர். நட்சத்திர மன்றம் எனப்பட்ட நீதிமன்றத்தில்

தண்டம் விதித்தல், சிறையிடுதல் போன்றவை விதிக்கப் பட்டன. 1554-ல் மேரி ராணியாரின் ஆட்சியில் சர் நிக்கோலஸ் திராக்மார்டன் என்பவர், தாமஸ் வயட் என்பார் விளைவித்த கலகத்தில் தொடர்பு கொண்டு அரசு குற்றம் புரிந்ததாகக் குற்றஞ் சாட்டப்பெற்று விசாரணைக்குப் பின் ஜூரிகளால் குற்றமற்றவரெனத் தீர்ப்பளிக்கப்பட்டார். இதன்பின், 'தீர்ப்பை ஏற்க விருப்பமில்லாத நீதிமன்றம் ஜூரியைச் சிறையிலடைத்தது.' ஜூரியினரில் சிலர் மன்னிப்புக் கோரி விடுதலையடைந்தனர். மற்றையோர், நட்சத்திர மன்றத்தால் தண்டம் விதிக்கப்பட்டனர். தண்டத்தொகை செலுத்தப்படும் வரை சிறையில் வைக்கப்பட்டனர்.[84]

**புஷல் வழக்கு, 1670 :** நட்சத்திர நீதிமன்றம் ஒழிக்கப்பட்ட பின் ஜூரிகளை அச்சுறுத்துவதற்காக அரசர் நீதிபதிகளைத் துணையாகக் கொண்டார். இறுதியாக, 1670-ல் நடந்த புஷல் வழக்கில் பிரதம நீதிபதியான வாகன் என்பாருடைய புகழ் பெற்ற தீர்ப்பின் வாயிலாக ஜூரிகளுக்குப் பாதுகாப்பு, முடிவாக அமைக்கப்பட்டது.[85] புகழ் வாய்ந்தவர்களும் குவேக்கர் சங்கத்தைச் சேர்ந்தவர்களுமான வில்லியம் பென், வில்லியம் மீட் என்போரை ஜூரிகளில் முதல்வராயிருந்த எட்மண்டு புஷல் என்பார் விடுதலை செய்தார். விடுதலை பெற்றவர்கள் கான்வென்டிகிள் சட்டத்தை[86] மீறி கிரேஸ் சர்ச் தெருவில் ஒரு மாபெருங் கூட்டத்தில் சமயப் பிரசாரம் செய்த குற்றத்திற்காகக் குற்ற விசாரணைக்குட்படுத்தப்பட்டனர். லண்டன் நகர மாஜிஸ்டிரேட், ஜூரிகள் ஒவ்வொருவருக்கும் 40 மார்க்குகள் (26 பவு. 13 ஷி. 4 பெ.) வீதம் அபராதம் விதித்தார்; புஷல் அபராதம் செலுத்த மறுத்ததால் சிறையிலடைக்கப்பட்டதன்பேரில், சிவில் விசாரணை மன்றத்தில் ஹெபியஸ் கார்ப்பஸ் சட்டத்தின்கீழ் வழக்குத் தொடர்ந்தார். 'முழுமையானதும் தெளிவானதுமான சாட்சிகளுக்கு எதிராகவும் நீதிமன்றத்தின் ஆணைக்கு எதிராகவும்' தீர்ப்பளித்த குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டுள்ளார் என்ற வாதத்தைச் சரியானதல்லவென்று பிரதம நீதிபதி முடிவுசெய்து புஷலை விடுதலை செய்யுமாறு உத்தரவிட்டார்.

இவ் வழக்கில் அளித்த தீர்ப்பில் பிரதம நீதிபதி வாகன், ஜூரிகளுடைய உரிமையை உறுதிசெய்தார். அவ்வுரிமையானது நீதிபதிகளின் ஆணைக்குட்படாமல் குற்ற வழக்கில் பொதுவான தீர்ப்பையளிக்கவும், அதாவது, வழக்கின் உண்மையைத் தீர்மானிப்பதுடன் வழக்குகளில் ஈடுபட்டோரின் குற்றம் அல்லது குற்றமில்லாத் தன்மையையும் கண்டறிவ

தாகும்.[87] அவதூறு சட்டத்தின்கீழ் மீண்டும் இப் பிரச்சினை எழலாயிற்று. 1688-ல் நடைபெற்ற ஏழு மேற்றிராணியார் களுடைய வழக்கு விசாரணையின்போது ஜூரிகள் அவதூறு என்பதன் கருத்தைத் தீர்மானிப்பதில் அவர்களுடைய உரிமையை வற்புறுத்தினர். ஆனால், 1764-ல் நடந்த 'நார்த் பிரிட்டன்' எனும் செய்தித்தாள் அச்சிடுவோர்கள்பற்றிய வழக்கு விசாரணையில் அவதூறில் குற்றத் தன்மையைத் தீர்மானிப்பதில் நீதிபதிக்குத்தான் உரிமை யுள்ளதென மான்ஸ்ஃபீல்டு பிரபு முடிவு கூறினர். இக் கூற்று ஜூரிகளின் உரிமைக்கு மாறான கொள்கையாகும். பல தாக்குதல்களுக் குட்பட்டு நெடுநாள்வரை நிலவியிருந்த இக்கொள்கை இறுதி யில் அக்காலத்திய நீதிபதிகள், முக்கியமான சட்ட நிபுணர் களுடைய எதிர்ப்புகளுக்கிடையே மாற்றியமைக்கப்பட்டது. இம்மாற்றத்திற்கு ஏற்ற சட்டம் 1792-ல் நிறைவேற்றப்பட்ட ஃபாக்ஸ் என்பாரின் அவதூறுச் சட்டம் ஆகும்.[88] இச் சட்டம், வழக்கு விசாரணை முழுமையையும் கருத்தில்கொண்டு குற்ற வாளி அல்லது குற்றவாளியன்று எனும் தீர்ப்பை ஜூரிகள் வழங்கலாம் என்று உறுதிப்படுத்தும் முறையில் அமைந்தது.[89]

## ஆலோசனை மன்றமும் அதிலிருந்து தோன்றியவைகளும்

பழைய குரியா ரெஜிஸ் எனும் நீதிமன்றம், மன்னரது நீதி மன்றம், சிவில் விசாரணை மன்றம், எக்ஸ்செகர் மன்றம் எனத் தனித்தனியான ஒவ்வொன்றிற்கும் உரிய தலைவர்களின்கீழ் மூன்று மன்றங்களாகப் பிரிக்கப்பட்டபொழுது, மன்னருக் கிருந்த பழமையானதும், சொந்த உரிமையானதுமான நீதி விசாரணை எல்லை, மன்னருடைய கவுன்சிலிலேயே தொடர்ந்து நடைபெற்றுவந்தது (பிற்காலத்திய பிரிவி கவுன்சிலுக்கு இது மூலமாயிருந்தது).[90] மன்னருடைய கவுன்சில் மன்றம், மறு விசாரணை செய்யப்படுவதற்கான உயர்தர நீதிமன்றமாயிருந்த தோடு, பொதுச் சட்டத்தின்கீழ் விசாரணைக்காக அமைக்கப் பட்ட நீதிமன்றங்களுக்குச் சிறப்பாக அளிக்கப்படாத வழக்கு களை நேரிடையாக விசாரணை செய்யும் மன்னருடைய நீதிமன்ற மாயும் அமைந்தது. எனினும், மூன்றும் ஹென்றி மன்னர் இளம் வயதினராயிருந்தகாலை, இரண்டாம் ஹென்றியின் காலத்திய குரியா ரெஜிஸ் மன்றம் மிகப் பெரியதும் போற்றத் தக்கதுமான மக்கள் கூட்டங்கள் அண்மையிலேயே பாராளு மன்றம் என அழைக்கப்பெறவிருந்தவை ஆகியவற்றைவிட மாறுபட்டு, சிறப்பான புகழையும் வலிமையையும் உடைய தாக தொடர்ந்தும் நிலையான தன்மையுடையதுமாக மன்னரது

மன்றம் இருந்தது. இம் மன்றத்தில் அரசாங்க அதிகாரிகளுடன், அரசரது அரண்மனையைச் சேர்ந்த அதிகாரிகளும், நீதிபதிகள் முழுமையாகவும், எண்ணிக்கையில் மாறுபாடுள்ள மேற்பிராணியார்களும், மான்யப் பிரபுக்களும், மற்றும் சமயஞ் சார்ந்தவர்களும், லௌகீகர்களும் உறுப்பினராயிருந்தனர். இவர்கள் ஆலோசனை கூறுகிறவர்களாக அதிகார முறையில் கருதப்பட்டனர்.[91] மூன்றும் ஹென்றியின் நெடுநாளைய ஆட்சியின்கீழ் பராமரிக்கப்பட்டும் மேலும் முதலாம் எட்வர்ட் மன்னரால் விருத்தி செய்யப்பட்டதுமான மன்னரது ஆலோசனை மன்றம் இதுமுதல், தேசிய கௌன்சிலின் அதிகாரத்துடன் இணக்கமாகவும் அடிக்கடி அதற்கு எதிராகவும் செயல்பட்டு, மன்னரது அதிகாரத்தின் பிரதிநிதியாயும் கருவியாயும் ஆயிற்று. மன்னரது ஆலோசனை மன்றம் 'தொடர்ந்து' எனும் சொல் சுட்டுவதுபோல், அலுவல்களைக் கவனித்து முடிவு செய்வதற்காக எப்பொழுதும் தொடர்ந்து வேலையிலீடுபட்டிருந்தது.[92] இதன் காரணமாக, அரண்மனையில் பல்வேறு அறைகளில் இம் மன்றம் அமைந்திருந்தது. இவைகளில் நட்சத்திர மன்றம், மூன்றும் எட்வர்டின் ஆட்சிக் காலத்திய ஆவணங்களில் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது.[93] இம் மன்றத்தின் அதிகாரம் அதிமிகுதியாயிருந்ததுடன் வரையறுக்கப்படாமலுமிருந்தது. ஆட்சிமுறைபற்றி எல்லா விஷயங்களிலும் இம் மன்றம் மன்னருக்கு நிலையான ஆலோசனை மன்றமாயிருந்ததுடன், பெருமளவில் வந்துகொண்டிருந்த மனுக்களைப் பெற்று, ஆராய்ந்து அவற்றிற்கு ஏற்ற நீதிமன்றங்களுக்கு அனுப்பியது. இம் மனுக்கள் நீதி விசாரணை தொடர்பான பல்வேறு நிவாரணங்களைக் கோரியனவாயிருந்தன.[94] இம் மன்றம் தானுகவும், பாராளுமன்றத்தின் பிரபுக்களுடைய சபையினுடன் சேர்ந்துகொண்டும் இயங்கியது; சிவில், கிரிமினல் சம்பந்தமான விஷயங்களில் எல்லையில்லா அதிகாரத்துடனும், தற்காலிகமானதும், ஓரளவு அல்லது முற்றிலும் முக்கியமில்லாத் தன்மையான விஷயங்களிலும் இயங்கியது; அத்துடன் சட்டமியற்றும் அதிகாரத்தைப் பெற்றுள்ளவை செய்யவேண்டியதான சட்டங்களின் சக்திவாய்ந்த அவசரச் சட்டங்களையும் இயற்றும் பொறுப்பை மேற்கொண்டது.

**மன்றத்தின் நீதித்துறை அலுவல்:** மன்றத்தினுல் முடிவு செய்யப்பட்ட சிவில், கிரிமினல் போன்ற நீதி சம்பந்தமான அலுவல்களின் விபரங்களைப் பொறுத்தவரை, 1178-ல் இரண்டாம் ஹென்றி மன்னர் சாதாரணமான நீதிபதிகளால்

விசாரணை செய்து தீர்ப்பளிக்க முடியாத காரணங்களுக்காக, இம் மன்றத்தை நீதிப் புனர்விசாரணை செய்யும் மன்றமாகப் பயன்படுத்தினர் என்பதை முன்னர்க் கண்டோம்.[95] தவிர, ஊறு விளைத்தல் (காயம் உண்டுபண்ணுதல்), ஒறுத்தல் போன்ற வழக்குகளை விசாரிப்பதில் இம்மன்றம் ஏற்றதான நற்பயனை யுடைய அதிகார எல்லையைக் கொண்டிருந்தது. குற்றத்தின் வெறுக்கத்தக்க தன்மை காரணமாயும், பிரதிவாதியின் பதவி அல்லது அதிகாரம் காரணமாயும், பொது மக்களின் ஆதர வுடன் எழுந்த கலகம் அல்லது வேறு காரணங்களுக்காகவும் சாதாரண, கீழ்த்தர நீதிமன்றங்களில் நேர்மையான விசாரணை நடத்துவதற்கு இயலாமல் அல்லது நீதிமன்றங்களின் நடவடிக்கைகளை வலிமையால் எதிர்க்கின்ற வழக்குகளை விசாரிப்பதற்கு இம்மன்றம் ஏற்றதாயிருந்தது. இடைக் காலத்தில், சிறப்பாக வலிமையற்றிருந்த லங்காஸ்டிரிய மன்னர் களின் ஆட்சிக் காலத்தில், வலிமை பொருந்திய உயர்குடி மக்களால் நிகழ்ந்த கொள்ளை, கொடுமை முதலியவை காரண மாக நாட்டின் தலைமை அதிகார பீடமான இம்மன்றம் அடிக்கடி குறுக்கிட நேர்ந்தது.[96] மேலும், கீழ்த்தர நீதி மன்றத்தின் நடவடிக்கையின் பயனாகச் சிறைத்தண்டனையை அனுபவிக்கும் ஒருவருக்கு அவரைத் தொடர்ந்து வழக்காடுகிற எதிரியை எதிர்த்து நேரில் நீதிமன்றத்தில் ஆஜராகவேண்டும் என்ற ஆணையைப் பிறப்பிப்பது, அத்துடன் காரணத் துடன்கூடிய ஹெபியஸ் கார்ப்பஸ் (உடல் சுதந்திரம்) சட்ட ஆணையைச் சில சமயங்களில் பயன்படுத்துவது என இருவிதப் பரிகாரங்கள் அளிக்கப்பட்டன. (ஹெபியஸ் கார்ப்பஸ் ஆணைப் படி, வழக்கின் காரணமும், பிரதிவாதியும் மன்றத்தின்முன் நீதி வழங்குவதற்காகக் கொணரப்பட்டனர்.) அத்துடன், வேல்ஸ், அயர்லாந்து மாநிலங்களின் வாக்குரிமைகள் போன்ற சிறப்பான அதிகார வரம்பிற்குட்பட்ட ஆணைகளை விதிக்கவும் இம் மன்றம் உரிமை பெற்றிருந்தது.[97] கொள்கையளவில் எளி யோர்களைக் கண்காணிப்பது இம் மன்றத்தின் சிறப்பான நோக்கமாயிருந்தது.[98]

**சான்ஸலரின் அதிகார வரம்பு:** நீதி விசாரணை செய்யும் வேலையை மன்றம் மேற்கொள்ளும்பொழுது சான்ஸலர் பொதுவாகத் தலைமை தாங்குவது வழக்கமாயிருந்தது. மூன்றும் எட்வர்ட் ஆட்சிக் காலம்வரை இச் சான்ஸலர் பதவியை மிகவும் கண்ணியம் வாய்ந்த சமயத்துறையைச் சேர்ந்தவரொருவரே மேற்கொண்டிருந்தார். மன்னரின் குடிகளுடைய குறைகளைக் கவனித்து நீக்குதல் செய்யும்

சிறப்பான பொறுப்பு இவரிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தது. மன்றத் தொடர்பில்லாமல் இவ்வதிகாரி மிக முக்கியமான, ஆனால், சாதாரணமான நீதிவிசாரணை முறையைக் கொண்டிருந்தார்.[99] ஆனால், முதலாம் எட்வர்ட் மன்னரின் ஆட்சியில் (சில வரலாற்ருசிரியர்கள் கூறுகிறபடி) சான்ஸலரின் அதிகார வரம்பு சிறப்பாக விரிவடைவதையோ அல்லது சமமான அதிகாரம் தோன்றியதற்கான அடையாளங்களையோ காண்கிறோம். வரலாற்ருசிரியர்களின் கருத்துப்படி, மன்னருக்கும் மன்றத்திற்கும் பொதுச் சட்டத்தின் கடுமையைத் தவிர்க்கவும், அதன்கண் காணப்பெறும் குறைகளை நிறைசெய்யவும், கருணை காட்டும்படியாகவும் ஆதரவளிக்கும்படியாகவும் கோரப்பட்ட மனுக்கள் மக்களிடமிருந்து வந்தன. இம் மனுக்களை, சான்ஸலர் நன்கு ஆய்ந்து, அவைகளைப்பற்றி மன்னருக்கு எடுத்துரைத்தார். 1280-ல் 'கணக்கற்ற' மனுக்கள் சமர்ப்பிக்கப்பட்டதால் ஏற்பட்ட தொல்லையை நீக்குவதற்கு முதலாம் எட்வர்ட் ஒரு தனி உத்தரவைப் பிறப்பித்தார். அதன்படி, எல்லா மனுக்களும் சான்ஸலரிடம் சேர்ப்பிக்கப்பட்டு சோதனைக்குப்பின் சம்பந்தப்பட்டவாறு அவைகள், மன்னரது நீதிமன்றம், எக்செகர், பொது நீதிமன்றம் அல்லது ஜூரிகளுக்கு அனுப்பப்பட வேண்டுமென்று ஏற்பட்டது. ஆனால், மனுதாரர்களின் கோரிக்கைகள் மிகுதியாயிருந்தும், மன்னருடைய கருணையை எதிர்நோக்கியிருந்தும், மன்னருடைய கருத்தை அறியாது தாங்களாகவே சான்ஸலரோ அல்லது நீதிபதிகளோ நடந்துகொள்ள முடியாத நிலையில், மன்னருடைய விருப்பத்தை அறிந்துகொள்ளுவதற்காக மன்னரிடம் சமர்ப்பிக்கப்படவேண்டும்; எனினும், சான்ஸலரும், மற்ற அமைச்சர்களும் சேர்ந்து அவர்கள் வழியாக மன்னரிடமும் மன்றத்திடமும் மனுக்கள் அனுப்பப்படவேண்டும்.[1]

மன்னரிடம் சமர்ப்பிக்கப்பெற்றனவும், சிறப்பான பரிகாரங்களைக் கோரியவையுமான சில மனுக்களை மன்னர் தனது முத்திரையுடன் ஆணையிட்டு, சான்ஸலருக்கும் அரண்மனைப் பதிவாளருக்கும் சேர்த்தோ அல்லது தனித்தனியாகவோ அனுப்பும் வழக்கத்தை முதலாம் எட்வர்ட் மேற்கொண்டிருந்தார். மன்னரது ஆணையில் நேர்மைக்கு (அல்லது நியாயம்) ஒத்ததாகத் தோன்றும் பரிகாரத்தை அளிக்குமாறு கூறப்பட்டிருக்கும்.[2] இரண்டாம் எட்வர்டின் காலத்தில் சான்ஸரி நீதிமன்றத்தின் அதிகாரவரம்பு மிகவும் விரிவடைந்தது என்பது சான்ஸலரி மன்றம்பற்றி அடிக்கடி கூறப்பட்டிருப்பதிலிருந்து தெரியவருகிறது.[3] இறுதியில் 1349-ல் மூன்றும் எட்வர்டின்

ஆட்சியின் இருபத்திரண்டாம் ஆண்டில் மன்னருடைய 'கருணையை எதிர்நோக்கியனவான' மனுக்கள் எல்லாம், சான்ஸலர் அல்லது அரசருடைய முத்திரையைப் பாதுகாப்பவர் மூலமாக அனுப்பப்படவேண்டுமெனக் கட்டளையிடப் பெற்றது.[4] இக் கட்டளை சான்ஸரி நீதிமன்றத்தின் நியாயமான அதிகாரவரம்பை சான்ஸலரின் நீதித்துறை சம்பந்தமானதும், பொதுச்சட்ட நீதிமன்றத்தினுடையதுமானதிலிருந்து தனித்துக்காட்டும் நிலையை நிலைபெறச் செய்வதற்குப் பேருதவியாயிருந்தது. எனினும், பின்னர் ஏற்பட்ட ஆட்சியின்போது தான் சான்ஸலரி நீதிமன்றத்தின் தனிச் சிறப்பு நிலையாக ஏற்பட்டது.[5]

பொதுச்சபை (மன்றம்) அதற்கிருந்த செயலைக்கொண்டு திருப்தியுறாத நிலையில், பொதுச் சட்டம் சம்பந்தமான் வழக்குகளிலும் நேரிடையாக விசாரணை செய்வதை மேற்கொண்டது. மகாசாசனத்தில் உறுதியளிக்கப்பட்டிருந்த உரிமைகளுக்கு நேர்மாருக, மக்கள், குற்றஞ் சாட்டப்படுதல் அல்லது குற்றவாளியென அறிவிக்கப்படுதல் என்பவை இல்லாமலேயே, தம்மிச்சைப்படி சிறைப்பிடிக்கப்பட்டு, அவர்களுடைய நிலங்கள் மன்னரால் பறிமுதல் செய்யப்படலாயின.

**அடக்குமுறைச் சட்டங்கள் :** சொத்து, தனிமனிதனின் சுதந்திரம் முதலிய உரிமைகள் மீது சட்டவிரோதமாகப் பொதுச்சபை (மன்றம்) ஆக்கிரமித்ததைக் கட்டுப்படுத்துமாறு பொதுமக்கள் மீண்டும் மீண்டும் புகார் செய்ததைக் கண்டு, மூன்ரும் எட்வர்டின் ஆட்சியில் தொடர்ச்சியாகச் சில சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. மூன்ரும் எட்வர்டின் ஐந்தாவது சட்டம் (1331) நிறைவேற்றப்பட்டது. அதன்படி 'மகாசாசனத்திற்கும், நாட்டின் வழக்கப்படியுள்ள சட்டத்திற்கும் மாருக எவரும் எவ்விதக் குற்றச்சாட்டினுலும் கைது செய்யப்படக் கூடாதெனவும், உயிர், உறுப்பு முதலியவைகளுக்கு ஊறு விளைவிக்கக் கூடாதெனவும், அவருடைய நிலங்கள், வீடுகள், பொருள்கள், சொத்துகள் மன்னர் பெயரில் பறிமுதல் செய்யக்கூடாதெனவும்' விதிக்கப்பட்டது.[6] இருபதாண்டுகளுக்குப் பின் மன்றத்தின் சட்ட விரோதமான நடவடிக்கைகளைக் குறித்து மக்கள் விண்ணப்பஞ் செய்தனர். மன்னரிடமிருந்து ஓரளவு திருப்தியளிக்காத பதிலைப் பெற்ற மக்கள் (1352) அடுத்த ஆண்டில் பாராளுமன்றத்திற்கு மறுபடியும் விண்ணப்பஞ் செய்தனர். அதன் விளைவாக மகாசாசனத்தின் சொற்களை விளக்கம் செய்யும் முறையில் ஒரு சட்டம் இயற்றப்பட்டது.

'நாட்டில் குறிப்பாகச் சட்டம் இயற்றப்படாதவரை எவரும் சிறைப்பிடிக்கப்படுவது அல்லது அவரது சுதந்திரமானவை களிலிருந்து நீக்கப்படுவது அல்லது வாக்குரிமையைப் பறிப்பது அல்லது சுதந்திரமான சுங்கமின்றியிருத்தலை நீக்கு வது போன்ற இங்கிலாந்தில் காணப்பெற்ற உரிமைகளை மகா சாசனம் குறிப்பிடுவதால், இனிமேல் நாட்டின் தலைவரான மன்னர் அல்லது மன்றத்திற்கு விண்ணப்பஞ் செய்வது அல்லது கருத்துரைப்பது வாயிலாக எவரும் சிறையிலிடக் கூடாதென ஒத்துக்கொண்டு சம்மதித்து ஏற்படுத்தப்படு கிறது; அப்படிச் சிறைப்பிடிப்பதாயிருந்தால், முறையாக நிகழ்ச்சி நடந்த இடத்திலும் அருகிலும் உள்ளவர்களும் சட்டத்திற்குக் கட்டுப்பட்ட நன்மக்களால் குற்றவாளியெனக் குற்றஞ்சாட்டி யிருக்கவேண்டும் அல்லது பொது நீதிமன் றத்தில் விதிக்கப்பட்ட அசல் ஆணைப்படி சிறையிலிடப்பட வேண்டும்; தவிர, சட்டப்படி முறையாக விசாரணை செய்ததன் பயனாகக் குற்றவாளியென அறிவிக்கப்படாதவரை எவரும் அவருடைய உரிமைகளிலிருந்தோ, சுதந்திரமான சொத்துகளி லிருந்தோ வெளியேற்றப்படக்கூடாது; இதற்கு மாறாக ஏதா வது செய்யப்படுமானால் அதற்குப் பரிகாரம் செய்வதுடன் ரத்துச் செய்யப்பட்டதாகவும் கொள்ளவேண்டும்.'[7]

1354-ல் நிறைவேற்றப்பட்ட ஒரு சிறு சட்டத்திலும் இதைப்போன்ற ஷரத்துகள் அடங்கியுள்ளன;[8] எனினும், 1362-ல் பொதுமக்கள் மீண்டும் புகார் விண்ணப்பம் செய்வ தைக் காண்கிறோம். 'குருமார்கள், கோமகார்கள், ஏர்ல்கள், மான்யப் பிரபுக்கள், பொதுமக்கள் முதலியவர்களின் சம்ம தத்தின்பேரில் உத்தரவிடப்பெற்று நிறுவப்பெற்றதாவது, மேலே குறிப்பிடப்பட்ட விண்ணப்பத்திற்கிணங்க சாசனங் களும் சட்டங்களும் பின்பற்றப்படவேண்டும் என்பதாகும்.'[9] அடுத்த ஆண்டில் கீழ்க்காணும் வகையில் மற்றொரு சட்டம் இயற்றப்பட்டது. அதாவது, 'எவரும் கைப்பற்றப்பட்டுச் சிறைப்பிடிக்கப்படுவது, சட்டத்தின் நடவடிக்கையின்றி அவருடைய சுதந்திரமான சொத்துகளைப் பறிமுதல்செய்வது என்பன கூடாதென மகாசாசனத்தில் கூறப்பட்டிருந்தும், பலர் பகைமை காரணமாயும் வேறு காரணமாயும் மன்னரிடம் முறையிடுவதால், நாட்டிற்குத் தீமை விளைவிப்பதாகக் கருதி மன்னர் வருந்தி சாசனத்திற்கு மாறாக நடக்கவேண்டியிருக் கிறது; எனவே, குற்றஞ் சாட்டுகிறவர்கள், அவர்கள் கூறும் காரணங்களுடன் சான்ஸலர், கருவூலத்தார், சான்ஸலரின் பொது மன்றத்திற்கு அனுப்பப்படுவரென்றும், அங்கு அவர்

கள் குற்றச்சாட்டுதலைத் தொடருவதற்கு ஜாமீன் கொடுக்க வேண்டுமென்றும், குற்றஞ் சாட்டப்பட்டவர் குற்றவாளி யெனக் கருதப்பட்டால் எந்தவிதமான தொல்லைகளுக்குட் படுத்தப்படுகிறார்களோ அதே விதமான தொல்லைகளுக்கு உள்ளாக வேண்டுமென்றும், குற்றச்சாட்டு பொய்யான தென்று ஏற்படுமானால் அவர்கள்மீது சாசனம், மற்றும் சட்டங்கள் முதலியவற்றிற்கு மாறாகப் பறிமுதல், சிறைப் பிடித்தல் போன்றவை விதிக்கப்படும்' என்பதாகும்.[10]

1368-ல் பொதுமக்கள் மீண்டும் மன்னரிடம் விண்ணப் பித்துக்கொண்டனர். அதாவது, 'பொய்க் குற்றச்சாட்டு தலால் பொதுமக்களில் பலர் துன்புறுத்தப்பட்டு அழிவுறு கின்றனர். குற்றச்சாட்டைச் செய்கிறவர்கள், மன்னருடைய இலாபத்தையோ அல்லது மக்களின் நலனையோ கருதாது தனியார் இலாபத்தைக் கருதுகிறவர்களாயும் பழிவாங்கும் எண்ணங் கொண்டவர்களாயும் உள்ளனர். குற்றஞ் சாட்டப் பட்டவர்களில் சிலர் சிறைப்பிடிக்கப்பட்டும், மற்றவர்கள் மன்னருடைய உத்தரவின்படியும், மறுக்கமுடியா ஆணைப்படி யும் பொதுச்சட்டத்திற்கு மாறாகப் பெருந்தீங்கு விளையுமென அச்சுறுத்தப்பட்டு மன்னருடைய நீதிமன்றத்திற்கு வருமாறு விதிக்கப்படுகிறார்கள்; எனவே, மன்னருக்கும் மன்றத்திற்கும் மனநிறைவும், நாட்டில் நீதிவழுவா அரசாங்கமும் ஏற்படுவதற் காக, மன்னருடைய நலனுக்காக எந்தவிதமான குற்றச் சாட்டையும் செய்யும் எவரும் அவரது குற்றச்சாட்டை மன்ன ருடைய நீதிமன்றங்களுக்கு அல்லது அஸ்ஸைஸ்களுக்குச் சட்டப்படி விசாரணைசெய்து தீர்ப்புக்காண்பதற்காக அனுப்ப வேண்டியது; குற்றச்சாட்டு சட்டப்படி அமைந்திருக்கு மானால், குற்றஞ் சாட்டுகிறவர் அல்லது பிரதிவாதி, நீதிபதி களின் முன்னதாகப் பதிவுப் பத்திரங்கள் அல்லது அசல் ஆணையின் நடவடிக்கையின் அடிப்படையில் எழுந்தவாறும் நாட்டின் பழமையான சட்டப்படியும் உறுதிமொழியுடன் கூடிய வாக்குமூலமின்றி விசாரணைக்குட்படுத்தக்கூடாது. மேற்கூறியவைகளுக்கு மாறாகச் செய்யப்படுமானால் சட்டப்படி அது செல்லத்தக்கதன்று என்பதோடு பொய்க்குற்றச்சாட்டுச் செய்ததற்காகக் காவலிலும் வைக்கப்படவேண்டியது' என்ப தாகும். இவ் விண்ணப்பத்திற்குப் பதிலளிக்கும் முறையில் அதே கருத்துகளடங்கிய சட்டம் இயற்றப்பட்டது. 'இந்த விதி மகாசாசனத்தின் விதியாயிருப்பதால், விண்ணப்பம் கோருகிறபடி நடக்கவேண்டுமென மன்னர் உத்தரவிடு கிறார்.'[11]

நெடுநாள்களாக அதிகாரத்தைக் கைக்கொண்டிருந்த பழக் கத்தால் மன்னரும் மன்றமும் அதிகாரத்தைத் தங்கள் வசம் வைத்துக்கொள்ளுவதில் முரட்டுப் பிடிவாதமாயிருந்தபடியால் பாராளுமன்றத்தில் இயற்றப்பட்ட சட்டங்கள் பயனற்றன வாயின. சிவில் வழக்கு சம்பந்தமான நீதிவிசாரணையை மன்றம் அப்பொழுதெல்லாம் சான்ஸரியுடன் இணைந்து நடத்திவந்தது. சான்ஸரி நீதிமன்றமும் முக்கியத்துவம் பெற்றுவந்தது. எனவே, இவ் விரண்டையும் சேர்த்து அவ்வப்போது விண் ணப்பிக்கப்பட்ட கண்டனங்களில் பொதுமக்கள் குறிப்பிட லாயினர். இரண்டாம் ரிச்சர்டின் பதின்மூன்றும் ஆண்டில் எழுந்த விண்ணப்பத்தில் (1389) பொதுச் சட்டம் அல்லது பாராளுமன்றத்தில் இயற்றப்பட்ட சட்டத்திற்கு மாறாகவும் நாட்டின் பழமையான வழக்கத்திற்கு மாறாகவும் மன்னரின் மன்றமும் சான்ஸலரும் எவ்வித அதிகாரபூர்வமான உத்தர வையும் செய்யக்கூடாதென்றும், 'எல்லா மக்களும் பொதுச் சட்டப்படி நடத்தப்பட வேண்டுமென்றும், சட்டப்படி யல்லாது எந்தத் தீர்ப்பும் ரத்துச் செய்யப்படக்கூடாதென்றும்' குறிப்பிடப்பட்டிருந்தது. மன்னர் மனநிறைவல்லாத பதிலை அளித்தார்: அதாவது, 'இதுவரை நடந்துவந்ததைப்போன்று செய்யப்படவேண்டியது; அரசருக்குள்ள சிறப்புரிமையைக் கட்டுப்படுத்தக்கூடாது; தீங்கிழைக்கப்பட்டிருப்பதாக யார் கருதினாலும், அவர் அதைச் சிறப்பாக எடுத்துக் கூறினால், நியாயமானது செய்யப்படும்' என்பதாகும்.[12]

பதினான்காம் நூற்றாண்டில் பாராளுமன்றம், மன்றத்தின் அதிகார எல்லையை ஐயத்துடன் நோக்கியது. இதற்குக் காரணம், மன்றம், மன்னருடனும் அவருடைய சிறப்புரிமை யுடனும் கொண்டிருந்த இணக்கமாகும். அத்துடன் தன் னிச்சையான அதிகாரத்தைக் கையாளுவதுபற்றிப் பாராளு மன்றம் தன் கருத்தையும் வெளியிட்டது. சாதாரண நீதி மன்றங்களிலும் சட்டப்படி வாதாடுகிறவர்கள், பொது மக்களைச் சேர்ந்தவர்களாயும் செல்வாக்குமிக்க கூட்டத்தின ராயுமிருந்தால், சான்ஸரி நீதிமன்றத்தின் அதிகாரவரம்பின் வளர்ச்சியைக்குறித்துத் தொழில் சம்பந்தமான பொறாமையை வெளிக் காட்டினர். சான்ஸலர் நீதிமன்றத்தின் நடவடிக்கை கள், பொது நீதிமன்றங்களைக் காட்டிலும் தொல்லைகள் குறைந்தனவாயிருந்தன.

**நீதிமன்றத்தில் நேரில் வருவதற்கான எழுத்துமூலக் கட்டளை யாகும் ஆணை :** சான்ஸரி நீதிமன்றத்தில் வழக்குகள் விண் ணப்பம் அல்லது மசோதாமூலம் தொடங்கின. பூர்வாங்கமான

ஆணையும், அதையடுத்துக் குற்றஞ் சாட்டப்பட்டவரை நீதி மன்றத்தில் நேரில் வந்து குற்றங் குறித்துப் பதில் கூறும் படி செய்யும் சப்போனு[13] எனும் ஆணையும் பிறப்பிக்கப் படுவதில்லை. சர்ச்சையுள்ள வழக்குகள், உறுதிமொழி எடுத்துக் கொண்ட கட்சிக்காரர்களை நேரிடையாக விசாரணை செய்வதன் மூலம் தீர்மானிக்கப்பட்டது. இந்த நடவடிக்கை பொது நீதி விசாரணையில் காணப்படுவதன்று ; எனினும், இம்முறை இந்த நீதிமன்றத்திலும் பொதுமன்றத்திலும் பின்பற்றப்பட்டது. சான்ஸரி நீதிமன்றம் பொதுமன்றத்திலிருந்து பின்னர் பிரிந்து சென்றது. நான்காம், ஐந்தாம் ஹென்றி மன்னர்களது ஆட்சியிலும், ஆருவது ஹென்றி இளம்பிராயத்தவராயிருந்த பொழுதும், சான்ஸரி மன்றத்தின் அதிகார எல்லை மீறுதல் குறித்துக் கண்டனங்கள் மக்களால் தெரிவிக்கப்பட்டுவந் துள்ளன. பொது நீதிமன்றங்களுடைய நடவடிக்கைகளில் சான்ஸலரின் அதிகாரம் குறுக்கிடுவதைப்பற்றி நீதிபதிகள் சர்ச்சை எழுப்பியபோதிலும், நான்காம் எட்வர்டின் காலம் முதல் இதுபோன்ற மக்கள் எதிர்ப்பைக் காண்பதற்கில்லை ; தவிர, இரண்டாம் சார்லசின் ஆட்சிக் காலம்வரை நீதிமன்றம் நான்காம் எட்வர்டின் காலத்திலிருந்ததைப் போன்றே தொடர்ந்து செயலாற்றிவந்தது.[14]

**மகாசபை :** சுதந்திரமான நீதிவிசாரணை செய்யும் வரம்பு குறித்துத் தொடர்ந்து காணப்பட்ட மன்றத்தைப்பற்றிக் கவனித்தோம் ; எனினும், பாராளுமன்றத்தின் உயர் நீதி மன்றத்துடன் அது கொண்டிருந்த உறவும் சிறப்புடன் நோக்கற்பாலது. பாராளுமன்றத்தின் வளர்ச்சியைப் பற்றி நாம் கவனிக்கவேண்டியதாயுள்ளது. முதலாம் எட்வர்ட் காலத்தில் மூன்று எஸ்டேட்டுகளுடன் கூடிய பாராளுமன்றம் நிலையாக அமைக்கப்பட்டதன் பின்னரும், உயர்குடி மக்களான சமயஞ் சார்ந்தவரும், லௌகீகர்களும் சேர்ந்து பாராளு மன்றத்திற்குட்படாத வகையில் சுதந்திரமான சில அதிகாரங் களைக் கொண்டிருந்தனர். இவ்வதிகாரங்கள் இப் பிரபுக்களே தேசிய சபையாக அமைந்திருந்தபொழுது இவர்களுடையனவா யிருந்தன. பின்னர் இவ்வதிகாரங்களைப் பிரபுக்கள் சபைக்கு மாற்றிவிட்டனர். மகாசபை (மாக்னம் கன்சீலியம்) எனும் பெயருடன் 13, 14, 15ஆவது நூற்றாண்டுகளில் அவ்வப்போது இச் சபை கூடியது. சிற்சில சமயங்களில் மன்னருடைய தொடர்ந்தாற்போல் கூடிய மன்றத்துடன் ஒன்றுசேர்ந்தும், ஓரோர் சமயத்தில் பாராளுமன்றத்தின் எல்லா உறுப்பினர் களையும் கொண்ட கூட்டத்திலும் சேர்ந்து காணப்பெற்றது.[15]

பாராளுமன்றத்தின் நீதிவிசாரணை அதிகாரத்தில் பொது மக்கள் பங்கு கொள்ளாததால்,[16] மன்னருடைய மகாசபை, மன்னருடைய மேலானதும் சிறப்பானதுமான நீதிமன்றத்தின் அதிகாரத்தைச் செய்துவந்தது — பாராளுமன்றத்தில் பிரபுக்கள் சபை சாதாரண மன்றத்துடன் ஒன்றாகக் கலந்து போயிற்று.

**பிரபுக்கள் சபை : நீதிவிசாரணைக் குழு :** சபையின் கலப்பான அதிகாரத்திலிருந்தும், பாராளுமன்றம் அல்லது சட்டசபையிலும், ஆலோசனை சபை, நீதிமன்றம் இவ்விரண்டிலும் பிரபுக்கள் உறுப்பினராயிருந்துகொண்டும் தகுதிபெற்றிருந்த காரணத்தால், பிரபுக்கள் சபை மறுவிசாரணை செய்யும் நீதிமன்றமாகும் தன்மையைப் பெற்றிருந்தது. மன்னருடைய ஆலோசனை மன்றம் சட்டமியற்றும் தன்மையைப் பெற்றுச் சட்டங்களை இயற்றுவதில் முயன்றுவந்தது.[17] நீதிபதிகளும் தொடர்ந்து செயலாற்றிய மன்னருடைய மன்றத்தின் உறுப்பினர்களும் மகாசபையின் உறுப்பினராக முதலில் கூட்டங்களில் கலந்துகொண்டனர். அம்முறையில் பிரபுக்கள் என்ற பதவி இல்லாதிருந்தும் வாக்குரிமையைப் பெற்றிருந்தனர்.[18] ஆனால், மூன்றும் எட்வர்டின் காலத்தில் பிரபுக்கள், நீதிபதிகள், மற்றவர்கள்மீதும் தங்களுடைய மேலாதிக்கத்தை வெற்றிகரமாக நிலைபெறச் செய்து, நீதிவிசாரணையின் வரம்பைத் தங்கள் வசமே வைத்துக்கொண்டனர். எனவே, மன்றத்தில் பிரபுக்களுடன் பழைய சகாக்களாயிருந்தவர்கள், பிரபுக்களாயில்லாத காரணத்தால், உதவியாளர்களாயும் ஆலோசனை கூறுகிறவர்களாயிருக்கும் நிலைக்குத் தாழ்த்தப்பட்டனர். மேல்சபையின் நீதிவிசாரணை நடவடிக்கைகளில் அதுமுதல் இப் பதவியைத் தான் நீதிபதிகள் கொண்டிருந்தனர். மேல்சபை, இடைக்காலத்திய மகாசபைகளின் பிரதிநிதியாகவும் வாரிசாகவும் ஆயிற்று.[19]

தொடர்ந்து காணப்பட்ட மன்னருடைய ஆலோசனை சபையான நீதிமன்றம் தன் சிறப்பான அதிகாரத்தை நெடுகிலும் கைக்கொண்டிருந்தது. வேண்டுகோள்களை ஏற்கும் நீதிமன்றம்,[20] மிகப் புகழ்வாய்ந்த நட்சத்திர மன்றம் போன்றவைகளைக் கிளைகளாகவும், பக்கத்தில் பிரிந்துசெல்லும் குருத்துகளாகவும் விடுத்து, தன் நீதிவிசாரணை அதிகாரத்தைப் பிரிவி கவுன்சிலிடம் மாற்றிக் கொடுத்தது. நீதிவிசாரணை செய்யும் குழுவின்[21] மூலம் இவ்வதிகாரத்தை இன்றும் பிரிவி கவுன்சில் நடத்திவருகிறது.

**நட்சத்திர நீதிமன்றம்:** நட்சத்திர நீதிமன்றத்தின் தோற்று வாயைக் குறித்தவரையில், மூன்றும் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில், தொடர்ந்து அமைந்த மன்னர் நீதிமன்றம், நட்சத் திரங்களால் அலங்கரிக்கப்பட்ட அறையில் அமர்வது வழக்கம் என்பதை ஏற்கெனவே அறிந்துள்ளோம்.[22] மன்றத்தின் நீதி விசாரணையில் பெரும்பகுதியான சிவில் சம்பந்தமான அலுவல் களை விசாரணை செய்வதற்குச் சுதந்திரமானதும் தனிமை யானதுமான சான்ஸரி நீதிமன்றம் ஏற்பட்டபின், நீதிமன்றம் நட்சத்திர மன்றத்தில் அமர்ந்து சான்ஸரி நீதிமன்றத்திற்கு அனுப்பப்பெருத வழக்குகளை விசாரணை செய்வது வழக்கமா யிருந்தது. 'சிவில், கிரிமினல் வழக்கு சம்பந்தமான நட வடிக்கைகளை எதிர்த்து நீதிமன்றத்தினிடம் பொதுமக்கள் தொடர்ச்சியாகச் சமர்ப்பித்த குற்றப் பத்திரிகைகள், அவை கோரியவற்றை யடையாவிடினும், மன்றத்தின் நடவடிக்கை கள்மீது மகாசாசனம் போன்ற சட்டங்களுக்கு மாருக இருந்த தாக மிக்க இகழ்ச்சியை உண்டுபண்ணின' என ஹேல் பிரபு கூறுகிருர்.[23] இம் மன்றத்தின் அதிகாரம் ஆரும் ஹென்றியின் காலத்தில் கிரமமாகக் குறையலாயிற்று; சிறிது காலம் ஒத்தி வைக்கப்பட்டும் இருந்தது.[24]

நான்காம் எட்வர்டின் ஆட்சியின் இறுதியில் இம் மன்றம் மறுமலர்ச்சி பெற்றதுடன், எட்டாவது ஹென்றியின் காலத் தில் 'மன்றத்திற்கு மறுவாழ்வளிப்பதுடன் முன்னிருந்ததைக் காட்டிலும் அதிக ஆண்மையுடன் அதைப் பயன்படுத்துவ தென்னும் கொள்கையைக் காணத் தேவையான சாட்சியமும் உள்ளது.'[25] தனது ஆட்சியின் மூன்ருவது ஆண்டில் (1487) அவர் 'மன்றத்தின் சட்டப்படி அமைந்த குழுவை'[26] அமைத்தார். இதைச் சில சமயங்களில் 'நட்சத்திர மன்றம்' எனத் தவறுதலாகக் கூறுவதுண்டு. இப் புதிய குழுவில், சான்ஸலர், பொருளாளர், மன்னரின் முத்திரையைக் கொண்டிருந்த பிரபு (பிரிவிசீல்) எனப்படும் மூவரில் மூவர் அல்லது இருவருடன், மேற்றிராணியார், மன்றத்தின் உறுப் பினர்களான பிரபுக்களில் லௌகீகரான ஒரு பிரபு, இரு பிரதம நீதிபதிகள், பிரதம நீதிபதிகள் இல்லாவிட்டால் வேறு நீதிபதிகள் ஆகியோர் உறுப்பினராயிருந்தனர்.[27] பின்னர் ஏற்பட்ட சட்டப்படி, 21 எட்டாம் ஹென்றி விதி 20 (1529), குழுவின் உறுப்பினர்களான நீதிபதிகளின் எண்ணிக்கையுடன் ஒரு தலைவரும் சேர்க்கப்பட்டார்; இந்தச் சட்டத்திலும், ஏழாம் ஹென்றியின் காலத்தில் இயற்றப்பட்ட மூன்ருவது சட்டத் திலும் இக் குழுவிற்கு 'நட்சத்திர மன்றம்' எனப் பெயர்

குறிப்பிடப்படவில்லை.[28] இக் குழு, ஏழாம் ஹென்றி பட்ட மெய்தியபொழுது, வில்லைச் சேவகர் சட்டம், ஜூரிகளின் நேர்மையற்ற தன்மை, 'கலகத்தை விளைவிக்கக்கூடிய சட்ட விரோதமான கூட்டங்கள்' முதலியவைகளினின்றும் தோன்றிய ஒழுங்கீனங்களைக் கவனிப்பதற்காக அமைக்கப்பட்டது. தற்காலிக நன்மையை உண்டுபண்ணிய இக் குழு, தேவை முடிந்ததும் வழக்கிலிருந்து மறைந்தது; எனினும், பொதுமன்றத்தின் அமைப்பையோ அல்லது அதிகாரத்தையோ பிடிக்கவில்லை. 1526-ல் ஏற்பட்ட மன்றக் கட்டளைகளில், மன்றத்தின் செயல்களின் இரு கிளைகளான செயற்குழு, மன்றத்தின் அதிகாரம் என்பவைகளுக்கிடையே வேறுபாடு ஏற்பட்டது. முதலில் கூறிய செயற்குழு மன்னருடன் இடைவிடாது அமர்ந்திருந்ததால் பிரிவி கவுன்சிலாக ஆயிற்று; பின்னர் கூறப்பட்டது வெஸ்ட்மின்ஸ்டரில் இருந்துகொண்டு நீதிவிசாரணை சம்பந்தமான அலுவல்களைக் கலனித்துக்கொண்டிருந்தது; இதுவே 'நட்சத்திர மன்றம்' எனப் பெயர்பெறலாயிற்று.[29]

நட்சத்திர நீதிமன்றம், கொள்கையிலும் நடைமுறையிலும் சான்ஸரி நீதிமன்றத்தை ஒத்திருந்தது. எனினும், சாதாரண விசாரணைக் குழு (டிரிப்யூனல்), விசேடமானதும் அபாயத்தை உண்டுபண்ணக்கூடிய தன்மையதாயுமிருந்த பெருங்குற்றம் முதலிய வழக்குகளில் நியாயம் வழங்குவதில் காணப்பட்ட திறமையின்மையை நீக்குவதற்காக இந்த நீதிமன்றம் ஏற்பட்டது.[30] சிவில் வழக்குகளில் அதன் அதிகார எல்லைக்குள் அடங்கியிருந்தவையாவன: ஆங்கிலேயர்களுக்கும் வெளிநாட்டு வாணிகருக்குமிடையே எழுந்த வழக்குகள், கடல் சட்டப்படி கப்பல் பொருள்களைக் கைப்பற்றிய பிரச்சினைகள், சட்ட விரோதமாகக் கப்பல்களைத் துறைமுகங்களில் தங்கவைத்தல் போன்ற வாணிகச் சட்டம்பற்றிய விவகாரங்கள், உயில்படி எழுந்த சில பிரச்சினைகள், கார்ப்பரேஷன்களுக்கிடையே எழுந்த வழக்குகள் போன்றவையாகும். இவ் வழக்குகளில் குற்றப் பிரிவைச் சேர்ந்தவைகளை நட்சத்திர மன்றத்தினிடம் ஒப்படைத்துவிட்டு, மற்றவைகளைக் கடற்படை இலாகா, சான்ஸரி, பொது நீதிமன்றங்கள் முதலியவை எடுத்துக்கொண்டன. 'குற்றவிசாரணை செய்வதில்' நட்சத்திர நீதிமன்றம், பொய்க் கையெழுத்திடுதல், கொள்ளை, கலகம், காப்பு, மோசடி, அரச குற்றம், சதிசெய்தல் போன்ற குற்றங்களையும் கவனித்ததுடன், சிறப்பாகப் பொதுவான எல்லாவிதக் கெட்ட நடத்தைகளையும் கவனித்தது. இதில் பிரகடனம் செய்யப்பட்டவைகளில், பிரகடனம் செய்தவை சட்டப்படி செல்லத்தக்கனவா

எனக்கூடப் பாராமல், மீறுதல்களும் சேர்க்கப்பட்டிருந்தன. அபராதம் விதித்தல், சிறைப்பிடித்தல் போன்றவை வழக்கமாக விதிக்கப்படும் தண்டனைகளாயிருந்தன. எனினும், மரண தண்டனை விதிப்பது நீங்கலாக மற்றக் கடுந்தண்டனை விதிக்க நீதிமன்றத்திற்கு அதிகாரம் இருந்ததாகக் கொள்ளப்பட்டது. விதிக்கப்பட்ட அபராதத் தொகை மிகப் பெரியதாயிருந்தது. அத்துடன் அபராதத் தொகை குறைக்கப்பட்டும் தள்ளுபடி செய்யப்பட்டும் இருந்துங்கூட, பல்வேறு வழக்குகளில் அபராதம் விதிக்கப்பட்டவர்களுக்கு அது அழிவை விளைவிக்கக் கூடியதாயிருந்தது. கட்டையில் அறைதல், கசையடி கொடுத்தல், சூடு போடுதல், உறுப்புகளை இழக்கச் செய்தல் போன்ற தண்டனைகள், அரசியல் குற்றம் புரிந்தவர்கள்மீது, இந்நீதிமன்றத்தால் விதிக்கப்பட்டன.[31] இறுதியில் இம் மன்றத்தின் செய்கைகள் கொடுங்கோன்மை மிக்கதாகி, அதற்கு அளிக்கப்பட்டிருந்த அதிகாரத்தைச் சட்டவிரோதமான வழியில் பெருக்கிக்கொண்டிருந்ததால், மக்களால் பொறுத்துக்கொள்ள முடியாத அளவு கெட்ட பெயர் எடுத்து, 1641-ல் நீடித்த பாராளுமன்றத்தால் அழிவுற்றது.[32]

கடற்படைத்துறை: 1691-ல் வில்லியமும் மேரியும் 2. sess. 2, c. 2 (1820-ல் முதலாம் ஜார்ஜ் 4, c. 90; 1827-ல் 7, 8 ஜார்ஜ் 4, c. 65ஆல் திருத்தியமைக்கப்பட்டது) படி கடற்படையைச் சேர்ந்த மிக்குயர் கமிஷனர்களிடம்,[33] முன்னர் இங்கிலாந்தின் ஹைகமிஷனர் பிரபுவிடம் கொடுக்கப்பட்டிருந்த எல்லா அதிகாரங்களும், கொடுக்கப்பட்டன. இவ்வதிகாரங்களில் பெரும்பகுதி இடைக்காலத்தின் இறுதியில் கடற்படையதிகாரியால் பல துறைமுக அதிகாரிகளிடமிருந்து கைக்கொள்ளப்பட்டன. இத் துறைமுகங்கள் சொந்தமாகக் கடல் வாணிகம் செய்துவந்தன. அத்துடன் சிறப்பாக 'ஆலிரான் சட்டங்கள்' என அழைக்கப்படும் மிகப் பழமையான கடற் சட்டங்களைப் பயன்படுத்திவந்தன. ஆலிரான் சட்டங்கள் (விதிகள், தீர்ப்புகள் முதலியவை அடங்கியவை), தொன்று தொட்டு வழக்கில் வந்த விதிகள், பழக்கங்கள் முதலியவைகளைக் கொண்டவையும், ஃபிரான்சு நாட்டின் மேற்குக் கடற்கரைக் கப்பாலுள்ள தீவின்கண் அமைந்திருந்த கடல் வாணிக நீதிமன்றத்தால் பின்பற்றப்பட்டவையும் கொண்டனவாகும். இச் சட்டங்கள் இங்கிலாந்தில் முதலாம் ரிச்சர்டின் ஆட்சிக் காலத்திலேயே தோற்றுவிக்கப்பட்டிருக்கலாம். கடல் வாணிகம் சார்ந்தவைகளைத் தீர்மானிப்பதற்கு இவை ஓர் அளவுகோலாகக் கொள்ளப்பட்டன.[34] கடற்படையின் மிக்குயர் அட்மிரல் பதவி

யென்பது முதலாவது எட்வர்டின் ஆட்சிக் காலத்தில் முதன் முதலாகக் கேட்கப்படுகிறது. முதன்முதலாகக் கடற்படைத் தலைவராயிருந்தவர் (அட்மிரல்) வில்லியம் டி லேபோர்ன் ஆவர். இங்கிலாந்து மன்னரின் கடற்படைத் தலைவர் எனக் குறிப்பிடப் பட்ட இவர் 1297-ல் பதவியிலிருந்தார். பதினான்காம் நூற்றாண்டிலிருந்து இந்தப் பதவி நிலைபெற்று விளங்கலாயிற்று. தொடக்கத்தில் கடற்படைத் தலைவரின் கீழிருந்த கடற்படையைச் சேர்ந்தவர்கள்மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கும் அதிகாரம்தான் இருந்தது (இதில், தோழமை கொண்டிருந்த கப்பல்களுடனோ அல்லது சமாதானமான காலத்திலோ அவைகளை எதிர்த்துப் பகைமை பாராட்டாமல் பார்த்துக்கொள்வது சிறப்பாக உள்ளது). ஆனால், பதினான்காம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலிருந்து கடற்படைத் தலைவருக்குக் 'கடற் கொள்ளை போன்ற கடல் வாணிகஞ்சார்ந்த வழக்குகளை விசாரித்து முடிவான நியாயம் வழங்கும் அதிகாரத்தைப் பயன் படுத்துவதற்கான ஒரு சுதந்திரமான நீதிமன்றமும்' ஏற்பட்டு அதிகார வரம்பு விரிவு பெற்றது.[35]

கடற்படைத் தலைவரின் நீதிமன்றத்தின் அதிகார எல்லை மிக விரிவடைந்ததுடன், கடற்படைத் தலைவரின் அதிகார வரம்பிற்குட்பட்டிருந்த கடற்கரையோரமாயுள்ள நகரங்களின் உரிமைகளையும் மீறி ஆதிக்கம் செலுத்த முற்பட்டபொழுது,[36] இரண்டாம் ரிச்சர்டு, நான்காம் ஹென்றி ஆகியோரின் ஆட்சிக் காலங்களில், அவ்வதிகாரங்களைக் கட்டுப்படுத்துவதற்காகச் சட்டங்கள் இயற்றப்பட்டன.[37] அப்படியிருந்தும், கடல் வாணிகம் சார்ந்த கிரிமினல், சிவில் தொடர்புள்ள எல்லா வழக்குகளையும், நாட்டின் பொதுச் சட்ட நீதிமன்றத்திற்குட் படாத வழக்கு விவகாரங்களையும் இடைக்காலம் முழுவதும் கடற்படை அதிகாரியின் கீழிருந்த உயர் நீதிமன்றம் விசாரணைக்கு எடுத்துக்கொண்டிருந்தது; அத்துடன் அதன் அதிகாரம் கடல்களின்மீதும் நீடிக்கலாயிற்று. 1536-ல் (28, எட்டாம் ஹென்றி, c. 15) இயற்றப்பட்ட சட்டத்தால்தான் அந் நீதிமன்றத்தின் கிரிமினல் குற்றவிசாரணை செய்யப்படுவது ஒழிக்கப்பட்டது. இச் சட்டத்தின்படி, மன்னரால் நியமிக்கப் பட்ட கமிஷனர்களால்தான் கடற்படைத் தலைவரின் அதிகார வெல்லைக்குள் நிகழும் அரசத்துரோகம், கொடுங்குற்றங்கள், கொள்ளைகள், கொலைகள், கூட்டுச் சதிகள் பற்றிய வழக்குகள் விசாரணை செய்யப்படவேண்டும் என ஏற்பட்டது. இக் கமிஷனர்கள் 'நாட்டின் பொது நீதிமன்றங்களின் நீதிபதிகளாகவும் இருந்த காரணம்பற்றி, கடற்படை நீதிமன்றத்தைச் சார்ந்த

கிரிமினல் வழக்குகள் பொது நீதிமன்றத்தின் நீதிபதிகளிடம் மாற்றப்படுவதற்கு இச் சட்டம் மறைமுகமாக இடமளித்தது'.[38] பதினாறு, பதினேழாம் நூற்றாண்டுகளில் கடற்படை நீதிமன்றமும் பொது நீதிமன்றமும் அடிக்கடி சச்சரவிட்டுக் கொண்டிருந்தன. பதினெட்டாம் நூற்றாண்டில் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளில் கடற்படை நீதிமுறை வழங்கப்பட்டது கடுஞ்சச்சரவிற்குக் காரணமாயிருந்தது. 1834-ல் இக் கமிஷனர்களின் அதிகாரம் மத்திய கிரிமினல் நீதிமன்றத்திற்கு மாற்றப்பட்டது. 1873-ல் நிறைவேற்றப்பட்ட உயர்நீதிமன்றச் சட்டத்தால், இதுவரை கடற்படை நீதிமன்றத்தின்வசம் இருந்த சிவில் வழக்கு விசாரணையும், கடற்சட்டப்படி பறிமுதல் செய்யப்பட்ட பொருள், கப்பல் சம்பந்தமான வழக்கு விசாரணையும் உயர் நீதிமன்றத்தின் அதிகாரத்துடன் ஒன்றாக இணைக்கப்பட்டன.

## இராணுவ, காவல்துறை நிறுவனம்

ஆங்கிலேய அரசியலமைப்பின் சிறப்பியல்புகளுள் ஒன்று—அதன் மிகப் பழைய நிறுவனங்களின் நிலையான தன்மையுடன்கூடிய கால மாறுபாட்டால் ஏற்படும் வளர்ச்சி—நார்மானியர்கள், பிளான்டாஜெனட் மன்னர்களின்கீழ் ஏற்பட்ட முறையால் நன்கு விளக்கப்படுகிறது. உள்நாட்டில் அமைதியை நிலைபெறச் செய்யவும், பகைவர்களுடைய படையெடுப்புகளினின்று பாதுகாத்துக்கொள்ளவும் அமைக்கப்பட்ட இம் முறையில் இரு முக்கியமான அம்சங்கள் இருந்தன. இம்முறைகளினால் பண்டைக் காலங்களில் இதன் பயன்கள் பெறப்பட்டன. ஒன்று சிவில், மற்றொன்று இராணுவம்: (1) பிறருக்காக உறுதிமொழி எடுத்துக்கொண்டு குற்றவாளிகளைப் பிடிப்பதில் 'கூச்சலுடன்' பின்தொடர்ந்து செல்லும் பாதுகாப்பு நிறுவனம். ஹண்ட்ரட் அல்லது டைதிங் எனப்படும் நிலப் பகுதிவாழ் மக்கள் எல்லாரும் இதில் சேரவேண்டியவராவர். (2) பியர்ட் எனும் தேசியப்படை. நாட்டைப் பாதுகாப்பதற்கு மாத்திரமன்றி உள்நாட்டில் அமைதியை நிலைநிறுத்தவும் இது பயன்பட்டது. இப்படையில் சேர்ந்து பணியாற்றுவது மூன்று கடமைகளில் ஒன்றாகும். அதற்கு எல்லாச் சுதந்திர மான்யதார்களும் உட்பட்டவர்கள். எட்கார், கான்யூட் மன்னர்கள் காலத்திய சட்டங்களில் காணப்படும் மிகப்பழமையான இவ்விரு நிறுவனங்கள், சில நூற்றாண்டுகள்வரை வழக்கத்திலிருந்துவந்து, நார்மானியர்களின் வெற்றிக்குப் பின்னரும் முழுவலிமையுடன் எதிர் எதிர் நோக்கியிருந்தன; 'நிலமான்ய

முறையின்மேல் அமைந்திருந்த கோப்புகள் மூலமாக வளர்ச்சியுற்று வலிமைபெற்றன '.[39]

**பழைய இராணுவ முறை:** இங்கிலாந்து மக்களுக்கு முதன் முதலாகத் தெரிந்திருந்த இராணுவமுறை ஃபியர்ட் எனும் தேசியப் படையேயாம். டென்மார்க்கைச் சேர்ந்த கான்யூட் எனும் வெற்றிவீரர், தமது மெய்காப்பாளர் படையில் நிரந்தரப் படையின் தோற்றத்தைப் புகுத்தினர்; தன்னைச் சூழ்ந்திருந்த மெய்காப்பாளர் படையில் பல்வேறு நாடுகளிலிருந்து கூலிப்படை வீரர்களையும் சேர்த்திருந்தார். ஹஸ் கார்ல்ஸ் என அழைக்கப்பட்ட இவ்வீரர்களின் எண்ணிக்கை மூன்றிலிருந்து ஆறுயிரம்வரை இருந்ததாகப் பலவாறு கணக்கிடப்பட்டுள்ளது. மான்யமுறைப்படி, குடியானவர்கள் ஒரு குறிப்பிட்ட கால அளவிற்கு இராணுவ சேவை செய்யக் கட்டுப் படுத்தப்பட்டிருந்தனர். அத்துடன் பொதுவாக அவர்களை அடக்கியாள்வதென்பதும் கடினமாயிருந்தது. அதன் காரணமாக வெற்றிச் சீலரான வில்லியமும், அவருக்குப்பின் ஆட்சி புரிந்த நார்மானிய, ஆஞ்சவின் மன்னர்களும் கூலிப்படைகளை அமர்த்திக்கொள்ளவேண்டியதாயிற்று. எனினும், நாட்டினரால் வெறுக்கப்பட்ட இப் படையினரை விரைவிலேயே கைவிடும்படி நேர்ந்தது. அக்காலம் முழுவதிலும், ஒரு கால அளவிற்கு மான்யப் படையினராலும் கூலிப் படையினராலும் வழக்கிலிருந்து விலகியிருந்த பண்டைய தேசியப் பாதுகாப்புப் படை பிழைத்திருந்து நாட்டின் பாதுகாப்பிற்கு ஓரிரு சமயங்களில் நல்ல தொண்டு செய்துவந்தது. இதற்கு எடுத்துக்காட்டாக, 1138-ல் நிகழ்ந்த ஸ்டாண்டர்ட் சண்டையையும், 1174-ல் நடந்த ஆல்ன்விக் சண்டையையும், இப்படையினது முயற்சியால் பெற்ற வெற்றிகளையும் கூறலாம். 1159-ல் நடந்த டுலூஸ் போரின்பொழுது கேடய வரி வழக்கத்தில் வந்தது. நேரிடையாகப் பணிபுரிவதற்குப் பதிலாக விதிக்கப்பட்ட இந்த வரி மான்யமுறைப்படி ஆள்திரட்டப்படுவதைக் குறைத்தது. இந்த வரிப்பணத்தைக்கொண்டு வெளிநாட்டுப் போர்களுக்காகக் கூலிப்படைகளை அமர்த்திக்கொள்ளுவதற்கு இரண்டாம் ஹென்றியினல் முடிந்தபொழுதும், இக் கூலிப்படைகள்மீது ஆங்கிலேயருக்கு ஏற்பட்டிருந்த வெறுப்புணர்ச்சி, அப் படைகளை உள்நாட்டைக் காப்பதற்காக உபயோகிப்பதற்குப் பெருந் தடையாயிருந்தது. அத்துடன் மான்யப் படையும் மான்யப் பிரபுக்களின் ஆதிக்கத்தின்கீழ் இருந்துவந்ததுடன் போதுமானதாயுமில்லை. மான்யப் பிரபுக்களின் அதிகாரச் செருக்கை அடக்குவதில் இரண்டாம் ஹென்றி முனைந்திருந்தார்.

**ஆயுத அஸ்ஸைஸ்.** இச் சூழ்நிலையில், மன்னர் பண்டைய வழக்கிலிருந்த தேசியப் படைக்குப் புத்துயிர் ஊட்டுவதற்கு முடிவு செய்தார். 1181-ல் வெளியிடப்பெற்ற ஆயுத அஸ்ஸைஸால் படையிலிருந்த ஒவ்வொரு குடியானவனும், இரும்புக் கவச உடை, இரும்புத் தலைப்பாகை, கேடயம், நீண்ட ஈட்டி முதலியவைகளைத் தனியுரிமை நிலங்களுக்கு விதிக்கப்பட்ட நைட் வீரர்களுக்காக எப்பொழுதும் தயாராக வைத்துக் கொண்டிருக்க வெண்டுமென்பதுடன்,[40] சொத்துகள் வைத்திருப்போரோ அல்லது அதன்பேரில் 16 மார்க்குகள் வாடகை பெறக்கூடிய தனியுரிமையுடையவரோ ஒவ்வொருவரும் அதே போன்று போர்க்கருவிகளைக் கொண்டிருத்தல் வேண்டுமென உத்தரவிடப்பட்டது. பத்து மார்க்குகள் மதிப்புள்ள சொத்தையுடையவர்கள் இரும்பு வளையங்களாலான நீண்ட கவசத்தை வைத்திருக்கவேண்டும்; அத்துடன் இரும்பாலான குல்லாயும், நீண்ட ஈட்டியும் வைத்திருக்கவேண்டும். நகரவாசிகள் எல்லாரும், சுதந்திரமான மக்கள் முழுமையோரும் (சுதந்திரமான எல்லோரும்) மார்புவரை மறைக்கும் பஞ்சு அடைத்த மெத்தைகளாலான கவசங்களையும், இரும்புக் குல்லாவையும், நீண்ட ஈட்டியையும் வைத்துக்கொள்ளவேண்டுமென்றும் உத்தரவிட்டது. இதை வலியுறுத்துவதற்குச் சுற்றி வரும் நீதிபதிகளுக்குக் கட்டளையிடப்பட்டன. இந்த நீதிபதிகள், சட்டப்படி நியமிக்கப்பட்ட நைட்வீரர்கள் அல்லது ஹண்ட்ரட் அல்லது பரோவைச் சேர்ந்த சுதந்திரமான மக்கள் அல்லது சட்டத்திற்குட்பட்ட மக்கள் அடங்கிய ஜூரியைக் கொண்டு சுதந்திரமானவர்களுடைய வாடகை, சொத்து இவைகளின் மதிப்பை உணர்ந்து, அவர்களுடைய பெயர்களையெல்லாம் தனித்தனியான பட்டியல்களில் குறிப்பிடுவதுடன், அவரவர்களுக்கென ஏற்பட்ட போர்க் கருவிகளின் தன்மையையும் குறிப்பிடுதல் வேண்டும். அதன்பின், நீதிமன்றத்தில் எல்லாருடைய முன்னிலையிலும் குறித்தவைகளைப் படிக்கச் செய்து, குறிப்பிட்ட கால அளவிற்குள் குறிப்பிட்ட போர்க் கருவிகளைத் தாங்களாகவே தயாரித்துக்கொள்ளுவதென்றும், மன்னரிடத்தில் உண்மையான விசுவாசம் உள்ளவர்களாக இருப்பதென்றும் உறுதிமொழி கூறுமாறும், செய்யுமாறும் நீதிபதிகள் கோரப்பட்டனர்.[41]

**பதின்மூன்றுவது நூற்றுண்டில் விளைந்த முன்னேற்றங்கள் :** மிகப் பழமையாக வழிவழியாக வந்ததும், மிகவும் நவீனமான படைமான்ய முறையின்கீழ் அமைந்ததுமான இரண்டு இராணுவமுறைகளும் மோதலின்றிச் சிறிது காலம் நீடித்

திருந்தன. எனினும், மூன்றும் ஹென்றி, முதலாம் எட்வர்டின் ஆட்சியில் நாம் காணவிருக்கும் தேசியப் பொதுப் போர்க் கருவிகளின் தொகுப்பை நோக்கி இரண்டும் ஒன்றுசேர்ந்து செல்லுவனவாயிருந்தன.

1205-ல் ஜான் மன்னரால் விடுக்கப்பட்ட ஆணைப்படி இங்கிலாந்தில் ஒன்பது நைட் வீரர்கள் சேர்ந்த ஒவ்வொரு பகுதியும் பத்தாவதாக ஒரு வீரரை, நாட்டின் பாதுகாப்பிற் காகக் குதிரைகள், போர்க்கருவிகளுடன் தயாரித்து, அவருடைய காப்பிற்காக நாளொன்றுக்கு இரண்டு ஷில்லிங் வீதம் பணம் உதவிசெய்ய வேண்டியதென்றும் கட்டளை பிறப்பிக்கப் பட்டது.[42] ஈஸ்டர் விடுமுறைக்குப்பின், நைட்வீரர்களுள் பத்திலொரு பங்கான இவர்கள் லண்டனுக்கு வந்து, எங்குச் செல்லவேண்டுமென்று உத்தரவிடப்படுகிறுர்களோ அங்குச் செல்லத் தயாராயிருப்பதுடன், நாட்டைப் பாதுகாக்கத் தேவைப்படும்வரை மன்னருடைய பணியிலிருப்பதற்கும் தயாராக இருக்கவேண்டும். இதுவரை, இது இராணுவத்தைச் சார்ந்த மக்களை மாத்திரம் பற்றியதாயிருந்தது. ஆனால், தொடர்ந்து வருபவற்றிலிருந்து தேசியப் பாதுகாப்புப் படையுடன் கொண்டிருந்த தொடர்பும் தென்படுவதாயுள்ளது. வெளிநாட்டுப் படையெடுப்பு நேரிடுங்கால், 'எதிரியைத் தாக்க, படையுடனும் போர்க்கருவிகளுடனும், பகைவர்கள் வருகிறுர்களெனும் முதலாவது வதந்தியைக் கேள்வியுற்றதுமே எவ்விதமான தாமதமும் மன்னிப்புக் கோருதலுமின்றி எல்லாரும் ஒன்றுசேர்ந்து விரைந்து செல்லவேண்டும்' என்றும், அசட்டையாயிருந்ததற்குத் தண்டனையாக விதிக்கப்படுவதை உணரவேண்டும் என்றும் இருந்தது. நைட்வீரர் அல்லது நிலச் சொந்தக்காரராயிருந்தால் (படையில் சேராமலிருப்பதற்கு ஊனமாயிருத்தல் எனும் காரணம் தவிர) அவராலும் வாரிசுகளாலும் உரிமை பாராட்டாதவாறு நிலங்களைப் பறிமுதல் செய்தலும்; நிலமற்ற நைட்வீரர்கள் அல்லது மற்றவர்களுக்கு அவர்களுக்கும் அவர்களது வாரிசுகளுக்கும் எக்காலத்தும் நீங்கப்பெருத அடிமை வாழ்வும், அத்துடன் தலா நான்கு பென்சு வீதம் ஆண்டுதோறும் தலைவரி செலுத்தும் கடமையும் பெறுவர் எனவும் விதிக்கப்பட்டது.

அடுத்த ஆட்சியில், நாட்டின் பாதுகாப்பிற்காக இரண்டு இராணுவப்படைகளும் ஒன்ருகச் சேர்க்கப்பட்டன. 1217-ல் மூன்றும் ஹென்றி மன்னர் இளம்பிராயத்தினராயிருந்த பொழுதும், லிங்கன் போருக்குப்பின் ஃபிரான்சு மன்னரான லூயி இங்கிலாந்தில் தங்கியிருந்தபொழுதும் வெளியிடப்பட்ட

ஆணை, பெர்க்ஷயரிலுள்ள ஷெரீஃபை, நாட்டிலுள்ள படைகள் முழுவதையும் திரட்டிக்கொண்டு வருமாறு பணித்தது. இதில் படைமான்ய முறைப்படி அமைந்த படைகளும் ஆயுத அஸ்ஸைஸ் சட்டப்படி[43] திருத்தியமைக்கப்பட்ட பழமையான தல இராணுவமும் சேர்ந்ததாகும். 1231-ல் இராணுவச் சேவைசெய்யும் மக்கள் விஷயத்தில் ஏற்கெனவே ஒத்துக் கொண்ட திட்டப்படியான சலுகை அதாவது, நேரிடையாக ஊழியஞ்செய்வதில் ஒரு பகுதியை, மற்றவர்களுக்குத் தளவாடங்கள் அளிப்பதற்காக உதவித்தொகையாகக் கொடுக்கலாம் எனும் நிபந்தனையின்பேரில் விலக்கு அளிக்கப்படுவது, போருக்கு ஆயத்தமாயிருக்க உறுதி பூண்டிருந்தோருக்கும் அளிக்கப்பட்டது.[44]

**பேரொலி அல்லது கூக்குரலிடுவது:** பண்டைய நாட்டுப் படையான ஃபியர்டு வளர்ச்சியுற்றதுடன்கூடப் பண்டைய காவல்துறை நிறுவனமும் வளர்ச்சியடைந்துகொண்டிருந்தது. பிறருக்காக உறுதிமொழி எடுத்துக்கொள்ளும் முறை மேலும் கண்டிப்பாக வற்புறுத்தப்பட்டது. வெற்றிவீரரான வில்லியம் மன்னராலும், இரண்டாவது ஹென்றியின்கீழ்[45] கிளாரண்டன் அஸ்ஸைஸாலும் நீதிக்கட்டளை மூலம், இது வற்புறுத்தப் பட்டது. 1195-ல் முதலாம் ரிச்சர்டின் ஜஸ்டீஷியரும் அதிமேற்றிராணியாருமான ஹ்யூபர்ட் வால்டரால் வெளியிடப் பட்ட அரசாணையால், 'கூக்குரலிடுவது' வற்புறுத்தப்பட்டது. அமைதியைக் காப்பதற்காக உறுதிமொழி பெறும் பணி நைட் வீரர்களிடம் ஒப்படைக்கப்பட்டது. நாட்டுத் தலைவரான மன்னருடைய அமைதியைக் காப்பாற்றுவதற்கென்று பதினைந்து பிராயம் நிரம்பியவர்கள் எல்லாம் உறுதிமொழி எடுத்துக்கொள்ள வேண்டுமெனக் கோரப்பட்டனர். அத்துடன் அவர்கள், சட்ட விலக்குப் பெற்றவர்களாகவோ, கொள்ளையர்களாகவோ, திருடர்களாகவோ இல்லாமலிருக்கவும், அவ்வாறு உள்ளவர்களுக்குத் துணைபுரியாமலும், ஆதரவளிப்பவர்களாகவும், அனுமதிக்கிறவர்களாயும் இல்லாமலிருக்கவும், குற்றம் புரிந்தவர்களை விரட்டிப் பிடிப்பதில் கூக்குரலைத் தொடர்ந்து செல்லுகிறவர்களாகவும், இவ்வாறு பின் தொடர்ந்து செல்லுவதிலிருந்து விலகியவர்களையும், தொடர்ந்து செல்லத் தவறியவர்களையும் துரோகிகளாகக் கருதி அவர்களைக் கைப்பற்றி, நைட்வீரர்களிடம் ஒப்படைப்பதற்கும், இவ்வாறு ஒப்படைத்தலை ஏற்றுக்கொள்ளுவதற்காக நியமிக்கப்பட்டிருந்த நைட்வீரர்கள் ஒப்படைக்கப்பட்டவர்களை ஷெரீஃபிடம் சேர்ப்பதற்கும், ஷெரீஃபினுடைய பாதுகாப்பிலிருந்து மன்னு

ருடைய அல்லது அவருடைய பிரதம நீதிபதியினுடைய உத்தரவின்றி விடுதலை செய்யக்கூடாதென்றும் மேலே குறிப்பிட்ட அரச ஆணை கூறியது.[46]

காவல்: 1233-ல் பழைய காவல் நிறுவனம் பாதுகாப்பிற்குப் போதாதெனத் தோன்றியபொழுது, நாடு முழுவதிலும் எல்லா நகரங்களிலும் காவல்முறையும் சேர்க்கப்பட்டது.[47] 1252லும் 1253லும் ஆயுத அஸ்ஸைஸுடன் சேர்த்து உள்நாட்டின் அமைதியைக் காக்கக் காவல்முறைபற்றி விதிகள் விரிவாக்கப்பெற்று வற்புறுத்தப்பட்டன: (1) அஸென்ஷன் நாளிலிருந்து மைக்கல்மஸ் நாள்வரையிலும் இரவில் சூரியன் மறைவதிலிருந்து சூரியன் எழும்வரை காவல் புரிய வேண்டும்; பெரிய பட்டணங்களில் நகரவாயில்களில் வைக்கப்படும் ஆறு ஆயுதம் தாங்கிய வீரர்களின் கூட்டத்தினராலும், கிராமங்களில் பன்னிருவர் கொண்ட கூட்டத்தினராலும், சிறிய நகரங்களில் ஆறு பேர்களாலும், நான்கு பேர்களுக்குக் குறையாத கூட்டத்தாலும், ஊரில் வாழும் மக்கள் தொகைக்குத் தக்கபடி காவல் புரியவேண்டும். கடந்து செல்ல முயலுகிற எந்த அந்நியரும் பொழுது விடியும்வரை பாதுகாப்பில் வைக்கப்பட வேண்டும்; குற்றம் புரிந்திருப்பதாக ஐயமேற்படுமானால் ஷெரீஃபிடம் ஒப்படைக்கப்பட்டு, பாதுகாப்பில் வைக்கப்பட்டு 'நாட்டின் சட்டப்படி விசாரணைக்குப் பின்' விடுதலை செய்யப்பட வேண்டியது. பகல் நேரத்தில் வந்த அந்நியரும், கிராமத்தில் அறுவடைக் காலந்தவிர மற்ற வேளைகளில் ஓரிரு நாட்களுக்குமேல் தங்கக்கூடாது. அப்படித் தங்க நேரிடுமாயின், விருந்தளிப்பவர் அவருடைய நடத்தைக்கு ஜாமீனாக இருக்கவேண்டியது. நாட்டின் வழியாகச் செல்லும் வியாபாரி, நகர மேயர் அல்லது கிராம பெய்லிஃபின் முன்னதாக அவருடைய பணத்தை எண்ணிக் காட்டியபின் 'எவ்விதமான ஐயமின்றி நாட்டில் திருடர் பயமுள்ள வழிகளிலும் செல்லவும், சந்தேகமான இடங்களில் தங்கவும்' அவர்களிடமிருந்து பாதுகாப்பைப் பெறவேண்டும். இதன்பின் பொருளைக் கொள்ளையரிடம் பறிகொடுத்துவிட்டால், அந்த ஊர் மக்களிடமிருந்து நஷ்டஈட்டைப் பெறலாம்.[48] (2) ஆயுத அஸ்ஸைஸ் புதுப்பிக்கப்பட்டு, பின் திருத்தி யமைக்கப்பட்டது. இதில் 'பெரிய நகரத்தில் வாழும் மக்கள், கிராமத்திலுள்ளவர்கள், சுதந்திரக் குடியானவர்கள், அடிமைகள் மற்றும் எல்லோரும், பதினைந்து வயதிலிருந்து அறுபது வயதிற்குட்பட்டவர்கள், அவர்களுக்குச் சொந்தமான நிலம் அல்லது ஜங்கம சொத்துகளின்படி பிரிக்கப்பட்டு, நிலவரியாகப் பதினைந்து பவுனிலிருந்து சொத்து

வரியாக நாற்பது ஷில்லிங்குகள்' செலுத்துகிறவர்களும் இதன்கீழ்க் கொண்டுவரப்பட்டனர்.[49] (3) இவர்கள் எல் லோரும் அவரவர்கள் தகுதிக்கேற்றவாறு போர்க்கருவிகளை வைத்துக்கொள்ளுவதாக உறுதிமொழி எடுத்துக்கொள்ளச் செய்யப்பட்டு, தேவையானபொழுது கூக்குரலிடுவதில் சேரு மாறும் உத்தரவிடப்பட்டனர். இதற்காக அவர்கள், தல சிவில் அதிகாரிகளின் ஆணையின்கீழ் வைக்கப்பட்டனர். பெரிய நகரங்களில் மேயர்களும், கிராமங்களில் பெய்லிபுஃகளும், சிறிய நகரங்களில் கான்ஸ்டபிளும், ஒவ்வொரு ஹண்ட்ரட் பிரிவில் பிரதம கான்ஸ்டபிள் எல்லாவற்றிற்கும் மேலான அதிகாரியாகவும் நியமிக்கப்பட்டிருந்தனர்.[50]

**வின்செஸ்டர் சட்டம்:** முதலாம் எட்வர்ட் 'ஆங்கிலேய ஜஸ்டீனியன்' எனப் புகழ் பெற்றுள்ளார். 'இவரால் இயற் றப்பட்ட சட்டங்கள் நிறைய இருந்ததால், அடுத்துவந்த மூன்னூறு ஆண்டுகளில் இயற்றப்பட்ட சட்டங்கள் தேவை யான அளவிற்கு இவருடைய சட்டங்களை விரிவடையச் செய் ததேயன்றி' வேறொன்றுமில்லை.[51] புகழ்பெற்ற வின்செஸ்டர் சட்டம்,[52] இப்பொழுது வழக்கொழிந்துபோயிருப்பினும், நவீன சட்டங்களுக்கெல்லாம் அடிப்படையாயிருந்தது. காவல் பற்றியும், அந்நியர்களை வரவேற்றல், பேரொலி எழுப்புதல், ஆயுத அஸ்ஸைஸ் பற்றியும் பல்வேறு விதிகளை விவரித்தும் முழுமையாகவும் இச் சட்டம் செய்தது. எங்குக் கொள்ளை நடந்தாலும், நடந்த ஹண்ட்ரட் முழுமையும் அரசு குற்றம் செய்தவர்களை நீதிவிசாரணைக்குக் கொண்டுவராதவரை நஷ்ட ஈடு செய்வதற்கும் சிறப்பாக வழி செய்தது. தவிர, சந்தை கூடும் பட்டணத்திலிருந்து மற்றொரு சந்தை கூடும் பட்டணத் திற்குச் செல்லும் பெருவழிகள் அகலப்படுத்தப்பட வேண்டும்; அவ்வாறு அகலப்படுத்துவதால், பெருவழியின் இருமருங் கிலும் இருநூறு அடிக்குள் 'தீங்கு விளைவிக்கும் நோக்குடன் மறைந்திருக்க வசதியான பள்ளம், மரம், புதர் போன்றவை களை' அழிக்கவேண்டும் எனவும் விதித்தது.

ஒவ்வொரு கவுன்டியிலுமுள்ளவர்கள் போர்க்கருவிகளைக் கொண்டிருக்க வேண்டும் என்பதுபற்றிய வின்செஸ்டர் சட்டத்தின் ஷரத்துகள் உள்நாட்டில் அமைதியைப் பாது காப்பதையே நோக்கமாகக் கொண்டிருந்தன. கவுன்டியின் அமைதியைப் பாதுகாப்பதில் தலைமை அதிகாரத்தை எப் பொழுதுமுடைய ஷெரீஃப் (கலகத்தை அடக்குவதற்காகப் பதினைந்து வயது நிரம்பியவர்களை உத்திரவிட்டு அழைக்கும்)

முறையாகப் பாதுகாப்பளித்தல் எனும் (போஸி கொமிடேடஸ்) அதிகாரத்தின்படி அழைக்கும் அதிகாரத்தை வற்புறுத்துவதற்குமாக ஷரத்துகள் ஏற்பட்டன. இந்தத் தலப் படைகள், நாட்டைப் பாதுகாப்பதற்காக அன்றும் கிடைக்கக் கூடியனவாயிருந்தன. பதின்மூன்றாவது நூற்றாண்டிலிருந்து பதினாறாவது நூற்றாண்டின் நடுப்பகுதிவரை, ஸ்காட்லாந்து அல்லது ஃபிரான்சு பக்கத்திலிருந்து படையெடுப்புகள் ஏற்படும் எனத் தோன்றியபொழுதெல்லாம், கவுன்டியில் போர்க் கலங்களைத் தாங்கிச் செல்லக்கூடியவர்களை முழுமையாகவோ அல்லது ஒரு பகுதியினரையோ திரட்டிப் பயிற்சி யளித்து, நாட்டைக் காப்பதற்குத் தயாராக வைத்திருக்குமாறு 'படைகளை அணிவகுக்கும் கமிஷனர்களுக்கு' அதிகாரம் அளிப்பது வழக்கமாயிருந்தது.

பழைய கடமையானதும், அவரவர்களுடைய சொத்துக் கேற்ப, தேவையான படைக்கலங்களை வைத்துக்கொள்ளுவது பற்றிப் பிலிப்பு, மேரி இவர்களுடைய சட்டங்களும் வற்புறுத்தின. அத்துடன் போர்க்கலங்களின் மாதிரிகளும் நவீன நாகரீகத்திற்கேற்றாற்போல் மாறிக்கொண்டிருந்தன.[53] ஆனால், முதலாவது ஜேம்ஸ் காலத்தில் இந்த ஷரத்துகள் நீக்கப் பெற்றன.[54] 1638-ல் முதலாம் சார்லஸ் சட்ட விரோதமான ஆர்டர் இன் கவுன்சில் எனும் உத்தரவை வெளியிட்டு, அதன்படி, ஆண்டுக்கு இருநூறு பவுனுக்கும் அதிகமாக நில மதிப்பைக் கொண்டிருந்த ஒவ்வொரு சுதந்திரமானவரையும், ஒரு குதிரையுடன் கூடிய வீரனை அளிக்கும்படி உத்தரவிட்டார். கவுன்டியின் உதவிப் பிரபுவால் அழைக்கப்பட்டபொழுதெல்லாம் இவ்வாறு வீரனை அனுப்பிவைக்க வேண்டும் எனவும் ஏற்பட்டது.

குடிப் படை: தலப்படைகள், படைகள் எனப் பெயரிட்டழைக்கப்படுவது வழக்கமாயிற்று. இப் படைகளுக்குத் தலைமை அதிகாரத்தைக்குறித்து சார்லசிற்கும் அவரது பாராளுமன்றத்திற்கு மிடையே பிளவு ஏற்படக் காரணமாயிற்று. பாராளுமன்றம் உத்தரவுகளை இயற்றி (பிப்ரவரி 16, மார்ச்சு 5, 1642) 'கலகங்கள், திடீர் எழுச்சிகள், படையெடுப்புகள்' போன்ற எல்லாவற்றையும் அடக்குவதற்கான அதிகாரத்துடன்கூடிய ஐம்பத்தைந்து படை அணிவகுக்கும் கமிஷனர்களை நியமித்ததன் வாயிலாக மன்னருடைய படைத் துணைத் தலைவர்களைப் பதவி விலக்கம் செய்தது.[55] இந் நடவடிக்கை, நாட்டின் அமைதி, பாதுகாப்பு முதலியவை

களுக்கு அச்சமயத்தில் மிக்க தேவையானதாயிருந்தபோதிலும், முற்றிலும் சட்டத்திற்குப் புறம்பானது. மீட்சிக்குப் பிறகு, பாராளுமன்றத்தால் இயற்றப்பட்ட சட்டம் அறிவித்ததாவது: 'படையின், மிக்குயர் அதிகாரம், தலைமை, அமைப்பின் தன்மையும், நீர், நிலம், கோட்டைகள் வலிமை பொருந்திய இடங்கள் முதலியவைகளின் படைகளும், இங்கிலாந்து நாட்டுச் சட்டப்படி முன்பு இருந்ததைப் போலவே, இங்கிலாந்தில் ஆட்சிபுரியும் மன்னர்கள், இராணிகள், இவர்களுடையதென்பதில் ஐயமில்லை' என்றும், பாராளுமன்றத்தின் சபைகளில் எதுவும் இவ்வதிகாரத்தை மேற்கொள்ள உரிமை பாராட்ட முடியாதென்றும், சட்டப்படி மன்னர்மீது, தாக்குதற்காகவும் அல்லது பாதுகாப்பிற்காகவும் போர் தொடுக்க முடியாதென்றும் கூறிற்று.[56] மன்னருடைய துணைத் தலைவர்களால், கவுன்டிகளில் படையைத் திரட்டவும், படைக்கலங்களை அணிவிக்கவும், அணிவகுக்கவும், இதனால் ஏற்படும் செலவைச் சொத்துமதிப்பின் விகிதப்படி நிலச்சுவான்தாரர்களிடமிருந்து பெறுவதற்கும் வழிகாணும்வரையில் மற்றொரு சட்டம் இயற்றப்பட்டது.[57] ஆனால், நிலையான படை[58] வளர்ச்சியுற்றதைப்போல் சேர்ந்து தலப்படை நெடுநாட்களாக 1757-ல் புதுப்பிக்கப்பட்டுத் திருத்தி அமைக்கப்படும்வரை, வளர்ச்சியின்றித் தளர்ச்சியுற்றிருந்தது. இவ்வாறு நாட்டுப்படையாகத் திருத்தியமைக்கப்படுவதற்கு ஃபிரஞ்சுப் படை திரண்டதாக எழுந்த வதந்தியின் விளைவாக உண்டான அச்சமே காரணமாகும்.[59]

குடிப்படையில் சேருகிறவர்களை, குறிப்பிடப்பட்ட ஆண்டுகள் பணிபுரிவதற்காக வாக்களிப்புமூலம் தேர்ந்தெடுத்தனர். வெளிநாட்டுப் படையெடுப்பு அல்லது கலகம் ஏற்படாதவரை சொந்த நாட்டைவிட்டு வெளிச்செல்ல வற்புறுத்தக்கூடாது. 1829-ல் தொடங்கிய இப் பழக்கம் தொடர்ந்து காணப்பட்டது. தேர்தல் முறையால் ஆள் திரட்டுவதை, மக்கள் தாங்களாகவே படையில் சேர முன்வந்ததிலிருந்து கைவிடுமாறு ஆண்டுதோறும் சட்டம் இயற்றப்பட்டது.[60]

**அமைதியைப் பாதுகாத்தல் :** உறுதிமொழிகளைப்[61] பெறுவதற்காக நைட் வீரர்களை நியமித்தல், பிற்காலத்தில் அமைதியைக் காக்கும் நீதிபதிகள் எனவழைக்கப்பட்ட அமைதிப் பாதுகாப்பாளரின் பதவியின் தோற்றத்திற்குக் காரணமாயிருந்தவற்றை ஊகித்தறியலாம். 1252, 1253, 1264லும்[62] அமைதிப் பாதுகாப்பாளர்கள் நியமிக்கப்பட்டனர். 1285-லிருந்து வின்

செஸ்டர் சட்டம் அமல் செய்யப்பட்டதுடன், சேர்த்துக் கொள்ளப்பட்டனர். பின்னர் கவுன்டியின் நிலச்சுவான் தாரர்களால், எப்பொழுதாகிலும், அவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டதாகத் தோன்றுகிறது. இறுதியில், அப் பதவிக்கு அரச ருடைய சிறப்பு ஆணைமூலம் அவர்கள் நியமிக்கப்பட்டனர். அரச குற்றம் புரிந்தவர்கள்மீதும், கெட்ட நடத்தை புரிந்தவர் கள்மீதும் குற்றஞ்சாட்டி, அரசருடைய நீதிபதிகள் விசாரணை செய்யும்வரை பாதுகாப்பில் வைத்திருப்பது அவர்கள் நிலை யான கடமையாகும். 1329, 1332, 1338-லும், 1350-லிருந்து 1364 வரையிலும், அவர்கள்வசமிருந்த கைதிகளை விசாரணை செய்ய அவர்களுக்கு அதிகாரம் வழங்கப்பட்டிருந்தது. 1368-ல் இது நிலையாக அமைந்துவிட்டது. படையை மேற்பார்வை யிடுவது எனும் முந்திய கடமை, படையை அணிவகுக்கும் கமிஷனர்களிடம் மாற்றப்பட்டது. ஆனல், கருங்கொள்ளை நோய்க்குப் பின்னர் புதிய தொழிலாளி, விலைவாசியைக் கட்டுப் படுத்தும் சட்டங்களை அமல் செய்துவந்தனர். இவர்கள்முன் தல நீதிமன்றங்கள் செயலிழந்துபோயின; ஷெரீஃப்பும் இவர்க ளுடைய பணியாளரானர். பாராளுமன்றமும் (காமன்ஸ் சபையில் அமைதியைக் காக்கும் நீதிபதிகளில் பலர் அமர்ந் திருந்த காரணம்பற்றி) புதியதும் முக்கியமானதுமான அலுவல்களை அடிக்கடி அவர்களிடம் நம்பிக்கையுடன் ஒப்பு வித்தது.[63]

**கவுன்டியின் சவ விசாரணை புரிவோன்:** 1194-ல் முதலாம் ரிச்சர்டின் காலத்தில் கவுன்டியின் சவ விசாரணை செய்யும் அதிகாரியின் பதவி ஏற்படுத்தப்பட்டிருந்தது.[64] இந்தப் பதவி, பொதுச் சட்டத்தாலும், இயற்றப்பட்ட சட்டங்களாலும் விதி களுக்குட்பட்டு வரையறை செய்யப்பட்டிருந்தது. காரனர் எனும் பெயர், மன்னரால் நியமிக்கப்பட்டவர் எனும் பொருள் படத் தோன்றினுலும், இவர்கள் எக்காலத்தும் தேர்ந் தெடுக்கப்பட்டவர்களாகவே இருந்தனர். 1888 வரை கவுன்டி மன்றத்தில், 'கவுன்டிகளின் பொதுமக்கள்' எனவழைக்கப் பட்ட சுதந்திரமான குடியானவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு வந்தனர்; இப்பொழுது கவுன்டி மன்றத்தால் நியமிக்கப் படுகிருர்கள்.[65]

## அடிக்குறிப்பு

1. ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', i. 306; க்னீஸ்ட், 'ஆங்கிலேய அரசியலமைப்பு', அதிகாரம் 16, i. 246ஐக் காண்க.

2. ஸ்கக்காரியோவைப் பற்றிய சம்பாஷணை (Dialogue) i, c. 4. [வாசகம் முழுமையாக ஸ்டப்ஸின் முதல், எட்டாவது பதிப்புகளில் உள்ளது. பொறுக்குச் சாசனங்கள்; ஒன்பதாவது பதிப்பில் சில திரட்டுகளே உள்ளன. ஏ. ஹ்யூஸ், ஸி. ஜே. க்ரம்ப், ஸி. ஜான்ஸன் (ஆக்ஸ்ஃபர்ட், 1902) முதலியோரின் திறனாய்வுப் பதிப்பில் பயனுள்ள குறிப்புகள் உள்ளன. இப்பொழுது ஸி. ஜான்ஸனின் மொழிபெயர்ப்புடன் மறு பிரசுரம் செய்யப்பட்டுள்ளது. ஆர். எல். பூல், 'பன்னிரண்டாம் நூற்றாண்டில் கருவூலம்' எனும் நூல் (ஆக்ஸ்ஃபர்ட், 1912) பயனுள்ள உரையாயுள்ளது.]

3. 'பாட்டில் மடாலயத் தலைவரும் பாலியனும்' (பெல்லோ மடாலயத்தில் காலவழிக் குறிப்பேடுகள், 106: பீஜ்லோ, ஆங்கிலேய நார்மானியரது விருப்பங்கள், 175). இவ்வழக்கு, பன்னிரண்டாம் நூற்றாண்டில் நிலமானியமுறை, கருவூல நிதிவழங்கும் துறை, சமூகம்பற்றிய அம்சங்களை நன்கறிந்துகொள்வதற்கு உதவுவதால், சுவையுடன்கூடியது.

4. காண்டர்பரி அதிமேற்றிராணியாரும் செயின்ட் எட்மண்ட்ஸ் மடாலயத் தலைவரும், சுமார் 1186. க்ரானிகன் ஜோஸலின் டி பிராகலொண்டா, பக். 37 (காம்டன் கழகம்); பீஜ்லோ, 'ஆங்கிலேய-நார்மானியரது விருப்பங்கள்', 238.

5. மடோக்ஸ், 'கருவூல நிதிமன்ற வரலாறு', i. 191; 'ஸ்கக்காரியோவைப் பற்றிய சம்பாஷணை', i, c. 4; பால்க்ரேவ், 'ஆங்கிலேயப் பொதுநலக் குடியரசு', i. 292; முதலாம் எட்வர்டைப்பற்றிய செய்தி ஆண்டு நூல் 3 எட்வர்ட் II (செல்டன் கழகம்) 1967-ல் காணப்படுகிறது. முற்காலங்களில் மன்னருடைய பட்டத்தரசியும் சில சமயங்களில் நீதிமன்றத்தில் தலைமை தாங்கினர். ஜெயசீலரான வில்லியம் ஊரிலில்லாத சமயங்களில் அரசியார் மாடில்டா, கவுன்டி நீதிமன்றங்களில் தாமே நேரில் வழக்குகளை விசாரணை செய்தார். (டேம்ஸ்டே, ஹெமிங், கார்டுலெரி, பக்கம் 512, 'உடன் கூட்டத்தாரின் நான்காவது கிராமத்தில் அரசியார் மாடில்டாவின் முன்னிலையில்'). முதலாம் ஹென்றியின் மனைவியான 'நல்லரசியான மாட்', அபிங்

டன் மடத்துத் தலைவருக்கும் பெரிடன் மக்களுக்குமிடையே கருவூல நீதிமன்றத்தில் நடைபெற்ற வழக்கு விசாரணையில் நேரில் ஆஜராயிருந்தார். [அபிங்டன் மடத்துக் காலவழிச் செய்திகள், ii, 116. (ரோல்ஸ் ஸீரீஸ்). பீஜ்லோ, 'ஆங்கிலேய-நார்மானியரது விருப்பங்கள்', பக். 99.] மூன்றுவது ஹென்றியின் அரசியாரும் வழக்குகளை நேர்விசாரணை செய்தார் (ஸ்பென்ஸ், 'சரிசமன் விசாரணை', 101 குறிப்பு).

6. ஸ்டோவ், 'காலவழிச் செய்தி', 41 (1631). ஃபாஸ், 'நீதிபதிகள்', iv, 215.

7. கோக்ஸ், நான்காம் சட்டம், 73.

8. ப்ளாக்ஸ்டன், iii, 41.

9. மேலே கூறப்பட்டது பக். 51, 71. ஸெயில்ஸ் நூலில் முழுமையான திறனுய்வு காணப்படுகிறது, 'மன்னர் நீதிமன்ற வழக்குகள்' (ஸெல்டன் கழகம்), 1, 26 முதல். ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', முகவுரை 17-8ஐயும் 'அரசியலமைப்பு வரலாறு', i, 374யும் காண்க. நார்மானியரது செனஸ்சல் பதவி மாதிரியாகக் கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இப் பதவியினுடைய நீதி விசாரணை செய்வதன் வளர்ச்சிபற்றி, ட்ரிஹார்ன், 'சீர்திருத்தஞ் செய்யப்பட்ட மானியப் பிரபுக்களின் வழக்குகள்', 10–14ஐக் காண்க.

10. 1232-ல் ஹ்யூபர்ட் டி பர்க்கின் வீழ்ச்சியுடன் மிக்குயர் ஜஸ்டீஷியரின் பதவியும் முடிவுற்றது. ஸ்டப்ஸ், 'அரசியல் அமைப்பு வரலாறு', ii, 280ஐக் காண்க. 'மிக்குயர் ஜஸ்டீஷியரின் பதவி, ஹ்யூபர்ட் டி பர்க்கின் வீழ்ச்சியுடன் அதன் முக்கியத் தன்மையை இழந்ததுடன், நடைமுறை வழக்கிலிருந்தும் மறைந்துபோயிற்றெனவும் கூறலாம்'.

11. டி. எஃப். டவுட், 'ஆட்சிமுறை வரலாறு', i, 127 முதல்; இதுபற்றிப் புதிய ஐயப்பாடுகள் எஃப். ஈ. ஹார்மரால் தோற்றுவிக்கப்பட்டுள்ளன, ஜான் ரைலண்ட்ஸ் நூல் நிலைய வெளியீடுகள், 22, பக். 339. ஆங்கிலோ-சாக்சானியர் காலத்தில் சான்ஸரி (கருவூல நீதிமன்றம்) இருந்ததாவெனும் பிரச்சினைபற்றி ஆர். ஸி. வான் கேனிஜம் எழுதியுள்ள நூலில் 'இங்கிலாந்தில் அரசு கட்டளைகள்' (செல்டன் கழகம்) பக்கம் 135 முதல் காண்க.

12. பால்க்ரேவ், 'ஆங்கிலேயக் குடியரசு', i, 177. சான்ஸரி எனும் பெயர் சான்ஸலி எனப்பட்ட திரையின் பின்னல்

அரண்மனையைச் சார்ந்த அலுவல்கள் நடைபெற்றுவந்ததால் ஏற்பட்டிருக்கக்கூடுமெனத் தெரிகிறது. ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', i. 380–1.

13. ஆடம்ஸ், 'ஆங்கிலேய அரசியலமைப்பின் தோற்றம்', பக். 375ஐக் காண்க. டவுட், 'ஆட்சிமுறை வரலாறு,' i, 10-ல் 'குரியா ரெஜி'ஸின் வரலாற்றில் காணப்பட்ட மானிய முறையின் மூலத்தைப் போன்று முக்கியத்துவம் வாய்ந்தாய் அரண்மனை அலுவலகமுமிருந்ததென எச்சரிக்கை விடுத்துள்ளார்.

14. ஆடம்ஸ், முன்கூறப்பட்டது, பக்கம் 57 முதல்; ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலேயரது சட்ட வரலாறு', i, 32 முதல்.

15. 'குரியாவின் உறுப்பினர்கள், நீதிபதிகள் என அழைக்கப்பட்டனர், தலைவர் தலைமை நீதிபதி (காபிடலிஸ் ஜஸ்டீஷியாரஸ்) எனப்பட்டார். எனினும், இவர்கள் கருவூல மன்றத்தின் மான்யப் பிரபுக்கள் (பாரன்ஸரி) (கருவூலம்) என அழைக்கப்பட்டனர். எக்செக்கர் எனும் பெயர், கணக்குகளை ஒத்துக்கொள்ளும் மேசையின்மீது விரிக்கப்பட்டிருந்த கட்டம் போட்ட துணியின் பெயரால் ஏற்பட்டது. பணம் பெற்றுக்கொள்ளுகிறவரான கருவூலத் தலைவர், பணஞ் செலுத்துகிறவர்களான ஷெரீஃப்புகளிடையே செஸ் விளையாடுவதைப் போன்று பார்வையாளர்களுக்குத் தோன்றியதால் இப் பெயர் ஏற்பட்டிருக்கக்கூடும்'—ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', i, 407; ஸ்கக்காரியோ பற்றிய வாதங்கள், i, 1. இச் செய்தி பற்றி முழுமையாக அறிவதற்கு பூல், 'பன்னிரண்டாம் நூற்றாண்டில் கருவூலமன்றம்' எனும் நூலைக் காண்க.

16. இவ் வரி கடைசியாகச் செலுத்தப்பட்டது இரண்டாம் ஹென்றியின் ஆட்சியின் எட்டாம் ஆண்டிலாகும். எனினும், 'காருகேஜ்' அல்லது நிலவரி எனும் மாற்றுப் பெயரில் இவ் வரிவிதிப்பு முதலாம் ரிச்சர்டால் மீண்டும் கொண்டுவரப்பட்டது.

17. 14 எட்வர்டு 3, சட். 2, c. 1 (1340). ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', ii, 402.

18. மேலே குறிப்பிடப்பட்டது, பக்கம் 58. நைட் வீரர்களின் கட்டணம் செலுத்தப்படுவதற்கான நிலத்தின் அளவோ அல்லது மதிப்போ ஒரே மாதிரியாயில்லை. வழக்கமான

நைட்வீரர் கட்டணம் செலுத்தப்படுவதற்கு நிர்ணயிக்கப்பட்ட நிலத்தின் மதிப்பு இருபது பவுணுயிருந்தது. லௌகிகம் முதலாம் எட்வர்டு (பாராளுமன்ற ஆணைகள் i, 214).

19. மேலே கூறப்பட்டதிலேயே, பக்கம் 62.

20. பிற்காலங்களில், கவுன்டிகளிலிருந்து பதினைந்திலொன்றும், பரோக்களிலிருந்து பத்திலொன்றும் மான்யமாக அளிப்பது வழக்கமாயிற்று. மூன்றும் எட்வர்டின் எட்டாமாண்டிலிருந்து, 'பதினைந்திலொன்றும் பத்திலொன்றும்', 1334ஆம் ஆண்டில் வரி மதிப்பீடு செய்த பிரகாரம் ஒரு குறிப்பிட்ட தொகையைக் குறித்தது. அவ்வாறு கணக்கிடப்பட்ட தொகை 38,000 பவுனிலிருந்து 39,000 பவுன்வரையிலிருந்தது. டோவல், 'வரிவிதிப்பு வரலாறு,' i, 96–7; ராம்ஸே, 'இங்கிலாந்து மன்னர்களின் வருவாய்,' ii, 285, பதினைந்திலொன்றும் பத்திலொன்றுமான மொத்தத் தொகையை 36,000 பவுனிலிருந்து 38.000 பவுன்வரை சற்றுக் குறைவாக மதிப்பிட்டுள்ளார். இவ் வரிவிதிப்புப் பற்றிய நடைமுறை ஜே. எஃப். வில்லார்டு எழுதியுள்ள 'சொந்தச் சொத்தின்மீது விதிக்கப்படும் பாராளுமன்ற வரிகளும்' (1290-1334) எனும் நூலில் முழுமையாக விவரிக்கப்பட்டுள்ளது. 'பதினைந்தில் ஒன்றைப்' போலவே, பதினும் நூற்றுண்டில் 'உதவித் தொகை' சொத்து வரியாக நிலத்தின் மதிப்பில் பவுனுக்கு நான்கு ஷில்லிங் வீதமும் பண்டங்களின் மதிப்பில் பவுனுக்கு இரண்டு ஷில்லிங் எட்டு பென்சு எனவும் விதிப்பதென்பது குறிப்பிட்ட தொகையாயிற்று. ஓர் உதவித் தொகை, 80,000 பவுணுகும்.

21. ரோடுலி விட்டரேரம் க்ளாஸாரம், ii, பக்கம் 69.

22. அரசு கடிதங்கள் (மூன்றும் ஹென்றி), ஷேர்லி பதிப்பித்தது (ரோல்ஸ் தொகுப்பு), i, 456.

23. பாராளுமன்ற ஆணைகள், i, 214; 'பொறுக்குச் சாசனங்கள்', 448.

24. ஏ. எல். பூல், 'சமுதாயக் கடமைகள்', 53 முதல் (replevin) உள்ள ஜூரி, பட்டாக் கத்திகளை இடையில் கட்டியுள்ள ஆறு நைட் வீரர்களைக் கொண்டதாயிருக்க வேண்டும் என விதித்தது: டி பான்கோ, ரோல் 40/189, m. 335d (காலில்); 1311.

25. ரைமர் (ஆவணக் கமிஷன்), i, 517.

26. நாட்டன் சட்டங்கள், i, 229. காலம் சுமார் 1278 ஆகும்: எச். ஜி. ரிச்சர்ட்ஸன், 'சட்டக் காலாண்டு மீள்பார்வை', i, 221, குறிப்பு, 17 (அவரது முந்தையச் சட்டங்கள், 51, குறிப்பு, 17). நைட்வீரரின் பொருளாதார வரையறைகள் பற்றி என். டென்ஹாம்-யங் என்பாரின் 'தொகுப்புக் கட்டுரைகள்', 64-ஐக் காண்க.

27. 12 கார். 2, விதி 24 (1660).

28. பெனிடிக்டஸ் அப்பாஸ், i, 207. 'பொறுக்குச் சாசனங்கள்', 155.

29. பைக், 'பிரபுக்கள் சபை வரலாறு', 31 முதல்; ஆடம்ஸ், 'இங்கிலாந்து அரசியலமைப்பின் தோற்றம்', 136 முதல். விவரங்களின் சில குறிப்புகள் பற்றிய சில ஒதுக்குதல் பற்றி செயில்ஸ் கருத்துரை வழங்கியுள்ளார், 'மன்னர் நீதி மன்றத்தின் சில பொறுக்கு வழக்குகள்' (செல்டன் கழகம்), i, பக்கம் 20 முதல்; iv, பக்கம் 27 முதல்.

30. மகா சாசனப் பத்திரம், விதி 17, மேலே கூறப்பட்டது, பக்கம் 73.

31. பிரிவினையின் நடைமுறை மெதுவாயும் தெளிவற்று மிருந்தது. 'கோரம் ரீகே' எனும் நீதிமன்றம், மூன்றும் ஹென்றி இளம்பிராயத்தவரா யிருந்தகாலத்தில், ஆலோசனை மன்றத்திலிருந்து பிரித்துக் காணமுடியாததாய் நெடுநாள் வரை இருந்தது. பால்டுவின், 'மன்னர் ஆலோசனை மன்றம்', அதிகாரம் 3-ஐக் காண்க; ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலச் சட்ட வரலாறு', i. 194–212; மெயிட்லண்டு, 'அரசியலமைப்பு வரலாறு', 133–5. மன்னர் நீதிமன்றத்தின் அதிகார எல்லை குறித்து ஹோல்ட்ஸ்வொர்த், குறிப்பிட்டதிலேயே 212-ஐக் காண்க. இந்த நீதி மன்றங்களின் பிற்காலத்திய வரலாறு அரசியலமைப்பு வரலாற்றைக் காட்டிலும் சட்ட வரலாற்றைச் சார்ந்ததாகும்.

32. 1873-ல் நீதித்துறை (Judicature) சட்டம் நிறைவேற்றப் படும்வரை நான்கு தனித்தனியான குழுக்கள் எல்லாம் கருவூலமன்ற நீதிமன்றங்கள் எனவழைக்கப்பட்டு வந்தன.

(1) வாதமிடும் மன்றம். இதில் மிகப் பெரியதும் பிரச்சினைகளைக் கொண்டதுமான வழக்குகளின் கார

ணங்களை, இக் காரணங்களின் மீது இதன்கீழ் செயல்பட்ட நீதிமன்றம் தீர்ப்பு அளிக்கும் வரை, ஒத்திப்போட வாய்ப்பளித்தது (கால்வினின் வழக்கில் நடந்ததைப் போல், 2 நாட்டுப் பெருங்குற்றம், 559). அச்சமயங்களில் மிக்குயர் நீதிமன்றங்களான மூன்றிலிருந்தும் நீதிபதிகள் எல்லோரும் இதில் இருப்பார்கள். சிலசமயங்களில் சான்ஸலர் பிரபுவும் இதில் கலந்துகொண்டார். இம் மன்றம் பதினைந்தாம் நூற்றாண்டுக்குமுன் செல்வாக்குப் பெறவில்லை. ஹெம்மன்ட், 'கருவூலமன்றம்' (செல்டன் கழகம்) காண்க.

(2) மூன்றும் எட்வர்டின் 31ஆம் சட்டப்படி, நாடு. 1, விதி 12 (1357) கருவூல நீதிமன்றத்தில் பொதுச் சட்டத்தை அமல் செய்வதில் காணப்பட்ட குறைகளைக் காண்பதற்காகக் குறைகாண் நீதிமன்றம் ஒன்று ஏற்படுத்தப்பட்டது. இதில், சான்ஸலர் பிரபு, கருவூலத் தலைவர், மன்னர் நீதிமன்றம், பொது நிதி, நீதிமன்றம் இவைகளின் நீதிபதிகளும் துணைவர்களாக இருந்தனர்.

(3) கருவூல மன்றத்தின் பிறிதொரு நீதிமன்றம் முதலாம் எலிஸபெத் சட்டம் 27, விதி 8 (1585) ஆல் தோற்றுவிக்கப்பட்டது. மன்னரின் நீதிமன்றத்திலிருந்து வெளியான தவறான ஆணைகளை விசாரித்து முடிவு செய்வதற்காக ஏற்பட்டது. இதில் பொது நீதிமன்றத்தின் நீதிபதிகளும் கருவூல மன்றத்தின் மானியப் பிரபுக்களும் இருந்தனர். மேலே குறிப்பிட்ட இரண்டு, மூன்று பிரிவிலடங்கியவை நீக்கப்பட்டன.

(4) நீதிமன்றம், நான்காம் ஜார்ஜ் 11ஆவது, நான்காம் வில்லியம் 1ஆவது சட்டங்களாலும் விதி 70 (1830) மீண்டும் அமைக்கப்பட்டது. மிக்குயர் பொது நீதிமன்றங்களில் ஒவ்வொன்றிலுமிருந்து அளிக்கப்பட்ட தீர்ப்புகள் (நீதி வழங்குவதில் தவறுள்ளதென நடவடிக்கை எடுக்கப்பட்டதன் அடிப்படையில்) கருவூல நீதிமன்றத்தில் தவறுநீக்கு மன்றம் என்ற பெயருடனும் மற்ற இரு நீதிமன்றங்களின் நீதிபதிகளும் ஒருசேர அமைந்து மறு விசாரணைக்குட்படுத்தப்பட்டது.

1873-ல் நிறைவேற்றப்பட்ட மிக்குயர் நீதித்துறைச் சட்டத்தால் கருவூல நீதிமன்றத்தின் அதிகார எல்லை புதிதாக அமைக்கப்பட்ட அப்பீல் நீதிமன்றத்துடன் இணைக்கப்பட்டது. ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலேயச் சட்ட வரலாறு', i, 242–6ஐக் காண்க.

33. 36-ம் 37-ம் விக்டோரியா c. 66.

34. அரசியின் நீதித்துறை, பொது நீதித்துறை, கருவூல நீதித்துறை இம் மூன்றும் 1880, டிசம்பர் 16-ல் அரசு கட்டளைப்படி ஒன்றுகச் சேர்க்கப்பட்டு மிக்குயர் நீதிமன்றத்தின் அரசியாரின் நீதிமன்றமாயமைந்தது. இதன் தலைவர் இங்கிலாந்தின் தலைமை நீதிப்பிரபுவானுர். முந்தைய பொது நீதிமன்றம், கருவூல நீதிமன்றத்துத் தலைமை மான்யப்பிரபு முதலியவர்களுடைய அதிகாரங் களும் (கட்டளைப்படி இவ்விரு பதவிகளும் நீக்கப்பட்டன) தலைமை நீதிப்பிரபுவிடம் ஒப்படைக்கப்பட்டன. இப்போதுள்ள உயர் நீதிமன்றத்தில் மூன்று பிரிவுகள் உள்ளன.

(1) அரசியின் நீதிமன்றம் [இதில் முந்தைய திவாலா (Bankrutpcy) நீதிமன்றமும் இணைக்கப்பட்டது]; நாட்டின் தலைமை நீதிப்பிரபுவும் மற்றும் பதினேழு நீதிபதிகளும் இதில் இருந்தனர்.

(2) கருவூலப் பிரிவு. இதில் தலைவராக சான்ஸலர் பிரபுவும் மற்றும் ஆறு நீதிபதிகளுமிருந்தார்.

(3) Probate, திருமண ரத்து, கடற்படைப் பிரிவு. இதில் தலைவருடன் மற்ருெரு நீதிபதியுமிருந்தனர்.

35. ஹார்டி, 'க்ளோஸ் ரோல்ஸின் முகவுரை', பக்கம் 24, குறிப்பு 3.

36. மாடாக்ஸ், 'கருவூலம்', i, 146, ஹோல்ட்ஸ்வொர்த்தால் அவருடைய 'ஆங்கிலேயச் சட்ட வரலாற்றில்', i, 49, மேற்கோளாகக் கூறப்பட்டுள்ளது.

37. 'பொறுக்குச் சாசனங்கள்', 167–173.

38. பெனிடிக்ட் அப்பாஸ், i, 107; 'டி ஸ்கக்காரியோ சம்பாஷணை', ii, விதி 2; 'பொறுக்குச் சாசனங்கள்', 154, 228.

39. ஹோல்ட்ஸ்வொர்த், i, 272.

40. ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 648.

41. சாதாரண கவுன்டி நீதிமன்றத்தைக் காட்டிலும், சுற்றி வரும் நீதிபதிகளைச் சந்திப்பதற்காகக் கூட்டப்பட்ட ஷயர் நீதிமன்றம் முழுமையான பிரதிநிதித்துவம் பெற்றதாயிருந்தது. 1231-ல் மூன்றும் ஹென்றியின் ஆணைப்படி கவுன்டி நீதிமன்றத்திற்கு உத்தரவிட்டு அழைக்கப்பட வேண்டியவர்களில், 'அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்கள், மடாலயத் தலைவர்கள், குருமார்கள், ஏர்ல்கள், மான்யப் பிரபுக்கள், நைட்டு வீரர்கள், சுதந்தரக் குடியானவர்கள்; ஒவ்வொரு நகரத்திலிருந்தும் நான்கு பேர்களும், ஒவ்வொரு பரோவிலிருந்தும் பன்னிருவர்களும்' நீதிபதிகளைச் சந்திக்க வேண்டும் எனக் கூறிற்று. ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, பக்கம் 651-ம், குறிப்பு 2ம்; 'பொறுக்குச் சாசனங்கள்', 354, 'கெண்டு அயர்' (நீதிமன்றம்) 1313–14 (மூன்று புத்தகங்கள், செல்டன் கழகம்) எனும் நூலில் பிற்காலத்திய செய்திகளை நேரில் காண்பதுபோல் எடுத்துக் கூறுகிறது. இன்னும் பழமையானவைகளை கழகத் தொகுப்பு நூல்களில் 53, 56, 59 களில் காணலாம். தவிர்க்கப்படவேண்டிய இரண்டாவன: (1) அயர் நீதிமன்றம், மன்னரின் நீதிமன்றத்தைவிட உயர்ந்தது அல்லது சரிநிகரானது என்பது. மற்றொன்று (2) அயர் நீதிமன்றம் சமமான அதிகார எல்லையைக் கொண்டிருந்தது என்பதாம்.

42. நீதிபதிகள் கவுன்டிக்கு வருவதற்குக் குறிப்பிட்ட தேதிக்கு முதல் நாளே கவுன்டிக்கு வராமலிருந்தால் (நிஸி பிரயஸ்) அவர்களை வெஸ்ட்மின்ஸ்டருக்கு வரவழைக்கும்படி உத்தரவு பிறப்பிக்க ஷெரீஃப்புக்குக் கட்டளையிடப்பட்டிருந்தது. இது குற்ற விசாரணை செய்து தீர்ப்புக் கூறும் நீதிபதிகளுக்கு மன்னர் நீதிமன்றம் அல்லது பொது நீதிமன்றம் இவைகளில் விசாரிக்கப்பட்ட சிவில் வழக்குகளையும் விசாரணை செய்யும் அதிகார எல்லையை அளித்தது. ஹோல்ட்ஸ்வொர்த், i, 278, மெயிட்லண்டு, 'அரசியல் சாசன வரலாறு', 139. 'நிஸி பிரயஸ்' என்பதின் தோற்றத்தைப்பற்றிய முழு ஆய்வு, செல்டன் கழக ஆண்டு நூல்கள் தொகுப்புகள் 4, 9-ல் ஜி. ஜே. டர்னர் எழுதியுள்ள முன்னுரையில் காணப்படுகிறது.

43. மாநில நீதி வழங்கும் முறை, தெளிவான ஆணை அனுமதியுடன் பல்வேறு நிறுவனங்களால் நடத்தப்பெற்றது. இது பல்வேறு நீதிபதிகளின் கமிஷன்களை ஒத்ததாயிருந்

தது. ப்ளாக்ஸ்டன் (iii, 60) ஐந்து கமிஷன்களாக நீதிபதிகள் அமர்ந்திருந்ததைக் குறிப்பிடுகிறார். (1) அமைதியைப் பாதுகாத்தல், (2) கிரிமினல் வழக்கு விசாரணை, தீர்ப்பு அளித்தல், (3) சிறையிலிருந்து விடுதலை செய்தல், (4) நீதி விசாரணை, (5) 'நிஸி பிரயஸ்' முதலியவை.

44. ஃபார்சைத், 'ஜூரிமுறை விசாரணை வரலாறு' (1852), பக்கம் 13.

45. இக் கருத்துபற்றிய மீண்டும் உயிர்ப்பித்தலுக்கு ஏர்னஸ்ட் மேயர் எழுதியுள்ள 'கெஸ்ஷ்ச்வோர்னன்கெரிகே' (1916)ஐக் காண்க.

46. பால்க்ரேவ், 'ஆங்கிலேயக் காமன்வெல்த்' (1832) i, அதி. 8, ப்ரன்னர், 'என்ட்ஸ்டகங் டர் ஷ்வார்கெரிகே' (1872) எனும் நூலில், காரேலின்ஜன் மன்னர்களது சமயக் குற்ற விசாரணையிலிருந்து நார்மானியர்கள் ஆங்கிலேயர்களது ஜூரி விசாரணை முறையை எடுத்துக் காட்டுகிறார்; ஸ்டப்ஸ் பால்க்ரேவின் கொள்கையை அடிப்படையாகக் கொண்டும் பின்னர் ப்ரன்னரால் ஒழுங்குபடுத்தப்பட்டு ஏற்றுக்கொள்ளப்பட்டதையும் மனத்திற்கொண்டு கூறுவதாவது: 'குற்றத்தின் உண்மையை எடுத்துரைக்க உறுதி செய்தவர்களைக்கொண்டு விசாரணை செய்யும் முறை ஃபிரெஞ்சு காபிடுலரிகளிலிருந்து நேரிடையாகப் பெற்றதெனும் உண்மை தெளிவாகிறது. அத்துடன் தியோடசியின் சட்டத் தொகுப்பின் பொருளாதார வரைமுறையிலிருந்து இது ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கக்கூடும் என்பதும், ரோமானியர்களின் நீதிவிசாரணை முறையுடன் (Jurisprudence) தூரத்துறவு பெற்றிருந்ததென்பதும் தெரிகிறது......ஃபிரான்சில் காரோலின்ஜன் மன்னர் காலம் முதல் இம்முறை தொடர்ந்து நார்மானியர் காலத்திலும் நீடித்திருந்தது என டாக்டர் ப்ரன்னர் ஆதாரத்துடன் விளக்கியுள்ளார். ........... இதைப்பற்றிய விநோதமான நிலைமை யாதெனில், இங்கிலாந்து மண்ணில் மிக்க நல்ல வளர்ச்சியை அடைந்தது, நார்மானிய வழக்கறிஞர்கள் விரைவிலேயே தங்களை ஆங்கிலேய வழக்கறிஞர்களால் மிஞ்சப்பட்டதைக் கண்டனர். இம் முறையும் ஃபிரான்சில் மற்றப் பகுதிகளில் செல்வாக்கிழந்து கடைசியில் அறவே மறையலாயிற்று. 'அரசியல் சாசன வரலாறு', i, 656, குறி. 2. போலக்கும் மெயிட்லந்தும், i, 140 முதல்; ஹஸ்கின்ஸ், 'நார்மானியர்களின் நிறுவனங்கள்', அதிகாரம் 6.

47. வில்லியம் வெற்றிவீரர் ஆட்சியில் கான்டர்பரியின் அதிமேற்றிராணியாரான லாங்ஃப்ராங்கிற்கும் பயே மேற்றிராணியாரான ஒடோவிற்குமிடையே பென்னன்டன் ஹீத் பற்றியும், ரோசஸ்டர் மேற்றிராணியாரான குண்டல்ஃப்க்கும் கேம்பிரிட்ஜ் ஷயர் ஷெரீஃபான பிகாட் என்பவருக்குமிடையே நடைபெற்றதும் புகழ்பெற்றதுமான வழக்கு விசாரணைகளைக் காண்க. (பிஜிலோ, 'ஆங்கிலோ-நார்மானியரது விருப்பங்கள்', 5.)

48. எஃப். ஈ. ஹார்மர், 'ஆங்கிலோ-சாக்சானிய ஆணைகள்'.

49. ஆர். ஸி. வான் கானிகம், 'இங்கிலாந்தில் நார்மானிய வெற்றியிலிருந்து க்ளான்வில் காலம்வரை மன்னரது ஆணைகள்' (செல்டன் கழகம்).

50. கவுன்டி நீதிமன்றத்தில் நான்கு நைட் வீரர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டுமென்பதும் அத்துடன் அந்நால்வரும் மிக்குயர் (grand) நீதி விசாரணை மன்றத்தின் உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியதென்பதும் விதியாயிருந்தது.

51. மேலே கூறப்பட்டதிலேயே, பக்கம் 14.

52. தாரண்டன், 'நாட்டிங்காம்ஷயர்', iii, 77.

53. 'லிபர் எலியன்ஸிஸ்', டி. ஜே. ஸ்டுவர்ட் பதிப்பித்தது (ஆங்கிலியா கிறித்தவக் கழகம், 1848), 256. பிஜிலோ, 'ஆங்கிலோ-நார்மானியரது விருப்பங்கள்', 24.

54. பால்க்ரேவ், 'ஆங்கிலேய காமன்வெல்த்' (எழுத்துப் படிகள்), 179.

55. எல்ம்ஹாம், 'செயின்ட் அகஸ்டின் மடாலயத்தின் வரலாறு' (ரோல்ஸ் வரிசை), பக்கம் 353–4. பால்க்ரேவ் மேலே குறிப்பிட்டது. ஃபார்ஸித், 'ஜூரிமுறை விசாரணை', 104.

56. இக்காலத்தில் வரி விதிப்பதை மதிப்பிடும் முறையில் காணப்பெற்ற மாற்றங்களும் அதற்காக ஜூரி முறையை விரிவாகப் பயன்படுத்தியதையும் ஸ்டப்ஸ் தொடர்புபடுத்திக் காட்டியுள்ளார். 'பொறுக்குச் சாசனங்கள்', பக்கங்கள் 184, 189, 249, 254, 348, 351, 356, 358. ஜான் மன்னரின் மகா சாசனத்தின்படி விதி 20. சிறு அபராதங்கள் மாத்திரம் விதிக்கப்பட வேண்டும், 'நேர்மையாயுள்ளவர்களின் உறுதியைக்கொண்டு'.

57. Cap. 6 திருச்சபையால் 'மத குருமார்களின் கூட்டத்தாரின்' ஜூரிகளைப் பயன்படுத்துவதுபற்றி நன்கறியப் படாத பிரச்சினைகளை எழுப்புகிறது. பக்கம் 76ஐக் காண்க. குறிப்பு 44. Cap. 9 'உட்ரம்' நீதிமன்றத்தை அமைக்கிறது. இதுபற்றிக் 'கொலம்பியா சட்ட மீள் பார்வை'யில் தார்ன் எழுதியுள்ளதைக் காண்க, xxxiii, 428.

58. 'அஸ்ஸைஸ்' என்பது முதன் முதலில் குறிப்பிட்ட நேரத்தில் குருவாக அமர்ந்திருத்தலை, எடுத்துக்காட்டாக மன்னர், மான்யப் பிரபுக்கள் அமருவதைக் குறித்தது; பின்னர், அவ்வாறு அமர்ந்திருக்கும் கூட்டத்தில் செய்யப்படும் அவசர உத்தரவைக் குறித்தது (கிளாரண்டன், நார்த்தாம்டன் அஸ்ஸைஸ்கள் முதலியவை); அதன்பின்னர், அவ்வாறு இயற்றப்படும் அவசர உத்தரவால் தோற்றுவிக்கப்பட்ட நிறுவனத்தைக் குறித்தது (உதாரணமாக, பின்பற்றவேண்டிய செயல்முறை. இறுதியாக அச் செயல்முறைகளை விசாரணை செய்த ஜூரிகளைக் குறிப்பதாயிற்று). மெயிட்லந்து, 'அரசியல் சாசன வரலாறு', 12.

59. ரவுண்டு, 'அதீனயம்', ஜன. 28, 1899. 'ஆங்கில வரலாற்றுப் பரிசீலனை', xxxi, 268; டேவிஸ், 'நார்மானியர்கள், ஆஞ்சவின்களின்கீழ் இங்கிலாந்து', 280.

60. லிப், ii, c. 7: 'பொறுக்குச் சாசனங்கள்', 190–1.

61. அதிலேயே, c. 17.

62. லிப். ii, c. 17: ப்ராக்டன். f. 185 b. ஜூரிகள் முழுமையாக உண்மையான செய்திகளை அறியாதவர்களாயிருந்ததால், புதிதாக ஜூரி அமைக்கப்பட ஆணையிட்டு அழைக்கப்பட்டது. உதாரணமாக, 'உத்தரவுகளின் சுருக்கம்', 11-ல் காண்க. பல்வேறு 'சிறிய விசாரணைக் குழுக்களை'ப் பற்றி, மெயிட்லந்து, 'செயல்முறையின் வகைகள்' எனும் நூலைக் காண்க.

63. 'ஒவ்வொரு வேபன்டேக்கிலும் ஒரு கூட்டம் நடைபெற வேண்டும்; பன்னிரண்டு தீன்களும் அவர்களுடன் ரீவும் செல்லவேண்டும். கையில் கொடுக்கப்பட்ட புனிதச் சின்னத்தைக் கொண்டு குற்றமற்றவர்களின்மீது குற்றஞ் சாட்டவில்லையென்றும், குற்றம் புரிந்தோரை ஒளித்து வைக்கவில்லையென்றும் உறுதிமொழி எடுக்கவேண்டும்'. III எதல்ரட் 3 (1), ராபர்ட்சன், 'சட்டங்கள்', 65, 'பொறுக்குச் சாசனங்கள்', 84–5.

64. ஜுரி விசாரணை முறையென்பது ஃப்ராங்கிய-நார்மானிய ரிடமிருந்து தோன்றியது என்று ஏற்றுக்கொள்ளப்படுவது, 'அன்னியரது வெற்றிக்கு முன்னரே இங்கிலாந்திலேயே சட்டப் பழக்கங்கள் நிலைத்திருந்தன எனக் கருதுவதற்குத் தடையில்லையென விநோக்ரடாஃப் கருதுகிறார். அப் பழக்கங்கள் பன்னிரண்டாம் நூற்றாண்டில் காணப்பட்ட குற்றஞ்சாட்டும் ஜுரி ஏற்பட வழிகோலியது. வான்டேஜ் சட்டப்படி நீதிவழங்க வேபன்டேக்கில் செல்வாக்குள்ளவர்கள் குற்றம் புரிந்தவர்களை வெளிப்படையாக அறிவிப்பதற்கு அழைக்கப்பட்டனர் ...... கிளாரண்டன் அஸ்ஸைஸில் காணப்பட்ட பன்னிரண்டு நேர்மையானவர்களுடன் மற்றொருபுறத்தில் டேனர்கள் கிராமங்களில் காணப்பட்ட பன்னிரண்டு நேர்மையான மக்களுடன் சிறப்பாக ஒற்றுமை காணப்படுவது தற்செயலாக ஏற்பட்டதெனக் கருதமுடியாது'; '11ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேயரது சமூகம்', பக், 7. மேலே காணப்படும் பத்தியில் திரு. டாஸ்வல்-லாம்பீட் ஊகங்களாக எடுத்துரைக்கப்பட்ட யோசனைகளுக்குச் சான்றாக எடுத்துக் காட்டும் முயற்சியில் என். டி. ஹர்நார்டு, 'ஆங்கிலேய வரலாற்று மறுபரிசீலனை', 56, 374–410 (1941)ஐக் காண்க. டூம்ஸ்டே காலத்தில் டேனிஷ் பரோக்களிலிருந்து வரவழைக்கப்பட்ட பன்னிரு அறநெறியாளர்கள்பற்றி 'லிங்கன் பழக்கங்கள்', (பொறுக்குச் சாசனங்கள்) 105-ஐக் காண்க. முதலாம் ஹென்றியின் 31ஆவது சுருள்பட்டியலில் ஷயர், ஹண்ட்ரட் நீதிமன்றங்களில் நீதிபதிகள், ஜுரிகள் முதலானோர் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

65. கிளாரண்டன் அஸ்ஸைஸ் விதி 1. 'பொறுக்குச் சாசனங்கள்', 170, சோதனை முறையில் வெற்றியுடன் ஈடுபட்டவர்களும், அண்டையில் வாழ் மக்களால் கெட்ட குணம் படைத்தவர்கள் என நிரூபிக்கப்பட்டால் நாட்டைவிட்டு எட்டு நாள்களில் வெளியேற வேண்டும் : விதி 14.

66. ஹோவ்டன், iii, 262 ; 'பொறுக்குச் சாசனங்கள்', 252.

67. இக்காலத்திய சிறப்பு ஜுரி முறைப்படி, ஷெரிஃபு கவுன்டிகளிலிருந்து சுதந்திரமான 24 நிலச்சுவான்தாரர்களை ஆணையிட்டு வரவழைப்பது முறை. இவர்களில், பன்னிரண்டுமுதல் இருபத்துமூன்று பேர்வரை ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையானவர்கள் உறுதிமொழி எடுத்துக்கொண்டவர்களாவர். நீதிபதியால் ஏற்கெனவே 'குற்றம்' விசா

ரணை செய்யப்படவேண்டிய விதிமுறைகளில் நன்கறிவிக்கப்பட்டவர்களாய், குற்றச்சாட்டுகளைச் சோதித்துப் பார்க்கவும், குற்றம் சுமத்துவதற்கான சாட்சிகளை மாத்திரம் விசாரணை செய்வதற்காகத் தனிமையில் அமர்ந்தனர். அவர்களில் பன்னிருவர், குற்றஞ்சாட்டப்பட்டதில் உண்மையுள்ளதென முடிவு செய்துவிட்டால், சிறப்பு ஜூரி, 'உண்மையான வழக்கு' எனக் கருதி, ஒரு நீதிபதி, பன்னிரண்டு ஜூரிகள் அடங்கிய நீதிமன்றத்தில் வெளிப்படையான விசாரணைக்குக் குற்றவாளி அனுப்பப்பட்டார். அவ்வாறு தனி விசாரணையில் குற்றஞ்சாட்டப் போதுமான ஆதாரமில்லையெனக் கூறப்பட்டால், 'உண்மை வழக்கன்று' எனச் சிறப்பு ஜூரி கருதியது. 'இக்னோரமஸ்' (எங்களுக்குத் தெரியாது) எனும் சொல் விசாரணையில் குறிக்கப்பட்டதிலிருந்து இது குற்றச்சாட்டிலிருந்து 'நீக்கப்பட்டதென' முடிவு செய்யப்பட்டது. 1681-ல் பெரும் அரசு குற்றத்திற்காக ஷேப்ட்ஸ்பரி பிரபு விசாரணை செய்யப்பட்டபொழுது, 'எங்களுக்குத் தெரியாது' எனும் வரலாற்றுப் புகழ்வாய்ந்த ஒரு நிலைமை ஏற்பட்டது. லண்டன் சிறப்பு ஜூரி அப்பொழுது வழக்கைத் தள்ளிவிட்டது — 'அரசு குற்ற விசாரணைகள்', viii, 759. கவர்னர் அயர் கொலைக் குற்றத்திற்காகக் குற்றஞ்சாட்டப்பட்டதைத் தள்ளிவிட்டது ஜமைக்கா கலகத்தின்போது அண்மையில் நடந்ததொரு நிகழ்ச்சியாகும். எவ்விதக் குற்றம் புரிந்ததாக எவர்மீதும் குற்றஞ்சாட்டி எவரேனும் சிறப்பு ஜூரியிடம் குற்றப் பத்திரிகையைக் கொண்டுவரலாம். இது பொதுவான விதி. இதில் இதுவரை எவ்வித விலக்கும் ஏற்படவில்லை. எனவே, மன்னரது அமைச்சர்களில் எவரைக் குறித்தும் யார் வேண்டுமானாலும் குற்றப் பத்திரிகை தாக்கல் செய்யலாம்—மெயிட்லாந்து, 'அரசியல் சாசன வரலாறு', பக். 475. 1933-ல் நீதி ஆட்சிமுறைச் சட்டத்தால் எல்லாவற்றிற்குமே சிறப்பு ஜூரி முறைகள் நீக்கப்பட்டன.

68. பரோக்களில் சிறிது காலம்வரை உண்மை விளக்கம் செய்கிற முறை நீடித்திருந்தது. 1833-ல் இம் முறை ஒழிக்கப்பட்டது. நான்காம் வில்லியம் 3, 4, விதி 42, பகுதி 13.

69. 12 மூன்றும் ஜார்ஜ், விதி 20. கடுமையானவும் கொடுமையானவுமான தண்டனைகள் விதிப்பதுபற்றி பால்கிரேவ், 'ஆங்கிலேயக் காமன்வெல்த்', (சான்றுகளும் விளக்கங்

களும்) 189ஐக் காண்க. ஜூரிகள்பற்றிப் பலவித அமைப்புகள், சோதனை முறைகளுக்குப் பதிலாக அவை ஏற்பட்டது பற்றிய முழு விவரங்களுக்கு டி. எஃப். டி. பிளக்நட், 'வரலாற்றுச் சுருக்கம்' (5ஆம் பதிப்பு) 106—136; ஆர். ஸி. வான் கானிகம், 'அரசு கட்டளைகள்' (செல்டன் கழகம்) 51–81ஐக் காண்க.

70. ஜூரியின் வளர்ச்சியைப்பற்றி மேலே கூறப்பட்ட குறிப்பில் காணப்படும் நூல்களைக் காண்க. அத்துடன் ஜே. பி. தாயர், 'சாட்சிபற்றிய தொடக்கக் கட்டுரை'; வெல்ஸ், 'சட்டக் காலாண்டுப் பரிசீலனை', 26, 346-ம், 30, 97-ம்; ஸ்டீஃபன், 'கொடுங்குற்ற வரலாறு'; ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலச் சட்ட வரலாறு', i. 312. சோதனைமுறை, சண்டையிடுதல்பற்றி எச். ஸி. லீ எழுதியுள்ள, 'மூடநம்பிக்கையும் வலிமையும்', ஜி. நீல்ஸன், 'விசாரணைகள்' எனும் நூல்களையும் காண்க.

71. ஹோல்ட்ஸ்வொர்த், i, 318.

72. 23, அஸ். 11 (1349); ஸ்பென்ஸ், 'சமநோக்கான அதிகார எல்லை', i, 129.

73. ஒய். பி. 11, நான்காம் ஹென்றி, மைக். செ. 41 (1409). ஜூரியின் முடிவு கைவிடப்பட்டது. முடிவு செய்வதற்காக ஜூரி கூடியபொழுது, நீதிமன்றத்தில் கட்சிக்காரரால் சாட்சியாக நிரூபணம் செய்யப்படாததும், நீதிமன்றத்தால் கருத்தில் கொள்ளவேண்டுமென வழங்கப்படாததுமான சம்பந்தப்படாதவரிடமிருந்து சட்டப்படி அமைந்த ஓர் ஒப்பந்தம் அதனிடம் காணப்பட்டதால், ஜூரியின் முடிவை ஏற்றுக்கொள்ளவில்லை. ஸ்டார்க்கி, 'ஜூரிமுறை விசாரணை' [சட்டப் பரிசீலனை, ஆங்கில நாடு பிற நாடுகளின் அறநெறிக் (Jurisprudence) காலாண்டுச் சஞ்சிகை, செ. 4, ஆக. 1845, பக். 397].

74. ஒய். பி. 11, நான்காம் ஹென்றி, மைக். செ. 41 (1409). இம் முன்னேற்றங்கள் இரண்டாம் எட்வர்டின் காலத்திலிருந்தே பழமையானதாகத் தொடங்கின எனக் கூறப்படும் கருத்துக்கு செல்டன் கழகம், 'ஆண்டு நூல் தொகுப்பில்', i, 9, 63-ல் ஜி. ஜே. டர்னர் எழுதியுள்ள முகவுரையைக் காண்க.

75. ஃபார்ட்டஸ்கியூ, 'ஆங்கிலேயரது சட்டத்திற்கு மேலானது', (எஸ். பி. கிரைம்ஸ் பதிப்பித்தது), c. 26. எலிசபெத்

அரசியார் காலத்திய விசாரணைபற்றிய நடைமுறையை, சர் தாமஸ் ஸ்மித், 'ஆங்கிலக் குடியரசு' (ஆல்ஸ்டன் பதிப்பு) 94—103-ல் விரிவாகக் கூறியுள்ளார்.

76. (1702) 1 சால்க். 405; கிட்சனும் மான்வாரிங்கும், ஸ்மித்தும் பார்க்கர்ஸ்டும் என்பதில் ஆண்ட்ரு, 315-ல் குறிப்பிடப்பட்டுள்ளது. 'ஜூரிமுறை விசாரணைபற்றிச் சட்டப் பரிசீலனை', 'காலாண்டுச் சஞ்சிகை' (1845) ii, 370, 400யும் காண்க (இக் கட்டுரைகளின் ஆசிரியர், 'சரிசமமான அதிகாரம்' நூலின் ஆசிரியரான ஸ்பென்ஸின் கருத்துப்படி தாமஸ் ஸ்டார்க்கி என்பவராவார்).

77. 4, 5 ஆன், c. 3 (1706)-ம், 24 இரண்டாம் ஜார்ஜ், c. 18 (1751)-ம்.

78. 34 மூன்றும் எட்வர்டு, c. 7 (1360). சிவில் வழக்குகளில் மாத்திரம் உரிமைப் பறிமுதல் காணப்பட்டன. புஷல் வழக்கு (1670), 6 நாட்டு விசாரணை 999. ஹாக்கின்ஸ், 'அரசு வழக்குகள்', புத்தகம் i, அதிகாரம் 72, பகுதி 5.

79. புரூம், 'அரசியல் சாசனச் சட்டம்', 154 (ஜி. டென்மன், இரண்டாம் பதிப்பு, 1885).

80. ஸ்மித், 'ஆங்கிலேயக் குடியரசு' (ஆல்ஸ்டன் பதிப்பு, 1906), iii, அதி. ii, பக்கம் 111.

81. பிரைட்டும் எய்னனும் (1757), 1 பர். 393.

82. 6 நான்காம் ஜார்ஜ், c. 50 (1825), பகுதி 60.

83. ஹோல்ட்ஸ்வொர்த், i, 225. பதினேழாம் நூற்றுண்டில் இவ் வழக்கம் பழக்கத்தில் வந்தது.

84. 1 நாட்டு விசாரணை, 869.

85. வாகன், 135; 6 நாட்டு வழக்கு விசாரணைகள் 999; புரூம், 'அரசியல் சாசனச் சட்டம்', 120—138; ராபர்ட்சன், 'பத்திரங்கள்', 362. ஃபிளாய்டும் பார்க்கரும் (1607), 12 அறிக்கை 23; மக்கல்ஸ் ஃபீல்டு ஏர்லும் ஸ்டார்க்கியும் (1684), 10 நாட்டு வழக்கு விசாரணைகள் 1330.

86. 16, கார். 2, விதி 4.

87. 6 நாட்டு வழக்கு விசாரணைகள் 1013–14.

88. 32 மூன்றும் ஜார்ஜ், விதி 60.

89. முழுமையான ஆய்வுக்கு ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலேயச் சட்ட வரலாறு', x, 673-696-ம்; மே, 'அரசியல் சாசன வரலாறு', ii, 253–263; அதிலேயே பக்கம் 667-ம் காண்க.

90. 'இரண்டாம் எட்வர்டின் ஆட்சிக் காலத்தில், இரகசியக் கவுன்சிலும் தனிப்பட்ட கவுன்சிலும் நடைமுதலிலிருந்தன. ஃபிரெஞ்சுச் சொற்களான 'பிரிவி கவுன்சிலும்' வழக்கத்திலிருந்துவந்தது. எனினும், இக் காலங்களில் உள்ளதைப் போன்று, இடைக்காலங்களில் பிரிவி கவுன்சில் எனப்படும் மன்றம் பொதுச் சம்மதத்தைப் பெற்றதாக ஒருபொழுதும் காணப்படவில்லை. இம்மன்றம் சிறப்பான தேவை இருந்தாலொழிய கூட்டப்படவேயில்லை. அப்படிக் கூட்டப்பட்டாலும், ஒரு சிறு குழுவாயும், அல்லது பொறுக்கியெடுக்கப்பட்டவர்களைக்கொண்டு உயர் முறையிலமைக்கப்பட்ட மன்றமாயுமிருக்கவில்லை. சாதாரணமாக அது ஓர் இரகசிய மன்றமாய்த்தானிருந்தது;' பால்ட்வின், 'மன்னரின் ஆலோசனை மன்றம்', 105. "'சாதாரண மன்றம்' எனுஞ்சொல், இடைக்காலங்களில் எங்கும் காணப்படுவதாயில்லை. 'மன்னரின் சாதாரண ஆலோசனையாளர்கள்' எனும் சொற்றொடர் முதன்முதலாக எட்டாம் ஹென்றியின் காலத்தில் காணப்படுகிறது"; அதிலேயே, 112, "'நிரந்தரமான ஆலோசனை மன்றம்' எனுஞ் சொல், முதன் முதலாகவும் சிறப்புடனும் 1376-ல் காணப்படுகிறது. இது 'தொடர்ந்து காணப்படும்' ஆலோசனையாளர்களைக் கொண்டிருக்கவேண்டுமெனப் பலமுறை முன்னர் அறிவிக்கப்பட்ட கருத்தின் விருப்பத்திற்கிணங்கத் தோன்றியது"; அதிலேயே, 106. பால்ட்வின் அவரது ஆய்வின் முடிவாகக் கூறுவதாவது: "'மன்னரின் ஆலோசனை மன்றம்' என்பது வேறு எவ்வித விளக்கச் சொற்களுமில்லாமல், இரகசிய மன்றம், சாதாரண மன்றம், பெருமன்றம் முதலிய ஆலோசனை மன்றங்களின் செயலாற்ற வேண்டிய எல்லா விஷயங்களையும் கொண்டதாயும், இடத்திற்கேற்றாற்போல் நெகிழ்ந்து கொடுக்கக்கூடியதாயும் இருந்ததெனும், உண்மையை நோக்குமிடத்துப் பல வகையாகப் பிரித்துக் கூறுவதெனும் எண்ணத்தைக் கைவிடச் செய்கிறது. பாராளுமன்றத்திற்கும் ஆலோசனை மன்றம் என்பவைகளுக்குமிடையே இதுபோன்று பகுத்துக் கூறும் முக்கியமான சிறப்புதான் இடைக்காலங்களில் தேவையாயிருந்தது. ஒன்றே இரு நிறுவனங்கள் தோன்றுவதற்குப் பொதுக் காரணமாயிருந்தது.

அமைப்பு முறையிலும் செயல்புரிவதிலும் பிரித்துக் கருத்துக்கொள்ளப்பட்டது"; அதிலேயே பக்கம் 114. மகா சாசனப் பத்திரத்தில் காணப்படும் (1215), விதி 12 (மேலே கூறப்பட்டது பக்கம் 79), நாட்டின் பொது மன்றம் எனும் சொல், நாட்டின் பொதுவான ஒப்புதலைக் குறிப்பிடுவதாயும், 'நாட்டின் பொது மன்றம்' எனும் நிறுவனம் ஒன்று இருக்கவில்லை யென்றும் கூறலாம். ஏ. பி. ஒயிட், 'பாராளுமன்றத்திற்கு முன்னர் பொதுச் சபை யொன்றிருந்ததா, ?' 'அமெரிக்க வரலாற்றுப் பரிசீலனை' xxv, 1-17 (1919).

91. ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', ii, 41, 269 முதல் காண்க. சபையின் அமைப்புப்பற்றி, பால்ட்வின், அதிகாரம் 4ஐக் குறிப்பாகக் காண்க.

92. சர் என். எச். நிக்கோலஸ், 'பிரிவி கவுன்சிலின் நடவடிக்கை' களின் முகவுரை, i, பக்கம் 3.

93 அதிலேயே பக்கம் 118 முதல் காண்க. 'காமிரா ஸ்டெல்லாட்டா' எனும் லத்தீன் சொல் இடைக்காலத்தில் 'சேம்பர் டஸ் எஸ்டாயில்' என மொழிபெயர்க்கப்பட்டு, விரைவிலேயே சிறப்பான பெயராய் விளங்கியது. இது 1343-ல் 'நீர்மேலுள்ள புதிய மன்றம்', 'கருவூலத்தை அடுத்தாற்போல்', 'ஆலோசனை மன்றமாக ஆணையிடப் பெற்றது': பால்ட்வின், 356.

94. 'பொதுச் சட்ட வழக்குத் தொடர்தல்', 'கருவூல மன்றத்தில் வழக்குத் தொடர்தல்', 'சான்ஸரி மன்றத்தில் வழக்குத் தொடர்தல்', 'சான்ஸரியிலிருந்து வழக்கின்மீது ஆணை பிறப்பிக்கப்படும்', 'மன்னரை கவனிப்பார்', 'பரிகாரம் அளிக்கப்படும்' போன்றவைகளான மன்றத்தின் விடைகள் பாதுகாத்து வைக்கப்பட்டிருப்பதிலிருந்து அம்மனுக்களின் இயல்புகள் நன்கு தெரிகின்றன. ஹார்டி, 'குளோஸ் ரோல்ஸி'ன் முகவுரை, i, பக்கம் 26.

95. மேலே குறிப்பிட்டதில், பக்கம் 98.

96. ஆறும் ஹென்றியின் ஆட்சியின் இரண்டாம் ஆண்டில், 'நாட்டின் நல்லாட்சியை ஏற்படுத்தக் கருதி மன்னரின் ஆலோசனை மன்றத்தைச் சார்ந்த பிரபுக்கள் விரும்புவதாவது' எனும் சொற்றொடரில், அவரது ஆட்சியின் எட்டாம் ஆண்டில் பாராளுமன்றத்தில் மன்றத்தின்

நடவடிக்கைகளைச் சீராக ஏற்படுத்துவதற்கு ஒத்துக் கொண்ட ஷரத்துகளில் பின்சேர்க்கையாகக் கொள்ளப் பட்டதை நோக்கும்பொழுது நாம் காண்பதாவது: 'பகுதி, பொது நீதிமன்றத்தில் முடிவு செய்யப்படக்கூடிய செய்தி களைக்கொண்ட மசோதாக்கள்.................... அங்கேயே, ஆலோசனை மன்றம் ஒரு பக்கம் வலிமையும், மற்றொரு பக்கம் வலிமையற்றதாயுமுள்ளதை உணர்ந்தாலொழிய (அல்லது வேறு கருத்தில் கொள்ளப்படவேண்டிய காரண மிருந்தால் ஒழிய) முடிவு செய்ய விட்டுவிடவேண்டும்', ரோ. பார்லி., iv, 201, 343.

97. பால்கிரேவ், 'மன்னர் மன்றத்தின் அதிகார எல்லைபற்றிய கட்டுரை', 19, 90, 134. இத் தலைப்புப்பற்றி முழுமையாக, பால்டுவின், 'மன்னர் மன்றம்', அதிகாரம் 11ஐக் காண்க.

98. ரோடுலி. பார்லி., iv, 201, 2. ஆறும் ஹென்றி, 1423. பொதுவாக இம் மன்றம்பற்றி பால்ட்வின், 'மன்னரது ஆலோசனை மன்றம்'; 'மன்றத்தின் பொறுக்கான சில வழக்குகள்' (செல்டன் கழகம்); பால்கிரேவ், 'மன்னர் ஆலோசனை மன்றத்தின் அதிகார எல்லை'; ஏ. வி. டைஸி, 'பிரிவி கவுன்ஸில்'; யூஸ்டேஸ் பெர்ஸி பிரபுவின், 'டியூடர் காலத்திய பிரிவி கவுன்ஸில்', பிளக்னட், 'பதினைந்தாம் நூற்றாண்டில் ஆலோசனை மன்றத்தின் நிலை' ('அரசு வரலாற்றுக் கழக நடவடிக்கைகள்', நான்காம் தொடர், i, 157); ஸி. ஜெ. பெயின், 'ஏழாம் ஹென்றி காலத்திய பொறுக்கு வழக்குகள்' (செல்டன் கழகம்).

99. சான்ஸலரின் சாதாரண அதிகார எல்லைபற்றி, ஸ்பென்ஸ், 'சமமான அதிகார எல்லை', i, 336. நடவடிக்கைகள் பொதுச் சட்ட நடைமுறையைப் போன்றிருந்தன; எனி னும், ஜூரியை ஆணையிட்டழைக்க சான்ஸலருக்கு அதி காரமில்லையாதலால், வழக்குகளின் உண்மையைக் காண மன்னரது நீதிமன்றத்திற்கு வழக்குகள் அனுப்பப்பட்டன. பிளாக்ஸ்டனும் (3 காம். 47) காம்ப்பெல் பிரபுவும் ('சான் ஸலர்களின் வாழ்க்கை வரலாறு', முகவுரை), தொடக்கத்தி லிருந்தே சான்ஸலர்தான் மன்னருடைய உட்கருத்தை அறிந்தவர்களாயிருந்தனர் என்ற காரணத்தால் அவ ருடைய சரிசமமான அதிகாரவெல்லை இருந்ததெனவும் விளக்கங் கூறுகின்றனர். 1587-ல் ஹாட்டன் என்பாரின் பேருரையில் காணப்படும் இச்சொல் அதற்குமுன் காணப் படவில்லை. (ஸ்பென்ஸ், 'சரிசமமான அதிகாரவெல்லை',

i, 406, 414) ; சான்ஸலர், மன்னரின் கருத்துக் கருவூலம் என்பது ஒரு மரபு என்பதைத் தவிர வேறு அதற்கு ஆதாரமில்லை. (மன்னரின் கருத்துக் கருவூலமாயிருந்தவர்களின் பட்டியல் 'ஆன்டிக்குவரி', xxii, 114, 159, 262, xxiii, 24; 'உள்நாட்டுக் கவுன்டிகளின் சஞ்சிகை', 1910-லும் காணப்படுகின்றன.)

1. குளோஸ் ரோல்ஸின் 'நாள் தொகுப்பு', (1279–1288), 56–87 ; ரைலீஸ், 'பாராளுமன்ற உத்தரவுகள்', 442 ; முதலாம் எட்வர்டின் காலத்திலிருந்தே சான்ஸரி நீதி மன்றத்தில் சரிசமனான தீர்ப்பு அளிக்கப்பட்டுள்ளது எனும் ஸ்பென்ஸ் என்பாரின் கருத்து மூலநூலில் காணப்படுகிறதெனினும், அண்மையில் அரசியல் சாசனச் சட்ட வரலாற்றாசிரியர்கள் அக்கருத்துக்குப் புத்துயிரளித்துள்ளனர். (பால்ட்வின், 'மன்னர் ஆலோசனை மன்றம்', 241 ; பி. வில்கின்ஸன், 'மூன்றாம் எட்வர்டின்கீழ் சான்ஸரி மன்றம்', 48-ம் 'அரசியல் சாசன வரலாற்றுக் கட்டுரைகள்', 205-ம்). சட்ட வரலாற்றாசிரியர்கள், இரண்டாம் ரிச்சர்டு பட்டமெய்துவதற்குச் சிறிது காலம் முன்னதாக, சான்ஸரி நீதிமன்றம் பற்றிய எவ்விதச் சுவட்டையும் காணவில்லை. (பயில்டான், 'சான்ஸரியின் பொறுக்கான வழக்குகள்' ; மெயிட்லந்து, 'அரசியல் சாசன வரலாறு', 222–5 ; ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலேயச் சட்ட வரலாறு', i, 451 முதல், பதினைந்தாம் நூற்றாண்டு வழக்குகளும் கூறப்பட்டுள்ளன.) பிந்திய கருத்துத் தெளிவாக ஒத்துக்கொள்ளத் தக்கதாகும். சான்ஸரி எல்லை வரம்பு சான்ஸரியின் 'லத்தீன் பகுதி'யிலிருந்து வளர்ந்ததெனும் கருத்துபற்றி, ஏ. டி. ஹார்க்ரீவ்ஸ், 'சான்ஸரியின் சரிசமனான நீதி ஆட்சியும் லத்தீன் பிரிவும்', 'சட்டக் காலாண்டுப் பரிசீலனை', 68, 481-ம் காண்க.

2. ஸ்பென்ஸ், 'சரிசமனான நீதி ஆட்சி', i, 335 ; 12 முதலாம் எட்வர்டின் ஆணையில், 'சான்ஸலரின் உரிமை, தயை இவைகளின் அடிப்படையில்' எனும் வாசகம் காணப்படுகிறது.

3. காம்பெல் பிரபு, 'சான்ஸலர்களின் வாழ்க்கை வரலாறு', i, 207.

4. பயில்டன், 'சான்ஸரி நீதிமன்றத்திய பொறுக்கான வழக்குகள்' (செல்டன் கழகம்), 17 ; சர் டி. டஃப்ப்ஸ்

ஹார்டி, ‘குளோஸ் ரோல்ஸின் முகவுரை’, 28. ‘அருள் பற்றிய விஷயங்கள்’ என்பவை சரிசமனுன தலையீட்டைக் குறிக்கக்கூடும் எனக் கருதினுலும், பொருள், திருச்சபை ஊழியம் போன்ற பல பணிகள் பெறுவதற்கான பல விண்ணப்பங்கள் இருந்தன என்பதை நினைவுகூர வேண்டும். பிறப்பிக்கப்பட்ட அவசரச் சட்டங்கள் பிந்தியதைப் பற்றியதாயிருக்கவேண்டுமெனவும் கருதப் படவேண்டும்.

5. ‘சரிசமனுன அதிகாரவெல்லை’ என்பதுபற்றிக் காம்பெல் பிரபு கூறுவதாவது (மேலே குறிப்பிடப்பட்டது, i, 8–9): ‘பொது நீதிமன்றத்தில் போதுமான பரிகாரம் கிடைக் கப்பெருது கட்சிக்காரரின் விண்ணப்பத்தின்மீது பொதுச் சட்ட வழக்குகளின் நடைமுறை அல்லது பொதுச் சட்டமன்றத்தின் நடவடிக்கைகளைப் பின் பற்ருது சான்ஸலர் நீதிமன்றம் புரியும் சிறப்பான தலையீ டாகும்; இதன்காரணமாக எதிர்க்கட்சி நேரிலோ அல்லது எழுத்துமூல விசாரணைக்கோ ஆஜராகி விசாரணை செய்யப்படுவதற்கு ஆளாக்கப்பட்டார். இரு கட்சிகளின் சாட்சிகள், ஜூரியின் துணையின்றி விசாரணை செய்யப்பட்டு நியாயப்படியும் பாரபட்சமின்றியும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டதுடன், உத்தரவை மீறிய வருக்குச் சிறைத்தண்டனை விதிப்பதெனும் அச்சுறுத் தலுடன் நெறியாக்கப்பட்டது.

6. 5, மூன்ரும் எட்வர்டு, c. 9.

7. 25, மூன்ரும் எட்வர்டு, c. 4. ரோடுலி. பார்லி., ii, 239, நெ. 19.

8. 25, மூன்ரும் எட்வர்டு, c. 3.

9. ரோடுலி. பார்லி., ii, 269. கோமகார்கள் தனியாக இங்குக் கூறப்பட்டது குறிப்பிடத்தக்கது. இப் பதவி இருபத்தைந்து ஆண்டுகளுக்குமுன் (1337) ‘கறுப்பு இளவரசர்’, காரன்வால் கோமகனுக்கப்பட்டபொழுது முதன்முதலாக இங்கிலாந்தில் ஏற்பட்டு வழங்கப்பட்டது. லங்காஸ்டர் ஏர்லான ஹென்றி (மூன்ரும் ஹென்றியின் கொள்ளுப்பேரர்), அடுத்ததாக 1351-ல் இப்பதவியைப் பெற்ருர். 1360, மார்ச்சு 24-ல் அவர் இறந்தார். அதே ஆண்டில் பதவி மீண்டும் தோற்றுவிக்கப்பட்டு, அவ ருடைய மருமகனுரான ஜான் ஆஃப் காண்டுக்கு 1362-ல்

அளிக்கப்பட்டது. 'கறுப்பு இளவரசர்', ஜான் ஆஃப் காண்ட் எனு மிருவரைத் தவிர மூன்றுவது கோமகாராக இங்கிலாந்திலிருந்தவர் அவர்களின் உடன்பிறந்தாரான லயனல், கிளாரன்ஸ் கோமகாராக நியமிக்கப்பட்டவ ராவார்; செப்டம்பர் 15, 1362.

10. 37 எட்வர்டு 3, c. 18. (ஹாலம், 'இடைக்காலங்கள்', iii, 253, தெளிவற்ற வாசகத்தைக் கொண்ட இச்சட்டத்தின் நோக்கைத் தவருகப் புரிந்துகொண்டதாகக் காணப்படு கிறது).

11. ரோடுலி. பார்லி., ii, 295-ம், 42 எட்வர்டு 3, c. 3-ம்.

12. ரோடுலி. பார்லி., iii, 266. தொடர்ச்சியான இச்சட்டங் களின் வேருன கருத்துபற்றி பிளக்நட், 'பொதுச் சட்டத் தின் வரலாற்றுச் சுருக்கம்' (1956) எனும் நூலில் 187 முதல் காண்க.

13. ஹோல்ட்ஸ்வொர்த், i, 485–7. 'சப்போனு' எனப்படும் விசாரணைமுறை 1363லேயே காணப்படுகிறது. இரண் டாம் ரிச்சர்டின் ஆட்சியில் ஜான் டி வால்தாம் என்பார் முதன்முதலாக இதை உருவாக்கினர் எனும் மரபுக்கு ஆதாரமில்லை. மன்னரின் முத்திரையுடன் வெளியிடும் வழக்கத்தை ஒரு சமயம் அவர் கையாண்டிருக்கக்கூடும். இம்முறை பதினைந்தாம் நூற்றுண்டில் குறிப்பாக வெறுக் கப்பட்டது. பால்டுவின், 'மன்னர் நீதிமன்றத்திய பொறுக்கான வழக்குகள்' (செல்டன் கழகம்) எனும் நூலைக் காண்க, பக்கம் 39. 'சப்போனு' பற்றி (பொது நீதிமன்றத்து ஆணைகளைப் போலல்லாது) அடிக்கடி எதிர்ப்பாகக் கூறப்பட்டதாவது அது சம்பந்தப்பட்ட விஷயத்தின் தன்மையைப்பற்றிக் குறிப்பிடாததாகும்.

14. ஸ்பென்ஸ், 'சரிசமனுன விசாரணை', i, 349.

15. ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', ii, 273; காமன்ஸ் சபை உறுப்பினர்களின் குழு இடைக்கால அறிக்கை, 1932 (Cmd. 4130), 108; பிளக்நட், 'பதினைந்தாம் நூற் றுண்டில் மன்றம்', அரசு வரலாற்றுக் கழக நடவடிக்கை கள்' (நான்காம் தொகுப்பு), i, பக்கம் 165 முதல்.

16. 1 நான்காம் ஹென்றி (1399)-ல் காமன்ஸ் சபையினர் நீதி சார்ந்த விஷயங்களில் தலையிடுவதற்குரிமையென ஒப்புக் கொண்டனர். (ரோடுலி. பார்லி., iii, 427; பிரபுவின்

கௌரவம்பற்றிய அறிக்கை, i, 360.) ஆனால், அடுத்த ஆட்சிக்காலத்தில், பிரபுக்கள் மன்றம் அல்லது காமன்ஸ் மன்றத்திடம் தனியார் விண்ணப்பித்துக்கொண்டவைகளில் காமன்ஸ் சபையினர் மிகுந்த அக்கறை காட்டத் தலைப்பட்டபொழுது, சட்டமன்றத்தின் எல்லாப் பிரிவினர்களின் ஒப்புதலின்பேரில் பல சமயங்களில் சட்டங்கள் இயற்றுவதன்மூலம் பதில் வழங்கப்பட்டது. இதிலிருந்து பாராளுமன்றத்தின் தனியார் சட்டங்கள் தோன்றலாயின. ஹாலம், 'இடைக்காலங்கள்', iii, 92; கிளிஃபோர்டு 'தனியார் சட்ட மசோதா வரலாறு' எனும் நூலையும் காண்க.

17. ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', முகவுரை 26. பிரபுக்கள் மன்றத்தின் நீதி ஆட்சி பற்றி பைக், 'பிரபுக்கள் சபையின் அரசியல் சட்ட வரலாறு', பக்கம் 279 முதல் காண்க. இத் தலைப்புப்பற்றி முழுமையான செய்திக்கு பால்ட்வின், 'மன்னர் மன்றம்', அதிகாரம் 12, ஹோல்ட்ஸ்வொர்த், i, 351 முதல் காண்க.

18. ஹேல், 'பிரபுக்கள் சபையின் அதிகார எல்லை' (ஹார்க்ரீவ் பதிப்பு), பக்கம் 6, 8.

19. பால்கிரேவ், 'மன்னர் மன்றம்', 54; ஹாலம், 'இடைக்காலங்கள்', iii, 145; பால்ட்வின், 318; ஹோல்ட்ஸ்வொர்த், i, 356.

20. இந்நீதிமன்றத்தின் தோற்றம் 1349லேயே காணப்பட்டதெனும் ஊகம் (ஸ்பென்ஸ், 'சரிசமனான நீதிவிசாரணை', i, 357) உறுதி செய்யத்தக்கதன்று. நீதிமன்றம் ஏழாம் ஹென்றியின் ஆட்சிக் காலத்தில் செயல் புரிந்தது. டானர், 'டியூடர் காலத்திய அரசியல் சாசனப் பத்திரங்கள்', 299; போலார்டு, மூன்றாம் ரிச்சர்டின் ஆட்சிக்காலத்திலேயே இந்நீதிமன்றத்தின் தோற்றத்தைக் காட்டியுள்ளார்; 'ஆங்கிலேய வரலாற்றுப் பரிசீலனை', 37, 345 (1922). இந்நீதிமன்றம் 1598வரை தொடர்ந்து பயனளித்துவந்து (கோக் என்பாரின் கூற்றுப்படி 4, Inst. 97), பொது வழக்கு மன்றத்தின் தீர்ப்புப்படி முழுமையாக விலக்கப்பட்டது (ஸ்டெப்னியும் ஃபிளடும்). இத்தீர்ப்பைப் புறக்கணித்து இந்நீதிமன்றம் 1642வரை நீடித்திருந்தது. டானர், 299–302; ஹோல்ட்ஸ்வொர்த், i, 413–6; அதிலேயே, பக்கம் 253-ஐயும் காண்க.

21. பிரிவி கவுன்சிலின் நீதி வழங்கும் குழு 1833-ல் நிறுவப் பெற்றது (3-ம் 4-ம் நான்காம் வில்லியம் c. 41). குற்றச் சாட்டுகளையும் சாட்சிகளையும் நேரில் விசாரித்த பின்னர், குழு அதன் அறிக்கையை அரசியாரின் மன்றத்தின் முன் சமர்ப்பித்ததும், மன்றம் இறுதித் தீர்ப்பை வழங்கியது. இச் சட்டம் புரோஹாம் பிரபுவின் முயற்சியாலானது (கிரென்வில், 'நினைவுக் குறிப்புகள்,' தொகுப்பு 1, வால். 2, பக்கம் 364). இது 1876-ல் நிறைவேற்றப்பட்ட (39-ம் 40-ம் விக்டோரியா c. 59) (50-ம் 51-ம், விக்டோரியா, c. 70) மறுவிசாரணை சார்ந்த சட்டங்களால் திருத்தியமைக்கப்பட்டது. 1895-ல் (58-ம் 59-ம், விக்டோரியா, c. 44) நிறைவேற்றப்பட்ட நீதிவிசாரணைக்குழு மாற்றியமைப்புச் சட்டத்தால் குடியேற்ற நாடுகளில் தலைமை நீதிபதிகளாகவோ அல்லது நீதிபதிகளாகவோ அல்லது குடியேற்ற நாடுகளின் உயர்நீதிமன்றங்களில் நீதிபதிகளாகவோ இருந்தவர்கள் ஐந்து பேர்களுக்கு மிகாமல் பிரிவி கவுன்சிலின் நீதிவிசாரணைக் குழுவில் உறுப்பினராயிருத்தல்வேண்டும். டியூடர் காலத்திய பிரிவி கவுன்சில் பற்றி அதிலேயே பக்கம் 225ஐக் காண்க.

22. மேலே குறிப்பிட்டதிலேயே, பக்கம் 111 முதல்.

23. 'பிரபுக்கள் சபையின் நீதிவிசாரணை எல்லை', (ஹார்கிரேவ் பதிப்பு), பக்கம் 39.

24. பால்ட்வின், 'மன்னர் மன்றம்', 205, 428.

25. அதிலேயே, 435; பக்கம் 216, 226.

26. டானர், 'டியூடர் அரசியல் சாசனப் பத்திரங்கள்', 250.

27. 3 ஏழாம் ஹென்றி, c. 1; டானர், 258.

28. 'நட்சத்திர மன்றம்' எனும் பெயர் பிற்காலத்தில் (1487) நிறைவேற்றப்பட்ட சட்டத்தில் முன் சேர்க்கப்பட்டது. டானர், பக்கம் 249; அதிலேயே பக்கம் 226.

29. டானர், பக்கம் 216 முதல் காண்க: ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலேயச் சட்ட வரலாறு', i, 493 முதல்; லீதாம், 'நட்சத்திர மன்றத்திய பொறுக்குச் சாசனங்கள்' (செல்டன் கழகம்), 2 வால்., 1902, 1910; பிளக்நட் 'பொதுச் சட்ட வரலாற்றுச் சுருக்கம்' (1956), 182.

30. 1487ஆம் ஆண்டுச் சட்டம், பிரதிவாதிகளை உறுதிமொழி எடுத்துக்கொண்டபின் விசாரணை செய்யும் வழக்கத்தை

ஏற்றுக்கொண்டது; அத்துடன் சட்டத்தில் குறிப்பிடப் பட்டுள்ள குற்றங்களைப் புரிந்தவர்கள் நேரில் வருவதற் காக, பிரிவி சீல், சப்போனு ஆணைகளை வெளியிடுவதற்குச் சட்டரீதியான அனுமதியும் அளித்தது.

31. இத் தண்டனைகள், அடிக்கடி கூறப்படுவதைப்போன்று, ஸ்டூவர்ட் மன்னர்களால் நீதிமன்ற நடவடிக்கைகளில் புகுத்தப்படவில்லை. ஜே. ஆர். டானர், 'டியூடர் காலத்து அரசியல் சாசனப் பத்திரங்கள்', பக்கம் 256–7; "ஏற்கெனவே டியூடர் ஆட்சியில் நடைபெறாத எவ்வித அபராதமோ அல்லது மெய்வருத்தும் தண்டனையோ ஸ்டூவர்டுகள் காலத்தில் விதிக்கப்படவில்லை. இந் நீதி மன்றம் பிற்காலத்தில் மக்களின் ஆதரவை இழந்தது மக்களின் கருத்து மாறுதலடைந்ததாலேயே தவிர மன்றத்தின் நடவடிக்கையால் அன்று'.

32. 16 சார்லஸ் 1, c. 10.

33. 'லார்டு ஹை அட்மிரல்' எனும் பதவியைச் சில குறுகிய இடைவேளைகளைத் தவிர மற்றக் காலங்களில் இரண்டாம் ஜேம்ஸ் வகித்துவந்தார்; 1702–1709-லும் 1827–1828-லும்.

34. எஃப். ஆர். ஸான்பர்ன், 'ஆங்கிலேயரது முந்திய கடற் போக்குவரத்து, வாணிகச் சட்டம்' (1930); 'கடற்சட்டங் கள்', 'பிரிட்டானியா கலைக்களஞ்சியத்தில்' (11ஆவது பதிப்பு) வால். 25, பக் 535–37; ரீவ்ஸ், 'ஆங்கிலச் சட்ட வரலாறு', iii, 369; 'கடல் சார்ந்த சட்டம், பழக்கம் பற்றிய பத்திரங்கள்', 2 வால்யூம்கள், ஆர்.ஜி. மார்ஸ்டன் பதிப்பித்தது (கடற்படை ஆவணக் கழகம், 1915-1916). ஓலிரானின் பழக்கங்கள் என்பவை 'கடற்படையின் கரும்புத்தகம்' எனும் நூலில் சேர்க்கப்பட்டுள்ளன (பதிப்பு, டிவிஸ், ரோல்ஸ் தொகுதி).

35. 'கடற்படை சார்ந்த பொறுக்கு வழக்குகள்' (செல்டன் கழகம்), i, முகவுரை 35, ஹோல்ட்ஸ்வொர்த்தால் மேற்கோளாகக் கூறப்பட்டுள்ளது, i, 545.

36. கடற்படை நீதிமன்றத்தின் அதிகார எல்லையில், 'பிற் காலத்தில் காணப்பட்ட, சாதாரண சிவில்-கிரிமினல் வழக்குகள், கடற்படைத்துறை அல்லது மன்னரின் சட்டப்படி ஏற்பட்டுள்ள உரிமைகள், கப்பல் சிதைவுகள்

பற்றியவை, கடற்போரில் கைப்பற்றப்பெற்ற கலங்கள் பற்றியவை முதலியவை அடங்கியிருந்தன'; அதிலேயே 548.

37. 13 இரண்டாம் ரிச்சர்டு, சட். 1, c. 5, (1389); 15 இரண்டாம் ரிச்சர்டு, c. 3 (1391); 2 நான்காம் ஹென்றி, c. 11 (1401).

38. ஹோல்ட்ஸ்வொர்த், i, 551.

39. ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', 463.

40. ரவுண்டு, "மான்யமுறையில் இங்கிலாந்து', 241: மான்யப் பிரபுவின் பணியை நிறைவேற்றுவதற்காக ஏற்படுத்தப்பட்ட நைட் வீரர்களின் கட்டணத்தின் எண்ணிக்கை போதுமானதாயில்லாதபொழுது, எஞ்சிய அப் பணி, இராணுவப் பணிக்காக விடப்பட்ட நிலம் மான்ய முறைப்படி பணிக்கீடாக விடப்படாத, அதாவது, 'சொந்த'மான நிலத்தைச் சார்ந்ததாயிருந்தது." இவ் விதி, 'எஞ்சிய பணியை நிறைவேற்றுவதற்கு நியமிக்கத் தேவைப்படும் நைட் வீரர்களுக்கு அளிப்பதற்கான ஆயுதத் தேவைகளைப் போதுமானதாய்த் தயாரில் வைத்திருக்கவேண்டுமென' வற்புறுத்தியது.

41. பெனிடிக்டஸ் அப்பாஸ், i, 278; ஹோவ்டன், ii, 261; 'பொறுக்குச் சாசனங்கள்', 183-4.

42. இங்கிலாந்தின் அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்கள், உடன்கூட்டத்தார், மான்யப் பிரபுக்கள், மெய் நம்பிக்கையுள்ளவர் முதலானோரின் சம்மதத்துடன் வெளியிட்டது. 'பொறுக்குச் சாசனங்கள்', 276.

43. பிரபுவின் மதிப்புப்பற்றிய யாதாஸ்து, அனுபந்தம், பக். 2: 'பொறுக்குச் சாசனங்கள்', 340.

44. ரைமர், i, 200; 'பொறுக்குச் சாசனங்கள்', 355, 1252ஆம் ஆண்டு ஆயுதச் சட்டம்; அதிலேயே 362.

45. Wl. ஷரத்து 8 (ராபர்ட்ஸன், 'சட்டங்கள்,' 239); கிளாரண்டன் சட்டம், விதி 9, 10, 15 ('பொறுக்குச் சாசனங்கள்', 99, 171—2).

46. ஆர். ஹோவ்டன், iii, 299; 'பொறுக்குச் சாசனங்கள்', 257—8. இரண்டாம் எட்கார் 1 (ஹண்ட்ரட் மன்றத்தின் அவசரச் சட்டங்கள், 959—975) கட்டளையிடுவதாவது:

'திருடன் விரட்டிப் பிடிக்கப்படவேண்டும்.'......உடனடியான தேவை இருந்தால், ஹண்ட்ரட் உறுப்பினர்களுக்கு அறிவிக்கப்படவேண்டும்; அத்துடன் டைதிங்கிலிலுள்ளவர்களுக்கும் அறிவிக்கவேண்டும்; எல்லோருமாகச் சேர்ந்து இறைவன் எந்தத் திசை நோக்கிச் செல்ல வேண்டுமெனக் கட்டளையிடுகிருரோ, அத்திசை நோக்கிச் செல்லவேண்டும். ஏற்கெனவே எட்மண்டு சட்டமியற்றியுள்ளபடி திருடனுக்கு நியாயம் வழங்கப்படவேண்டும்'. 2 கான்யூட் 21 (லௌகிகக் கட்டளைகள்): 'பன்னிரண்டு வயது நிரம்பிய ஒவ்வொருவரும் தான் திருடமாட்டேன் எனவும், திருட்டுத்தனத்தை அறியமாட்டேன் எனவும் உறுதிமொழி எடுத்துக்கொள்ளவேண்டுமென நாம் கட்டளை யிடுகிறேம்', 'பொறுக்குச் சாசனங்கள்', 81, 87; ராபர்ட்ஸன், 'சட்டங்கள்', 17, 185.

47. கென்ட் பிரிவின் ஷெரீஃபுக்கு மூன்றும் ஹென்றி விடுத்த ஆணை; எப்படி அமைதியைப் பாதுகாக்கவேண்டும், ரைமர், i, 209; ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', (எட்டாம் பதிப்பு; ஒன்பதாம் பதிப்பில் குறிப்பிடப் படாதது), 362.

48. இதைப்போலவே மூன்றும் ஹென்றியின் மாமனர் புராவென்ஸ் நிலப்பிரிவில் ஒரு சட்டமியற்றியிருந்தார். மாத்யூ பாரிஸ், இதை 'செவாய்' நாட்டினரின் கண்டு பிடிப்பு' என்றும், அத்துடன் மான்யப் பிரபுக்கள் எதிர்த்ததால் சட்டம் தள்ளிவைக்கப்பட்டதெனவும் கடிந்து கூறுகிருர். போலக்கும் மெயிட்லந்தும், i, 181.

49. ஆண்டிற்கு 15 பவுன் மதிப்புள்ள நிலத்தைச் சொந்தமாகக் கொண்டுள்ளவரும், 60 மார்க்குகள் (40 பவுன்) மதிப்புள்ள சொத்துகளைக் கொண்டுள்ளவரும் அவரவர் படைக்கலங்களின் அடிப்படையில் வகுக்கப்பட்டு, அக்காலத்திய 'குடியானவர் குதிரைப்படை' என அழைக்கப் பட்ட படையில் சேர்ந்து பணிபுரிந்தனர். ஒவ்வொரு வீரனும், இரும்புச் சட்டை, இரும்பாலான மார்பு கவசம், சிறு கத்தி, குதிரை முதலியவைகளைக் கொண்டிருக்க வேண்டும். மற்ற வகுப்பினர் காலாட்படையினராகப் பணியாற்றினர்.

50. மூன்றும் ஹென்றியின் 36, 37ஆம் ஆணைகள் (1252–1253); ரைமர், i, 281, 292; 'பொறுக்குச் சாசனங்கள்', 363; போலக்கும் மெயிட்லந்தும், i, 565.

51. ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', முகவுரை 38.

52. 13 முதலாம் எட்வர்டு, c. 6, 1285 ; 'பொறுக்குச் சாசனங்கள்', 463—9.

53. பிலிப்பும் மேரியும் 4-ம் 5-ம், c. 2-ம் 3-ம். மன்னரால் அல்லது அவரது பிரதிநிதியால் படையில் சேரும்படி ஆணையிடப்பட்டும் வாராமலிருந்தவர்மீது தண்டனைகள் விதிக்கப்பட்டன. மன்னரின் பிரதிநிதி 'லெஃப்டினன்டு பிரபு' எனப்பட்ட புதிய அதிகாரியாவார். இவர்கள் ஒவ்வொரு கவுன்டியிலும் மன்னரின் முக்கிய இராணுவ அதிகாரியாக டியூடர் ஆட்சிக் காலத்தில் நியமிக்கப் பட்டனர். இவ் வதிகாரியின் முந்திய வரலாற்றை அறிய, ஸ்காட் தாம்ஸனின், '16ஆம் நூற்றுண்டில் லெஃப்டினன்டு பிரபுக்கள்' (லண்டன், 1923) எனும் நூலைக் காண்க. அதுமுதல் ஷெரீஃப் ஒரு சாதாரண சிவில் அதிகாரியாக மாறினர். 1871ஆம் ஆண்டு இராணுவ ஒழுங்குமுறைச் சட்டத்தால் (34-ம் 35-ம், விக்டோரியா, c. 86, s. 6), கவுன்டிகளில் லெஃப்டினன்டு பிரபுக்கள் நாட்டுப் படை, துணைப்படை முதலியவைமீது கொண்டிருந்த அதிகாரவெல்லையும் ஆணையும் மன்னரிடமே மீண்டும் ஒப்படைக்கப்பட்டு, போர்த்துறைச் செயலர், அவரது ஆலோசனைப்படி நியமிக்கப்பட்டவர்கள் மூலம் இவ் வதிகாரம் செயல்பட்டது.

54. 1 ஜாக். 1, c. 25, s. 46.

55. கார்டினர், 'பத்திரங்கள்', 245.

56. 13 கார். 2, சட். 1, c. 6 ; ராபர்ட்ஸன், 'பத்திரங்கள்', 29.

57. 14 கார். 2, c. 3.

58. பெருங்கலகம் ஒடுக்கப்பட்டதன் விளைவாக, மன்னரின் நேர் ஆட்சியின்கீழ் இயங்கிவந்த நிலையான தரைப்படை, மக்களின் சுதந்திரமான உரிமைகளுக்குத் தீமை பயப்பதாகக் கருதப்பட்டது. (உரிமைகள் மசோதா, 1688.) எனவே, கடுமையான நிபந்தனைகளுக்குட்பட்டு ஆண்டு தோறும் புதுப்பிக்கப்பட்ட சிறப்பான அதிகாரங்கள் இராணுவச் சட்டத்தால் (1 வில்லியமும் மேரியும், c. 5) மன்னருக்கு அளிக்கப்பட்டன. அதிலேயே அதிகாரம் 15.

59. பிட்டின் தரைப்படைச் சட்டம், 30 இரண்டாம் ஜார்ஜ், c. 25 ; ராபர்ட்ஸன், 'பத்திரங்கள்', 230 ; ஹாலம், 'அரசியல் சாசன வரலாறு', ii, 133 ; iii, 259-முதல்.

60. பழைய தரைப்படை 1908-ல் முடிவுற்றது எனினும், அப் பெயர் புதிதாகச் சட்டப்படி அமைக்கப்பட்ட படைக்குக் கொடுக்கப்பட்டது (பிராந்தியப் படை, தரைப்படைச் சட்டம், 1921, s. 2).

61. 1195-ல் ; மேலே பக். 123.

62. ஆணைகளை ரைமர் நூலில் காண்க, i, 281, 292, 442 ; 'பொறுக்குச் சாசனங்கள்', 364, 399.

63. இதுபற்றி முழுமையான செய்திக்கு, பி. எச். புட்னம், 'அமைதி காப்பு நீதிபதிகள்முன் நடவடிக்கைகள்' எனும் நூலைக் காண்க (அமேஸ் நிறுவனம்). இந் நூல் முந்திய நூல்களையெல்லாம் பயன்படுத்தியுள்ளது.

64. 'பொறுக்குச் சாசனங்கள்', 254.

65. சந்தேகப்படக்கூடிய நிலையில் ஏற்பட்ட மரணம், புதையல்கள் பற்றியவைகளைக் கொரனர்கள் விசாரணை செய்தனர். நாட்டின் திருச்சபையில் தஞ்சம் புகுந்தவர்களின் உறுதிமொழிகளைப் பெற்றனர். கவுன்டி மன்றங்களில் நாடு கடத்தப்படும் வழக்கு விசாரணைகளை மேற்கொண்டனர். கவுன்டியின் வழக்கில் ஷெரீஃபுக்குத் தொடர்பு இருந்தால், நீதிவிசாரணைபற்றிய ஆணைகள் ஷெரீஃபுக்குப் பதிலாகக் கொரனர்களுக்கு விடுக்கப்பட்டன. கிராஸ், 'கொரனர்களின் அட்டவணை' (செல்டன் கழகம்); டபிள்யூ. பிளேக் ஆட்ஜர்ஸ், 'தல ஆட்சி'; மெயிட்லந்து, 'அரசியல் சாசன வரலாறு', பக். 43–4; ஆர். எச். வெலிங்டன், 'மன்னரது கொரனர்', இரண்டு வால்யூம்கள் (1905—6)ஐக் காண்க. இப் பதவித் தோற்றம் குறித்து அண்மையில் ஏற்பட்ட விவாதங்கள்பற்றி, ஐ. எல். லாங்பீன், 'கொலம்பியா சட்டப் பரிசீலனை', 33, 1329—1365 நூலில் காண்க.

# 6. பாராளுமன்றத்தின் தொடக்கம்

தேசிய சபை இல்லாமல் இங்கிலாந்து ஒருபொழுதும் இருந்ததில்லை.[1] அதன் ‘ஆலோசனையுடனும் ஒப்புதலுடனும்’ அரசாங்கத்தின் அலுவல் நடைபெற்றது. வரலாற்றுத் தொடர்பை விடாது கொண்டிருப்பினும், இப்பாராளுமன்றத்தின் பெயர், அதிகாரங்கள், அரசியலமைப்பு முதலியவை அவ்வப்பொழுது மாறிக்கொண்டிருந்தன.

## தேசிய சபையின் தொடக்க அமைப்புகள்

பழைய ஆங்கிலேய விட்டானஜிமூட் எனும் சபையின் தன்மையையும் வேலைகளையும் தேவையான அளவிற்கு விவரித்து ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது.[2] நார்மானியர்களின் வெற்றிக்குப்பின், நிலமானியக் கொள்கை நாட்டில் தோன்றியதுமுதல், அறிஞர்களின் கூட்டம், குரியா ரெஜிஸ் எனப்பட்ட மன்னருடைய மான்யப் பிரபுக்களைக்கொண்ட மன்றத்தால் மறுபடியும் அமைக்கப்பட்டது. இராணுவ சேவை செய்வதால் பிணைக்கப்பட்டிருந்தவர்களும், மன்னருக்கு அடுத்தாற்போலிருந்த எல்லாக் குடியானவர்களும், அவர்களுடைய நிலங்கள் எவ்வளவு சிறியனவாக இருந்தபோதிலும், மன்னரின் தேசிய சபைக்கு அழைக்கப்பட்டால் அவர்கள் வரவேண்டியது முதற் கடமையாயிருந்தது. மேற்றிராணியார்களும், முக்கியமான மடாலயத் தலைவர்களும் ஓய்வின்றி வரவழைக்கப்பட்டனர். எனினும், பழைமையான விட்டான் சபையில், அவர்களின் தன்மை, நிலமான்ய முறையின்கீழ் வந்த உயர்குடிப் பிறந்தோரின் தன்மையில் நாளாவட்டத்தில் கலக்கலாயிற்று. ஏர்ல்களும் மன்றத்திற்கு வரும் உரிமையை இழக்கவில்லை. ஆனால், முக்கிய இராணுவ மான்யதாரர்கள், குரியா ரெஜிஸிற்குச் சட்டப்படி உரிமை பெற்றவர்களாயிருந்தபோதிலும், இவர்களில் யார்யாருக்கு அழைப்பு விடுக்கவேண்டுமோ அவர்களைத் தேர்ந்தெடுப்பதன் அதிகாரத்தை மன்னர் மேற்கொண்டார் என்பது நம்பத்தக்கதாகும்.[3] இவ்வாறாக,

விட்டானஜிமூட்டுகளின் அரசியலமைப்பிற்கு இயற்கையாகவே அமைந்த அதே தெளிவற்ற தன்மையும் உறுதியற்ற தன்மையும் மான்ய முறையின்கீழ் அமைந்த பெரிய மன்றங்களின் அம்சங்களாகத் தொடர்ந்து காணப்பட்டன.

**லௌகிக, சமயஞ் சார்ந்த பிரபுக்கள் :** 1086-ல் நடந்த புகழ் வாய்ந்த சாலிஸ்பரி கூட்டம் நீங்கலாக, எல்லாப் பிரதம மான்ய தாரர்களையும் கொண்ட முழுமையான சபை வேறெப்பொழுதும் நடைபெறவில்லை. 1086-ல் நடந்த கூட்டத்திற்கு பிரதம மான்யதாரர்களுடன் அவர்களின் கீழிருந்த மான்யதாரர்களும்,[4] 1116-ல் சாலிஸ்பரியில்[5] முதலாம் ஹென்றியால் நடத்தப்பட்ட சபைக்குப் பொதுவாக நிலச்சுவான்தாரர்கள் எல்லோரும் வந்திருந்தனர். அப்படியிருந்தும், சிறப்பான உதவித்தொகையை அளிக்கும் காரணத்தைக்கொண்டு சபைகள் கூட்டப்படும் பொழுது, எல்லாப் பிரதம மான்யதாரர்கள், அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்கள், மடத்துத் தலைவர்கள், ஏர்ல்கள், மூத்த மான்யப் பிரபுக்கள் முதலியவர்களைத் தனித்தனியாகவும், மற்றவர்களைப் பொதுவாக ஷெரீஃபின் மூலமாயும்[6] அத்தகைய கூட்டங்களுக்கு அழைப்பதாக மன்னர் உறுதிமொழி அளித்தார். அழைப்பு விடுக்கும் முறையில் காணப்பட்ட வித்தியாசம் — ஓர் அரை நூற்றாண்டுக் காலமாகவும்[7], ஒரு சமயம் அதற்கும் முன்னதாகவுமுள்ள காலத்திலிருந்தும் பின்பற்றி வந்துள்ள வித்தியாசம் — பிரதம மான்யதாரர்களிடையே நிலவிய ஏற்றத்தாழ்விற்குச் சான்றாகும். மகாசாசனத்தால் முறையாக ஒத்துக்கொள்ளப்பட்டிருந்தும், தேசிய சபைக்கு பிரதம மான்யதாரர்களில் கீழ்த்தரமானவர்கள் வருவது என்பது, அவர்களின் எண்ணிக்கை அதிகமாகிக்கொண்டிருந்ததால் (நில உரிமை முறை துண்டுதுண்டாகப் பிரிக்கப்படுவதால்) விரைவிலேயே நடைபெறக்கூடாததாக ஆயிற்று. அத்துடன் அவர்களுடைய ஏழ்மைத்தனமும், இருப்பிடத்திலிருந்து வெகு தொலைவில் நடக்கும் கூட்டத்திற்கு நேராக வருவதுபற்றிய தொல்லையும் மேலும் நடைபெறக்கூடாதிருத்தலுக்குக் காரணங்களாகலாம். இவ்வாறாகப் பழைய தேசிய சபை நாளடைவில் பொலிவிழந்து மிகப் பெரிய மான்யப் பிரபுக்களின் கூட்டமாக மாறியது; இறுதியில் வழிவழியாக வரும் முறையில் அமைந்த பிரபுக்கள் சபையாக மாறிற்று. பிரபுக்கள் சபை, நாட்டுப் பாராளுமன்றத்தின் மேல்சபையாகும்.[8]

**வழிவழி வரும் பிரபுக்கள் :** பிரபுக்கள் சபையின் வழிவழி வரும் தன்மை—இப்பொழுது நெடுநாள்களாக நிலையாகச் செய்யப்பட்டதாயும் அடிப்படையாயுள்ளதாயும் கருதப்படு

வது—மெதுவாக மான்யப் பிரபுக்களின் மான்யத்தை வமிசா வழி முறையில் பெற்றதாலும், அந்த உரிமையின் காரணமாக தேசிய சபைக்கு வரும்படி கட்டளை அனுப்புவதாலும் அத் தன்மை வளர்ந்துவந்துள்ளது. முதலாம் எட்வர்ட் மன்னரின் ஆட்சிக் காலம்முதல் மான்ய முறைப்படியுள்ள பிரபுக்களுடன் கூட மன்னரிடமிருந்து மான்யம் எதுவும் பெருத பிரபுக் களையும் அழைப்பதற்குக் கட்டளையிடும் உரிமையை மன்னர் வலியுறுத்தினர். அழைப்புக் கட்டளை நீடித்த தனி மனிதனின் உரிமையாகக்கூட முதலில் கருதப்படவில்லை யென்பது உறுதியானது. எனவே, வழிவழியாக வரும் உரிமையெனும் சொல்லே எழுவதற்கில்லை. ஆனல், மன்னருடைய உரிமைத் திருமுகத்தால் பிரபுக்களைப் புதிதாக உண்டுபண்ணுவது எனும் வழக்கம் ஏற்பட்டபொழுது (1387-ல் இரண்டாம் ரிச்சர்டின் காலத்தில் 11ஆவது ஹோல்ட் பகுதியைச் சேர்ந்த சர் ஜான் பியூசாம்ப் என்பாரைக் கிட்டர்மின்ஸ்டர் பகுதிக்கு பியூசாம்ப் பிரபுவாக ஏற்படுத்தியது முதன் முதலாகக் கிடைத்த எடுத்துக் காட்டாகும்) நில உரிமையை விடுத்து, பிரபுக்களின் வழிவழிமுறைத் தன்மையை ஏற்படுத்தியதாகக் கருதலாம்.[9] இப்பொழுதும் இம் முறையில் விதிவிலக்கு இல்லாமல் இல்லை.

**சமயஞ் சார்ந்த பிரபுக்கள் :** பிரபுக்கள் சபையில் மேற் றிராணியார்கள் இருப்பது வழிவழியாகப் பெற்ற உரிமைக்கு விலக்காயுள்ளதுடன், இம்மாதிரி உரிமை அக்காலங்களிலும் இல்லையென்பதற்குத் தொடர்ந்து காணப்படும் சான்ருகும். 1539-ல் எட்டாம் ஹென்றியால் மடங்கள் அழிக்கப்படும்வரை யிலும், மடத்துத் தலைவர்களும் குருமார்களும் மேற்றிராணி யார்களுடன் அமர்ந்திருந்தபொழுதும், சமயஞ் சார்ந்த பிரபுக்கள் லௌகீகப் பிரபுக்களைவிட எண்ணிக்கையில் அதிக மாயிருந்தனர். மடத்துத் தலைவர்களும் குருமார்களும் விலக்கப் பட்ட பின்னரும், பிரபுக்கள் சபையில் மூன்றிலொரு பங்கு இடத்தை மேற்றிராணியார்கள் கொண்டிருந்தனர்.[10]

## தேர்தலும் பிரதிநிதிக் கொள்கையும்

சாதாரணமான பிரதம மான்யதார், நாளடைவில் சுதந் திரமான நிலச்சுவான்தார்களுடன் ஒன்றுசேர்ந்ததால் தேசிய சபைக்கு நேரில் செல்லுவது எனும் உரிமை, பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் செயல்முறை உரிமைக்கு மாற்றப்பட்டது. இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், தேர்ந்தெடுக்கிறவர்

களின் சார்பில் வரிவிதிப்புச் செய்வதை ஒத்துக்கொண்டனர். தேர்ந்தெடுத்தல், பிரதிநிதித்துவம் எனும் இரு கருத்துகளும், தனித்தனியாகவும், சேர்ந்தும் தேசியப் பாராளுமன்றத்தின் அரசியலமைப்பில் புகுத்தப்படுவதற்கு நெடுநாள்கள் முன்னதாகவே, சட்டம், அரசினர் வருவாய்க்குரிய முறைகளில் பயன்படுவதை மக்கள் நன்கறிந்திருந்தனர். கருத்தளவிலும் செயல்முறையிலும் ஆங்கிலேய மன்னரின் பதவி, தேர்தல் முறையில் அமைந்திருந்தது. சமயஞ் சார்ந்த குருமார்களால் மேற்றிராணியார்கள் தேர்ந்தெடுக்கப்படுவதாகக் கருதப் பட்டது; அதேபோன்று உடனிருக்கும் துறவிகளால் மடத்துத் தலைவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 1221-லிருந்து டொமினிகன் துறவிகள், தேர்ந்தெடுக்கப்பட்ட குருமார்களையும் பிரதிநிதிகளையும்கொண்ட சபைகளைக் கொண்டிருந்தனர். கிறித்தவ சமயஞ் சார்ந்த விதிகளை வகுக்கும் குருமார்கள், செயல் முறையில் இவ்வாறு ஒரு குழுவை அமைத்தனர்.[11] இதிலிருந்து தத்துவ அறிஞர்கள், பிரதிநிதித்துவம் பற்றிய கொள்கையைத்[12] தோற்றுவிக்கவேண்டியதாயிற்று. ஹண்ட்ரட் பகுதியினுடையவும் மாவட்டப் பகுதியினுடையவுமான தல நீதிமன்றங்களுக்கு ஒவ்வொரு பட்டணத்திலிருந்தும் பிரதிநிதிகளாக ரீவும் நான்கு பேர்களும் வந்தனர். ஒவ்வொரு பரோவிலிருந்தும் பன்னிருவர் அதேபோன்று வந்தனர். பின்னர், இரண்டாம் ஹென்றியால் வகுக்கப்பட்ட ஜூரி விசாரணை முறையிலும் தேர்தல், பிரதிநிதித்துவம் முதலியவைகளின் கொள்கைகள் எல்லாவிதமான அலுவல்களிலும்—அரசிறை வருவாய், நீதி, ஆட்சித்துறை போன்றவை—வெற்றிகரமாகப் பயன்படுத்தப்பட்டது. ஷெரீஃபினால் ஆணையிட்டு அழைக்கப்பட்டு மிக்குயர் ஜூரியில் அடையாளங் காணும் சான்றுளராக நியமிப்பதற்காக உறுதிமொழியுடன் வந்த நான்கு நைட் வீரர்களை நோக்கும்பொழுது, கவுன்டியின் பிரதிநிதித்துவத்தின் முதன்முதலான தோற்றத்தைக் காண்கிறோம்.[13]

**செயின்ட் ஆல்பன்ஸ், 1213:** மாவட்டங்களில் நெடுநாள்களாயிருந்த பொதுமக்கள் சபையில் (ஃபோக்மூட்) காணப்பெற்ற பிரதிநிதித்துவக் கொள்கையைத் தேசிய சபைக்கு முதன்முதலில் விரிவுபடுத்தியதாகக் கருதப்படும் கூட்டம், செயின்ட் ஆல்பன்ஸ் எனுமிடத்தில், 1213-ல் ஆகஸ்டு 4-ல் கூட்டப்பட்ட சபையாகும். இது, ஜான் மன்னர், போப்பாண்டவருக்கு அடிபணிந்ததன்பின், வெளிநாட்டுச் சேவைபற்றி வடபாகத்திலுள்ள மான்யப் பிரபுக்களுடன் தோன்றிய வழக்

கின்பொழுது நிகழ்ந்தது. இச் சபைக்கு, வெண்டோவரைச் சேர்ந்த ரோஜர் என்பார் கூறியுள்ளபடி, மேற்றிராணியார்கள், மான்யப் பிரபுக்கள் இவர்களுடன், மன்னரின் தனியுரிமை நிலத்தில் அமைந்திருந்த ஒவ்வொரு பட்டணத்திலிருந்தும் பட்டணத்து ரீவும் நான்கு பேர்களும் வரவழைக்கப்பட்டனர். இவ்வாறு அழைக்கப்பட்ட பிரதிநிதிகள் கலந்துகொண்டனரா என்பதுபற்றிக் காலவழிச் செய்திகளைத் தொகுத்துக் கூறு கூறுகிறவர் தெளிவுபடுத்தவில்லை. இச் சபை உடனடியாகக் கவனிக்கவேண்டியது, திருச்சபைக்கு நஷ்டவீடாகக் கிடைக்க வேண்டிய தொகையை மதிப்பீடு செய்வதாயிருந்தது. ஆனால், சபையில் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த பல்வேறு விஷயங் களும் விவாதிக்கப்பட்டதாகத் தெரிகிறது.) இச் சபையினர், பிரதிநிதிகளா யிருந்தனரா என்பதுபற்றி ஐயமெழலாம். சபைக்கு வந்த நால்வரும், 1208-ல் பறிமுதல் செய்வதற்கான மன்னருடைய நடவடிக்கைகளைத் தலத்திலேயே மேற்பார்வை யிட்ட 'சட்டம் சார்ந்த நால்வரா'யிருக்கலாம் எனும் எண்ணம் வெளியிடப்பட்டுள்ளது. காலவழிச் செய்திகளைத் தொகுத் துரைப்போரின் சுருக்கமான விவரக் குறிப்புகள், மிகுந்த ஊகத்திற்கு இடமளிப்பதால், ஆங்கிலேய அரசியலமைப்பின் வரலாற்றில் இந் நிகழ்ச்சியின் உரிய இடத்தை வரையறுத்துக் கூறுவதென்பது கடினமாயுள்ளதாகும். எனினும், நிகழ்ச்சியின் நோக்கம் மறுக்கமுடியாததாகும்.[14]

தேசிய சபைக்கு ஷயர்களிலிருந்து (மாவட்டம்) பிரதி நிதிகளை வரவழைத்ததற்கு நான்கு எடுத்துக் காட்டுகள், டி மான்ஃபர்ட்டின் 1265-ல் புகழ்பெற்ற பாராளுமன்றத்திற்கு முற்பட்டனவாகவுள்ளன. இப் பாராளுமன்றம், 'பொதுமக் களின் பிரதிநிதித்துவத்தின் தோற்றம்' எனத் தவருகக் கூறப்படுகிறது.[15]

ஆக்ஸ்ஃபர்டு, *1213*: (*1*) முதலாவது, ஜான் மன்னருக்கும் மான்யப் பிரபுக்களுக்குமிடையே நிகழ்ந்தது. அப்பொழுது, இரு பிரிவினர்களும், கவுன்டிகளிலுள்ள குடியானவர்களின் உதவியை நாடவேண்டி வந்தது. 1213-ல் ஷெரீஃபுகளுக்கு மன்னர் விடுத்த ஆணையின்படி, ஒவ்வொரு ஷயரிலிருந்தும் புத்திகூர்மையான நான்கு நைட் வீரர்களை 'நாட்டின் விவ காரங்களைப்பற்றி நம்முடன் பேசுவதற்காக' ஆக்ஸ்ஃபர்டுக்கு நவம்பர் மாதம் 15ஆம் நாள் அனுப்புமாறு உத்தரவிடப் பட்டது.[16] இவ் வாணையின் வாசகத்தில், கவுன்டியால் இந் நான்கு நைட் வீரர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டியதா

அல்லது ஷெரீஃப்பின் விருப்பப்படி அனுப்பப்பட வேண்டியதா என்பதுபற்றித் தெளிவாக ஒன்றும் காண்பதற்கில்லை; எனினும், கவுன்டி நீதிமன்றங்களுக்கு நான்கு நைட்வீரர்களைத் தேர்ந்தெடுக்கும் முறை ஏற்கெனவே ஏற்றுக்கொள்ளப்பட்டு வழக்கத்தில் இருந்துவந்துள்ளது. இந் நான்கு நைட்வீரர்கள், சிவில் வழக்குகளில் மெய்பகருவதற்கும், மிக்குயர் ஜூரியில் குற்றவாளிகளை அறிமுகப்படுத்தி நேரில் ஒப்புவிப்பதற்கும் தேர்ந்தெடுக்கப்பட்டுவந்தனர். இதைக் காரணமாகக்கொண்டு, மக்கள் வழக்கிலிருந்த முறையைப் பின்பற்றி, பொதுச் சபையில் கவுன்டிகளின் புதிதாக ஏற்பட்ட பிரதிநிதித்துவத் திற்காகத் தேர்தல் நடந்திருக்கக்கூடுமென முடிவு செய்யலாம். ஜான் மன்னருடைய சாசனத்தின் (1215) 14ஆவது விதி யின்படி, சிறிய மான்யப் பிரபுக்கள் பொதுவாக ஷெரீஃப்பால் கட்டளையிட்டு அழைக்கப்பட வேண்டியதற்கு வாக்குறுதி அளிக்கப்பட்டுள்ளது. இதில் கூட்டத்திற்கு நேரில் வருவதற்கு அவர்களுக்கிருந்த உரிமையை ஒத்துக்கொண்டிருந்தும், இதற்கு முன்னர், இரண்டாண்டுகளுக்குள்ளாகவே வழக் கத்தில் வந்துள்ள கவுன்டி பிரதிநிதித்துவ முறையைக் கொண்டு செயல்படுத்துவதற்கு ஏற்றதாகக் கொள்ளப்பட் டிருக்கலாம்.

தேசியச் சபையில், கவுன்டிகளின் பிரதிநிதிகள் கலந்து கொண்டதாகப் பதிவேடுகளில் மறுபடியும் காண்பதற்குள் நாற்பது ஆண்டுகள் கடந்துசென்றன. இக்காலத்தில் அரசிறை வருவாய் போன்ற பல்வேறு செய்திகளை நோக்குவதற்கு, கவுன்டி மன்றத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை அதிகமாகப் பயன்படுத்தியது நன்கு காணக்கிடக்கின்றது. 1220-லும் 1225-லும் விடுக்கப்பட்ட மூன்றும் ஹென்றியின் ஆணைகள், அரசாங்க உதவிக் கொடைகளை மதிப்பீடு செய்து வசூலிப்பதற்காக நைட் வீரர்கள் தேர்ந்தெடுக்கப்படுவதைப் பற்றி உத்தரவிட்டன.[17] 1226-ல் எட்டுக் கவுன்டிகளிலுள்ள ஷெரீஃப்புகளுக்கு, லிங்கனிலிருந்த மன்னரிடம், மகாசாச னத்தை மீறியதாகக் குற்றம் சாட்டப்பட்டதைக் குறித்து ஷெரீஃப்புகளின்மீது குற்றம் கூறுவதற்கு, ஒவ்வொரு கவுன்டி யிலுமிருந்து நான்கு வீரர்களைத் தேர்ந்தெடுத்தனுப்புமாறு ஆணைகள் கட்டளையிட்டன.[18] 1246-ல், லண்டனிலிருந்து மத குருமார்கள், ஏர்ல்கள், மான்யப் பிரபுக்கள் வந்து கூடிய பொதுச் சபைக்கு, முதன்முதலாக அக்காலத்தில் வாழ்ந்த வரும், வழிமுறைச் செய்திகளைத் தொகுத்தவருமான மாத்யூ பாரீஸ் என்பார், 'பாராளுமன்றம்' எனப் பெயரிட்டுள்ளார்.[19]

முன்னர்க் கூடிய பல்வேறு சபைகளுக்கு ஆராய்ந்துபாராமல் இப்பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. அது முதல், பல ஆண்டுகள் வரை அதற்கெனச் சிறப்பாக இல்லாவிட்டாலும், தேசிய சபைக்குப் 'பாராளுமன்றம்' எனும் சிறப்புப் பெயர் ஏற்படலாயிற்று.[20]

**வெஸ்ட்மின்ஸ்டர், 1254 :** (2) கவுன்டியின் பிரதிநிதித்துவத்தை இரண்டாவதாக 1254-ல் கூடிய பாராளுமன்றத்தில் காண்கிறோம். அப்பொழுது மூன்றும் ஹென்றி, காஸ்கனியிலிருந்தார். ஆள்களும் பொருள்களும் அவருக்குத் தேவையாயிருந்தன. அந்த அவசர நிலையில், மன்னருக்கு எந்த அளவு உதவியளிப்பதென்பது குறித்து முடிவு செய்வதற்காக, மன்னருடைய உத்தரவின்பேரில், இராணி எலியனுரும், காரன்வால் ஏர்லும், ரீஜன்டுகளும், ஒவ்வொரு கவுன்டியிலிருந்தும் சட்டத்திற்குட்பட்டவர்களும் விவேகமுள்ளவர்களுமான இரு நைட் வீரர்களைக் கவுன்டியிலுள்ளவர்களுக்காகவும் மற்றும் எல்லோருக்காகவுமாகத் தேர்ந்தெடுத்து, மற்றக் கவுன்டிகளுடைய நைட் வீரர்களுடன் வெஸ்ட்மின்ஸ்டரில் அரசருடைய மன்றத்திற்கு அனுப்புதற்காக ஆணைகளைப் பிறப்பித்தனர். இவ்வாணைகளில் உறுதியானதும் உறுதியற்றதுமான முக்கியத்துவம் காணப்பெற்றது. ஒருபுறத்தில் கவுன்டியால் இரு நைட் வீரர்கள் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமெனத் தெளிவாகக் கட்டளையிடப்பட்டுள்ளது. அதாவது, கவுன்டி நீதிமன்றங்களிலும், அத்துடன் கவுன்டி முழுமைக்கும் அவர்கள் பிரதிநிதிகளாவார்கள் எனவும், சபையில் உறுதியுடன் எடுத்துச்சொல்லுகிறவர்களாயும் இருப்பர் எனவும் ; மற்ருெருபுறம் பிரதம மான்யதார்களுக்கும் நைட் வீரர்களுக்கும் தேர்ந்தெடுக்கும் உரிமைபற்றி எவ்விதத் தடையும் விதிக்கப்படவில்லை எனவும் தெரிகிறது. அக் காலத்தில் எவ்விதமான தடையும் இருக்கவில்லை என்பதற்கு இவை போதுமான சான்ருகும்.[21]

மூன்றும் ஹென்றியின் உண்மையற்ற தன்மையும்,—அவர், மகாசாசனத்தைக் குடிமக்கள் அடிக்கடி பக்தியுடன் உறுதிப்படுத்தியதையும் கவனியாது, பிடிவாதத்துடன் அலட்சியம் செய்ததும்,—வெளிநாட்டிலிருந்து வந்துகொண்டிருந்தவர்களிடம் மிகுந்த நேசம் காட்டி அவர்களிடம் மிக்க பற்றுதல் கொண்டிருந்ததும், அவரது மகனை எட்மண்டு என்பாருக்கு சிசிலித் தீவின் முடியைப் பெறுவதற்காக மிக்க செலவில் எடுத்துகொண்ட முயற்சியின் காரணமாக அவரது அறிவற்ற

தன்மையும் வீண்செலவும், போப்பாண்டவருக்கு ஆதரவு முதலியவை தந்ததும், அவரது குடிமக்களில் எல்லாப் பிரிவினரிடையேயும் பகைமையையும் வெறுப்புணர்ச்சியையும் உண்டுபண்ணின. இவ்வுணர்ச்சிகள், ஜான் மன்னருக்கு எதிராக முன்பு ஒன்றுசேர்ந்து உருவாகிய உணர்ச்சிகளை மிஞ்சாவிடினும் அவைகளுக்குச் சற்றும் குறைவுபடாம லிருந்தன.

**ஆக்ஸ்ஃபர்டு ஷரத்துகள், 1258:** 1258-ல் ஏப்ரல் 2ஆம் நாள் லண்டனில் கூடிய மகாசபை அல்லது பாராளுமன்றம் பெருங் குழப்பத்தில் முடிந்தது. மே மாதம் 5ஆம் நாள் வரை நடந்த கடுஞ் சொற்போருக்குப்பின், மான்யப் பிரபுக் களின் வழிக்கு அடிபணியவேண்டியிருந்ததை மன்னர் உணர்ந் தார்.[22] அவர்கள் விருப்பப்படி இருபத்துநான்கு பேர்களடங் கிய ஒரு குழுவை நியமிப்பதற்கு மன்னர் ஒப்புக்கொண்டார்; இவர்கள் ஜூன் மாதம் 11ஆம் நாள் ஆக்ஸ்ஃபர்டில் கூட்டப் படவிருந்த பாராளுமன்றத்தில் தேர்ந்தெடுக்கப்பட வேண்டி யவர்கள். இவர்களில் பன்னிருவர் பிரபுக்களாலும், மற்றும் பன்னிருவர் மன்னராலும் தேர்ந்தெடுக்கப்படவேண்டிய வர்கள். இவ்வாறு தேர்ந்தெடுக்கப்பட்ட இருபத்துநான்கு பேர்களிடம் தேவையான சீர்திருத்தங்களையெல்லாம் செய்வ தற்கு எல்லையற்ற அதிகாரம் ஒப்படைக்கப்பட்டது. ஆக்ஸ் ஃபர்டு ஷரத்துகள் எனப்படும் விதிகளடங்கிய ஒரு பகுதியைத் தயாரித்தலுடன் அவர்கள் பணியைத் தொடங்கினர். இந்த ஷரத்துகளின்படி அரசாங்கத்தின் அதிகாரங்கள் எல்லாம் பிரதிநிதித்துவம் வாய்ந்த ஒரு சிறுகுழுவினிடம் விடப்பட்டன.[23] இந்த இருபத்துநான்கு பேர்களில் ஒவ்வொரு பன்னிரண்டு பேர்களடங்கிய பிரிவு மற்றொரு பன்னிரண்டு பேர்களடங்கிய பிரிவிலிருந்து இருவரைத் தேர்ந்தெடுத்து, இவ்வாறாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நால்வருமாகச் சேர்ந்து தொடர்ந்து செயல்புரியும் நாட்டு மேல்சபையாக அமைந்த பதினைந்து பேர்களைத் தேர்ந்தெடுத்தனர். வெனிஸ் நாட்டு அரசியலமைப் பைப்போன்று இது சிக்கலான முறையாயிருந்தது. 24 பேர்க ளடங்கிய மற்றொரு குழு, போரில் மன்னருக்குத் தேவையான உதவியைக் கவனிக்கும் தனியான வேலையை மேற்கொண்டது. அத்துடன் பாராளுமன்றத்திற்கு அடிக்கடி வந்துபோவதால் ஏற்படும் செலவை மற்ற உறுப்பினர்களுக்குக் குறைப்பதற் காக இக்குழு ஏற்பட்டதாகக் கூறப்பட்டது. (பாராளுமன்றம் ஆண்டிற்கு மூன்று முறைகள் கூடவேண்டியதாயிருந்தது.) தவிர, 'நேர்மையான பன்னிருவர்' அடங்கிய மற்றொரு குழு,

மக்களின் பிரதிநிதிகளாக மான்யப் பிரபுக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்று, மன்னர் சபையின் சாதாரணத் தேவைகளைக் கவனித்துவந்தது.[24]

ஆக்ஸ்ஃபர்டு பாராளுமன்றத்திற்கு ஷயர்களிலிருந்து பிரதிநிதிகள் வரவழைக்கப்படாவிட்டாலும், ஷரத்துகளின்படி, கவுன்டிகளில் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் முறையைப் பயன்படுத்திக் குறைகளை விசாரிப்பதற்காக 'அறிவிற் சிறந்தவர்களும் சட்டத்திற்குட்பட்டவர்களுமான நான்கு நைட் வீரர்களைத்' தேர்ந்தெடுக்குமாறு ஒவ்வொரு கவுன்டிக்கும் உத்தரவிடப்பட்டது. ஷரத்துகள்படி தேர்தல், பிரதிநிதித்துவம் எனும் கொள்கைகள் நாட்டின் ஆட்சிக்குழுவை அமைப்பதில் பயன்படுத்தப்பட்டன. பாராளுமன்றத்தில் பொதுமக்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கு அக் கொள்கைகள் பயன்பட்டன. இந்த ஷரத்துகளில், மான்யப் பிரபுக்கள், 'பொதுமக்களின் கட்சி' எனப் பெயரிட்டழைக்கப்பட்டனர். அவர்கள் ஷரத்துகளை மன்னர் பின்பற்றுவதாக ஆங்கிலத்தில் வெளியிடப்பட்ட பேரறிவிப்பில், 'எங்களாலும், எங்கள் நாட்டில் வாழ் மக்களாலும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள்'[25] என அவரது ஆலோசனையாளர்களைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார்கள். இச் சொற்றொடர், 1086–ல் சாலிஸ்பரி சமவெளியில் மன்னர் வில்லியத்தின் ஆணைப்படி கூட்டப்பட்ட கூட்டத்திற்கு வந்திருந்த 'நில உரிமைக்காரர்களை' நினைவு படுத்துவதாயுள்ளது. இதிலிருந்து, மான்யப் பிரபுக்கள் அல்லது பிரதம மான்யதாரர்கள் மாத்திரமன்றி, நாட்டின் எல்லா நிலச்சொந்தக்காரர்களும் ஆட்சிக் குழுவில் நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ பிரதிநிதித்துவம் கொண்டிருந்தனர் என்பது தெரியவரும்.

**செயின்ட் ஆல்பன்ஸ், 1261:** (3) 1261-ல் மன்னர், ஆக்ஸ்ஃபர்டு ஷரத்துகள் தன்னைக் கட்டுப்படுத்தாது என வெளிப்படையாகக் கூறியதன்விளைவாக உள்நாட்டுப்போர் மூண்டது. இப் போரின்போது, பிரபுக்களின் கூட்டம், செயின்ட் ஆல்பன்ஸ் என்னுமிடத்திற்கு, ஒவ்வொரு கவுன்டியிலுமிருந்து மூன்று நைட்வீரர்களை 'ஒன்றுசேர்ந்து நாட்டின் பொது விவகாரங்களைக் கலந்தாலோசிக்க' வரவழைத்தது. இதைக் கண்ட மன்னர், போட்டியாக, விண்ஸரில் தங்கியிருந்த அதே நைட் வீரர்களை, அவரிடம் ஏற்கெனவே குறிப்பிடப்பட்டிருந்த நாளில், ஏற்கெனவே உறுதியளிக்கப்பட்டிருந்தவைபற்றிப் பேச்சுவார்த்தை நடத்த விரும்புகிறவர்களை அனுப்புமாறு ஷெரீஃபுகளுக்கு ஆணையிட்டார்[26].

**டி மான்ட்ஃபோர்டின் முதல் பாராளுமன்றம், 1264 :** (4) 1264-ல் மே மாதம் 14ஆம் நாளன்று லூவிஸ் சண்டையில் பெற்ற உறுதி வெற்றியைத் தொடர்ந்து மன்னரும் இளவரசன் எட்வர்டும் சரணடைந்ததால், சைமன் டி மான்ட்ஃபோர்ட் நாட்டின் மேலான அதிகாரியானார். ஃபிரான்சைச் சேர்ந்த செயின்ட் லூயி என்பார் சமரசம் செய்து ஹென்றிக்குச் சாதகமாக அவர் அளித்த தீர்ப்பு (ஜனவரி 23, 1264) உள்நாட்டுப் போரை மேலும் வளர்ப்பதற்குப் பயன்பட்டது. எனினும், லூவிஸ் எனுமிடத்தில் நடந்த சமரச முடிவுகளில் மன்னருக்கும் பிரபுக் களுக்குமிடையே தோன்றியுள்ள எல்லாப் பிரச்சினைகளையும் குறித்து அவற்றை இரண்டாவது மத்யஸ்தர்களின் (நடுவர் தீர்ப்பிற்கு) முடிவுக்கு விடுவதெனும் ஒரு ஷரத்துச் சேர்க்கப் பட்டது. இதற்கிடையில் டி மான்ட்ஃபோர்ட், அரசருடைய எல்லாக் கோட்டைகளிலும் நட்புள்ள படைகளை வைத்து, மன்னருடைய பெயரில் ஆணைகளை வெளியிட்டார். ஒவ்வொரு கவுன்டியிலும் அமைதி இரட்சகர்கள் எனப்படும் சிறப்பு அதிகாரம்கொண்ட குற்றவிசாரணை செய்யும் அதிகாரிகளை நியமித்தார். அத்துடன் லண்டனில் கலந்தாலோசித்து முடிவு செய்ய, பாராளுமன்றத்திற்கு நாட்டு விவகாரங்களைப்பற்றி நம்முடன் நாட்டு மக்கள், மன்னருடைய சம்மதத்துடன் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும், சட்டத்திற்குட்பட்டவர்களும், விவேகமுள்ளவர்களுமான நான்கு நைட் வீரர்களை அனுப்பு மாறும் கட்டளை பிறப்பித்தார்.[27]

**டி மான்ட்ஃபோர்டின் இரண்டாவது பாராளுமன்றம், 1265 :** கைஸோ[28] என்பார் அழைக்கிறபடி, சைமன் டி மான்ட் ஃபோர்டை, 'இங்கிலாந்தில் பிரதிநிதித்துவ அரசாங்கத்தைத் தோற்றுவித்தவர்' எனக் கருதாவிட்டாலும், 'பொதுமக்கள் சபையைத் தோற்றுவித்தவர்'[29] என அவரைக் குறிப்பிடு வதற்கு நியாயமுண்டு. நாட்டின் நிலச்சுவான்தாரர்களுக்கு மாத்திரம் பிரதிநிதிகளாக ஷயர்களிலிருந்து வந்த நைட் வீரர் களின் சபை, பெரிய பிரபுக்களுடன் மரபு, ஊக்கம், அபிமானம் முதலியவைகளால் நெருக்கமாகச் சேர்க்கப்பட்டிருந்தும், நாட்டின் எல்லாப் பொதுமக்களுடைய சார்பிலும் பெயரிலும் பேசுவதற்கான, மக்கள் ஆதரவுபெற்ற மன்றமாக ஒரு போதும் அமைய இயலாது. லீஸ்டர் பிரபுவான சைமனை இங்கிலாந்தின் அரசியலமைப்பினுள், உண்மையான ஆதரவும் முற்போக்குமுடைய நாட்டு மக்களினத்தைச் சேர்த்துக் கொள்ளுவதில் முதல்வராயிருந்தார் எனும் அழியாப் புகழும் சாரும்.[30] 'ஆண்மையையும் மகிழ்ச்சியையுமுடைய இப்

புதுமை 1264–ல் டிசம்பர் 14ஆம் நாளில் நிறைவேற்றப் பட்டது. (49ஆவது மூன்றும் ஹென்றி) சிறைப்பட்டிருந்த மன்னரின் பெயரால், டி மான்ஃபர்ட், புகழ்பெற்ற தனது பாராளுமன்றத்தை லண்டனில் அடுத்த ஆண்டு ஜனவரி இருபதாம் நாளில் கூட்டினர். ஒவ்வொரு ஷயரிலிருந்தும் இரண்டு நைட் வீரர்களுடன், ஒவ்வொரு நகரத்திலிருந்தும் இரு குடிமக்களையும், ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் இரு கிராம வாசிகளையும் அனுப்புமாறு எல்லா ஷெரீஃபுகளுக்கும் ஆணை யிடப்பட்டது.[31]

**கிராமங்களின் பிரதிநிதித்துவம்:** சார்ந்திருந்த தன்மையி லிருந்து இங்கிலாந்து நாட்டின் நகரங்கள் சுதந்திரம், செல்வம், அரசியல் வாக்குரிமை முதலானவைகளை மெதுவாக அடைந்துகொண்டிருந்தன. மன்னருடைய தனியுரிமை நிலம் அல்லது சமயஞ்சார்ந்த அல்லது லௌகீகப் பிரபுக்களின் தனி யுரிமை நிலங்கள், டல்லேஜ் போன்ற விருப்பப்படி விதிக்கப் படும் வரிவிதிப்புகளுக்கு நெடுநாள்களாக உட்பட்டிருந்தன. நார்மானியர்களின் வெற்றிக்கு முன்னதாகவே ஹண்ட்ரட் எனும் பகுதியில் அடங்கியிருந்த நிலையை விடுத்து நகரங்கள் தனிமையைப் பெற்றுவிட்டன. ஹண்ட்ரட் மன்றத்திற்குச் செல்லுவதற்குப் பதிலாக நகர மக்கள் தங்களுடைய மன்றத்தை நிறுவினார்கள். இதற்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட அல்லது நியமிக்கப்பட்ட ரீவ் என்பவர் தலைமை தாங்கினர். இவருக்குதவியாக ஆலோசனை கூறுகிறவர்களடங்கிய குழுவு மிருந்தது.[32] கிராமங்கள் செல்வத்திலும் மக்கள் தொகை யிலும் வளர்ச்சியுற்றபொழுது, கிராம மக்கள் அவர்களுடைய பிரபுக்களுக்குத் தனித்தனியாகச் செலுத்தவேண்டிய தொகை களுக்குப் பதிலாகக் குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி, கிரா மத்தின் நிலவுரிமையை விலைக்குப் பெறத் தொடங்கினர். இவ்வாறு அளிக்கப்படும் உரிமை கிராமம் முழுமைக்கும் பொருந்துவதாயிருக்கும்; பின்னர் கிராமத்தார்களுக்குள் அவரவர் விருப்பப்படி செலுத்தப்பட்ட தொகையைப் பங்கு பிரித்து ஈடுசெய்துகொண்டார்கள். நகரவாசிகள் அவர் களுடைய வீடுகள், தங்குமிடங்கள் முதலியவைகளை நகர உரிமையுடன் சுதந்திரமாகப் பெற்றனர். இவ்வாறு சுதந்திரம் பெற்றது, சுதந்திரமான ஊழிய மான்யத்தை ஒத்திருந்த துடன், ஆண்டுதோறும் தலைமைப் பிரபுவுக்குக் குறிப்பிட்ட தொகையை வாரமாகச் செலுத்த வேண்டியதாயுமிருந்தது. நார்மானிய வெற்றிக்கு இருநூறு ஆண்டுகள் கழிவதற் குள்ளாக, குடிமக்களும் நகரவாசிகளும், பணத்தேவை மிகுந்

திருந்த மன்னர்களிடமிருந்து, அளவில் வேறுபட்ட, ஆனால், தேர்ந்தெடுக்கப்பட்டவர்களும் பிரதிநிதிகளுமான மாஜிஸ்டிரேட்கள்மூலம், சுதந்திர ஆட்சியை ஒத்துக்கொள்ளும் சுதந்திரச் சாசனங்களை வலிந்து பெற்றனர்.[33]

கவுன்டிகளில் நடந்ததைப் போன்று, நகரங்களும், பிரதிநிதித்துவ முறை அரசியலுக்கு விஸ்தரிக்கப்படுமுன், நீதி, நிதி சார்ந்த விஷயங்களில் முதன்முதலாகப் பயன்படுத்தின. ஷயர் நீதிமன்றங்களில்—பழைய மக்கள் சபை அல்லது மன்றம்—தேசிய ஒற்றுமை வளர்க்கும் மூலப்பொருள்களெல்லாம் தொன்றுதொட்டே ஒன்றாகக் கூடுவது வழக்கமாயிருந்ததுடன், மேற்றிராணியார்கள், மதிப்பிற்குரிய குருமார்கள், ஏர்ல்கள், பிரபுக்கள், நைட்வீரர்கள், சுதந்திரக் குடியானவர்கள் ஆகியோர் நேரிலேயும்,[34] மற்றும் நகரத்திலுள்ளவர்கள் அவரவர் நகரத்தினுடைய பிரதிநிதிகளான ரீவும், நான்கு பேர்களுமாக இக் கூட்டத்திற்கு வந்தனர். நகரங்கள் நாளடைவில் இணைக்கப்பட்ட நகராட்சிகளாக ஆனபொழுது, அவைகளும் ஷயர்களின் மன்றத்திற்குத் தங்களுடைய பிரதிநிதிகளை அனுப்பின. 1231-ல் மூன்றாம் ஹென்றியால் யார்க்ஷயர் ஷெரீஃபுக்கு, சுற்றிவரும் நீதிபதிகளின் முன்பாக, கவுன்டி நீதிமன்றத்தைக் கூட்டுவதற்காக அனுப்பப்பட்ட ஆணையில், ஷெரீஃபு, ஏற்கெனவே குறிப்பிடப்பட்டுள்ள பேர்களுடன், ஒவ்வொரு நகரத்திலுமிருந்து பிரதிநிதிகளாகப் பன்னிரு சட்டத்திற்குட்பட்ட நகரவாசிகளையும் அனுப்புமாறு செய்ததில் பிரதிநிதித்துவ முறை தெளிவாகிறது.[35]

வெகுகாலத்திற்கு முன்பிருந்த முக்கிய நகரங்களில் வாழ்ந்த செல்வந்தர்களான நகரவாசிகள் பொதுச்சபைக்கு ஒருகால் நேரில் சென்றுவந்திருக்கக்கூடும்.[36] 1246–ல் ஆங்கில நாட்டுப் பிரபுக்களும் மான்யப் பிரபுக்களும் பெருஞ் செல்வந்தர்களின் சார்பில் குறிப்பிடப்பட்டிருப்பதுடன், துறைமுகங்களின் பிரபுக்கள், குருமார்கள், நாட்டு மக்கள் முதலானவர்களுடைய சார்பிலும் போப்பாண்டவருக்கு ஒரு கடிதம் எழுதப்பட்டிருக்கிறது.[37] எனினும், சிங்க் போர்ட்ஸ் எனும் ஐந்து பட்டணங்களைச் சார்ந்த பிரபுக்களையோ அல்லது 1265ஆம் ஆண்டுக்கு முன்னர் பாராளுமன்றத்திற்கு வந்ததாகச் சில சமயங்களில் குறிக்கப்பட்டுள்ள நகரவாசிகளையோ பிரதிநிதித் தன்மையில் வந்தவர்களாகக் கூறுவதற்கு ஆதாரமில்லை. வரிவிதிப்புக்குச் சம்மதத்தைப் பெறும் நோக்கத்துடனே நகரங்களிலிருந்து பிரதிநிதிகள் வரவழைக்கப்பட்டனர். அதுவரை மன்னருக்கு

ஒவ்வொரு நகரத்து எக்செக்கரையும் சேர்ந்த அதிகாரிகளைக் கொண்டு தனி யுரிமையான நிலத்திலிருந்து வரி விதிப்பது பற்றித் தனியாக நடத்துவதை மன்னர்கள் சுலபமாகக் கருதி வந்தனர்.

**பாராளுமன்றம் உருவாதல், 1265—1295:** மத்திய சபைக்கு நகரங்களினுல் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளை அழைப்பது என்று புதுமையாக சைமன் டி மான்ட்ஃபர்டால் ஏற்பாடு செய்யப்பட்டது. அது தேசிய சபை அமைப்பை முழுமை பெறச் செய்தது. அப்பொழுது ஏற்பட்ட அடிப்படையையே பாராளுமன்றம் பின்பற்றிவருகிறது. 1265–லிருந்து 1295 வரை பாராளுமன்றம் மாற்றம் அடைந்துகொண்டிருந்தது. 1295–லிருந்துதான் பாராளுமன்றத்தில் முப்பெரும் பகுதிகளின் சரியான பிரதிநிதித்துவம் முழுமையாக அமைந்ததெனக் கூறலாம். மூன்றும் ஹென்றியின் பிற்பட்ட ஆட்சி ஆண்டுகளில் மற்றக் கவுன்டிகள் அல்லது நகரங்களின் பிரதிநிதிகள் பாராளுமன்றத்திற்கு வந்தார்கள் என்பதற்குச் சான்றுகள் இல்லை. மார்ல்பரோ சட்டத்தின் முகவுரையில் (52 மூன்றும் ஹென்றி), நாட்டிலுள்ள மிக்க விவேகமானவர்களை மன்னர் அழைத்தார் எனும் வாசகம், 1267ஆம் ஆண்டில் நடந்த பாராளுமன்றத்திற்கு ஷயரைச் சேர்ந்த பிரபுக்கள், பொது மக்கள் சார்பில் நைட்வீரர்கள் சென்றிருந்தார்கள் என உறுதியாக எண்ணுவதற்கு இடமளிக்கிறது.[38] பக்தசீலரான எட்வர்டின் சடலத்தை வெஸ்ட்மின்ஸ்டர் மடாலயத்துக்கு எடுத்துச் செல்லுவதற்கு உதவி செய்யப் பெரிய நகரங்கள், பட்டணங்களிலிருந்து பிரதிநிதிகள் 1269-ல் அழைக்கப்பட்டனர் என அக்காலத்தில் வாழ்ந்த காலவழிச் செய்தித் தொகுப்பாளர் குறிப்பிடுகிருர். அச்சடங்கு முடிந்ததும் பாராளுமன்றம் கூட்டப்பெற்று, அதில் எல்லா லௌகிகர்களுடைய ஜங்கம சொத்துகளின்மீதும் உதவித்தொகையை மன்னருக்கு அளிப்பதென முடிவு செய்யப்பட்டது. நகரங்களின் பிரதிநிதிகள் பாராளுமன்றக் கூட்டத்திற்காகத் தங்கியிருந்தார்கள் என உறுதி செய்ய இயலவில்லை; காலவழிச் செய்தித் தொகுப்பாளரின் வாசகம் அவர்கள் தங்கவில்லையென்ற உட்கருத்தைக் கொண்டதாயுள்ளது.[39] எனினும், இச் சந்தர்ப்பத்தில், மத குருமார்கள், இராச்சியத்தின் செல்வந்தர்களுடன்கூட அவர்களும் அழைக்கப்பட்டனர் என்பது அவர்களுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவத்தின் வளர்ச்சிக்குச் சாட்சியாகும். அத்துடன் அப்பொழுது நாட்டினத்தில் நகர மக்களின் அடிப்படை மதிக்கப்பட்டது.

## முதலாம் எட்வர்டின் பாராளுமன்றம்

முதலாம் எட்வர்டின் காலத்தில் பிரதிநிதித்துவம் மிகக் குறைவு; மதகுருமார்களும் செல்வந்தர்களும் மாத்திரம் சேர்ந்து கூடிய மகாசபைகள் அடிக்கடி நிகழ்ந்தன. அக் காலத்தில் நாட்டின் முழுமையான பாராளுமன்றத்திற்கும் மகாசபைக்குமிடையே சட்டப்படியோ அல்லது குறிப்பிடக் கூடியதான பிற வகையிலோ வித்தியாசம் காணக்கூடவில்லை; தவிர, இரு சொற்களும் கலைச்சொற்களாக ஏற்படவில்லை. 'பாராளுமன்றம்' எனும் சொல் பொதுமக்களை அழைப்பது எனும் பொருளைக் கொள்ளவில்லை. எட்வர்டின் ஆட்சியில் பல்வேறு முக்கியமான சட்டங்கள் சபைகளில் நிறைவேற்றப் பட்டன. அச்சபைகளில் பொதுமக்களின் பிரதிநிதிகள் கலந்து கொள்ளவில்லை. அவரது ஆட்சியின் முதல் இருபது ஆண்டு களில், ஏறக்குறைய முப்பது பாராளுமன்றங்கள் கூடின; ஓரிரு சமயங்களில்தான் கவுன்டிகளிலிருந்தோ அல்லது நகரங் களிலிருந்தோ அல்லது இரண்டிலுமிருந்தோ பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

**1273**-ல் ஜனவரி 14ஆம் நாளன்று மூன்றும் ஹென்றியின் மரணத்திற்குப் பின், பாலஸ்தீனத்திலிருந்து வந்த முதலாம் எட்வர்டு விசுவாசப் பிரமாணம் எடுத்துக்கொள்ளுவதற்காக வெஸ்ட்மின்ஸ்டரில் கூட்டப்பட்ட தேசிய சபைக்கு, குருமார் கள், செல்வந்தர்களுடன் ஒவ்வொரு கவுன்டியிலிருந்து நான்கு நைட்டுகளும், ஒவ்வொரு நகரத்திலிருந்து நான்கு நகரவாசி களும் அழைக்கப்பட்டிருந்தனர்.[40]

இங்கிலாந்திற்குத் திரும்பியதும், எட்வர்டு 'தனது முதல் பொதுப் பாராளுமன்றத்தை'[41] 1275 ஏப்ரல் மாதத்தில் கூட்டினர். அதில் நிறைவேற்றப்பட்ட முக்கியமான சட்டங் களின் முகவுரையில் (முதலாவது வெஸ்ட்மின்ஸ்டர் சட்டமும், மன்னருக்குக் கம்பளி, உரோமம், ஆட்டுத்தோல், பதனிடப் பட்ட தோல் முதலியவை மீது காப்புவரி உரிமையை அளிப்பதான சட்டமும்), 'மன்றத்தால், மன்றத்திற்கு அழைக் கப்பட்ட அதிமேற்றிராணியார், மேற்றிராணியார், மடாலயத் தலைவர்கள், சமயத்தலைவர்கள், ஏர்ல்கள், மான்யப் பிரபுக்கள், நாட்டின் பொதுமக்கள் முதலியவர்களுடைய சம்மதத்தின் பேரில்'[42] அச் சட்டங்கள் இயற்றப்பட்டதாகக் கூறப்பட் டுள்ளது. 'மன்னரால் அழைக்கப்பட்ட மக்களும், சமய குரு மார்கள், பிரபுக்கள்[43] முதலியவர்களாலும், வணிகர்களின் தூண்டுதல் வேண்டுகோளின் அடிப்படையிலும் நாட்டைக்

காப்பதற்காக வழங்குவது வழக்கம் எனச் சிறப்பாகக் கூறப்படுகிறது. பொதுமக்களின் பிரதிநிதிகள் கூட்டத்திற்கு வந்தனர் என மேற்கூறிய வாசகங்களின் உட்கருத்தான நம்பிக்கையான தன்மை 1910-ல் கண்டுபிடிக்கப்பட்ட ஆணைகளிலிருந்து உறுதியாயிற்று. சில கவுன்டிகளைச் சேர்ந்த ஷெரீஃபுகளுக்கு விடுக்கப்பட்ட இந்த ஆணைகளில், சட்ட அறிவுள்ள நான்கு நைட்டுகளையும், அவர்களுடன் ஆறு அல்லது நான்கு நகரவாசிகளாகவோ, பட்டணத்து மக்களாகவோ, அல்லது ஒவ்வொரு நகரத்திலிருந்தும், பட்டணங்களிலிருந்தும், நேர்மையான வியாபாரம் செய்யும் பட்டணங்களிலிருந்தும் வேறு மனிதர்களாகவோ உள்ளவரையும் அனுப்புமாறு கட்டளையிடப்பெற்றிருந்தது. .......... இவர்கள் நாட்டின் விஷயங்களைப்பற்றி அதன் செல்வந்தர்களுடன் கூடி விவாதிப்பதற்காக வரவழைக்கப்பட்டனர்.' இந்தப் பாராளுமன்றம் கீழ்த்தர குருமார்களை அழைக்கும் நிலையைத் தவிர, ஏனையவற்றில் 1295ஆம் ஆண்டு புகழ்பெற்ற சபைக்கு முன்னறிகுறி காட்டுவதாயிருந்தது.[44]

1275ஆம் ஆண்டு அக்டோபரில் கூடிய பாராளுமன்றத்திற்கு ஷயர்களிலிருந்து நைட்வீரர்கள் அழைக்கப்பட்டனர். அதேபோன்று மீண்டும் 1278–ல் கிளௌசெஸ்டரில் கூடிய பாராளுமன்றத்திற்கும் அவர்கள் வரவழைக்கப்பட்டிருக்கலாம்.[45]

**சிறப்புக் கூட்டங்கள் :** 1282-ல் மன்னரும், பிரபுக்களும், நாட்டின் படைகளும், வேல்ஸ் பகுதியை வெல்லுவதற்காக ரட்லன் எனுமிடத்திலிருந்தபொழுது, இரு சிறப்புக் கூட்டங்கள் கூட்டப்பட்டன. ஒன்று நார்த்தாம்டனிலும், மற்றொன்று யார்க்கிலும் அதிகமான படைகளைத் திரட்டுதற்கும், மான்யத் தொகையை அளிப்பதற்கும் கூட்டப்பட்டன. நவம்பர் 24ஆம் நாள் பெற்ற ஆணையானது : நார்த்தாம்டன் அல்லது யார்க்கு சபைக்கு, 1283ஆம் ஆண்டு ஜனவரி 20ஆம் நாள், (1) இராணுவத்தில் அதுவரை சேராமலும், ஆயுதம் தாங்கும் வலிமை பெற்றவர்களும், ஆண்டுக்கு இருபது பவுன் மதிப்புள்ள நிலங்களை உடையவர்களுமான எல்லாச் சுதந்திரமான நிலச்சுவான்தார்களையும் ; (2) ஒவ்வொரு கவுன்டியிலிருந்தும் அந்தக் கவுன்டியின் மக்களின் முழு அதிகாரம் பெற்றவர்களான நான்கு நைட் வீரர்களையும் ; (3) ஒவ்வொரு நகரம், சுய ஆட்சி பெற்ற நகரம், வாணிகம் செய்யும் பட்டணங்கள் முதலியவை ஒவ்வொன்றிலிருந்தும் அந்தந்தப் பகுதிகளுக்கான முழு அதி

காரம் பெற்றவர்களையும் 'நாம் செய்யவிருக்கும் நலன்களைக் கேட்டறிந்து அவைகளைச் செய்வதற்காக அனுப்புமாறு' ஷெரீஃப்புகளுக்கு ஆணையிடப்பட்டது.[46] அந்த ஆண்டு பாராளு மன்ற நடவடிக்கைகள் முக்கியமானவை. 'வரிவிதிப்பு சம்பந்த மாகத் தலசபையின் சம்மதத்திற்குப் பதிலாக மத்தியசபையின் சம்மதத்தைப் பெறுவது என்பதை முடிவாக மாற்றியதைக் குறிப்பிட்டது' முக்கியமானதாகும்.[47] ஏற்கெனவே வேல்ஸ் நாட்டுடன் போரை நடத்துவதற்கு நிதி திரட்டுவதற்காகத் தனித்தனியே கவுன்டிகளுடனும் நகரங்களுடனும் உதவித் தொகை குறித்து வெற்றிகரமாகப் பேசியுள்ளார்.[48] திரட்டப் பட்ட தொகை போதாமற்போகவே, பொதுவாகத் தொகை அனுமதிக்கப்படுவது தேவை என்பது வெளிப்படையாயிற்று. எனவே, மேலே கூறப்பட்டபடி கவுன்டிகள், நகரங்கள் முதலி யவைகளின் பிரதிநிதிகளடங்கிய பொதுச் சபைகளைக் கூட்ட நேர்ந்தது. மேற்றிராணியார்களும், மடாலயத் தலைவர்களும், பிரதம குருமார்களும், மற்றும் சமயஞ்சார்ந்த நிலையங்களின் தலைவர்களும், கான்டர்பரி, யார்க்கு பகுதிகளின் கதீட்ரல் களின் சமய குரவர்களுடைய கட்டுப்பாட்டை மேற்பார்வை யிடுகிறவர்களும் அவரவர்களுடைய அதிமேற்றிராணியார்கள் மூலம் சங்கத்திற்கு அழைக்கப்பட்டனர். இச் சங்கம் நார்த் தாம்டனிலும் யார்க்கிலும் பொதுமக்களுடைய பிரிவாக அதே நாளில் மன்னருக்குப் பணவுதவி செய்வதற்காகக் கூடும்படி அழைக்கப்பட்டது.[49] சமயஞ்சார்ந்த நிலப்பகுதியிலுள்ள குருமார்கள் இச் சபையில் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட வில்லையென்ற காரணத்தால் கான்டர்பரியில் கூடிய சங்கம் எவ்வித உதவித்தொகையையுமளிக்க மறுத்துவிட்டது. வெகு நாள்கள் கழிந்தபின்னர், அதற்குள்ளாக மேற்றிராணியாரின் கண்காணிப்பின்கீழ் உள்ள பகுதிகளின் குருமார்களின் சங்கம் தனித்தனியே கலந்தாலோசித்த பின்னர், நவம்பர் மாதத்தில் கூட்டப்பட்டதும், ஒவ்வொரு மேற்றிராணியாரின் கண்கா ணிப்புக்குட்பட்ட பகுதிகளிலுள்ள சமயஞ்சார்ந்த பகுதி குரு மார்களில் சமயகுரவர்களுடைய கட்டுப்பாட்டை மேற் பார்வையிடுகிறவர்களான இருவர் வந்ததால், குருமார்களின் மற்றொரு சங்கக் கூட்டத்தில் ஓர் 'இருபது' (மன்னரால் முதலில் கோரப்பட்ட தொகையில் பாதி) அளிக்கப்பட்டது.[50]

**ஆக்டன் பர்னல், 1283 :** அதே ஆண்டில் ஜூன் மாதத்தில் எட்வர்டு மன்னர் ரட்லனிலிருந்தபொழுது, செப்டம்பர் மாதம் 30ஆம் தேதி ஷ்ரூஸ்பரியில் கூடும்படியாகத் தேசிய சபையைக் கூட்டினர். வேல்ஸ் நாட்டு இளவரசரான லுவெல்லின் என்

பாருக்குப்பின் பட்டத்துக்குரியவரும் உடன்பிறந்தாருமான டேவிட் என்பவர்மீது அரசத்துரோகத்திற்காகத் தீர்ப்பளிக்க இச் சபை கூட்டப்பட்டது. வேல்ஸ் நாட்டை வென்றபின் அவர் கைதுசெய்யப்பட்டுச் சரணடைந்தார்.

தனித்தனியாக வரவழைக்கப்பட்ட ஏர்ல்கள், பிரபுக்கள் ஆகியோரைக் கொண்டு ஆணைகளும் வெளியிடப்பட்டன: (1) ஒவ்வொரு கவுன்டியிலுமிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட இரு நைட் வீரர்களை ஷிரூஸ்பரிசபைக்கு அனுப்புமாறு இங்கிலாந்திலுள்ள எல்லா ஷெரீஃப்புகளுக்கும் உத்தரவிடப்பட்டது. (2) லண்டனிலும் மற்றும் இருபது நகரங்களிலுமுள்ள மாஜிஸ்டிரேட்டுகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட இரு பிரதிநிதிகளை 'நாட்டிற்கு என்ன செய்யவேண்டும் என்பது பற்றியும், மற்றும் பல விஷயங்களைப் பற்றியும் தம்முடன் பேச்சு நடத்துவதற்காக'[51] அனுப்புமாறும் உத்தரவிடப்பட்டது. இச் சபை ஷிரூஸ்பரி அல்லது ஆக்டன் பர்னல் பாராளுமன்றம் என அக்காலத்தியவர்களால் அழைக்கப்பட்டது. குருமார்கள் எவரும் இச் சபைக்கு வந்திருந்ததற்கு எவ்வித ஆதாரமும் இல்லை.[52] அத்துடன், இருபத்தொரு நகரங்களின் பிரதிநிதிகள் வழக்கமாக ஷெரீஃப்புகளின் மூலமாக அழைக்கப்படாமல் தனித்தனி ஆணையிட்டு வரவழைக்கப்பட்டனர். எனினும், இப் பாராளுமன்றத்தின் அமைப்பு சரி ஒழுங்கில்லாதிருந்தாலும், நாட்டின் மத்திய சபையில் பொதுமக்களினுடைய இரு பிரிவினருக்கும் பிரதிநிதித்துவம் கொடுக்கப்பட்டிருந்ததற்கு மறுக்க முடியாத சான்று உள்ளது. ஷிரூஸ்பரியில் கூடியிருந்த பிரபுக்களால் விசாரணை செய்வதற்கு வேல்ஸ் நாட்டு டேவிட் பொதுமக்களால் விடப்பட்டதாகத் தோன்றுகிறது. அதே சமயத்தில் அவர்கள் ஆணையில் காணப்பட்ட மற்ற விஷயங்களை விவாதிப்பதற்காக ஆக்டன் பர்னலுக்கு சபையை மாற்றினர். டி மார்க்டோரிபஸ் எனும் வணிகர் சட்டம் அல்லது ஆக்டன் பர்னல் சட்டம்[53] மன்னருடையவும், அவருடைய சபையின் பெயராலும் வெளியிடப்பட்டபோதிலும், அச் சபையில் கூடியிருந்த பொதுமக்களின் ஆலோசனைகளின்பேரில்தான் அச் சட்டம் உண்டானது. 1285-ல் மிக முக்கியமான சட்டங்களைத் தோற்றுவித்தபின் வெஸ்ட்மின்ஸ்டர், வின்செஸ்டர் எனுமிடங்களில் கூடிய பாராளுமன்றத்தில் பொதுமக்கள் கலந்துகொள்ளவில்லையென்பது குறிப்பிடத்தக்கதாகும்.

**1290ஆம் ஆண்டுப் பாராளுமன்றம்:** 1290ஆம் ஆண்டு நடவடிக்கைகளில் பாராளுமன்றத்தின் நிலைமை விசித்திரமாக

விளக்கப்பட்டுள்ளது. மன்னர் ஏற்கெனவே, செயின்ட் ஹிலரியின் திருவிழாவின் எட்டாம் நாளன்று (ஜனவரி, 20) பாராளுமன்றத்தை நடத்தினர். அதற்குச் செல்வந்தர்களையும் புரோஸிரஸ்களையும் மாத்திரம் வரவழைத்திருந்தார்.[54] அத்தியட்ச குருமார்கள், ஏர்ல்கள், பிரபுக்கள், புரோஸிரஸ்கள் முதலியவர்களுடன் மாத்திரம் ஈஸ்டர் திருநாளில் தொடங்கிய இரண்டாவது பாராளுமன்றத்தில், புனித திரிதத்துவ நாளன்று (மே மாதம் 29) கூடியிருந்த செல்வர்கள், மன்னருடைய மூத்த மகளின் திருமணத்திற்கு அனுமதி அளித்தனர். (1) மன்னருடைய தகப்பஞரான மன்னர் ஹென்றி அவருடைய மகளை ஸ்காட்லாந்திய மன்னருக்குத் திருமணஞ் செய்து கொடுப்பதற்காக நாட்டின் நிதியில் எவ்வளவு எடுத்துக் கொண்டாரோ அதே அளவு நிதியை எட்வர்டும் எடுத்துக் கொள்ளவேண்டும் என்றும், (2) ஹென்றி மன்னர் நைட் வீரர்களின் கட்டணமாக இரண்டு மார்க்குகள் (ஒரு மார்க்கு என்பது பதிமூன்று ஷில்லிங் நான்கு பென்ஸாகும்) பெற்றுக் கொண்டார் என்பதை எடுத்துக்கூறியபின் மன்னர் அவருடைய முறைக்கு ஒவ்வொரு நைட் வீரரின் கட்டணத்திலிருந்தும் நாற்பது ஷில்லிங்குகள் எடுத்துக்கொள்ளவேண்டும் எனவும், அவ்வாறு அப்பொழுது எடுத்துக்கொள்ளுவதை முன்மாதிரியாகக் கொண்டு பின்னல் அதேபோல் எதிர்நோக்கியிராமலும், உதவித்தொகை விதிப்பது மன்னர் ஹென்றிக்கு அளித்ததைப் போன்றே செய்யப்படவேண்டும் எனும் நிபந்தனையின் பேரிலும் உதவியளிக்கப்பட்டது.[55] செல்வந்தர்களால் 'அவர்களுக்காகவும் நாட்டு மக்களுக்காகவும்' அளிக்கப்படவிருந்த உதவித் தொகையைப்பற்றி இங்கு அறிவித்தது குறிப்பிடத் தக்கதாகும். 'அவர்களுக்காகவும் நாட்டு மக்களுக்காகவும் அளிக்கும்' எனும் சொற்கள், மக்களினத்தின் முழுமைக்காக, பொதுமக்கள் நேரில் வராதிருந்தபொழுதோ அல்லது சிறிய பிரதம மான்யதார்கள் இல்லாதபொழுதோ, நைட் வீரர்களின் கட்டணம் அளிப்பதுபற்றி அவர்களுக்கு எவ்வளவு தகுதியிருந்தது என்பதுபற்றிய சந்தேகத்தைக் காட்டுவனவாயுள்ளன. பெண்ணைத் திருமணஞ் செய்துகொள்ளச் செலுத்தும் உதவிப் பணம் நிலமான்ய முறைப்படி விதிக்கப்படும் மூன்று பழமையான கட்டணங்களில் ஒன்ருகும். ஜான் மன்னரின் மகாசாசனத்தின் பன்னிரண்டாம் பிரிவிலிருந்து விலக்களிக்கப்பட்டுள்ளது. அந்தப் பிரிவு பின்னர் வெளியிடப்பட்ட ஒவ்வொரு சாசனத்திலிருந்தும் விடுபடாமலிருந்தாலும், சட்டப்படி, பாராளுமன்றத்தின் அதிகாரத்தைப் பெறத் தேவையிராது. ஆனல், பிரதம மான்யதாரர்கள் செலுத்தவேண்டிய உதவித்

தொகை எவ்வளவு என்பது சட்டத்தில் குறிப்பிடப்படவில்லை.[56] எனவே, சட்டப்படி இல்லாவிட்டாலும் அரசியல் காரணத்திற்காகவாவது இந்தச் செய்தியைக் குறித்து அவர்களுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளவேண்டிய அவசியம் ஏற்பட்டது. மற்றொரு காரணம், அரசாங்கப் பத்திரங்களில் அடிப்படைக் கருத்து மறைக்கப்பட்டுள்ளது. அதாவது, மன்னருடைய 'மூத்த' மகள் என அதில் குறிப்பிடப்பட்டுள்ளது. உண்மையில் அப்பொழுது பிரச்சினையிலுள்ளது மன்னரின் இரண்டாவது மகளைப் பற்றியதாகும்.[57]

பாராளுமன்றம் தொடர்ந்து கூட்டப்பட வேண்டியதாயிருந்தது. ஏனெனில், வேறு சில விஷயங்கள் (எதைப்பற்றியென்று தெளிவாகக் கூறப்படவில்லையென்றாலும் யூதர்களை நாட்டைவிட்டு வெளியேற்றுவதைப் பற்றியதாயிருக்கலாம்) தோன்றியதால், மேலும் பெரியதானதும் பரவலானதுமான சபை கூடுவது அவசியமாயிற்று. எனவே, 1290-ல் ஜூன் (18ஆவது முதலாம் எட்வர்ட்) பதினான்காம் நாள் ஆணை பிறப்பிக்கப்பட்டது. அதில் ஒவ்வொரு ஷயரிலிருந்தும், ஜூலை பதினைந்தாம் தேதி வெஸ்ட்மின்ஸ்டரில் கூடவிருக்கும் பாராளுமன்றத்திற்கு மிக்க விவேகமுள்ளவர்களாயும், கடிய உழைப்பிற்குத் தகுதியுள்ளவர்களாயும் உள்ள இரண்டு அல்லது மூன்று தேர்ந்தெடுக்கப்பட்ட நைட்வீரர்களை மக்கள், மான்யப் பிரபுக்கள், பெருங்குடி மக்கள் முதலியோர் முடிவு செய்ய வேண்டுமெனக் கூறிய செய்திகள் பற்றி அனுப்புமாறு ஷெரீஃப்புகளுக்கு உத்தரவிடப்பட்டது.[58] தனக்காகவும் நாட்டு மக்களுக்காகவும் கலந்து முடிவு செய்வதற்காக நகரவாசிகள் எவரும் அழைக்கப்படவில்லை. இதற்கிடையில், ஜூலை பதினைந்தாம் நாள் நடைபெறவேண்டிய கூட்டத்திற்கு, பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்கள் வந்து சேருவதற்குள், நாட்டிலுள்ள செல்வந்தர்களுடைய தூண்டுதலின்பேரில், மன்னர் அம்மாதம் எட்டாம் நாளே, 'புகழ்பெற்ற மூன்றாவது வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம்' எனப்படும் குயா எம்ப்டோர்ஸ்[59] எனும் சட்டத்தை இயற்றினார். இச் சட்டப்படி நிலங்களைத் துணைமான்யமாகக் கொடுக்கும் வழக்கம் நிறுத்தப்பட்டது. பொதுச் சட்டமியற்றுவதில், மான்யப் பிரபுத்தன்மையுடன் நெருங்கிய உறவு கொண்டிருந்த பொதுமக்களின் பகுதியினருக்குப் பங்கு கொள்ளும் உரிமை அக்காலத்தில் ஏற்படவில்லையென்பது, ஷயர்களின் பிரதிநிதிகளுடைய ஒப்புதலின்றி நாட்டின் பிரபுத்துவத்தினுடைய ஆலோசனை, ஒப்புதல் முதலியவற்றை மாத்திரமே கொண்டு எல்லா நிலச்

சொந்தக்காரர்களையும் பாதிக்கக்கூடிய ஒரு சட்டத்தை மன்னர் வெளியிட்டதிலிருந்து தெரிகிறது. பிரபுக்களினத்தால் அளிக்கப்பட்ட உதவி சிறிது காலம் தள்ளிவைக்கப்பட்டது: (1302-ல் பன்னிரண்டாண்டுகள் வரை தள்ளிவைக்கப்பட்டிருந்தது).[60] அதற்குப் பதிலாக ஈலி எனுமிடத்தில் கூடியிருந்த லௌகீகர்களிடமிருந்து 'பதினைந்தில்' ஒன்றும், சமயஞ் சார்ந்தவர்களிடமிருந்து 'பத்தில்' ஒன்றும் மன்னர் பெற்றுக்கொண்டதாகத் தெரிகிறது.[61]

**1294ஆம் ஆண்டுப் பாராளுமன்றம்:** நான்கு ஆண்டுகளுக்குப்பின், 1294ஆம் ஆண்டு அக்டோபர் 8ஆம் நாளில், வேல்ஸ் நாட்டில் கலகத்தை அடக்குவதற்கும், இழந்த காஸ்கனி மாநிலத்தைப் பெறுவதற்காக ஃபிரெஞ்சு மன்னரான பிலிப்பின் மீது படையெடுத்துச் செல்வதற்கும் பணத்தேவை ஏற்படவே, மன்னர், நவம்பர் 12ஆம் நாள் பாராளுமன்றத்தைக் கூட்டும்படி உத்தரவிட்டார். இதற்கு, 'மான்யப் பிரபுக்கள், பிரபுக்கள் முதலானவர்களுடன் மேலே குறிப்பிட்ட நடவடிக்கை குறித்து ஒருமனமாகத் தீர்மானித்துள்ளபடி, தங்களுக்காகவும் நாட்டு மக்களுக்காகவும் கலந்து ஆலோசனை செய்து சம்மதத்தைப் (ஒப்புதலைப்) பெறுவதற்கென' ஒவ்வொரு ஷயரிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட இரு நைட்டுகளை வரும்படி உத்தரவிட்டார். மறுநாள், ஏற்கெனவே வரும்படி உத்தரவிட்டவர்களுடன் சேர்த்து மேற்கொண்டு ஒவ்வொரு கவுன்டியிலுமிருந்து வேறு இரு நைட்டுகளையும் 'தாம் முழுமையாக விதிக்க இருப்பதுபற்றி நேரில் கேட்டு ஆவன செய்வதற்காக வருமாறு ஆணைகள் வெளியிட்டார்'.[62] பிரபுக்களும் நைட்டுகளும், நகரங்களிலிருந்து பறிக்கப்பட்ட டல்லேஜ் வரியில் 'பத்தில்' ஒன்றும் 'ஆறில்' ஒன்றுமாக மன்னருக்கு அளித்தனர்.[63]

**பாராளுமன்றத்தில் பிரபுக்களும் மக்களும், 1295:** அடுத்த ஆண்டில் (1295) (23ஆவது முதலாம் எட்வர்ட்) கூடிய மன்றம் பாராளுமன்றத்தில் நாட்டின் மூன்று இனங்களினுடைய பிரதிநிதித்துவத்தை முறையாக அமைப்பதற்கு முன்னோடியாயிருந்தது. எனினும், 1275ஆம் ஆண்டு பாராளுமன்றத்திற்காக அழைக்கப்பட்ட உத்தரவுகளைக் கண்டபின்னர், 1295ஆம் ஆண்டுப் பாராளுமன்றத்தைப் 'பாராளுமன்ற வரலாற்றில் ஒரு கட்டமாக'க் கருதும் முக்கியத்துவம் வெகுவாகக் குறைவதாயிற்று; அத்துடன் அடுத்த முப்பதாண்டுகளில் சுமார் ஐம்பது தடவைகள் பாராளுமன்றங்கள் கூட்டப்பெற்றன;

அதில் சுமார் பதினைந்து கூட்டங்களில் பொதுமக்கள் கலந்து கொள்ளவில்லை. இதற்கிடையில் எட்வர்டு மன்னரின் தொல்லைகள் மிகுதியாயின. வேல்ஸ் நாட்டுக் கலகத்தால் ஃபிரான்சின் மீது படையெடுப்பு தாமதம் செய்யப்பட்டது; கடுமையான எதிர்ப்பை அடக்குவதற்குள் ஸ்காட்லந்துடன் போர்மூண்டது. ஃபிரெஞ்சுக்காரர்கள் காஸ்கனியைக் கைப்பற்றியதுடன், இங்கிலாந்திற்கு ஒரு கப்பற்படையையும் அனுப்பினார்கள். இப்படை டோவரில் இறங்கி அங்குள்ள கன்னியா மடத்தையும் சில வீடுகளையும் தீக்கிரையாக்கியது. இது நடந்தது ஆகஸ்டு முதல் நாளாகும். இதேநாளில் இங்கிலாந்திற்கும் ஃபிரான்சிற்குமிடையே[64] சமாதானத்தை ஏற்படுத்த போப்பாண்டவரால் அனுப்பப்பெற்ற மதத்தூதுவர்களின் கருத்துகளை, மற்ற விஷயங்களுடன் கூட ஆலோசிப்பதற்காகப் பாராளுமன்றம் வெஸ்ட்மின்ஸ்டரில்[65] கூட்டப்பட்டிருந்தது. மதத்தூதர்கள் தாற்காலிக சமாதானத்தை முடிவு செய்யும் அதிகாரம் பெற்றிருந்தனர்.[66] நாட்டின் நிலைமை மோசமாயிருந்தது; பொது மக்களின் ஆலோசனைப்படியும் சம்மதத்தின்பேரிலும் பொதுவானதும் தேவைக்கேற்றதுமான பணவுதவியை அளிப்பதன் வாயிலாக மன்னருக்கு ஆதரவளித்து, நாட்டினம் முழுமையும் மன்னருக்கு உறுதுணையாயிருக்க வேண்டுமென்று எட்வர்டு மன்னர் கருதியதுபோலத் தோன்றியது. எனவே, செப்டம்பர் 30ஆம் நாள் மன்னர் பாராளுமன்றத்தை வெஸ்ட்மின்ஸ்டரில் நவம்பர் மாதத்தில் கூட்டுவதற்காக ஆணையிட்டார். அம்மன்றம் நாட்டு மக்களின் பிரதிநிதிகளைக்கொண்டு வரிவிதிக்கும் அதிகாரத்தைப் பெற்றுள்ளதாய் இருக்கவேண்டுமென உத்தரவிட்டார். மேற்றிராணியார்களுக்கு அனுப்பிய அழைப்பு உத்தரவில், பாராளுமன்றத்தை ஒன்றாக ஒருங்குசேர்த்துக் கூட்டுவதற்குத் தேவையேற்பட்ட காரணங்களைக் குறித்து, வழக்கத்திற்கு மாறாக எல்லா விவரங்களும் கொடுக்கப்பட்டிருந்தன. அத்துடன் ஜஸ்டீனியன் சட்டத் தொகுப்பிலிருந்து மேற்கோளாக முகவுரையில், 'எல்லோரையும் பற்றியவை எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்' எனக் கூறப்பட்டிருந்தது.[67] அது பிற்காலத்தில் ஆங்கிலேய அரசியலமைப்பின் கொள்கையையும் நடைமுறையையும் நன்கு எடுத்துக்கூறுவதாய் அமைந்திருந்தது. அரசியல் முறைமைக்குட்பட்டு வளர்ச்சியில் நன்மையை உண்டுபண்ணுவதில், ரோமன் சட்டத்தின் இப் பழமொழி, இதனுடன் கூறப்படும் புகழ்பெற்ற 'தலைவனுக்குகந்தது சட்டத்தின் வலிமையைப் பெறுகிறது' எனும் பழமொழிக்கு மாற்றானதாய்க் கருதலாம். இடைக்காலத்திய நீதிநூல் வல்லுநர்கள் கூற்றுப்படி மன்ன

ருடைய யதேச்சாதிகாரத்தை வளர்ப்பதற்கு இது மிகவும் உதவி செய்தது.[68] லௌகீக, சமயஞ் சார்ந்த பிரபுக்களுக்கு விடுக்கப்பட்ட சாதாரணமான அழைப்பு உத்தரவுடன், ஒவ்வொரு கவுன்டியிலிருந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட இரு நைட்டுகளையும், ஒவ்வொரு நகரத்திலிருந்தும் இரு நகரவாசிகளையும், ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் இருவரையும் பொது மன்றத்தினால் ஆணையிடப்பெறுபவைகளைச் செய்வதற்கு அனுப்பிவைக்குமாறு ஷெரீஃப்புகளுக்கு ஆணைகள் விடுக்கப்பட்டன.

**பாராளுமன்றத்தில் சாதாரண குருமார்கள் :** நைட்டுகளுடனும் நகரவாசிகளுடனும் 'மறுப்போர்' எனும் விதியின்கீழ்ச் சாதாரண குருமார்கள் அனைவரும் அவர்களுடைய பிரதிநிதிகளால், முதன்முதலாகத் தேசியப் பாராளுமன்றத்தில் ஒன்றாக இணைக்கப்பட்டனர். காண்டர்பரி, யார்க்கு இவைகளுடைய அதிமேற்றிராணியார்களுக்கு விடுக்கப்பட்ட அழைப்பில் பாராளுமன்றத்திற்கு அவர்கள் ஒவ்வொருவரும் நேரில் வருவதுடன், மடாலயத் தலைவர், சமயப் பிரசார எல்லைக்குட்பட்ட பிரிவைச் சேர்ந்த ஆர்ச்டீக்கர்கள், மடாலயச் சங்கம், தனித் தனிச் சமயப் பகுதிகளைச் சேர்ந்தவர்கள், அவரவர்களுடைய பிரதிநிதிகளான பிராக்டர்கள்[69] முதலியவர்களையும் பாராளுமன்றத்திற்கு வருமாறு முன்னெச்சரிக்கை விடுக்குமாறும் அவ்வழைப்பில் குறிக்கப்பட்டிருந்தது; இந்த மகாசபை ஒரு குழுவாக அமையவில்லை. மூன்று பகுதிகளும் தனித்தனியே உதவி பற்றி விவாதித்து வாக்களித்தது. ஒவ்வொன்றும் மாறுதலுடைய விகிதப்படி உதவியை அளித்தது. பிரபுக்களும் நைட்டுகளும், அவர்களுக்குச் சொந்தமான ஜங்கம சொத்துகளில் பதினொன்றில் ஒன்றையும், நகரவாசிகள் ஏழில் ஒன்றையும், குருமார்கள் பத்தில் ஒரு பங்கையும் அளித்தனர்.

**குருமார்களின் சங்கம் :** கீழான குருமார்களுடைய பிரதிநிதிகளைப் பாராளுமன்றத்திற்கு அழைத்தது, நகரவாசிகளையும் பட்டணவாசிகளையும் அழைத்ததைப்போலவே மன்னருடைய பொருள் பற்றிய தேவையைப் பொறுத்து ஏற்பட்டதாகும். எல்லாவற்றையும் தன்னகத்தே கொண்ட தேசியப் பாராளுமன்றத்தில் குருமார்களுடைய பிரதிநிதிகளைச் சக்திவாய்ந்த பகுதியாகச் செய்யவேண்டுமென்பது எட்வர்ட் மன்னரின் சட்டஞ் சார்ந்ததும் முறைப்படி அமைந்ததுமான எண்ணத்தின் நோக்கமாயிருந்தது என்பதில் ஐயமில்லை. ஆனால், இந்த நோக்கம் குருமார்களுடைய செய்கைகளாலேயே தோல்வியடையச் செய்யப்பட்டது. பயிற்சியால், லௌகீக சம்பந்த

மானவும் சாதாரணமானவுமான சட்டங்களை இயற்றுவதில் தலையிடுவதை வெறுத்த குருமார்கள், பொதுச் சட்டமுறையை நாகரிகமற்றதெனப் புறக்கணித்து, தங்களைச் சிறப்புரிமைகளைக்கொண்ட ஒரு தனி இனமாகச் செய்துகொள்ளும் விருப்பத்துடன், மன்னருடைய ஆணைக்குட்படாது சுதந்திரத்தைப் பாதுகாக்கும் நோக்கத்துடன், விருப்பமின்றி அழைப்பாணைக்குக் கீழ்ப்படிந்தனர். அவர்களை அழைத்தது அவர்களிடமிருந்து எவ்வளவு பெறமுடியுமோ அவ்வளவு பணத்தைப் பெறுவதற்காக என்பதை நன்கு உணர்ந்திருந்தனர். குருமார்கள் நெடுநாள்களாகவே தங்களுடைய சிறந்த சபைகளை அல்லது சங்கங்களைக் கொண்டிருந்தனர். இச்சங்கம் முதலாம் எட்வர்டின் ஆட்சியின் தொடக்கத்தில் பிரதிநிதித்துவ அடிப்படையில் ஏற்கெனவே மாற்றியமைக்கப்பட்டிருந்தது.[70] ஒவ்வொரு மாநிலத்திற்கும், தனித்தனியாக லண்டனிலும் (கான்டர்பரியைக் காட்டிலும் வசதியாயிருந்தமையால்) யார்க்கிலும் கூடிய இச் சங்கங்களின் வாயிலாக, அவர்கள் தங்களுடைய உதவியைச் செய்யவிரும்பினர். விதியின் கீழ்ப் பாராளுமன்றத்திற்கு வரும்படி முறைப்படி ஆணையிடப்பட்டும், அவர்கள் செல்ல மனமின்றி இருந்தனர். ஆனால், அவ்வாறு தொடர்ச்சியாக இல்லை. பதினான்காம் நூற்றாண்டில் இம்முறை அறவே நின்றுபோயிற்று.[71] பாராளுமன்றத்திற்குச் செல்வதை நிறுத்தி இருநூறாண்டுகள் சென்றபின், அவர்களுடைய சபைகளில் குருமார்கள் தாங்களாகவே வரிவிதித்துக் கொள்ளும் வழக்கத்தைக் கைக்கொண்டனர். ஆனால், எட்டாம் ஹென்றியின் ஆட்சியில், சீர்திருத்தம் செய்யப்பட்ட திருச்சபை, தேசிய முறையில் பாராளுமன்றத்தால் தோற்றுவிக்கப்பட்டதாக ஆனபொழுது, அரசுக்குத் திட்டமாகக் கீழ்ப்படிந்ததாகச் செய்யப்பட்டது.[72] குருமார்களின் சங்கத்தால் அளிக்கப்பட்ட உதவித்தொகைகள் (1540-லிருந்து) பாராளுமன்றச் சட்டத்தால் உறுதிசெய்யப்பட்டது. இறுதியில் 1664-ல் சமயஞ்சார்ந்தவர்கள்மீது வரிவிதிக்கும் வழக்கம் எவ்விதமான சிறப்புச் சட்டமும் செய்யப்படாமலேயே கைவிடப்பட்டது. குருமார்கள், லௌகீகர்களைப்போன்று அதே அளவிலும் அதே மாதிரியாகவும் அதுமுதல் வரிவிதிக்கப்படலாயினர்; மற்றும், காமன்ஸ் சபை உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதில் வாக்குரிமையைப் பெற்றனர்.[73]

மாதிரிப் பாராளுமன்றங்கள்: 1275, 1295ஆம் ஆண்டுகளின் மகாசபைகளை 'மாதிரி'கள் எனக் கூறலாம். ஏனெனில், கால வளர்ச்சியில் நெடுகிலும் தொடர்ந்து ஏற்பட்ட ஆங்கிலேயப்

பாராளுமன்றங்கள் இறுதியில் அதன் அமைப்பு வகைக்கு ஒத்தனவாயமைந்தன. ஆனால், தேசிய சபைகளில் பல 1275-க்குப் பின் அரை நூற்றாண்டிற்கு முழுமையற்றனவாயிருந்தன. பல சமயங்களில் பொதுமக்களின்றியே சபைகள் அமைந்திருந்தன; சில சமயங்களில் நைட்டுகள் இருந்தனர்; ஆனால், நகரவாசிகள் இல்லை. அத்துடன் பொதுமக்கள் இன்றி அதன் பணியைச் செய்வதனின்றும் பாராளுமன்றம் தடை செய்யப்படவில்லை. கதீட்ரலைச் சேர்ந்த குருமார்கள், பாரிஷைச் சேர்ந்த குருமார்கள்—இவர்களுடைய பிரதிநிதித்துவம் ஒரு பிரச்சினையாயிருந்தது. சமயத்திற்கு ஏற்றவாறு பிரதிநிதித்துவ முறையை அடிக்கடி மாற்றிக்கொண்டு முடிவில் மாற்று வழியில் பிரச்சினை தீர்க்கப்பட்டது. அக் காலத்திலுண்டான பத்திரங்களிலும் விவரமான குறிப்புகளிலும் 'பாராளுமன்றம்' எனும் சொல்லைப் பயன்படுத்துதல் அல்லது விட்டுவிடுதல் என்பது அச் சபைகளின் அமைப்பு, வேலை முதலியவைகளுடன் ஒத்திருக்கவில்லை; தவிர அவைகளுக்கிடையே சட்ட ரீதியாகவோ, அரசியலமைப்பு ரீதியாகவோ வித்தியாசங்களைக் காணமுடியாது. சபைகளில் மிகப்பெரிய அல்லது சிறிய அளவிற்குப் பிரதிநிதித்துவம் வேண்டுமா வேண்டாவா என்று முடிவுசெய்வதற்குப் போதுமானதாகக் காலத்திற்கேற்ற அரசியல் போக்குத் துணைபுரிந்தது. கூடிய கூட்டங்களில் சில கூட்டங்கள் 'பாராளுமன்றங்களா'யும் மற்றவை அவ்வாறில்லை என்றும் கூறுவது, அக்காலத்தவர்களால் தேவையென்று உணராத ஒன்றைக் குறிப்பிட்டால் அதனை நாம் தோற்றுவித்ததாகக் கருதப்படும். அத்துடன் அவ்வாறு செய்வது பாராளுமன்றத்தின் தோற்றத்தை நன்கறிந்துகொள்ளத் தேவையான சாட்சியத்தை விலக்குவதாக ஆகும். முதலாம் எட்வர்டின் கடைசிக் காலத்தில் பல்வேறு வகையான கூட்டங்கள் ஒரு மேற்றிராணியார் அல்லது பிரபு அல்லது தலச் செல்வந்தர் போன்றவரின் அரசியல் அனுபவம், நினைவுகள் முதலியவைகளின் பகுதிகளாக அமைந்திருக்கக்கூடும். எனவே, இவைகள் எல்லாம் சேர்ந்து வருங்காலத்திய பாராளுமன்றத்தின் அமைப்பை உருவாக்குவதில் சிறந்த அடிப்படையாயமைந்தன.

**லௌகிகர்கள், குருமார்கள்:** 1295-க்குப் பின் தொடர்ந்து வந்த ஆண்டுகளில், அரசியல், இராணுவம், பொருளாதாரம், சமயத்துறை முதலியவைகளில் தொடர்ச்சியாக ஏற்பட்ட கடுமையான நெருக்கடிகள் நிறைந்திருந்தன. பரவலான போர்களை நடத்துவதற்கு முதலாம் எட்வர்டுக்குப் பணத்தேவை அடிக்கடி ஏற்பட்டது. அதைப் பெறுவதற்கு, லௌகீகர்கள்,

சமயஞ்சார்ந்தவர்கள் போன்ற எல்லா வகுப்பாரிடமிருந்தும் அவர் தன்னிச்சையாகக் கட்டாயப்படுத்தி வசூலித்தார். போப்பாண்டவர் எட்டாம் பானிஃபேசின் ஆணையை எடுத்துக் காட்டி அதன்கீழ் தஞ்சம் புகுவதற்கு முயன்ற குருமார்களின் முயற்சிகள் வீணாயின. 'கிளெரிஸிஸ் லேகோஸ்' (பிப்ரவரி 24, 1296) எனும் ஆணை, திருச்சபையின் வருவாயிலிருந்து சாதி விலக்குத் தண்டனையின்றி லௌகீகர்களுக்கு எவ்வித வரியையும் செலுத்துவதைத் தடைசெய்தது. சமய குருமார்களின் குழுவுக்கு முழுமையாகச் சட்டவிலக்குத் தண்டனை அளிக்கப் பட்டதாயும் (ஜனவரி 30, 1297), கான்டர்பரி திருக்கோயிலின் சொத்துகள் தற்காலிகமாகப் பறிமுதல் செய்யப்பட்டிருப்ப தாயும் (பிப்ரவரி 12, 1297) வெளியான அறிக்கை, நேர்மையற்ற நிலையைக் கைவிடும்படியும், தாங்களாகவோ அல்லது மத்தியஸ் தர்கள் மூலமாகவோ கைவிடும்படியாகவும் தூண்டியது.[74]

**வியாபாரிகள் :** கடுமையான நடவடிக்கைகளால் குருமார் கள் சினமூட்டப்பட்டபொழுது, வியாபாரிகளும் கடுவரிப் பளுவினால் துன்புறுத்தப்பட்டனர். ஏற்றுமதி செய்யப்படும் கம்பெனிகளின் பெரும் பகுதியைக் கைப்பற்றுவதால் இத் தொல்லை ஏற்பட்டது. இவைகளுக்குக் கருவூலங்களில் டாலி வரிகள் என்பவை பெயரளவில் செலுத்தப்பட்டுவந்தன. அதே மாதிரி, ஒவ்வொரு கவுன்டியிலுள்ளவர்களிடமிருந்தும் மன்னருடைய ஃபிளான்டர்ஸ் படையெடுப்பிற்காக உணவுத் தானியங்களும் கைப்பற்றப்பட்டன. காலச் செய்தியைத் தொகுத்துரைப்பவர், நாட்டு மக்களிடையே பல துன்புறுத்தல் கள் காணப்பட்டன எனக் கூறுகிறார்.[75]

**பிரபுக்கள் :** மன்னர், மகாசாசனம், காடுகள்பற்றிய சாச னம் முதலியவைகளுடைய ஷரத்துகளில் பலவற்றை வெளிப் படையாக அவமரியாதை செய்ததாலும், இவ்விரு சாசனங் களையும் உறுதி செய்துதருவதற்கு விடாப்பிடியாக மறுத்த தாலும் பிரபுக்கள் மன்னரிடம் கோபங்கொண்டிருந்தனர். தவிர, வெளிநாட்டில் பணிபுரிய வேண்டுமென மன்னர் கோரியதற்காக மன்னர்மீது தனிப்பட்ட மனக்குறை கொண் டிருந்தனர். அவர்களோ அல்லது அவர்களது மூதாதையர் களோ அவ்வாறு பணிபுரிவதற்குக் கட்டுப்பட்டவர்கள் அல்லர் என்றும் கூறினர்கள்.[76] பிப்ரவரி 24ஆம் நாள் எட்வர்ட் மன்னர் சாலிஸ்பரி எனுமிடத்தில் 'பாராளுமன்ற'த்தைக் கூட்டினர். அதற்கு, மேற்றிராணியார்களும் பொதுமக்களின் பிரதிநிதிகளும் இன்றி லௌகீகர்களான பிரபுக்கள் மாத்திரம்

அழைக்கப்பட்டிருந்தனர். அக் கூட்டத்தில் பிரபுக்கள் காஸ்கனிக்குச் செல்லவேண்டுமெனவும், மன்னர் ஃபிளான்டர்ஸிற்குச் செல்லவேண்டியதெனவும் மொழிந்தார். பிரபுக்கள் மறுக்கவே,[77] அவர்கள் வசமிருந்த நிலங்களைப் பிடுங்கி அவ்வாறு செல்வதற்கு விருப்பம் தெரிவித்தவர்களுக்கு அவற்றை அளிக்கப்போவதாய் மன்னர் அச்சுறுத்திஞர். இதனால், நார்ஃபக் எர்லும் இங்கிலாந்தின் மார்ஷலுமான ரோஜர் பிகாட் என்பவருக்கும் மன்னருக்கும் நேரிடையான சச்சரவு ஏற்பட்டு,[78] மன்றம் கலைந்துபோக நேர்ந்தது. மார்ஷலும் பதவிநீக்கம் செய்யப்பட்டார். தவிர, ஹெரிஃபோர்ட் ஏர்லும் நாட்டின் காப்புத் தலைவருமான ஹம்ஃப்ரி போஹன் என்பார், செல்வந்தர்களில் பெரும்பான்மையோர், 1500 குதிரை வீரர்களடங்கிய படையினருடன், அவர்களுடைய பண்ணைகளிலிருந்து மன்னருடைய அதிகாரிகள், உரோமம், பதனிடப்படாத தோல்கள், மற்றும் பல பொருள்களைக் கைப்பற்றுவதைத் தடுத்து நிறுத்தினர்; மேலும், அவர்கள் உறுதியாகப் போர்க்கலங்களைக்கொண்டு எதிர்க்கவும் தயாராஞர்கள்.

## சாசனங்களும் உறுதிகளும், 1297

மே மாதம் 15ஆம் நாள், பிரதம மான்யதாரர்களாகவோ அல்லது இடைப்பட்ட மான்யதாரர்களாகவோ இருந்தாலும், ஆண்டிற்கு இருபது பவுனும் அதற்குமேலும் மதிப்புள்ள நிலங்களையுடையவர்களான இராச்சியத்தின் சுதந்திரமான நிலமுடையவர்கள் எல்லோரிடமிருந்தும் இராணுவப் படையைச் சேர்க்கவேண்டுமென, எட்வர்ட் மன்னர், மேற்றிராணியார்கள், பிரபுக்கள், ஷெரீஃபுகள் முதலியோருக்கு ஆணையிட்டார். ஜூலை 7ஆம் நாள் அவர்கள் லண்டனில் குதிரைகளுடனும் போர்க்கருவிகளுடனும் கூடவேண்டுமென்றும், மன்னரின் நேரிடையான தலைமையின்கீழ் கடல்கடந்து செல்லத் தயாராயிருக்கவேண்டுமென்றும் அறிவிக்கப்பட்டது.[79] 7ஆம் நாள் படை கூடியது. பாதுகாப்பாளரும் (கான்ஸ்டபிளும்) படைத் தலைவரும் (மார்ஷல்) மன்னரால் அழைக்கப்பட்டபொழுது, அவர்களுடைய பதவிக்கான கடமைகளைச் (அதாவது, படையிலுள்ளவர்களின் குறிப்பெடுத்தல் போன்றவைகளைச்) செய்ய மறுத்ததால், அவர்கள் கேட்டுக்கொண்டபடி பதவிகளிலிருந்து விடுவிக்கப்பட்டனர். நாட்டின் படைகள் முழுவதையும் ஆக்கிரமிப்புடன் கூடிய வெளிநாட்டுப் போருக்காக அழைத்தது, இராணுவக் கடமைகளை, மான்யதாரர்களும் தேசியப்

பாதுகாப்புப் படையும் கடுமையாகப் புரியவைப்பதா யிருந்தது. இக் காரணத்தால், மன்னருடைய நடவடிக்கைகள் சட்ட விரோதமானவை என்று இல்லாவிட்டாலும் அரசியல் அமைப்புச் சட்டத்திற்கு விரோதமானது எனும் விரிவான கருத்தின் அடிப்படையில் இரண்டு ஏர்ல்களும் மறுத்திருக் கலாம். ஆனால், அவ்வாறு செய்யாமல், அழைப்பாணையின் வாசகத்தைச் சிறப்பான வாதத்திற்கேற்றதாய்த் தோன்று வதை அடிப்படையாகக்கொண்டு அவர்கள் மறுத்தார்கள். எட்வர்ட் மன்னர், அவருடைய நிலை சட்டப்படியுள்ளது என்பதில் நம்பிக்கையில்லாதவராய், வழக்கப்படி கட்டளை யிடுவதாய் அமையும் சொற்களுக்குப் பதிலாக 'நாம் அன்புடன் வேண்டுகிறோம்' எனும் சொற்களை அமைத்து அனுப்பினர். ஏர்ல்கள், பிரபுக்கள் முதலியவர்களுக்கு அனுப்பிய உத்தரவில், மேற்படி சொற்களைக்கொண்டு சட்டப்படி விடுத்த ஆணையாக அதனைக் கருதாமல், சாதாரணமாக முறையின்றி விடுத்த அழைப்பு எனவே கான்ஸ்டபிளும் மார்ஷலும் அதனைக் கருதிய தாகக் கூறலாம்.[80] அவர்களுடைய பதில் அச் சூழ்நிலைக்கு முற்றிலும் பொருத்தமானதாக முடிவு செய்திருக்கவேண்டும்; ஏனென்றால், 'ஃபிளோரஸ் ஹிஸ்டரியோரம்'[81] எனும் நூலில், ஏர்ல்களும் பிரபுக்களும் அவர்களுடைய சொந்தப் பாராளு மன்றம் எனப்பட்டதும், வேல்ஸ் நாட்டு எல்லைப்பகுதிகளில் வை எனும் காடுகளில் நடந்ததுமான கூட்டத்தில் நடவடிக்கை களைப்பற்றி ஒப்பந்தம் செய்துகொண்டதை அறிந்துள்ளோம். சட்ட நுணுக்கங்களை நோக்குவதில் பெயர்பெற்று விளங்கியவ ரான எட்வர்ட் மன்னரை எதிர்ப்பதில் சட்டத்தின் திறன்க ளான கேடயத்தைப் பயன்படுத்தி நடக்கப்போகும் போட்டி யில் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளுவது என்று எண்ணியது முன்யோசனையுடன் செய்துகொண்ட ஏற்பாடாகும். அதே சமயத்தில், சாதாரணமாகப் புறக்கணிக்கக்கூடிய ஒரு விஷயத்தை வலியுறுத்தி அழுத்தமாகச் சொன்னதாலும், அவர்கள் சொல்லுவதை மன்னர் மீறி உத்தரவிடமாட்டார் என்ற நம்பிக்கையாலும் மேற்கண்டவாறு கூறினர். இறுதியில் அவர்களுடைய வாதத்தைச் சட்டவிரோதமான அழைப்பு என மன்னர் ஒப்புக்கொண்டார்.[82] அரசியல் கட்சியின் தலைவர் களான இவ்விருவரும் மன்னரிடமிருந்து சாசனங்களை உறுதி செய்தலைப் பெற்றனர் என்று ஹாலம் என்பார் இவர்களைப் புகழ்ந்துரைத்தது சற்றுத் திருத்தப்பட வேண்டியதாகும். உண்மையான நாட்டுப்பற்று நோக்குடன், சொந்த உரிமைக ளாலும் அவர்கள் ஒருசமயம் தூண்டப்பட்டிருக்கலாம். அவர் களது நோக்கம் எதுவாயினும் சரி, அவர்களுடைய வீரமும்,

முன்யோசனையும், வின்செல்ஸி அதிமேற்றிராணியாருடைய நாட்டுப் பற்றும் 'மகாசாசனத்தைக் காட்டிலும் ஆங்கில அரசியலமைப்பு எனும் கட்டடத்திற்கு முக்கியமான தூண் போன்ற'[83] ஒரு பகுதி சேர்க்கப்பட்டதற்குக் காரணமாகும்.

**மக்களிடம் எட்வர்ட் மன்னர் செய்த முறையீடு :** எட்வர்ட் மன்னர் கூட்டத்திலிருந்த மக்களிடத்தில் முறையிட்டுக் கொள்ள முடிவு செய்தார். கான்டர்பரி திருக்கோயிலுக்குச் சொந்தமானவும் பறிமுதல் செய்யப்பட்டனவுமான நிலங்களை மறுபடியும் திரும்ப அளித்தும், மேற்றிராணியாருடன் நட்பு பூண்டும் பொதுமக்களிடம் சொற்பொழிவாற்ற ஜூலை 14ஆம் நாள் வெஸ்ட்மின்ஸ்டரிலுள்ள பெரிய அறையின்முன் அமைக்கப்பட்டிருந்த மரத்தாலான மேடையில், பின்னர் 'வேல்ஸ் இளவரசர்' என அழைக்கப்பட்ட சிறிய மகனுடனும் அதிமேற்றிராணியார் வார்விக் ஏர்லுடனும் நின்றுகொண்டு, உணர்ச்சி ததும்பும் வகையில் (காலவழிச் செய்தித் தொகுப்பாளர் 'கண்ணீர் ததும்ப' எனக் கூறுகிறார்) மக்களை நோக்கி, கடந்த காலத்தில் செய்த செயல்களை மன்னிக்கும்படி தாழ்மையுடன் கேட்டுக்கொண்டார். அத்துடன் மன்னர் ஆட்சி புரியவேண்டியவாறு நல்லாட்சி புரியவில்லை என்றும் ஒப்புக்கொண்டார். மக்கள் தம் சொத்துகளிலிருந்து சிறிய அளவு அவருக்கு அளித்ததையோ அல்லது அவரது பணியாள்கள் அவருக்குத் தெரியாமல் மக்களிடமிருந்து அதனைப் பறித்ததையோ நினைவு கூர்ந்து, அதில் ஒரு பகுதியைச் செலவிடுவதால் பெரும் பகுதியை நிம்மதியாக வைத்துக்கொள்ளலாம் என்றும், ஆங்கிலேயருடன் போர் புரியத் துடித்துக்கொண்டிருந்த பகைவர்களுடைய துன்பம் விளைவிக்கக்கூடிய முயற்சிகளையெல்லாம் முறியடிக்க அது துணைபுரியும் என்ற எண்ணத்துடன்தான் அவைகளை ஏற்றுக்கொண்டுள்ளேன் எனவும் கூறினார். அத்துடன் மன்னர் கூறியதாவது: 'கவனியுங்கள், உங்கள் பொருட்டு அபாயத்திற்கு என்னை உள்ளாக்கிக்கொண்டுள்ளேன். திரும்பிவந்தால், நான் இப்பொழுது உள்ள நிலையில் என்னை ஏற்றுக்கொள்ளுங்கள். உங்களிடமிருந்து எடுத்துக்கொண்டவைகளை யெல்லாம் மீண்டும் திரும்ப அளித்துவிடுகிறேன். நான் திரும்பிவராவிடில் எனது மகனை உங்களது மன்னனாக ஏற்றுக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறேன்' என்றார்.[84]

**நெருக்கடி :** மன்னருடைய மரியாதை நிரம்பிய உணர்ச்சியைத் தூண்டும் சொற்பொழிவால் மக்கள் மனம் இளகியது. கைகளை உயர்த்தி, மன்னரிடம் விசுவாசத்தை உறுதிப்படுத்தி

னர். மன்னருக்குப் பணத்தேவை மிகுதியாயிருந்தது. பிரபுக்களை நாடியபொழுது, நாட்டின் பல குறைகளை வற்புறுத்தி, சாசனங்களை உறுதிப்படுத்துமாறு வேண்டினர். இவ் வேண்டுகோளுக்கு இணங்குவதாக மன்னர் உறுதி செய்தார். இறுதியில் பிரபுக்களில் பலர் அவ்விடம்விட்டு வெளியேறினர். பின்னர், இராணுவ அழைப்பாணையை ஏற்றுக்கொண்டு வந்திருந்தவர்களான ஒருசில பிரபுக்களும் மற்றோரும் முறையின்றிக் கூடிய கூட்டத்திடம், பிரபுக்கள், நைட்டுகள் முதலியவர்களிடமிருந்து 'எட்டில்' ஒரு பங்கும், நகரங்களிலிருந்து 'ஐந்தில்' ஒரு பங்கும்[85] அளிக்குமாறு மன்னர் வற்புறுத்திக் கேட்டுக்கொண்டார். கூட்டத்திற்கு வராத கான்ஸ்டபிள், மார்ஷல் இவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்த எடுத்துக்கொண்ட முயற்சி வீணானபொழுது, எட்வர்ட் மன்னர் (ஜூலை, 30) எட்டில் ஒன்றையும் ஐந்தில் ஒன்றையும் வசூலிக்க உத்தரவிட்டு, அவரால் இயலும்பொழுது விலை கொடுப்பதாக உறுதிமொழியளித்து,[86] நாட்டிலுள்ள உரோமங்களையெல்லாம் கைப்பற்றுமாறும் உத்தரவிட்டார். போப்பாண்டவரின் 'கிளெரிக்ஸ் லெய்கோஸ்' எனும் ஆணையால் தடை செய்யப்பட்டிருந்த குருமார்கள் (ஆகஸ்டு, 10), போப்பாண்டவரின் அனுமதியைப் பெறுவதில் நம்பிக்கையுடையவர்களாய், அனுமதியைப் பெற்றவுடன் மன்னருக்குப் பணவுதவி செய்வதில் தங்களது விருப்பத்தைத் தெரிவித்தனர்.[87] அதுவரை காத்திருக்க முடியாத மன்னர், குருமார்களின் லௌகீகச் சொத்துகளில் மூன்றிலொரு பகுதியைப் பறிமுதல் செய்யுமாறு உத்தரவிட்டார்.[88] இதற்குச் சில நாள்களுக்கு முன்பு, மக்களுக்கு, இரண்டு ஏர்ல்களுடன் கொண்டிருந்த வழக்கில் தன்னுடைய நிலையை நியாயமானதெனக் கூறி நோக்க விளக்கத்தை வெளியிட்டிருந்தார். அத்துடன் நாட்டின் பாதுகாப்பிற்காகக் கட்டாய வசூல்கள் தேவையாயுள்ளனவென்றும், நாட்டிற்குத் திரும்பிய பின்னர் எல்லாவற்றையும் ஒழுங்கு செய்வதாயும் அதில் கண்டிருந்தார்.[89] சின்னாள்களுக்குப் பின்னர், கப்பலேறுவதற்காக மன்னர் வின்செல்சீ எனுமிடத்திலிருந்தபொழுது, ஏர்ல்களிடமிருந்து ஒரு தூதன் மன்னரிடம் வந்து, ஒரு கடிதத்தை அளித்தான். 'அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்கள், மடாலயத் தலைவர்கள். மதத் தலைவர்கள், ஏர்ல்கள், பிரபுக்கள், நாட்டினத்தின் அனைவரின் சார்பிலும் ஏற்கெனவே குற்றமெனக் குறையிடப்பட்ட தீமைகளைத் திரட்டி அமைத்து நிவர்த்தியைக் கோருவதாக அக்கடிதம் இருந்தது. பிற்காலத்திய வாசகத்தைக்கொண்டு பார்த்தால் அதை 'மிக்குயர் மறுப்புரை' என அழைக்க வேண்டும்.

**குறைகளின் அட்டவணை :** (1) முதலாவதாக, நாட்டின் மக்களுக்கு மன்னர் விடுத்த ஆணை போதாதெனப் படுவதாக அவர்கள் கூறினர் ; ஏனென்றால், அவர்கள் எந்த இடத்திற்கு வரவேண்டுமென்பது ஆணையில் குறிப்பிடப்படவில்லை ; எனினும், போர்த்தளவாடங்களின் தன்மையும், தேவையான பணமும் கூடுமிடத்தைப் பொறுத்தன என அறிவிக்கப்பட்டிருந்தது. தவிர, அவர்கள் பணிபுரியக் கடமைப்பட்டவர்களாயினும் சரி இல்லாவிட்டாலும் சரி, அவர்களுடைய தலைவர் கடல்கடந்து ஃபிளான்டர்ஸிற்குச் செல்ல விரும்புகிறார் எனப் பொதுவாகக் கூறப்பட்டது ; அங்கு எது எப்படியாயினும் சரி, அவர்கள் எந்தப் பணியும் புரியக் கடமைப்பட்டவர்களல்லர் என அவர்களுக்குத் தோன்றியது ; ஏனென்றால், அவர்களோ அல்லது அவர்களுக்குமுன் சென்றவர்களோ அல்லது மூதாதையர்களோ அந் நாட்டில் பணிபுரியவில்லை. அங்கு அல்லது வேறெங்கிலும் பணிபுரியக் கடமைப்பட்டிருந்தாலும், அவ்வாறு செய்வதற்கான வசதிகள் அவர்களிடம் கிடையா. பல்வேறு டல்லேஜ் வரிகள், உதவித் தொகைகள், கப்பல்களிலிருந்து பறிமுதல் செய்யப்பட்டவைகள் (உதாரணமாக, தானியங்கள், ஓட்ஸ், மால்ட், உரோமம், தோல், எருதுகள், ஆவினங்கள், உப்பிட்ட இறைச்சி) முதலியவைகளில் ஒரு பென்னைக்கூட அவர்களைப் பாதுகாத்துக்கொள்வதற்கும் கொடுக்காமல் பலவந்தமாகக் கைப்பற்றியது.

(2) மேலும், மேற்கூறியுள்ள டல்லேஜ் வரிவிதித்தல், பறிமுதல் செய்யப்படுதல் முதலியவை காரணமாக வறுமையில் சிக்கிய அவர்களால் எவ்வித உதவித் தொகையும் அளிக்க முடியாமலிருக்கிறது என்றும் கூறினர். அவர்கள் தங்களையே உணவு, உடை போன்றவைகளால் பாதுகாத்துக்கொள்ள முடியாத நிலையிலிருந்தனர். 'பலர் பிழைப்புக்கே அல்லலுற்றனர் ; சாகுபடி செய்யச் சொந்த நிலமில்லாமலுமிருந்தனர்.'

(3) அவர்கள் நாட்டின் சட்டம், வழக்கம் இவைகளையொட்டி (கலக்காமல்) அவர்களது முன்னோர்களை நடத்தியவாறு நடத்தப்பெறவில்லை ; அவர்கள் துய்த்த வழக்கமான சுதந்திரங்களும் அவர்களுக்கு அளிக்கப்படவில்லை ; மன்னர் தன்னிச்சைப்படி அவைகளை மறுத்துள்ளார். மகாசாசனப்படி நடத்தப்படுவதை அவர்கள் விரும்புகின்றனர். ஆனால், மக்களுக்கு அழிவை உண்டுபண்ணும் அளவிற்கு மகாசாசனத்தின் ஷரத்துகள் எல்லாம் புறக்கணிக்கப்பட்டுள்ளன. எனவே,

தலைவரான மன்னரை, இக்குறைகளை அவருடைய கௌரவம், மக்களின் நன்மை இவைகளுக்காகத் தீர்க்கவேண்டுமென்று மக்கள் மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறார்கள்.

(4) மேலும், காடுகள் சம்பந்தமான அஸ்ஸைஸ் குறித்து நாட்டு மக்கள் பெருங்குறை ஏற்பட்டுள்ளதாக வருந்துகின்றனர். மேற்கூறிய அஸ்ஸைஸ் முன்போல் வைக்கப் படவில்லை; அத்துடன் காடுகளைப்பற்றிய சாசனம் பின்பற்றப் படவில்லை; விரும்பியவாறு கைப்பற்றுதல்கள் நியாயத்தை மீறியும் வழக்கத்திற்கு மாறாகவும் செய்யப்படுகின்றன.

(5) உரோமத்தின்மீது விதிக்கப்படும் வரியான ஒரு மூட்டைக்கு நாற்பது ஷில்லிங்கும், பிரித்தெடுக்கப்பட்டதற்கு மூட்டை ஒன்றுக்கு ஏழு மார்க்குகளும் (1 மார்க்=4 பவு. 13 ஷி. 4 பெ.) மிக அதிகமானது. நாட்டின், மொத்த மதிப்பில் பாதி மதிப்பு இங்கிலாந்தில் உற்பத்தியாகும் உரோமத்தைச் சார்ந்திருத்தலால், அதன்மீது விதிக்கப்படும் வரி நாட்டின் மதிப்பில் ஐந்திலொரு பங்காயிருக்கிறது.

(6) கடைசியாக, நாட்டு மக்கள், மன்னருடைய கௌரவம், பாதுகாப்பு இவைகளை விரும்புகிறபடியால், அவருக்கும் அவருடைய மக்களுக்கும் ஃபிளாண்டர்ஸ் மக்களிடமிருந்து மேற்கொண்டு உத்தரவாதம் கிடைக்காதவரை அந்நாட்டிற்கு மன்னர் செல்லுவது, அவருடைய நன்மையைக் கருதிக் கூடாதென எண்ணுகின்றனர்; மேலும், மன்னர் வெளிநாடு செல்லவிருக்கிறார் என்ற காரணத்தால் கலகஞ் செய்யத் தொடங்கியுள்ள ஸ்காட்லாந்து, மன்னர் கடல் கடந்துவிட்டார் எனத் தெரிந்ததும், மேலும் மோச நிலையை அடையும் என்பது உறுதியானது. தவிர, ஸ்காட்லாந்து மாத்திரம் கருத்தில் கொள்ளவேண்டியதன்று; மற்ற நிலப்பகுதிகளும் முறைப்படி ஆட்சிக்குள் இணைக்கப்படாமலிருக்கின்றன.[90]

இம் மிக்குயர் மறுப்புரைக்கு, மன்னர் தன்னுடைய ஆலோசனைக் குழுவின் ஆலோசனையின்றிச் சிறப்பான எந்தப் பதிலையும் அளிக்க மறுத்தார். அவரது ஆலோசனைக் குழுவில் ஒரு பகுதி ஏற்கெனவே ஃபிளாண்டர்ஸிற்குக் கப்பலில் சென்றுவிட்டது; மற்றொரு பகுதி லண்டனிலிருந்தது.[91] சில நாள்கள் கழிந்து (ஆகஸ்டு, 22), மன்னரே அவருடைய மகனும் வேல்ஸ் இளவரசனுமான எட்வர்டை ஆட்சியாளராக வைத்துவிட்டு, கென்டிற்கு நேரில் சென்றார். மன்னர் வெளிநாட்டிற்குப் புறப்பட்டதும், கிடைத்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு, கோரிக்கைகளை வற்புறுத்துவதற்கு ஏர்ல்கள் முன்

வந்தனர். எக்செக்கருக்குள் நுழைந்து, சாசனங்களை உறுதி செய்யாதவரையில், சட்டவிரோதமாகப் பெறப்பட்ட உதவித் தொகையை விதிக்கக் கூடாதெனப் பிரபுக்களைத் தடை செய்தனர்.

**சாசனங்களை உறுதிப்படுத்தல், 1297:** இராணுவத்தைச் சேர்ந்தவர்களில் பெரும்பகுதியினராலும் லண்டன் மக்களாலும் ஆதரவும் துணையும் அளிக்கப்பட்டு, அவர்கள் அந்நிலையில் தலைவரானார்கள். இளவரசரும் அவருடைய ஆலோசனையாளரும் இணங்கவேண்டியதாயிற்று. கன்ஃபர்மேஷியோ கார்ட்டாரம்[92] (சாசனங்களை உறுதிப்படுத்தல்), பின்னர் ஒரு சட்டமாகக் கணக்கெடுக்கப்பட்டது, சாசனம் போன்று அமைக்கப்பெற்று 1297ஆம் ஆண்டு அக்டோபர் 10ஆம் நாள் வெளியிடப்பட்டது. இதை வெளியிட்ட பாராளுமன்றத்திற்கு ஷயர்களிலிருந்து நைட்டுகளும் உறுதிப்பத்திரத்தின் படிகளைப் பெறுவதற்காக அழைக்கப்பட்டிருந்தனர். அத்துடன் வழக்கத்திற்கு மிகக் குறைவான அளவில், லௌகீக, சமயஞ் சார்ந்த பிரபுக்களும் அழைக்கப்பட்டிருந்தனர். கென்டிலிருந்த மன்னர் எட்வர்டுக்கு உறுதிப்பத்திரம் உடனடியாக அனுப்பப் பெற்று அடுத்த நவம்பர் மாதம் 5ஆம் நாள் அவரால் உறுதி செய்யப்பட்டது.[93] முன்னர் அளிக்கப்பட்ட எட்டில் ஒன்றும் ஐந்தில் ஒன்றும் செல்லத்தக்கதன்று எனக் கருதப்பட்டதுடன், அதற்குப் பதிலாக ஒன்பதில் ஒன்று என மாற்றியமைக்கவும் பட்டது.[94] சட்டவரம்பிற்குட்பட்ட எதிர்ப்பு முழு வெற்றி பெற்றது. சாசனங்களை உறுதிப்படுத்தல் என்பது, மகா சாசனத்தையும் காடுகள் பற்றிய சாசனத்தையும் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் வினியோகம் செய்வதற்காகச் சிறப்பான ஷரத்துகளுடனும், ஆண்டுதோறும் வெளியிடப்படும் மறுவெளியீடாகமாத்திரமன்றித் தன்னிச்சையாக வரி விதிப்பது எனும் உரிமையை ஆதாரமின்றி மேற்கொண்ட ஆட்சியிடமிருந்து வருங்காலத்தில் அவ்வுரிமையைப் பறிப்பதற்கான தொடர்ச்சியான புதிய ஷரத்துகளடங்கிய நிறைவேற்றப்பட்ட சட்டமாயும் அமைந்தது.

இச் சட்டத்தின் ஐந்தாவது பிரிவில், முன்னர் வலிந்து பெற்ற 'உதவித் தொகைகள், பணிகள், கப்பலில் பறிமுதல் செய்யப்பட்ட பொருள்கள்' ஆகியவற்றை மன்னர் உறுதியாகத் துறந்தார். அடுத்த பிரிவு தொடர்ந்து கூறுவதாவது:

'6. மேலும், நாங்கள், எங்களுக்காகவும், எங்களுடைய வாரிசுகளுக்காகவும், அதிமேற்றிராணியார், மேற்றிராணியார்,

மடாலயத் தலைவர்கள், மடத்தலைவர்கள் திருச்சபையைச் சேர்ந்த மற்றவர்களுக்காகவும், அத்துடன் ஏர்ல்கள், பிரபுக்கள், நாட்டின் பொது மக்களுக்காகவும் தவிர வேறு எதற்காகவும் இனிமேல் நாட்டிலிருந்து, உதவித்தொகை, பணிகள், கப்பலில் பறிமுதல் செய்யப்பட்ட பொருள் போன்ற எதையும் நாட்டிலுள்ளவர்கள் எல்லோருடைய பொதுவான சம்மதத்தின் பேரில், பொது இலாபத்திற்காகவும், வழக்கமாயுள்ளதும் சேரவேண்டியதுமான உதவித்தொகை, கப்பலில் பறிக்கப்பட்ட பொருள் இவைகளைத் தவிர, வேறொன்றையும் பெறமாட்டோம்'.

7ஆவது பிரிவில், 'உரோமத்தின்மீது விதிக்கப்படும் சுங்கவரி (மால்டோல்ட்), அதாவது, ஒவ்வொரு மூட்டை உரோமத்திற்கும் 40 ஷில்லிங் சுங்கவரி விதித்தல் விடுவிக்கப்படுகிறது. அத்துடன், நாட்டின் பொதுமக்களுடைய நல்லெண்ணத்துடனும் பொதுச் சம்மதமின்றியும், எங்களுக்கும் எங்கள் வாரிசுகளுக்கும் மேலே குறிப்பிட்ட பொதுமக்களால் முன்னர் அளிக்கப்பட்ட உரோமம், தோல்கள், பதனிடப்பட்ட தோல்கள் முதலியவைமீது சுங்கவரி நீங்கலாக வேறெதையும் நாம் எடுத்துக்கொள்ளமாட்டோம்' என மன்னர் கூறினர்.

இச் சட்டத்தில் பயன்படுத்தப்பெற்ற சொற்கள், உரோமத்தின் பழைய சுங்கவரியையும் (இச் சுங்கம் தீமை விளைவிக்கக்கூடிய சுங்கத்திலிருந்து வேறானது), நகரங்கள்மீதும் மன்னருடைய தனியுரிமை பெற்ற நிலங்கள்மீதும் விதிக்கப்படும் டல்லேஜ் வரியின் சட்ட உரிமையையும் பாதுகாத்து மன்னருக்கு அளிப்பதாகத் தோன்றலாம். இவ் வுரிமையை 1304-லும் மன்னர் பயன்படுத்தியுள்ளார்.[95] ஆனல், பிரபுக்கள் விரும்பியவாறு அவ்வளவு விரிவாக ஒத்துக்கொள்வதற்கு மன்னர்எட்வர்ட் தயாராயில்லை எனத் தோன்றுகிறது. பிரபுக்களுடைய கோரிக்கைகள் 'டி டல்லாஜியோ நான் கன்சிடெண்டோ' எனும் சட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கலாம். இச் சட்டத்தின் முதலாவது விதியில், செல்வந்தர்களுடைய சம்மதத்துடன் 'நைட்டுகள், நகரவாசிகள், சுதந்திர மக்கள்' முதலியவர்களது சம்மதம் கிடைத்தாலொழிய, டல்லேஜ் அல்லது உதவித்தொகை எதுவும் விதிக்கப்படுவதில்லையென்று கூறப்பட்டிருந்தது. குறிப்பான சொற்களின்றித் தெளிவற்ற முறையில் தொகுக்கப்பட்ட ஒரு பத்திரத்திற்கு மன்னர் தனது சம்மதத்தைக் கொடுத்ததிலிருந்து, பத்திரத்தில் கண்ட அளவிற்குச் செல்ல மன்னர் எண்ணவில்லை என்பது குறிப்பிடத்தக்கதாகும்.[96]

## அடிக்குறிப்பு

1. அவ்வாறான கூட்டங்களை அக்காலத்தியவர்கள் ஒரு கலைச் சொற் பெயரிட்டு அழைத்தனர் எனக் கருதுவதைத் தவிர்க்க, இது இக்காலத்திய விவரமுறைச் சொல்லாகப் பயன்படுத்தப்பட்டுள்ளது. பதிப்பாசிரியரும் அதே போன்று 'கம்யூன் கன்சிலியம் ரெஜினி' எனும் சொற்றொடரை இதைச் சுட்டிக்காட்டுவதற்குப் பயன்படுத்தவில்லை. அச்சொற்றொடரை ஸ்டப்ஸ், மெயிட்லந்து, டாஸ்வெல்-லாங்மீட் ஆகியோர் பயன்படுத்தியுள்ளனர். எனினும், அது அக்காலத்திய பெயராக நிறுவனத்திற்கு அமையவில்லை. மகாசாசனம் (1215), விதிகள் 12, 14-களைத் தவறாகப் புரிந்துகொண்டதன் அடிப்படையில் அவ்வாறு அழைக்கப்பட்டது. ஏ. பி. ஒயிட், 'அமெரிக்க வரலாற்று மறுபரிசீலனை', xxv, 1—17 (1919).

2. மேலே கூறப்பட்டதிலேயே, பக். 17 முதல்.

3. கிளாரண்டன் சட்டம் (1164), விதி 11, 'குரியா ரெஜிஸ்' சபைக்கு வருவது என்பது மான்யப் பிரபுக்களுக்குக் கடமை எனக் கூறுகிறது. 'குரியா ரெஜிஸ்' மான்ய முறையில் அமைந்ததா, இல்லையா எனும் பிரச்சினை, ஜி. பி. ஆடம்ஸ் ('ஆங்கிலேய அரசியல் சாசனத்தின் தோற்றம்', 193), மெயிட்லந்து ('அரசியல் சாசன வரலாறு', 163) இவ்விருவருக்கிடையேயான சொற்கள்பற்றிய விவாதமாகும்.

4. மேலே கூறப்பட்டதிலேயே, பக். 34.

5. ஓர்ஸெஸ்டரைச் சார்ந்த ஃபிளாரன்ஸ், s.a. 1116.

6. மகாசாசனப் பத்திரம் (1215), விதி 14.

7. 1164-ல் நார்த்தாம்டன் மகாசபைக்கு வரும்படி கட்டளையிடப்பட்டதைக் கண்டு அதிமேற்றிராணியாரான பெக்கெட் தம்மை அவமானப்படுத்தியதாகக் கருதினார். காரணம், அழைப்புச் சிறப்பான ஆணைமூலம் அல்லாது கென்ட் ஷெரீஃபின் வழியாக அனுப்பப்பட்ட சாதாரணமான அழைப்பு என்பதேயாகும். வில்லியம் ஃபிட்ஸ்-ஸ்டீபன் 'பெக்கெட்டின் வாழ்க்கை வரலாற்றுக்கான சாதனங்கள்' (ராபர்ட்சன் பதிப்பு, ரோல்ஸ் வரிசை) iii, 51; ஸ்டப்ஸ், 'அரசியல் சாசன வரலாறு', i, 504.

8. ரவுண்டு, 'பிரபுத்துவமும் மரபும்' என்பதில் 'பிரபுக்கள் சபையின் தோற்றம்', i, 324 முதல்.

9. பைக், 'பிரபுக்கள் சபையின் அரசியல் சாசன வரலாறு', பக். 99 முதல்.

10. மே, 'அரசியல் சாசன வரலாறு', i, 201.

11. போவிக், 'மூன்றும் ஹென்றி', i, 269ஐக் காண்க.

12. எம். வி. கிளார்க், 'இடைக்காலத்தில் பிரதிநிதித்துவமும் ஒப்புதலும்'.

13. ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', முன்னுரை, 27. பிரதிநிதிகளின் முறை வளர்ச்சியில் சமயஞ்சார்ந்த அவைகளின் செல்வாக்குபற்றி ஈ. பார்க்கர் எழுதியுள்ள 'டொமினியன் திருச்சபையும் சமயக் கூட்டங்களும்—பதிமூன்றும் நூற்றுண்டில் திருச்சபையில் பிரதிநிதித்துவ வளர்ச்சி பற்றிய ஆய்வுரை'யையும், 'காமன்ஸ் சபையின் தோற்றம்' பற்றிய கட்டுரையில் பாஸ்கேயின் திறனுய்வையும் பக். 19—23-ல் காண்க; ஜி. டி. லாகர்டே எழுதியுள்ள 'துருவாயின் வரலாற்று விமரிசனம்' என்பதையும் (1937) பார்க்க. இந்த அதிகாரம் முழுவதிலும் தேர்தல் என்பது பொறுக்குதல் என்பதையே குறிப்பிடுகிறதென்பதை நினைவில் கொள்ள வேண்டும்; அத்துடன் தேர்தல் பற்றிய வழிமுறையும் தெளிவாகக் கூறப்படவில்லை. தேர்தல் வாக்குச் சீட்டுகளை எண்ணி முடிவு காண்பதென்பது தவறுன கருத்தாகும். 1282-ல் நியமனம் பெற்ற கமிஷன், பட்டாளத்திற்காக ஆயிரம் பேர்கள் 'தேர்ந்தெடுப்பது' என்பது, பொறுக்கியெடுப்பது அல்லது அடையாளமிடுவது என்பதைத்தான் வலியுறுத்தும்; பால்கிரேவ், 'பாராளுமன்ற உரிமையாணைகள்', i, 228.

14. வெண்டோவர், ஹியூலட் பதிப்பித்தது (ரோல்ஸ் தொகுப்பு), ii, 82; மாத்யூ பாரிஸ், ii, 550–1 (ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்களில்', 271)ஐயும் காண்க. இப்பகுதி பலவாறுகப் பொருள் செய்யப்படுகிறது. எச். டபிள்யூ. ஸி. டேவிஸ், 'ஆங்கில வரலாற்று மறுபரிசீலனை', xx, 289 (1905)-ல், ரீவும் மற்றும் நான்கு பேர்களும் செயின்ட் ஆல்பன்ஸ் நகரில் நேரில் தோன்றவேண்டியதில்லை யென்றும், கவுன்டி நீதிமன்றத்தில் ஷெரீஃபின் முன்னிலையில் உண்மையை அடையாளங் கண்டுரைத்தால்

போதுமானதென்றும் கூறுகிறார். ஜி. ஜே. டர்னர், அதிலேயே, xxi, 297 (1906), பிரதிநிதிகள் மன்னருடைய சொந்த நிலங்களடங்கிய கிராமப் பகுதிகளிலிருந்து வரவழைக்கப்படாமல் மேற்றிராணியார்களுக்குச் சொந்தமான நிலங்களிலிருந்து வரவழைக்கப்பட்டனர் எனக் கருதுகிறார். ஏ. பி. ஒயிட், 'அமெரிக்க வரலாற்றுப் பரிசீலனை', xvii, 12 முதல் (1911) வேவர்லி ஆண்டுக் குறிப்புகளில் காணப்படும் (1208ஆம் ஆண்டைப் பற்றியது) பகுதியை ஒப்பிட்டுப் பார்த்து, செயின்ட் ஆல்பன்ஸுக்கு வரவழைக்கப்பட்ட பிரதிநிதிகள் 1208-ல் திருச்சபையின் சொத்துகளைப் பராமரிப்பதற்காக ஒப்படைக்கப்பட்டவர்கள்தான் என முடிவு கட்டுகிறார். ஸி. ஆர். செய்னியைப் பார்க்க; 'போப்பாண்டவரின் தடையாணைக்கு ஜான் மன்னரின் எதிர்விளைவு', (1949) அரசு வரலாற்றுக் கழக நடவடிக்கைகள், 130. ஜி. ஜே. டர்னரின் கருத்தையேற்று ஈ. பார்க்கர், 'டொமினிகன் திருச்சபை விதிமுறை', 52 (1913) பயனைக் கருதுமளவில் அது நஷ்டங்களின் மதிப்பீட்டைச் செய்த ஜூரிகளின் செய்தியாகும் எனக் குறிப்பிடுகிறார். பாஸ்கட் (முன்னர் கூறியது, 42, 1914), காலவழிச் செய்தித் தொகுப்பாளர், ஹெர்ட்ஃபோர்டுஷயரிலுள்ள அரசுக்குச் சொந்தமான நிலங்களடங்கிய பகுதிகளிலிருந்து நான்கு பேர்களையும் ரீவையும் செயின்ட் ஆல்பன்ஸுக்கு வரவழைப்பதற்கான ஆணையைக் கைக்கொண்டிருந்தார் எனவும், வேறு கவுன்டிகளிலுள்ள ஷெரீஃபுகளுக்கு விடுக்கப்பட்ட ஆணைகளில் வேறு இடங்களில் கூடுவதுபற்றிக் குறிப்பிட்டிருக்கலாம் எனவும் கருத்துத் தெரிவித்துள்ளார். பாஸ்கட்டின், 'கட்டுரை', 38–43-ல் இச்செய்திபற்றிய முழுச் சர்ச்சையும் தெளிவாகவும் சுருக்கமாகவும் காணப்படுகிறது.

15. ஹாலம், 'இடைக்காலங்கள்', iii, 27.

16. 'பிரபுவின் கௌரவம் பற்றிய அறிக்கை', அனுபந்தம் i, 2. 'பொறுக்குச் சாசனங்கள்', 282. [ஸ்டப்ஸால் முன்னர் பதிப்பிக்கப்பட்ட சாசனங்களில் 'வீரர்கள்' (மிலிட்டஸ்) என்பதற்குப் பதிலாக 'மனிதர்கள்' (ஹோமினஸ்) எனும் சொல் தவறுதலாகக் காணப்பட்டது. அதன் காரணமாகப் பேரவையின் விவாதங்களில் குழப்பத்தை உண்டுபண்ணியது]; 'ஆங்கில வரலாற்றுப் பரிசீலனை', xxxi, 85ஐப் பார்க்க; ஏ. எல். பூல், 'டும்ஸ்டே புத்தகம் முதல் மகாசாசனப் பத்திரம்வரை', 463 குறி. 2ஐயும் காண்க.

17. 'குளோஸ் அட்டவணைகள்', i, 437; ரைமர், i, 177; 'பொறுக்குச் சாசனங்கள்', 349, 351.

18. 'பிரபுவின் கௌரவம்பற்றிய அறிக்கை', அனுபந்தம், i, 4. 'பொறுக்குச் சாசனங்கள்', 353.

19. 'பொதுப் பாராளுமன்றம்'; பெரிய காலவழிச் செய்தித் தொகுப்பு, லுவார்ட் பதிப்பித்தது, iv, 518. 'பொறுக்குச் சாசனங்கள்', 328.

20. 1248-ல் விடுத்த ஆணையில், 'மன்னர், பாராளுமன்றம் இவைகளின் முன்னிலையில்' எனும் வாக்கியம் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'குளோஸ் அட்டவணை', vi, 107. நாட்டின் முப்பெரும் பிரிவுகளின் பிரதிநிதியாக முழுமையான உருவை நிலையாக நாட்டு மன்றம் 1295-ல் அடைந்த பின்னரும், மன்னரின் ஆலோசனை மன்றத்து ஆண்டுப் பகுதிக் கூட்டங்களுக்கும், மாக்னம் கன்சீலியம் எனும் பேரவையின் எப்பொழுதாகிலும் கூடும் கூட்டத்துக்கும் 'பாராளுமன்றம்' எனும் பெயர் தொடர்ந்து இடப்பட்டு அழைக்கப்பட்டன. நாட்டு மன்றத்தின் கூட்டங்களுக்கு லத்தீன் மொழியில் 'செய்திப் போக்குவரத்து' எனும் பெயரே முதன்முதலில் வழக்கத்திலிருந்தது (சில சமயங்களில் 'செய்திப் போக்குவரத்து' என்பதுடன் 'கலந்தாலோசித்தல்' எனும் சொல் இணைக்கப்பட்டது). எனவே, 1175-லேயே ஜோர்டன் ஃபான்டாஸ்மி என்பவரால் வழங்கப்பட்ட 'பாராளுமன்றம்' எனும் சொல் வழக்கத்திலிருந்திருக்கலாம் என ஸ்டப்ஸ் வலியுறுத்துகிறார். இப்பெயர் வழக்கத்திற்கு வந்ததும், முன்னர் கூடியவைகளுக்கும் இப்பெயரிட்டு அழைக்கப்படலாயிற்று. மூன்றாம் ஹென்றியின் 28ஆவது ஆண்டைச் சேர்ந்த ஒரு பத்திரம் மகாசாசனப் பத்திரத்தை வழங்கிய பேரவையை 'ரன்னிமேட் பாராளுமன்றம்' எனக் குறிப்பிடுகிறது; 'அரசியல் சட்ட வரலாறு', i, 611. 'அரசு வரலாற்றுக் கழக நடவடிக்கைகள்', 4ஆம் தொகுதி, xi, 137-ல். ரிச்சர்ட்ஸன் என்பார், இப் பெயர் தோன்றிய வரலாற்றையும், தொடக்கத்தில் பயன்படுத்தப்பெற்ற வழக்கத்தையும், ஃபிரெஞ்சு நிறுவனங்களுடன் ஒப்பிட்டு மிகத் தெளிவாகத் தொகுத்துக் கூறியுள்ளார்.

21. 'பிரபுவின் கௌரவம் பற்றிய அறிக்கை', i, 95, அனுபந்தம், i, பக்கம் 13; 'பொறுக்குச் சாசனங்கள்', 365; பாஸ்கட், பக்கம் 33 முதல் பார்க்க.

22. இவ்வாண்டுகளில் நிகழ்ந்தவை ஒரு பேரிலக்கியமாய் அமைந்தது ; ஈ. எஃப். ஜாகெப், 'மானியப் பிரபுக்களின் கலகமும் சீர்திருத்தமும்' (ஆக்ஸ்ஃபர்டு 1925), ஆர். எஃப். டிரிஹார்ன், 'சீர்திருத்தம்பற்றி மானியப் பிரபுக்களின் திட்டம்' (மான்செஸ்டர், 1932), எஃப். எம். போவிச், 'மூன்றும் ஹென்றியும் எட்வர்ட் பிரபுவும்' (ஆக்ஸ்ஃபர்டு, 1947), i, 302 முதல் ஆகியன குறிப்பிடத்தக்க பெருநூல்களாகும்.

23. ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', 378–387 மூலம். இங்கிலாந்தின் ஆட்சி நான்கு தடவைகளில் ஒரு குறிப்பிட்ட கால அளவிற்குச் சிலவராட்சியின் கையிலிருந்தது. ஜான் மன்னராட்சியில் மகாசாசனப் பத்திரத்தில் குறிப்பிடப்பட்ட 25 மான்யப் பிரபுக்களிடம் ஒரு தடவை ; மூன்றும் ஹென்றியின் காலத்தில் 24 பேர்களடங்கிய ஆக்ஸ்ஃபர்டு கமிட்டியின்கண் இரண்டாவது தடவை ; இரண்டாம் எட்வர்டின் காலத்தில் நியமனம் செய்யப்பெற்ற 21 பிரபுக்கள்வசம் மூன்றுவது தடவை ; இரண்டாம் ரிச்சர்டு காலத்தில் மறுவிசாரணைக்கு நியமிக்கப்பட்ட 5 பிரபுக்கள்வசம் நான்காவது தடவை. இக்குழு 'பைத்தியக்காரப் பாராளுமன்றம்' எனப் பொருத்தமின்றி அழைக்கப்பட்ட பெயர் குறித்து, 'வரலாற்று ஆராய்ச்சிக் கழகத்தின் அதிகார மூல வெளியீடு iii, 110, படம் 1 (1925ஐயும்), ஸி. பேமன்ட் எழுதியுள்ள, 'சைமன் டி மான்ட்ஃபர்ட்' (ஈ. எஃப். ஜாகப் பதிப்பித்தது) 155 குறிப்பு 1ஐயும் பார்க்க.

24. ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', 369–397-ல் ஆக்ஸ்ஃபர்டு ஷரத்துகள்பற்றிய மூலப்பத்திரங்களின் தொகுப்பைக் காண்க.

25. ரைமர், i, 378 ; 'பொறுக்குச் சாசனங்கள்', 387.

26. 'பிரபுவின் கௌரவம்பற்றிய அறிக்கை', அனுபந்தம் i, பக். 23 ; ஷெர்லி, 'மூன்றும் ஹென்றியின் கடிதங்கள்', ii, 179 ; 'பொறுக்குச் சாசனங்கள்', 394. மன்னரின் ஆணைகள், நார்ஃபக், ஸஃபக், டிரென்டுக்குத் தென்பகுதியிலுள்ள கவுன்டிகளுக்கு மாத்திரம் விடுக்கப்பட்டன. விண்ட்ஸரில் கூட்டம் உண்மையிலேயே கூடிற்றென்பதற்கு ஆதாரம் கிடையாது.

27. ரைமர், i, 442 ; 'பொறுக்குச் சாசனங்கள்', 400.

28. 'பிரதிநிதிகளின் ஆட்சியின் தோற்ற வரலாறு', ii, 173.

29. 'காமன்ஸ் சபையைத் தோற்றுவித்தவர்' — பாலி, 'சைமன் டி மான்ட்ஃபர்ட்'. அவரது வாழ்க்கை வரலாற்றில், குறிப்பாக வாழ்க்கைபற்றி பேமான்ட் எழுதியதைக் காண்க.

30. காமன்ஸ் சபையைத் தோற்றுவித்தவர் சைமன் டி மான்ட்ஃபர்ட் என்பது பெரிய விவாதத்திற்குரியதொன்ரும். 1265-ல் கூடிய கூட்டம், பிரபுவின் ஆதரவாளர்கள், சமயஞ் சார்ந்தவர்களின் பெரும்பகுதியினர், மான்யப் பிரபுக்களில் (5 ஏர்ல்கள், 18 மான்யப் பிரபுக்கள்) சிறு பகுதியினர், ஷயர்களுடையவும் பரோக்களுடையவும் பிரதிநிதிகள் முதலியோர், புதிதாக அமைக்கப்பட்ட ஆட்சியை அனுமதிப்பதற்காக ஒன்று கூட்டப்பட்டதாகும். சிறப்பானதொரு பணிக்காகக் கூட்டப்பட்ட சிறப்பானதொரு கூட்டம் இது. எனவே, மீண்டும் சோதனை செய்துபார்ப்பதற்காகப் பின்பற்றும் நோக்கத்துடன் இது அமைந்ததெனக் கொள்ளக் காரணமில்லை. சைமனும், முதலாம் எட்வர்டைப்போன்று, மான்யப் பிரபுக்களின் தாக்குதலை எதிர்த்து அவரது அதிகாரத்தை வலிமைமிக்கதாகச் செய்யவேண்டிக் காமன்ஸ் சபையைக் கூட்டினுர். 'இதில் புதிதாகக் காணப்படுவது கவுன்டிகளின் பிரதிநிதிகளுடன் நகரங்களின் பிரதிநிதிகளையும் அழைத்ததுதான்' என ஸ்டப்ஸ் கூறுகிறுர் ('பொறுக்குச் சாசனங்கள்', 398). எனினும், இப் புதிய அம்சத்தின் முக்கியத்துவத்தைக் குறைத்துக் கணக்கிடக்கூடாது. 'கவுன்டிகளின் பிரதிநிதிகளுடன் நகரங்களின் பிரதிநிதிகளும் பங்குகொண்ட முதல் பாராளுமன்றம் 1265-ல் ஜனவரியில் கூடிய பாராளுமன்றமாகும். இப் பிரதிநிதிகள் ஒருவர் பக்கலில் மற்ருெருவர் அமையாவிட்டாலும் ஒரே சமயத்தில் கூடினர் என்பது நோக்கத்தக்கதாம். இக் கருத்துப்படி சைமன் டி மான்ட்ஃபர்ட் காமன்ஸ் சபையை உருவாக்கினுர் என்பது பெறத்தக்கது. அத்துடன் சைமன் டி மான்ட்ஃபர்டால் ஏற்படுத்தப்பட்ட முறை வருங்காலத்தில் பாராளுமன்றங்கள் கூட்டப்படுவதற்கு முக்கியமானதொரு முன்னிகழ்வுபோல் உள்ளது' எனச் சில கட்டுப்பாட்டுடன் கருத்தை பாஸ்கட் கூறுகிறுர் (பக்கம் 60). இதன் முக்கியமான சிறப்பு, இதை முன்னிகழ்ச்சியாக மனத்திற்கொண்டு முதலாம் எட்வர்ட் தனது பாராளுமன்றத்தைக் கூட்டினுர். இவ்வாறு கூட்டப்பட்டது, பல அரசியல்

சட்டஞ்சார்ந்த சோதனைகளுக்குப் பின், முப்பதாண்டுகள் கழிந்து, முன்னர் அறிந்தது போலல்லாமல், சைமன் பாராளுமன்றத்திற்குப்பின் பத்தாண்டுக் காலத்திலேயே முதலாம் எட்வர்ட் 1275-ல் கூட்டிய முதல் பாராளுமன்ற மாகும். இது நாட்டின் முழுமைப் பிரதிநிதியாய் அமைந் திருந்தது.

31. ஆணையை ரைமர், i, 449-ல் காண்க; 'பொறுக்குச் சாச னங்கள்', 403.

32. அதிலேயே பக்கம் 10 முதல்.

33. நகரங்களுக்குப் படிப்படியாக வழங்கிய சுதந்திரங்கள்பற்றி, முதலாம் ஹென்றி, இரண்டாம் ஹென்றி, முதலாம் ரிச்சர்ட், ஜான் மன்னர்களால் வழங்கப்பட்ட சாசனங் களில் காணவேண்டும். ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங் கள்', 128-134, 195-199, 258-262, 304-314 பக்கங்களில் தொகுக்கப்பட்டுள்ளன. அத்துடன் நகரங்கள், பரோக்கள் முதலியவைகளின் தெளிவற்ற பல்வேறு அரசியலமைப்பு கள் பற்றி, அவர் எழுதியுள்ள, 'அரசியலமைப்பு வரலாறு', ii, 216, 232; எஃப். டபிள்யு. மெயிட்லண்டு, 'நகராட்சி யமைப்பும் பரோக்களும்' (1898); எ. பாலர்ட், 'டூம்ஸ்டே காலத்து பரோக்கள்' (1904); சிறப்பாக டெயிட், 'இடைக் காலத்திய ஆங்கிலேய பரோ' (மான்செஸ்டர், 1936). சாசனங்கள் 'பிரிட்டிஷ் பரோ சாசனங்கள்' எனும் நூலில் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளன (1042-1216), பாலர்ட் பதிப்பு; தொடர்ந்து (1216-1307) பாலார்டும் டெயிட்டும் பதிப்பித்தது (1307-1660), வீன்பாம் பதிப்பித்தது. 'பரோக்களின் பழக்கவழக்கங்கள்' எனும் நூலில் பண்ணை வழக்கமுறைகள் தொகுக்கப்பட்டுள்ளன (பேட்ஸன் பதிப்பு, இரு வால்யூம்கள், செல்டன் கழகம்).

34. நார்மானிய வெற்றிக்குப் பின்னர் கவுன்டி மன்றங்களில் சொந்தமாக நிலம் படைத்தவர்கள் நேரில் வரவேண்டிய தென்பதுபற்றி மெயிட்லண்டு, 'அரசியலமைப்பு வரலாறு', பக். 42 எழுதியுள்ளதாவது: 'சொந்த நிலம் படைத்தவர் கள் நேரில் வருவதற்குரிமையுள்ளவர்கள் என்பதுடன் வர வேண்டியவர்களாயுமுள்ளனர். அவ்வாறான கூட்டங்களில், மன்னரின் பிரதம குத்தகைதாரர்கள் தங்களுக்குட்பட்ட சிறு குத்தகைதாரர்களைச் சட்டப்படி சமமான சூழ்நிலையில் சந்திக்க வேண்டியவராயினர்; குத்தகைதாரர் அவரது

எஜமானருக்குச் சரிசமமாக அமர்ந்திருக்க நேர்ந்தது.' மறு பரிசீலனைக்குப்பின் இக் கருத்தை அவர் கைவிட்டார். போலக்கும் மெயிட்லண்டும், 'ஆங்கிலேய சட்ட வரலாறு', i, 538 முதல். பெரும் பிரபுக்கள் மன்றக் கூட்டத்திற்கு நேரில் வரவேண்டுமென்பதில்லை. அவர்களுடைய பாது காப்பாளரைப் பதிலாக அனுப்பலாம், அல்லது வழக்கை நடத்துவது எனும் நிபந்தனையின்பேரில் குத்தகைதாரரை யும் அனுப்பலாம்.

35. ஆணையில் காணப்படும் சொற்களாவன: 'எல்லா அதி மேற்றிராணியர்கள், மேற்றிராணியார்கள், மடாலயத் தலைவர்கள், சமயத் தலைவர்கள், உடன்கூட்டத்தார், போர் வீரர்கள், மான்யப் பிரபுக்கள், சுதந்திரமடைந்த குத்தகை தாரர்கள் முதலியோரும் கவுன்டி, வீடுகள் முதலியவற்றி லிருந்து சட்டப்படியான நான்கு பிரதிநிதிகளுடன் தலை வரும், ஒவ்வொரு கோட்டையிலிருந்தும் பன்னிருவரும்.' ஷெர்லி, 'அரசு கடிதங்கள்', i, 325. இவ்வாணை பற்றிக் கருத்து வழங்கும் ஸ்டப்ஸ், கவுன்டி நீதிமன்றங்களில் அக்காலத்திய தேசிய சபையில் ஒன்றுசேர்ந்து காணப் பட்ட எல்லா மூலக்கூறுகளும் காணப்பட்டதோடு, நக ராட்சிகள் பரோக்களிலிருந்தும் பிரதிநிதிகளைக் கொண் டிருந்தன எனக் கூறுகிறார்.

36. 'அமெரிக்க வரலாற்றுப் பரிசீலனை', xix, 742 முதல் (1914)-ல் ஒயிட் எழுதியுள்ளதைக் காண்க. 1213ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் வீடுகளின் பிரதிநிதித்துவம் (அவ்வாறிருந்திருக்கு மானால்) (அதிலேயே பக். 129) பரோக்களின் பிரதிநிதித் துவத்துடன் ஏதாவதொரு முறையில் தொடர்பு கொண் டிருந்ததெனக் கருதுவதற்கு எவ்வித அடிப்படையுமில்லை; பாஸ்கட், 43.

37. மாத்யூ பாரிஸ், 'பெரிய காலவழிச் செய்திக்கோவை', iv, 533.

38. 'நாட்டின் சட்டங்கள்', i, 19; ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாச னங்கள்', 333-ம், 'அரசியலமைப்பு வரலாறு', ii, 233-ம் அதே வாசகம் கிளௌசெஸ்டர் சட்டத்தின் முகவுரையில் ஃபிரெஞ்சு மொழியில் பயன்படுத்தப்பட்டுள்ளது (1278): 'நாட்டின் பெரியவர்களுடன் சிறியோரும் அழைக்கப் படுவது.' 'பொறுக்குச் சாசனங்கள்', 449.

39. டி. வைக்ஸ் எழுதியுள்ள, 'காலவழிச் செய்திக் கோவை', 'மடாலயங்களின் ஆண்டுக் குறிப்புகள்', iv, 226, 227. ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', ii, 234.

40. 'மடாலயங்களின் ஆண்டுக் குறிப்புகள்', (வின்செஸ்டர்) ii, 113; 'பொறுக்குச் சாசனங்கள்', 421. காலவழிச் செய்திக் கோவையின் சிறு குறிப்பில் 'பாராளுமன்றம்' எனுஞ் சொல் விடுபட்டிருப்பது முக்கியமற்றதாகத் தோன்று கிறது.

41. சட்டத்தின் முன்னுரையில் விவரித்துள்ளதிலிருந்து மன்னரே நேரில் மன்றத்தில் தலைமை தாங்கினுர் எனப் பொருள் கொள்ளத்தக்கதாயுள்ளது. 1284-ல் கூடிய சபைக்கு ஒருசில பிரபுக்கள்தாம் அழைக்கப்பட்டிருந் தனர் என்பதை ஆஸ்னி ஆண்டுக் குறிப்பைத் தொகுத்தவர் கூறுகிறுர். 'பொதுப் பாராளுமன்றமல்லாத தனிமை யான பாராளுமன்றம்'; 'பொறுக்குச் சாசனங்கள்', 425.

42. நாட்டின் சமுதாயப் பிரிவுகளின் மாற்றங்களின் நோக்கு பற்றி, டபிள்யூ. ஏ. மாரிஸ், 'பாராளுமன்றத்தில் நாட்டின் பிரபுக்களும் சமுதாயமும், 1264—1327' என்பதையும், 'இடைக்காலத்திய சமுதாயம்' (1943) எனும் நூலில், i, 58–94 ['யார்க் சட்டமும் நாட்டின் சமுதாயமும்', 'அமெரிக்க வரலாற்று மீள்பார்வை' (1941) xlvii, 1–17-ல்] ஜே. ஆர். ஸ்ட்ரேயரின் திறனாய்வையும் காண்க.

43. முதலாம் வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம், நாட்டின் சட்டங்கள், i, 26; பால்கிரேவ், 'பாராளுமன்ற ஆணைகள்', i, 2. 'பொறுக்குச் சாசனங்கள்', 442–443.

44. ஆணைகள் 'ஆங்கிலேய வரலாற்று மீள்பார்வை'யில் ஜென் கின்ஸனுல் அச்சிடப்பட்டுள்ளன, xxv, 231 முதல் (1910); 'பொறுக்குச் சாசனங்கள்', 441–2; 'ஆங்கிலேய வரலாற்று மீள்பார்வை, lviii, 462; பாஸ்கட், 75–80ஐயும் காண்க. வியாபாரத்திலீடுபட்ட நகரங்களின் பிரதிநிதிகள் பாராளு மன்றத்தில் வேறொரு சமயத்தில், 1283-ல்தான் காணப் பட்டனர். நைட்வீரர்கள் சட்ட விஷயங்களை நன்கறிந் தவர்களாயிருத்தல் வேண்டும் எனும் கோரிக்கை விசித்திர மானது; சட்டங்கள் இயற்றுவதில் மன்னர் அவர்களது உதவியை நாடினுர் எனும் கருத்தைத் தோற்றுவிக்கிறது.

45. மேலே, பக்கம் 136, குறிப்பு 38. பாஸ்கட், பக்கம் 82ஐயும் காண்க.

46. பால்கிரேவ், 'பாராளுமன்ற ஆணைகள்', i, 10. 'பொறுக்குச் சாசனங்கள்', 458. அதேபோன்று ஒவ்வொரு மாகாணத்தி லிருந்தும் மேற்றிராணியார்களும் குருமார்களும் வர வழைக்கப்பட்டனர். மான்யப் பிரபுக்களுக்கு ஆணைகள் இல்லை ; அதற்கு ஏற்கெனவே மன்னரின் படையில் சேர்ந் திருந்தது காரணமாம்.

47. ஸ்டப்ஸ், பொறுக்குச் சாசனங்கள், 452.

48. 'பாராளுமன்ற ஆணைகள்', i, 384, 387.

49. பா. ஆ., i, 10. 'பொறுக்குச் சாசனங்கள்', 459.

50. அதிலேயே. யார்க்கு நகர அவை, இணக்கத்தின்பேரில் ஏற்பட்டதாகத் தோன்றுகிறது. ஆனால், வாக்களிக்கப் பட்ட உதவி மான்யம் மூன்று ஆண்டுகளுக்குப் பின்னரும் செலுத்தப்படாமலிருந்தது. 'அரசியலமைப்பு வரலாறு,' ii, 120.

51. 'பாராளுமன்ற ஆணைகள்', i, 16 ; 'பொறுக்குச் சாசனங் கள்,' 460–1.

52. பெருங்குற்ற விசாரணையே அவை கூட்டப்பட்டதன் முக்கிய நோக்கம் என்பதே அழைப்பு விடுக்காததற்குப் போதுமான காரணமாயிருந்தது.

53. 11 முதலாம் எட்வர்டின் சட்டத்தை உறுதிப்படுத்திய தோடு, அதன் அதிகாரவெல்லையையும் 1285-ல் ஏற்பட்ட சட்டம் விரிவுபடுத்தியது. 13 முதலாம் எட்வர்ட், வியாபாரி களின் சட்டம். இவ்விரு சட்டங்களும் டி. எஃப். பிளக் நட்டால் நன்காராயப்பட்டுள்ளன ; 'முதலாம் எட்வர்ட் காலத்தில் சட்டமியற்றுதல்', அதிகாரம் VI.

54. இப் பாராளுமன்றத்தில், 1289-ல், குற்ற நடத்தைக்காக ஏற்பட்ட பெரிய வெளியேற்றம் செய்ததில் விலக்கப்பட்ட நீதிபதிகளுக்குப் பதிலாகப் புதிய நீதிபதிகள் நியமிக்கப் பட்டனர். டௌட், 'முதலாம் எட்வர்டு காலத்தில் அரசு நீதிவிசாரணை'.

55. 'ரோடுலி பார்லிமென்டோரம்', i, 25 ; 'பொறுக்குச் சாசனங்கள்', 472. இக்காலத்தியதும் தெளிவற்றதுமான காலவரன்முறைபற்றி, ரிச்சர்ட்ஸனும் ஸேய்ல்ஸூம், 'வரலாற்று ஆராய்ச்சிக் கழகத்தின் வெளியீட்'டைப் பார்க்க, v, 143 முதல்.

56. முதலாம் வெஸ்ட்மின்ஸ்டர் சட்டம், 1275-ல், இடை மானியப் பிரபுக்களின்கீழுள்ள குத்தகைதாரர்கள் தங்களுடைய மூத்த மகனை நைட்வீரராகச் செய்யும்பொழுதோ அல்லது மூத்த மகளுக்குத் திருமணம் செய்யும்பொழுதோ செலுத்தப்பட வேண்டிய உதவித்தொகையை நிர்ணயஞ் செய்தது. நைட்வீரர்கள் கட்டணம் c. 36, 20. 1352-க்கு முன் 25 முதலாம் எட்வர்ட் சட்டம் 5, c. 11. அதே தொகை பிரதான குத்தகைக்காரர்களுக்கு விதிக்கப்படவில்லை.

57. ஜே. எச். ராம்ஸே, 'அரசியல் சட்டத்தின் முதல் தோற்றம்', 367.

58. 'பிரபுவின் கௌரவம் பற்றிய அறிக்கை,' அநுபந்தம் i, 54; பால்கிரேவ், 'பாராளுமன்ற ஆணைகள்,' i, 24; 'பொறுக்குச் சாசனங்கள்', 472-3.

59. அதிலேயே, பக்கங்கள் 38, 89; டி. எஃப். டி. பிளக்நட், 'முதலாம் எட்வர்டும் சட்டமியற்றுதலும்,' 102-8.

60. 'ரோடுலி பார்லிமென்டோரம்,' i, 266.

61. 'டன்ஸ்டபிளின் ஆண்டு வரலாறுகள்,' பக்கம் 362.

62. 'பிரபுவின் கௌரவம் பற்றிய அறிக்கை,' அநுபந்தம் i, 60; 'பொறுக்குச் சாசனங்கள்', 476-7. ஆணைகள், கடிதப் போக்குவரத்து அல்லது பேச்சுவார்த்தை, கலந்தாலோசித்தல் எனும் சொற்களே பாராளுமன்றம் எனும் சொல்லுக்குப் பதிலாகக் கொண்டுள்ளன; மூன்று சொற்களையும் பயன்படுத்தியதென்பது மூன்றும் எட்வர்டின் ஆட்சியின் தொடக்கத்திற்கு முன்னதாகக் காணப்படவில்லை. பிளக்நட், 'ஆங்கில ஆட்சிப் பணி (1327–1336)' எனும் நூலில், 'பாராளுமன்றம்' என்பதைக் காண்க (ஜே. பி. வில்லர்டும் டபிள்யூ. ஏ. மோரிஸனும் பதிப்பித்தது), 84 முதல்.

63. 'வரலாற்று மலர்கள்,' iii, 275; ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு,' ii, 132.

64. ரைமர், i, 822. ஆணைகள் அதைப் 'பாராளுமன்றம்' என அழைக்கின்றன; எல்லாப் பிரபுக்களும் குருமார்களும், பொதுமக்கள் நீங்கலாக அழைக்கப்பட்டனர்.

65. உர்ஸ்டரைச் சேர்ந்த ஃபிளாரன்ஸ், ii, 276.

66. ரைமர், i, 825.

67. Cod. V, 59, 5 § 3. திருச்சபைச் சட்டங்களிலும் காணப்படுகிறது, c. 7, X 1.23 ('நேர்மை விதிகள்', VI, 29ஐக் காண்க). இங்கிலாந்தில் சாதாரணமாகத் தெரிந்திருந்ததாகத் தோன்றுகிறது. 'ஆங்கிலேயக் கருப்புடை தரித்த சந்நியாசிகள்' எனும் நூலில் சில அதிகாரங்களைக் காண்க; டபிள்யூ. ஏ. பாண்டின் பதிப்பித்தது, i, 19. 'எல்லோருக்கும் சம்பந்தமுள்ளதை எல்லோராலோ அல்லது அவர்களுள் அறிஞர்களடங்கிய பகுதியாலோ முடிவு செய்ய வேண்டும்' (1225); மாத்யூ பாரிஸ் (1251), 'காலவழிச் செய்திக் கோவை' பெரியது', v, 225; 'எல்லோருக்கும் சம்பந்தமுள்ளவையாயும் பாதிக்கிறவையாயுமுள்ளவை எல்லோராலும் சீர்தூக்கிப்பார்க்கப்பட வேண்டும்'; 'இரண்டாம் எட்வர்டின் வாழ்க்கை', 'முதலாம், இரண்டாம் எட்வர்டுகளின் காலவழிச் செய்திக் கோவை'யில் (ஸ்டப்ஸ் பதிப்பித்தது, ரோல்ஸ் வரிசை), ii, 170; ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு,' ii, 133, குறிப்பு 4; பாஸ்கட் எழுதிய நூலில் லாப்ஸ்லியின் குறிப்பு, 243-4; வினோகிரடாஃப், 'கட்டுரைத் திரட்டு', ii. 245-6; கெயின்ஸ் போஸ்டு, 'பிராக்டனில் ரோமானியத் திருச்சபைக் கோட்பாடு'; 'எல்லோரையும் சார்ந்தது', iv, 197; இச்சொற்றொடர் லௌகிகர்களான பிரபுக்கள் அல்லது பொது மக்கள் முதலியவர்களுக்கு அனுப்பிய ஆணைகளில் காணப்படவில்லை. ஏர்னஸ்ட் எச். கண்டோரோவிக்ஸ் எழுதியுள்ள, 'மன்னரின் இரு மன்றங்கள்' (பக்கம் 556ஐக் காண்க). இச்சொற்றொடர் ஆங்கிலேய சமயஞ்சார்ந்த அரசியல் விவகாரங்களில் நெடுநாள்வரை தொடர்பு கொண்டிருந்தது; எம். வி. கிளார்க், 'பிரதிநிதித்துவமும் ஒப்புதலும்,' 264 முதல். மேற்றிராணியார்களுக்கும் அதிமேற்றிராணியார்களுக்கும் விடுக்கப்பட்ட ஆணைகளின் முகவுரை முழுவதும் குறிப்பிடத்தக்கது; லௌகிகப் பிரபுக்கள், ஷெரீஃபுகள், தேர்ந்தெடுக்கப்பட்ட நைட் வீரர்கள், குடிமகார், கிராமப் பகுதியைச் சேர்ந்தவர்களுக்கு விடுக்கப்பட்ட ஆணைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்க. அவைகளில் இச்சொற்றொடர் காணப்படவில்லை. 'பிரபுக்கள் கௌரவம்பற்றிய அறிக்கை', அநுபந்தம் i, 66, 67; 'பொறுக்குச் சாசனங்கள்', 480-482. சர்டீஸ் கழகம், clv, 212.

68. Dig. I, 4, 1; Inst. I, 2, 6. கிளன்வில், முகவுரை, பிராக்டன், f. 1—கோட்பாட்டின் உட்கருத்துகளைத் தவிர்க்க முயலு

இன்றன. (ஸி. எச். மக்இல்வயின், 'மேற்குப் பகுதியில் அரசியல் எண்ணங்கள்', 195, செல்டன், 'அவ்வப்பொழுது ஃபிளேடனுக்கு எழுதிய கட்டுரைகள்' (டேவிட் ஆக் பதிப்பித்தது).

69. இப் பாராளுமன்றத்திற்கு எட்டு ஏர்ல்கள், நாற்பத்தொரு மான்யப் பிரபுக்கள், இரண்டு அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்கள், 67 மடாலயத் தலைவர்கள், டெம்பிள், செம்பிரிங்ஹாம் இவைகளின் தலைவர்கள், எருசலேம் செயின்ட் ஜான் மருத்துவ நிலையத்தின் தலைமை குரு, வ்வொரு கதீட்ரலின் (தேவாலயம்) ஒரு குரவர் சங்கத் தலைவரும் ஒரு பிராக்டரும், ஆர்ச்டீக்கன், ஒவ்வொரு சமயப் பிரசாரப் பிரிவைச் சேர்ந்த பகுதியிலிருந்தும் இரு பிராக்டர்கள், ஒவ்வொரு கவுன்டியிலிருந்தும் இரு நைட் வீரர்கள், ஒவ்வொரு ஷயரிலிருக்கும் நகரம் அல்லது கிராமம் முதலியவற்றிலிருந்து இரு நகரவாசிகள் அல்லது கிராமவாசிகள் வரவழைக்கப்பட்டனர்.

70. சமயப் பேரவைக்கு விடுக்கப்பட்ட அழைப்பாணைகளைக் காண்க, 1225–1277 ; ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்,' 444–447 ; முன்னுரையாக எழுதப்பட்டுள்ள குறிப்பு, பக்கம் 41.

71. சமயப் பேரவைகள்பற்றி, எம். வி. கிளார்க் எழுதியுள்ள 'பிரதிநிதித்துவமும் ஒப்புதலும்' (1936) என்பதையும் ; ஈ. பார்க்கர், 'டொமினிகன் பிரிவும் சமயப் பேரவை' (1913) ; டி. பி. வெள்கி, 'குருமார்களின் அவை' (1937) ; எஃப். மக்கோவர், 'இங்கிலாந்து திருச்சபையின் அரசியலமைப்பு வரலாறு' (1895)ஐயும் காண்க.

72. 25, ஹென்றி 8, c. 19-ன்படி, மன்னருடைய அனுமதியின்றிச் சட்ட வரையறை அல்லது கோட்பாடுகளை இயற்றுவதைச் சமயப் பேரவைகள் செய்யத் தடை விதிக்கப்பட்டது.

73. சமயப் பேரவைக்கு வெளியில் குருமார்கள்மீது வரிவிதிப்பது, 'அதிகார வலிமையுள்ள சட்டத்தின் துணையின்றிச் சமய அமைப்புச் சட்டமுறையில் செய்யப்பட்ட மிகப் பெரிய மாறுதலாகும்' என மேற்றிராணியார் கிப்ஸன் கூறுகிறார். இம்முறை, சான்ஸலர் பிரபுவான கிளாரண்டனுக்கும் அதிமேற்றிராணியாரான ஷெல்டன் என்பாருக்குமிடையே வாய்மொழியாகச் செய்துகொள்ளப்பட்ட

உடன்பாடாகும். (ஹாலம், iii, 243 குறிப்பு; தனது கூற்றுக்கு ஆதாரமாக பர்னட்டின் 'வரலாற்று'க்கு, iv, 508, சபாநாயகர் ஆன்ஸ்லோவால் செய்யப்பட்ட குறிப்பை ஆதாரமாகக் காட்டுகிருர்.)

74. 'திரிவேதி ஆண்டுக் குறிப்புகள்,' பக்கம் 353, s. a. 1297; 'பொறுக்குச் சாசனங்கள்,' 431.

75. ஹெமிங்பர்கைச் சேர்ந்த வால்டர், ii, 120, s. a. 1257 ('கைஸ்பரோவைச் சேர்ந்த வால்டரின் காலவழிச் செய்திக்கோவை' எனும் பெயரில் ராத்வெல் என்பாரால் மறுபதிப்புச் செய்யப்பட்டுள்ளது, பக்கம் 289); 'பொறுக்குச் சாசனங்கள்,' 431.

76. டபிள்யூ. ரிஷாங்கர், 'காலவழிச் செய்திக் கோவை,' 175, s. a. 1297; 'பொறுக்குச் சாசனங்கள்,' 434.

77. லண்டனைச் சேர்ந்த செயின்ட் ஹியூக் 1198லும் (மேலே பக்கம் 129), ஜான் மன்னரின் மான்யப் பிரபுக்களும் (மேலே பக்கம் 148) மன்னருக்காக வெளிநாடு சென்று போர்ப்பணி புரிய மறுத்தல் பற்றியது.

78. சச்சரவு வால்டர் டி. ஹெமிங்பர்க்கால் படம் பிடித்துக் காட்டப்பட்டுள்ளது, ii, 121; 'பொறுக்குச் சாசனங்கள்,' 431–2.

79. பால்கிரேவ், 'பாராளுமன்ற ஆணைகள்,' i, 281. கடல் கடந்து பிரயாணஞ் செய்யவேண்டியதைக் குறிப்பிடாமல் நிலச்சுவான்தாரர்களை அழைக்கும்படி ஷெரீஃபுகளுக்குப் பூர்வாங்கமான ஓர் ஆணை மே மாதம் 5ஆம் நாள் விடுக்கப்பட்டது.

80. ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு,' ii, 140-1; எச். எம். சியூ, 'முதலாம் எட்வர்ட் காலத்தில் கேடய வரி', 'ஆங்கிலேய வரலாற்று மறுபரிசிலனை,' xxxvii, 321.

81. 'வரலாற்று மலர்கள்,' iii, 294.

82. அதே ஆண்டில் பார்த்தலேமியோ டி காட்டனின், 'ஆங்கிலேயரின் வரலாறு', பக்கம் 327-லிருந்து நாம் அறிவதாவது: மன்னருக்குப் பணிபுரியக் கடமைப்பட்டவர்களும், இருபது அளவிடப்பட்ட துண்டு நிலங்களையுடையவரும் ஃபிளாண்டர்ஸுக்கு மன்னருடன் கடல்கடந்து செல்லவேண்டியதில்லையென மன்னர் அனுமதித்தார்.

83. ஹாலம், 'இடைக்காலங்கள்,' iii, 3 பத்திரங்களைத் தொகுத்து ஸி. பேமான்ட் தனது 'ஆங்கிலேயரின் சுதந்திரம்பற்றிய சாசனங்கள்' எனும் நூலில் ஆய்ந்துள்ளார் (1892). பாஸ்கட் எழுதியுள்ள 'காமன்ஸ் சபையின் தோற்றம்,' ஹியூபர்ட் ஹால் எழுதியுள்ள 'சாசனங்களை உறுதி செய்யுமுன் நடந்த பேச்சுவார்த்தைகள்', 'அரசு வரலாற்றுக் கழக நடவடிக்கைகள்', புதிய தொகுப்பு, iii, 281 என்பவற்றுடன் இதை ஒப்பிட்டுப் பார்க்கவும். பின்னர் ஜே. ஜி. எட்வர்ட்ஸ் எழுதியுள்ள 'சாசனங்கள் உறுதிசெய்யப்படுதலும் மான்யப் பிரபுக்களின் குறைகளும்' (1297), 'ஆங்கிலேய வரலாற்று மீள்பார்வை', lviii, 147, 273; ஹாரி ராத்வெல், 'சாசனங்கள் உறுதி செய்யப்படுதல்,' 1297; அதிலேயே, lx, 16, 177, 300 என்பவற்றுடன் ஹாரி ராத்வெல்லின், 'முதலாம் எட்வர்டும் சாசனப் போரும்', 1297–1305, போவிக் என்பாருக்கு வழங்கப்பட்ட 'ஆராய்ச்சிக் கட்டுரைகள்', 319–332ஐயும் காண்க.

84. 'வரலாற்று மலர்கள்,' iii, 295.

85. அதிலேயே.

86. 'ரோடுலி பார்லிமென்டோரம்,' i, 239; பார்த்தலோமியோ காட்டன், 'ஆங்கிலேயர் வரலாறு,' 338.

87. பார்த்தலோமியோ காட்டன், 'ஆங்கிலேயர் வரலாறு,' 327, 335.

88. பால்கிரேவ், 'பாராளுமன்ற ஆணைகள்,' i, 396. சமயப் பயன் கருதி உரிமையாக்கப்பட்ட ஷரத்துகள் முழுமைக்கும், ஐந்து மார்க்குகள் மதிப்புக்குட்பட்ட கோயில் மானியங்களைக்கொண்ட சமயப் பணியாளர்களுக்கும் விலக்களிக்கப்பட்டது. திருச்சபையுடன் இணைந்திராத சமய குருமார்களுக்கு லௌகீகர்களைப் போலவே லௌகீகர்களுக்கு விதிக்கப்படும் கட்டணம் விதிக்கப்படவேண்டும். எனினும், அவர்களுடைய சமயஞ் சார்ந்தனவும் சார்பு இல்லாதனவுமான சொத்துகளில் ஐந்தில் ஒரு பாகத்தைச் செலுத்தினால் இக் கட்டணம் வசூலிக்கப்படுவதிலிருந்து முழுமையாக விடுதலை பெறலாம்.

89. ரைமர், i, 872; ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு,' ii, 143.

90. ரிஷங்கர், 'காலவழிச் செய்தி' 175–6 (s.a. 1297); 'பொறுக்குச் சாசனங்கள்', 434-5. முழுமையாய் அறிய ஜே. ஜி. எட்வர்ட்ஸின், '1297-ல் சாசனங்கள் உறுதியும் மான்யப் பிரபுக்களின் குறைகளும்', 'ஆங்கிலேய வரலாற்று மீள் பார்வை', lviii, 147, 273 (1943)ஐக் காண்க.

91. அதிலேயே.

92. 25 எட்வர்ட் 1, சட்டம் 1; 'பொறுக்குச் சாசனங்கள்', 490–3.

93. 1298-ல் ஹெரிஃபோர்டு, நார்ஃபக் ஏர்ல்கள் மன்னரின் நம்பிக்கை அல்லது இளவரசனின் செயல்களைக் குறித்து கென்ட் எனுமிடத்தில் நன்னடத்தை ஜாமீனாகச் செய்த உறுதியில் ஐயங் கொண்டு, மறுபடியும் முறைப்படி உறுதி செய்துகொடுக்குமாறு கோரினர். இதை மன்னர் விருப்பின்றி 1299, மார்ச்சு 8ஆம் நாள் அளித்தார். எனினும், அது காடுகள் சம்பந்தமாக மன்னருக்குள்ள உரிமைகளைப் பாதுகாக்கும் காப்பு வாசகத்தைக் கொண்டிருந்தது ('மரியாதைக்குரிய மன்னருடைய உரிமை அதற்கான காரணங்கள் தவிர'). எதிர்பாராத வகையில் ஒதுக்கப் பட்டதைக் கண்டு வெளிப்படையாக அறிவிக்கப்பட்ட மக்களின் மனக்குறை, எட்வர்ட் மன்னரை வெறுக்கத் தக்க 'நான் தவிர்க்கும்' எனும் சொல்லைத் தள்ளிவிட்டுச் சிறிது காலத்திற்குள்ளாகவே மாற்றுறுதி செய்யுமாறு தூண்டியது. 1300, மார்ச்சு 6ஆம் நாளிலும் 1301, பிப்ரவரி 14ஆம் நாளிலும் பதினைந்தில் ஒரு பாகம் மானியமாக அளித்ததற்காகப் பத்திரங்களில் எழுதப்பட்ட ஒழுங்கு விதிகளில், எட்வர்டால் சாசனங்கள் மீண்டும் இருமுறை உறுதி செய்யப்பட்டன. அப்படியிருந்தும் சாசனங்களின் உறுதிப்பாட்டிலிருந்து விடுதலை பெறுவதற்காகப் போப்பாண்டவர் ஐந்தாம் கிளிமென்டிடம் இரகசியமாக வேண்டுகோள் விடுத்து விடுதலையும் பெற்றார். எனினும், காடுகள் சம்பந்தமானவைகள் தவிர மற்ற உறுதிகளை மன்னர் புறக்கணிக்கவில்லை எனக் கூறுவது அவருக்கு மதிப்பை உண்டுபண்ணுவதாகும்.

94. பால்கிரேவ், 'பாராளுமன்ற ஆணைகள்', i, 63.

95. மன்னரின் ஆணையை 'ரோடுலி பார்லிமென்டோரம்', i, 266-ல் காண்க. நாட்டில் இறக்குமதி செய்யப்பட்ட மது வகைமீது 'பழைய வரி' யொன்று விதிக்கப்பட்டது—

ஒவ்வொரு மரக்கலத்திலிருந்தும் இரு டன்கள் நிறையுள்ள மது வரியாகப் பெறப்பட்டது. 'கம்பளி வரி' எனுஞ் சொல் 1215 முதலிலிருந்தே பயன்படுத்தப்பட்டது; மகா சாசனம், விதி 41; அதிலேயே பக்கம் 98; மேலும் பக்கம் 159–60ஐயும் காண்க.

96. பாஸ்கட், பக்கம் 109ஐயும், அநுபந்தம் iii, பக்கம் 237–8-ல் லாப்ஸ்லியின் குறிப்பையும் காண்க. பேமன்ட், 'ஆங்கிலேயரது சுதந்திரம் பற்றிய சாசனங்கள்', பக்கம் xliiiஐயும் 87ஐயும் காண்க. டல்லேஜ் வரி அனுமதி மறுக்கும் சட்டம், உரிமை விண்ணப்பத்தின் முகவுரையில் ஒரு சட்டமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அதுமுதற்கொண்டு அது ஒரு சட்டம் எனும் தன்மையைப் பெற்றது. 1637-ல் நீதிபதிகளால் அது ஒரு சட்டம் என முடிவு செய்யப்பட்டது. ஸ்டப்ஸ், 'பொறுக்குச் சாசனங்கள்', 493ஐக் காண்க. மேலே குறிப்பு 90-ல் குறிப்பிடப்பட்ட இரு விதிகளுடன் 'ஆங்கிலேய வரலாற்று மீள்பார்வை', lx, 300–315-ல் டல்லேஜ் வரி அனுமதி மறுக்கும் சட்டத்தின் புதிய வாசகத்தை எச். ராத்வெல் அச்சிட்டிருப்பதையும் சேர்த்துக்கொள்ளவேண்டும்.

# 7. பாராளுமன்றத்தின் வளர்ச்சி

பாராளுமன்றத்தின் வரலாற்றில், தொடக்க நிலையில் மிகச் சிறப்பு வாய்ந்த செய்திகளின் சுருக்கத்தை முந்திய அதிகாரத்தில் கண்டோம். அக்காலத்தியவர்கள் கருதியவாறு, பாராளுமன்றத்தின் தன்மை, அவைகளைக் கூட்டுவதில் மன்னருடைய நோக்கங்கள் முதலியவைபற்றித் தற்பொழுது ஊகித்தறிய வேண்டியதாயுள்ளது. எனவே, அதுபற்றித் திகைக்கவைக்கக் கூடிய அளவிற்கு ஊகங்கள் ஏற்பட்டிருப்பது ஆச்சரியப்படத் தக்கதன்று.

## பிரபுக்களும் பொதுமக்களும்

முதலாவதாக, முதலாம் எட்வர்ட் மன்னர், பாராளுமன்றம் வருங்காலத்தில் மிகச் சிறப்புடையதாக ஆகும் என நினைத்து, அக் கருத்தைக்கொண்டு பாராளுமன்றத்தை ஆய்ந்து பார்த்துத் தோற்றுவித்தார் என நாம் கருத்துக் கொள்ளுவதில் எச்சரிக்கையா யிருக்கவேண்டும். அதேபோல், அவர் தன்னுடைய அதிகாரத்தை மக்களில் எந்தப் பிரிவினருடனும் கூட்டத்துடனும் பகிர்ந்துகொள்ள அவர் எண்ணியதாகக் கொள்ளுவதும் பொருத்தமற்றதாகும்.[1] மேலும், விவரிக்கப்பட்டுள்ள கூட்டங்களின் பலதரப்பட்ட வகைகளைக் காண்பதே அவைகள் ஒரே ஒரு கருத்தால் தூண்டப்பட்டு ஏற்படுத்தப்பட்டனவென்று கொள்ளுவதற்குப் போதுமானதாயில்லை. சென்ற அதிகாரத்தில் கூறப்பட்ட நாற்பது ஆண்டுகளுக்கும் மேலான கடும் அரசியல் நடவடிக்கைகள், ஒன்றன்பின் ஒன்றாக நெருக்கடி ஏற்பட்டபொழுது அந்தந்தக் காலத்திற்கு ஏற்றவாறு ஒன்றைவிட்டு ஒன்றைப் பற்றிக் கொள்ளுவதில் அரசியல்வாதிகள் முனைந்திருந்தனர் என்பதை எடுத்துக் காட்டுகின்றன. எட்வர்டு பாராளுமன்றங்களைக் கூட்டினார் என்றால், அவ்வாறு செய்வதில் உடனடியாக நற்பயன் ஏற்படுவது காரணமாயிருந்தது என்பதைத் தவிர,

அவர் அரசியல் உயர்நோக்கங்களில் புதுமையான கருத்தை எடுத்துக்காட்டும் ஒரு நிறுவனத்தைத் தோற்றுவிக்கும் எண்ணத்தைக் கொண்டவர் என்பதன்று.

**பாராளுமன்றத்தின் நோக்கங்கள்:** இரண்டாவதாக, ஆலோசனை செய்வது என்பது செயல்முறையில் மன்னர்களுக்கும், மற்றும் மனித இனத்திற்கும் இன்றியமையாததொன்றாகும். எந்த விஷயம் பற்றியும் மன்னர்கள் ஆலோசனை பெறலாம். எனவே, வெளிநாட்டு, உள்நாட்டு அரசியல், பொருளாதாரம், ஆட்சிமுறை, சட்டத் திருத்தம், நீதி வழங்குதல் முதலியவை குறித்து மதத்தலைவர்களும் செல்வந்தர்களும் கூடிய சபைகளைக் கலந்தாலோசிக்கலாம். வேறு ஏதாவது காரணத்தை முன்னிட்டு மேற்கொண்டு செய்தியோ அல்லது நெருக்கமான தொடர்போ தல நிறுவனங்களுடன் தேவையெனத் தோன்றும்பொழுது, அவைகளின் பிரதிநிதிகளை அழைத்துக் கலந்தாலோசிக்கலாம். மற்றொரு புறத்தில், மேற்கண்ட எச்சரிக்கைகளை விடுத்து அரசாங்கம் தானாகவே செயல்படுவதற்குத் தேவையான உறுதிகொள்ளுமானால், அவ்வாறே செய்யலாம். இரண்டு முறைகளும் அரசியலமைப்புச் சட்டத்தின் கொள்கையுடன் தொடர்புடையன அல்ல. அங்கிலேயில், எந்த ஒரு காரணத்தையும் பாராளுமன்றம் கூடுவதற்கு இன்றியமையாததாகக் கருதமுடியாது. பாராளுமன்றம் நீதிமன்றமாயிருந்தது என்பது உண்மைதான்; அதனுடைய நடவடிக்கைகளில், நியாயந் தீர்ப்பதே சிறப்பானதா யிருந்தது.[2] அதேபோல் பிரதிநிதிகளடங்கிய சபை, ஷெரீஃபுகள், தல அதிகாரிகள் இவர்களுடைய அதிகாரத் துஷ்பிரயோகத்தை உன்னிப்பாகக் கவனித்துக்கொள்ளுவதற்கு அரசாங்கத்திற்குத் துணைபுரிந்தது; வரி விதிப்பதை அனுமதித்து வரிவசூல் செய்வதை எளிதாக்கியது.[3] அக்காலத்திலிருந்தவர்கள், அடிக்கடி பாராளுமன்றத்தை, எல்லாச் சமூகப் பிரிவுகள் அல்லது அரசியலில் முக்கியம் வாய்ந்த 'எஸ்டேட்டுகளைக்' கொண்டிருந்ததாகக் கருதினர்.[4] மேற்கூறிய காரணங்களில் எதுவும் தனித்த முறையில் பாராளுமன்றம் தோன்றுவதற்குக் காரணமாக ஆகாது; ஆனால், எல்லாக் காரணங்களையும் ஒன்றுசேர்த்தால் அவைகள் தொடர்ச்சியாகவும், ஒன்றன்பின் ஒன்றாக நிகழ்ந்த நிகழ்ச்சிகளாகவும், காலத்திற்குப் பொருத்தமானவையாகவும் அமைந்தன. இவைகள் அடிக்கடி நிகழவே நாளடைவில் நிலையான ஒரு நிறுவனம் உருவாயிற்று.

**பாராளுமன்றத்தின் அமைப்பு:** பாராளுமன்றத்தின் அமைப்பு, அதன் பல உறுப்புகளின் தோற்றத்தைப் பிரதி

பலிப்பதாகக் காணப்படுவது இயற்கையாகும். மன்னரும் அவருடைய ஆலோசனை மன்றமும் அதன் மையமாய் அமைந்தது. இவர்கள், கடினமான பிரச்சினைகளைப் பற்றி ஒன்ருகச் சேர்ந்து 'ஆலோசிப்பதற்காக' அழைக்கப்பட்ட லௌகிக, சமயஞ் சார்ந்த பிரபுக்களால் சூழப்பட்டிருந்தனர். இதைப்போன்று அமைந்த 'பாராளுமன்றத்திற்கு', தல மக்கள், இனங்கள், பிரதிநிதிகளை அனுப்புமாறு சிற்சில சமயங்களில் உத்தரவிடப்பட்டனர். அடிக்கடி பொதுமக்கள், 'ஆலோசனைக்கு'ப் பதிலாக 'முடிவு செய்யப்பட்டதற்குச் சம்மதம் தெரிவிக்குமாறு' அல்லது 'சொல்லப்படுவதைச் செய்யுமாறு' கேட்டுக்கொள்ளப்பட்டனர். அவர்களைத் தேர்ந்தெடுக்கிறவர்களுடைய முழு அதிகாரத்தைப் பெற்றுவரும்படியாக அவர்களுக்கு அடிக்கடி ஆணையிடப்பட்டது. இவ்வாறு செய்வதால், அவர்கள் அளிக்கும் சம்மதம் தேர்ந்தெடுக்கிறவர்களுடைய சம்மதத்தையும் உறுதியாகக் கட்டுப்படுத்தும் எனக் கருதப்பட்டது.[5] நைட்டுகளும் நகரமக்களும் பாராளுமன்றத்தின் உறுப்பினராகக் கருதப்பெறவில்லை.[6] அவர்கள், ஆலோசனை மன்றத்திற்கு அனுப்பப்பட்ட பிரதிநிதிகளாவர்; பேச அழைத்தால் பேசுவர்; மன்னரும் செல்வந்தர்களும் சேர்ந்து முடிவு செய்தவைகளுக்குச் சம்மதம் அளித்தபொழுது திரும்பிச் செல்ல அனுமதிக்கப்பட்டனர். பதிலாக வந்த இவர்கள், தல சமூகத்தின் பல்வேறு பிரிவுகளின் சார்பில் வந்தார்கள். "பொதுமக்கள் சமூகத்தின் பிரிவுகளைச் சேர்ந்த இவர்கள் ஒன்ருகக் கருதப்பட்டபொழுது 'பொதுமக்கள்' என அழைக்கப்படலாயினர்."[7]

**காமன்ஸ் எனப்படும் பொதுமக்கள்:** மன்னர், அவரது ஆலோசனைக் குழு, செல்வந்தர்கள், மதத்தலைவர்கள் முதலிய எல்லோரும் முழுமையாகவும் பத்தியுடனும் கூடுவது வழக்கமாயிருந்தது. (எனினும், சிறு குழுக்களில் கீழ்த்தரமான விவாதங்கள் நடைபெற்றன.) அம்மாதிரிச் சமயங்களில் பொதுமக்களும் கூட்டத்திற்கு வந்திருந்தால், மன்றத்தின் கீழ்க் கோடியில் நின்றுகொண்டு அல்லது மண்டியிட்டுக் காணப்படுவார்கள்.[8] அவர்களுடைய சொந்தப் பேச்சுகள் பல வழிகளில் நடந்தன. ஆனல், பதினன்காம் நூற்ருண்டின் இடையிலிருந்து ஷயரைச் சேர்ந்த நைட்டுகளும், நகரவாசிகளும், கிராமமக்களும் ஒன்ருகக் கூடுவது வழக்கமாயிற்று.[9] நைட்டுகள், சமூக அமைப்பில், பிரபுக்களினத்தைச் சேர்ந்தவர்கள் என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும். ஆனல், கீழ்த்தரப் பிரிவைச் சேர்ந்தவர்களான சுயஆட்சி நகரத்தின் பிரதி

நிதிகள், சமூக அமைப்பில் ஒரு தனிப்பட்ட இனமாக அமைந்தனர். அவர்களுடைய கருத்துகள், உதவித்தொகைகள் அளிக்கப்பட்டதிலிருந்து தெரியவரும். பொதுமக்கள் சபை தோன்றியபின் பல்லாண்டுகள்வரை, பல்வேறு விகிதங்களில் (1) ஏர்ல்கள், பிரபுக்கள், நைட்டுகளும், (2) குருமார்களும், (3) நகரமக்களும், சுயஆட்சி பெற்ற நகரவாசிகளும், அவ்வுதவித் தொகைகளுக்கு வாக்களிப்பதன் வாயிலாகச் சம்மதத்தை அளித்தனர்.[10]

நைட்டுகள், தனியாக வரிவசூலிப்பது பற்றிச் சம்மதம் தெரிவித்தபோதிலும், விண்ணப்பங்கள் செய்துகொள்ளுவதில் நகரவாசிகளுடன் சில சமயங்களில் சேர்ந்துகொண்டனர் என நம்புவதற்குக் காரணம் உண்டு. இதன் வளர்ச்சி மிகவும் மெதுவாயிருந்தது. தொடக்கத்தில் பாராளுமன்றங்களில் சமர்ப்பிக்கப்பட்ட விண்ணப்பங்களில் பெரும்பான்மை, தனிப்பட்டவர்களிடமிருந்து வருவது வழக்கமாயிருந்தது ; தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளால் அவை சமர்ப்பிக்கப்படவில்லை. குறைகளுக்காக விண்ணப்பம் செய்யும் ஒருவர், தன்னை நியாயமற்ற முறையில், 'இங்கிலாந்தின் மக்கள்' என்றோ அல்லது 'நாட்டின் பொதுமக்கள்' என்றோ கூறிக்கொள்ளுவது பொருத்தமற்றதாகும். எனினும், மூன்றாம் எட்வர்டு மன்னரின் ஆட்சியின் தொடக்கத்தில், பாராளுமன்றத்திலிருந்த பொதுமக்கள், அவர்களுடைய ஆதரவை அளிக்கத் தயாராகவிருந்த விண்ணப்பங்களை ஒன்றாகச் சேர்த்துத் தனியான பட்டியலில் ஒதுக்கிவைத்துக்கொள்ளத் தொடங்கினர். சில சமயங்களில் 'பொது விண்ணப்பங்கள்' என்ற அடையாளத்தை அவை மீது பொறித்தனர் ; அவை மன்னருடையவும் அவருடைய மன்றத்தினுடையவும் கவனத்தை ஈர்த்தன என்பது தெளிவாகிறது.[11]

கீழ்ச்சபையின் இரு மூலங்களும் ஒரே சபையாக ஒன்றாகக் கலந்தது—ஆங்கிலேய அரசியலமைப்பு மிகவும் கடமைப்பட்டுள்ளதான மகிழ்வூட்டும் நிகழ்ச்சி, நடைமுறையில் விவேகம் எனும் இரண்டின் சேர்க்கையின் பயனாக உண்டான ஒற்றுமைகளில் ஒன்றாகும்—மிக முக்கியமான பயன்களைக் கொண்டதாகும். நாட்டின் நிலச்சுவான்தாரர்களின் பிரதிநிதிகளாயிருந்த நைட்டுகள், முதலிலிருந்தே காமன்ஸ் சபைக்கு, உறுதி, மதிப்பு, நிலைத்திருக்கும் தன்மை முதலியவைகளை அளித்தனர். அத்துடன் நகரத்து மக்களாலும் உரிமை பெற்ற பட்டணவாசிகளாலும் தனியாகப் பெறமுடியாத மரியாதையையும்

பெற்றுக்கொடுத்தனர். நிலமான்யக் கருத்துகளில் மூழ்கி யிருந்த நாட்டில்—இங்கிலாந்து அவ்வாறிருந்தது—பொதுமக்க ளுக்கு மதிப்புக் கிடைத்தது போற்றத்தக்கதாகும். ஷயர்களின் நைட்டுகள் இல்லாமலிருந்தால், வரிவிதிப்பை ஒத்துக்கொள்ள வும் வாணிகம் சம்பந்தமாக ஆலோசனை கூறுவதற்காகவும் நியமிக்கப்பட்டவர்களாக மாத்திரமே பொதுமக்கள் இருந் திருப்பர். சமமான உரிமையின் அடிப்படையில் நைட்டுக ளுடன் ஒன்றுசேர்ந்ததால், உடனடியாக நாட்டின் அரசாங் கத்தில் உரிமை கோரவும், மன்னரையும் பிரபுக்களையும் எதிர்த்து மக்களுடைய சுதந்திரங்களைப் பாதுகாக்கவும் முடிந் தது. மேலும், பாராளுமன்றம் செம்மையாகச் செயல்படுவது மக்களின் சிறு குழுக்களும், பிரபுக்களின் சிறு குழுக்களும் அடிக்கடி ‘கலந்து உறவாடியதால்’ உறுதியாகப் பெறப் பட்டது. இவ்வுறவால், பிரபுக்கள், பொதுமக்கள் எனும் முக்கியமான பிரிவுகளும், பதினான்காம் நூற்றாண்டுப் பாராளு மன்றம் பயனுள்ள முறையில் ஒற்றுமையாயிருப்பதற்குத் தடையாக இருக்கவில்லை.[12]

**பிரபுக்கள்:** நைட்டுகளும் நகரவாழ் மக்களும் ஒன்றாகக் கலந்து ஒரு சபையாக அமைந்தது, ஆங்கில அரசியலமைப்பில் காணப்படும் தனிச்சிறப்பு அம்சத்தின் பயனாக முடிந்தது. இத் தனிச் சிறப்பு, ஐரோப்பாவில் உறவுமுறையில் அமைந் துள்ள ஒவ்வோர் அரசியலமைப்பிலிருந்தும் மேன்மை யானதும் கண்ணியமிக்கதுமாகும்—அச் சிறப்புத் தனிப்பட்ட பிரபுக்கள் இனமாகும். ஐரோப்பாக் கண்டத்திலுள்ள அரசு களில் பெரும்பான்மையில் பிரபுக்கள் ஒரு தனி இனமாக அமைந்திருந்தனர்; பிறப்பினால் பெற்ற சிறப்புரிமைகளால் சிறப்படைந்திருந்தனர். சுதந்திரமான சாதாரண மனிதர் களிலிருந்து அவர்களது சிறப்புரிமைகளையும், சில நாடுகளில் அவர்களுடைய பட்டங்களையும்கூட இடைவிடாது வழித் தோன்றல்களுக்கு மாற்றிச் செலுத்துவதன்மூலம் சிறப்புப் பெற்றிருந்தனர். ‘உயர்குடிப் பிறந்தோன்’, ‘கனவான்’ எனும் சொற்கள் ஒரே பொருளைக் குறிப்பனவாயிருந்தன. உயர்குடிப் பிறந்தோரின் பண்ணை (எஸ்டேட் முறை எங்கெல் லாம் வழக்கில் இருந்ததோ) தேசிய சபையில் மேலான உயர் குடி மக்களுக்குப் பிரதிநிதியாயிருந்ததுடன், இங்கிலாந்தில் நிலங்களை வைத்திருந்த கனவான்கள் எனப்படும் பிரிவின ருக்கும் பிரதிநிதியாயிருந்தன. ‘மூன்றாம் பகுதி’ (எஸ்டேட்) எனப்படும் பொதுமக்கள் (காமன்ஸ்) அநேகமாக நகர மக்களையும் நகர உரிமைபெற்ற பட்டணவாசிகளையும் தனிமை

யாகக் குறிப்பதாகும். இதற்கு மாறாக இங்கிலாந்தில், பிரபுக்களின் சிறப்புரிமை, மிகப் பழமையான காலத்திய ஏர்ல்களைத் தவிர, ஒரு சமயத்தில், ஒரு குடும்பத்தில் யார் பிரபுத்தன்மை கொண்டிருந்தாரோ அவர் ஒருவருக்குமட்டுமே உரித்தாயிருந்தது. பிரபுக்களுடைய மகன், மகள் பொது மக்கள்தாம்; சமத்துவம், சட்டம், அரசியல்பற்றிய சிறப்புரிமைகள், மிகத் தாழ்மையான குடிமகனுடையதைப்போன்று சற்றும் மாறுபாடின்றி இருந்தன. பிரபு தன்மைக்கு வாரிசாகவுள்ள மூத்த மகன், மரியாதை என்ற முறையில் பிரபு பட்டத்தையுடையவராயிருந்தாலும், தகப்பன் உயிரோடிருக்கும்வரை இளைய சகோதரர்களைப்போன்று பொதுமக்களில் ஒருவனாகவே கருதப்படுவான். சுதந்திரமாக எல்லாப் பிரிவினர்களிலும் கலப்பு மணம் செய்துகொள்வதில் எவ்விதத் தடையுமிருந்ததாகத் தெரியவில்லை.[13] அவர்களுடைய நிலங்களும் மற்றச் சுதந்திரமான நிலச்சுவான்தாரர்களின் நிலங்களைப்போன்று ஒரே மாதிரியான விதிகளுக்குட்பட்டிருந்தன.[14] நாட்டின் உயர்ந்த பதவிகள், சட்டப்படி எல்லாச் சுதந்திரமானவர்களுக்கும் உரித்தாயிருந்தன. மேலும், வரிவிதிப்பினின்றும் நியாயமற்ற முறையில் விலக்கைப் பெற்று ஐரோப்பாவின் பிரபுக்கள் வர்க்கம் வழக்கமாக அனுபவித்துவந்ததைப் போல் வரியினின்று விலக்கைக் கோராமல், பொது வரிச்சுமையில், எக்காலத்திலும் எல்லாப் பிரிவினரும் பங்குகொண்டிருந்தனர்.

பிரபுக்கள் எனும் பிரிவிற்குக்கீழ் மற்றெல்லா மக்கள் பிரிவுகளும் சிவில் உரிமைகளில் சமத்துவம் பெற்றிருந்ததைக் காட்டிலும் அரசியலமைப்பின் தொடக்கத்தில் வேறெதுவும் முக்கியம் வாய்ந்ததாகவோ, அல்லது மக்களுடைய சமூக அரசியல் நிலைமைகளில் சக்தியுள்ளதும் நன்மையை உண்டு பண்ணக்கூடியதுமாகவோ இருக்கவில்லை. வேறு விதமாய் இருந்திருக்குமேயானால், இன்று உள்ளதுபோல் காமன்ஸ் சபை வளர்ந்திருக்க முடியாது. ஷயரைச் சேர்ந்த நைட்டுவீரன் பிரபுவிற்கும் கடைக்காரனுக்குமிடையே இணைக்கும் சங்கிலியைப் போன்று அமைந்திருந்தான். பொற்கொல்லர்கள், துணி வியாபாரிகள், தானிய விற்பனையாளர்கள், வாணிக நகரங்களால் பாராளுமன்றத்திற்குப் பிரதிநிதிகளாக அனுப்பப்பட்டார்கள். அவர்கள் எல்லோரும் அமரும் பலகையில் மற்ற உறுப்பினர்களும் சேர்ந்து அமர்ந்தார்கள். இவர்கள் மற்ற நாடுகளில் உயர்குடிப் பிறந்தோர் எனவும், பண்ணை முறையின் பிரபுக்கள் எனவும், நீதிமன்றங்களை நடத்தவும், கவச அங்கியைத் தாங்கவும், பல தலைமுறைகளாகக் கௌரவமான

முறையில் 'வழித்தோன்றல்கள்' எனக் குறிப்பிடக்கூடியவர்கள் எனவும் கருதப்படுவர். அவர்களில் சிலர், பிரபுக்களுடைய இளைய மகளிரும் உடன்பிறந்தார்களுமாக இருந்தனர். மற்றும் சிலர் அரசவமிசத்தைச் சேர்ந்தவர்கள் எனப் பெருமை பாராட்டமுடியும். இறுதியில், பெட்ஃபோர்ட் ஏர்லின் மூத்த மகன், அவனது தகப்பனுடைய இரண்டாவது பட்டப் பெயரால் மரியாதையாக அழைக்கப்பட்டு, காமன்ஸ் சபைக்குத்[15] தேர்ந்தெடுப்பதற்காக வேட்பாளராக முன்வந்தார்; மற்றவர்களும் இவரைப் பின்பற்றினர்.[16] இவ்வாறாக, முடிவில் காமன்ஸ் சபை நாட்டின் தனி ஒரு பிரிவின் பிரதிநிதியென ஆகாது, நாட்டினத்தின் முழுமைக்கும், பிரபுக்கள் சபையிலுள்ள உறுப்பினர்களைத் தவிர, பிரதிநிதியாக அமைந்தது. இதன் இயற்கைப் பயனாக, 'அரசாங்கத்தில் தலைமையான அதிகாரத்தைத்'[17] தன்வசம் கொண்டுள்ளது.

ஆனால், காமன்ஸ் சபையின் அதிகாரங்கள் நாளடைவில் வளர்ந்தன. தொடக்கத்தில், உரிமையுள்ள நகரவாசிகள் அவர்களுடன் துணையாயிருந்த உயர்குடியான, ஷயரைச் சேர்ந்த நைட் வீரர்களிடம் விட்டுக்கொடுத்தனர். நைட்டுகள் முறையாகப் பிரபுக்களுடைய தலைமையைப் பின்பற்றலாயினர்.[18]

## இரண்டாம் எட்வர்ட் 1307—1327

இரண்டாம் எட்வர்டின்கீழ், காவஸ்டனும், டெஸ்பென்ஸர்களும் ஒருவரை ஒருவர் அடுத்துத் தொடர்ச்சியாக மன்னருடைய பேராதரவைப் பெற்று விளங்கியதால், பொறுமை கொண்ட பிரபுக்கள் மன்னருக்கு எதிராகக் கிளம்பினர். நெடுநாள்களாகக் காணப்பட்ட இவ்வெதிர்ப்பு, இரு சந்தர்ப்பங்களில் 1312லும் மறுபடி 1321லும் பகிரங்கமான கலகஞ் செய்யும்படி அவர்களைத் தூண்டியது. மன்னரைப் பதவிநீக்கம் செய்ததும், பிரபுக்கள் இராணியுடன் இணக்கமாகச் செய்த நடவடிக்கையாகும்.

இவரது ஆட்சியின் தொடக்கத்தில் 1309-லேயே, பொது மக்கள் அவர்களுடைய அதிகாரம், உரிமைகள் முதலியவை பற்றிய எண்ணத்தை வெளிக்காட்டினர். மன்னர் ஆலோசனை பெற்று, அவர்களுடைய குறைகளை அறிவிக்கும் குறிப்பிட்ட விதிகளுக்கு நிவர்த்தி அளிக்கவேண்டும் எனும் நிபந்தனையின்மீது உதவித் தொகையை மன்னருக்கு அளித்தனர். ஸ்டாம்ஃபோர்ட் விதிகள் எனப்பட்டவை எண்ணிக்கையில் பதினொன்று ஆகும். மக்களின் குறைகளைச் சுருக்கமாகக்

கூறிய—வழக்கிலுள்ள சட்டத்தைத் தெளிவாக மீறுதல்களி லிருந்து தோன்றிய பல்வேறு குறைகள்—இம்மீறுதல்களால் நாட்டு மக்கள் ஆஞ்சோ மரபைச் சார்ந்த ஹென்றியின் வழித் தோன்றல்களின்கீழ் துன்புறுத்தப்பட்டுள்ளனர். இதை 1311-ல் தீர்ப்பதற்கு 'லார்ட் ஆர்டைனர்கள்' என நியமிக்கப் பட்டவர்கள் முயன்றனர். எனினும், பாராளுமன்றத்தில் காமன்ஸ் சபையின் குற்றச்சாட்டுகளில் இக்குறைகள் தொடர்ந்து ஒரு நூற்றாண்டுவரை நீடித்துக் காணப்பட்டன.[19]

**ஸ்டாம்ஃபோர்ட் விண்ணப்பக் கோட்பாடுகள், 1309:** அவை கீழ்க்காணும் வகையில் இருந்தன: 'பாராளுமன்றத்திற்கு வந்த நாட்டு நன்மக்கள்' மகா சாசனத்தைப் பின்பற்று மாறு பொது வேண்டுகோளுடன், 'மன்னருடைய பணியாள் கள் என்று அழைக்கப்படுகிறவர்களுடைய' கொடுமைகள் கட்டுப்படுத்தப்படவேண்டும் எனக் கூறிக்கொண்டு, குறை களைக் கூறினர்: (1) மன்னருடைய உணவு சேகரிப்போர்கள், தானியம், மால்ட், இறைச்சி, மற்றும் உணவுப் பண்டங்களைப் பெருமளவில் விலையை டாலிகள் மூலமாகவும் கொடுக்காமல் கைப்பற்றுகிறார்கள். (2) ஒயின், துணி போன்ற இறக்குமதிப் பொருள்கள்மீது புதிய சுங்கத் தீர்வை கட்டாயமாக வசூலிக்கப் படுவதால் மக்கள் வாங்கும் விலை கூடுதலாகச் செய்யப்படு கிறது. (3) மன்னருடைய பேரறிவிப்பிற்கு மாறாக, பழக்கத்தி லுள்ள நாணயத்தை, அதன் மதிப்பிற்குப் பாதி அளவில்தான் வியாபாரிகள் ஏற்றுக்கொள்ளுகிறார்கள். (4, 5) ஸ்டூவர்டு, மார்ஷல் எனும் இரண்டு அதிகாரிகளும் சட்ட விரோதமான முறையில், தங்களுடைய அதிகார எல்லையின் அளவிற்குமீறி மக்களைத் துன்புறுத்தியும் கொள்ளையிட்டும் வருகிறார்கள். (6) மன்னருடைய தகப்பனார் காலத்தைப் போன்று, பாராளு மன்றத்தில் பொதுமக்களின் விண்ணப்பங்களைப் பெற்றுக் கொள்ளுவதற்கு ஒருவரும் இருப்பதில்லை. (7) மன்னருக்குச் சேரவேண்டியவற்றை வசூலிக்கும் தண்டல்காரர்கள், சந்தை களிலும் நகரங்களிலும் மன்னருடைய தேவைகளுக்கும் அதிக மாகப் பொருள்களைப் பறிமுதல் செய்து, அதிகமாகக் கைப் பற்றியதைத் தங்களுடைய சொந்தப் பயனுக்காகப் பண்ட மாற்றுச் செய்கிறார்கள். (8) பாதுகாப்பு ஆணைகளை வெளி யிட்டு, சட்டப்படி நடவடிக்கைகள் எடுப்பதனின்றும் மக்கள் தடுக்கப்படுகிறார்கள். (9) மன்னிப்புப் பத்திரங்களை மிக எளி தாகப் பெற்றுத் துரோகிகள் தண்டனை பெறுவதிலிருந்து தப்பிவிடுவதால், அவர்கள்மீது குற்றஞ் சாட்டியவர்கள் அவர்க ளுடைய மாவட்டங்களில் தங்கியிருக்கவே அஞ்சுவதுடன்

அதே காரணத்திற்காகப் பலர் குற்றஞ்சாட்டுவதையும் விலக்கு கிறார்கள். (10) மன்னருடைய கோட்டைகளைக் காப்பவர்கள், பொது விசாரணையை மேற்கொள்ளுகிறார்கள். (11) இறப்பின் காரணமாகச் சொத்துகளைப் பறிமுதல் செய்யும் மன்ன ருடைய அதிகாரிகள், தலைமை மான்யமாக நிலங்களை வைத்துக் கொண்டிருந்தவர்களையும், வெகுநாள்களாக அவர்களுடைய மூதாதையர் வைத்துக்கொண்டிருந்த நிலங்களையும், பதவியை யொட்டி விசாரணை செய்தல் எனும் பெயரில், மன்னருடைய நீதிமன்றத்திற்கு விசாரணைக்காக அவர்களை உத்தரவிட்டு அழைக்காமலேயே, கைப்பற்றிச் சொந்தக்காரர்களை வெளி யேற்றுகிறார்கள். மேற்கூறியவைகளை எல்லாம் முழுமையாக, இரண்டாவது கோட்பாடு நீங்கலாக, முழுமனத்துடன் எட் வர்ட் ஏற்றுக்கொண்டார். இரண்டாவது கோட்பாடு, புதிய சுங்கத் தீர்வைகளைப் பற்றியதாகும். அவை ஒரு டன் ஓயின் மீது இரண்டு ஷில்லிங், அன்னியத் துணிமீது இரண்டு ஷில்லிங், மற்ற வாணிகப் பொருள்மீது 3 பென்சு வீதம் விதிக்கப்பட்டவை, முதன் முதலில் 1303-ல் வெளிநாட்டு வணி கர்களால் முதலாம் எட்வர்டிற்குச் சம்மதத்துடன் அளிக்கப் பெற்றவை ஆகியவையாகும். மக்களுடைய வேண்டுகோளுக் கிரங்கி மன்னர், இச் சுங்கம் குறித்து, 'சிறு சுங்கம்' நீக்கப் படுவதால் மன்னருக்கும் மக்களுக்கும் ஏற்படக்கூடிய நன்மை யைக் காணும்வரை நீக்கி வைப்பதென்றும், பின்னர் ஆலோ சித்து முடிவு செய்வதென்றும் ஏற்பாடாயிற்று. 'பழமையாக விதிக்கப்படும் சுங்கங்களும், சட்டப்படி பறிமுதல் செய்யப் படுபவைகளும் பழமையாகச் சம்மதித்துச் செலுத்தப்பட வேண்டியவை என ஏற்றுத்' தடையின்றி நடைபெறலாயின. 1310-ல், வரிவிதிப்பைத் தள்ளுபடி செய்ததால் விலை குறைய வில்லை எனும் காரணங்காட்டிச் 'சிறு சுங்கம்' மீண்டும் விதிக்கப்பட்டது.[20] அடுத்த ஆண்டில் பதவியில் அமர்த்தப் பட்ட ஆர்டைனர்கள் இதைச் சட்டத்திற்கு முரணானது என அறிவித்தனர்.

**பதவியில் அமர்த்தப்பட்ட லார்டு ஆர்டைனர்கள்:** 1310-ல் இருபத்தொரு 'லார்டு ஆர்டைனர்கள்' நியமிக்கப்பட்டு, சீர்திருத்தம்பற்றி ஒரு திட்டத்தைத் தயாரிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டனர். மூன்றாம் ஹென்றியின் ஆட்சியில் இதைப்போன்ற ஒரு குழு முன்னர் நியமிக்கப்பட்டதும், இரண்டாம் ரிச்சர்டின் காலத்தில் சீர்திருத்தத்திற்காக நியமிக்கப்பட்ட அதிகாரக் குழுவும் விதிவிலக்காயுள்ள நிலைமையில், இது மிகச் சிறப்பானதும் புரட்சிகரமானது

மான ஒரு பரிகாரமாகும்; மன்னர் ஆட்சியும் ஆளுகையும் செய்த காலங்களில் மன்னருடைய பண்பியல்புகள் மிகவும் முக்கியமாயிருந்தன. மன்னர் கெட்டவராகவும் திறமையற்றவராகவும் இருந்தால், மக்களுக்கு அதனுல் ஏற்படும் விளைவு ஒரேமாதிரியாகத்தான் இருந்தது. இவ்விரு காரணங்களில் ஏதாவதொன்ருல் அரசாங்கம் சீர்குலைந்து மிகவும் மோசமான ஒரு நிலையை அடையும்பொழுது, மன்னர் பதவியிலிருந்து நல்ல ஆட்சியைத் துய்ப்பதுடன், தற்காலிகமாக ஆணையர்களைக்கொண்டு தன்னுடைய அதிகாரத்தை நடத்தச் செய்யும் ஒரு சமரசத்தை மேற்கொண்டதாகத் தோன்றுகிறது. இரண்டாம் எட்வர்டின் ஆட்சியில் மன்னருடைய சலுகையைப் பெற்றிருந்தவர்களான காவெஸ்டன் போன்றவர்கள்மீது பிரபுக்களுக்கு ஏற்பட்டிருந்த சொந்தப் பொருமையுடன், பொதுநலனைப் பேணும் விருப்பமுமே ஆர்டைய்னர்களை நியமிக்கக் காரணமாயின.

**சட்டங்கள் 1311:** மக்களுடைய பழமையானவும் ஐயமற்றனவுமான குறைகளைத் தீர்ப்பதற்கு எல்லாவற்றையும் தழுவியனவான அவர்களுடைய 'சட்டங்கள்'[21] நன்மை பயப்பனவாய் இருந்தன. மன்னருடைய சிறப்புரிமையை அகழ்வனவா யிருக்கும் மற்றச் சட்டங்கள், அமைச்சர்களை நியமிப்பதிலும் செயற்குழுவின் செயல்களைக்குறித்தும் ஏற்படவிருந்த பாராளுமன்றத்தின் நேரிடையான அதிகாரத்தைப் பல சமயங்களில் எதிர்நோக்கின. செயற்குழுவின் அதிகாரத்தைப் பின்னர் பெற்று, இப்பொழுது அவ்வதிகாரம் மறைமுகமாகப் பாராளுமன்றத்தால் செயற்படுகிறது. இதுபோன்ற விண்ணப்பங்களிலிருக்கும் விதிகளில் காணப்பெறுபவை: (9) பாராளுமன்றத்திலுள்ள பிரபுக்களின் சம்மதமின்றி நாட்டைவிட்டு மன்னர் வெளிச்செல்லக்கூடாது;[22] போர் அறிவிப்பும் செய்யக்கூடாது; பிரபுக்களின் சம்மதத்துடன், மன்னர் வெளிநாட்டிற்குச் செல்லுங்கால், பாராளுமன்றத்திலுள்ள பிரபுக்களின் அனுமதியுடன் நாட்டின் பாதுகாப்பிற்காக ஒரு போஷகரைத் தேர்ந்தெடுக்க வேண்டும்; (14) சான்ஸலர், இரு பிரதம நீதிபதிகள், பொருளாளர், மற்றும் மன்னருடைய உயர்தர அதிகாரிகள் ஆகியோர் ஆலோசனைக் குழுவாலும், பாராளுமன்றத்தில் பிரபுக்களின் சம்மதத்தின் பேரிலும் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்; நீதிவிசாரணையில் தாமதத்தைத் தவிர்ப்பதற்காக ஆண்டிற்கொரு முறை, தேவைப்பட்டால் இருமுறையாவது, சௌகரியமான இடங்களில் பாராளுமன்றக் கூட்டம் நடைபெறவேண்டும் என்பவையாம்.

**யார்க்குச் சட்டம், 1322:** இச் சட்டத்தால் தேசிய முக்கியத்துவம் வாய்ந்த சட்டமியற்றுதலில் பொதுமக்கள் ஒத்துச் சம்மதம் அளிக்கும் உரிமை உறுதிசெய்யப்பட்டது. 1322-ல் இயற்றப்பட்ட இச் சட்டம், பரோபிரிட்ஜ் எனுமிடத்தில் பிரபுக்களுடைய எதிர்ப்புத் தோற்கடிக்கப்பட்டபின், ஆர்டினன்ஸ் சட்டங்கள் மீளப் பெறப்பட்டன. அறிவிக்கப்பட்டவை யாவன: (1) ஆர்டினன்ஸ்கள் மீளப் பெறப்படவேண்டும்; (2) மன்னரால் இயற்றப்பட்ட சட்டங்கள் நடைமுறையில் இருக்கவேண்டும்; (3) மன்னராட்சியின் சத்தான இயல்பை அழிக்கக்கூடிய சட்டங்களை, மக்கள் எவ்விதமான அதிகாரத்தையோ அல்லது மேலான ஆணையையோ பெற்றிருந்தாலும், செய்யக்கூடாது; (4) அத்துடன், 'ஆங்கிலேயர்களது தலைவரான மன்னருக்கும், அவருடைய வாரிசுகளுக்கும், நாடு, நாட்டு மக்களுக்கும் உட்பட்ட எஸ்டேட்டுகளைப் பற்றி ஏற்படவிருக்கும் எல்லாச் செய்திகளும், மன்னராலும், சமயத் தலைவர்கள், ஏர்ல்கள், பிரபுக்கள், நாட்டு மக்களாலும் இதுவரை எவ்வாறு பழக்கத்தில் வந்துள்ளனவோ, அதைப் போன்று, ஆலோசித்துச் சம்மதித்துப் பாராளுமன்றத்தால் நிறுவப்படவேண்டும்.'[23] செல்வந்தர்கள் அடங்கிய ஒரு கூட்டம் மன்னருக்குப் பாதகமாக அமையும் செய்திகளை ஆராயக் கூடிய பொழுது, இரண்டாம் எட்வர்ட் மேலே கூறப்பட்ட கொள்கையை ஓராண்டிற்கு முன்னதாகவே பயன்படுத்தினார்.[24]

மிகச் சாதாரணமான முடிவைக் காண்பதற்கு நிலைமை சிக்கல் வாய்ந்ததாயிருந்தது. 1327-ல் இரண்டாம் எட்வர்ட் சடங்குகளுடன் பதவிநீக்கம் செய்யப்பெற்றார். அவ்வாறு செய்ய மேற்கொண்ட சடங்குகள், ஒழுங்கான அரசாங்கத்தை[25] மேற்கொண்டதன் அடிப்படையைச் சொல்லின் வாயிலாக எடுத்துரைப்பதைக் காட்டிலும் நம்பிக்கையற்ற முயற்சிகளாக இருந்தன.

## மூன்றும் எட்வர்ட், 1327—1377

மூன்றும் எட்வர்டின்கீழ்ப் பிரபுக்கள் மன்னரை எதிர்ப்பதற்குப் பதிலாக மன்னருக்கு ஆதரவாக அமைந்தனர். பிரபுக்களுக்குத் துணையாயிருப்பதை விடுத்துப் பொதுமக்கள் மன்னருடைய தன்னிச்சையான அதிகாரத்தை எதிர்த்து அரசியல் சட்ட வரம்பிற்குட்பட்ட உரிமைகளை வற்புறுத்துவதில் தலைமையானவர்களானார்கள். தங்களுடைய அதிகாரத்தை உறுதிப்படுத்துமளவிற்கு மன்னரின் அதிகாரத்தை அவ்வளவாகக் குறைக்கவுமில்லை. மூன்றாவது எட்வர்டின்

ஆட்சியைப் போன்று சட்ட விரோதமான செயல்கள் நிரம்பிய ஆட்சி வேறெதுவுமில்லை. ஆனால், சட்டப்படியுள்ள ஆட்சி உறுதியாக அமைக்கப்பட்டதெனினும், சட்ட விரோதமானவையெல்லாம் விதிவிலக்குகளாக ஏற்றுக்கொள்ளப்பட்டதோடு, முன்மாதிரிகளாகக் கருதப்படக்கூடாதென்றும் அறிவிக்கப்பட்டது.

**காலப்படி ஒழுங்காக நடந்த பாராளுமன்றங்கள் :** கால அடிப்படையில் ஒழுங்காக மூன்றும் எட்வர்டின் ஆட்சியில் கூடிய பாராளுமன்றங்கள் பொதுமக்களுடைய அதிகாரத்தை உறுதி செய்ததுடன், அவ்வதிகாரத்தைப் பயன்படுத்திக்கொள்ளுவதற்கு அடிக்கடி வாய்ப்புகளையும் அளித்தன. அவர் நடத்திய போர்களின் விளைவாக ஏற்பட்ட ஏராளமான செலவுகளைத் தீர்ப்பதற்காக மக்களிடமிருந்து உதவியைத் தொடர்ந்து நாட வேண்டியிருந்ததால், மன்னர் ஐம்பது ஆண்டுகள் ஆட்சி செய்த காலத்தில், நாற்பத்தெட்டுத் தடவைகள் பாராளுமன்றம் கூடியது.

மேலும், சட்டபூர்வமாக இருதடவை அறிவிக்கப்பட்டபடி (**1311**-ல் ஆர்டைனர்கள் பிரபுக்களால் ஏற்கெனவே உத்தரவிடப்பட்டிருந்ததைப் போன்று) பாராளுமன்றம் ஆண்டுதோறும் கூட்டப்படவேண்டும்—இதனால் ஒரே பாராளுமன்றம் ஆண்டுதோறும் கூடுவது என்று இல்லாமல் ஒவ்வோர் ஆண்டும் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றம் கூடவேண்டும் எனக் கருதியதுபோல் தோன்றுகிறது.[26] எனவே, 1330-ல் 'பாராளுமன்றம் ஆண்டுதோறும் கூடவேண்டுமென்றும், தேவையானால் அடிக்கடி கூடவேண்டுமென்றும்' சட்டம் இயற்றப்பட்டும், மறுபடியும் 1362-ல், 'பல்வேறு குற்றங்களும், மனக்குறைகளும் நாள்தோறும் ஏற்படுவதால் அவைகளைக் களைவதற்கு ஆண்டுதோறும் பாராளுமன்றம் கூடவேண்டுமெனவும், சட்டம் விதிக்கப்பட்டுள்ளவாறு வேறொரு சமயமும் கூடவேண்டுமெனவும்'[27] ஏற்பட்டது.

**காமன்ஸ் சபையின் வளர்ச்சி :** மூன்றும் எட்வர்டின் தொடர்ந்த ஆட்சியின்பொழுது, பொதுமக்கள் அவர்களுடைய உரிமைகளில் மூன்றை வற்புறுத்தினர் :

(1) பாராளுமன்றத்தின் சம்மதமின்றி விதிக்கப்படும் வரிகள் சட்டத்திற்கு முரணானவை.

(2) சட்டமியற்றுவதில் இரண்டு சபைகளின் ஒத்த சம்மதம் தேவையானது.

(3) ஆட்சியில் காணப்படும் குறைகளை விசாரணை செய்யவும், சீர்திருத்தம் செய்யவும் காமன்ஸ் சபையினருக்கு உரிமையுண்டு.

இவைகளின் வளர்ச்சியிலிருந்து பெறுவதாக காமன்ஸ் சபை முதன்முதலாக இரு உரிமைகளை அறிவித்தது. (அ) மேலே குறிப்பிட்டுள்ள முதலாவது, மூன்ருவது பிரிவுகளில் தொடர்புள்ளபடி பொதுத்துறைக் கணக்குகளைச் சோதனை செய்யவும், தொகைகளை ஒதுக்கவும்; (ஆ) மூன்ருவது விதியின் கிளைத்தோற்றமாக மன்னரது அமைச்சர்களைக் குற்ற நடவடிக்கைகளுக்காகக் குற்றஞ்சாட்டும் உரிமையுமாகும்.

I. **சம்மதமின்றி வரிவிதித்தல் சட்டவிரோதமானது:** சாசனங்களை உறுதிப்படுத்துதல் எனச் சட்டமியற்றி இருந்தும், முதலாம் எட்வர்டும் அவரது மகனும் ஓரிரு சமயங்களிலும் மூன்ரும் எட்வர்ட் இடைவிடாமலும் எல்லா வகையான வரிகளையும் விருப்பப்படி விதித்துவந்தனர். காமன்ஸ் சபையினர் தொடர்ச்சியாக மறுப்பின் வாயிலாகவும், நிபந்தனையுடன் அளிக்கப்பட்ட தொகைகளாலும், தாராளமாக உதவித் தொகைகளையளித்ததன் வாயிலாகவும், உதவியை மன்னர் கோரியபொழுதெல்லாம், நேர்முகமான வரிவிதிப்புச் செய்வதைக் கட்டுப்படுத்துவதில் உரிமையைப் பெற்றனர்.

1332-ல் (மூன்ரும் எட்வர்டு ஆட்சியில்) அயர்லாந்தில் ஒரு கலகம் தோன்றியதும் மன்னர், நகரங்களிலிருந்தும், பட்டணங்களிலிருந்தும் மன்னருடைய தனி உரிமைபெற்ற நிலங்களிலிருந்தும், டல்லேஜ் வரியை வசூலிக்குமாறு சில ஆணையர்களைப் பணித்தார். ஆனல், ஷயரின் நைட்டுகள், பிரபுக்கள், ஏர்ல்கள், சமயத் தலைவர்கள் முதலியவர்களின் வேண்டுகோளின்படி அந்த உத்தரவு திரும்பப் பெறப்பட்டது. அவர்கள் அதற்குப் பதிலாக நகரங்கள், பட்டணங்கள், மன்னரது தனி உரிமைபெற்ற நிலங்கள் முதலியவைகளிலிருந்து பத்தில் ஒன்றும், 'பொதுமக்களிடமிருந்து' பதினைந்தில் ஒன்றும் மன்னருக்களித்தனர். மன்னரும் வருங்காலத்தில் டல்லேஜ் வரியை அவரது முன்னோர்களுடைய காலத்தில் செய்ததைப் போலல்லாமல் நியாயமானதைத் தவிர வேறு முறையாக விதிக்கவில்லையென்று உறுதியளித்தார்.[28]

1339-ல் (13 மூன்ரும் எட்வர்ட்) சமயத்தலைவர்களும், ஏர்ல்களும், பிரபுக்களும், அவர்களுடைய தானியங்கள், உரோமம், ஆடுகள் முதலியவைகளில் பத்திலொன்றை அளித்தனர். அத்

துடன் 'மால்டோல்ட்' அல்லது கம்பளிமீது சட்டவிரோத மாக விதிக்கப்படும் சுங்கத்தீர்வையை எடுத்துவிட வேண்டு மென்றும், அப்பொழுது அளிக்கும் தொகையை முன்மாதிரி யாகக் கொள்ளக்கூடாதென்றும் நிபந்தனையுடன் அளித்தனர்.[29] பொதுமக்களும், உதவித் தொகையளிக்க மிக்க விருப்பங் கொண்டிருந்தவர்களாக அறிவித்தனர். ஆனால், அவர்களுடைய தொகுதியிலுள்ளவர்களைக் கலந்தாலோசியாது உதவித் தொகையை அளிக்க முடியாமலிருந்ததால், அதற்காக ஒரு பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டுமென்று விரும்பினர்; அவ்வாறு கூட்டப்பெறும் பாராளுமன்றத்திற்கு ஷயரி லிருந்து நைட்டுகள், அவர்களே ஷெரீஃபுகளாகவோ அல்லது அதிகாரிகளாகவோ இருந்தால், பாராளுமன்றத்திற்குத் தேர்ந் தெடுக்கப்படக் கூடாதென்றும் விருப்பம் தெரிவித்தனர்.[30] அவர்கள், கம்பளி, காரீயம் இவைகளின்மீதுள்ள வரி அதிகமா யிருப்பதைக் குறித்துக் குறைகூறியதுடன், 'பொதுமக்கள், பிரபுக்கள் இவர்களுடைய சம்மதமின்றி வரி உயர்த்தப்பட் டிருப்பதாகத் தெரிவதால்', 'எதிர்ப்பின்றிக் கைது செய்யப்படு வதைப் பொதுமக்களில் எவரும் மறுக்கலாம்'[31] என்று அவர் களது உரிமையை வன்மையாக எடுத்துக் கூறினர். புதிய பாராளுமன்றம் 1340-ல் கூடிற்று; ஒப்பந்தத்தின் கருத்து கள் முத்திரையிடப்பெற்ற பத்திரத்தில் பதிவுசெய்யப் பட்டன; மதத்தலைவர்கள், பிரபுக்கள், பொதுமக்கள் முதலிய வர்களால் பாராளுமன்றத்தில் அளிக்கப்பட்ட பொதுச் சம்ம தம் இன்றி எவ்விதத் தண்டத்தொகையோ அல்லது உதவித் தொகையோ விதிக்கப்படக் கூடாது எனச் சட்டம்வாயிலாக அறிவிக்கப்பட்டது.[32]

இரண்டாண்டுகள் கழித்து 1342-ல் பணமுடை மிகவதிக மாக ஏற்படவே, மன்னர், பிரபுக்களுடைய உடன் ஒப்புத லோடு, வணிகர்களின் கூட்டத்தைக் கூட்டி பொதுமக்க ளுடைய ஒப்புதலின்றி, அவர்களிடமிருந்து ஏற்றுமதி செய்யப் படும் ஒவ்வொரு சாக்குக் கம்பளிமீது 'சட்டப்படி விதிக்கப் படும் மால்டோட் வரியுடன்கூட' நாற்பது ஷில்லிங் கூடுதலாக வரிவிதிப்பதற்கு இசைவு பெற்றார். இந்த வரி நாட்டுமக்கள் மீது சுமத்தப்படவில்லையென்றும், வெளிநாட்டில், கம்பளி வாங்குகிறவர்மீது சுமத்தப்பட்டதென்றும் வாதிக்கப்பட்டது; ஆனால், அடுத்தவாண்டில் மறுப்பு விண்ணப்பத்தில் பொது மக்கள், அரசியல் பொருளாதார அடிப்படை பற்றிய அவர் களுக்கிருந்த அறிவை, கூடுதலாக விதிக்கப்பட்ட வரியினால், வாடிக்கையாகக் கொடுக்கப்படும் விலைக்கு அதிகமாகக்

கொடுக்க அந்நிய நாட்டு வியாபாரிகள் மறுத்ததைக் குறை கூறித் தெளிவுபடுத்தினர்.[33] 1346-ல் (20 மூன்றும் எட்வர்ட்) ஒவ்வொரு சாக்கு நிறையுள்ள கம்பளிமீது விதிக்கப்படும் நாற்பது ஷில்லிங் வரி எடுபடவேண்டுமென்று மீண்டும் பாராளுமன்றம் வேண்டியது. ஆனால், மதத் தலைவர்களும் மற்றும் செல்வந்தர்களும், மன்னருடைய தேவையையுணர்ந்து வியாபாரிகளுடைய ஒப்புதலுடன், போர் நிகழும்வரை மேலே குறிப்பிட்டபடி கம்பளியின்மீது வரியை மான்யமாகப் பெற வேண்டியதென்று சம்மதம் தெரிவித்துவிட்டதாகப் பதிலளிக்கப்பட்டது; அத்துடன் மன்னருக்குக் கடன் கொடுத்தவர்களுக்கு இவ் வரி அடகாக வைக்கப்பட்டுள்ளதால், வரி தொடர்ந்து விதிக்கப்படவேண்டுமென்று சொன்னதன்பேரில் பொதுமக்கள் இணக்கம் தெரிவித்தனர்.[34] 1363-ல் பொது மக்களுடைய விண்ணப்பத்தின் பேரில், பாராளுமன்றத்தின் சம்மதமின்றி,[35] கம்பளத்தின்மீது உதவிக் கொடை மான்யமாக அளிப்பதை வியாபாரிகள் செய்யக்கூடாதென முடிவாக அறிவிக்கப்பட்டது.

1348-ல் (22 மூன்றும் எட்வர்ட்) பொதுமக்கள் நிபந்தனையுடன் ஒரு மானியத்தை அளித்தனர். விதிக்கப்பட்ட நிபந்தனையாவது: மிக முக்கியமானதாகவுள்ளது மன்னர், இனிமேல் எவ்வித 'வரி, டல்லேஜ் வரி, கடனைத் தீர்க்கும்வாயிலாகவோ அல்லது வேறு எவ்விதமான வரியையும் பாராளுமன்றத்தின் பொதுமக்களுடைய சம்மதமின்றியும் மான்யமாக அளிக்கப்படாமலும் விதிக்கப்படாது' என்பதை 'வருங்காலத்தில் மாறாக ஏதாவது செய்ய முயன்றால் பரிகாரம் காண்பதற்காக[36] ஏட்டில், ஆவணம் போன்று பதிவு செய்யப்படவேண்டுமெனக்' கோரப்பட்டது. இதுபோன்ற நிபந்தனையுடன்கூடிய மான்ய அளப்பில், 'மனக்குறைகளைத் தீர்ப்பதைப் பொறுத்தது, உதவித் தொகையளிப்பது' எனும் கோட்பாடும் பழக்கமும் தோன்றலாயின.

சம்மதமின்றி வரி விதிப்பதென்னும் நடவடிக்கை சட்ட விரோதமானது என்பதை ஏற்றுக்கொண்டபொழுதிலும் மூன்றும் எட்வர்ட், மிகத் தேவையாயிருந்தபோதும், நாட்டைப் பாதுகாப்பதற்கும் மக்கள்மீது வரி விதிப்பதற்கு ஒருவித நியாயமான உரிமை கொண்டாடினார் எனத் தோன்றுகிறது. இந்த உரிமை 1377-ல் நடந்த அவருடைய கடைசிப் பாராளுமன்றத்திலும் வற்புறுத்தப்பெற்றது.[37] நெடுநாட்களுக்கு முன்னரே 1339-ல் ஸ்காட்லாந்துடன் போரிட நேரிட்ட

பொழுது மக்கள்மீது விதிக்கப்பட்ட கடுமையான வரிவிதிப்பைக் குறித்து மன்னர், கான்டர்பரியின் அதிமேற்றிராணியாருக்கு எழுதியிருந்த கடிதத்தில் இந்த வாதத்தை வற்புறுத்தியிருந்தார்: 'டல்லேஜ், கடும் வரிகள் போன்ற பலவிதப் பொறுப்புகள் மக்கள்மீது சுமத்தப்பட்டிருப்பதை மன்னர் மனவருத்தத்துடன் கூறவேண்டியிருப்பினும், தவிர்க்க முடியாத தேவையால், மக்களை அவ் வரிவிதிப்பினின்றும் விடுவிக்க முடியவில்லை யென்பதையும், சிறிது காலம் பொறுமையுடனும் பணிவுடனும் இவ் வரிச்சுமையைப் பொறுத்துக் கொள்ளுவதற்கு மக்களைத் தூண்டுமாறும், விரைவிலேயே மக்களுக்குக் கைம்மாருக உரியகாலத்தில் வசதிகளையளிக்க எண்ணியிருப்பதையும் எடுத்துக் கூறுமாறு, மேற்றிராணியாரை வேண்டினர்.'[38]

(மான்யங்களை ஒதுக்கீடு செய்தல்:) மான்யங்களை ஒதுக்கீடு செய்வதில் எவ்வித மாற்றமுமின்றி ஏற்பட்ட முதல் நிகழ்ச்சி 1353-ல் நிகழ்ந்தது. அப்பொழுது கம்பளத்தின்மீது வழங்கப்பட்ட மான்யம் போரின் செலவிற்கு மாத்திரம் பயன்படுத்த வேண்டுமென ஏற்பட்டது.[39]

(வரிக் கணக்குகளைத் தணிக்கையிடல்:) 1340-ல், கடந்த உதவி மான்யத் தொகையை வசூலித்தவர்களுடைய கணக்குகளைத் தணிக்கையிடுவதற்காகப் பாராளுமன்றத்தின் குழு நியமிக்கப்பட்டது. அடுத்த ஆண்டில், பொதுமக்களின் வேண்டுகோளின்படி தணிக்கை போன்றவைகளைச் செய்வதற்காகக் கமிஷனர்களைப் பணிக்க மன்னர் உத்தரவிட்டார்.[40] வரி வசூலிப்போரின் கணக்குகளைச் சோதிப்பது என்பது மன்னருடைய அமைச்சர்களால் செலவிடப்படுவதையும் சோதனை செய்வதற்கான நடவடிக்கைகளுக்கு முதல் படியாகும். எனினும், அக்காலத்தில் அரச வருவாய்பற்றிய விஷயங்களை விசாரணை செய்வதென்பது தவிர்க்கமுடியாத தேவையாயிருந்தது. புள்ளி விவரத்திற்காக மாத்திரம் என்றாலும், தேவையாயிருந்தது என்பது, 1371-ல் (45 மூன்றும் எட்வர்ட்) இங்கிலாந்திலுள்ள சமயஞ்சார்ந்த பிரிவுகளின் எண்ணிக்கைபற்றிப் பாராளுமன்றத்தால் செய்யப்பட்ட தப்புக் கணக்கிலிருந்து, தெரியவருகிறது. ஒவ்வொரு சமயப் பகுதிகளிலிருந்தும் 22 ஷில்லிங் 3 பென்சு வீதம் வரி விதிப்பதன் வாயிலாக ஐம்பதாயிரம் பவுன் உதவி மான்யமாகக் கொடுக்கப்பட்டது வசூலிக்கப்பட வேண்டியதாயிருந்தது. நாற்பத்தி ஐந்தாயிரம் சமயப்பகுதிகள் நாட்டில் இருந்த

தாக எண்ணப்பட்டது. பாராளுமன்றம் கலைந்த பின்னர், சமயப்பகுதிகளின் எண்ணிக்கை 8,600-க்கு மேற்படாதென்றும் வசூலிக்கப்படவேண்டிய தொகை பத்தாயிரம் பவுனை மீறுதென்றும் கண்டுபிடிக்கப்பட்டது. தவற்றைச் சரிசெய்வதற்காக உயர் ஆலோசனை சபையை வின்செஸ்டரில் கூடும்படியாக மன்னர் அழைத்தார். இக் கூட்டத்திற்கு, கடந்த பாராளுமன்றத்திலிருந்தவர்களும் கௌன்டி, நகரம், உரிமை பெற்ற பட்டணங்கள் முதலியவைகளின் பிரதிநிதிகளாகவுமிருந்த இருவரில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து அனுப்புமாறு கட்டளையிடப்பட்டது. முழுமையாகப் பாராளுமன்றத்தைக் கூட்டாதது மக்களுக்கு ஏற்படும் அதிகச் செலவைத் தவிர்ப்பதற்காக எனக் காரணமும் காட்டினர்.[41] சபையின் முன்னதாக உண்மைச் செய்திகளைக் கூறியதால், சபையினர் அவர்களது சொந்த அதிகாரத்தின்மேல் சமயப் பகுதிகளின் வரி விதிப்பை 116 ஷில்லிங்கிற்கு உயர்த்தினர்.[42] முறையற்ற இவ்வரிவிதிப்பைப்பற்றி எவ்விதக் குற்றச்சாட்டும் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. ஆனால், பாராளுமன்றத்தின் முக்கிய நோக்கம் நடைமுறையில் பயனுள்ளதாக ஆயிற்று. அடுத்த ஆண்டில் (1372) அரசியல் சட்டம்பற்றிய முறைகளைப் புறக்கணிப்பது கடுமையாக நேர்ந்தது. இது முன்பிருந்ததைப் போலக் கவுன்டி உறுப்பினர்களிலிருந்து உரிமைபெற்ற நகரங்களைத் தனியாகப் பிரித்துக் காமன்ஸ் சபையின் ஒற்றுமையை அழிப்பதாக இருந்தது. பொதுமக்களுடைய விண்ணப்பங்களுக்குப் பதில் கூறப்பட்ட பின்னர் நைட்டுகள் வெளியில் போகும்படி உத்தரவிடப்பட்டனர். உரிமைபெற்ற நகரங்களைச் சேர்ந்தவர்களுடைய கூட்டம் வேல்ஸ் இளவரசர், சமயத் தலைவர்கள், பிரபுக்கள் இவர்களுடைய முன்னிலையில் 'வெள்ளை அறைக்கு அருகிலுள்ள அறையில்' கூட்டப்பெற்று வெளிநாடுகளுக்குச் செல்லும் வியாபாரக் கப்பல்களை வழியில் பாதுகாத்துச் செல்வதற்குப் பதிலாக ஏற்றுமதிகளின்மீது முன்னர் மான்யமாக அளிக்கப்பட்ட உதவித் தொகையை மேலும் ஓராண்டிற்குப் புதுப்பித்துக் கொடுக்கப்பட்டது.[43]

**II. சட்டமியற்றுதல்:** சட்டமியற்றுதல் புதியதொரு பிரச்சினையைத் தோற்றுவிக்கிறது; 'மக்கள் வரியை மான்யமாகக் கொடுக்கின்றனர், சட்டத்தை மன்னர் இயற்றுகிறார்.'[44] 1322-ல் ஏற்பட்ட யார்க்கு சட்டம் மதத்தலைவர், பிரபுக்கள், நாட்டுப் பொதுமக்கள் இவர்களைக் கொண்ட பாராளுமன்றத்தின் சம்மதம் மிகவும் முக்கியமான தேவையெனும் கொள்கையைப் பத்தியுடன் உறுதிப்படுத்தியது.[45]

1318-லிருந்து மூன்றும் எட்வர்ட் பட்டமெய்தும்வரை சட்டத்தில் சொற்களின் அமைப்புமுறை, 'நாட்டின் பொது மக்கள், சமயத்தலைவர்கள், ஏர்ல்கள், பிரபுக்கள் இவர் களுடைய சம்மதத்துடன்' என்ற முறையில் இருந்தது. மூன்றும் எட்வர்டின்கீழ் இம்முறை மற்ெருரு வாசகமுறை யுடன் மாறிமாறிக் காண்கிறது. அதில், பொதுமக்களின் பங்கு, விண்ணப்பம் செய்கிறவர்களுடைய பங்கைப்போன்று அமைக்கப்பட்டுள்ளது—'பொதுமக்களின் வேண்டுகோ ளின்படியும், மதத்தலைவர்கள், ஏர்ல்கள், பிரபுக்கள் இவர் களுடைய சம்மதத்துடனும்' என்பது அது. இது அக்காலத் தில், பொதுமக்களுடைய விண்ணப்பங்களை அடிப்படையாகக் கொண்டுதான் சட்டங்கள் ஏற்படக் காரணமாயிருந்தது. பொதுமக்களுடைய விண்ணப்பங்கள் மனக் குறைகளை அறிவித்ததுடன் குறிப்பிட்ட சீர்திருத்தங்களைச் செய்யுமாறும் வேண்டின.[46] 1340-ல் காண்டர்பரி அதிமேற்றிராணியார், சில குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள மேற்றிராணியார்கள், பிரபுக்கள் (நீதிபதிகளில் பலரும் இவர்களுடன் சேர்க்கப்பெற் றிருந்தனர்), இவர்களுடன் பன்னிரு நைட்டுகள், ஆறு உரிமை பெற்ற நகரவாசிகள் (பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட வர்கள்) இவர்களையும் கொண்ட ஒரு குழு நியமிக்கப்பட்டு, விண்ணப்பங்களையும் அவைகளின் பதில்களையும் தக்க சட்ட மியற்றுவதன் வாயிலாக நிலைபெறச் செய்வதற்காக மாற்றி யமைக்கும்படி கேட்டுக்கொள்ளப்பட்டனர்.[47] தாற்காலிக மான விஷயங்களைத் தனி ஆணைகளால் ஒழுங்குபடுத்தலாம். தனி ஆணைகள் சட்டங்களைப் போன்றிருந்தன. அவைகள் சட்டங்களைப்போன்று நிலையானவை அல்ல என்பதும் இயற்று வதில் சட்டங்களைப்போன்று பத்திநிறைவில்லையென்பதை வித்தியாசமாகக் கூறலாம். அத்துடன் தனி ஆணைகள் பாராளுமன்றத்தில் இயற்றப்படாமல் உயர் ஆலோசனை சபை யால் இயற்றப்படுவதும் மற்ெருரு வித்தியாசமாகும். உயர் ஆலோசனை சபைகள், பாராளுமன்றத்தின் எல்லா அம்சங் களையும் கொண்டிருந்தன எனினும், அழைப்பாணைகள் பாராளு மன்ற முறையைப் போன்றிரா. தவிரச் சாதாரணச் சபைகளில் பிரபுக்களும் மன்னருடைய ஆலோசனை சபையினரும், உறுப் பினராயிருந்தனர். 1363-ல் நாட்டின் நலனைக் கருதி, செலவுகளை வரையறுத்து முறைப்படுத்துவதற்கான சட்டங்களை முதன் முதலாக இயற்ற எண்ணியபொழுது, 'பாராளுமன்றத்தில் இது விஷயமாக ஒத்துக்கொண்டது புதுமையாகவும் இதற்கு முன்னர் கேள்விப்படாததாயுமிருப்பதால்' தற்காலிகமான சட்டத்தை அல்லது நிலையான சட்டத்தை விரும்புகிறார்களா

எனப் பிரபுக்களும் பொதுமக்களும் வினவப்பட்டனர். 'ஏதாவது திருத்தம் தேவையாயிருப்பின், அடுத்த பாராளுமன்றக் கூட்டத்தில் திருத்திக்கொள்ளலாம் என்பதற்காக நிலையான சட்டமியற்றுவதற்குப் பதிலாகத் தற்காலிகமான சட்டமியற்றுவதை' அவர்கள் முடிவு செய்தனர்.[48] 'முக்கியப் பொருள்கள் பற்றிய சட்டங்கள்', கம்பளியை ஏற்றுமதி செய்ய ஆங்கில வியாபாரிகளுக்குத் தடை விதித்தன. மீறினால் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டது. இச் சட்டங்கள் 1353-ல் கூடிய உயர் ஆலோசனை சபையால் நிறைவேற்றப்பட்டன. இச் சபைக்கு ஒவ்வொரு ஷயரிலிருந்து ஒரு நைட்டும், ஒருசில நகரவாசிகளும், உரிமைபெற்ற நகரங்களிலிருந்து மக்களும் வந்திருந்தனர். புதிய, தலையாய குற்றத்தைத் தோற்றுவித்தது அச்சூறுத்தும் பயனைத் தெளிவுபடுத்தியதால், உயர் ஆலோசனை சபையில் கூடியிருந்த பொதுமக்கள், 'அடுத்த பாராளுமன்றத்தில் மேலே குறிப்பிட்ட விதிகள் கூறப்பட்டு, பாராளுமன்ற ஏடுகளில் பதிவு செய்யப்பட வேண்டுமெனவும்' வேண்டிக் கொண்டனர். இதற்குச் 'சபையில் இயற்றப்பட்ட தற்காலிகமான சட்டங்களும், ஒப்பந்தங்களும், பொதுப் பாராளுமன்றத்தில் இயற்றப்பட்டதைப் போன்று பதிவு செய்யப்படாமலிருந்தது காரணமாகும்.' அடுத்த பாராளுமன்றத்தில் தற்காலிகச் சட்டங்கள் 'சட்டத்தைப் போன்று எக்காலத்துமிருக்க வேண்டுமெனத்' தெளிவாக உறுதி செய்யப்பட்டன. அதே சமயத்தில், பாராளுமன்றத்தின் சம்மதமின்றி, மாற்றங்களோ அல்லது சேர்த்தல்களோ இனிச் செய்யக்கூடாதெனவும் சட்டமியற்றப்பட்டது.[49]

1341-ல் சட்டம், 15, மூன்றும் எட்வர்ட், 1. அமைச்சர்கள், மன்னருடைய சிறப்புரிமைக்கு விரோதமாயுள்ளது எனக் கருதியதாலும், மன்னர் இசைவு போலியாயிருந்த காரணம் பற்றித் திரும்பப் பெறப்படுவதாக மூன்றும் எட்வர்டின் அறிவிப்பு, நம்பத்தக்க[50] அடிப்படையில் எழுந்தபோதிலும், இது ஆங்கில அரசியலமைப்புக் கருத்துகளில் நிலையான அம்சமாகப் பங்குபெறவில்லை.

**III.** (பாராளுமன்றமும் அரசாங்கமும்:) மூன்றும் எட்வர்டின் ஆட்சியில் இரு சந்தர்ப்பங்களில், காமன்ஸ் சபையினர் அரசாங்க ஆட்சி விவகாரங்களில் மிக்க உறுதியுடன் தலையிட்டனர்.

**அமைச்சுப் பொறுப்பு.** (1) 1341ஆம் ஆண்டு ஏப்ரலில் கூடிய பாராளுமன்றத்தில் (15. மூன்றும் எட்வர்ட்) பிரபுக்களுடன் சேர்ந்து புகழத் தக்கதும், ஆனால் பருவத்திற்கு முந்தியதுமான ஒரு முயற்சி செய்யப்பட்டது. அதாவது, மன்னருடைய அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்குப் பொறுப்புள்ளவர்களாகச் செய்தலாகும். நியாயமற்ற முறையில் ஆட்சியை நடத்தியதாகக் குற்றஞ்சாட்டி அதிமேற்றிராணியாரான ஜான் ஸ்ட்ராட் ஃபோர்டு என்பாருடன் எட்வர்ட் மன்னர் சச்சரவிட்டதும், அதற்கு முன்னாள் மந்திரியான அவரது கடும் நியாய வாதமும், பாராளுமன்றத்தில் பிரபுக்களால் பிரபுக்களைக் குற்ற விசாரணை செய்வதெனும் உரிமைப் பிரச்சினையைத் தோற்றுவித்துப் பிரபுக்களுடைய ஒரு குழு அதை உறுதிப்படுத்தியது. தேவைகளை அளிக்கும் பிரச்சினை வாதத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டபொழுது நாட்டின் மூன்று பெரும் பிரிவுகளான, பிரபுக்களும், குருமார்களும், பொதுமக்களும், நிபந்தனையுடன்கூடிய வேண்டுகோள்களை வெளியிட்டனர். அவைகளில் மூன்று சிறப்புத் தன்மை கொண்டவையாகும். அவையாவன: (1) பிரபுக்கள் அண்மையில் அவர்களுடைய குழுவால் அறிக்கையிடப்பட்டதற்கு இணக்கமாக, மன்னர் குற்றஞ்சாட்டுகிறவராகும்போது (மன்னர் நேரிடையாகப் பங்கெடுத்துக்கொள்ளும்பொழுது), நாட்டின் பிரபுக்களில் எவரும், அமைச்சராயிருந்தாலும் இல்லாவிட்டாலும் சரி, அல்லது பதவியின் காரணமாகவோ அல்லது வேறெந்தக் காரணத்திற்காகவும் சரி, அவருக்குச் சொந்தமான நிலங்கள், குடியிருப்புச் சொத்துகள், பொருள்கள் முதலியவைகளை இழக்கச் செய்தல், கைது செய்தல், சிறைபிடித்தல், சட்டப் பாதுகாப்பை நீக்குதல், சொத்துகளைப் பறிமுதல் செய்தல், குற்ற விசாரணைக்குட்படுத்தல், பதில் கூறும்படி கட்டாயப் படுத்தல், நியாயம் வழங்குதல் போன்றவைகளுக்குட்படுத்தக் கூடாதென்றும், அப்படி விசாரணை செய்யப்படுவதாயிருந்தால், பாராளுமன்றத்தில் மற்றப் பிரபுக்கள் முன்னிலையில் அவ் விசாரணை செய்யப்படவேண்டுமென்றும் அறிக்கை கூறிற்று. அத்துடன் விசாரணை செய்யப்படும்பொழுது முறைப்படி எடுக்கப்படும் நடவடிக்கைகள்பற்றிய மன்னருடைய நியாயமான சட்டங்களுக்கும் கட்சிக்காரர்களாக வழக்கில் தொடர்பு கொள்ளுகிறவர்களுக்கும் இவ்வறிக்கை பாதுகாப்பு அளித்தது.[51] நிலைமை விநோதமாயிருந்தது. மன்னருடைய நம்பிக்கையையிழந்த ஒரு முன்னாள் அமைச்சர், பாராளுமன்றத்தின் பாதுகாப்பை நாடினார்; பாராளுமன்றம் அவருக்குச் சாதகமாக உதவி செய்ய விரும்பியது.[52] பிரபுக்களும்

பொதுமக்களும் சேர்ந்து விண்ணப்பித்துக்கொண்டனர். (2) உதவித் தொகை போன்று மற்றப் பொதுப் பணங்களைப் பெற்றுள்ள கணக்குகளைத் தணிக்கை செய்யக் கமிஷனர்கள் நியமிக்கப்படவேண்டியது;[53] (3) மகாசாசனத்தையும் மற்றும் சட்டங்களைப் பின்பற்றுவதாக உறுதிமொழி எடுத்துக் கொண்ட அமைச்சர்களையும், நீதிபதிகளையும் பாராளுமன்றம் விசாரணைக்காக நியமிக்கவேண்டும்.[54]

இவ் வேண்டுகோள்களில், மிக முக்கியமானதும், அதே சமயத்தில் மன்னரால் மிகவும் வெறுக்கப்பட்டதும், பாராளுமன்றம் அமைச்சர்களையும் நீதிபதிகளையும் நியமிப்பதாகும். அத்துடன் கணக்குகளைத் தணிக்கை செய்வது என்பதையும் சேர்த்தால், அமைச்சுப் பொறுப்பை உடனேயே உட்படுத்துவதாகும். எனினும், விண்ணப்பங்களில் கூறப்பட்டுள்ள கோரிக்கைகளை ஏற்றுக்கொண்டால்தான் மான்ய உதவியைப் பெறலாம் என அறிந்துகொண்ட மன்னர், அக் கோரிக்கைகளைச் சட்டத்தில் இடம்பெறச் செய்வதற்கு மனமில்லாது அனுமதியளித்தார். எனினும், மன்னர், 'அவரது ஆலோசனைக் குழுவைக் கலந்துகொண்டு' அமைச்சர்களையும், நீதிபதிகளையும் நியமிக்கலாம் எனும் ஒரு சிறிய திருத்தத்தைச் சேர்த்தார். இவ்வாறு நியமிக்கப்பெற்றவர்கள், அடுத்த பாராளுமன்றக் கூட்டத்தில் அவர்களுடைய பதவிகளைத் துறக்கவும், அவர்கள்மீது சுமத்தப்படும் குற்றச்சாட்டுகளுக்கு எல்லாம் பொறுப்பேற்றுக்கொள்ளவும் கடமைப்பட்டிருக்க வேண்டும் என்றும் குறிப்பிடப்பட்டது.[55] இச் சட்டம் நிறைவேற்றப்பட்டதில் பாராளுமன்றத்தில் முதல் எதிர்ப்புத் தோன்றலாயிற்று. சான்ஸலர், பொருளாளர், நீதிபதிகள் ஆகியோர் அவர்களது இணக்கமின்மையை அறிவித்தனர்.[56] பாராளுமன்றம் கலைந்த பின்னர், ஷெரீஃப்புகளுக்கு விடுத்த ஒரு பேரறிவிப்பின் வாயிலாக, எட்வர்ட் மன்னர் (கடும் நடவடிக்கையைப் பின்பற்றி) இச் சட்டம் செல்லத் தக்கதன்று என்று உத்திரவிட்டார்.[57]

**(துரோகக் குற்ற விசாரணை)** (2) 1376-ல் (50 மூன்றும் எட்வர்ட்) பாராளுமன்றம் நடவடிக்கைகளைத் தொடங்கியது. அதை, துரோகக் குற்ற விசாரணை முறையின் தோற்றம் எனப் பின்னர் எழுந்த சட்டஞ்சார்ந்த கொள்கை கருதுகிறது.[58] மன்னருடைய முதுமைப் பருவத்திலும், கருநிறக் கவசமணிந்த இளவரசர் நோயால் அல்லலுற்று இருந்தபொழுதும், லங்காஸ்டிரியக் கோமகனுரான ஜான் ஆஃப் கான்ட் அரசு விஷயங்களை நடத்துவதில் முதன்மை பெற்றார். அவரது ஆட்சி மிகவும்

மக்கள் ஆதரவின்றியிருந்தது. மக்களால் நெடுநாள்வரை 'நல்ல பாராளுமன்றம்' எனவழைக்கப்பட்ட (மூன்றும் எட்வர்டின் 50ஆவது ஆண்டில் கூடிய) பாராளுமன்றத்தில் அவரது ஆட்சி நெடுநாட்கள்வரை மக்களுடைய உறுதியான தாக்குதலுக்கு இலக்காயிற்று.[59] ஐம்பதாண்டுகளுக்கு முன்னர், லங்காஸ்டிரியர்களின் கட்சிக்கு எதிராகப் பிரபுக்கள் ஒன்று சேர்ந்திருந்தால் எதிர்க்கட்சியினரின் நிலைமையைப் பெற்றிருப்பர் என்பதில் ஐயமில்லை. ஆனல், அப்பொழுது, வேல்ஸ் இளவரசரும், மார்ச் ஏர்லும் (க்ளாரன்ஸ் கோமகனுரான லயனல் என்பாரின் மகளும், வாரிசுரிமை பெற்றவளுமான பிலிப்பா எனும் சீமாட்டியின் கணவர்) அரசாங்கத்தை எதிர்த்து அரசியல் தாக்குதலை நடத்துவதற்கு அவர்களது இலட்சியத்தை நிறைவேற்றக் கீழ்ச்சபையினருடன் ஒன்றுசேருவது சிறந்த வழியெனக் கண்டனர். காமன்ஸ் சபையினர், மான்ய உதவித்தொகையை அளித்தனர்; ஆனல், அவர்கள், அஞ்சா நெஞ்சத்தினரான சர் பீடர் டிலா மேர் (குறிப்பாக, மார்சு ஏர்லின் கண்காணிப்பாளராக இருந்தவர்) என்பாரின் தலைமையின்கீழ், பத்து அல்லது பன்னிரண்டு பிரபுக்கள், மதத்தலைவர்கள் மற்றும் சிலரைச் சேர்ப்பதன் வாயிலாக ஆலோசனை சபையை வலுவடையச் செய்யவேண்டுமென வற்புறுத்தலாயினர். இந்த ஆலோசனை சபை 'எப்பொழுதும் கலந்தாலோசனை கூறுவதற்குத் தயாராகயிருக்கவேண்டும் என்றும், அதன் சம்மதம், ஆலோசனையின்றி முக்கியமான அலுவல் எதுவும் முடிவு செய்யக்கூடாதென்பதும்' வற்புறுத்தப்பெற்றது. மன்னரும் நாடும் 'மன்னருடன் நெருக்கமாயுள்ள சிலரது நன்மைக்காகவும், மற்றவர்களுடைய கூட்டுக் கள்ள யோசனைகளுக்காகவும்' மிக்க வறுமையுற்றுள்ளது எனும் பொதுவான குறைகளை எடுத்துச் சொல்லியதுடன் பிரபுக்கள் சபையின் நீதிமன்றத்தில் மன்னரின்கீழ் பதவி வகித்தவர்களான லாடிமர், நெவில் எனும் இரு பிரபுக்கள் மீதும், சுங்கத்தீர்வை போன்ற சில விற்பனை முற்றுரிமைகளின் குத்தகைக்காரர்களும் பொது மக்கள் பிரிவைச் சேர்ந்தவர்களுமான லியான்ஸ், எல்லிஸ், பீச்சி, ப்யூரி என்பவர்கள் மீதும் துரோகக் குற்ற விசாரணையை மக்கள் சபையினர் தொடர்ந்தனர். துரோகக் குற்ற விசாரணைக்குப் பல காரணங்கள் கூறப்பட்டதெனினும், குற்றஞ்சாட்டப்பட்டவர்களைக் குறித்து மூன்று குற்றச்சாட்டுகள் முக்கியமானவை: (1) பாராளுமன்றத்தால் கலே நகரில் ஏற்படுத்தப்பட்டிருந்த வாணிகப் பொருள்களைப் பிரிக்கும் கருவியை அவர்கள் பெற்றதாயும் அதை அங்கிருந்து எடுத்து

விட வேண்டுமென ஆலோசனை கூறியதாயும், (2) மன்னருக்கு மிதமிஞ்சிய கடும் வட்டிக்குப் பணம் கடனாகக் கொடுத்திருந்ததாயும், (3) மன்னரால் செலுத்தப்பட வேண்டிய பழைய கடன்களை மிகக் குறைந்த மதிப்பிற்கு வாங்கி, பின்னர் கருவூலத்திலிருந்து கடன் தொகையின் முழுப்பணத்தையும் அவர்களாகவே எடுத்துக் கொண்டனர் என்பதாம். பிரபுக்கள் சபையினர் ப்யூரி என்பவர் நீங்கலாக மற்றக் குற்றஞ் சாட்டப்பட்டவர்களை விசாரணை செய்து தண்டனை விதித்தனர். ப்யூரி மாத்திரம் விசாரணைக்கு வரவில்லை. லாட்டிமர் பிரபு சபையிலிருந்து விலக்கப்பெற்று கைது செய்யப்பட்டார். நெவில் பிரபு அவர் ஏற்றுக்கொண்டிருந்த பதவிகளை இழக்கும்படி செய்யப்பட்டார். லியான்ஸ், எல்லிஸ், பீச்சி ஆகியோர் சிறை பிடிக்கப்பட்டு மன்னருடைய கருணைக்கு ஆளாக்கப்பட்டனர்.[60] எனினும், காமன்ஸ் சபையினர் தனித்துச் செயல்படுவதற்கான வலிமையைப் பெற்றிருக்கவில்லை. வேல்ஸ் இளவரசர் இறந்தபொழுது (ஜூன் 8, 1376) அவர்களுடைய முக்கிய ஆதரவாளரை இழந்தனர். 'நல்ல பாராளுமன்றம்' கலைக்கப்பட்டதும், ஆட்சியில் முக்கிய இடத்தை லங்காஸ்டர் கோமகனார் மீண்டும் பெற்றார்; பன்னிருவரடங்கிய ஆலோசனைக் குழு நீக்கப்பட்டது; கோமகனாரின் பழைய ஆதரவாளர்கள்[61] அரசவைக்கு வரலாயினர். குறிப்பிடப்படாத குற்றங்களுக்காக சர் பீடர் டி லா மேர் கைது செய்யப்பட்டு நாட்டிங்காம் கோட்டையில் சிறையிடப்பட்டார். அடுத்த ஆண்டில் நடந்த பாராளுமன்றம், கோமகனாரின் ஆதரவாளர்கள் நிரம்பியதாயிருந்தது எனக் காலவழிச் செய்திக்கோவையாளர் கூறுவது, முந்திய பாராளுமன்றங்கள் செய்தவைகளையெல்லாம் அடியோடு அகற்றி, துரோகக் குற்ற விசாரணை செய்யப்பட்டு அமைச்சர்களுக்கு விதிக்கப்பட்ட தீர்ப்புகளையும் கவிழ்த்தது. இவ்வாறு நல்ல பாராளுமன்றத்தால் செய்யப்பட்டவைகளில் பெரும்பகுதியை அதை அடுத்து நடந்த பாராளுமன்றம் அகற்றியது. துரோகக் குற்ற விசாரணை எனும் புதியதும் ஆபத்து நிறைந்ததுமான படைக்கலம் எஞ்சியிருந்தது. அதையும்விட, பொதுமக்கள் கருத்தில் ஓர் ஆழமான பதிவு ஏற்பட்டு, பாராளுமன்றத்தில் மிக்க ஊக்கமுடையவர்களாயினர். பொதுமக்கள் சபையினர் அவர்களது சபைத்தலைவர்களுக்கு மார்ச்சு, லங்காஸ்டர் கண்காணிப்பாளர்களுக்கு, தேவைக்கு மிகுதியாகக் கீழ்ப்படிந்து நடந்தனர் எனக் கருத வேண்டியதில்லை; 1377-ல் ஹங்கர்ஃபோர்டின் தலைமையில் காண்டின் கொள்கையின் சில அம்சங்களை எதிர்த்து வன்மையாக மறுத்துக் கூறினர்.[62]

**பொதுமக்கள் சபையும் தேசிய அரசியலும்:** பொதுமக்கள் சபையினர் தலையிடுதல் உள்நாட்டு ஆட்சிமுறைபற்றிய பிரச்சினைபற்றியதாக மாத்திரம் இல்லை. மூன்றும் எட்வர்டின் கீழ் அவர்களுடைய ஆலோசனை அடிக்கடி நாடப்பெற்று, போரிடுவது, சமாதானம் போன்ற பிரச்சினைகள் மீதும் ஆலோசனை கூறினதைக் காண்கிறோம். 1328-ல் மன்னர் பிராயமடையாதவராயிருந்தபொழுதும் மார்ட்டிமர் அதிகாரம் செலுத்திவந்தபொழுதும், ஸ்காட்லாந்துடன் சமாதான ஒப்பந்தம் செய்து, அதன் விளைவாக அந் நாடு, இங்கிலாந்திற்கு மான்ய முறைப்படி கீழ்ப்படிந்திருத்தலிலிருந்து விடுதலை பெற்ற இச் சமாதானம், பாராளுமன்றத்தால் செய்து கொள்ளப்பட்டது. காமன்ஸ் சபையும் சேர்ந்திருந்தது என்பது தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. 1331-ல் ஃபிரான்சின் மீது போரிடுவதா சமாதானம் செய்துகொள்ளுவதா எனும் பிரச்சினைபற்றி மன்னர் பாராளுமன்றத்தில் பிரபுக்களை மாத்திரம் கலந்தபொழுது சமாதானம் செய்துகொள்ளுமாறு ஆலோசனை கூறப்பட்டது.[63] 1333-ல் ஸ்காட்லாந்துடன் கொள்ளவேண்டிய உறவுகளைப்பற்றி ஆலோசனை கூறுமாறு ஷயரிலிருந்து வந்த நைட்டுகள் கேட்டுக்கொள்ளப்பட்டனர். இதற்கு, செல்வந்தர்களில் பாதிப்பேர்களும், மதத்தலைவர்களில் எவரும் அக் கூட்டத்திற்கு வராமையே காரணமாகும்.[64]

1343-ல் ஃபிரான்சுடன் சமாதானம் செய்துகொள்ளுமாறு மன்னருக்கு ஆலோசனை கூற, பாராளுமன்றம் கேட்டுக் கொள்ளப்பட்டது. லார்டு சேம்பர்லினாக இருந்த சர் பார்த்தலோமியோ டி பர்கர்ஷ் என்பார் அப்பொழுது மன்னரின் சார்பில் கூறியதாவது, ‘போர், மதத்தலைவர்கள், நாட்டில் பெரியவர்கள், பொதுமக்கள் முதலியவர்களுடைய பொதுவான ஆலோசனையின்மீது தொடங்கப்பட்டதால், அதேமாதிரியான ஒப்புதலைப் பெறாது மன்னர், போரை நீடிப்பதையோ அல்லது சமாதானம் செய்துகொள்ளுவதையோ செய்ய முடியாது’ என்றார். பிரபுக்களும், காமன்ஸ் சபையினரும் தனித்தனியே கூடி ஆலோசித்து, மன்னருடைய பெருமைக்கும் அவருடைய நண்பர்களுக்கும் நன்மையை யளிப்பதாயிருக்குமானால், மன்னர் சமாதான ஒப்பந்தம் செய்துகொள்ளலாமென்றும் ஆலோசனை கூறினர். அப்படிச் செய்ய முடியாவிட்டால், காமன்ஸ் சபையினர் அவர்களுடைய முழு வலிமையுடன் போரைத் தொடர்ந்து நடத்துவதற்கு மன்னருக்கு உதவி யளிப்பதாக அறிவித்தனர்.[65]

**1344**-ல் பாராளுமன்றம், ஆலோசனைக்கு அணுகப்பட்டபொழுது, போரை மும்முரமாக நடத்த வேண்டுமென வற்புறுத்தியது. ஆனால், **1348**-ல் மீண்டும் ஆலோசனை கூறுமாறு கேட்கப்பட்டபொழுது (இதற்கிடையில் போரின் செலவு தாங்கமுடியாத அளவை அடைந்தது) காமன்ஸ் சபையினர் மிக்க விவேகமுள்ளதும் நேர்மையானதுமான பதிலை அளித்தனர். அதாவது, 'அஞ்சத்தகு பிரபுவே; தங்களுடைய போர், படைகள் முதலியவைகளைப்பற்றி நாங்கள் நன்கு அறியாதவர்களாயிருத்தலால், நாங்கள் எவ்வித ஆலோசனையும் கூறமுடியாத நிலையிலுள்ளோம். எனவே, எங்களை மன்னித்தருளுமாறு பேரன்புமிக்க தங்களை இறைஞ்சுகின்றோம்! தங்களது ஆலோசனைக் குழுவிலுள்ள பெரியோர்கள், பேரறிஞர்களின் ஆலோசனைப்படி தங்களுடைய பெருமைக்கும் நாட்டினுடையவும் தங்களுடையவும் நன்மைக்கும் எது சிறந்ததெனக் கூறப்படுகிறதோ அதை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டுகிறோம்: மேலே குறிப்பிட்டவர்களாலும் தங்களாலும் சம்மதப்பட்டு ஒத்துக்கொள்ளப்படுவதை நாங்களும் உடனடியாக ஒத்துக்கொள்ளுவதுடன் உறுதியுடன் அதன்வழி நிற்போம்' என அறிவித்தனர்.[66]

**1354**-ல் மன்னர், லார்டு சேம்பர்லின் வாயிலாக, ஃபிரான்சுடன் சமாதானம் ஏற்படுவதற்கான நம்பிக்கையிருக்கிறதெனப் பாராளுமன்றத்திற்கு அறிவித்தார்; அத்துடன், பிரபுக்கள், காமன்ஸ் முதலியவர்களுடைய ஒத்துக்கொள்ளுதலின்றி எதையும் மன்னர் செய்யவிரும்பாததால், உடன்படிக்கையுடன் சமாதானம் செய்துகொள்ளச் சம்மதிப்பார்களா என அறிந்துகொள்ள விரும்பினார். முதலில் இதற்குக் காமன்ஸ் சபையினர் கூறியதாவது: 'சமாதானம் செய்துகொள்ளுவதால், மன்னருக்கும் பிரபுக்களுக்கும் எது ஏற்றுக்கொள்ளத்தக்கதாகவிருக்குமோ அதுவே அவர்களுக்கும் ஏற்றதாகும்' என்றதும், மன்னரால் மீண்டும் கேட்கப்பட்டனர். 'முடியுமானால் நிலையான சமாதானத்தை ஏற்படுத்தக்கூடிய உடன்படிக்கை செய்துகொள்ளுவதை அவர்கள் ஒத்துக்கொள்ளுகிறார்களா' என்றதற்கு அவர்கள் எல்லோரும் ஒரே குரலில் 'ஏய்! ஏய்!' எனக் கூக்குரலிட்டனர்.[67]

இறுதியில் **1360**-ல் பிரிட்டிக்னி உடன்படிக்கைப்படி சமாதானம் ஏற்பட்டபொழுது, பாராளுமன்றம் கூட்டப்பெற்று, உடன்படிக்கை அதன் சோதனைக்கு விடப்பட்டு முறையாகச் சம்மதம் பெறப்பட்டது.

1368-ல் ஆங்கிலேய மன்னருக்கு, டேவிட் புரூஸ் என்பார் மன்னர் என்ற முறையில் அரசு வணக்கம் செலுத்துவதிலிருந்து விடுதலை அளிக்கப்படவேண்டுமென்ற நிபந்தனையோடு ஸ்காட்லாந்துடன் சமாதானம் செய்துகொள்ள இசைந்தபொழுது, அவ்வமயம் ஆலோசனை கூறுமாறு கேட்கப்பட்ட பாராளுமன்றத்திலுள்ள பிரபுக்கள் மாத்திரம் பதிலளித்ததாவது, 'மன்னர், அவரது வாரிசுகள், முடி முதலியவைகளைப் பாதுகாப்பதற்கு அவர்கள் உறுதிமொழி அளித்தவர்களானதால் மன்னரும், அவரது வாரிசுகளும் வாரிசு முறையில் பெறப்படுவதைத் துறந்தாலொழிய வேறு எக் காரணத்திற்காகவும் எவ்விதச் சமாதானத்திற்கும் சம்மதிக்க முடியாது' என்பதாம்.[68]

இவ் வெடுத்துக்காட்டுகள் மூன்றும் எட்வர்டின் ஆட்சிக் காலத்திய வழக்கத்தை அறிவிப்பதாகும். அக்காலமுதல், போர் அல்லது சமாதானம் போன்ற பிரச்சினைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டுப் பாராளுமன்றத்தின் விசாரணைக்குரியவைகளாகக் கருதப்பட்டன. மன்னர்களால் வேண்டப்பட்டு, பாராளுமன்றத்தால் தாராளமாக ஆலோசனையும், அறிவுரையும் வழங்கப்பட்டன. இவ்வாறு ஆலோசனை செய்வதில் பொதுமக்கள் எப்பொழுதும் சேர்த்துக் கொள்ளப்படவில்லை. ஆனால், போர்கள் உறுதியாக அதிகச் செலவை ஏற்படுத்தியபொழுது, பொதுமக்களுடைய இணக்கம் பொருளாதாரத் துறையில் மிகவும் தேவையாயிற்று—இது அரசியல் சட்டப்படி தேவையானதன்று எனினும், அரசியல் விவேகத்தின் படிப்பினையாயிருந்தது.[69]

மேலே தொகுத்துக் கூறப்பட்டவைகளுடன் வேறு பல அரசியல் விஷயங்களிலும், மூன்றும் எட்வர்டின் ஆட்சியில் பொதுமக்கள் மும்முரமாகப் பங்கெடுத்துக் கொண்டனர். ப்ரொவைஸர் சட்டம் (25 மூன்றும் எட்வர்ட்)—போப்பாண்டவரால் இங்கிலாந்திலுள்ள சமயஞ் சார்ந்த கோயில் மான்யங்கள், பதவிகள் முதலியவற்றை வெளிநாட்டினரை நியமனஞ் செய்யும் அதிகாரத்தைத் தடை செய்வதானது—'நாட்டுப் பொதுமக்களுடைய மிகுந்த மனக்குறைவின்' பயனாக நிறைவேற்றப்பட்டதாகும்.[70]

**பொதுமக்கள் தகுதி:** இந்த ஆட்சியிலேயே, தேர்தல் சம்பந்தமான தீமைகளை ஒழிப்பதற்கான முயற்சிகளை முதன் முதலாகக் காண்கிறோம். நைட்டுகள் அல்லது கனவான்களைத்

தவிர மற்றவர், கவுன்டியின் உறுப்பினர்களாகப் பணிபுரிய அனுமதிக்கக் கூடாதெனப் பல விண்ணப்பங்களோடுகூட 1372–ல் (46 எட்வர்ட் 3) மன்னரது நீதிமன்றத்தில் வழக்கறிஞராகத் தொழில் புரிகிறவரும், ஷெரீஃபாகப் பதவியிலுள்ளவர்களும் ஷயர்களின் நைட்டுகளாகத் தேர்ந்தெடுக்கப்படவோ அல்லது ஏற்றுக்கொள்ளப்படவோ கூடாதெனச் சட்டமியற்றப்பட்டது. இதற்குக் காரணங்களாவன: வழக்கறிஞர்கள் பலர், பொதுமக்களின் பெயரால், அவர்களுடைய சொந்தக் கட்சிக்காரர்களின் தொடர்பான விண்ணப்பங்களை எடுத்துக் கூறுவதற்காகப் பாராளுமன்றத்தில் இடங்களைத் தேடிக்கொண்டிருந்தனர்: ஷெரீஃபுகள், மக்களின் பொது அமைச்சர்களாயிருப்பதால், எல்லோருக்கும் நியாயம் வழங்குவதற்காக அவரவர்களுடைய பதவிபற்றிய மாவட்டங்களில் குடியிருக்க வேண்டும் என்பதாம்.[71]

## இரண்டாம் ரிச்சர்ட்: 1377—1399

இடைக்கால இங்கிலாந்தின் அரசியல் சட்ட வரலாற்றில், மனத்தைக் கவரும் பகுதிகளில் இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சிக் காலமும் ஒன்றாகும். அண்மையில் கண்டுபிடிக்கப்பட்ட மூலங்களும், பழைய மூலங்களின் மறு பரிசீலனையும், பழைய வரலாற்றாசிரியர்கள் சந்தேகப்பட்டதைவிட மேலும் சிக்கல் நிறைந்ததான ஒரு நிலைமையை அறிவிக்கிறதாகும். எனவே, அவரது ஆட்சியைப்பற்றிச் சுருக்கமாகக் கூறுவதென்பது கடினமானது எனினும், அரசியல் சட்டம் பற்றியது மிக்க சிறப்பு வாய்ந்தது.[72]

இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சியில், பொதுமக்கள் மூன்றாம் எட்வர்டின் நிலையாகப் பெறப்பட்ட மூன்று முக்கிய உரிமைகளை அடிக்கடி பயன்படுத்தியதால், பொதுமக்கள் உறுதி செய்து கொண்டனர்: (1) எவ்வித தொகையையும் வசூலிக்கக் கூடாது, (2) அவர்களுடைய சம்மதமின்றிச் சட்டங்கள் இயற்றப்படக்கூடாது, (3) அரசாங்கத்தின் ஆட்சி அவர்களுடைய தணிக்கைக்கும், கட்டுப்பாளுகைக்கும் உட்பட்டது என்பவையாம். அத்துடன், கடந்துபோன மன்னரின் ஆட்சியில் முதன்முதலாக வற்புறுத்தப்பட்டதும், சம உறுதியான அடிப்படையில் பெறப்பட்ட இரு உரிமைகளையும் உறுதியாகப் பெற்றனர். அவையாவன: (1) பொதுக் கணக்குகளைத் தணிக்கை செய்யவும் தேவையானவற்றை உரித்தாக்கவும்

உரிமை, (2) தவறான நடவடிக்கைகளுக்காக மன்னருடைய அமைச்சர்கள்மீது கொடுங்குற்ற விசாரணை செய்யும் உரிமை என்பனவாம்.

ரிச்சர்டு மன்னரின் இருபத்திரண்டு ஆண்டுகளில் முக்கியமான அரசியல் சட்டம்பற்றிய நிகழ்ச்சிகளைக்குறித்து விரைவாக அளவிட முற்படும்பொழுது, அக் காலத்தை மூன்று பிரிவுகளாகப் பிரித்துக்கொள்ளுவது சௌகரியமாயிருக்கும்: (1) 1377-லிருந்து 1389-ல் நிகழ்ந்த பலாத்கார ஆட்சிமாற்றம் வரை: அப்பொழுது மன்னர் தான் ஆட்சிபுரிவதற்குரிய வயதையடைந்தவராக அறிவித்து ஆட்சியை நேரிடையாக மேற்கொண்டது: (2) 1389-லிருந்து மீண்டும் ஆட்சி திடீர் மாற்றம் ஏற்பட்ட 1397 வரை: அப்பொழுது மன்னர், கிளௌசெஸ்டர் கோமகர், வார்விக், அருண்டேல் இவைகளின் ஏர்ல்கள் இம் மூவரையும் சிறைபிடித்தது. ('மறு விசாரணை பிரபுக்கள்' ஐவரில் மேற்கூறப்பட்டவர்கள் மூவராவர்.) (3) 1397-லிருந்து 1399 வரை: மன்னர் யதேச்சாதிகாரம் புரியத் தலைப்பட்டதிலிருந்து பதவி நீக்கம் செய்யப்படும்வரை. (4) 1381-ல் நடந்த குடியானவர் கலகம்: கடுமையான சில பிரச்சினைகளைத் தோற்றுவித்த இந் நிகழ்ச்சி முடிவுரையாகக் கூறப்படும்.

**முதல் பிரிவு, 1377—1389:** மன்னர் இளம்பிராயத்தினராயிருந்தபொழுது, பாராளுமன்றம் அதிகார ஆக்கிரமிப்பான இயல்பைக் கொண்டிருந்ததுடன், சிலவாண்டுகள் வரை, 'அரசாங்கத்தின் செயற்குழு அதிகாரம் இரு சபைகளிடத்திலும் மாற்றிக் கொடுக்கப்பட்டிருந்தது.'[73]

**ஆலோசனை மன்றமும் சிறுபான்மையோரும்:** இளம் வயதினரான மன்னரின் முடிசூட்டுவிழா முடிந்ததும், மதத்தலைவர்களும், பிரபுக்களும் உயர் ஆலோசனை மன்றத்தைக் கூட்டி, 'சான்ஸலர், பொருளாளர் இவர்களுடைய உதவிக்காக'வும் ஆலோசனை கூறவும் பன்னிருவர்களை ரீஜன்ஸி போன்று செயற்படும்படியாக ஒரு குழுவை அமைத்தனர்.[74] மூன்று மாதங்கள் கழிந்த பின்னர், ஒரு பாராளுமன்றம் கூட்டப்பெற்றது (அக்டோபர் 1377). காமன்ஸ் சபைக்கு 'நல்ல பாராளுமன்றத்தில்' உறுப்பினர்களாயிருந்த நைட்டுகளில் பெரும்பான்மையோர் அதில் இடம் பெற்றிருந்தனர். 'நல்ல பாராளுமன்றம்' லங்காஸ்டிரிய அமைச்சர் குழுவின் மீது கொடுங்குற்ற விசாரணை செய்தது—என்பது முன்னர் அறிந்ததே. காமன்ஸ் சபையினர், அவர்களது தலைவரான சர் பீடர் டி லா மேர்

என்பாரை மன்றத் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர். அவர் அப்பொழுது சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டிருந்தார். உடனேயே அரசாங்கத்தை நடத்துவதில் தங்களுக்குள்ள உரிமையை வற்புறுத்துவதற்கு முயன்றனர். அவர்களுடைய வேண்டுகோளுக்கிணங்கிப் பிரபுக்கள், மன்னருடைய பெயரால் ஒன்பது பேர்களடங்கிய ஓர் ஆலோசனைக் குழுவை நிலையாக அமைத்து, அக் குழுவினருடைய முழுமையான சம்மதமின்றி முக்கியமான எவ்வித அலுவலும் நடைபெறக் கூடாதென விதித்தனர். அத்துடன், மன்னர் இளம்பிராயத்தவராயிருக்குங்காலை, சான்ஸலர், பொருளாளர், நீதிபதிகள், மற்றும் உயர் அதிகாரிகளும் பாராளுமன்றத்தில் நியமனம் செய்யப்பட வேண்டுமென்றும் விண்ணப்பித்துக்கொண்டனர். லண்டன் மாநகர வணிகர்களான வில்லியம் வால்ஸ்வொர்த், ஜான் ஃபிலிப்பா (பின்னர் கூறப்பட்டவர் சிறந்த முதல் ஆங்கிலேய நிதி நிபுணர் எனப் பெரும்புகழுடன் விளங்கியவர்) என்பவர்களை, ஃபிரெஞ்சுப் போருக்காக அளிக்கப்பட்ட உதவி மான்யத்தைப் பெற்றுச் செலவிடுவதற்காக உறுதி எடுத்துக்கொண்ட பொருளாளர்களாக நியமனமும் செய்யப் பெற்றனர்.[75] அடுத்து நடந்த பாராளுமன்றம் (கிளௌஸெஸ்டர், 1378) வால்ஸ்வொர்த்தின் கணக்குகளை முழுமையாக வினவிய பொழுது, அரசாங்கம் அவைகளைச் சமர்ப்பித்தது. அவ்வாறு செய்தது முன்மாதிரியெனக் கொள்ள இடமளிக்காமல் அருள் புரிந்ததாகும்.[76]

**நிதி ஒதுக்கீடு : கணக்குகள் :** போரைத் தொடர்ந்து நடத்துவதால் ஏற்பட்ட பெருஞ் செலவும் (ரிச்சர்ட் மன்னர் அவரது பாட்டனாரிடமிருந்து வாரிசு முறையில் உயிலுடைமையாகப் பெற்றது), மன்னர் வயது குறைந்தவராயிருப்பதால் வழக்கமாக ஏற்படும் செலவில் சிக்கனமின்மையும், அடிக்கடி அவசரமாகப் பாராளுமன்றத்திற்கு முறையிடுவதும் தேவையாயின. பொதுமக்கள், மான்யத்தொகை அளிப்பதில் நிபந்தனைகளைச் சேர்ப்பதில் மிக்க கவனத்துடனிருந்தனர். ரிச்சர்டின் ஆட்சியில் இரண்டாவது ஆண்டில் நாடு திடீர்த் தாக்குதலுக்கு இலக்காகவிருந்தது. ஆலோசனை மன்றம், கடந்த பாராளுமன்றம் கலைந்துபோனபின்னர் அதிக நாள்களாகாதபடியால், மற்றொரு பாராளுமன்றத்தை உடனே கூட்ட விருப்பமின்றி 1379 ஜனவரியில், பிரபுக்களும் மற்றும் பெரியோர்களும் கொண்ட ஓர் உயர் ஆலோசனைக் குழுவைக் கூட்டியது. இக் குழு நாட்டின் பாதுகாப்பிற்கு ஏற்பாடுகள் செய்வதன் அவசியத்தையும், மன்னருக்கு அதற்காகப் பணம் தேவைப்படுவதையும்

கருதி, நாட்டின் பொதுமக்களின்மீது வரி விதிக்காமல் தங்களால் பரிகாரம் காணமுடியாதென அறிவித்தனர்; வரி விதிக்கப் பாராளுமன்றமில்லாமல் ஒன்றும் செய்யமுடியாது என்பதாலும், தேவை மிக நெருக்கடியாயிருந்ததாலும், கூடியிருந்த பிரபுக்கள் தங்கள் சொந்தப் பணத்திலிருந்து பல்வேறு பெருந்தொகைகளைத் தாங்களாகவே மன்னருக்குக் கடனாகக் கொடுத்தனர்; அத்துடன், 'மன்னரால் மேற்கூறிய உயர் ஆலோசனைக் குழுவின் சம்மதத்துடன் வேண்டிக்கொள்ளப்பட்ட லண்டன் நகரைச் சேர்ந்தவர்களான சான்றோர்கள், மற்றும் பல நகரங்களைச் சார்ந்த பலரும்' கடன் கொடுத்தனர். அதன் பின்னர், பிரபுக்கள் வாங்கின கடன் தொகைகளைத் திருப்பிக்கொடுப்பதற்காகவும், மேற்கொண்டு தேவைப்பட்ட பணத்தைப் பெறுவதற்காகவும் உடனடியாகப் பாராளுமன்றத்தைக் கூட்ட வேண்டுமென வற்புறுத்திக் கூறினர்.[77] இந்த யோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டு அது உண்மையான முன்னேற்றத்தையும் குறிப்பதாயிற்று. பாராளுமன்றம் கூடியவுடனேயே மன்னர், தானாகவே, எவ்வித ஒளிவுமறைவுமின்றியும், விண்ணப்பம் செய்துகொள்ளும்வரை காத்திராமலும் பொதுமக்கள் சபையில் அறிவித்தார். அதாவது, பொதுமக்களால் தணிக்கை செய்யப்படுவதற்குக் கணக்குகள் பொருளாளர்களால் சித்தமாக வைக்கப்பட்டுள்ளனவென்று அறிவித்தார்; வருவாய் பற்றிய நிலையைப் பொதுவாகப் பரிசீலனை செய்ய ஒரு குழு நியமிக்கப்பட்டது.[78] அடுத்த ஆண்டில் அதே போன்ற ஒரு குழு, ஆனால், மிகுதியான அதிகாரத்தையுடையதாய் நியமிக்கப்பட்டது.[79] அத்துடன் கணக்குகளைப் பரிசீலனை செய்யவும், பணத்தை ஒதுக்கீடு செய்யவும் காமன்ஸ் சபையினருக்கு ஐயமின்றி உரிமை நிலைபெறலாயிற்று.[80]

1381-ல் உட்குடிகளின் கலகத்திற்குப்பின் கூடிய பாராளுமன்றத்தில் பொதுமக்கள் பயன்படுத்திய வாசகம் வீரம் மிகுந்திருந்தது என்பது குறிப்பிடத் தக்கதாகும். 'நாட்டு அரசாங்கம் விரைவில் திருத்தியமைக்கப்படாவிடில், நாட்டையே முழுமையாக இழப்பதுடன் ஒரேயடியாக அழிந்துவிடும்' என அவர்களுடைய முடிவான துணிவை வெளிப்படுத்தினர்; ஆட்சி மீது கடும் புகார்களை வெளியிட்டனர். அதன் பயனாகச் சீர்திருத்தம் செய்வதற்காக ஒரு குழு நியமிக்கப்பட்டது. 'தனியாகக் கூடி, மன்னருடைய நாடு, அரசாங்கம் பற்றியும், மன்னருடையவான அரண்மனை முதலிய இரண்டையும் மதிப்பிட்டுப் பரிசீலனை செய்து, தக்க பரிகாரங்களைக் கூறும்படி' அக் குழு கேட்டுக்கொள்ளப்பட்டது.[81]

லங்காஸ்டர் கோமகனுன ஜான் ஆஃப் காண்ட், 1376-ல் நல்ல பாராளுமன்றம் அவரைக் குறித்து விடுத்த தாக்குதல்களினின்றும் விரைவிலேயே சீரடைந்து, 1386வரை உள்நாட்டு, வெளிநாட்டு வாணிகம், சமயம் முதலியவையடங்கிய ஆங்கிலேய அரசியலில் தலைமையான செல்வாக்குடன் திகழ்ந்தார்.[82] 1386-லிருந்து 1389வரை அவரது சொந்தப் படையின் பெரும்பகுதியை ஸ்பெயினுக்கு எடுத்துச்சென்று, காஸில், லியான் எனும் மாநிலங்களின் முடிகளைப் பெறும் முயற்சிகளில் ஈடுபட்டிருந்தார்.

**சஃபக் ஏர்லின்மீது துரோகக் குற்ற விசாரணை, 1386:** அவர் நாட்டிலில்லாமலிருந்தது லங்காஸ்டிரியர்களை எதிர்த்து கட்சிச் சண்டைகள் தோன்ற வாய்ப்பளித்தது. காமன்ஸ் சபையினர், சஃபக் ஏர்லும் சான்ஸலருமான மைக்கேல் டி லா போல் என்பார்மீது கொடுங்குற்ற விசாரணையை நடத்தத் தூண்டப்பெற்றனர். இக் குற்றச்சாட்டு, மன்னருடைய அமைச்சர்களை துரோகக் குற்ற விசாரணைசெய்ய, புதிதாகக் காமன்ஸ் பெற்ற உரிமையை உறுதி செய்தது. 1386 அக்டோபர் முதல் நாள் கூடிய பாராளுமன்றத்தில் இரு சபைகளும் ஒன்றுசேர்ந்து சான்ஸலரைப் பதவிநீக்கம் செய்யுமாறு கேட்டன. பாராளுமன்றத்தைத் துவக்கம் செய்தபின் எல்தாம் எனுமிடத்திற்குச் சென்றிருந்த மன்னர், அவருடைய இயல்பான வேகத்துடனும் இறுமாப்புடனும், 'அவர்களுக்காகவோ அல்லது அவர்களுடைய தூண்டுதலுக்காகவோ அடுப்பங்கரையிலுள்ள மிக்க கீழ்த்தரமான பணியாளனையும் பதவிநீக்கம் செய்யமாட்டேன்' எனக் கூறினர். இரு சபைகளும் சேர்ந்து, பாராளுமன்றத்திற்கு மன்னர் திரும்பிவந்து, வெறுக்கப்பட்ட அமைச்சரைப் பதவியிலிருந்து நீக்காதவரை எவ் வேலையையும் கவனிப்பதில்லை எனப் பதிலளித்தன.[83] இறுதியில் ஃபிரான்சு மன்னருடைய யோசனையைப் பெறப்போவதாகக் கூறி ரிச்சர்ட் மன்னர் மக்களைச் செருக்குடன் அச்சுறுத்தினர். இது மன்னருக்குப் பதில் கூறும் நிலையில், இரண்டாம் எட்வர்ட் பாராளுமன்றத்தால் பதவியிலிருந்து விலக்கம் செய்யப்பட்டதைக் குறிக்கும் நினைவுகூரத்தக்க மனுவைத் தோற்றுவித்தது. மன்னர் தொடர்ந்து அகந்தையுடனிருப்பாராலும் அதே பயன் கிட்டும் என்றும் அறிவிக்கப்பட்டார்.[84] இதன்பின் ரிச்சர்ட் இணங்கலானுர். சான்ஸலர் பதவிநீக்கம் செய்யப்பட்டு, சான்ஸலரின் விரோதியும் ஈலியின் மேற்றிராணியாருமான அருண்டேல் என்பார் அவருடைய பதவியில் நியமனம் செய்யப்பட்டார். ஏழு பிரிவுகளாகப் பிரிக்கப்பெற்ற

துரோகக் குற்ற மசோதாவில், சஃபக் ஏர்ல் பல்வேறு கொடுங் குற்றங்களுக்கும் தவருன செய்கைகளுக்கும் குற்றஞ்சாட்டப் பட்டார். சிறப்பாக, மன்னருக்கு வழங்கப்பட்ட மானியங்களி லிருந்து அவருக்கு உரியதைக் காட்டிலும் மிகையாக எடுத்துக் கொண்டதற்கும், பதவியேற்றகாலே செய்த உறுதிமொழியை மீறியதற்கும், நாட்டின் சொத்துகளே மோசடி செய்து பணக் காரரானதற்கும் குற்றஞ்சாட்டப்பட்டார். சஃபக் ஏர்ல், மிகத்திறமையாக எதிர்வாதம் செய்து சில குற்றச்சாட்டுகளி லிருந்து விடுதலே பெற்ருர். எனினும், மற்றக் குற்றச்சாட்டு களின்படி குற்றவாளியெனத் தீர்ப்பளிக்கப்பெற்று, தனது சொத்துகள் பறிமுதல் செய்யப்படும் தண்டனையையும் பெற்ருர். அத்துடன் விதிக்கப்பட்ட தண்டத்தொகையையோ அல்லது மீட்புத்தொகையையோ செலுத்தும்வரை சிறைத் தண்டனேயும் விதிக்கப்பட்டது.[85]

**சீர்திருத்தம் பற்றிய ஆணையர் குழு :** ஜான், மூன்ரும் ஹென்றி, இரண்டாம் எட்வர்ட் முதலிய மன்னர் காலத்திலும், ரிச்சர்ட் மன்னருடைய மூன்ருவது, ஐந்தாவது ஆண்டு களிலும் நடந்த முன்னிகழ்வுகளே ஆதாரமாகக் கொண்டு, காமன்ஸ் சபையினர், சீர்திருத்தம் செய்வதற்காக ஓர் ஆணேக் குழுவை நியமிப்பதற்காக மனுச்செய்தனர். மன்னர் முதலில் தனது சம்மதத்தையளிக்க முடிவாக மறுத்துப் பாராளு மன்றத்தைக் கலேத்துவிடுவதாக அச்சுறுத்தினுர். ஆனுல், இறுதியாக இணங்கும்படி கட்டாயப்படுத்தப்பட்டார். புகழ்பெற்ற பதினுன்கு உறுப்பினர்களேக்கொண்டு ஓர் ஆணேக் குழு சட்டபூர்வமாக வரம்பிலா அதிகாரங்களுடன் ஓர் ஆண்டுக் காலத்திற்கு நியமிக்கப்பட்டது.[86]

இருபது வயதாகிய ரிச்சர்ட், வயதுவராத காரணத்தினுல் அமைக்கப்பட்ட நிபந்தனேகளேத் தொடர்ந்து நடத்த மேற் கொள்ளப்பட்ட கடுமுயற்சிகளுக்கு உட்படும் எண்ணம் இல்லாதவராயிருந்தார். பாராளுமன்றம் கலேக்கப்படுமுன்னர், அதில் நிறைவேற்றப்பட்ட எதுவும் அவருடைய சிறப்புரிமை களுக்கு விரோதமாக இருக்கக்கூடாதெனவாய்மொழி வாயி லாக ரிச்சர்ட் மன்னர் ஆட்சேபனே செய்திருந்தார்.[87] சில மாதங்கள் கழிந்தபின், சஃபக் ஏர்லேச் சிறையினின்றும் விடுதலேசெய்து பழையபடி ஆதரவுகாட்டி, நாட்டிங்காம் எனு மிடத்திற்கு நீதிபதிகளே ஆணேயிட்டு வரவழைத்து, அவர்கள் முன்னிலேயில் புகழ்பெற்ற பத்துக் கேள்விகளே எடுத்துரைத் தார்.

நீதிபதிகளுக்கு விடுக்கப்பட்ட கேள்விகள், 1387 : நீதிபதிகள் அவர்களுடைய பதில்களை எழுத்துமூலம் முத்திரையிட்டுக் கொடுத்தனர் : (1) அண்மையில் ஏற்பட்ட சட்டமும், தனி ஆணை, ஆணைக்குழு முதலியவைகளும் மன்னரது சிறப்புரிமைகளுக்குத் தாழ்வையுண்டுபண்ணுவனவாயுள்ளன ; அத்துடன் மன்னருடைய விருப்பத்துக்கு மாறாக அவை செய்யப்பட்டுள்ளன ; (2) மேலே கூறப்பட்ட சட்டம், தனி ஆணை, ஆணைக்குழு முதலியவைகளை நிறைவேற்றுவதற்குக் காரணமாயிருந்தவர்கள் (3) தூண்டியவர்கள் அல்லது (4) மன்னரைச் சம்மதிக்கும்படி வற்புறுத்தியவர்கள் அல்லது (5) மன்னரை அவருடைய சிறப்புரிமையைப் பின்பற்றுவதில் தடை செய்தவர்கள் முதலியவர்கள் மரண தண்டனை பெறத் தகுதியுள்ளவர்கள். (6) பிரபுக்கள் அல்லது காமன்ஸ் சபையினருக்கு மன்னரை விடுத்துப் பாராளுமன்றத்தில் எந்த முறையில் அலுவல்கள் நடைபெற வேண்டுமென்பதுபற்றிச் சொல்லத் தகுதியற்றவர்கள் ; (7) பாராளுமன்றத்தை மன்னர், அவரது விருப்பப்படி, கலைக்கலாம் என்றும் அதன்பின் தோன்றும் நடவடிக்கைகள் அரசு குற்றமாகும் ; (8) மன்னருடைய சம்மதமின்றி அமைச்சர்கள் துரோகக் குற்றவிசாரணைக்குட்படுத்தப்படக்கூடாது ; (9) இரண்டாம் எட்வர்டைப் பதவிநீக்கம் செய்யும் சட்டத்தை முன்மொழிந்தவர் ஆணையிட்டு அழைக்கப்படவேண்டும் ; அதை நிறைவேற்றியவருடன் சேர்த்து அரசு துரோகம் செய்ததற்குத் தண்டனை விதிக்கவேண்டும் ; (10) சஃபக் ஏர்ல் மீது அளிக்கப்பட்ட தீர்ப்பு முற்றிலும் தவறானதானதால் தள்ளப்படவேண்டும் என்பனவாம்.[88] ஒருவர் நீங்கலாக மற்ற நீதிபதிகள் எல்லாம் அச்சுறுத்தப்பட்டு மேற்கண்ட பதிலுக்கு இணங்குமாறு செய்யப்பட்டனர் என அறிவித்தனர். அவர்கள் அவ்வாறு கூறியதற்கு எது நோக்கமாயிருந்தாலும் சரி, அவர்கள் அடிமை மனம் உடையவர்கள், கொடுமைபுரிய அஞ்சாதவர்கள் என்பது ஐயமின்றித் தெளிவாகும். அத்துடன் அரசியல் சட்டவிரோதமான செயல்புரிந்தவர்கள் என்று அக்காலத்திய அரசியல் சட்டத்தைக்கொண்டு அளவிடும்பொழுது தெரியவரும். அத்துடன் பாராளுமன்றத்தின் சுதந்திரம் தொடர்ந்து நிலைபெறுவதற்கும் வளர்ச்சிக்கும் முற்றிலும் முரணானது.

1875-ல் எழுதப்பெற்ற மேற்கூறிய வாசகம் சமீப காலம் வரை அந்நிகழ்ச்சியைப்பற்றிப் பொதுவாகக் கொண்டிருந்த ஒரு கருத்தை எடுத்துக்கூறுவதாகும்.[89] 1387ஆம் ஆண்டின் நோக்கத்தைப்பற்றி உண்மையான விவரத்தை அறியவேண்டு

மாயின், இக் கூற்றை மறுபரிசீலனை செய்யவேண்டியதவசிய மாகும். திரு. ஸ்டீல் என்பார், ரிச்சர்ட் மன்னர் நீதிபதிகளைக் கட்டாயப்படுத்தினர் என்பதற்கு எவ்வித ஆதாரமுமில்லை யெனவும், ஓராண்டிற்குப்பின் நீதிபதிகள் விசாரணை செய்யப் படும்வரை அவர்கள் அவ்வாறு கூறவில்லையென்றும் காட்டி யுள்ளார். அவ்வாறு விசாரணை செய்யப்படும்பொழுது நீதிபதி களின் உயிர்கள் பேராபத்தில் சிக்குவனவாயிருந்தன. அத் துடன் அவர் அக் காலத்தில் 'அரசியல் சட்டம்' எனக் குறிப் பிடுவதே ஆபத்தானது எனக் குறிப்பிடுகின்றார்;[90] பொது விஷயங்களில் வழக்கமாகக் காணப்பெறும் நடப்புகள், நடை முறை, நிறுவனங்கள் முதலியவைகளின் கலப்பால் பொரு ளற்ற கலைச்சொற்களை நீக்கினால் இக் கூற்று உண்மையென விளங்கும்.

அந்தக் கருத்தைக் கொண்டு நோக்கினால், பதினான்காம் நூற்றாண்டின் வழக்கையொட்டி நீதிபதிகளின் கருத்துகள் நியாயமானவையெனத் தோன்றலாம். பத்துக் கேள்வி களுள் 1, 2, 3, 4, 5-ம் 1322-ல் நிறைவேற்றப்பட்டயார்க்குச் சட் டத்தின் கொள்கையை உறுதி செய்வனவாயுள்ளன.[91] 6ஆம், 7ஆம் பிரிவுகள், பாராளுமன்றம் நடைமுறையில் மன்னருடை யதாயிருந்தது, மன்னருடைய விவகாரங்களைப் பற்றியதாயிருந் தது எனும் உண்மை நிலையைக் கூறுவனவாகும்; 8-ம் 10-ம் அமைச்சர்கள், மன்னருடைய அமைச்சர்கள் எனும் கொள்கைப்படி, முதலில் மன்னருக்குப் பொறுப்புடன் நடந்து கொள்ளவேண்டும் என உணர்த்துவனவாயமைந்திருந்தன. அத்துடன் துரோகக் குற்ற விசாரணையில் காணப்பெறும் தீர்வு காணப்பெறாத நடைமுறைப் பிரச்சினைகளையும் எடுத்துக் கூறின.[92] இதில் 'அரசு துரோகம்'[93] எனும் சொல் மிகவும் தீமை பயப்பதாயுள்ளது.[93] சுருங்கச் சொல்லுமிடத்து, கேள்விகளுக்கு விடையாகவுள்ளவை, அரசு வழக்கிற்கு ஏற்றவை, அக்காலத்திய வழக்கப்படி சோதனைக்குட்படுத்தப் பட்டால், முழுமையாக ஏற்றுக்கொள்ளத் தக்கனவாயிருப் பினும் வழக்காடுவதற்கு ஏற்றனவாயிருந்தன. அரசியல் சட்ட சம்பந்தமான விஷயங்கள்பற்றிய சட்டரீதியான அறிக்கை போன்று, நிலைபெற்றிருந்த பழைய விதிகளை வற்புறுத்தி, அர சியல் வளர்ச்சியிலும் கருத்துகளிலும் காணப்பட்ட மாற்றங் களைக் கவனியாது விட்டன. அரசியல் வளர்ச்சியும் கருத்து மாற்றமும், திட்டமாய்ச் சட்டரீதியாக அரசியல் சட்டத்தில், முன்னேற்றமான அரசியல் சட்ட நடைமுறைக்கு ஆதரவா யிருந்தன.[94]

**பிரபுக்களும் அப்பீல் வழக்குகளும், 1388:** மேலே கூறப்பட்ட நீதிபதிகளின் கருத்தைத் துணைகொண்டு மன்னர், அருவருக்கத்தக்க ஆணைக் குழுவினின்றும் தன்னை விடுவித்துக் கொள்ள எண்ணினார்; ஆனால், பிரபுக்களின் தலைவர்கள் முந்திக்கொண்டனர். ஆணைக் குழுவின் காலக்கெடு முடிந்தபோதிலும், அதன் உறுப்பினர்களில் சிலர் அவர்களுக்களிக்கப்பட்ட சிறப்பான அதிகாரங்களைத் தொடர்ந்து செலுத்தலாயினர். ஐந்து பிரபுக்கள் (கிளௌஸஸ்டர் கோமகன், வார்விக், அருண்டேல் ஏர்ல்கள், பின்னர் டெர்பி, நாட்டிங்காம் ஏர்ல்களும் சேர்ந்துகொண்டனர்) பத்தியுடன் மன்னரின் அமைச்சர்களில் பலரின்மீதும், அரசு துரோகத்தை ஆதரித்தவர்கள் மீதும் குற்றஞ்சாட்டினர் (அல்லது அப்பீல் செய்தனர்).[95] அப்பீல் செய்ததற்கான காரணங்கள் தெளிவானவை. அவை, மன்னரால் தொடங்கப்படாததும், தடைசெய்ய முடியாததும், விசாரணைக்குப்பின் மன்னிப்பு அளிப்பதால் பயனற்றதாகச் செய்யமுடியாததுமான ஒரே ஒரு கிரிமினல் நடைமுறை என்பன. பாராளுமன்றத்தில் விசாரணைக்காக எல்லா அப்பீல்களையும் மன்னர் மாற்றிவிட்டார். நீதிபதிகளும் ஆலோசனைக் குழுவும், அப்பீல்கள் (மறுவிசாரணைக்கானவை) பொதுச் சட்டப்படியும் சிவில் சட்டப்படியும் குறைபாடுள்ளனவென அறிவித்தனர்.[96]

தந்திரமான யோசனையைப் பிரபுக்கள் நிராகரித்ததுடன், பிரபுக்களைப் பற்றியதும் அதைப்போன்ற பொறுப்பு வாய்ந்த விவகாரங்களும் பாராளுமன்றத்தில்தான் விசாரணை செய்து முடிவு காணப்படவேண்டுமென்ற தீமை பயக்கும் பேரறிவிப்பைச் செய்தனர். அத்துடன் சிவில் சட்டமோ அல்லது பொதுச் சட்டமோ அவ் வழக்குகளின் விசாரணைக்குப் பயன்படாதெனவும், 'பாராளுமன்றத்தின் சட்டம்'தான்[97] ஏற்றதெனவும் அறிவித்தனர். பத்துக் கேள்விகளுள் பாராளுமன்றம் மன்னருடையது என ரிச்சர்ட் உரிமை கொண்டாடியதற்கு, பிரபுக்கள், பாராளுமன்றம் தங்களுடையதென்றும், மன்னருடைய அமைச்சர்களுக்கு எதிராக அது விவேகத்துடன் பயன்படக்கூடியதென்றும் விடையளித்தனர். 1341-ல் மன்னருக்கு எதிராக அமைச்சர்களைப் பாதுகாப்பதற்குப் பாராளுமன்றத்தைப் பயன்படுத்தி, பிரபுக்கள் உரிமை பாராட்டினர். அப்பீல்கள் விசாரணை செய்யப்பட்டு,[98] ரிச்சர்டின் பத்துக் கேள்விகளுக்கும் கருத்து வழங்கியவர்களான நீதிபதிகள் துரோகக் குற்றஞ் சாட்டப்பட்டு நாடுகடத்தப்பட்டனர். மான்யப் பிரக்கள் வெற்றி முழுமையாயிற்று.[99] அப்பீல் வழக்கு

விசாரணையாளர்களின் பணிக்காகப் பாராளுமன்றம் மிகப் பெரிய தொகையான இருபதாயிரம் பவுன்களை மான்யமாக அளித்தது.

இறந்தும் நாடு கடத்தப்பட்டும் ஒழிந்துபோன மன்னருடைய ஆதரவைப் பெற்றவர்களையிழந்து ரிச்சர்ட் ஓராண்டுக் காலம் கிளௌசஸ்டர் கோமகனுருடைய கட்சிக்குட்பட்டிருந்தார். கட்சிக்குள் ஏற்பட்ட ஒற்றுமைக்குறைவையும் பொது மக்கள் அபிப்பிராயத்தில் காணப்பட்ட எதிர்விளைவையும் பயன்படுத்திக்கொண்டு, தான் அப்பொழுது இருபத்திரண்டாம் வயதையடைந்துள்ளதாயும், கடந்த பன்னிரண்டாண்டுகளாக இருந்த பராமரிப்பை விலக்கியதாயும், வாரிசுதாரரைப் போன்று அவருடைய விவகாரங்களை நேரிலேயே கவனிக்கப் போவதாயும் திடீரென அறிவித்தார் (1389).

**இரண்டாம் பிரிவு, 1389–1397 :** எட்டாண்டுகள் அடங்கிய இக் காலத்தில், ரிச்சர்டுக்கும் பாராளுமன்றத்திற்குமிடையே மற்றக் காலங்களிலிருந்ததைவிட அமைதி காணப்பட்டது. ஜான் ஆஃப் காண்ட், காஸில் மாநிலத்திற்கு அவரது உரிமையை நிலைநிறுத்துவதற்காக, மேலே கூறப்பட்ட புரட்சி நடவடிக்கைகள் நிகழ்ந்த காலம் முழுவதிலும் வெளிநாடு சென்றிருந்தார். அதனுல் அவருடைய உடன்பிறந்தாரை அடக்கி வைக்க முடிந்ததுடன், எல்லாக் கட்சிகளுடைய பரபரப்பான விருப்புணர்ச்சிகளைத் தணிக்கவும் சாதகமாயிருந்தது. தவிர, பிரபுக்களுள் தலைவர்களுக்குள்ளும் தனிப்பட்ட வெறுப்புணர்ச்சிகள் ஒன்றுசேருவதற்குத் தடைசெய்தன. ஃபிரான்சுடன் தற்காலிகமாகச் செய்துகொண்ட தொடர்ச்சியான சமாதானங்கள் கடுமையாக வரிவிதிப்பதைத் தவிர்க்கத் துணை செய்தன. மன்னருடைய அரண்மனை பற்றிய செலவுகளில் தலையிடுவதைப் பாராளுமன்றம் தவிர்த்தது. ஆனுல், மன்னருக்கு நிபந்தனையுடன் மான்யத் தொகையளிக்கும் வழக்கத்தைக் கைவிடவில்லை. மான்யங்கள் பகைவன் மீது படையெடுத்துச் செல்வதற்காக வசூலிக்கப்பட்டன. நிபந்தனைப்படி நடக்காததால், பல உதவி மான்யங்கள் வசூலிப்பது பேரறிவிப்பின்மூலம் வஜாசெய்யப்பட்டது. மன்னர் வழக்கத்திற்கு மாருக மிக்க மரியாதையுடன் நடந்துகொண்டார். 1389-ல் சான்ஸலர், பொருளாளர், ஆலோசனைக் குழுவின் பல உறுப்பினர்கள் முதலியவர்களைப் பாராளுமன்றத்தில் அவர்களுடைய பதவிகளைத் துறக்குமாறு உத்தரவிட்டார். அத்துடன் அவர்கள்மீது குற்றவழக்குத் தொடரப்படுமானுல், நீதித்தீர்ப்

புக்கு உட்படுமாறும் உத்தரவிட்டார். ஒரு நாள் முழுவதும் ஆலோசனை நடத்திய பின்னர், பாராளுமன்றத்தில் கூடியிருந்த காமன்ஸ் சபையினர், அமைச்சர்கள் நடத்தையில் தவறுனது ஒன்றும் காண்பதற்கில்லையென அறிவித்ததன் பேரில், அவ்வமைச்சர்கள் அவர்களுடைய பதவிகளில் மீண்டும் அமர்த்தப் பெற்றனர். இச் சந்தர்ப்பத்தில் மன்னர் மரியாதை காண்பிக்கும் முறையில் நடந்துகொண்டதை வருங்காலத்தில் முன் னிகழ்வுபோலக் கருதக்கூடாதென்றும் உறுதி செய்தார்.[1]

**ஹாக்ஸியின் வழக்கு, 1397 :** ஃபிரான்சு அரச குடும்பத்துடன் ஒப்பந்தம் ஏற்பட்டவுடன், நாட்டில் முக்கியமான பிரபுக்களுக்கிடையே காணப்பட்ட ஒற்றுமைக்குறைவையும் பயன்படுத்திக்கொண்டு, ரிச்சர்ட் சிம்மாதனத்தில் தான் வலுவுடனிருப்பதாக மனப்பால் குடித்தார். அத்துடன் மீண்டும் ஒரு முறை அவருக்கியல்பாயிருந்த தன்னிச்சைப்படி கொடுமை நிறைந்த தன்மையிலீடுபடலாயினர். முதல் நிகழ்ச்சி ஒரு 'மசோதாவால்' தூண்டப்பட்டதாகும். அதாவது, முறையீடு அல்லது மறுப்பு விண்ணப்பம் 1397-ல் கூடிய பாராளுமன்றத்தில் பொதுமக்கள் மன்றத்தில் நிகழ்ந்ததாகும். பரிகாரம் காணவேண்டியதாகக் கூறப்பட்ட மனக்குறைகளாவன : (1) ஷெரீஃபுகளும் வாரிசில்லாதவர்களுடைய சொத்துகளை அரசருக்குச் சொந்தமாக்குவதற்கான அதிகாரிகளும், தேவையான அளவிற்கு நிலமுடையவர்களாயும் வரிப்பணம் செலுத்துகிறவர்களாயுமிருக்கவேண்டும் எனவும், ஓராண்டிற்குமேல் அவர்கள் பதவியைத் தொடர்ந்து வகிக்கக்கூடாதெனவும் கூறும் சட்டம் சரிவரச் செயல்படவில்லை. (2) ஸ்காட்லாந்திற்கும் இங்கிலாந்திற்குமிடையே ஏற்பட்ட தற்காலிக ஒப்பந்தத்திற்கு மாருக ஸ்காட்லாந்து எல்லைப்புறங்களில் ஸ்காட்டிய மக்கள் பெருந் துன்புறுத்தல்கள், மானக்கேடான செயல்களைப் புரிந்தது. (3) பிரபுக்களுடைய வேலையாள்கள் (ரீடெய்னர்கள்) பிரபுக்களின் வீடுகளில் பணிபுரிகிறவர்கள் அல்லர் என்றாலும், வில்லை அடையாளங்களைச் சட்டத்திற்கு எதிராக அணிந்துகொண்டிருந்தனர். வில்லை அடையாளங்களின் வண்ணங்களால் அச்சுறுத்துவதையும் பராமரிப்புச் செய்வதையும் தடைசெய்யச் சட்டம் இயற்றப்பட்டிருந்தது. (4) மன்னருடைய அரண்மனை சம்பந்தமான மிகுதியான செலவைக் குறைக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, பிரபுத்தன்மை படைத்த மேற்றிராணியார்களையும் அவர்களுடைய பரிவாரங்களின் கூட்டத்தையும் மன்னர் செலவில் காப்பாற்றுவதும், அத்துடன் வேலையாள்களுடன்கூடிய பல

சீமாட்டிகள் மன்னருடைய அரண்மனையில் அவருடைய செல வில் தங்கியிருந்ததுமாம்.[2] ரிச்சர்ட் மசோதாவைப்பற்றி விவாதம் செய்துகொண்டிருந்த பிரபுக்களை வரவழைத்து, அது மன்னருடைய சிறப்புரிமையை ஒடுக்குவதாகவுள்ளது என அறிவித்து, அம் மசோதாவைத் தோற்றுவித்தவரைக் கண்டறியக் காமன்ஸ் சபையினரைக் கேட்குமாறு லங்காஸ்டர் கோமகனுருக்கு உத்தரவிட்டார். பணிவார்ந்த மன்னிப்புரை களுடன் காமன்ஸ் சபையினர், திருச்சபையைச் சார்ந்த சர் தாமஸ் ஹாக்ஸி என்பவரைக் குற்றவாளியென மன்னர் உத்தர விற்குப் பதிலளித்தனர். மன்னரால் அச்சுறுத்தப்பட்டும், பிரபுக்களால் ஆதரிக்கப்படாமலும் இவ் விஷயத்தில் காமன்ஸ் சபையினர் வாளாவிருந்தனர். சட்டத்தை நன்காலோசித்து, மன்னருக்கு எதிராக, ஆட்சி அல்லது இறைமையைப் பற்றி யுள்ள எதற்கும் பரிகாரம் காண்பதற்குத் தனி மனிதனையோ அல்லது பாராளுமன்றத்தில் காமன்ஸ் சபையினரையோ தூண்டுவது அரசு துரோகக் குற்றமென மன்னர் அறிவித்தார். இரண்டு நாள்கள் கழிந்தபின் (பிப்ரவரி. 7) இச் சட்டத்தின்கீழ் அவருடைய ஒப்புதலின் அடிப்படையில் ஹாக்ஸி அரசத் துரோகக் குற்றம்புரிந்தவர்[3] என அறிவிக்கப்பட்டுத் தண்டனை யடைந்தார். இந்த நடவடிக்கை மிகவும் கொடுமைவாய்ந்தது; (நான்காம் ஹென்றியின் முதல் பாராளுமன்றத்தில், இரு சபை களிலும் இத் தீர்ப்புத் தள்ளுபடி செய்து கூறப்பட்ட வாச கத்தை நோக்கும்பொழுது)[4].

கடந்த காலத்தில் இவ் வழக்கைப் பற்றித் தவருன கருத் துகள் மிகுந்திருந்ததால் கீழ்க்காணும் குறிப்புகள் தெளிவு படுத்தப்படவேண்டியனவாகும்:[5] (1) ஹாக்ஸி காமன்ஸ் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டவரல்லர்; விதிப்படி பாராளு மன்றத்திற்கு வந்தவருமல்லர்; பொது வழக்கு மன்றத் தில் பதிவுப் பத்திரங்களுக்குப் பாதுகாப்பாளராயுமிருந்தார். (2) மன்னருடைய தாராளமான கொடைத் தன்மையால் உயர்ந்த பதவியைப் பெற்று வகித்தவரும், பதினைந்தாண்டு களாகப் பணிபுரிந்தவரும், உயர்தர சிவில் அதிகாரியாயிருந்த வருமான ஒருவரிடமிருந்து அடக்கமற்ற முறையிலுண்டான நேரிடைத் தாக்குதல் ரிச்சர்ட் மன்னரின் சினத்தைத் தூண்டி யதற்குக் காரணமாயிருந்தது எனும் உண்மை (இவ்வதிகாரி லேவாதேவி தொழிலை இலாபகரமாக நடத்தி அதன்வாயிலாக மூலதனத்தைத் திரட்டினர்). (3) அதோடு அவர்மீது அளிக் கப்பட்ட தீர்ப்பும் அச்சுறுத்துவதாயிருந்தது. ஏனென்றால், இரண்டு வாரத்திற்குள்ளாகவே ஏற்கெனவே வகித்த பல்வேறு

பதவிகளை அவர் மீண்டும் பெற்றார். (4) ஹாக்ஸியினுடைய 'அரசுத் துரோகம்' எனும் சொல்லை இவ் வழக்கிற்காகப் பிரபுக்கள் தோற்றுவிக்கவில்லை. 1387-ல் நீதிபதிகளின் கருத்துக்குத் துணைமுடிவாக அது ஏற்பட்டதாகும். நீதிபதிகளின் கருத்தை ரிச்சர்ட் மன்னர் எப்பொழுதுமே உறுதியான சட்டமாகக் கருதிவந்திருக்கிறார். (5) அது காமன்ஸ் சபையில் விசாரணையிலிருக்கும் செய்திகளைப்பற்றி மன்னர் குறிப்பிடுவதாயும், பிரபுக்களுடைய கவனத்தைத் தன்பால் ஈர்ப்பதாயும், உரிமைகளைப் பாதிப்பதாகச் சிறிது காலங் கழிந்தபின் கருதப்படுவதாயுமிருந்தது. ஆனால், 1397-ல் அம்மாதிரியான உரிமை என்பது ஒன்றுமில்லை. வழக்கை நேர்மாறாகச் செய்ததில் காணப்படும் மிகவும் தெளிவற்ற வாசகத்தைக் கொண்டு, அப்பொழுது காமன்ஸ் சபையினர் அவ்வுரிமையை ஏற்படுத்திக் கொள்ள முயன்றனர் என முடிவு செய்வது தொல்லை நிரம்பியதாகும். (6) ஹாக்ஸி பாராளுமன்றத்தின் இரு சபைகளிலும் உறுப்பினரல்லர் என்பதால் உரிமைப் பிரச்சினை எழுவதற்கே இடமில்லை.

**மூன்றாம் பிரிவு, 1397—1399:** ஹாக்ஸிமீது குற்றஞ்சாட்டியதைத் தொடர்ந்து மன்னருடைய பழிவாங்கும் திட்டம் விரைவிலேயே நிறைவேற்றப்பட்டது. முதற்படியாக கிளௌசஸ்டர் கோமகனும், வார்விக், அருண்டேல் ஆகியோரின் ஏர்ல்களும் (அப்பீல் வழக்கு விசாரணைக்காக நியமிக்கப்பட்டிருந்த ஐந்து பிரபுக்களில் மூவர்) கைது செய்யப்பட்டனர். இம்மூவரும் உருத்தெரியாத சதியில் கலந்திருந்ததாகக் கருதப்பெற்றனர். 1397ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் கூட்டப்பெற்ற புதிய பாராளுமன்றத்தின் நடவடிக்கை மிகத் தாழ்மையாயிருந்த காரணத்தால் ஈவ்ஷாம் எனுமிடத்தைச் சேர்ந்த விவரமில்லாத துறவியொருவர் எழுதியுள்ள 'இரண்டாம் ரிச்சர்டின் வாழ்க்கை'[6] எனும் நூலில், பாராளுமன்றம் மன்னருடைய படைவீரர்களால் சூழப்பட்டிருந்ததென்றும், எனவே மன்னருடைய விருப்பத்திற்கிணங்குமாறு அச்சுறுத்தப்பட்டதென்றும் குறிப்பிட்டுள்ளார். ஏற்கெனவே பொதுவாகவும் சிறப்பாகவும் வழங்கப்பட்ட மன்னிப்புகளைப் பொருட்படுத்தாது, குற்றஞ்சாட்டப்பட்ட பிரபுக்களின்மீது மீண்டும் அரசு துரோகம்பற்றிய மறுவிசாரணைக்கான வழக்குகள் மன்னருடைய நண்பர்களால் கொண்டுவரப்பட்டன. ஃகாலே (Calais) நகருக்கு அனுப்பப்பட்டு அங்குக் கொலையுண்ட கிளௌசஸ்டர் கோமகன், அவர் இறந்த பின்னர், உரிமை நீக்கம் செய்யப்பட்டார். அருண்டேல் ஏர்ல் கொலைத்

தண்டனை விதிக்கப்பட்டார்; அவரது உடன்பிறந்தவரான கான்டர்பரியின் அதிமேற்றிராணியார், பாராளுமன்றத்தில் குற்றஞ்சாட்டப்பட்டு நாடு கடத்தப்பட்டார்; வார்விக், கோபாம் பிரபுக்கள் கடல்கடந்தனுப்பப்பெற்றனர். இரண்டாவது பாராளுமன்றத்தின் கூட்டம் 1398ஆம் ஆண்டு ஜனவரி 28ஆம் நாள் ஷிரூஸ்பரி எனுமிடத்தில் மீண்டும் கூடி அம் மாத இறுதிவரையில்தான் செயல்புரிந்தது. இது இரக்கமற்ற பாராளுமன்றத்தின் (1388) நடவடிக்கைகளையும், சீர்திருத்தம் செய்வதற்காக 1386-ல் நியமிக்கப்பட்ட அதிகாரக் குழுவையும் தள்ளுபடி செய்தது. நாட்டிங்காமில் மன்னரால் கேட்கப்பட்ட கேள்விகளுக்கு அளித்த பதில்களுக்காக நீதிபதிகள் தூக்கு தண்டனை, நாடுகடத்தல் முதலிய தண்டனைகள் விதிக்கப்பட்டது நியாயம் என்றும், அது சட்டப்படியுள்ளது என்றும் அறிவிக்கப்பட்டது. அத்துடன் அப்பொழுது நடைபெற்றுக்கொண்டிருந்த பாராளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட சட்டங்கள், தீர்ப்புகள் அல்லது தனி ஆணைகள் முதலியவையெல்லாம் எக்காலத்திலும் சட்டங்களைப்போன்று கருதப்படவேண்டுமென்றும், அவைகளை சட்டரத்து அல்லது மாற்றிவிடுவதற்கு முயற்சி செய்யும் எவரையும் நாட்டிற்கும் மன்னருக்கும் அரசு துரோகம் செய்தவராக முடிவு செய்து கொலைத்தண்டனை விதிக்கவேண்டுமென வருங்காலத்தில் கூடப்போகும் பாராளுமன்றங்களையும் கட்டுப்படுத்த வேண்டுமென்றும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது.[7] இதன் பின், மன்னருடைய வாழ்நாள் முழுவதிலும் வரியை (உரோமம், பதனிடப்படாத தோல் இவைகள் மீது) மான்யமாகக் காமன்ஸ் சபையினர் அளித்ததன் வாயிலாக அபாயகரமான முன்மாதிரியை அது ஏற்படுத்தியது.[8]

**பதினெட்டு ஆணையர்களின் நியமனம்:** பாராளுமன்றத்தின் இறுதிக் கூட்டத்தின் முடிவு அரசியலமைப்பின் சுதந்திரத்திற்கு மிகப்பெருந் தீங்கை விளைவிப்பதாயிற்று. பொது விவகாரம் முடிந்தவுடன் உறுப்பினர்களை அனுப்பிவிடுவதும், பாராளுமன்றம் கூடியிருந்தபொழுது விண்ணப்பிக்கப்பட்டவைகளுக்குப் பதில் கிடைக்காதுபோனவைகளை விசாரித்து முடிவு செய்வதற்காக ஓர் ஆணையர் குழுவை நியமிப்பதும் பாராளுமன்றத்தின் வழக்கமாயிருந்தது. எனவே, பன்னிரண்டு பிரபுக்களும் ஆறு பொதுமக்களும் கொண்ட ஒரு குழு நியமனம் செய்யப்பட்டு, பாராளுமன்றம் கலைந்தபின், 'பாராளுமன்றத்தின் அதிகாரம் பெற்றதாய்'[9] அம்மாதிரியான அலுவல்களைக் கவனிக்க ஏற்பாடாயிற்று. இதற்குமுன் கொடுக்கப்

பட்டிருந்த அதிகாரங்களைத் தவிரப் பாராளுமன்றம் வேறெந்த அதிகாரத்தையும் இக் குழுவிற்கு அளிக்கவில்லையென்பது புலனாகிறது. எனினும், அந்தப் பதினெட்டு உறுப்பினர்களைக் கொண்ட குழுவை நியமனஞ்செய்வதுபற்றிய சொற்கள் குறிப் பற்ற எல்லையுடையனவாயிருந்தன ; குழுவிற்கு அளிக்கப் பட்ட அலுவல்கள் பற்றிய குறிப்புகளை விரிவுபடுத்துவதற் காகப் பாராளுமன்றத்தின் பட்டியலை மன்னர் திருத்தஞ்செய் தார் என நம்புவதற்குக் காரணமிருந்தது ; அவரது வாக்கு மூலத்தில் இக் குற்றச்சாட்டுக் குறிப்பாகச் செய்யப்பட்டது.[10]

ஹெரிஃபோர்டு, நார்ஃபக் கோமகாருக்கிடையே ('அப்பீல் விசாரணைக் குழுவில்' எஞ்சியிருந்த இருவர்) தோன்றியிருந்த தெளிவில்லாத சச்சரவை ஒரு காரணமாகக் கொண்டு அவ்விருவரையும் — அவர்களுடைய வழக்கு மறு விசாரணையை மற்போர் வாயிலாக முடிவுசெய்யப் பதிவு செய்துகொள்ளும் தறுவாயில் — ரிச்சர்ட் நாடு கடத்தினர். அப்பொழுது பகைவர்கள் எல்லோரையும் ஒழித்து மன்னர் வெற்றியுடன் விளங்கினார். வாழ்நாள் முழுவதும் கிடைக்கக் கூடிய வருவாயை மானியமாகப் பெற்றதால், உடனடியாகப் பாராளுமன்றத்தைக் கூட்டவேண்டிய தேவையும் மன்னருக் கில்லாமலிருந்தது. மன்னருடைய சிறப்புரிமை அவருடைய முன்னோர்கள் காலத்திலிருந்ததைப் போலவே[11] எவ்விதத் தடையுமின்றிச் சுதந்திரமாகவுள்ளது என இரு சபைகளும் முன்னர் அறிவிப்புச் செய்திருந்ததை, சிறப்புரிமையைக் கட்டுப்படுத்துவதற்காக இயற்றப்பட்ட சட்டங்கள் முழுமை யையும் புறக்கணிக்கத் தனக்கு அதிகாரம் அளிக்கப்பட்டதாக மன்னர் கருதினர்.

**அவரது ஆட்சி நீக்கம் :** ரிச்சர்ட் பின்பற்றிய கொடுங்கோன் மையும், அச்சுறுத்திக் கைப்பற்றும் முறையும், நாட்டில் எல்லாப் பிரிவினர்களுடையவும் ஆதரவை இழக்கச் செய்த துடன், அவருடைய ஆட்சி நீக்கத்திற்கும் வழி செய்தது. 1386-ல் மன்னரை ஆட்சி நீக்கம் செய்யவேண்டிய தருணம் வந்துள்ளதாகப் பாராளுமன்றம் அறிவித்தது. அப்பொழுது, 'நாட்டு மக்களுடைய இசைவையும் சம்மதத்தையும் பெற்று மன்னரை ஆட்சி நீக்கம் செய்து அவருக்குப் பதிலாக அரச மரபைச் சேர்ந்த வேறொருவரை அமர்த்துவது சட்டப்படி செல்லத்தக்கது' எனக் கருதப்பட்டது. பாராளுமன்றத்திற் குரிய மிகப்பெரிய இவ்வதிகாரத்தைப் பத்தியுடன் பயன் படுத்துவதில், அக் காலத்திய அரசியல் சட்ட வழக்கறிஞர்

களின் கருத்தேற்றங்களைக் கையாளுவதில் ஒழுங்கான முறை யுடனும் முன்னெச்சரிக்கையுடனும் பாராளுமன்றம் கவனம் செலுத்தியது. தனது முடியைத் துறக்குமாறு ரிச்சர்ட் தூண்டப்பெற்றும், லங்காஸ்டரைச் சேர்ந்த ஹென்றி அம் முடிக்கு உரிமை பாராட்டியபோதிலுங்கூட, மன்னரின் பதவி நீக்கம், சிம்மாதனம் காலியானதும் அதையடுத்து ஹென்றி மன்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்டது முதலியவை பாராளு மன்றத்தின் தினசரிக் குறிப்பேடுகளில் மிகத் தெளிவான சொற்களில் பதிவு செய்யப்பட்டுள்ளன.[12]

## குடியானவர்கள் கலகம், 1381

1381-ல் தோன்றிய நில அடிமைகளின் மாபெருங் கலகம், நைட் வீரர்களுடையவும் நகரவாழ் மக்களுடையவும் கவனத்தைத் தவிர்க்க முடியாதவாறு ஈர்த்தது. அதுவரை அவர்களுடைய சொந்த அரசியல் உரிமைகளைப் பாதுகாப்பதி லேயே கண்ணுங் கருத்துமாயிருந்த அவர்களுடைய கவனத்தை, விவசாயம் செய்யும் கூலியாள்களிடையே வளர்ந்து கொண்டிருந்த மனநிறைவின்மை கவரலாயிற்று. நாட்டினத் தில் பெரும்பான்மையோராயிருந்த அவர்களுக்கு அரசியல் உரிமைகள் இல்லாமலில்லையென்றாலும், அவர்கள் தங்க ளுடைய தொழிலின் சுதந்திரத்திற்குத் துன்பத்தை உண்டு பண்ணக்கூடிய தடைகளினால் அல்லலுற்றும் பல சமயங்களில் அடிமைகளாயும் நடத்தப்பட்டனர்.

நார்மானியர்களின் வெற்றிக்கு வெகுகாலத்திற்கு முன்ன தாகவே, நிலத்தை உழுது பயிரிடும் சுதந்திரமான குடியான வர்களில் பெரும்பான்மையோரின் நிலைமை நாளுக்கு நாள் மிகவும் தாழ்மையுற்றது.[13] அவர்கள் சுதந்திரமானவர்களா யிருந்தும், அவரவர் விரும்பிய எத்தொழிலையும் பின்பற்றுவதற் குரிய உரிமையிழந்தவர்களாயிருந்தனர். அத்துடன் அவர்கள் தங்களுக்காகவும் தங்களுடைய பிரபுக்களுக்காகவும் உழுது பயிரிட்டுவந்த நிலங்களை விட்டுவிட முடியாத நிலையிலுமிருந் தனர். வெற்றி சீலரான வில்லியம் மன்னரின் சட்டங்கள் என அழைக்கப்பட்டவை, குடியானவர்களும் நிலச் சொந்தக் காரர்களும் அவரவர் செலுத்த வேண்டியதையோ அல்லது நிச்சயிக்கப்பட்டதையோ விடுத்து மேற்கொண்டு துன்புறுத் தப்படக்கூடாதெனவும், குடியானவர்கள் அவர்கள் செய்ய வேண்டிய ஊழியங்களைச் செய்யும்வரை அவர்களை அவர்கள்

பயிரிடும் நிலங்களிலிருந்து விலக்குவதற்கும் பிரபுக்களுக்கு உரிமையில்லை[14] யெனவும் அறிவித்தபோதிலும், புதிதாக ஏற்பட்ட இராணுவத் தலைவர்களின் கொடிய ஆட்சி முறையின்கீழ் எல்லாக் குடியானவர்களுடைய பதவிகளும் மிகத் தாழ்வுற்று இருந்தன. நார்மானியர்களின் வெற்றியையடுத்து வந்த நூற்றாண்டில் நாடு முழுவதிலும் காணப்பட்ட சிறிய பெரிய 'பண்ணைகள்,' நார்மானியப் பெயரால் அழைக்கப்பட்ட போதிலும், நார்மானியர்களால் தோற்றுவிக்கப்பட்டவையல்ல. ஆனால், நார்மானிய வெற்றியின் பயனாக, படைமானிய முறையின்கீழ் எல்லா நிலங்களும் எவ்வித விலக்குமின்றிக் கொணரப்பட்டதால், சிறு நிலச்சொந்தக்காரர்கள், பண்ணைப் பிரபுக்களின் ஆதிக்கத்தின்கீழ்[15] வரும்படி நேர்ந்திருக்க வேண்டும். விருப்பப்படி எங்கு வேண்டுமானாலும் செல்லுவதற்குரிமை பெற்றிருந்த சுதந்திரமான குடியானவர்கள் அப்பொழுதைய நிலையில் நிலத்தைவிட்டு வெளியேற முடியாத நிலையிலிருக்க வேண்டியதாயிற்று. குறிப்பிடப்பட்ட பணிகளை அவர்களாகவே செய்யவேண்டியதற்குப் பதிலாக அப்பொழுது பிரபுவின் விருப்பப்படி வேலை வாங்கும்படியான நிலை ஏற்பட்டது. ஒருசில குடியானவர்கள் தங்களது (சுதந்திரக் குடியானவர்கள்) சுதந்திரத்தைக் கைக்கொண்டிருந்தனர். தொகை செலுத்துவதோடு சேர்த்தோ அல்லது இல்லாமலோ குறிப்பிட்ட விவசாயப் பணிகளைச் செய்வதன் வாயிலாகக் குத்தகையைச் செலுத்தி மானியங்களை அனுபவித்துக்கொண்டு ஸாக்மென் பதவியிலிருந்தனர். மற்றவர், வில்லன்கள் எனும் நிலத்தோடு இணைக்கப்பட்ட அடிமைகளாக, விவசாயப் பணிகளைத் தங்களுடைய பிரபுக்களின் நிலங்களில் செய்து வந்தனர். இந்த வில்லன்களில் பலதரப்பட்டவர்களிருந்தனர். ஸாக்மென் பதவியைப் போன்று சிலர் அதிகமான அளவு நிலங்களைப் பெற்று முதன்மையாயிருந்தனர். மற்றும் சிலர், பார்டரி, காட்டரி அல்லது காட்செடி எனும் பெயர்களுடன் (எல்லைப்புறம், சிறு குடிசைகளில் வாழ்கிறவர்கள்) மிகவும் குறைவான நிலங்களையுடையவர்களாய் வாழ்ந்தனர். இவர்கள் காலப்போக்கில் செர்ஃபுகள் எனும் நிலத்தைச் சார்ந்த அடிமைகளாகக் கருதப்பட்டனர். டூம்ஸ்டே குறிப்பெடுத்ததன் பின்னர், வில்லன்களிலிருந்து பிரிந்திருந்த தனி வகுப்பு எனும் நிலையை அவர்கள் இழந்தனர்.

**வில்லன்களின் நிலை :** இரண்டாம் ஹென்றியின் காலத்து ஆசிரியரான கிளன்வில் என்பார், நாட்டு மக்கள், அவர்களுடைய பிரபுக்களையே முழுமையாகச் சார்ந்திருந்தன

ரென்றும், வில்லன் எனும் அடிமைத் தன்மையிலிருந்து சொந்த விடுதலையைப் பணம் கொடுத்து விலைக்குப் பெறுவதற்கு எவ்விதமான சொத்துகளின்றியும் அவ்வாறு விலை கொடுத்துப் பெறுவதற்குச் சட்டப்படி இயலாதவர்களாயுமிருந்தனரென்றும் கூறியுள்ளார்.[16] இங்கு அடிமைத்தனத்தைக் குறித்து ரோமானியர்களின் சட்டத்தினுடைய செல்வாக்கைக் காணக்கூடும்.[17] இடைக்காலத்திய சட்ட அறிஞர்கள், வில்லன்களின் தன்மை ரோமானியர்களுடைய அடிமைத்தனத்தைப் போன்ற கூறுடையது என மிகைபடக் கருதினர்; சட்டப்படியுள்ள நிலையில் எவ்வித வேறுபாடுமின்றி மிகச் சரியான முறையில் இக் கருத்து அமைந்திருப்பினும், வில்லன்களைப் பற்றி நாம் வரலாற்று மூலங்கள் வாயிலாக அறிந்துகொள்ளும் செய்திக்கு முரண்படுவதாயுள்ளது; பிராக்டன் போன்ற சட்ட அறிஞர்கள் வில்லன்கள் சொத்துடையவர்களல்லர் எனப் பொதுவாகக் குறிப்பிட்டிருந்தும், அவர்கள் சொத்துடையவர்களாயிருந்தனர் என்பது ஆதாரங்களின் மூலம் நிலைநாட்டப்பெற்றுள்ளது. டர்ஹாமைச் சேர்ந்த சைமன் என்பவர் எழுதியுள்ள 'காலவழிச் செய்திக் கோவை'யில் (1096), 'காப்பாளர்கள், மான்யப் பிரபுக்கள், உதவிக் காப்பாளர்களையும் நாட்டுப்புற மக்களையும் கொள்ளையடித்து, மன்னருக்கு மிகுந்த தங்கத்தையும் வெள்ளியையும் கொணர்ந்தனர்' என நாம் அறிகிறோம்.[18] ஸ்கக்காரியோ எழுதியுள்ள உரையாடலில், மன்னருக்குக் கடன் கொடுத்தவர்களில் போர்வீரர்கள் அல்லது வேறு சுதந்திரமான அல்லது பதிவு செய்யப்பட்ட போர்வீரர்கள் கூறப்பட்டுள்ளனர்.[19] மகாசாசனத்தின்படி (1215, விதி 20), மன்னருக்குச் சேரவேண்டிய தண்டப் பணத்திற்கான நில அடிமையினுடைய வண்டிக் கூலியைக் (உழவுக்கூலி) கைப்பற்றுவது சிறப்பாக விலக்கப்பட்டிருக்கிறது. 'பதினைந்தில்' ஒரு பகுதியை வசூலிப்பதில் 1225-ல் மூன்றாம் ஹென்றியால் வெளியிடப்பட்ட ஆணைப்படி, தலப்படையில் பணிபுரிவதற்காக உறுதி எடுத்துக்கொண்டு, வைத்துள்ள போர்க்கலங்களை வரிவிதிப்புக்குட்படுத்தக் கூடாதென விலக்களிக்கப்பட்டுள்ளது. அத்துடன் வில்லன்களுடைய வீட்டுச் சாமான்கள்மீதும், கால்நடைகளுக்கானவும் விற்பனைக்கு இல்லாதனவுமான வைக்கோல், உலர்ந்த தீவனம் போன்ற வேறு உணவுப் பண்டங்கள் மீதும் வரிவிதிப்பது விலக்குச் செய்யப்பட்டிருந்தது.[20] 'அதிமேற்றிராணியார்கள், மேற்றிராணியார்கள், மடாலயத் தலைவர்கள், சமயத் தலைவர்கள், லௌகீகர்களின் சொத்துகளை வாரிசு

முறையில் பெற்ற சமயஞ் சார்ந்தவர்கள், ஏர்ல்கள், மான்யப் பிரபுக்கள், நைட்டு வீரர்கள், சுதந்திர மான்யதாரர்கள், அடிமைகள்'[21] முதலியோர்களால் மான்யமாக 'நாற்பதில் ஒரு பாகம்' அளிக்கப்பட்டதாக 1232-ல் அறிவிக்கப்பட்டுள்ளது.[22] ஐந்தாண்டுகள் கழிந்து, சுதந்திர மான்யக் குடியானவர்கள், தங்களுக்காகவும் நாட்டுப்புறத்தைச் சேர்ந்த தங்கள் சொந்தக்காரர்களுக்காகவும் முப்பதில் ஒரு பாகத்தை மான்யமாகவழங்கியுள்ளதாக அறிவித்தனர்; வில்லன்களுக்கும் நாற்பது பென்சு மதிப்பிற்கும் குறைவாகச் சொத்துள்ள ஏழ்மையானவர்களுக்குமிடையே வித்தியாசம் கூறப்பட்டுள்ளது. ஏழைகள் எவ்வித வரியும் செலுத்த வேண்டியதில்லை என இருந்தது.[23] பதின்மூன்றாம் நூற்றாண்டு முழுவதிலும், பொது நீதிமன்றங்கள், சமூகத்தின் பழக்கத்திற்கு முற்றிலும் நேர்மாறான கொள்கையைப் பின்பற்றிவந்தன. அடிமையாயிருந்தவர்கள், அவர்களுடைய சுதந்திரத்தைப் பெறுவதற்காகப் பெருந்தொகையைச் செலுத்த விருப்பமுடையவர்களாயும் இயல்புடையவர்களாயுமிருந்தனர். அவர்கள் சில சமயங்களில் மேலான சிவில் அதிகாரிகளாயினர்—எனினும், அவர்களுடைய நிலங்களும் சொத்துகளும் சட்டப்படி அவர்களுடைய பிரபுக்களுக்குச் சொந்தமானவையாகவே இருந்தன.[24]

**'வில்லன்' எனும் சொல்லின் பொருள் மாற்றம்:** டூம்ஸ்டே புத்தகக் குறிப்பு முடிவானதற்கும், மூன்றாம் ஹென்றியின் காலத்தில் பிராக்டன் எழுதியதற்கும் இடைப்பட்ட காலத்தில் 'வில்லனஸ்' (நாட்டுப்புறத்தில் வளர்ந்தவன்) எனும் சொல்லின் பொருள் மாற்றமடைந்துள்ளது என்பது தெளிவாகிறது. டூம்ஸ்டே தொகுக்கப்பட்ட காலத்தில், கீழ்த்தரமான பணிகளைச் செய்துவந்தவர்கள் சுதந்திரமாயிருந்தனர்; அத்துடன் அடிமைகள் எனும் இனத்தவரிடமிருந்து தனியாகப் பிரிந்து காணப்பட்டனர். ஆனால், அடிமைகளும் வில்லன்களும் அவர்கள் வாழ்க்கையை நடத்துவதற்கானவற்றை நிலங்கள் வாயிலாகப் பெற்றிருந்தனர். அவ்வாறு பெறப்பட்ட நிலங்கள் அளவில் மாறுபட்டிருந்தும், வில்லன் உழவு முறைப்படியே அனுபவிக்கப்பட்டுவந்தது. மான்யமாகப் பெற்ற நிலங்களுக்கு அவர்கள் ஒரேமாதிரியான பணிவிடைகளைச் செய்தனர். இப் பணிகளின் தன்மையில் மாறுபாடுகள் இருந்தன எனினும், பணிவிடைகள் வாயிலாகத்தான் மான்யங்களை அனுபவித்தனர். அடிமைகள் என்ற பதவியிலிருந்து — உட்குடியானவர்களில் மிகத் தாழ்மையான பிரிவைச் சேர்ந்தவர்கள்—'வில்லன்' எனும் பொதுவான பெயர் எளிமையான

கருத்தையும் பொருளையும் நாளடைவில் பெற்றதாகத் தோன்றுகிறது; அத்துடன் இறுதியில் தனி மனிதனின் அடிமைத் தனமான பணிவிடை செய்யும் நிலையையும் குறிப்பதாயிற்று.[25] 'அடிமைகள்' எனும் சொல் ஒரு வகுப்பினரைக் குறிப்பிடுவதிலிருந்து மறைந்து ஒழிந்தது. ஆனால், வில்லன்கள் எனப்படுவோர், அச் சொல்லின் கீழ்த்தரமான கருத்துப்படி, நாட்டில் தோன்றிய இனத்தைச் சேர்ந்தவர்களாகக் குறிப்பிடப்பட்டனர்—பிறப்பால் வில்லன்கள் என்றும், உழுதொழிலால் அன்று என்றும் — அல்லது வில்லன்கள் எனுஞ் சொல்லுடன் அடிமை எனும் சொல் சேர்க்கப்பட்டுக் குறிப்பிடப்பட்டனர். இச் சொல் இரு பொருள்களைக் கொண்டிருந்தது என்பது ஒருசில ஹண்ட்ரட் எனும் நிலப்பிரிவுகளைச் சார்ந்த பட்டியல் குறிப்புகளில் (முதலாம் எட்வர்ட்) வில்லன் அடிமை எனவோ அல்லது நாட்டில் தோன்றியவன் (சுதேசி) எனவோ[26] குறிப்பாகக் கூறப்படுவதிலிருந்து தெளிவாகிறது. ஆனால், மற்றொரு புறத்தில் அக்காலத்திய 'குரியா ரெஜிஸ்' எனும் அரசரது நீதி மன்றத்துத் தீர்ப்புகளில் வில்லன் எனும் சொல் தனிமனிதனுக்குரிய அடிமைத்தனத்தைக் குறிப்பதாகப் பயன்படுத்தப் பட்டுள்ளது.[26] சுதந்திரமானவர் எவரும் வில்லன் முறையில் நிலங்களையோ சொத்துகளையோ வைத்திருக்கலாம் என்று பிராக்டன் (மூன்றும் ஹென்றி) தெளிவாகக் கூறியுள்ளார். அப்படியாயின், அவ்வாறு நிலம் கொண்டுள்ளவருடைய தனிப்பட்ட சுதந்திரம், நிலத்தைச் சார்ந்துள்ள பணிவிடைகள் செய்வதுடன் சேர்ந்து காணப்பட்டது.[27] பிராக்டன் வில்லன் முறைகளில் இரு பிரிவுகளைக் கூறுகிறார். ஊழிய மான்யம் ஒன்று, முழு அடிமைபோன்றது மற்றொன்று. ஊழிய மான்யம் பெற்றவர்கள் குறிப்பாக மன்னருடைய தனியுரிமை நிலங்களை அனுபவித்து வந்தனர்; எனவே, குறிப்பிட்ட ஊழியங்களைச் செய்ய வேண்டியவராயிருந்தனர். அவ்வாறு குறிப்பிட்ட ஊழியத்தைச் செய்துவரும்வரை, அவர்களது விருப்பத்திற்கு மாறாக அவர்களை நிலத்தை அனுபவிப்பதிலிருந்து தடை செய்ய முடியாது. ஆனால், அவர்களாகவே விரும்பினால், நிலத்தை எப்பொழுது வேண்டுமானாலும் விட்டு விடலாம். அடிமைகளான நிலமான்யதாரர்களைப் போலவே, அவர்களுக்குச் சொந்தமாயிருந்த நிலங்களையோ அல்லது அவைகளில் எவ்விதமான உரிமையையோ பிறரொருவருக்கு மாற்றிக் கொடுக்கக்கூடிய அதிகாரம் அவர்களுக்கில்லை. பிரபுவினுடைய சம்மதத்துடன் அனுபவிக்கும் நிலங்களைப் பிரபுவினிடமோ அல்லது அவருடைய கண்காணிப்பாளரிடமோ விட்டுவிடலாம். யாருக்குக் கொடுக்க வேண்டுமென

விரும்பி ஒப்படைக்கப்பட்டதோ அவருக்கு அந் நிலங்களைப் புதிதாக ஊழிய மான்யமாகப் பிரபு மறுபடியும் அளிக்கலாம். 'அடிமை'யான வில்லன்கள் பிராக்டனின் கருத்துப்படி எல்லையில்லா ஊழியங்களையும் பணிவிடைகளையும் செய்ய வேண்டியவராவர். 'இவர்கள் மறுநாள் என்ன செய்யவேண்டும் என்பதைக்கூடச் சற்றும் முன்கூட்டி யறியாதவர்கள்' எனக் கூறப்படுகிறது. அவர் சாகுபடி செய்துவரும் நிலத்தில் எவ்வித உரிமையும் அவருக்குக் கிடையாது. நிலத்தைச் சார்ந்த அடிமையாக அவர் கருதப்பட்டார்.[28]

**பண்ணை :** மேனர் பண்ணைச் சொத்து, இக்காலத்திய நிலஞ் சார்ந்த எஸ்டேட்களிலிருந்து பல்வேறு முறைகளில் மாறுபட்டிருந்தது என்பதை நினைவில் கொள்ளவேண்டியது முக்கியமானதாகும். 'மேனர் என்பது ஒரு பரப்புள்ள நிலத்தைக் குறிப்பிடுவதாகாது. பிரபு விருப்பம் போன்று அதை உழுது பயிரிடுவதோ அல்லது தரிசாகப் போடுவதோ அல்லது மக்கள் குடியேறி வீடுகள் கட்டுவதற்கு அளிப்பதோ, அல்லது ஒன்றும் பயிரிடாமல் பயனற்ற நிலமாக ஆக்குவதோ முடியாது. மேனர் பிரபுவிற்குச் சொந்தமான இராச்சியம் அல்லது அரசு போன்றிருந்தது. பிரபு அதன் மேலான தலைவர். அதில் வாழ்ந்த பல்வேறு தகுதியுடையவர்கள் அப் பிரபுவின் குடிகளாவர். எனினும், பிரபுவினுடைய அதிகாரம் வரம்பற்றதன்று; அது நாட்டின் சட்டம், பழக்கம் இவைகளால் வரையறுக்கப்பட்டிருந்தது ...... தனியுரிமை நிலம், வரையறை செய்யப்பட்ட நிலம்[29], தரிசு நிலம் முதலியவையெல்லாம் பிரபுவுக்குச் சொந்தமானவை. வரையறை செய்யப்பட்டுள்ள நிலங்களின் அனுபோக உரிமை, சில நிபந்தனைகளுக்குட்பட்டு, குடியானவர்களைச் சேர்ந்தவையாயிருந்தன. தரிசு நிலங்கள் அவைகளைப் பயன்படுத்துவதிலிருந்து குடியானவர்களைத் தடை செய்யும் அளவிற்குப் பிரபுவிற்குத் தனிப்பட்ட சொத்தாயிருக்கவில்லை.'[30]

வழக்கமாகிற சட்டத்தின் இயற்கையான போக்கு ஒவ்வொரு மேனரையும் உறுதிசெய்யும் வகையில் செயல்பட்டது; ஊழியம் பற்றிய உறுதி, நில உரிமை பற்றிய உறுதி போன்றவை. எனவே, ஹண்ட்ரட் பட்டியல்களிலும், பதின்மூன்றும் நூற்றாண்டைச் சேர்ந்த நிலம் பற்றிய ஆவணங்களிலும், நிலத்தை உழுது பயிரிடும் குடியானவர்கள் பலதரப்பட்டவர்கள் செய்யவேண்டிய பல்வேறு ஊழியங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன; பிரபுவின் விருப்பப்படி, வரி செலுத்த

வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருந்த வில்லன்கள் சாகுபடி சம்பந்தமாகச் செய்யவேண்டிய ஊழியங்கள், எந்த அளவிற்கு எம் முறையில் புரியப்பட வேண்டுமெனத் திட்டவட்டமாக முடிவு செய்யப்பட்டிருந்தன. விவசாயிகளின் நிலையைப் பாதிக்கு மளவிற்குச் சாதகமாக மற்றொரு நிலையுமிருந்தது. பண்ட மாற்று முறைக்குப் பதிலாக, பணப் பொருளாதாரம், ஐரோப்பாக் கண்டத்தில் அடங்கியுள்ள பெரிய நாடுகளைக் காட்டிலும் முன்னதாகவே மிகப் பரவலாக ஏற்படுத்தப்பட்டிருந்தது.[31]

**சுதந்திரமான தொழிலாளர்களின் தோற்றம்:** மேனர் பண்ணைகளின் சொந்தக்காரர்களான பிரபுக்கள், மிகத் தொன்மையான நிலஞ்சார்ந்த ஊழியங்களுக்குப் பதிலாகப் பணம் செலுத்துவதை இலாபகரமானதாயும் மிகவும் சௌகரியமானதாயும் கண்டனர். குடியானவர்களும் அம் மாதிரி பணம் செலுத்துவதைப் பெரிதும் விரும்பினர். அதன் பயனாக அவர்கள் நேரிலேயே செய்யவேண்டிய ஊழியங்களி லிருந்து விடுபட வழியேற்பட்டது. இம் மாதிரி பொருள் கொடுத்து ஊழிய விடுதலை பெற்றது, பன்னிரண்டாம் நூற்றாண்டின் நடுப்பிரிவிலிருந்து பதினைந்தாம் நூற்றாண்டின் நடுப் பாகத்திற்குள்ளாகச் சிறிதுசிறிதாக முடிவுற்றது.[32] இம்முறை யால் சுதந்திரமான தொழிலாளர்கள் நிறைந்த ஓர் இனம் ஏற்பட்டது; மேனர்களுடைய பிரபுக்களும், இக்காலத்திய நிலப் பிரபுக்களைப் போன்று அதிகாரம் செய்ய முடியாதவாறு கூலிக்கு ஆள்களை அமர்த்தவேண்டிய நிலையை அடைந்தனர். இம்மாதிரியான மாற்றம் மெதுவாக நடந்ததுடன் பல்வேறு வகையாயுமிருந்தது. சிற்சில சமயங்களில் பணம் கொடுப்ப தன் வாயிலாக ஊழியஞ் செய்வதை மாற்றிக்கொள்ளுவது முழுமையாயும் சாசுவதமாயுமிருந்தது. அவற்றில் சில ஓரளவு முழுமையாயும், மற்றும் சில ரத்து செய்யக்கூடியனவாயுமிருந்தன. பணம் செலுத்தியதற்குப் பதிலாக வில்லன்கள் அவர்கள் புரியவேண்டிய ஊழியங்கள் சிலவற்றிலிருந்து விடுதலையளிக்கப்படலாம் எனினும், மற்றவைகளை—மிகவும் தொல்லையை உண்டுபண்ணுபவைகளை — அவர்கள் செய்யவேண்டுமெனக் கட்டாயப்படுத்தப்பெற்றனர். ஊழியத்திற்கு ஈடாகப் பணம் செலுத்தி மாற்றிக்கொள்வதும் தற்காலிகத் தேவையாக ஏற்றுக்கொள்ளப்பட்டது எனினும், பிரபுவினுடைய நலனை முன்னிட்டுக் கைவிடத்தக்கதாயுமிருந்தது. இவ் ஊழியமாற்று முறை ஒரே மாதிரியாகவில்லை; பிற்காலத்தில், பணத்திற்குப் பதிலாகப் பழையபடி ஊழியஞ் செய்யும் வழக்கத்திற்குச் சில எஸ்டேட்டுகள் திரும்பிக்கொண்டிருந்தன. அவ்வாறு

செய்யப்படவேண்டிய ஊழியங்களை மிகுதிப்படுத்துவதும் காணப்பட்டன. பிரபுக்களின் விருப்பப்படி குடியானவர்களா யிருக்கும் நிலையைத் தாண்டி, நகல் பட்டாதாரர்களாய், குறிப் பிடப்பட்ட ஊழியங்களைச் செய்வதற்குட்பட்டு நிலங்களை வாரிசு முறையில் பெறும் நிலையையடைய வெகுநாள்க ளாயின.[33]

தொழிலாளர் சட்டம்: 1348-ல் ஏற்பட்டதும் அச்சத்தை விளைவித்ததுமான கொள்ளைநோய், கூலிவேலை செய்கிறவர் களான புதிய இனத்தின் எண்ணிக்கையை வெகுவாகக் குறைத்ததோடன்றி, அவர்களுடைய கூலியையும் இரட்டிப் பாகச் செய்தது. இது, நிலத்திற்காகச் செய்யவேண்டிய ஊழியங்களுக்குப் பதிலாகப் பணத்தைக் கொடுத்து மாற்றிக் கொள்ளக் குடியானவர்களை அனுமதித்த பெருநிலச்சுவான் தாரர்களுக்குப் பேரிழப்பையுண்டுபண்ணியது. அரசாங்கமும், தொழிலாளர்களைத் துன்புறுத்தும் நோக்கமின்றி, பொருளா தாரத் துறையில் ஏற்பட்ட ஒரு பெருநெருக்கடியைத் தவிர்க்கும் நோக்குடன், 1349-ல் ஓர் அவசரச் சட்டத்தைக் கொணர்ந்தது. அத்துடன் 1351-லிருந்து 1368-க்கிடையில் மிகவும் கடுமைவாய்ந்த சட்டங்களை ஒன்றன்பின் ஒன்றாக ஏற்படுத்தியது. இச் சட்டங்களின்படி, நல்ல உரமான உடலைப் பெற்றிருந்தவனும், தனக்குச் சொந்தமான எத் தொழிலையும் செய்து பிழைக்க முடியாதவனும், அவனுடைய ஊழியத்தை விரும்புகிற எந்தப் பிரபுவினிடமும் கூலிக்கு ஊழியஞ் செய்யக் கட்டாயப்படுத்தப்பட்டதுடன், அதற்குமுன் வழக்கத்தி லிருந்தோ அல்லது மூன்றாண்டுகளுக்கு முன்னதாக என்ன கூலி கொடுக்கப்பட்டதோ அதே கூலியைப் பெறுமாறே கட்டாயப்படுத்தப்பட்டான். அதே சமயத்தில் உணவுப் பொருள், மற்றும் இன்றியமையாதவான தேவைப்பொருள் களின் விலைகளும் கட்டுப்படுத்தப்பட்டு வரையறைக்கப் பட்டன. இச் சட்டங்கள், சரிவர அமல் செய்யப்படவில்லை யெனப் பொதுமக்கள் அடிக்கடி குற்றஞ்சாட்டியதிலிருந்து, அவைகளின் நோக்கங்களில் தோல்வியுற்றனவென்பது தெளி வாகிறது. அத்துடன் குடிமக்களுடைய மனநிறை வின்மையை மேலும் மிகுதியாக்கியது.[34] இக் காலத்தில் ஏராளமான மேனர்களில் பழைய ஊழியங்கள் செய்யப்பட வேண்டியனவாயிருந்தன. எனினும், வில்லன்கள் அதிகக் கூலி பெறும் எண்ணத்தால் ஈர்க்கப்பட்டும், பழைய முறைப்படி சில ஊழியஞ் செய்ய மனமில்லாமலும், கருங்கொள்ளை நோயின் பயனாக ஏற்பட்ட பொதுவான அமைதியின்மைக்

கருத்துகளால் பீடிக்கப்பட்டும் அடிக்கடி தங்கள் நிலங்களை உழுது பயிரிடாது, கூலிவேலை செய்வதற்காக முன்வந்தனர்; அத்துடன் அவர்களுடைய பிரபுக்களை எதிர்க்கும் நோக்குடன் கூட்டங்கூடலாயினர். 'நாட்டின் பிரபுக்களாலும் பொதுமக்களாலும், திருச்சபையைச் சேர்ந்தவர்களாலும், மற்றோராலும் கூறப்பட்ட மனக்குறைவை நீக்குவதற்காக' 1377-ல் இயற்றப்பட்ட சட்டம், சட்டத்தை யெதிர்த்து வேலை செய்ய மறுத்த வில்லன்களைத் தண்டிக்கலாயிற்று. அச் சட்டம் கூறுவதாவது: 'வில்லன்களும் வில்லன் முறையில் அமைந்த நிலத்தைச் சார்ந்த உட்குடியானவர்களும், அவரவர்களுடைய பிரபுக்களுக்குச் செய்யவேண்டிய ஊழியங்களையும் வழக்கமாகச் செய்யவேண்டிய பணிகளையும் செய்யாமலிருக்கின்றனர். மேற்கூறிய வில்லன்களையும் உட்குடியானவர்களையும் கூலிவேலைக்கமர்த்திக்கொண்டு பயனுறுகிறவர்கள், அவர்களுடைய நலனுக்கும் சட்டப்படி அதைப் பெறுவதற்கும் உதவி புரிவதாகச் சொல்லும் ஆலோசனையாளர்கள், பாதுகாப்பளிக்கிறவர்கள், தூண்டுதல் செய்கிறவர்கள் முதலியவர்களின் சொற்கேட்டு, தாங்கள் பிரபுக்களுக்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்யாது விடுகின்றனர். இவ்வாறு உதவி புரிய முன்வந்துள்ளவர்கள், மேனர்கள், வில்லன்கள் வசித்த மான்ய நிலங்கள் பற்றிய டூம்ஸ்டே புத்தகத்தின் குறிப்புகளை விளக்கஞ் செய்வதாய்க் கூறி, அவ் விளக்கங்களுக்குத் தவறான முறையில் பொருள் கண்டு, வில்லன்களும் உட்குடியானவர்களும் அவர்கள் உடலாலும் நிலத்திற்காகவும் செய்யவேண்டிய எல்லாப் பணிகளையும் செய்வதினின்று விடுதலை பெற்றுள்ளதாக எடுத்தோதியதுடன், அவர்களுக்கு எதிராக எடுக்கப்படும் எவ்விதச் சட்டஞ் சார்ந்த நடவடிக்கைகளைக் கண்டும் அஞ்சவேண்டாமென்றும் கூறினர்; அத்துடன் பிரபுக்களின் குடியானவர்களை உயிருக்கும் உறுப்புகளுக்கும் ஊறு விளைவிப்பதாய் அச்சுறுத்தியும், எல்லாவற்றிற்கும் மேலாக, கலகத்தை விளைவிக்கக்கூடிய பெருங் கூட்டங்களில் அவர்களை ஒன்றுகூடச் செய்து, அவர்களுடைய பிரபுக்களை வலிமையுடன் எதிர்ப்பதற்காக ஒருவர் மற்றொருவருக்கு உதவி புரியக்கூடுமாறும் உறுதிகொள்ளச் செய்தனர்.'[35]

**குடியானவர்கள் கலகம், 1381:** குடியானவர்களிடையே காணப்பட்ட அதிருப்தியும், கொள்ளை நோயால் எல்லோரையும்விட மிக அதிகமாகத் துன்புற்றிருந்த சாதாரணமான சமய குருமார்களின் இனத்தாரின் மனக்குறைகளும்,

ஃபிரெஞ்சுப் போரினால் ஏற்பட்ட வரிச்சுமையும், குறிப்பாக ஏழை பணக்காரர்மீது ஒரேமாதிரியாக விதிக்கப்பட்டதும் துன்புறுத்தியதும், பன்னிரண்டு பென்சாகிய தலைவரியும்[36] 1381-ல் ஏற்பட்ட மிகப்பெரிய கலகத்தின் முக்கியக் காரணங்களில் சிலவாகும்.[37] எதிர்த்து எழுந்தோர்களுடைய கோரிக்கைகள்பற்றி ஸ்மித்ஃபீல்டு எனுமிடத்தில் வாட் டைலர் அறிவித்ததாவது: 'நாட்டில் வின்செஸ்டர் சட்டத்தைத் தவிர வேறெந்தச் சட்டமும் அமலிலிருக்கக்கூடாதென்பதும், இனிமேல் எந்தச் சட்டப்படியும் சட்டப் பாதுகாப்பு இல்லாதவராக எவரையும் அறிவிக்கக்கூடாதென்பதும் ......... திருச்சபையின் சொத்துகள், சமயத்தார்கள் அல்லது பாதிரிகள் அல்லது குருமார்கள்வசம் இருக்கக்கூடாதென்பதும், ஆனால், ஏற்கெனவே அச் சொத்துகளை வைத்திருக்கிறவர்கள், திருச்சபைக்கு நன்கொடையாக அளிக்கப்பட்டவைகளிலிருந்து வாழ்க்கைக்குத் தேவையானதை வைத்துக்கொண்டு மற்றவைகளை அந்தந்தத் திருச்சபையை அடுத்து வாழும் மக்களுக்குப் பகிர்ந்துகொடுக்க வேண்டுமென்பதும் ......, அத்துடன் இங்கிலாந்தில் வில்லன்கள் என இனி எவரும் இருக்கக்கூடாதென்பதும், அடிமை முறை, வில்லன் முறை நீக்கப்பெற்று, எல்லா மக்களும் ஒரே தன்மை வாய்ந்தவர்களாயும் சுதந்திரமுள்ளவர்களாயுமிருக்கவேண்டும்'[38] என்பதுமாம்.

ஜனநாயகக் கட்சியினுடைய வல்லந்த முறையின் உடனடியான பயன், மிகக் கடுமையான அடக்குமுறையை எதிர்விளைவாகத் தோற்றிவைத்ததேயாகும். ரிச்சர்ட் மன்னரிடமிருந்து கலகக்காரர்கள் பெற்ற அடிமைகள் சுதந்திரம் பற்றிய பொதுச்சாசனம், பின்னர் அரசருடைய பேரறிவிப்பாலும் சட்டத்தாலும் ஒழிக்கப்பட்டது.[39] பாராளுமன்றத்தின் இரு சபைகளும், நாட்டில் அடிமைத்தனத்தை முழுமையாக ஒழிப்பதற்கு மன்னர் இணக்கம் தெரிவித்துக்கொண்டதை ஏற்றுக்கொள்ள ஒரே மனமாக மறுத்தன; அத்துடன் 'ஒரேநாளில் எல்லோரும் அழிவதானாலுங்கூட அதிலிருந்து தாங்கள் தப்பித்துக் கொள்ளுவதற்காகவும்' அம்மாதிரியான ஒரு சட்டத்திற்கு ஒருபொழுதும் இணங்கமாட்டோம் என்று கலவரத்தின் போது மிகைபடுத்திக் கூறும் மொழியால் இருசபைகளும் தங்களின் உறுதிப்பாட்டை வெளிப்படுத்தின.[40] இக் கலகத்தால் குடியானவர்களுடைய நிலைமையில் உடனடியான நன்மை எதுவும் ஏற்பட்டதாகத் தோன்றவில்லை. குடியானவர்கள், அதிகக் கூலிக்கும், ஊழியங்களுக்குப் பதிலாகப் பணம் செலுத்தி மாற்றம் பெறுவதற்கும் தொடர்ந்து போரிடலா

யினர். கலகம் சமூகத்தின் அமைதியைக் குலேத்தது; தொழிலாளர்களிடையே புரட்சிகரமான கருத்துகளைத் தோற்றுவித்தது; பிரபுக்களிடையே மற்றொரு கலகம் ஏற்படலாம் எனும் அச்சத்தை உண்டுபண்ணிற்று கலவரம் அடங்கிய பொழுதுதான், கடந்த நூற்றாண்டில் துவங்கிய பழைய மேனர் பண்ணை முறையின் சிதைவு மீண்டும் தொடர்ந்து ரோசாப் பூக்கள் போர்களுடன் முடிவுற்றது. இப் போர்கள், எல்லாக் குடியானவர்களின்மீதும் பிரபுக்கள் கொண்டிருந்த அதிகாரத்தை வலுவிழக்கச் செய்ததுடன், குடியானவர்களை அரசியல் குழப்பத்திற்கிடையே சுதந்திரமடையச் செய்தன. ஒரு சில தனிப்பட்ட இடங்களில் பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கம்வரை அடிமைத்தனம் வழக்கிலிருந்து, பின்னர் சட்டமியற்றி அழிக்கப்படாமலேயே மறைந்துபோயிற்று.[41]

## அடிக்குறிப்புகள்

1. ஹாலம், ஸ்டப்ஸ் முதலியோரின் கட்டுரைகள், அவர்கள் குறிப்பிடும் எச்சரிக்கையுடன்கூடிய மட்டுப்படுத்தலே மனத்தில் கொள்ளாத வாசகர்களிடம் இவ்விதமான தவறான கருத்தை உண்டுபண்ணலாம்.

2. மெயிட்லண்ட், 'பாராளுமன்றத்தின் ஒப்பந்த இனங்களின் குறிப்புத் தொகுதி' (1893); ஸி. எச். மக்கில்வைன், 'பாராளுமன்ற உயர்தர நீதிமன்றம்' (1910); ஏ. எஃப். போலார்டு, 'பாராளுமன்றத்தின் வளர்ச்சி' (1920, 1926).

3. எல். ரியஸ், 'ஆங்கிலேயரது தேர்தல் சட்டம்' (1885), கே. எல். உட்லாவின் மொழிபெயர்ப்பு, (1940).

4. எம். வி. கிளார்க், 'பிரதிநிதித்துவமும் ஒப்புதலும்' (1936).

5. பாஸ்கட்டின் எடுத்துக்காட்டுகள், 'காமன்ஸ் சபையின் தோற்றம்,' 135; ஜே. ஜி. எட்வர்ட்ஸ், 'ஆங்கிலேயப் பாராளுமன்றப் பிரதிநிதிகளின் முழு அதிகாரம்;' 'எச். ஈ. ஸால்டருக்கு வழங்கப்பட்ட கட்டுரைகள்'. ரஃப் என்பாரின் பதிவுக் குறிப்பில் (கென்ட் தொல்பொருள் ஆய்வுக் கழகப் பத்திரப் பிரிவு 16) 14ஆம் நூற்றாண்டுக்கான எடுத்துக்காட்டுகள் உள. யார்க் நகரப் பதிவுகள் வால். 7, 31, 87, 93 முதல் டியூடர் காலத்துக்குரிய எடுத்துக்

காட்டுகள் காணப்படுகின்றன (யார்க்ஷையர் தொல் பொருளாராய்வுக் கழகம், பத்திரப் பிரிவு 110, அதிலேயே பக்கம் 618).

6. இத் தொனிபாவம் இடைக்காலங்கள் பெரும்பகுதியில் நிகழக்கூடாததொன்றாகும். அக்காலங்களில் பாராளுமன்றமென்பது ஒரு நிகழ்ச்சி என்பதல்லாமல் ஒரு நிறுவனமாக ஏற்படவில்லையென்பது காரணமாகும் — ஒரு விவாதம்.

7. மேலே, பக்கம் 137, குறிப்பு 42; ஜே. ஈ. ஏ. ஜாலிஃப், 'அரசியலமைப்பு வரலாறு,' 328–30.

8. ஏ. எஃப். போலார்டு, 'பாராளுமன்றத்தின் வளர்ச்சி' (இரண்டாம் பதிப்பு). வளர்ச்சியில் இதுபற்றிச் சுவைமிக்க செய்திகள் உள.

9. தனிக்கூட்டம் பற்றிய குறிப்பு, பாராளுமன்ற அட்டவணையில், 1332–ல் முதன் முதலாகக் காணப்படுகிறது. 'ரோடுலி பார்லிமென்டம்,' ii, 66, ந. 3 (ஈ. ஸி. லாட்ஜ், தாரண்டன், 'ஆங்கிலேய அரசியலமைப்புப் பத்திரங்கள்,' 1307–1485, 132). 1339-லிருந்து இருபிரிவுகளை நிலையாகக் கொள்ளலாம். 1352–ல் வெஸ்ட்மின்ஸ்டர் மடாலயத்தில் திருச்சபையின் அறை காமன்ஸ் சபை கூடுமிடமாயிருந்தது ('ரோடுலி பார்லிமென்டோரம்', ii, 237, ந. 8; ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', iii, 444, 445). சமயச் சார்பற்ற சட்டமியற்றுதலில் எவ்விதப் பங்கும்கொள்ளாமல் தற்செயலாய் குருமார்கள் விலகியதே பொதுவாக ஐரோப்பிய அரசியலமைப்புகளில் காணப்படும் முப்பிரிவுகளான பிரபுக்கள், குருமார்கள், பொதுமக்கள் எனும் பிரிவுகளை ஆங்கிலேயர் பின்பற்றுவதற்குத் தடையாயிற்று. (மேலே பக்கம் 312 முதல்.) ஸ்டப்ஸ் ('அரசியலமைப்பு வரலாறு', ii, 198), ஒரு சமயம் வழக்கறிஞர்களும் வர்த்தகர்களும்கூடத் தனித்து ஒரு பகுதியினராக ஒன்றுசேருவதற்குச் சாத்தியக் கூறிருந்ததாகச் சுட்டிக்காட்டுகிறார். பாராளுமன்றம் இரு பிரிவுகளாகப் பிரிந்த பிரச்சினை குறித்து போலார்டு, 'பாராளுமன்றத்தின் வளர்ச்சி', அதிகாரம் 4, 'முப்பிரிவுகள் எனும் புனைந்துரை' என்பதைக் காண்க; பாஸ்கட், பக்கங்கள் 136–9; எஸ். பி. கிரைம்ஸ், 'பதினைந்தாம் நூற்றாண்டில் அரசியலமைப்புப் பற்றிய கருத்துகள்', 81

முதல்; செல்டன் வெளியீடான 'மேசையுரையாடல்,' பக்கம் 150 (போலக் பதிப்பித்தது, செல்டன் கழகம்) ஐயும் காண்க.

10. 1296-ல் மான்யப் பிரபுக்களும் குருமார்களும் ஒவ்வொருவரும் 12-ல் 1 பங்கும், நகர உயர்குடி மக்கள் 8-ல் 1 பங்கும், 1306-ல் மான்யப் பிரபுக்கள், நைட்வீரர்கள், குருமார்கள் முதலானோர் 30-ல் 1 பங்கும், நகர உயர் குடிமக்கள் 20-ல் 1 பங்கும், 1307-ல் மான்யப் பிரபுக்களும் நைட்வீரர்களும் 20-ல் ஒரு பங்கும், குருமார்களும் நகர உயர்குடிமக்களும் ஒவ்வொருவரும் 15-ல் 1 பங்கும் வழங்கினர். மூன்றும் எட்வர்டின் ஆட்சியின் 6ஆவது ஆண்டில் (1332) மான்யப் பிரபுக்கள், குருமார்கள், நைட் வீரர்கள் முதலானோருக்கு 15-ல் ஒரு பங்கும், நகர உயர் குடி மக்களுக்கு 10-ல் 1 பங்கும் கட்டணமாக விதிக்கப்பட்டன. ஆனால், நைட் வீரர்களும் நகர உயர்குடி மக்களும் இச்சமயத்தில் ஆலோசனை செய்தகாலை ஒன்றாக வாக்களிக்கவில்லை. 1344-ல் நைட்வீரர்கள் 15-ல் இரண்டு பங்கும், நகர உயர்குடிமக்கள் பத்தில் இரு பங்கும் அளித்தனர். பிரபுக்கள் மன்னருடன் நேரில் போரில் கலந்துகொள்வதாக வாக்களித்தனர்; ஆனால், ஒன்றும் வழங்கவில்லை.

11. இப் பொருள் பற்றிய சர்ச்சைக்கு எச். எல். கிரே, 'சட்டமியற்றுவதன் தொடக்க காலத்தில் காமன்ஸ் சபையினரின் செல்வாக்கு' (1932)ஐயும், எஸ். பி. கிரைம்ஸ், 'ஆங்கிலேய அரசியலமைப்புக் கருத்துகள்', (1936); ஜி. எல். காஸ்கின்ஸ், 'முதலாம் எட்வர்டின் பாராளுமன்றத்தில் பிரதிநிதித்துவம் பற்றிய விண்ணப்பங்கள்', 'ஆங்கிலேய வரலாற்று மீள்பார்வை', liii, 1 (1938); டி. எஃப். டி. பிளக்நட், 'பாராளுமன்றம்', 'ஆங்கில ஆட்சிமுறை நடைமுறையில்' (ஜே. எஃப். வில்லார்டு பதிப்பித்தது, 1940)ஐயும் காண்க.

12. இவ் வழக்கம் விவரிக்கப்பட்டுள்ளதுடன் அதன் குறிப்பாகச் சுட்டுதலை, ஜே. ஜி. எட்வர்ட்ஸ், 'இடைக்காலப் பாராளுமன்றத்தில் காமன்ஸ் சபை' (1958) எனும் நூலில் பார்க்க.

13. 'கோமகன், ஏன் அரச குடும்பத்தைச் சேர்ந்த கோமகனின் பெண், சிறப்பெய்திய ஒரு சாதாரண மனிதனை

வாழ்க்கைத் துணைவனாகக் கொள்ளுவது இழிநிலையெனக் கருதப்படவில்லை. சர் ஜான் ஹோவர்டு, நார்ஃபக் கோமகனின் மகளான தாமஸ் மௌப்ரே என்பாளை மணந்து கொண்டார். சர் ரிச்சர்ட் போல் கிளாரன்ஸ் கோமகனான ஜார்ஜின் மகளான சாலிஸ்பரி கோமகளாரை மணந்தார். உயர் மரபுக்கு நன்மதிப்புக் கொடுக்கப்பட்டது எனினும், உயர் மரபுக்கும் பிரபுக்களின் உரிமைகளுக்கும் ஆங்கில நாட்டில் எவ்விதத் தொடர்புமில்லாமலிருந்தது ஒரு நற்பேறாகும். எனவே, வேறு சில நாடுகளில் காணப்பட்ட உயர் குடிமக்கள், சாதாரணக் குடிமக்கள் எனும் பாகுபாடு இல்லாதிருந்தது. பழங்காலத்திலிருந்தே ஆங்கிலேயரது மக்களாட்சி உயர்குடி மரபுடையதாயும் பகட்டாயுமிருந்ததுடன் உயர்குடி மரபாட்சி உலகிலேயே மிகச்சிறந்த மக்களாட்சியாயுமிருந்தது' — மெக்காலே, 'ஆங்கில நாட்டு வரலாறு', i, 30–1. உயர்குடி மரபு எனும் இப்போதைய கொள்கை எட்டாம் ஹென்றியின் காலத்தில் வெளிநாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டதாகும். ஆங்கில நாட்டு வரலாற்றில் அதன் வளர்ச்சிக்கான அடிப்படைகளில்லாததால், மிக்க குழப்பத்தை ஏற்படுத்தியுள்ளது. எனவே, மேற்றிராணியார்கள் (14ஆம் நூற்றாண்டில் மேலினத்தவராகக் கருதப்பட்டவர், அதிலேயே பக்கம் 163) இப்பொழுது 'பாராளுமன்றத்தின் பிரபுக்கள்' எனக் கருதப்பட்டார்களேயொழிய, 'மேலினத்தவர்', உயர்குடிப்பிறப்பால் மேலோர், 'உயர்குடி மரபின் அடிப்படையில் விசாரணை செய்யத்தக்கவர்' என்று கருதப்படவில்லை; கொடுங்குற்றம் புரிந்தார், பொதுமக்களடங்கிய ஜூரியால் விசாரணை செய்யப்பட்டனர். 'பிரபுக்களின் நிலையான உத்தரவுகள்', நெ. 79, 1692; மேற்றிராணியார் ஃபிஷர், அதிமேற்றிராணியார் கிரான்மர், ஐ. ஹோவல், 'நாட்டு விசாரணைகள்', பக்கங்கள் 399, 771. பைக் என்பார் ('பிரபுக்கள் சபையின் அரசியலமைப்பு வரலாறு', பக்கம் 221), 'மேற்றிராணியார்கள், நாட்டின் உயர்குடி மக்களால் பாராளுமன்றத்திலும் பெருந்தகை முகவரின் நீதிமன்றத்திலும் விசாரணை செய்யப்படும் உரிமையைப் பெற்றிருக்கவில்லை' எனவும், குறிப்பாக இதற்காதாரமாக ஸ்டான்ஃபோர்டு, 'Les Plees del Coron,' பக்கங்கள் 153ஐயும், விதி 30ஐயும் காட்டுகிறார். உயர்குடிப் பிறப்பினரின் சட்டங் குறித்துக் குத்தலான கடிந்துரைக்கு வரலாற்றாசிரியரான ஜே. எச். ரவுண்டு, 'உயர்குடிப்பிறப்பும் இனவழியையும்', அவருடைய குடும்பத் தோற்றங்களின் நூற்பெயர்க்

கோவையையும் காண்க. வாழ்வுக் காலம்வரை மேற்றி ராணியார் அல்லது உயர்குடியினர் எனும் தகுதியைப் பெற்றிருந்தவர்களின் 'பாராளுமன்றத்தின் பிரபுக்கள்' எனும் நிலை 1887-ல் ஏற்பட்ட மறுமுறையிட்டு நீதிமன்றச் சட்டத்தால் முடிவுசெய்யப்பட்டுள்ளது; பிரிவு 2. அவர்கள் பிறப்பால் உயர்குடி மரபைச் சேர்ந்தவர்கள் அல்லர் என்பதால் பொதுமக்களின் ஜூரியால் விசாரணை செய்யத் தக்கவர் என்பது நன்கு தெரியவரும்.

14. 'உயர்குடிப்பிறப்பு எனும் கருத்தின் தோற்றத்தையொட்டிப்' பிரபுக்களுக்குச் சிறப்பான சொத்து பற்றிய சட்டம் ஏற்படுவதற்கான (வெற்றியில்லா) முயற்சிகள் செய்யப்பட்டன. டி. எஃப். டி. பிளக்நட், 'எட்டாம் ஹென்றி காலத்தில் சட்டமியற்றுவதற்கான முயற்சிகள்,' 'அரசு வரலாற்றுக் கழகத்தின் நடவடிக்கைகள்' (1936) 122 முதல். ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலேயச் சட்ட வரலாறு', iv, 572 முதல். பிற்காலத்திய பிரபுத்துவம் பற்றிய எண்ணங்கள், மரபுவழியில் வந்த அலுவல்கள் முதலியவைகளின் அரசியல் சம்பந்தமானதும் குறிப்பாகச் சுட்டப்பட்டதுமான பொருள்பற்றி, டி. எஃப். டி. பிளக்நட், 'ஆங்கிலேய அரசு விசாரணையின் தோற்றம்', 'பொலிடிகா', (1937), ii, 557ஐயும், 'சட்டக் காலாண்டு மீள்பார்வை', lvi, குறிப்பு 82ஐயும் காண்க.

15. இவர்கள் 1550-லும் 1573-லும் காமன்ஸ் சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பின்னர் பெட்ஃபோர்டு ஏர்லின் வாரிசாக ஆனார்கள். அதனால் உறுப்பினர் பதவியை இழந்தவர்கள் அல்லர் என காமன்ஸ் சபை முடிவு செய்தது.

16. மெகாலே, 'ஆங்கில நாட்டு வரலாறு', i, 32.

17. மே, 'அரசியலமைப்பு வரலாறு', i, 83. காமன்ஸ் சபை இங்கிலாந்து மக்கள் சமுதாயம் முழுமைக்கும் பிரதிநிதியாக உள்ளதென்றும், பிரபுக்கள் சபை அவர்களுக்கு மாத்திரம் பிரதிநிதியாக உள்ளதென்றும் அவைகளுக்குள்ள வேறுபாடு 'Modus Tenendi Parliamentum' எழுதியவரால் வன்மையுடன் வற்புறுத்தப்பட்டுள்ளது. இவ்வாய்வுரை எழுதப்பட்ட காலம் உறுதியாகத் தெரியவில்லை. எனினும், '14ஆம் ஆண்டுக் கைப்பிரதிகளில் அது காணப்படுகிறது. அத்துடன் அக்காலத்திய ஆணைகள், பத்திரங்களை நோக்கும்பொழுது அது தவறான கருத்தைப்

புலப்படுத்துவதாயுள்ளதால், அக்கருத்தைச் சமயஞ் சார்ந்தவர்களின் கருத்து எனக் கொள்ளலாம் என்பதற்கு அதை எழுதியவர் மிகத் தொன்மையான, போதிய ஆதாரத்தைக் காண்பதில் ஆவல் கொண்டிருந்தார்' — ஸ்டப்ஸ், 'பொறுக்கு சாசனங்கள்', 500–506. மீண்டும் பதிப்பிக்கப்பட்ட மோடஸ் என்பது எம். வி. கிளார்க் எழுதியுள்ள, 'பிரதிநிதித்துவமும் ஒப்புதலும்' என்பதன் முக்கியத் தலைப்பாகும்'. வார்பர்க் கழகத்தின் இதழில் கால்பிரெய்த் எழுதியுள்ளதையும் காண்க, xvi, 81–9.

18. அவர்களது ஒத்துழைப்பு, நைட் வீரர்கள் பிரபுக்களுடன் சேர்வதைக்காட்டிலும் நகரக் குடிமக்களுடன் ஒன்று சேருவது எனத் திட்டநோக்குடன் முடிவு செய்ததன் விளைவாக ஏற்பட்டதெனக் கருதப்படுகிறது; இக் கருத்து பாராளுமன்றத்தில் நகரக்குடிமக்களுக்கு மிக்க செல்வாக்கு இருந்ததெனும் முன்னூகத்தைக் கொண்டது. 1340-க்கு முன் பாராளுமன்றத்தில் அவர்களுடைய செயல்களின் சுவடுகள் குறிப்பாகக் காணப்படவில்லை. ஆனால், நகரக் குடிமக்களைக் கலக்காமல் நைட்வீரர்களைப் பல சமயங் களில் கலந்தாலோசனை நடந்ததென்பதற்கு ஆதாரமுளது. நைட்வீரர்கள் சுதந்திரமாகக் கூடி ஆலோசனை செய்யும் வழக்கத்தை ஏற்கெனவே கைக்கொண்டிருந்தனரெனத் தோன்றும். கௌன்டிகள், நகரப் பிரதிநிதிகள் ஒன்று சேர்ந்ததென்பது, நகரக் குடிமக்கள் நைட்வீரர்களுடன் இணைந்ததன் விளைவாகும். நைட்வீரர்களிடை இதற்கு எதிரிடை விருப்பம் இருந்திருக்க வேண்டுமென்பதில் ஐய மில்லை. நைட்வீரர்கள், மான்யப் பிரபுக்களுடன் சமூக, அரசியல் சார்ந்த பிணைப்பைக் கொண்டிருந்தும் — பொது வான இராணுவ முக்கிய மான்யக் குடிமை, வீரச்செயல் புரிவதில் பொதுவான ஒற்றுமை போன்றவை — மான்யப் பிரபுக்களைவிட நகரக் குடிமக்களுடன் ஒத்துழைப்பதை எளிதாகக் கருதினர் என்பது ஆங்கிலேய அரசிய லமைப்பில் சிறப்பானதும் புகழுக்குரியதுமாகும். தவிர, மான்யப் பிரபுத்துவம், உயர்குடிமையாகச் சுருங்கி மாறியிராவிட்டால் இவ்வாறு ஏற்படுவது சாத்தியமாகி யிராது. நைட்வீரர்களும் நகரக் குடிமக்களும் ஒன்றாகக் கலந்துபோனது மிகவும் தாமதமாய் நடந்தது; விவர மாகப் 'பாராளுமன்றத்தின் பதிவேடுகளில்' தேடி எடுக் கலாம்; 1376-ல் கூடிய 'நல்ல பாராளுமன்றம்' இந்த ஒன்றிய இணைப்பின் முதற் பயனைத் தெளிவுபடுத்தியதா

யிருக்கக்கூடும். எப்படியாயினும், நைட்வீரர்களும் நகரக் குடிமக்களும் தனித்தனியே கூடி ஆலோசிப்பதென்பது அபூர்வமாயிற்று. ஆனால், அவர்கள் ஒன்றுசேர்ந்து பொதுவான மன்றத்தில் முதிர்சிந்தனை செய்வதென்பது முறையாயும் நன்கு வரையறை செய்யப்பட்டதாயும் ஆயிற்று — போலார்டு, 'பாராளுமன்றத்தின் வளர்ச்சி' (இரண்டாம் பதிப்பு) 124–5 ; அத்துடன் மேலே 12ஆம் குறிப்பில் கூறப்பட்டுள்ள கிரெய்டன் விரிவுரையையும் காண்க.

19. 'ரோடுலி பார்லிமெண்டம்', i, 443–445 (சில சமயங்களில் ஸ்டாம்ஃபோர்டு சட்டம்' என அழைக்கப்படுவதுமுண்டு; 3, எட்வர்ட் 2).

20. 'பாராளுமன்ற ஆணைகள்' – II, ii, அனுபந்தம் 30.

21. 'ரோடுலி பார்லிமெண்டத்'தில் அச்சிடப்பட்டுள்ளது, i, 281–286. 'நாட்டின் சட்டங்கள்,' i, 157 முதல் ; ஈ. ஸி. லாட்ஜ், ஜி. ஏ. தாரண்டன், 'ஆங்கிலேய அரசியலமைப்புப் பத்திரங்கள்,' 1307–1485 (கேம்பிரிட்ஜ், 1935), 12–17 பக்கங்களில் பகுதிகள் உள ; விரிவான ஆய்வுரைகளும் உள. கான்வே டேவிஸ், 'இரண்டாம் எட்வர்டை எதிர்த்து மான்யப் பிரபுக்களின் எதிர்ப்பு' (1918), டி. எஃப். டௌட், 'இரண்டாம் எட்வர்டின் நிலை', 1914, 1936 (எச். ஜான்ஸ்டன் பதிப்பித்தது). இரண்டும் அவ்வாட்சிக் காலத்தில் மத்திய ஆட்சியின் வளர்ச்சியைப்பற்றி அழுத்தமாகக் கூறுகின்றன. எஸ். பி. கிரைம்ஸ், 'இடைக்கால இங்கிலாந்தின் ஆட்சிமுறை வரலாற்றின் முன்னுரை' (1952), 173 முதல். முக்கியமான இவ்வம்சம் குறித்துச் சுருக்கமான முன்னுரை, டௌட், 'திரட்டப்பட்ட கட்டுரைகள்', iii, 191, 223ஐக் காண்க ; மன்றம், விதிகள்பற்றி அதிலேயே பக்கம் 215ஐக் காண்க.

22. வாரிசுமுறைச் சட்டம் இவ் விதியைக் கடைசியாக 1701ஆம் ஆண்டுவரை வலியுறுத்தியது ; கீழே, பக்கம் 463 (விதி 3).

23. 15 எட்வர்ட் 2. 'நாட்டின் சட்டங்கள்', i, 189 ; லாட்ஜும் தாரண்டனும், 128–9. சட்டத்தின் குறிப்பிடத்தக்க நோக்கத்தைப்பற்றிக் கீழே காணும் குறிப்புகள் முக்கிய விவாதத்தைக் குறிப்பிடுகின்றன : ஜி. லாப்ஸ்லி, 'ஆங்கிலேய வரலாற்று மீள்பார்வை,' xxviii, 118 (1913); டி. எஃப்

டௌட், 'இரண்டாம் எட்வர்ட்', 136 (1914); ஜே. ஸி. டேவிஸ், 'மான்யப் பிரபுக்களின் எதிர்ப்பு,' 513 (1918); எச். ஜி. ரிச்சர்ட்ஸன், 'ஆங்கிலேய வரலாற்று நிறுவனத்தின் சிற்றறிக்கை', vi, 76 (1928); ஜி. எல். ஹஸ்கின்ஸ், 'யார்க் சட்டம்' (1935); ஜி. லாப்ஸ்லி, 'சட்டக் காலாண்டு மீள்பார்வை' 1, iii, 125–7 (1937); எம். வி. கிளார்க், 'பிரதிநிதித்துவமும் ஒப்புதலும்,' 138, 172, 196 (1936); பி. வில்கின்ஸன், 'அரசியலமைப்பு வரலாற்று ஆய்வுக் கட்டுரைகள்', 236 (1937); ஜே. ஈ. ஏ. ஜாலிஃப், 'அரசியலமைப்பு வரலாறு,' 370–1, (1937); ஜி. எல். ஹஸ்கின்ஸ், 'ஆங்கில வரலாற்று மீள்பார்வை,' lii, 74, (1937); ஜி. லாப்ஸ்லி, அதிலேயே, lvi, 22, 411 (1941); ஜே. ஆர். ஸ்டிரேயர், 'அமெரிக்க வரலாற்று மீள்பார்வை', xlvii, 1, (1941); டபிள்யூ. ஏ. மோரிஸ், 'இடைக்காலமும் மனித இன நலக் கோட்பாடும்', i, 59, 83–4 (1943); பி. வில்கின்ஸன், 'எதிர்நிழல் காட்டவல்ல உலோகச் சில்லு', xix, 445 (1944); டபிள்யூ. உல்மாண், 'இடைக்காலத்தில் போப்பாண்டவராட்சி,' 24 (1949).

24. 'பாராளுமன்ற ஆணைகள்,'-II, ii, 155.

25. அதிலேயே, பக்கம் 487 முதல்.

26. ஸ்டப்ஸைப் பார்க்க, 'அரசியலமைப்பு வரலாறு,' iii, 393. 1258ஆம் ஆண்டு ஆக்ஸ்ஃபோர்டு ஷரத்துகள், ஆண்டுக்கு மும்முறை பாராளுமன்றம் கூடவேண்டுமெனக் கூறின. குறுகிய காலத்தில் கூடும் ஒரு கூட்டம் வழக்கமானது. நான்காம் எட்வர்ட் காலத்தில் பல கூட்டங்களைக்கொண்டதும், வேண்டுமென்றே நீட்டிக்கப்பட்டதுமான பாராளுமன்றம் முதன்முதலில் சாதாரணமாகக் காணப்பட்டது.

27. 4 எட்வர்ட் 3, விதி 14; 36 எட்வர்ட் 3; சட்டம் 1, விதி 10. 1328-ல் நான்கு பாராளுமன்றக் கூட்டங்கள் நடந்தன; 1340-ல் மூன்று. ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு,' ii, 645.

28. 'ரோடுலி பார்லிமென்டோரம்', ii, 66 நெ. 3. டல்லேஜ் வரியால் பாதிக்கப்பட்ட ஒரு தனிப்பிரிவினருக்குப் பதிலாக நாட்டு மக்களுக்குப் பொதுவாக இச் சாசனம் வரி விதித்தது.

29. அதிலேயே, ii, 104. நெ. 5. 'கம்பளி வரி'பற்றி, பக்கம் 323, குறிப்பு 95 மேலே.

30. அதிலேயே, ii, 104, செ. 8.

31. அதிலேயே, ii, 105, செ. 13.

32. அதிலேயே, ii, 107, செ. 7; லாட்ஜ், தாரண்டன், 133–4 14 எட்வர்ட் 3, சட்டம் 2, விதி 1.

33. அதிலேயே, ii, 140, செ. 5; வர்த்தகர்களின் அம்மாதிரியான கூட்டங்களின் அட்டவணைக்கு, 'காமன்ஸ் சபையினரின் உறுப்பினர் பற்றிய குழுவின் இடைக்கால அறிக்கை', 109 (1932, Cmd. 4130).

34. 'ரோடுலி பார்லிமென்டோரம்', ii, 161, செ. 18.

35. ஷை ii, 271, செ. 26.

36. ஷை ii, 200–1. இது 1340–ல் நடந்ததும் பதிவு செய்யப்படாததுமான தொழில்முறைக் கட்டுப்பாட்டு ஒப்பந்தத்தின் முன்னேற்றத்தைக் காண்பிப்பதாயுள்ளது.

37. அதிலேயே, ii, 366, செ. ix.

38. புரூம், 'அரசியலமைப்புச் சட்டம்' (டென்மன் பதிப்பு), 269.

39. 'ரோடுலி பார்லிமென்டோரம்', ii, 252, செ. 35, பதிவுப் பத்திரம் (லாட்ஜ், தாரண்டன் நூலில் காணப்படும் பகுதிகள்) இக் கூட்டத்தைப் பெருங்கூட்டமாக விவரித்துள்ளது; தேர்ந்தெடுக்கப்பட்ட பொதுமக்கள் பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

40. அதிலேயே, ii, 114, செ. 22, 128, செ. 12, 130, செ. 18 (லாட்ஜ், தாரண்டன், பக்கங்கள் 138–9). இதுபோன்ற முந்திய முயற்சிகள் 1237லும் 1244லும் நடைபெற்றன; ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு,' ii, 596–7.

41. ஷயரைச் சேர்ந்த நைட் வீரர்களும் நகர மக்களும் செலவுக்குரிய தொகையைப் பெற உரிமை பெற்றிருந்தனர். இது அந்தந்தத் தேர்வுரிமை பெற்றவர்களுக்கு ஏற்பட்ட சுமையாயிற்று. உள்ளே, பக்கம் 646. வின்செஸ்டர் கூட்டத்தை ஒரு 'பாராளுமன்றம்' என அழைத்த அக்காலத்திய அதிகாரிகள் மாறான கருத்தைக் கொண்டிருந்ததாகத் தோன்றுகிறது; டி. எஃப். டௌட், 'ஆட்சிமுறை வரலாற்றின் அதிகாரங்கள்,' iii, 268, குறிப்பு 4.

42. 'ரோடுலி பார்லிமென்டோரம்', ii, 304, செ. 10.

43. அதிலேயே பக்கம் 310, செ. 15 (லாட்ஜ், தாரண்டன், 145) ; ஹாலம், 'இடைக்காலங்கள்', iii, 47 ஐயும் காண்க.

44. ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', ii, 267. சட்டமியற்றலில் முன்னேற்றத்தைப்பற்றி, ஸி. எச். மக்கில்வயின், 'பாராளுமன்றமெனும் மிக்குயர் நீதிமன்றம்' (1910) ; டி. எஃப். டி. பிளக்நட், 'சட்டங்களும் அவைகளின் கருத்துரையும்' (1922), 'முதலாம் எட்வர்டின் சட்டமியற்றுதல்' (1948) ; பி. எச். வின்ஃபீல்ட், 'ஆங்கிலச் சட்ட வரலாற்றின் மூலங்கள்' (1925) ; டபிள்யூ. எஸ். ஹோல்ட்ஸ்வொர்த், 'ஆங்கிலச் சட்டத்தின் மூலங்கள்' (1925) ; ஸி. கே. ஆலன், 'சட்டமுருவாக்குதல்' (1927, ஆறும் பதிப்பு 1958) ; எச் .எல். கிரே, 'சட்டமியற்றுவதில் தொடக்கத்தில் காமன்ஸ் சபையின் செல்வாக்கு' (1932) ; எச். ஜீ. ரிச்சர்ட்ஸன், ஜி. ஓ. ஸேயில்ஸ், 'முந்திய சட்டங்கள்' (1934, சட்டக் காலாண்டு மீள்பார்வையிலிருந்து மறுபிரசுரம் செய்தது, 1, 201, 540) ; ஜி. ஓ. ஸேயில்ஸ், 'மன்னர் நீதிமன்றத்து வழக்குகள்', iii, முகவுரை xi—xlii (செல்டன் கழகம், 1939) ; டி. எஃப். டி. பிளக்நட், 'பொதுச் சட்டத்தின் வரலாற்றுச் சுருக்கம்' (1956); எஸ். ஈ. தார்ன், 'சட்டங்கள் பற்றிய ஆய்ந்துரையின் முன்னுரை,' (1942) ; பிளக்நட், 'சட்டக் காலாண்டு மறுபரிசீலனை,' lx, 242.

45. அதிலேயே, பக்கம் 157. காமன்ஸ் சபையின் ஒப்புதலுக்கு அளிக்கப்படும் முக்கியத்துவத்தை மிகைபடுத்துவது கூடாது. பாஸ்கட், பக்கம் 174, முதலாம் எட்வர்டின் பாராளுமன்றத்தைக் குறித்துக் கூறுவதாவது : "சட்டமியற்றுவதென்பது மன்னரின் சிறப்புரிமையாகும்; குடிகள் இதில் ஆலோசனை கூறுவதைத்தவிர ஏதும் பங்கு கொள்வதில்லை. அவ்வாறு ஆலோசனை கூறப்படுவதும் மன்னரின் வேண்டுகோளின் பேரிலேயே கூறப்படுவதாகும். பொதுமக்களின் வருகைக்கும் கருத்துக்கும் முக்கியத்துவமளிக்கப்படாததால், 1290-ல் 'குயா எம்ப்டோர்ஸ்' எனும் சட்டம் நைட்வீரர்களுக்கு பாதகம் விளைவிப்பதாயிருந்தும், பாராளுமன்றத்திற்குக் கௌன்டிகளிலிருந்து பிரதிநிதிகள் வந்துசேருவதற்கு ஒரு வாரம் முன்னதாகவே பிரகடனஞ் செய்யப்பட்டது." முதலாம் எட்வர்டின் காலத்தில், காமன்ஸ் சபை கலைக்கப்பட்டதன்பின் தேதி குறிப்பிடப்பட்ட சட்டங்கள்பற்றிய மேற்காட்டுகளுக்கு, ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு,' ii, 247, குறிப்பு 2ஐக் காண்க.

46. பழக்கத்திலிருந்த சட்டத்தைப் பேரறிவிப்புச் செய்யவே காமன்ஸ் சபையினர் சில சமயங்களில் வேண்டினர். அவ் வேண்டுகோளுக்கு அவர்களின் சம்மதத்தை ஆக்க முறையில் பெருமல், தானுகவே மேற்கொள்ளுவது வழக்கமாயிருந்தது. பெருங்குற்றம் பற்றிய சட்டம் இவ்வாறு இயற்றப்பட்டது. 1352 (25 எட்வர்ட் 3, சட்டம் 5, விதி 2; லாட்ஜ், தாரண்டன் 21-2); இச் சட்டத்திற்கு அடிப்படையாயமைந்த விண்ணப்பம், 'பொதுமக்களுக்குப் பெரும் அரசு குற்றம் எனத் தெரியாத பலவகைப் பட்ட விஷயங்களுக்காக விசாரணைக்குக் கொண்டுவரப் பட்டவர்களைப் பல்வேறு கௌன்டிகளில் நீதிபதிகள் பெரும் அரசுகுற்றம் புரிந்தோர் எனத் தீர்ப்பளிக்கின்றனர். எனவே, நாட்டின் பெரியோர்களாலும் மூதறிஞர்களாலும் நிரம்பிய ஆலோசனைக் குழுவைக் கொண்டு எவை பெரும் அரசு குற்றங்களாகும் என இப் பாராளுமன்றத்தில் மன்னர் தயைகூர்ந்து அறிவிக்க வேண்டும்' என்ற வேண்டுதலைக் கொண்டிருந்தது. எக் குற்றங்கள் பெரும் அரசு துரோகம் என்ற தலைப்புடன் கூடிய இவ் விண்ணப்பத்திற்கு நடைமுறையிலிருந்த சட்டம் மன்னரின் மறுமொழியாயிற்று.

47. 'ரோடுலி பார்லிமென்டோரம்', ii, 113 நெ. 7.

48. அதிலேயே, ii, 280, நெ. 39.

49. அதிலேயே, ii, 253, நெ. 16 (லாட்ஜ், தாரண்டன், 143). சட்டம், அவசரப் பிரகடனம் எனும் சொற்களுக்கிடையே உள்ள வேறுபாட்டை அண்மையில் ஆராய்ந்தவர்களின் முடிவு காண்க.

50. மேலே குறிப்பிட்டதில் 27, முதல் விவாதத்தைக் காண்க; பி. பேர்ட்ஸால், ஸி. எச். மக்கில்வயினைக் கௌரவிப்பதற்காக எழுதிய கட்டுரைகளில், 41; 1343-ல் முறையான பாராளுமன்றத்தால் நீக்கப்பட்டது. ரோ. பார்லி., ii., 139, நெ. 23; அதிலேயே பக்கம் 164.

51. ரோ. பார்லி., ii, 127, நெ. 7 (லாட்ஜ், தாரண்டன், 137–8), பண்டைக் காலத்தில் மேற்றிராணியார்கள் பிரபுக்களாகக் கருதப்பட்டனரெனத் தோன்றும்; அதிலேயே, பக்கம் 153, கு. 13. 1340–ல் 'பிரபுக்கள்' என்பதன் பொருள் பற்றி டி. எஃப். டௌட், 'ஆட்சிமுறை வரலாற்றில் பிரிவுகள்', iii, 136–139.

52. நெருக்கடி முழுமையும் அரசியலமைப்பில் மிகக் கவர்ச்சியுள்ளது; ஜி. லாப்ஸ்லி, 'ஆங்கிலேய வரலாற்றுப் பரிசீலனை', (1915), xxx, 6, 193; டொரோதி ஹியூக்ஸ், 'மூன்றும் எட்வர்டின் தொடக்க ஆண்டுகள்', (1915); மாற்றுக் கருத்திற்கு, பி. வில்கின்ஸன், 'மூன்றும் எட்வர் டாட்சியில் நீதித்துறையில் முதல்வர் மன்றம்' (Chancery) (1929), பக்கம் 111 முதல்; ஆட்சிமுறை சம்பந்தமாக, டி. எஃப். டௌட், 'ஆட்சிமுறை வரலாற்றில் பிரிவுகள்,' iii, பக்கம் 121 முதல்; சில சட்டஞ் சார்ந்த பகுதிக்கு, டி. எஃப். பிளக்நட், 'அரசு வரலாற்றுக் கழக நடவடிக்கைகள்' (1942), 65 முதல். இப் போராட்டத்தின் குறிப்பிடத்தக்க அம்சம், அதிமேற்றிராணியார் தன்னுடைய சமயத் திருவுரையிலும் மன்னர் தனது பேரறிவிப்பிலும் மக்கள் கருத்திற்கு முறையீடு செய்ததாகும் (ரைமர், ii, 1147-ல் பிரசுரிக்கப்பட்டுள்ளது). மன்னரின் பேரறிவிப்புப் 'புகழ்வாய்ந்த சிறுநூல்' என வழங்கப்பட்டது. டி. எஃப். டௌட், 'பாராளுமன்றமும் மக்கள் கருத்தும்'; அவர் திரட்டியது, ii, 174.

53. ரோ. பார்லி., ii, 128, கெ. 12, 130, கெ. 38 (லாட்ஜ், தாரண்டன், 138, 139).

54. அதிலேயே, ii, 128, கெ. 10, 15 (லாட்ஜ், தாரண்டன், 56), 131, கெ. 41; ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு', ii, 409.

55. 15 எட்வர்ட் 3, st. 1.

56. ரோ. பார்லி., ii, 131, கெ. 42.

57. அதிலேயே, பக்கம் 163, கெ. 50.

58. டி. எஃப். டி. பிளக்நட், 'பாராளுமன்றத்தில் குற்றஞ் சாட்டுதலின் தோற்றம்,' அரசு வரலாற்றுக் கழகத்தின் நடவடிக்கைகள் (1942); செய்தி '1376-ல் நடந்த பாராளுமன்றக் குற்றச்சாட்டில்' தொடர்ந்து கூறப்பட்டுள்ளது (அதிலேயே, 1951); 'இரண்டாம் ரிச்சர்டின் ஆட்சியில் அரசு குற்ற விசாரணைகள்' (அதிலேயே, 1952); 'பாராளுமன்றத்தில் குற்றஞ்சாட்டுதலும் பெருந் துரோகக் குற்றத் தண்டனையும்' (அதிலேயே, 1953); மாற்றுக் கருத்துக்கு, எம். வி. கிளார்க், 'பதினான்காம் நூற்றாண்டு பற்றிய ஆய்வுகள்' (எச். இ. ஸால்டருக்கு வழங்கிய கட்டுரைகளில் மறு பிரசுரமானது, 1933), திறனாய்வு செய்யப்பட்டது; பி. வில்கின்ஸன், 'அரசிய

லமைப்பு வரலாற்று ஆய்வுகள்' (1937); அன்ஸன், 'அரசியலமைப்பின் சட்டமும் பழக்கமும்,' வால். i, பக்கம் 362 முதல்; மெயிட்லண்டு, 'அரசியலமைப்பு வரலாறு,' பக்கம் 317, 318.

59. இப் பாராளுமன்றத்தில் காமன்ஸ் சபையினரிடையே நடத்திய வாதங்களின் புதுமையானவும் தெளிவானவுமான செய்திகளின் முழு விவரம் யார்க்கின் செயின்ட், மேரியைச் சேர்ந்த விவரமறியாத காலக்குறிப்பேடுகளில் காணப்படுகின்றன (வி. எச். கால்பிரெயித் பதிப்பித்தது 1927); ஏ. எஃப். போலார்டு, 'ஆங்கில வரலாற்றுப் பரிசீலனை,' 53, 577 (1938). இப் பாராளுமன்றத்தைப் பற்றிக் கடைசியில் காணப்படும் குறிப்பிலும், டி. எஃப். டௌட், 'திரட்டப்பட்ட கட்டுரைகள்', ii, 173 (1934); ஏ. ஸ்டீல், 'இரண்டாம் ரிச்சர்ட்', 23 முதலிலும் (1941).

60. ரோ. பார்லி., ii. 323-9; லாட்ஜ், தாரண்டன், 146-149-ல் பிரித்தெடுக்கப்பட்ட பகுதிகள். பொருளாதார நிலைபற்றி டி. எஃப். டௌட், 'ஆட்சிமுறை வரலாற்றின் சில பகுதிகள்', iii, 289.

61. 'ஆங்கிலக் காலக்குறிப்பேடு,' பக்கம் 112. குற்றத்திற்கு ஆதாரமில்லையென இப்பொழுது தெரிகிறது. வெட்ஜ்வுட் பிரபு, ஆ. வ. ப. 14, 623; எச். ஜி. ரிச்சர்ட்ஸன், 'ஜான் ரைலண்ட் நூலகத்துக் கையேடுகள்,' 22; ஏ. ஸ்டீல், 'இரண்டாம் ரிச்சர்ட்', 32-3. அம்மாதிரியான ஐயப்பாடு பழக்கத்தில் இருந்ததென்பது குறிப்பிடத் தக்கதாகும். எதுவாயினும், புதிய மக்கள் சபைத் தலைவரான சர் தாமஸ், ஹங்கர்ஃபோர்டு என்பார் கான்டின் கண்காணிப்பாளராயிருந்தார்.

62. ஏ. ஸ்டீல், 'இரண்டாம் ரிச்சர்ட்', 29-33.

63. ரோ. பார்லி., ii. 60, நெ. 2.

64. அதிலேயே, ii, 69, நெ. 6.

65. ஷை 136, நெ. 8.

66. ஷை 165, நெ. 5; லாட்ஜ், தாரண்டன், 140-1.

67. ஷை 262, நெ. 58.

68. ஷை 295, நெ. 7.

69. பதினைந்தாம் நூற்றுண்டில் போர் அல்லது சமாதானம் பற்றிப் பாராளுமன்றம் கலந்தாலோசிக்கப்பட்டதென் பதற்குப் பக்கம் 193, அதிலேயே; ஏழாம் ஹென்றி, முதலாம் ஜேம்ஸ், ஆன் அரசி முதலியவர்களின் ஆட்சியில், 'பாராளுமன்ற வரலாறு', i, 452; i, 1293; vi 609ஐயும் பார்க்க.

70. அதேபோன்று முக்கியமான பிரிமுனிர் சட்டம் (27 எட் வர்ட் 3), பெரிய கூட்டத்தில், அங்கு குழுமியிருந்த காமன்ஸ்சபை உறுப்பினர்கள் விண்ணப்பம் செய்து கொண்டதன்பேரில் இயற்றப்பட்டது.

71. ரோ. பார்லி., ii, 310, நெ. 13 ('அவசரச்சட்டம்' எனக் குறிப் பிடப்பட்டுள்ளது), லாட்ஜ், தாரண்டன், 144-5; ஸ்டப்ஸ், 'அரசியலமைப்பு வரலாறு,' ii, 445லும் அதிலேயே 363லும் காண்க. நெடுநாள்களாக வழக்கொழிந்ததாயிருந்தும், சட்டம் 1871-ல்தான் முறையாக ரத்து செய்யப்பட்டது.

72. புதிய மூலங்களாவன, 'டியூலக்ரீஸ் காலக் குறிப்பேடு', (எம். வி. கிளார்க், வி. எச். கால்பிரெயித் பதிப்பித்தது, 'ஜான் ரைலண்ட் நூலகக் கையேடுகள், xiv, 1930); 'கிர்க்ஸ்டால் காலக் குறிப்பேடு' (எம். வி. கிளார்க்கும் எச். டென்ஹோம்-யங்கும் பதிப்பித்தது; அதிலேயே, xv, 1931). முகவுரை, கட்டுரைகள், எம். வி. கிளார்க், 'பதி ஞன்காம் நூற்றுண்டு ஆய்வுகள்'. ஆட்சியைப் பற்றிய புதுப் பொது மதிப்பாய்வுக்கு, ஏ. ஸ்டீல் எழுதியுள்ள, 'இரண்டாம் ரிச்சர்ட்' (1941); வி. எச். கால்பிரெயித், 'வரலாறு', xxvi, 223 முதலியனவாம்.

73. ஹாலம், 'இடைக்காலங்கள்', iii, 59.

74. ரைமர், vii, 161—162 (லாட்ஜ், தாரண்டன், 61–62).

75. ரோ. பார்லி., iii, 5-7 : லாட்ஜ், தாரண்டன், 62-4, 151–4-ல் பகுதிகள் உள்ளன.

76. அதிலேயே, iii, 35 நெ. 20, 36 நெ. 21.

77. ஷை 55 நெ. 5. இக்காலத்தில் அடிக்கடி கூடிய கூட்டங்களுக்கு டௌட். 'ஆட்சிமுறை வரலாற்றுப் பிரிவுகள்,' iii, 336ஐக் காண்க.

78. ரோ. பார்லி., iii, 56, நெ. 7 (லாட்ஜ், தாரண்டன் 154), 57, நெ. 12 (அதிலேயே, 155). மைனராயிருந்த மன்னர் அளித்தார் என்பதைவிட மன்றம் இச் சலுகையை யளித்தது என்பது நினைவுகொள்ளத்தக்கது.

79. ரோ. பார்லி., iii, 71 நெ. 3 (1380).

80. 1406-ல் நான்காம் ஹென்றி, வரவுசெலவுக் கணக்கைத் தணிக்கை செய்யக் காமன்ஸ் சபையினர் கோரியதைத் தடுக்க முயன்றார். அதற்கு, 'மன்னர் கணக்கு வைத்துக் கொள்ளுவதில்லை' எனக் கூறினார். எனினும், கோரிக்கைக்கு இணங்க நேர்ந்தது. யார்க்கு, டியூடர் முதலியவர்கள் ஆட்சியின்பொழுது இவ்வுரிமை வழக்கத்திலிருந்து மறைந்தது. 1624-லும் 1641-லும் இவ்வுரிமை மீண்டும் தோன்றி 1666-ல் இரண்டாம் சார்லஸின் ஆட்சியில் மறுக்க வொண்ணாத கொள்கையென உறுதி செய்யப்பட்டது. — ஹாலம், 'அரசியலமைப்பு வரலாறு', ii, 356.

81. ரோ. பார்லி., iii, 100, 101, நெ. 18 ; லாட்ஜ், தாரண்டன், 65–6. விவரங்களுக்கு, டௌட், 'ஆட்சிமுறை வரலாற்றின் பிரிவுகள்', iii, 362. அடுத்த ஐம்பதாண்டுகளுக்கு மன்னருடைய குடும்ப விஷயங்களில் தலையிடுவதில் பிரபுக்கள் பெருமகிழ்ச்சியடைந்தனர். அத்துடன், அரசியலில் மன்னரது குடும்பம் முக்கியக் கூறாயிருந்தது இத் தலையீடுகளுக்குத் துணைத்தூண்டுகோலாயிருந்தது. நிலைமையில் சிக்கலான, ஆனால், உயிர்நிலையான அம்சம்பற்றி அறிய, டி. எஃப். டௌட், 'ஆட்சிமுறை வரலாற்றின் பிரிவுகள்', iii, 194 முதல், 329 முதலையும், ஏ. ஸ்டீல், 'இரண்டாம் ரிச்சர்ட்', 111ஐயும் பார்க்க.

82. சிக்கல் மிக்க இச் செய்தி ஏ. ஸ்டீல், 'இரண்டாம் ரிச்சர்ட்.' 94 முதல், எம். வி. கிளார்க், 'பதினான்காம் நூற்றாண்டு ஆய்வுகள்', 36–52-ஐயும் காண்க.

83. நைட்டன், ii, 215-6 ; லாட்ஜ், தாரண்டன், 23–25-ல் பகுதிகள். 'ஆச்சரியமான' எனும் அடைமொழி வழங்கப்பெற்ற இப் பாராளுமன்றத்தைப்பற்றி, ஏ. ஸ்டீல், 'இரண்டாம் ரிச்சர்ட்', 119, குறிப்பு 3ஐக் காண்க.

84. அச் சொற்களாவன : 'பண்டைய சட்டம் ஒன்று நம்மிடம் உள்ளது. அது சிலவாண்டுகள்முன் சோதித்துப்பார்க்கப்பட்டது ; அதைக் கூறுவதே துன்பத்தை விளைவிப்பதாயுள்ளது. மன்னர், தீய நோக்குடன் அல்லது அறிவற்ற பிடிவாதம் அல்லது மரியாதைக் குறைவு அல்லது முறையற்ற அல்லது எதிர்ப்பான பிடிவாதம் அல்லது முறையற்ற வழிகளால் மக்களுடன் நல்லுறவை முரித்துக்

கொண்டும், சட்டங்கள், பெருமைக்குரிய அவசரச் சட்டங்கள் முதலியவற்றின் துணைகொண்டும் பிரபுக்கள், பெரியோர்களின் சிறப்புமிக்க ஆலோசனைகளைப் பின்பற்றி நாட்டையாள மறுத்து, தன்னிஷ்டப்படி கருத்தைச் செலுத்தித் தன்னிச்சையையே கைக்கொண்டு வேண்டுமெனவே எவ்விதக் கட்டுப்பாடுமின்றி ஆட்சி செய்ய முற்படுவாரேயானால், அதுமுதல் தங்களது சுயேச்சையானதும் முழுமையானதுமான இணக்கம் ஒப்புதலின் பேரில் மன்னரையே சிம்மாதனத்தினின்று நீக்கி அதற்குப் பதில் அரச குடும்பத்தைச்சேர்ந்த மற்றொருவரை நியமிப்பது மக்களின் உரிமையாகும்' — நைட்டன், ii, 219. மன்னரைப் பதவி நீக்கம் செய்யும் 'சட்டம்' ஏதுமில்லை. மேலே குறிப்பிட்டது இரண்டாம் எட்வர்டைப் பதவிநீக்கஞ் செய்ய மேற்கொண்ட நடவடிக்கைகளைக் குறிப்பவையாகும். ரிச்சர்ட் ஃபிரான்சுக்கு முறையீடு செய்ததாகக் கூறப்படுவது பற்றி, ஏ. ஸ்டீல், 'இரண்டாம் ரிச்சர்ட்', 122ஐக் காண்க.

85. ரோ. பார்லி., iii, 216–20. ஸஃபக் பெரும் பாதகம் செய்துள்ளார் என நம்புவதற்குக் காரணமுண்டு. 'புதுப் பணக்காரர்' என மன்னரின் சிற்றப்பனும் கிளௌசெஸ்டர் கோமகனுமைரத் தலைவராகக்கொண்ட பழைய பிரபுக்களினம் பகைமையுடனும் பொறாமையுடனும் ஸஃபக்கைக் கருதின. ஸ்டீல், மேலே குறிப்பிட்டது, 123; என். பி. லூவிஸ், 'ஆ. வ. ப.', 42, 402–7.

86. ரோ. பார்லி., ii, 221 நெ. 18 (லாட்ஜ், தாரண்டன், 67); பட்டய உரிமை பெற்ற பெயர்த் தொகுதிப் பட்டியலில் (1385–1389) 244, உத்தரவு உள்ளது; டி. எஃப். டௌட், 'அதிகாரங்கள்', iii, 416; ஏ. ஸ்டீல், 'இரண்டாம் ரிச்சர்ட்', 125. 1386 நவம்பர் மாதம் 20-லிருந்து 1387 நவம்பர் 19வரை அதன் காலமாகும்.

87. ரோ. பார்லி., iii, 224, நெ. 35; லாட்ஜ், தாரண்டன், 25.

88. ரோ. பார்லி., iii, 233; லாட்ஜ், தாரண்டன், 25-6; ஓரளவு உள்ளது.

89. டி. எஃப். டௌட், 'ஆட்சிமுறை வரலாற்றுப் பிரிவுகள்' (1928), iii, 423–4 (உதாரணமாக).

